உ

கடவுள் துணை.

தெய்வப்புலமைத்

திருவள்ளுவநாயனாருளிச்செய்த

# திருக்குறள்.

இதற்குப்

பரிமேலழகருரையைக்கொண்டியற்றிய

பதவுரையும், கருத்துரையும், விசேடவுரையும்,

## திருவள்ளுவமாலை

மூலமும் உரையும் சரித்திரமும் ஆகிய

இவை,

திருத்தணிகை-கந்தப்பையர் குமாரர்

**சரவணப்பெருமாளையரவர்களால்**

முன்பரிசோதித்த பிரதிக்கிணங்க

பாலவிர்த்தி போதினி அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1909.



# திருக்குற ளதிகாரவகராதி.

அதிகாரம்.

திருக்குறளதிகாரவகராதி-முற்றிற்று.



## திருக்குறளதிகாரத்தொகை.

| | | | |
|---|---|---|---|
| அறப்பாலில் | அதிகாரம் | பொருள் | 1 |
| பாயிரம் | 4 | படை | 2 |

| | |
|---|---|
| இல்லறவியல் | 20 |
| துறவறவியல் | 13 |
| ஞானம் | 1 |
| ஆக-வகை-4-க்கு-குறள் | 380 |
| பொருட்பாலில். | அதிகாரம் |
| அரசியல் | 25 |
| அங்கவியல் | 32 |
| ஒழிபியல் | 13 |
| இதனுட்பிரிவு. | |
| அமைச்சு | 10 |
| நாடு | 1 |
| அரண் | 1 |
| நட்பு | 17 |
| ஆக-வகை-3-க்கு-குறள் | 700 |
| காமத்துப் பாலில | அதிகாரம். |
| களவியல் | 7 |
| கற்பியல் | 18 |
| இவற்றினுட்பிரிவு. | |
| தலைவனுரைப்பது | 7 |
| தலைவியுரைப்பது | 12 |
| அவ்விருவருமுரைப்பது | 6 |
| ஆக-வகை-2-க்கு-குறள் | 250 |
| ஆக-அதி-133-க்கு-குறள் | 1330 |

திருக்குறளதிகாரத்தொகை-முற்றிற்று.

# திருக்குறள் செய்யுளகராதி.

| குறள். | பக்கம் | குறள். | பக்கம். | குறள். | பக்கம். |
|---|---|---|---|---|---|

அ

# திருக்குறள் செய்யுளகராதி.

திருக்குறள் செய்யுளகராதி. [illegible]

| குறள். | பக்கம். | குறள். |
|---|---|---|

| | | |
|---|---|---|
| 457 | உள்ளத்தார் | 534 |
| 405 | உள்ளத்தாலு | 149 |
| 226 | உள்ளத்தாற் | 154 |
| 81 | உள்ளமிலா | 275 |
| 278 | உள்ளமுடை | 273 |
| 197 | உள்ளம் | 500 |
| 398 | உள்ளற்க | 352 |
| 384 | உள்ளியதெ | 252 |
| 321 | உள்ளியனெ | 159 |
| 564 | உள்ளினுங் | 513 |
| 463 | உள்ளிம்ன | 560 |

அ

## திருக்குறள் செய்யுளகராதி.

| | | |
|---|---|---|
| 401 | குடிசெய்ல | 437 |
| 488 | குடிசெய்வார் | 431 |
| 152 | குடிசழீஇ | 254 |
| 401 | குடிபுறங் | 256 |
| 160 | குடிப்பிறந்தார் | 412 |
| 195 | குடிப்பிறந்துகு | 238 |
| 47 | குடிப்பிறந்துத | 350 |
| 320 | குடிமடிந்து | 277 |

அ திருக்குறள் செய்யுளகராதி.

குறள். பக்கம் | குறள்.

| | | |
|---|---|---|
| சேவிழுக் | 356 | ஒருமையுஞ் |
| கைம்மாறு | 122 | ஒருமையுணீ |
| கையறியா | 400 | ஒறைகாக் |
| கைவேல் | 343 | ஓறைநல |
| கொக்கொக் | 233 | ஒற்றின |
| கொடியார் | 499 | ஒற்றின்பம் |
| கொடியார் | 528 | ஓனைத்தைப் |
| கொடுத்தலு | 247 | ஓனமென் |
| கொடுத்துங் | 370 | ஓசிடன் |

| | | |
|---|---|---|
| நாடொறுநாடி | 258 | நெருநற்று |
| நாடோறுநாடி | 245 | நெருப்பினுட் |
| நாணகத்தி | 435 | நோக்கினானோ |
| நாணாமை | 365 | நோக்கினா |
| நாணாலு | 485 | நோதலெவ |
| நாணுமறந | 554 | நோயெல் |
| நாணென்னு | 399 | நோய்நாடி |
| நாணென | 537 | நோவற்க |
| நாணொடு | 483 | நோனாவுட் |
| நாண்வேலி | 484 | பகச்சொல்லி |
| நாநலமென் | 291 | பகல்கருதிப் |
| நாளென | 169 | பகல்வெல் |
| நிணந்தீயி | 538 | பகுத்துண் |
| நிலத்தியல் | 218 | பகைநட்பாக் |
| நிலத்திற் | 413 | பகைநட்பாங் |

திருக்குறள் செய்யுளகராதி.

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# திருவள்ளுவ நாயனார் சரித்திரம்.



உலகத்துள் மகாசிறப்புப் பொருந்திய கைலாயகிரியிலே அரசிருக்கை மண்டபத்தில்பிரம்மாதி முப்பத்துமுக்கோடிதேவர்கள், நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள், கின்னரர், கிம்புருடர், கருடர், காந்தர்வர், சித்தர், வித்தியாதரர் முதலானவர்கள் வணங்கிச் சூழும்படி பார்வதி சமேதராய்ப் பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளி யிருந்தார். அப்போது தேவியானவள் எழுந்து வணங்கி நின்று ஸ்வாமி திரிலோகத்திலே இல்லறம் வழுவாது நடந்து கதியடைந்தவ ருண்டோவென்று வினவ, ஸ்வாமிதிருவுளம்பற்றுகிறார். உமையவளே ! தெய்வலோகத்தில் வசிஷ்டர் அகஸ்தியர், அயன், புயங்கன், சம்பு, என்றைந்துபேருண்டு. பூலோகத்தில்திருவள்ளுவரென்றொருவருண்டு. இவர்கள் தென் புலத்தார் கடன், தேவர்கடன், விருந் தோம்பல், சுற்றந் தழுவல், கபிலைபூசைசெய்தல் முதலிய இல்லறத்தில் கற்பின் வழுவாத நற்குண நற்செய்கையுள்ள மனைவியரோடிருந்து இல்லறக்கடன் நடத்திக் கதியடைந்தாரென்று திருவாய் மலர்ந்தருளப், பூலோகத்திலே திருவள்ளுவர் என்பவர்யாரென்றுகேட்க, பூர்வத்திலே ஒருபிரளயம் வந்தது. அதுவருமென்று பிர்ம்மா முன்னமேதெரிந்து அதிலேயிறவாது பிழைக்கும்படி வேற்றுவடிவமாய் ஒரு சுரைக் கூட்டைத் தனக் கிடமாகக்கொண்டு அதிற் புகுந்து அவ் வெள்ளத்தின்மேல் மிதந்துவந்தார் அதுகண்டு நாம் அறியாதவர்போல்இதற்குள்ளிருப்பவன் யாரென்றுகேட்டோம். தான்வருங்காலமறிந்து செய்தார் கேற்ப வள்ளுவரென்றார். இப்பிரளயத்தில் நீர் எப்படிப் பிழைத்திருந்தீ ரெனக் கேட்க ஸ்வாமியென்று தெரிந்து மிகுந்த பேரானந்தத்தையடைந்து பரமசிவமே ! உமது திருவருளினால் பிழைத்திருந்தேன். ஆயினும், இந்தப்பிரளயத்தைநீக்கியருளவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நாம் அந்த அதிகாரம் உமக்கே கொடுத்தோமென்று அவராலே முன்புபோல்உலகத்தைச்செய்வித்தோம். அத்தன்மையுடைய அவர் பூமியிலே பிறந்த காரணமுஞ் சொல்லுகிறோம்.

ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டியநாட்டில் மதுரைமாநகரத்தி லிருந்த சங்கப்புலவர்கள் நம்மை அவமதிப்புச்செய்ததின்பொருட்டு அவர்கள் கர்வபங்கமாகும்படி பிரம்மஸ்வரூபராகிய திருவள்ளுவரையும், மகாவிஷ்ணுவையும்,

சரஸ்வதியையும் பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினேம், அவருள் மகாவிஷ்ணு இடைக்காடராய்ப் பிறந்தார். சரஸ்வதியும், திருவள்ளுவரும், வந்த மரபுங் கேட்பாயாக.

ஆதியிலே பிரமபுத்திரர்களாகிய காசிபர் முதலிய நவப்பிரம்மாக்களில் காசிபர் ஊர்வசியைச் சேர்ந்து வசிஷ்டரைப் பெற்றார். அவர் அருந்ததியைச் சேர்ந்து சத்தியரைப்பெற்றார். அவர் புங்கனூர்ப் புலைச்சியைச்சேர்ந்து பராசரரைப்பெற்றார். அவர் மச்சகந்தியைச்சேர்ந்து வியாசரைப்பெற்றார், இவர்கள் நால்வரும் வேதங்களுக் குரியவரானார்கள்.

பின்பு பிரம்மாவானவர் இன்னுஞ்சிலபுத்திரரால் வடமொழியையுந் தென்மொழியையும் விளங்கச்செய்யவேண்டுமென்றெண்ணி வேதவிதிப்படிஒரு யாகஞ்செய்ய, அதன்கண் வைத்திருந்த கும்பத்திலிருந்து கலைமகளவதரித்தனள். அவளைப் பிரமன் விவாகஞ்செய்துகொண்டான். பின்பு அகஸ்தியர்க்குறிய வடிவோடு அக்கும்பத் துதித்தனர். அவர்சமுத்திரகன்னிகையை மணந்து பெருஞ்சாகரனென்பவரைப்பெற்றார். அவர் திருவாரூர்ப்புலைச்சியைச்சேர்ந்து பகவனென்பவரைப்பெற்று அவர்க்குச் சகலசாஸ்திரங்களையுங் கற்பித்தார், அந்நாளில் பிரமவம்சத்தில் தவமுனியென்பவர் அருண்மங்கையென்னும் பிராமணமாதைச்சேர்ந்து ஒருபுத்திரியைப்பெற்றுவைத்து விராலிமலையில் தவஞ்செய்யச்சென்றனர். அக்குழந்தையை உறையூர்ப்பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்து வருகையில் மேல்நடக்கப்போகிற காரணத்தினால் இக்தப்பெண்தவிர மற்றவர்கள்யாவரும் இறக்கும்படி அந்தச்சேரியில் யாதுகாரணமோ மண்மாரிபெய்தது. பின்புஅந்தப்பெண் அதற்கடுத்தமேலூர் அகரத்திலே நீதியையன் வீட்டில் வளர்ந்திருந்தனள்.

அப்போது பகவனென்பவர் சகலசாஸ்திரபண்டிதராய்க் கண்டவர்யாவரும் மரியாதைபண்ணும்படி பிராமணநித்தியத்தில் வழுவாதவரா யிருக்கையில், யாத்திரைபண்ணும்படியிச்சைகொண்டு காசிக்குப்போகும்போது இன்னகரத்துக் கடுத்த ஒருசத்திரத்திலிறங்கி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு சமையல்செய்திருந்தார். அவ்விடத்தில் அந்தப்பெண்வர அவளைக்கண்டு நீயார் புலைச்சியோ, வலைச்சியோ, இங்கேவந்தாயென்றுஅதட்டி மிகுந்த கோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது தலையிலே உதிரஞ்சோர அடித்தோட்டினார் அவள் அழுதுகொண்டு தன்னிடத்துக்குப் போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ்செய்து போசனம்பண்ணி அதிசீக்கிரத்தில் வழிக்கொண்டு சிலநாளிற் காசிக்குப்போய்க் கங்காஸ்நானஞ் செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்காவடி கட்டிக்கொண்டுவரும்போது அந்தச்சத்திரத்தில் வந்திறங்கினார். மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது மகாலட்சுமியைப்போலும் அழகும், எவ்வனபருவமும்உடையவளாய் அங்கேவந்தாள். பகவனென்பவர் இவளுடையசௌந்தரிய முதலிய குணங்களைப்பார்



த்து மோகங்கொண்டார். அச்சத்திரத்துக்கு அதிபராகியநீதியையரென்பவர் அக்குறிப்பினைக்கண்டு என் பெண்ணை விவாகம்பண்ணிக்கொண்டு இங்கேயிருமென்று சொல்ல அதற்கவர் நான் கொண்டுவந்தகாவடியை இராமேசுரத்தில்செலுத்திவந்து அப்படியே செய்கிறேனென்று அவரிடத்திலே செலவுபெற்றுக்கொண்டுபோய் இராமலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித்திருப்பிவந்தார். அப்போதுநீதியையர் விவாக எத்தனம்பண்ணிப்பந்துக்களோடிருந்து விசேஷமாய் நாலு நாளையசடங்குகளுஞ் செய்து, ஐந்தாநாள் மங்கலஸ்நானஞ்செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப் பெண்ணினுடைய தலையில் எண்ணெயைப் பெய்யும்படி மயிரைவகிர்ந்தார். அப்போதுதான்முன்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அனுமானித்து இந்தப்பெண்ணினது வரலாற்றையும் விசாரித்து விசனங்கொண்டு நீ ஆதியளல்லவாவென்று சொல்லிவிட்டு ஓடினார் அதுவே அவளுக்கு ஆதியென்று காரணப்பெயராயிற்று.

அப்படியோடிய பகவரென்பவர் பொழுது போகையால் எதிரேகண்ட பாணச்சேரியிலிருந்த ஒரு மண்டபத்திலேதங்கினார். ஆதி யென்பவளும் அவர் பின்னே தொடர்ந்து அவரைக்கண்டு தெய்வச்செயலால் உமக்கும் எனக்கும் இந்தக்காரியம் நடந்திருக்க. நீர் என்னைவிட்டுப் போகுதல் உமக்குத் தகுமோ அல்லது தருமமோவென்றும் உம்மை நீங்கினால் உயிர்வாழேனென்றும் மிகவும் இரக்கத்துடன்சொல்லப் பிராரத்துவத்தால் இவர் புத்தியிலும் அது சரியென்றுபட்டுப் பெண்ணே என்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமானால் யான் சொன்னபடி கேட்கவேண்டும்; அஃதென்னெனில். உனக்குப் பிள்ளைகள் எங்கே பிறக்கிறதோ அங்கங்கே அவைகளை அப்பொழுதேவிட்டுவருவையானால் யான் உன்னைக்கூடச் சம்மதிப்பேனென்றுசொல்ல, அவளதற்கு உ

டன்பட்டபடியால் அன்றிரவில் அம்மண்டபத்தி லிருவருங் கூடினர்கள்.

### ஔவை.

அப்போது பரமசிவன் உத்தரவின்படி சரஸ்வதி யாவராலும் புகழப்பட்ட ஔவையாகிப்பிறந்தாள். இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று விட்டேகத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது. /

### வெண்பா.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவனுஞ் செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக் கன்னாய்
நெஞ்சமேயஞ்சாதே நீ.

அதுகேட்டு மனந்தணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையை அச்சேரியிலுள்ள பாணர்களெடுத்துவளர்க்கவளர்ந்து சரஸ்வதியாகையால் இயல்பா

## திருவள்ளுவநாயனார் சரித்திரம்.

கவே கலைமுழுதும்அறிந்துசெந்தக்கணபவென்னுங்கணபதிஅகவல்பாடி அவரை உபாசித்து லோகோபகாரமாக ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, ஞானக்குறள், அசதிக்கோவை, கன்னூற்கோவை, நான்மணிக்கோவை, பந்தனந்தாதி. அருந்தமிழ்மாலை, தரிசனப்பத்து முதலியவுஞ்செய்து ஒவ்வோர்காரியத்தின்பொருட்டுத் தனிக்கவிதைகளனேகமும் பாடி அனேக அற்புதங்களெல்லாஞ்செய்து முடித்துவருநாளில் ஒருநாள் கணபதிபூசை விரைவாகச்செய்தாள். அவர் வழக்கப்படியன்றிவிரைந்துசெய்வது ஏனென்று கேட்கச்சுவாமி, சுந்தரமூர்த்தியாரும் சேரமான் பெருமாளும் கைலாயத்துக்குப்போகின்றார்கள் என்னையும் அழைத்தார்களென்ன அவர்களுக்கு முன்னே உன்னை அங்கேவிடுவேன் நீ பூசையை வழக்கப்படி முடியென்றார் தன்பூசையைக் கிரமப்படிமுடித்தாள். உடனே கணபதிதுதிக்கையா லெடுத்துவிடக் கைலாயமடைந்தாள் பின்புபோன அவ்விருவரும் ஔவையைக்கண்டு அதிசயப்பட்டார்கள்.

## உப்பை.

இதுநிற்க, முன்புபோன இருவர்களும் தொண்டைநாட்டில் ஊற்றுக்கா டென்னும் ஊரிலுள்ளதோர் மடத்திற்சென்று கூடினார்கள். அப்பொழுது உப்பையென்பவள் பிறந்தாள். இத்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரெ ன்று அதைவிட்டு நீக்கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

### வெண்பா.

அத்திமுத லெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னா யரன்.

அதுகேட்டு மனந் துணிந்துபோயினள். அவ்வுப்பை முற்பிறப்பில் யா ரெனில் பிருகுவின் பத்தினியாகிய ஈகவல்லியென்பவள் திரிமூர்த்திகளும் அவள் அழகின் மிக்கவளென்றுகேள்விப்பட்டு பார்க்க மாறுவேஷங்கொண்டு போய் நிர்வாணப் பிக்ஷைகேட்டார்கள். அவள் மகாபதிவிரதை யாகையால், இவர்களைப் பாலராக்கி அப்படியே பால்கொடுத்துத் தன்னைப் பரிசோதித்த தற்குக் கோபங்கொண்டு அவர்களை மூன்றுசனனம்எடுக்கும்படிசொன்னாள். அதுகண்ட திரிமூர்த்திகளுந் தங்களை அவள்மதிக்காமல் பாலராக்கி மூன்று சனனம்பண்ணும்படி சொன்னதற்காகச் சினங்கொண்டு நீ அழகின்றி மாறு வடிவமாகக் கடவையென்றுசபித்துப்போயினர். பின்புபிருகுவானவர் அவள் வேற்றுவடிவைக்கண்டு நீ பூமியில் பிறக்கக்கடவையென்றனர். அவள் கணவ னுத்திரவின்படி உப்பை யென்னவந்த வதரித்து வண்ணார்வளர்க்க வளர்ந்து மாரியம்மையாய் உலகமெல்லார் தன்னைப்போற்ற இப்பொழுதும் அவ்வூரில் தெய்வமாயிருக்கின்றனள்.

## திருவள்ளுவநாயனார் சரித்திரம். ௩

## அதிகமான்.

இதுநிற்க: முன்புபோன அவ்விருவருஞ் சோழதேசத்திற்கருவூரிலடை ந்து ஒரு சோலையிற்கூட அதிகமானென்பவர் பிறந்தார். இத்தக்குழந்தையை

யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

வெண்பா

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்ய—னுருப்பெற்றா
லூட்டி வளர்க்கானோவோகெடுவா யன்னாய் கேள்
வாட்ட முனக்கேன் மகிழ்.

அதுகேட்டு மனந் துணிந்து போயினள். அக்குழந்தையைச் சேரமானெடுத்து வளர்க்க வளர்ந்து வில்வேதம் மனுவிக்கியான முதலியவையுங் கற்று முடிசூட்டப் பெற்றுச் சொக்கநாதர் திருமுகமெழுதிக் கொடுக்கப் பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்கள் கொடுத்துப் பொன்வண்ணத் தந்தாதியென்றோர் பிரபந்தம்பாடிச் சிதம்பரத்திலரங்கேற்றி அரசுசெலுத்திச் சுந்தரமூர்த்தியார் நட்புற்றிருந்து அவர் கயிலைக்குப் போகும்போது உடனேபோய் அங்கே தாம்பாடியருளிய ஆதியுலாவை அரங்கேற்றிச்சிவானுக்கிரகம்பெற்று வீற்றிருந்தார்.

## உறுவை.

முன்புபோன அவ்விருவரும் காவிரிப்பூம் பட்டினத்தை யடைந்து ஒரு மண்டபத்திற் கூடினார்கள். உறுவையென்பவள் பிறந்தாள். இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

வெண்பா

சண்டைப்பைக் குள்ளுயிர்தன் றுயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரிய—மண்டி
யலைகின்ற வன்னா யரனுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில்.

அதுகேட்டுத் தாய்மனந் துணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையைக் கள்ளிற்போரெடுத்து வளர்க்கவளர்ந்து தவஞ்செய்து பத்திரகாளியாய்த்தாரு

களைக்கொன்று திருவாலங்காட்டில் சபாசாயகருடனே நிருத்தஞ்செய்து அதிலே தோற்று, அகோர வீரபத்திரரை விவாகம்பண்ணிக்கொண்டவ்விடத்திலிருந்தான்.

## திருவள்ளுவநாயனார் சரித்திரம்.

### கபிலர்.

இதுநிற்க: முன்பு அவ்விடம் விட்டுப்போன இருவரும் திருவாரூரையடைந்து ஒரு மடத்திற்கூடக் கபிலரென்பவர் பிறந்தார். இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

### வெண்பா.

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கு
முண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணு
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழிலென்ன தான்.

அதுகேட்டு மனந்துணிந்து போயினள். அக்குழந்தையைத் தனக்குப் பிள்ளையில்லாத பாப்பையனென்னும் ஒரு பிராமணனெடுத்து வளர்த்து எழு வயதில் உபாயனஞ்செய்யத்தொடங்குகையில் பிராமணர்கள் ஒத்துக்கொள்ள மாட்டோமென்று சொல்ல, அதைக்கண்ட கபிலர் அவர்களைப்பார்த்து நான் முகத்தோனென்றோர் அகவல்சொல்லிக் கருமத்தினால் சாதியன்றிச் சென்மத்தால் இல்லையென்று சாதிக்க, அதற்குப் பிரதியுத்தரஞ்சொல்லமாட்டாமல் இதுவே விதியென்று யாவரும் ஒத்துக்கொண்டு அச்சடங்கு முதலானவை முடித்தார்கள். அக்கபிலர் இன்னும் பாதாளவுலகத்தில் தவம்பண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

### வள்ளியம்மை.

இதுநிற்க : முன்புபோன அவ்விருவரும் வேளின் மலைச்சாரலில்வந்து கூட அப்பொழுது வள்ளியம்மை பிறந்தனள், இந்தக் குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டுநீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்

லியது.

வெண்பா.

அன்னை வயற்றி லுருத்தி வளர்த்தவன்று
னின்னும் வளர்க்கானோ வென்றுயே—மின்னவாஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றுவினை
யாடும் பெருமா னவன்.

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையை மலைக்குறவர் வளர்த்தார்கள். அவள் முற்பிறப்பில் யாரென்னில் மகாவிஷ்ணுவினுல் மோகிக்கப்பட்ட விபுதையென்பவளிடத்தில் பிறந்த குமரியென்பவள் குமாரக்கடவுளைக் குறித்துத் தவஞ்செய்தபோது அவர்வரப்படி தொண்டைமண்டலத்தில் வள்ளிமலையிலிருந் தக்கடவுளுக்கு நாயகியானள்.



## திருவள்ளுவர்.

முன்புபோன அவ்விருவரும் மயிலாப்பூரில் இலுப்பைத்தோப்பிற் கூடினர்கள். அப்பொழுது திருவள்ளுவர் பிறந்தனர். இக்கக் குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

வெண்பா.

எவ்வுயிருங் காக்கவொரு விசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லவோ—வவ்வி
யருகுவது கொண்டிங் கலைவதே னன்னே
வருகுவது தானே வரும்.

அதுகண்டு மனந்துணிந்து அவ்விருவருந் தீர்த்தயாத்திரைக்குப் போயினர். பின்பு சிவாலயத்தின் அருகேயுள்ள இலுப்பை மரத்தின்கீழிருந்த குழந்தை அவ்விலுப்பை மலரிற்றுளிக்குந் தேனையுண்டு பூர்வம் பிர்ம்மாவாதலால் சிகை எக்யோபவீதம் சதுர்வேத புஸ்தகமுங் கொண்டு வளர்கையில் சக்கா

குலசிரேஷ்டனுகிய ஒருவேளாளன்மனைவி புத்திரனைக்குறித்து அச் சிவாலய சந்நிதியில்தவஞ்செய்திருந்தாள். அப்பொழுது உமாதேவி அவளுடையதவத்துக்கிரங்கி தெய்வச்செயலாலுண்டாகியஇக்குழந்தையை நீ எடுத்துக்கொள்ளுளென்றருள்செய்து,திருவள்ளுவரென்று பூர்வநாமகரணமுஞ்செய்தாள். அவளும் அந்தக்குழந்தையையெடுத்து மகிழ்ச்சியடைந்து கொண்டுபோய்த் தன்புருஷன்கையிற்கொடுத்தாள். அவனுந்தன்கையில்வாங்கிப் பேரானந்தம்பெற்று அதுவந்தவரலாறுங்கேட்டு இப்படியிருவரும் அந்தப்பிள்ளையை நாளொருமேனியாக வளர்க்குங்காலத்தில் அவர்கள் சுற்றத்தார்கள் ஏதோ ஒரு பிள்ளையைவளர்க்கிறார்களென்று இவர்களை இகழ்ச்சிபண்ண அதற்கு அவர்களஞ்சிப் புறத்திலுள்ள தோர்தொழுவத்திலே தொட்டிலிட்டு அதில் அக்குழந்தையைக்கிடத்திப் பண்ணைக்காரரைக்காவல்வைத்து வளர்த்தார்கள். பின்பு திருவள்ளுவரும் ஐந்து வயதானகாலத்துத் தன்பொருட்டுத் தாயுந்தகப்பனும் சுற்றத்தார்களால் நிந்தைசெய்யப்படுகிறார்களென்று அவர்களைப் பார்த்து என்னால் உங்களுக்கு வருத்தம் வேண்டுவதில்லை நான் வேறிடத்திலிருக்கின்றேன். நீங்கள் வருந்தாதிருங்களென்றுசொல்ல. அவர்கள் அப்பா உன்னைப் பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானென் றெண்ணி யிருந்தோமே, நீ இப்படிச் சொல்லலாமாவென்ன, நாயனார் நீங்கள் என்னை நினைக்கும்போது வந்துங்களுக்கு வேண்டியதைச் செய்வேனென்று சொல்லிப்புறப்பட்டு அவ்வூர்க்கருகே ஒரு பனைமரத்தி னிழலிலே யிருந்தார். அப்பனைமரம் தன்னடிவிட்டுநிழல் சாயாதிருக்கக் கண்டவர்கள் இப்பிள்ளை தேவனோ, முனிவனோ, கடவு



ளோ, இவ்வுருவோடு வந்ததென்று துதிக்க அவர்களைப்பார்த்து நாயனார் இங்கே தவமேது, மகிமையேது யாதொன்றும் என்னிடத்திலில்லைபோமென்று தாம் அவ்விடத்தைவிட்டு நீங்கித் திருமூலர், போகர்முதலாகிய சித்தர்களும், மாதவர்களும் வாசஞ்செய்கின்றமலைக்கெழுந்தருளித் தவஞ்செய்வார்களோடு கூடியிருந்தார். அங்கிருந்த திருமூல ரிவரைக்கண்டு வள்ளுவரே, பூர்வத்தில் நந்தி எனக்கனுக்கிரகம் பண்ணும்போதங்கே யிருந்தீரே, உலகத்தாருக்குச் சித்திமுத்தி யருளும்படிக்கும் அறம்பொரு ளின்பமென்னும் முப்பாலையுந் தமிழில் அருளிச்செய்யும்படிக்கும். இங்குவந் தவதரித்தீரோவென்று துதிக்க,

நாயனருமகிழ்ந்து. அங்கே தவஞ்செய்வோரில் ஒருவராயிருந்து சகல சாஸ்
திர பண்டிதரானார். அக்காலத்தில், தொண்டைமண்டலத்திலொரு வேதாள
மானது பயிர்களை அழித்தும், உயிர்களை வதைத்தும். அநேகதுன்பஞ்செ
ய்துவந்தது. அப்பொழுது காவேரிப்பாக்கமென்னும்ஊரில்ஆயிரம் ஏர்கொ
ண்டுழுது பயிர்செய்கின்ற மார்க்கசகாயனென்னும் ஒருவேளாளன் இந்தவே
தாளத்தை அடக்கினவருக்கு அளவற்ற திரவியமும் ஊரும் வேண்டியவைக
ளையுந் தருகிறேனென்று பிரசித்தம்பண்ணினான். அது ஒருவராலும் ஆகாம
லிருந்தது. பின்பு அவ்வேளாளன் திருமூலராதியர் வாசஞ்செய்யும்மலையிலே
யிருக்கும் பெரியோர்களை அடுத்துச்சொல்ல. அவர்கள் திருவள்ளுவரோடு
சொல்லென்றார்கள். அவரை வணங்கிச்சொன்னான் அப்போது சிவகாருண்
ணியராகிற திருவள்ளுவர் அவ்வேளாளன் வேண்டிக்கொள்வதை நிறைவே
ற்றும்பொருட்டு அவ்வேதாளத்தைத் விபூதி பஞ்சாட்சரத்தால் வென்று யாவ
ரையும் ரட்சித்தார். பின்பு அவ்வேளாளன் ஊரும் அளவற்ற திரவியமு மல்
லாமலும் நாயனார் யோக்கியத்தையும் மகத்துவத்தையும் பார்த்து வாசுகியெ
ன்னும் தன்பெண்ணையும்கொடுக்கும்படி நிச்சயித்து நாயனாரிடத்து வந்து எ
ன்பெண்ணைத் தேவரீருக்குக்கொடுக்க நினைத்திருக்கிறேன். அப்படியே அங்
கீகரிக்க வேண்டுமென்றுசொன்னார். நாயனார் உலகத்தாருக் கில்லறநடத்திக்
காட்டவேண்டி காரணத்தையோசித்து, அந்தப்பெண் நான்கொடுக்கு மண
லை அன்னமாக்கி எனக்கிடுமானால் விவாகஞ் செய்துகொள்வேனென்றார்.
அந்தப்பெண் அப்படியே சம்மதித்து சமைத்துப் படைத்தனள் நாயனாரும்
அங்கீகரித்து விதிப்படிவாசுகியைவிவாகஞ்செய்து சிலகாலமிருந்து பின்பு
மனைவியுடன் மயிலையில்வந்தோரில் லாக்கிக்கொண்டு இல்லறஞ்செய்துநூல்
வாங்கி ஆடைசெய்து அக்கூலியால் சீவனஞ் செய்திருந்தனர். பின்பொருகா
லத்தில் திருவாலங்காட்டில் சபாநாயகர் மைடசங்காரஞ் செய்து கெர்வித்தி
ருந்த பத்திரகாளி கெர்வபங்கமாகப் பலவித நடனஞ்செய்ய, அவளுந் தோல்
வியடையாம லாடிவந்தாள். பின்பு சுவாமிகுண்டலங் கழன்றைக் காதிலேதா
னே சேரும்படி ஊர்த்துவபாதமாக நடனஞ்செய்தார். அவளுமப்படியாட நா
ணித்தோற்றாள். அப்பொழுதுதேவர்கள் சுவாமீ தேவரீரூர்த்துவதாண்டவம்
பண்ணியதென்னகாரணமோ தெரியவில்லையென்றுகேட்க, நீர் திருமயிலையி
லிருக்குந் திருவள்ளுவரைக் கேட்டீர்களானால் தெரியுமென்றுசொல்ல தே
வர்களங்கேபோ யவரைக்கேட்க அவர்சொல்லியது.

# திருவள்ளுவநாயனர் சரித்திரம்.

### வெண்பா.

பூவி லயனும் புரந்தானும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவி
லிழைநக்கி நூனெருடு மேழை யறிவேனே
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து.

அதிலேதெரிந்து தங்கள் சந்தேகந் தெளிந்தார்கள். ஒருநாள் நூல்வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன் வீட்டுக்குப்போய் செட்டியார் எங்கேயென்று கேட்க, அவர் சிவபூஜை செய்கிறாரென்றார்கள். அவர் சிவபூஜை இங்கு செய்கிறாரோ குப்பத்திற்செய்கிறாரோவென்ன, அதைஅவர்பத்தினி உள்ளேபோய் அவருக்குச் சொல்ல அவர்கேட்டுச் சிவபூஜையைவிட்டுத் திடுக்கிட்டோடிவந்து நாயனருடைய உபயபாதங்களில் வணங்கி ஸ்வாமீ! என்னைப்பந்தசாகரத்தினின்றுமெடுத்துக் கரையேற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நாயனர் அவரது பக்குவத்தையும் இன்னுஞ் சில மாணாக்கர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி ஒருநாள் அவர்களையழைத்துக்கொண்டு ஒரு வனத்திற் சென்று அங்கு வெள்ளம்பெருகிவரச்செய்தனர். அவர்கள் பயந்து மனேதிடமன்றி இக்கரையிலிருந் தூடன்போகமாட்டாமல் விழிக்க ஏலேலசிங்கர்மாத்திரம் தம்மைத்தொடர்ந்துவர அவ்வெள்ளம்வழிவிட்டது. பின்பு உயர்ந்த ஒரு மரத்தினுனியி லேறென்றுசொல்ல, ஏலேலசிங்கரேறினர். பின்பு பிடித்த கொம்பையும் நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள, யோசியாமல் விட்டனர். விட்டும் ஒரு அபாயமில்லாதிருக்க ஏலேலசிங்கரைத் தமது மடியின்மேல்வைத்து ஞானேபதேசம்பண்ணி எப்படிப்பட்ட சௌந்தரியமுள்ள மங்கையர்கள் மயக்கினும் மயங்காத திடச்சித்தத்தையும் அனுக்கிரகித்தார்.

பின்பு தம்மிடத்துக்கு வந்துவிட்டார்கள். அப்படியிருக்குநாளில் அந்நாட்டுக்கரசனாகிய அச்சுதராஜன் ஒருநாள் ஏலேலசிங்கரோடுபேசிக்கொண்டிருக்கும்போது உமக்குப் புத்திரப்பேறில்லையே உம்முடைய ஞானாசிரியரை அப்பேறுண்டாகக்கேட்கலாகாதாவென்ன, அவர்நல்லதென்றுபோய் மற்றொருநாள் நாயனாரைக்கண்டு விண்ணப்பஞ்செய்ய, அவர் சுவாமி கடாட்சிப்பாரென்று அனுக்கிரகம்பண்ணினார். பின்பு ஒருநாள் பரமசிவமே சிறுகுழவியாய் ஏலேலசிங்கரும் அவர்மனைவியும் நித்தியந்தரிசிக்கும் பகவின்வாசின்புறத்திற்கிடந்து அழுவதைக்கண்டு அவ்விருவரும் இக்குழந்தையை எதெனவெடுத்தார்கள். உடனே அந்த அம்மாள் ஸ்தனங்களிலே பால்சுரந்து பெருக, அக்குழந்தைக்குப் பால்கொடுத்து ஞானகுருவாகிய நாயனார் சந்நிதானத்திற் கொண்டுபோனார்கள். அவர் அக்குழந்தைக்கு அழகானந்தரென நாமகரணம் பண்ணினார். உடனே ஏலேலசிங்கர் அச்சுதராசனென்னும் அரசனிடத்திற்சென்றெனக்குதெய்வீகத்தினால் குழந்தையுண்டாயிற்றென்று சொல்ல,அவன் அப்படித்தெய்வீகமானால் என்னிடத்திலும் அதுவரவாமேயென்றான். அவ்விருவரும் இப்படிப்பேசிக்கொண்டிருக்கும்போது அக்குழந்தைஅரசனருமையில்வந்திருந்தது.

2



# திருவள்ளுவநாயனார் சரித்திரம்.

அதை அவன் கண்டு இது அழகானந்தமோவென்று ஆனந்தமடைந்து அணைத்துக்கொண்டு தன் மனைவிகையிற்கொடுக்க, அவள் வாங்கினவுடனே ஸ்தனங்களினின்றும் பால்பெருக அதனைக் குழந்தைக்குப் புகட்டினாள். இப்படி யற்புதமாய்வளர்ந்து பின்பு அனேகருக்கு ஞானோபதேசஞ் செய்து மகிமையோடிருந்தனர். மற்றொரு தினத்தில் ஏலேலசிங்கரது கப்பல் கரைதட்டிப்போக அதைக் கேள்விப்பட்டு அவர் தம்மரசனுடனே சொல்ல, அவன் நம்மாலாவதென்ன உம்முடைய ஆசாரியருடனே சொல்லுமென்ன, அவர் போய் விண்ணப்பம் பண்ணிக்கொள்வதற்கு முன்னமே நாயனாரதிந்து ஏலேலசிங்கரை அழைப்பித்துக் கூட்டிக் கொண்டுபோய்க் கப்பலிற் கயிறுபூட்டி அனேகம்படவுகார ரிழுத்திழுத்தெவ்வளவு அசையாமற் பதிந்திருப்பதனால் அவர்களெல்லாஞ் சோர்ந்துகிடப்பதைக் கண்டு நாயனார் அதனருகிற்சென்று தமது திருக்கையாற்றொட்டு ஏலேயாவென்றிழுங்களென்று கட்டளையிட அப்படியே யிழுத்தார்கள். உடனே நிற்கவேண்டியபடி கப்பல் நின்றது.

பின்பொருகாலம் மழையில்லாமையால் உலகத்திற் றானியங்கொள்ளக் கிடையாமல் அனேகரிறந்து போவதைக்கண்டு நாயனார் தமக்கு அன்புள்ள மாணாக்கனாகிய ஏலேலசிங்கரைப் பார்த்து நீர் இந்தப் பஞ்சகால மாறுகிற வரைக்கும் வாங்கிக் கட்டிவைத்திருக்கிற நெல்லையெல்லாம் வாங்கின விலைக்கு குறுணியேற்றமாக விற்கக்கடவை யென்றருள, அவரது சொல்லை ஆகமமாகக்கொண்டுவிற்றார். பொருள் அதிவிர்த்தியாய் மலைபோலுங் குவிந்தன. அவர் கட்டிவைத்திருந்த நெல்லு எழுவருஷங் குறைந்ததில்லை. பின்பு மழை பெய்து உலகம் க்ஷேமமடைந்தது. மறுபடியவரையழைத்துக் குறுணிகுறைய வில்லென்றார். அப்படியேவிற்க நெல்லெல்லாம் மறுநாள் அஸ்தமயத்துக்குள்ளே செலவாய்ப் போய்விட்டன. பின்பு நாயனார் நீர் நெல்லுவிற்று விர்த்தியான பொருளையெல்லாம் உருக்கித்திரட்டிக் கடலிற் போட்டுவிடுமென, அவர் அப்படியேசெய்தார். அதையொரு பெருமீன் விழுங்கிற்று. சிலகாலைக்குப்பின்பு அம்மீன் வலைக்காரர்கையி லகப்பட்டது. அதனை அவர்கள் சோதிக்கும்போது அதன்வயிற்றில் மயிலினமும் பாசியும்படிந்தொரு ஸ்தம்பமிருக்க அதனை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தார்கள். கருங்கல்லென்றெண்ணி ஸ்நானம்பண்ணுமிடத்திற் போடுவித்தார். அதன்மேல் நடத்தன்முதலிய பயிற்சியால் மலினம்நீங்கிப் பிரகாசித்தது. அதில் தமதுபேர் வெட்டியிருத்தலால், தம் பொருளென்றறிந்து குருவருளென்று அற்புதமடைந்தார். இப்படி யிருக்குங்காலத்தில் அளவில்லாத மகிமைசெய்து லோகப் பிரசித்தமாயிருக்கிறவரும் ஏலேலசிங்கருடைய புத்திர நிற்பாக்கியத்தை நீக்கினவருமாகிய அழகாநந்தரும் சிலபெரியோர்களும் திருவள்ளுவரைப்பார்த்து கற்றற்கெளிதாய் இம்மையாதி மும்மைக்கு முதலியாய் லோகோபகாரமாய் உமதுபோரால் ஒரு நூல் செய்யவேண்டுமென்றுசொல்ல, நாயனார்வேதாகமசாரங்களைத் திரட்டி அறம்,பொருள், இன்பமென முப்பாலாக்கி ௧௩௩௦-குறள்வெண்பாவாற் பாடியருளினார். பின்பு அழகாநந்தர் முதலாயினோர்நாயனாரேயிதைக்கொண்டு சங்

நத்தாரைச்செயிக்கலாம்போமென்ன, அப்போதே நாயனுர் புறப்பட்டு தமது மனேவியை இல்லின்கணிறுத்தித் தாம் வழிக்கொண்டு நடந்து இடைக்காடர் வசிக்கிற இடைக்கழி நாட்டை அணுகச் சேர்கையில் ஒளவை நேர்பட அவளோடும் இடைக்காடரைக் கண்டு தாஞ்செல்லும் வகையைச் சொல்ல. இடைக்காடரும் நாயனுரை நோக்கி, இடையாலும் கடையாலு மழியாக் கடவதென்று ஸ்வாமி தம்மை நிராகரித்த நற்கீராதி சங்கத்தாரைச் சபித் திருக்கிறேர். ஆதலால் என்னுலு மும்மாலு மழிவு படப்போகிற தாகையால் நாமும் வருகின்றேம் வாருமென்று இடைக்காடரும் ஒளவையுங்கூட வரம் பெற்று மதுரையை யடைந்து சொக்கலிங்க ஸ்வாமியினுடைய ஆலயத்தைப் பிரதக்ஷணம் பண்ணி ஸ்வாமியையும், அம்மனேயும், தரிசனஞ்செய்துஸ்வாமி சந்நிதானத்தில் பாண்டியராஜா மந்திரி பிரதானிகள்மற்றுச்சனங்கள் ஒளவை யிடைக்காடர் முதலான பெரியோர்களிருந்து கேட்கும்படிதாமருளிச்செய்த திருக்குறள் முப்பாலேயும் சங்கத்தார் நெஞ்சிற்றிகிலேறவும் ஏனேயற்கெஞ்சிற் களிப்பேறவும் அரங்கேற்றிமுடித்தனர். அதனேக்கேட்டோர்கள் யாவரும்மிகு ந்தசந்தோஷமடைந்து ஆனந்தமாகி நாயகாரைப்புகழ்ந்து துதித்தனர்.

பின்பு நாயனுர் இடைக்காடரும் ஒளவையும் மற்றவர்களுஞ் சூழ்ந்து வரப் பொற்றுமரைத் தீர்த்தத்தின் கண்ணுள்ள சங்கப்பலகையின்கண் தமிழ்க் கரசராக வீற்றிருக்கின்றவர்களும் தவத்திலும் ஞானத்திலும் செந் தமிழ் வாக்கிலும் அமைந்த பெரியோராகிய திருவாதவூரென்னும் மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச்செய்த திருக்கோவையார் நானூற்றுக்கும் நூறு குற்றங் கூறினவர்களும் சொக்கலிங்கசுவாமி தமதன்பனுகிய தருமியென் னும் பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற் பொருட்டு அருளிச்செய்த கொங்குதே ரென்னும் பாடலேக் குற்றங்கூறச் சோமசுந்தரனே வித்வானு யெழுந்தருளிவர நெற்றிக் கண்காட்டிலுங் குற்றம் குற்றமே யென்று கூறின

வர்களும் மற்றப்புலவர்கள் பாடிய பாடலையெல்லாங் கொள்ளையிட்டு அகஸ்தியரையும் வெற்றி கொள்ளத்தக்க விலக்கண விலக்கிய வாராச்சியுள்ளவர்களுமாகிய நக்கீராதிப் புலவர்களுடைய தைரியமும் தருக்கும் புத்தியுங் கலங்கிச் சோர்வடையும்படி ஆட்டுக் கூட்டத்திற் புலி புகுந்தாற் போலவும், அராக்கூட்டத்தில் கருட னடைந்தாற் போலவும், யானைக்கூட்டத்தில் சிங்கவேறு சென்றாற் போலவும், மூங்கில் வனத்திற்றீப்பற்றியது போலவும், அவர்களிடத்திற் சென்று அவர்கள் தம்மை வினவின அசதி வினாவிற்கெல்லாஞ் செந்தமிழ்ப் பாவா லுத்தரங் கொடுத்தார்.

பின்பு சங்கத்தார் நாயனரைநோக்கி, வள்ளுவரே நீர் பாடிய குறளை நாங்கள் ஒப்புக்கொள்ளுவதற்கு ஐயமொன்றுளது-அஃதியாதெனின் நாங்க ளிருக்கு மித்தப் பலகை தெள்ளிய செந்தமிழ் நூலைக்கண்டாவிடங்கொடுக்கு மாதலால், அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாஞ் சம்மதி என்று சொல்ல, அவ்வாறே நாயனர் தம்மா லருளிச்செய்யப்பட்ட திருக்குறள்



முறையை அச்சங்கப்பலகைமீது வைத்தார். உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரையில் விழும்படி தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத்தி னளவாய்ச் சுருங்கி அதற்குமாத்திர மிடங்கொடுக்கக் கண்டவர்கள் யாவருங் களிகூர்ந்தனர். அவருட்சிலர் இது தெய்வீகமாகிய வேத மென்றுஞ், சிலர் அங்கங்களென்றுஞ், சிலர் ஞானநூலென்றுஞ், சிலர் ஆகமமென்றுஞ், சிலர் புராணங்களென்றுஞ், சிலர் வாலிபர் மதனாகமமென்றுந் தத்தமக்குத் தோன்றியவாறே சொல்லித் துதித்தனர். அன்றியும் அனேக விசேஷமான தெலுங்காதி சாஸ்திரங்களும் கிரந்த முதலான பாஷைகளி லிருக்கின்ற பல நூல்களும் இத்திருக்குறளினது பாயிரத்தினோர் பாடலின் பொருளுக்கு மொவ்வாதென்றும், இதுவே வித்வான்களுடைய பாக்கிய மென்றும், இந்தப் பயன் அனேகமாயிரம் அகஸ்தியர்கள் ஒருருவாகி வந்து பாடப்பட்டதோ வென்றும், பலவித விலக்கண விலக்கி

வங்கட்டும் இஃதங்கத்தை யொக்குமென்றும், விஷ்ணுவானவ ரிவ்வுலகை யிரண்டடியா லளந்தார். இது எல்லாருவத்தையு மீரடியாலளந்த தென்றும், இது சட்சமயத்துக்கும் பொது நூலென்றும், உட்சமயத்துக்கே யுரிய நூலென்றும், இப்படிக் கல்விமான்களும் அரசர்களும் மற்றவரும் கொண்டாடித் துதிக்கும்போது பொற்றாமரையில் விழுந்து தமோதி வருந்திய புலவர் நாற்பத்தொன்பதின்மரும் மிகக் கலங்கிக்கரையேறி நாயனாரையும் திருக்குறளையும் புகழ்ந்து துதித்து நாற்பத்தொன்பதின்மரும் நாற்பத்தொன்பது பாடல் அருளிச்செய்தனர். அஃது திருவள்ளுவமாலையெனப் பெயர்பெறும்.

அச்சங்கத்தாரும் உக்கிரப் பெருவழுதியென்னும் பாண்டியன் முதலானவர்களும் அத்யந்தம் ஆனந்தமடைந்து வெகு பூசிதம் பண்ணி இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொளில் நல்லதென்ன விடைபெற்றுப் பொதிய மலைக்குப்போய் அகஸ்தியர் முதலானவர்களைக் கண்டு தாஞ்செய்த நூலைக் காண்பிக்க அவர்கள் அடைந்த சந்தோஷத்தையும் புகழ்ந்த பாடலையும் அநந்தனுஞ் சொல்ல முடியாது. அவ்விடத்தில் கொங்கணசித்தர் வழிபட அவருக்கனுக்கிரகித்து நாயனார் அவர்களிடத்தில் உத்தரவு பெற்றுத் தாம் முன் போம்போது வழியினேர் படாத ஸ்தலங்களையெல்லாந் தரிசனம் பண்ணிக்கொண்டு திருமயிலைக்குச் சமீபமாக வருவதை அப்பதியாரும் ஏலேலசிங்கரும் கேள்விப்பட்டு எதிர்கொண்டுபோய் அழைத்து வந்தார்கள். அவரும் வந்து தமதில்லறத்தில் வாசுகி மாதினோடிருந்தார்.

இப்படி இருக்கையில் ஒரு பெரியவர் அவரில்லின்கட் சென்று ஸ்வாமீ இல்லறம் பெரிதோ துறவறம் பெரிதோ அடியேனுக் கனுக்கிரகிக்க வேண்டுமென்று பலநாள் பணிசெய்து காத்திருக்க, நாயனார் அவருக்குத்தரமொன்றுஞ் சொல்லாமல் அவரே அறிந்து போம்படி ஒருநாள் தமது வாசுகி யென்னும் மனையாள் கிணற்றில் சலந்தூக்கிக்கொண்டிருக்கையில் அழைக்க அம்மாள் பாதி கிணற்றளவினில் அக்கின'குடத்தை அப்படியே நிற்கவிட்டு



வத்தையும், மற்றொருநாள் அந்தம்மாள் நாயனருக்குப் பழையது பரிமாறி

நீர்கையில், நாயனுமெனக்கிச்சாதஞ் சுடுகின்றதென அந்தம்மாள் சீக்கிரம் விசறிகொண்டு விசறியதையும், மற்றொருநாள் நல்ல மத்தியானத்தில் சிறிது இருளனுகாயிடத்தில் நாம் செய்யும்போது கையிலிருந்த குழல் தவறி வீழ்ந்ததை எடுக்க மனையாளை நோக்கித் தீபங்கொண்டுவா வெனக் கொண்டுவந்ததையும் வந்திருந்தவர்கண்டு இப்படிப்பட்ட மனையாள் வாய்க்கில் இல்லறமே பெரியதென்றும் இல்லையேல் துறவறமேபெரிதென்று மெண்ணிக்கொண்டு ஒன்றுங்கேளாமற் போய்விட்டார்.

இப்படி நாயனருக் திருமனைவியும் இல்லற நடத்திவருங்காலத்தில்வாசுகியம்மாள் மோக்ஷமடையும்போது நாயனர் திருமுகத்தைப்பார்க்க, நாயனரும் ஏனென்ருர். என்னை மணஞ்செய்தவன்று தேவரீருக்கு யானன்னம் பரிமாறும்போது ஒரு சிறிய பாத்திரத்திற் சலமும் ஊசியும் வையெனக் கட்டளையிட்ட தின்னகாரணமெனத் தெரியவில்லையென்று விண்ணப்பஞ் செய்ய அதற்கு நாயனர் அன்னம் புறத்தில் சிதறில் எடுத்துப் பரிசுத்தஞ் செய்வதற்கென்று சொல்ல உடனே மோக்ஷமடைந்தனள்.

## அப்போது நாயனர் சொல்லியது.

### வெண்பா

அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவறுத பாவா—யடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
வென்றூங்கு மென்கண் ணிரா.

என்றருளி அந்தம்மாள் திருமேனியைச் சமாதிபண்ணினர். நாயனர் பின்னும் அனேகநாளிருந்து அநேக மகிமைகள் செய்து ஏலேலசிங்கர் முதலாகிய சிஷ்ர்களுக்கும் பூரண அனுக்கிரகம் பண்ணிப் பின்பு ஏலேலசிங்கரை யழைத்து நமக்குப் பரிபூரணதிசை நேரிட்டிருக்கின்றதால் நாம் பரிபூரணமான பின்பு நமது தேகத்தைப் புரிகட்டி இழுத்து ஊர்க்குப்புறத்தில் புதரிற் போட்டு விடுமென் றனுக்கிரகஞ்செய்து நிஷ்டை கூடிப் பரிபூரணமானவர் போலிருக்கக் கண்டு ஏலேலசிங்கர் பொற் பெட்டியில் வைத்தடக்கம்பண்ண யெத்தனித்ததை அறிந்துடனே நாயனர் விழித்துப்பார்த்து அப்பா நான் சொன்ன சொல்லைக் கடவாதையென்று அனுக்கிரகித்து உடனே பரிபூரணமானர். ஏலேலசிங்கரும் நாயனர் கட்டளைப்படி செய்யுமளவில், திருமேனியிற் சிதறிய தசைகளைக்காக முதலான துக ளருந்திப் பொன்மய மானதைக்

கண்டு பெரிதான ஆச்சரியமடைந்து அவர் திருமேனி யிருந்தவிடத் தாலய மெடுத்துப் பூசித்து வந்தார்கள்.

திருவள்ளுவநாயனர் சரித்திரம்
முற்றிற்று.



மேற்படி சரித்திரத்திலுட்பட்ட பாட்டுகள் சொக்கநாதர், தருமியென்னும் பிராமணனுக்கு அருளிச்செய்த

## திருமுகப்பாசுரம்.

அகவல்

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீ இய்நட்பின்
மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோநீ யறியும்பூவே.

## சொக்கநாதர்-நற்கீரரைப் பார்த்துச் சொல்லியது.

வெண்பா.

அங்கங் குலைய வரிவாளி னெய்பூசிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை
யாராயு முள்ளத் தவன்.

## சொக்கநாதரைப்பார்த்து நற்கீரர்சொல்லியது.

வெண்பா.

சங்கறுப்ப தெங்கள்குலஞ் சங்கரனார்க் கேதுகுலம்
பங்கமறச் சொன்னாற் பழுதாமோ—சங்கை

யரிந்துண்டு வாழ்வோ மரனே நின்போல
இரந்துண்டு வாழ்வ திலே.

சங்கத்தாரை வெல்லவேண்டி ஔவை ஞானக்குறியாற் கை சைகைகள் பண்ணி இவை யென்னென்று கேட்கச் சங்கத்தார் சொல்லியது.

வெண்பா.

இவ்வளவு கண்ணிணை யிவ்வளவு சிற்றிடையா
ளிவ்வளவு போன்ற விளமுலையா—ளிவ்வளவாய்க்
க மத் தலைவனையுங் காணாது கன்றிணை
ஞமத்தை காட்டுகுறி நன்கு.

இஃது தகுதியான உத்தரவன்றென்று அக்குறிகளுக்கு ஔவை சொல்லியது.



வெண்பா

ஐய மிடுமி னறநெறியைக் கைப்பிடிமி
னிவ்வளவே யும்மனத்தை யிட்டுண்மின்—றெய்வ
மொருவனே யென்ன வுணரவல் லீரே
லருவினை களோந்து மறும்.

இப்படியென்று ஔவைசொல்லச் சங்கத்தார் நாணமுற்று இவளை வெல்லப்படாதென்று திருவள்ளுவரைப் பார்த்து நீ ரெந்தனூரென்றதற்கு அவர் சொல்லியது.

வெண்பா.

எந்தவூ ரென்றி ருந்தவூர் நீர்கேளீ
ரந்தவூர்ச் செய்தி யறியீரோ—வந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா
யப்பாலும் பாழா யறும்.

என்றிது முதலான ஞானார்த்தமான செய்யுட்களாலவர் வினவியவை நக்கெல்லா முத்தரவுசொல்ல, இவரையும் வெல்ல தரிதென்று இடைக்காருடனே பேச, அவர் சொல்லியது.

வெண்பா.

ஆற்றங் கரையி னருகிருந்த மாமரத்திற்
காக்கை யிருந்து கஃகஃகென்னக்—காக்கைதனை
யெய்யக்கோ வில்லாம லிச்சிச் செனவெய்தான்
வையக்கோ னார்தன் மகன்.

இதுபோன்ற அநேகஞ் செய்யுட்களை அவர்களாலெழுதப் படாமலும் கற்றுக் கொள்ளப்படாமலுஞ் சொல்ல நாணித் தோற்படைந்தார்கள்.

திருவள்ளுவநாயனார் திருவடிவாழ்க.





உ

திருக்குறளின்
சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை.

## அசரீரி.

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல்.

(இ ள்.) திரு-அருட்செல்வத்தையும், தகுதெய்வம்(அதற்குத்)தக்க தெய்வத்தன்மையும் உடைய, திருவள்ளுவரோடு - திருவள்ளுவருடன், உருத்தகு நற்பலகை - (அவரிருத்தற்குத்தனது) உருவத்தினாலே தக்கநல்ல சங்கப் பலகையிடத்து, உருத்திரசன்மர் ஒக்கவிருக்க வெனவுரைத்து - (சமானரா யிருக்கக்கடவரென்றசொல்லி) வானில்-ஆகாயத்திலிருந்து, ஒருக்க - (அவ் விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம்) ஒற்றுமைசெய்யும்படி, ஓர் சொல்-ஒரு வாக்கியம், ஓ வென்றது - ஓ வென்று இரைந்தெழுந்தது. எ-று.*

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வமாதலின் திருவென்றதற்கு அப் பொருளுரைக்கப்பட்டது. தெய்வத்தன்மை-தெய்வத்தி னவதாரமாய்விளங்குகை, தெய்வத்தன்மை யில்லார்க்கு அருளுளதாயினும், அதனாலே பெரும் பயன் விளையாமையின் தகுதி சொல்லப்பட்டது, திருவள்ளுவரென்னும்பெயருந் திருவென்பது - உயர்வையும், வள்ளுவரென்பது-வண்மையையுடையரென்பதையும், விளக்கிநின்றனவாதலின், அதுவேதத்தில் இலை; மறை காய்கள்போற் பலவிடங்களிலு மறைந்து வெளிப்படாதிருந்த மெய்ப்பொருள் களையெல்லாம் தொகுத்து உலகத்தாருக்குக் கொடுத் தருள் செய்தவரென் னுங் காரணம்பற்றிவந்த பெயராயிற்று. வள்-முதனிலை. அர் - இறுதிநிலை. உ-சாரியை. அம் முதனிலைக்குப்பொருள். ஈகை உருத்திரசன்மர்-உருத்திரனால் சன்மத்தை அடைந்தவரென விரியும். அவர் முருகக்கடவுளது திருவவதாரமாய் வணிகர் மரபிற்றோன்றிய மூங்கைப்பிள்ளையார். அசரீரி அருவமா யெங்குநிறைந்துள்ள முதற்றெய்வம். அரங்கேற்றத் தொடங்கிய காலத்துத் தெய்வப் புலவரோடு ஒப்பாயிருந்து கேட்டதற்குத் தகுதியுடையோர் யாரெனயாவரும் யெண்ணமுற்று நின்றவழி இவ்வசரீரி வாக்கியம்பிறந்தது என்றதெனப் படர்க்கை வினையாகக்கூறலால், அவ்விடத்து நின்றுகேட்ட புலவர்களில் ஒருவர் அதனை இங்ஙனம் பாடலாகச் செய்தனரென்றறிக. (௩)

## நாமகள்.

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைபாரதம் பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(இ-ள்.) கூடாரை யெள்ளியவென்றி யிலங்கிலைவேன்மாற (பகைவரை ப்புறங்கொடுக்கச்செய்து) இகழ்ந்த வெற்றியை யுண்டாக்கி விளங்காநின்ற நகட்டு வடிவாயுள்ள வேற்படையையுடைய பாண்டியராஜனே, நாடா (உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும்வழியை) நாடி, முதல்-படைப்புக்காலத்திலே, நான்முகனாவில் - பிரமனது நாவிலிருந்து, நான்மறைபடா (இருக்குமுதலாகிய நான்குவேதங்களையும் பாடி, இடை இதற்கும் அதற்கும்) நடுவான காலத்திலே, பாரதம் பகர்ந்தேன் - பாரதமாகிய வேதத்தைச் சொல்லினேன், பின் (அதற்குப்) பிற்பட்ட இக்காலத்திலே, என்வாக்கு-என்னுடைய வாக்கு, வள்ளுவன்வாயது (திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி) வள்ளுவன் வாயின்கண்ணதாயிற்று, எ-று. * வேதமும் சந்தோரூபமாகையால், படாவென்றான். தன்கணவனாதலின்நான்முகனாவிலிருந்தென்றும், அவனவதாரமாதலின், வள்ளுவன் வாயதென் வாக்கென்றுங்கூறினாள். பாரதம் வியாசரைக்கொண்டு சொல்லப்பட்டது இதனால் நான்மறை பூர்வவேதமும் பாரதம் மத்தியவேதமும், திருக்குறள் உத்தரவேதமும் என்றதாயிற்று. பூர்வவேதம் பின் வியாசராலே நான்காக வகுக்கப்பட்டமைபற்றி நான்மறை யெனப்பட்டது. அன்றி நானெனப்பிரித்து எழுவாயாக்கினுமாம். வேதம் முதலைத் தென்பதூஉம், இவற்றது தோற்றமுறையால், இஃது வாக்கிய பிரமாணத்தில் சிறப்புடைத் தென்பதுவும் சொல்லியபடி. (உ)

## இறையனார்.

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

(இ-ள்.) மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல்-புலவர்க் கரசனாகிய வள்

ளுவன் வாயிற்பிறந்த திருக்குறளானது, என்றும் யாணர்புலராது-எக்காலத்துந் தன்னழகு கெடாமல், நாட்செல்லுகினு நின்றலர்ந்து - செல்காலங் கழியினும் நிலைபெற்று மலர்ந்து, தேன்பிலிற்றுநீர்மையதாய்-தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் (விளங்குமாதலால்; குன்றாத செந்தளிர்க் கற்பகத்தின்-குறைவுபடாத செவ்விதளிர்களையுடைய கற்பகத்தினது, தெய்வத் திரு

8



மலர்போன் தெய்வத்தன்மை பொருந்திய உயர்வாகிய மலர்போலும், எ-று. ✱ திருக்குறளுக்கு அழகுசொன்முடிபு பொருண்முடிபின் குணங்களும். அலர்தல்·எங்கும் பரவுதலும். தேன்பிலிற்றல்-இருமை இன்பங்களும் விளைத்தலும் ஆம். சொல்-ஆகுபெயர். இறையனுர் கடவுளாதலின் - இனி இதிற் சிறப்ப தோன்றுளதாவ தின்றென்னுந் துணிவுதோன்ற என்றுமென்றும், பின்னும் அதனை வலியுறுத்தற்கு நாட்செல்கினு நின்றென்றும். வாழ்த்துப் பொருள்பட இவ்வாருகூறினர். இது அழியாது நின்று பெருகிப் பயன்படுமொரு சொல்லியபடி. (௯.)

## உக்கிரப் பெருவழுதியார்.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

(இ-ள்.) வள்ளுவனாய் - திருவள்ளுவனாய், தான்மறைந்து - தனது திருமேனியை மறைத்து, நான்மறையின் மெய்ப்பொருளை - நான்கு வேதங்களினுண்மைப்பொருளை, தந்து (இவ்வுலகத்திலே) கொணர்ந்து, முப்பொருளா (அறம்பொருளின்பமென்னு) முப்பாற்பொருளதாக, நான்முகத்தோன் பிரமனுவ், உரைத்த - திருவாய்மலர்ந்த, நூல்-நூலினது, முறையை-புத்தகத்தை, சென்னிவந்திக்க - எனது தலையானது தொழக்கடவது, வாய்வாழ்த்துக-வாயானது வாழ்த்தக்கடவது, நன்னெஞ்சஞ் சிந்திக்க—நல்ல மனமானது நினைக்கக்கடவது, செவிகேட்க-காதுகளானவை கேட்கக்கடவன, எ-று. ✱ முப்பொருள்-ஆகுபெயர். இவ்வேதப்பொருள் ஆதியிலே வேதஞ்சொல்லியோனுலேயே சொல்லப்பட்டமையால், உலகத்துச் சமயாசாரியர்களாலும் பிறரா

லும் ஒன்றற்கொன்று மாறுகக் கொள்ளப்பட்ட பொருள்கள்போல்வ தன்றெ ன்பது தோன்றமெய்ப்பொருளென்றார். கலையுணர்புலமையிற்றலைமையோ ளுகி, விதிமுறை வழாது முதுநிலம் புரக்கும். பெருந்தகையுக்கிரப் பெருவ ழுதியென்னுந், தன்னிகரில்லா மன்னவர்பெருமான். தான் மேற்கொண்ட சிறப்பைப் பலரும் அறிந்து மேற்கொள்ள இவ்வாறு வழிபாடு கூறினன். ம ன்னனெப்படி மன்னுயி ரப்படியாதலின் இப்புத்தகத்தை முன்னே பூசித்து மெய்மொழி மனங்களால் வணக்கஞ்செய்து பின் கேட்கவேண்டுமென்று சொல்லியபடி. (௫)

## கபிலர்.

தினையளவு போதாச் சிறுபுன்னீர் ண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

## திருவள்ளுவமாலை. ௬௬

(இ-ள்.) மனையளகு வள்ளைக் குறங்கும் வளநாட-மனையில் வளர்க்கப்படு கின்ற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம்பொ ருந்திய நாட்டையுடைய அரசனே, வள்ளுவனார் வெள்ளைக் குறட்பாவிரி - திருவள்ளுவரால் அருளிச்செய்யப்பட்ட குறள் வெண்பா, (மிகப் பெரியபொ ருளைத்) தன்னுட்கொண்டு காட்டுதல், தினையளவு போதாச் சிறுபுன்னீர் - தினையரிசியினளவுக்கும், போதாத சிறிய புல்லினது நுனியின்கணுள்ள பனி நீரானது, நீண்ட பனையளவு காட்டும் படித்து - உயர்ந்த பனையினளவான அதன் சாயைத் தன்னுட்கொண்டு காட்டுங் குணம்போலுள்ள குணத்தையு டைத்து, எ-று. * பனை-ஆகுபெயர், ஆல்-அசை. பறவை-கிளி முதலியவை. உலக்கைப்பாட்டு-மகளிர் பரிமளப்பொடி இடிக்கின்றபோது பாடும்பாட்டு. விரி விரித்தல். எப்படி மிகச்சிறிய பனித்துளியிலே மிகப்பெரிய பனைமரத்

னின் சாயை, அடங்கி விளங்குகின்றதோ அப்படியே மிகச்சிறிய இக்குறள் வெண்பாவில் மிகப்பெரிய பொருள் அடங்கி விளங்குகின்றதென்பதாம். இது சுருங்கியிருந்தும் விரிவான பொருளை விளங்குமாறு சொல்லியபடி. இது முதலியன சங்கத்துப் புலவராலே பாடப்பட்டன. (௫)

### பரணர்.

மாலுங் குறளாய்வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

(இ-ள்.) மாலும்-திருமாலும், குறளாய் – குறளாய்ப் பிறந்து, வளர்ந்து, இரண்டு மாணடியால-இரண்டு பெரிய அடிகளால், ஞாலமுழுதும்-உலகமனைத்தையும், நயந்து-விரும்பி, அளந்தான்-அளவிட்டான், வாலறிவின் வள்ளுவரும்-மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும், தங்குறள் வெண்பா வடியால் தம்மின்றுந் தோன்றி அந்நிலைநிற்கின்ற வெண்பாக்குறளின் இரண்டு சிறிய அடிகளால் வையத்தாருள்ளுவ வெல்லாம்-அவ்வுலக மனைத்தினு முள்ளோரால், நினைக்கப்பட்ட வற்றையெல்லாம், ஓர்ந்து-ஆராய்ந்து, அளந்தார் – அளந்தார், எ-று * உம்மை யிரண்டு முறையே தேவரிற் பெரியோனாகியவென்றும், மனிதனிற் சிறியராய்க் காணப்பட்ட வென்றும், பொருள் படநின்றன உபமானத்திலே வளர்தலும் பெருமையும் சொல்லுதலால், உபமேயத்திலே அவற்றிற்கு மாறாகிய நிலைநிற்றலும், சிறுமையும்வருவிக்கப்பட்டன மாலுக்கு தானே குறளாதலும், பின்பு அந்நிலை நில்லாது வளர்தலும் பேரடிகளால் அளவுபட்ட உலகத்தை யளத்தலும், திருவள்ளுவருக்குத் தம்மினின்று குறளை உண்டாக்குதலும், அது தன்னிலை நிற்றலும், அதன் சிற்றடிகளால் அளவுபடாத நினைப்பின் விடயங்களை அளத்தலும் சொல்லப்படுதலாலும், வேற்றுமையறிக. நினைக்கப்பட்டனவெல்லாம் இதனகத்து அளவு செய்யப்பட்டமை சொல்லியபடி. (௬)

௨௦. **திருவள்ளுவமாலை.**

### நக்கீரர்.

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு—மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

(இ-ள்.) தானே-தானே, முழுதுணர்ந்து (வேதப்பொருள்) எல்லாவற்றையு மறிந்து, தண்டமிழின்-தண்ணிய தமிழின்கண், வெண்குறளால்-குறள்வெண் பாக்களால், ஆனுவறமுதலா வந்நான்கும்-விட்டு நீங்குதல் கூடாத அற முதலாகிய அந்நான்கு பொருள்களையும், ஏனோருக்கு-அவற்றை யறியாதவர்களுக்கு (அவர் எளிதினறிய) ஊழின் முறையால் உரைத்தாற்கும் சொல்லி யருளிய திருவள்ளுவருக்கும், ஒண்ணீர் முகிலுக்கும்-ஒள்ளிய நீரைத்தரும் மேகத்துக்கும், உலகு-இவ்வுலகமானது, மற்றென்னாற்றும்-எதிர்கைம்மாறு செய்யும் செயக்கிடந்தது ஒன்றும் இல்லை. வாழி-அவரும் அதுவும் வாழ்க, எ-று.
* ஆனுமை-நீக்காமை தானே முழுதுணர்ந் தெனவே ஆசாரியராயிருந்து பிறரறிவிக்க அறிந்தில தென்றதாயிற்று. முழுதுமென்று மும்மைதொக்கது ஒன்மை இனிமேல் நின்றது, முறை-நூலின் முப்பொருள்களின் கிடக்கை யொழுங்கு காயனுர் கொடைச்சிறப்பு சொல்லியபடி. (எ)

## மாமூலனார்.

அறம்பொரு ளின்பம் வீடென்னு மந்நான்கின்
றிறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதையவன் வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ-ள்.) அறம்பொரு ளின்பம் வீடென்னு மந்நான்கும் - அறமுதலாகச் சொல்லப்பட்ட அவ்வேதப் பொருள்களாகிய நான்கினது, திறம் - கூறுபாட்டையும், தெரிந்து-அறிந்து, செப்பிய (உலகத்தார்க்குச்) சொல்லிய தேவை-தேவனை, மறந்தேயும்-மறந்தாயினும், வள்ளுவனென்பான் (ஒரு மனிதனாக உட்கொண்டு) வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின், அவன்-அவன், பேதை-அறிவில்லாதவனாவன், அவன் வாய்ச்சொல்-அவனது வாயி

ந்பிறந்த அச்சொல்லே, அறிவுடையார்-விவேகமுடையார்,' சொன்னார்சொன் னார்கள், எ-று. * அறமுதலியவற்றின் கூறுபாடு-அவற்றினது தொகைவகை விரிகள். மறந்தேயு மென்றதனால் நினைப்புடன் சொல்லுவோன் பேதையிற் பேதையா மென்றதாயிற்று, முன்னும் பின்னுமுள்ள பாட்டுகளில் இப்பெயர் தெய்வத் தன்மையைக் குறிப்பிக்கும்படி நன்கு மதித்து உயர்த்திச்சொல்ல ப்படுதலால், ஒருமனிதனுக வுட்கொண்டெனபதுவருவிக்கப்பட்டது. அன்றி



ிவிக்குறிப்பினாலே சாதி இழிவு தோன்ற வள்ளுவனென்பானெனினுமமை யும். இக் குறிப்பொலியை வடநூலார் காகுசுரமென்பர். தெய்வப்புலவரை யுவமதிப்பினிழிவு சொல்லியபடி. (அ)

## கல்லாடர்.

ஒன்றே பொருளென்னின் வேறென்ப வேறென்னி
னன்றென்பவாறு சமயத்தார்—நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

(இ-ள்.) ஆறுசமயத்தார்-அறுவகை மதத்தோரும், ஒன்றே பொருளென் னின் (ஒருமதத்தார் தமது நூலிலே உலகமும்உயிரும் கடவுளுமாகிய) பொரு ள்கள் ஒன்றேயென் றுநாட்டுவராயின், வேறென்ப (மற்றொரு மதத்தோர் தம துநூலிலே அதனைமறுத்து அவை) வேறுமென்று நாட்டுவர், வேறென்னின் (அப்படி) வேறென்றுநாட்டின், அன்றென்ப-பின்னொருமதத்தோர், அதனை- அன்றென்றுமறுப்பர் (ஆதலால் சமயநூல்களெல்லாம் இவ்வாறு மறுக்கப்படு

ின்றன) வள்ளுவனுர் முப்பான்மொழிந்த மொழி திருவள்ளுவராலேமுப்பா லாகச் சொல்லப்பட்டதாலே, நன்றென்ன நன்றென்றுகொள்ளுவதற்கு, எப் பாலவரும் - எவ்வகைப்பட்ட பகுதியோரும், இயைப - உடன்படுவோர், எ-று. மொழிஆகுபெயர். ஆறுமதமாவன: வியாசமதம்; சைமினிமதம், பதஞ்சலி மதம், கபிலமதம், கணாதமதம், அக்ஷபாதமதம்அன்றிச் சைவவைணவமுதலிய வற்றைக்கூறினுமாம், எச்சமயத்தாரு மென்றது - எப்பாவலருமென்றத னல், வேதத்துக்கு உட்பட்டசமயத்தாரேயன்றிப் புறப்பட்டசைனம், பௌத் தம், சார்வாகம் முதலிய மதத்தாரும், பலவகைப்பட்டசாதியாரும், தேயத்தா ரும்,காலத்தாரும்,பிறரும்தழுவப்படுதலறிக இதுவேபொதுவேதமென்றபடி.

## சீத்தலைச் சாத்தனுர்.

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு—மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றூரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

(இ-ள்.) வள்ளுவர் - திருவள்ளுவரது, பாமுறைதேர் முப்பால் - பாக்க ளின் (முன்பின்) முறைதெரிதற் கிடனுகிய திருக்குறளான து, மும்மலையும், கொல்லிமலை, நேரிமலை, பொதியமலை எனப்படுகின்ற மூன்று மலைகளையும், முந்நாடும்(குடநாடு, புனனாடு, தென்னாடெனப்படுகின்ற மூன்றுநாடுகளையும், முந்நதியும் பொருநைகாவிரிகதி வையைநதி எனப்படுகின்ற) மூன்று நதி களையும், முப்பதியும் (கருவூர், உறையூர், மதுரையெனப்படுகின்ற) மூன்று



பதிகளையும், மும்முரசும் (மங்கலமுரசு, வெற்றிமுரசு, கொடைமுரசு எனப் படுகின்றமூன்று முரசுகளையும், முத்தமிழும் (இயற்றமிழ், இசைத்தமிழ், நா டகத்தமிழ் எனப்படுகின்ற மூன்றுதமிழ்களையும், முக்கொடியும் (விற்கொடி புலிக்கொடி, மீனக்கொடிஎனப்படுகின்ற) மூன்றுகொடிகளையும் மும்மாவும் (கனவட்டம், பாடலம், கோரம் எனப்படுகின்ற மூன்று குதிரைகளையும் தா முடைய மன்னர்-தாமுறையேயுடைய (சேர, சோழ, பாண்டியர் எனப்படுகி

ன்ற மூவரசருடையவும், தடமுடிமேல்-பெரிய முடிகளின்மேலே கொள்ளப்பட்ட, தாரன்றே-மாலையன்றே, எ-று. * அன்றேவென்றது - பலரறிதேற்றம். முப்பால்-ஆகுபெயர் மும்முரசும் முத்தமிழும் அம்மூவரசர்க்கும் பொதுமையவாயினும் இம்முறையுரிமை அவர் குடிமரபிற் கியைந்தனபோலும், அரசர் மூவரும் மேற்கொண்ட சிறப்புச் சொல்லியபடி. (௫௦)

## மருத்துவன் றமோதரனார்.

சேந்திநீர்க்கண்டந் தெரிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர் முப்பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(இ-ள்.) காந்திமலைக்குத்து மால்யானை|(தன்பகையென) வெகுண்டுமலையைக் குத்துகின்றபெரிய களிறுபோலுன்ன வரசனே, சேந்திநீர்க் கண்டம்-சேந்திநீர்ச் சருக்கரையையும், தெரிசுகு-சிதைக்கப்பட்டசுக்கையும், தேனளாய்-தேனுடேகலந்து, மோந்தபின் - மோந்தபின்பு, அதனால் - யார்க்குந் (தலைக்குத்துடையோர்) யாவருக்கும், தலைக்குத்து - தலையடி, இல்-இல்லையாகும், வள்ளுவர் முப்பாலால் - திருவள்ளுவர் குறளால், சாத்தற்கு - சீத்தலைச் சாத்தனார்க்கு, தலைக்குத்து - தலையிடி, தீர்வு - இல்லையாயிற்று, எ-று. * யானைபோல்பவனை யானையெனலால்-ஆகுபெயர் முன்கேட்கப்பட்ட நூல்களிலெல்லாம் பலசொற்குற்றங்களும், பொருட்குற்றங்களும் கண்டு பொறுமல்தலையில் அறைந்துகொண்டு வந்தமையால்,புண்பட்டுக்குத்தல் உண்டாயிருந்தது. இதன் கண் ஓர் குற்றமுங் காணப்பெறுமையால், அது நீங்கிற்றென்க. எப்படிஅம்மூன்று சரக்கும் அதற்கு மருந்தாமோ, அப்படியே யிதற்கு இம்மூன்று பாலும் மருந்தாயின வென்பதாம் தீர்வென்னுந்தொழிற்பெயர் - முற்றுப்பொருளில் வந்தது· இதன் குற்றமற்று விளங்குகை சொல்லியபடி.

## நாகன்றேவனார்.

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ—வள்ளுவனார்
முப்பான் மொழி மூழ்குவார்.

(இ-ள்.) தாளார் மலர்ப்பொய்கை-காலத்தோடு பொருந்திய தாமரை மலர்களையுடைய, ஒருகுளத்து - நீரின் கண்ணே; குடைவார்-மூழ்குவோர், தண்ணீரை (வேறு) தண்ணீரை, வேளாதொழிதல்-விரும்பாதொழிதல், வியப்பன்று - வியப்புச் செய்வதன்று. வள்ளுவர்முப்பான்மொழி-திருவள்ளுவரது முப்பால்களையுடைய நூலின்கண்ணே, மூழ்குவார்-மூழ்குவோர், தாம்-தாம், வாலா - வீணாக அப்பால் - அப்பால், ஒரு பாவை - ஒரு நூலை, ஆய்பவோ - விரும்புவாரோ (விரும்பார் ஆதலின் இதுவே வியப்பைச் செய்வதாம்) எ-று. * தாளார் மலரெனவால் - தாமரைமலரெனப்பட்டது, வியப்புச்செய்வதை-வியப்பென்றார். மூழ்குதல் இங்கே கருத்து முழுதும் அழுந்தி நிற்றன்மேனின்றது, மொழி - ஆகுபெயர்: ஓகாரம் - எதிர்மறை விரும்புதலாகிய காரணத்தை ஆய்பவோ வெனக்காரியமாக உபசரித்தார். அது வியப்பன்றென்மையாலே - இது வியப்பென்றதாயிற்று. உயர்வான பொருள் பெற்றோர்க்கு அதினிழிவான பொருளையும் பெறவிரும்புதல் இயல்பாயிருக்க, குளிர்ச்சி, இன்சுவை, நறுமணமுதலிய குணங்களாலே சிறந்தஒரு தாமரைக் குளத்துநீரைப் பெற்றோர்க்கு அதனுற்றுனே அவமதிபெற்று வேறு தண்ணீரைப்பெற விரும்பாமை வியப்பைச் செய்வதாயிற்று. ஆயினும் இதுகாறும் ஒரு நூலைக் கற்றோர்களுக்கு வேறுநூலைக்கற்க விரும்புதலன்றி விரும்பாமையில்லாதிருக்க, இப்போதுஉளதாதலின் - இதுவே பெருவியப்பைச் செய்வதென்றதாயிற்று. இதனால் இந்நூலகத்து எந்நூற்பொருளும் அடங்கியிருக்கின்றமை குறிப்பிக்கப்பட்டது. பலநூல்களையுங் கற்க விரும்புவோர்க்கு இதுவொன்றே அமைதல் சொல்லியபடி. (கஉ)

அரிசிற்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தோன் றுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதலால்
வல்லாரார் வள்ளுவ ரல்லால்

(இ-ள்.) பரந்த பொருளெல்லாம் (வேதத்திலே) ஒன்றோடொன்று மயங்கிநின்ற நால்வகைப் பொருள்களையும், பாரறிய-இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு, வேறுதெரிந்து - வேறாகப்பிரித்து, திறந்தோறுஞ்சேர (அது அது தனது தனது) வகையோடு சேரும்படி, சுருங்கிய சொல்லால்-சுருக்கமான சொல்லாலே, பொருள்விளங்க - பொருள்விளங்க, விரித்துச்சொல்லு

தல்-விரியும்படி வைத்துச்சொல்லுதல், வல்லார் - வல்லவர்கள் வள்ளுவரல்லால் - திருவள்ளுவரல்லாயல். ஆர்-ஒருவரும் இல்லை, எ-று, * பார் - ஆகுபெயர். திறம்-அறமுதலியவற்றின் கூறுபாடு. சுருக்கச்சொல்லல் விளக்கவைத்தல் முதலிய அழகுகள் எப்படி இவரால் அமைக்கப் பட்டனவோ அப்படிபிறரால் அமைக்கப்படுதல் கூடாமை காட்டியதாயிற்று. நூலுக்கும் நாயனார்க்கும் தகுதிசொல்லியபடி. (௩)



## பொன்முடியார்.

காணின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூனின் றளர்ந்த குறளென்ப—நான்முறையான்
வானின்று மண்ணின் றளர்ந்ததே வள்ளுவனார்
தானின் றளந்த குறள்.

(இ-ள்.) காணின்றதொங்கலாய் - மணந்தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டியராஜனே, முன்-முன், காசிபனார் தந்தது-காசிபனாராலேதரப்பட்ட குறளை, கூனின்று - மண்ணின்கண்ணேநின்று, அளர்ந்த(உலகத்தை) அளந்த, குறளென்ப - குறளென்று சொல்லுவர், தானின்று - தாம் (இங்கே) எழுந்தருளி, வள்ளுவனா ரளந்தகுறள் - திருவள்ளுவராலே தரப்பட்ட குறள், நான்முறையான் - நாலின் முறையோடுகூடி, வானின்று - விண்ணின் கண்ணே நின்றும், மண்ணின்றும்-மண்ணின்கண்ணே நின்றும், அளர்ந்தது உலகத்தை) அளந்தது, எ-று. * கு-கூ என நீண்டது. ஆகுருபு - ஒடுவுருபின்பொருளில் வந்தது. அக்குறள் வஞ்சித்துப் பெற்றளத்தலால், நான்முறையோடு கூடாதாயிற்று இக்குறளுக்கு ஒலிவடிவும் வரிவடிவுமென இரண்டு வடிவுண்மையால், ஒலிவடிவுக்கிடம் வானாதலின் வானின்றென்றும், வரிவடிவுக்கிடம் மண்ணாதலின் மண்ணின்றென்றும்கூறினார். இக்குறளுக்கு நான்முறையோடு கூடலும்வானிற்றலும் மிகுத்துச்சொல்லி வேற்றுமைசெய்யப்பட்டது. முன் மாலுமென்பாட்டிலே நாயனார்க்கும்மாலுக்கும், இப்பாட்டிலே திருக்குறளுக்கும் மாலவதாரக்குறளுக்குமொப்புமை குறித்துச்சொல்லவலால். வேறுபாடாம். உலகத்துப்பொருளெல்லாம் இஃது அளத்தற் சிறப்புச் சொல்லியபடி. (௪)

## கோதமனார்.

ஆற்ற லழியுமென் றந்தணர்கா ணான்
போற்றி யுரைத்தேட்டின் புறத்தெழுதா—ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.

(இ-ள்.) அந்தணர்கள் - அந்தணர்கள், நான்மறையும்நான்குவேதங்களையும், உரைத்து - வாய்ப்பாடமாக, போற்றி காப்பாற்றி, ஆற்றலழியு மென்று (எட்டின்கண் எழுதிவைத்தால் வலியில்லாரும் ஓதுவாராதலின் இவற்றின்) வலிமைகுறையுமென்று, எட்டின் புறத்து - எட்டின்கண், எழுதார் எழுதார்கள், வள்ளுவனார் முப்பாலை திருவள்ளுவரது திருக்குறளை. எட்டெழுதி-எட்டின்கணெழுதிவைத்து, வல்லாரும்-வலியுடையவரும், வல்லாரும்-வலியில்லாரும், சொல்லிடினும் - ஓதினாலும், ஆற்றல்சோர்வின்று - வலிமைகுறைதலில்லை, எ-று. * அவ்வேதத்துக்கு உதாத்தம் அநுதாத்தம் எனப்பட்ட சுரம்



களின் வழுவாமலோதல் வேண்டுமென்னும் விதியுளதாதலின், அதற்குத்தகுதியுடைய அந்தணரே அதிகாரிகளாயினர். இதற்கு அஃதில்லாமையால், யாவரும் அதிகாரிகளாவரென்றறிக. சொல்லிடினுமென்றதனால், பொருளுணர்ச்சிக்கும் இதற்கும் வலிமைவேண்டு மென்பது பெறப்பட்டது, ஆற்றல்-சொற்செறிவின்றிட்பம் இவ்வனைக் கூறவே, அவ்வேதம் சொல்லின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம் இவ்வேதம் பொருளின்கண்ணே தலைமையுடைத்தென்பதூஉம் பெறப்பட்டன. ஓதப்படுதலில் அவ்வேதத்தினும் இது சிறப்புடைமை சொல்லியபடி. (௪௰)

நத்தத்தனார்.

ஆயிரத்து முந்நூற்று முப்பதருங் குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.

(இ-ள்.) பாயிரத்தினோடு - பாயிர நான்கதிகாரங்களோடுசேர்த்து தொ

மகயாகிய, ஆயிரத்து மூர்றுற்று முப்பதருக்குறளும் ௬௩௯ - குறளும், பக
ர்த்தற்பின் - ஓதியுணர்க்தபின்பு, போய் - போய், ஒருத்சர்வாய் - ஒருவரது
ாயாலே, கேட்க - கேட்க, நாலுளவோ - இல்லை, மன்னுதமிழ்ப் புலவரா
-நிலைபெற்ற தமிழிலேபுலமை நிரம்பியோராகி, கேட்க-(பிறர்தம்மிடத்து
ர்து கேட்க, வீற்றிருக்கலாம் - வீற்றிருக்கலாகும், எ-று, * வீற்றிருத்தல்
ரு சபையிலே உயர்வாகிய ஆதனத்தில் எறியிருத்தல். இவற்றட் பலவ
கப்பட்ட நூல்களின் கருத்துகளெல்லாம் விளக்கிநிற்றலின் கேட்க, நூலு
ளவோவென்றார். புலவரா யெனவே புலமை நிரம்புதற்கு இவை ஆயிரத்து
மூர்றுற்று முப்பத்துகுறள்களும் போதுமென்பது பெறப்பட்டது. ஓதியோ
க்கு வரும் இம்மைப்பயன் சொல்லியபடி. (௧௩)

## முகையலூர்ச் சிறுகருந் தும்பியார்.

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
செப்பா வலரினு மில்.

(இ-ள்.) வள்ளுவனார் முப்பாலின்மிக்க-திருவள்ளுவரது திருக்குறளின்
மேற்பட்ட, மொழி-நூலொன்று, உண்டெனப்பகர்வார்-உளதென்று சொல்ல
வல்லவர், எப்பாவலரினும் - எவ்வகைப்பட்ட புலவருள்ளும், இல் - இல்லை,
துகவால் - செயற்பால(தாம் இந்நூலைக்குறித்துச்)செயக்கடவன, உள்ளுதல்-
தாம் இதன் பொருளைச்) சிந்தித்துக்கொள்ளுதலும், உள்ளியுரைத்தல் - சிந்
தித்துப் (பிறர்க்கு) அதனைச்சொல்லுதலும், உரைத்ததனைத் தெள்ளுதல்-(பிற



ரால்) சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும். அன்றே - அல்லவா, எ - று.
* மொழி ஆகுபெயர். ஒப்பது வடமொழிவேத மிருத்தலின் மிக்க மொழி
யென்றும் தமிழின் மாத்திரமன்றி வடமொழி முதலியவற்றிலுள்ள புலவரை
யுந் தழுவதற்கு எப்பாவலரினுமென்றும், அறிவொப்புக்காண்டற்கு உரைத்த
தனைத் தெள்ளுதலென்றுங்கூறினார். உள்ளுதலெனவே கேட்டலும், தெளித
லெனவே அவ்வாறொழுகலும், அடங்கின. இதுபயிற்சி செய் தொழுகுமாறு

## ஆசிரியர் நல்லந்துவனார்.

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில்.

(இ-ள்·) சாற்றியபல்கலையும்-அறிவுடையோரால்) சொல்லப்பட்ட பல நூல்களாலும் தப்பாவருமறையும்-(தப்பாத) அரியவேதத்தினாலும், போற்றி-காப்பாற்றி வைத்திருந்தது, உரைத்த (உலகத்தார்க்குச்) சொல்லப்பட்டபொருளெல்லாம், விடங்களெல்லாம் தோற்ற-(தன்னிடத்தேகாட்டும்படி, முப்பான்மொழிந்த-திருக்குறளைச் சொல்லிய, முதற்பாவலரொப்பார் - திருவள்ளுவரையொப்பவர், எப்பாவலரினும் - எவ்வகைப்பட்ட பாவலருள்ளும், இல்-இல்லை, எ-று. * தம்மாலே சொல்லப்பட்டவற்றில் வழிவுறுமையால் தப்பாவென்றும், பொருளுணர்தற்கே யன்றி ஓதுதற்கும் எளிதன்றாதலின் அருவென்றும் விசேடணஞ்செயயப்பட்டது. எப்பாவலரினுமில்-இதற்கு முன்னுரைக்கப்பட்டபடியேகொள்க. முதற்பாவலர் - முதன்மையையுடையபாவலர் நால்வகைப் பாக்களில் வெண்பாக்களும அவற்றுள்ளும் குறள் வெண்பாவும் தலைமைபெற்று நிற்றலின் அக்குறள் வெண்பாவால் நூல்செய்தவல்லமையுடையரென்றுமாம். புலமையிலே நாயனருக்கு ஒப்பின்மை சொல்லியபடி.()

## கீரந்தையார்.

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினான்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

(இ-ள்.) எப்பாலும் வைவைத்த கூர்வேல்வழுதி - எவ்விடத்திலும் கூர்மைவைத்த சிறப்புப்பொருந்திய வேலையுடைய பாண்டியராசன், மனமகிழ இருதயமகிழ, தப்பா (சொல்லப்பட்டபொருள்) வழுவாமல், முதற்பாவால் முதன்மையுடைய பாவாகிய குறள் வெண்பாக்களாலே, தாமாண்ட பாட லால் - தாம்மாட்சிபெற்ற பாடற்றொழிலினாலே, முப்பாலின் - மூன்றுபாலினிலே, நாற்பால் - அறமுதலிய நான்குபகுதிப்பொருள்களையும், மொழிந்

வர் - திருவாய் மலர்ந்தவர், தெய்வத்திருவள்ளுவர்-தெய்வப்புலமைத் திருவள்ளுவர், எ-று. * கூர்-சிறப்பு, நான்கனுண் மூன்றடங்குவதன்றி மூன்றனுளொன்கடங்காமையின் வியந்து கூறப்பட்டதாயிற்று. நூல்செய்த சிறப்பும், அதனால் அரசனை மகிழ்வித்தமையும் சொல்லியபடி. (கக)

## சிறுமேதாவியார்.

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடிய முப்பத்து மூன்றொன் றாழ்—கூடுபொரு
ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

(இ-ள்.) வள்ளுவர் சொன்னவகை - திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகாரவகை, பாயிரநான்கு - பாயிரம்-ச, அறம் முப்பத்து மூன்று - அறம்-ஙங,ஊழொன்று - ஊழ்-க, பொருளெழுபது-பொருள்-எ0, இன்பமிருபதிற்றைந்து - இன்பம்-உரு, எ-று.

* அறத்துப்பாலு ளடங்காது அதனைவிட்டு நூற்கெல்லாம் பொதுவாய் நிற்றலின் வீடொன்று, பாயிரமென்றும் இம்மை, மறுமை, வீடென்றும் பயத்தற் சிறப்பிற்றாய். மூன்றனுண் முதனிற்றலின் விளங்கறமென்றும், யாவர்க்கும் பொதுப்பட நாடித் தொகுக்கப்பட்ட அறத்தின்கூறுபாடு இவையேயாதலின்நாடியமுப்பத்துமூன்றென்றும், முன்னின்றஅறமும்பின்னின்ற இன்பமும் கைகூடுதற்குத் துணையாய் நிற்றலின் கூடுபொருளென்றும், அப்பொருளின் பாகுபாடுகளெல்லாம் இவற்றினடங்குதலின்—எள்ளி லெழுபதென்றும் கூறினார். எள்ளல் - இகழ்தல், பாயிரநான்கு - பாயிரமானது நான் கதிகாரங்களையுடைத்து எனப்பிறவும் விரித்துரைத்துக்கொள்க. சிலபழைய நூல்களிலே சிலவற்றை சாதியாரும், சமயத்தாரும், மிகுத்தும் குறைத்தும் வேறுபடுத்தலால், அப்படிப்பட்டவேறுபாடு இதற்கும் வரினும் வருமென்று ஆசங்கித்து இதனதிகாரங்களுக்குஇங்ஙனந்தொகைசெய்தார். பின்இவ்வாறு தொகை செய்யப்பட்டு வருவனவற்றிற்கும் இதுவே கருத்தாகக் கொள்க. முப்பால்களுக்கும் அதிகாரத்தொகை சொல்லியபடி. (உ0)

## நல்கூர்வேள்வியார்.

உட்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப—விப்பக்க
மாதானுபங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

(இ-ள்.) உட்பக்கநோக்கி-அப்பக்கத்தைக்குறித்துச்சென்றோனாகிய, உப கேசி தோண்மணந்தான் - உமாதேவியினது தோளைமணந்தகடவுளை, உத்தர மாமதுரைக்கு - வடமதுரைக்கு, அச்சென்ப - ஆதாரமென்று சொல்லுவர்;



இப்பக்கம் - இப்பக்கம், மாதானுபங்கி - மாதானுபங்கியெனப்படுகின்ற, மறு வில்புலம்-குற்றமற்ற புலமையாகிய தேனைச்சொரிகின்ற, செந்நாப்போதார்- செவ்விய நாவாகிய மலரையுடையவர், புனற்கூடற்கு - நீர்வளத்தையுடைய தென்மதுரைக்கு, அச்சு – ஆதாரமாவார், எ று. * உட்பக்கம்- இடைக்காடர் அரசன் தன்பாடலை அவமதித்தமைபற்றி பிணங்கிச்சென்றபக்கம். உட்பக்க நோக்கியென்றது - வினையா லணையும்பெயர், கேசி-திருமால்இது அக்கடவு ள்சகஸ்திர நாமத்திற் கண்டது. கேசிக்குப்பின்னேபிறந்தவன்-உபகேசியென் ருயது. உபேந்திர னென்பதுபோல், மாதா அனுபங்கி-மாதாவை நிகராகக் கொண்டொழுகின்ற ஒழுங்கினனெனப்படுதலின் அவன்பின்னே மேலேபோல் இவர் உலகத்தார்மேல் அருளிச்செய்தல் சொல்லப்பட்டதாயிற்று. நாப்போ தென்றதற்கேற்க - புலமையிலே தேன் ஆரோபிக்கப்பட்டது. அச்சுப்போற் றங்குதலால், அச்சென்றார். நாயனாராலேதிங்கட்குடையுடைச் சீர்சால் வழு தியுஞ் சங்கப்புலவருந் தழைத்தினிதோங்கியமதுரைக்கு உண்டான சிறப்புச் சொல்லியபடி. (உக)

தொடித்தலை விழுத்தண்டினார்.

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்.

(இ-ள்.) அறநான்கு-பாயிரம் இல்லறம் துறவறம் ஊழ் என) அறப்பாலி னுட் பிரிவுகணான்கு, அறிபொருளேழ்-(அரசு அமைச்சு அரண் கூழ் படைநட்பு ஒழிபு என அறியப்பட்டபொருட்பாலி னுட்பிரிவுகளேழு) காமத்திறமூன்று-(ஆண்பால், பெண்பால், அவ்விருபால் எனக் காமத்துப்பாலினுட் பிரிவுகண் மூன்று, எனப் பகுதிசெய்து - என்றுபகுதிசெய்து, பெறலரியநாலும்-பெறு தற்கரிய (அறம்பொரு ளின்பம்வீடு எனப்படுகிற) நான்கு பொருள்களையும், மொழிந்த - சொல்லிய பெருநாவலரே - பெரியநாவலரே, ஒழிந்தபொருள் (அவற்றுள் அடக்காமல்) ஒழிந்த பொருள், உளதாயின் (அதனை) நன்குணர் வார்போலும் - நன்றாகஅறிய வல்லவர்போலும், எ-று. * திறனென்றது-அற முதலியவற்றோடும் கூட்டப்பட்டது. நான்கு-நான்கு பிரிவுடைத்தென் விரி த்துரைத்துக்கொள்க. நாவலரேயென்றமையால் பிறரால் அறியப்படுவே தன் றென்பதாயிற்று. முப்பாலியற்றொகையும், இவற்றி னடங்காதது ஒன்றில்லை யென்பதும் சொல்லியபடி. (உ௨)

## வெள்ளிவீதியார்.

செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா



வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லா தாரில்.

(இ-ள்.) செய்யாமொழிக்கும் - (ஒருவராலே) செய்யப்படாத மொழியா கிய வேதத்துக்கும், திருவள்ளுவர்மொழிந்த-திருவள்ளுவரால் அருளிச்செய் யப்பட்ட, பொய்யா மொழிக்கும்-(தன்வழியி லொழுகுவோர்க்குப் பயன்விளை விலே) பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும், பொருளொன்றே - பொருளொன்றும், ஆராயின்-ஆராயில், செய்யாவதற்குரியார் செய்யப்படாத அவ்வேத மோதுதற்குரியவர், அந்தணரே - அந்தணரேயாம், ஏனை யிதற்குரி யாரல்லாதார்-பொய்படாத இத்திருக்குறளோதுதற்குரியவரல்லாதவர், இல்- (உலகத்தி) வில்லை, எ-று. * பூர்வவேதத்தை நித்தியமென்பார். மதம்பற்றி செய்யாமொழியென்றார். அது வடமொழியும், இது தென்மொழியுமாய்நின் று, சில வேறுபாடுடையனபோற் றோன்றினும், நுண்ணுணர்வா ளோக்கு

வார்க்குக் கருத்து வேறுபடாமையின்-பொருளொன்றேயெனத் தேற்றோ ரம் கொடுத்துக்கூறினர். செய்யாமொழி பொய்யாமொழி அன்மொழித்தொ கைகள், இதற்குரியாரல்லாதாரில் லென்றதனுலும், பொதுவேத மாதலறிக, அதற்கும் இதற்கும் பொருள் வேறேவென்றும், இதனை யோதற்கதிகாரிக ளாவார். யாவரோவென்றும். நிகழ்கின்ற ஐயமொழித்தபடி. (உ௩)

## மாங்குடிமருதனார்.

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோ
ருள்ளுந்தோ றுள்ளுந்தோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(இ-ள்.) வள்ளுவர் வாய்மொழி-திருவள்ளுவாது வாயினின்றுந் தோன்றிய திருக்குறளினது, மாண்பு-மாட்சிமைசொல்லி, (அது) ஓதற்கெளிதாய்-ஓதப்படுதற்கெளிய சொற்களையுடைய தாகியும், உணர்தற்கரிதாகி - அறிதப்படுதற்கரிய பொருள்களையுடையதாகியும், வேதப்பொருளாய் - வேதமெனப்படுகின்ற பொருளாகியும், மிகவிளங்கி-(அவ்வேதத்தின்) மிகவிளங்கி, தீயற்றோர்-குற்றமற்றோர்கள், உள்ளு தோறுள்ளு தோறு-நினைக்குந்தோறு நினைக்குந்தோறும், உள்ளம்-(அவர்களுடைய மனத்தை, உருக்கும்-கரைக்கும்,எ-று. * ஓதற் கெளிதா யெனவே கவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல் களும், உணர்தற் கரிதாகியெனவே ஆழமுடைமையும், வேதப்பொருளாயெனவே - விழுமியது பயத்தலும், பிறவுமாகிய அழகுகளி னமைதி சொல்லப்பட்டதாயிற்று, தீதற்றோர் பொருளாராய்ச்சிக்கேற்ற நுண்ணறிவுடையோர், உள்ளுதோறுள்ளுதோ றுள்ளமுருக்குமெனவே முன்காணப்பட்டதினும் பின்காணப்படும் பொருள்சிறந்தும் விரிந்துந் தோன்றுதலுடைமை பெறப்பட்டது. இதனது அற்புதமான குணமுடைமைச் சிறப்புச்சொல்லியபடி. (உ௪)



## எறிச்சலூர்மலாடனார்.

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—வாய
வறத்துப்பா லல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்

திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(இ-ள்.) வள்ளுவனார் - திருவள்ளுவனார், ஆய்ந்து-(அவ்வேதத்தின்கருத்தாகவே) யாராய்ந்து, நூலின் திறத்துப்பால் - (தம்மாலேசெய்யப்பட்ட) நூலினது திறத்திற்குத்தக்கான்மை யுடைமையால், தேர்ந்து-(இவையேயுரியவை யென்று) தெரிந்து, பாயிரம் - பாயிரம், நான்கு - நான்கு, இல்லறம் - இல்லறம், இருப்பான் - இருபது, தூயதுறவறம் - தூய்மையையுடைய துறவறம், பன்மூன்று, பதின்மூன்று, ஊழ் - ஊழ், ஒன்று ஒன்று, ஆகவாய்-ஆகக்கூடியாகிய, நால்வகையா-(பாயிரமுதலிய) நால்வகையுடைத்தாக, அறத்துப்பால் அறப்பால், வாய்ந்து - பொருந்தி, உரைத்தார் - கூடினார், எ-று. * நான்கு முதலிய தொகைகளோடு அதிகார முடைத்தென்பது கூட்டுக. முப்பபாற் பொருள்களினு முத்திக்குக் காரணமாதற் சிறப்புடைமையின் தூய துறவறமென்றார். துப்பு - நன்மை, அதுஎல்லா வருணச்சிரமங்களுக்கும் பொதுவாயிருக்கை, அறப்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி. (உ௫)

## போக்கியார்.

அரசியலையைந் தமைச்சிய லீரைந்
தருவ லரணிரண் டொன்றொண்கூ—டிருவிய
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை.

(இ-ள்.) அரசியல்-அரசியல், ஐயைந்து - இருபத்தைந்து, அமைச்சியல்-அமைச்சியல், ஈரைந்து - பத்து, அரணிரண்டு - அரணிரண்டு, கூழொன்று-கூழொன்று, படையிருவியல் - படையிரண்டியல், நட்புப் பதினேழ்-நட்புப் பதினேழ், குடிபதின்மூன்று-குடிபதின்மூன்று, எண்பொருள்-எண்ணப்பட்டபொருட்பாலுக்கு, இவை யேழாம்-இவ்வியல்க ளேழாம், எ-று. * இத்தொகைகளோடும் முன்சொல்லப்பட்டபடியே கூட்டுக. அரசுக்கு உறுத்திட்பம் சிறத்தலின் உருவலரணென்றும் பொருளுடையார்க்கே ஒளி அமைவதாதலின் ஒண்பொருளென்றும், படைக்குக் கடும்போரிற் பின்கொடாததின்மை

யுரித்தாதலின். திண்படையென்றும் கூறினர். பிற்காலத்தார் அமைச்சு முத லியவைந்தனையும் அங்கவியலென ஒரியலாக்கியும் வழக்குப் பொருட்பாலிய லதிகாரத்தொகை சொல்லியபடி. (௨௬)

## மோசிகீரனர்.

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பாலடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராருக—மாண்பாய



காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனர் நன்கு.

(இ-ள்.) ஆண்பால்-ஆண்பால், எழ்-எழ், பெண்பால் - பெண்பால், ஆறி ரண்டு-பன்னிரண்டு, அடுத்தன்பு பூண்பால் - (ஒருவரை யொருவர்) அடுத்த அன்பைப் பூணுதற் பகுதியுடைய, இருபால், அவ்விருபால், ஓராருக-ஆருக, மாண்பாய காமத்தின்பக்கம் - மாட்சியான காமத்துப் பாலினியல்கள், ஒரு மூன்ருக-ஒரு மூன்ருக; நாமம் - பெயர்பெற்ற, வள்ளுவர் - திருவள்ளுவர், கட்டுரைத்தார்-சொல்லினர், எ-று. * இவற்றையே பொரு ளிலக்கணத்துக் களவியல் கற்பியலென விரண்டாக்கப்பட்டன, இத்தொகைகளுக் கும் முன் கூறப்பட்டது கொள்க. காமத்துப்பாலிய லதிகாரத்தொகை சொல் லியபடி. (௨௭)

## காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனர்.

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்க—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன்.

(இ-ள்.) அதிகாரம்-அதிகாரம், நூறுமையாறு மூன்றுமா-நூற்று முப்ப த்து மூன்றுமாம், மெய்யாய் - உண்மையான, வேதப்பொருள் - வேதப்பொ ருள், பொய்யாது விளங்க - மெய்யா விளங்க, அந்தாமரை மேலயன் - அழ கிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கின்ற நான்முகக்கடவுள், தான் வள்ளுவ

ராகி - தான் வள்ளுவராகி உலகிற்குத்தந்தான், எ-று. * உலகு - இங்கே மக்களை யுணர்த்திநின்றது. மெய்யாய் வேதப்பொருள் பொய்யாது விளக்கவெனவே இதற்குமுன் மெய்யாய் பொருள் பொய்யாய் மறைந்தும் பொய்யாய் பொருள் மெய்யாய் விளங்கியும் கிடந்தமை சொல்லப்பட்டதாயிற்று அதிகாரத்தொகையோடு நூற்பொருளியல்பு சொல்லியபடி. (உஅ)

## மதுரைத்தமிழ் நாயகனார்.

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்—சொல்லாற்
பரந்த பாவாலென் பயன் வள்ளுவனார்
சுரந்த பாவையைத் துணை.

(இ-ள்.) எல்லாப்பொருளும்-(பலவகை நூல்களாலுஞ் சொல்லப்பட்ட) எல்லாப்பொருள்களும், இதன்பாலுள-இந்நூலகத்தடங்கி யிருக்கின்றது,இதன்பாலில்லாத தெப்பொருளும் - இதனிடத்திலில்லாத யாதொரு பொருளும், இல்லை-(எந்நூலகத்தும்) இல்லை, ஆதலால் சொல்லாற்பரந்த பாவால்-சொல்லளவினாலே விரிந்த நூல்களால், பயனென் - பயனென், வள்ளுவனார் சுரந்



தபா-திருவள்ளுவராலேதரப்பட்ட இந்நூலொன்றே, வையத்துணை-மண்ணுலகத்தாருக்குத் துணையாதலமையும், எ-று. * எல்லாப் பொருள்களுமாவன, முதல் வழிசார்பென மூவகைப்பட்ட அறநூல், பொருணூல், இன்பநூல், வீட்டுநூல், என்பவற்றில் செம்பொருள், ஆக்கப்பொருள், குறிப்புப்பொருளென இம்மூவகையாற் கொள்ளக்கிடந்த காட்சிப்பொருள்களும் கருத்துப்பொருள்களுமாம். தொழிலும்பண்பும் ஒரேவழிப் பொருளெனக் கேற்புடைமையின் அவையும் இவற்றுள் அடங்குமாற்றிக. பின்னும் அதனை வலியுறுத்தற்கு இதன்பாலில்லாத வெப்பொருளு மில்லையென்றார். சொல்லாற் பரந்தவெனவே அவைபொருளாற் பரப்பின்மை பெறப்பட்டது. பரத்தல்-பதினாயிரம் நூறாயிரமுதலிய கிரந்த வளவையால் விரித்தல். சொல்லாற் பரந்த நூல்களை ஆய்வோர் மலையகழ்ந்து எலிபிடித்தல்போல் மிகவருந்திச் சிறுபயன் கொள்ளுதலால், என்பயனென்றார். ஆல்-அசை, பா-வையம்,ஆகுபெயர்கள், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவுடையோர்க்கு விதிவிலக்குகண் முற்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் கண்டு தெளியுமாறு உணர்த்தித் தமொற்றந் தீர்த்

தலின் வையத்துணையென்றார். முற்றொருங்குணர விழைவார்க்கு இஃது இன்றியமையாச் சிறப்பிற்றென்றபடி. (உக)

## பாரதம்பாடிய பெருந்தேவனார்.

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர் தாஞ் செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ் சீராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

(இ-ள்.) பாரதஞ் சீராமகதை மனுப்பண்டை மறைநேர்வன - பாரதம் பழைய சீராமகதையுய மனுஸ்மிருதி பழைய வேதத்தையும் ஒப்பனவாகும், எப்பொருளும்-எவ்வகைப்பட்ட பொருள்களையும், யாரும்-எவ்வகையோரும், இயல்பின்-(அவற்றின்) றன்மையோடு, அறிவுற-அறிய, செப்பிய-(அதற்குச்) சொல்லும்படிக்கு, வள்ளுவர் செப்பவரு-திருவள்ளுவர்சொல்லால்வந்த,முப்பாற்கு-திருக்குறளுக்கு, நிகர்-உபமானமாகத்தக்கது, இல்லை - ஒன்றில்லை, எ-று. * மற்று-அசை. அறிதற்கரிய வேதாந்தபொருளு மென்றற்கு எப்பொருளுமென்றும் உயர்குலத்தாரேயன்றி ஏனையோரு மென்றற்கு யாருமென்றும் ஐயந்திரிபின்றி யறியவென்றற்கு இயல்பினறிவுற வென்றும் இறைவே சுருதி குருவிரண்டு மாமென்றதற்கு செப்பிய வென்றும் கூறினார். பண்டை யென்பது - சீராமகதைக்கும் கூட்டுக. சதாருபமாயிருந்து பாரத ராமாயண மெனவும், விதிரூபமாயிருந்து சுருதிஸ்மிருதி யெனவும், கூட்டிச் சொல்லப் படுதலால் உபமான உபமேயங்களாதலறிக. எப்பொருளும் யாருமியல்பினறிவுறச்செப்புதல் வேதத்திற் கின்மையால், முன் முப்பாலின்மிக்க மொழியென்றதனும் பெறப்பட்ட வேதத்தி னொப்புமையை மறுத்தபடி. (உ௦)

## உருத்திர சன்மகண்ணர்

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணர்ச்சுரக்குந் தாய்முலை—யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு.

(இ-ள்.) மணற்கிளைக்க-மணலைத் தோண்டுந்தோறும், நீரூறும் - நீர்பெருகும், மைந்தர்கள் வாய்வைத்துண - புதல்வர்கள் வாய்வைத்து உண்ணுந்தோறும், தாய்முலை - தாயினது முலைக்கண், ஒண்பால் சுரக்கும் - நல்லபால் பெருகும், (அவைபோல்) பிணக்கிலா வாய்மொழி - பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச்சொல்லையுடைய, வள்ளுவர்முப்பால் - திருவள்ளுவரது திருக்குறளை, ஆய்தொறும்-ஆராயுந்தோறும், மதிப்புலவோர்க்கு - அறிவுடையபுலவர்க்கு, அறிவூறும் - அறிவுவளரும், எ-று. * கற்பிதமாகியசாதிசமயங்களின் மானம்பற்றி உள்ளதை இல்லதாகவும், இல்லதை உள்ளதாகவும், சிறிதைப் பெரிதாகவும், பெரிதைச் சிறிதாகவும், தீயதை நல்லதாகவும், நல்லதைத் தீயதாகவும், புனைந்து பிறர்பிணங்கும்படி சொல்லப்பட்டதல்லாமையால், பிணக்கிலா வாய்மொழியென்றார். மதிப்புலவோர்க் கறிவூறுமெனவே அவர் அவ்வறிவைகொண்டு பிறர்க்கெல்லாம் விதிவிலக்குகளைக் கற்பித்தல் வேண்டுமென்றதாயிற்று. இதனைச் சிலகாற் பயிறலினமையாது பலகாலும் பயிற்சிசெயல் வேண்டுமென்றபடி. (௩௧)

## பெருஞ்சித்தனார்.

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா—முரைத்தலாற்
றாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

(இ-ள்.) தாதவிழ் தார்மாற-பொடியொடு விரிந்த பூமாலையையுடைய பாண்டிய ராசனே, ஏதமில் வள்ளுவர் - குற்றமில்லாத திருவள்ளுவர், இன்குறள்வெண்பாவினால்-இனியகுறள் வெண்பாக்களாலே, ஓதிய-நான்கு வேதங்களாலுஞ் சொல்லப்பட்ட, ஒண்பொருளெல்லாம் - ஒள்ளிய பொருள்களையெல்லாம், உரைத்தலால் - சொல்லினமையால், மேதக்கன-மேம்பாட்டிற்குத் தக்கவை, தாமே - அக்குறள் வெண்பாக்களோ, தம்மைப்பயந்தவேதமே முதனூலாய் நின்று அவற்றைப் பயந்த வேதங்களோ * சொல்லுவாயாக.

எ-று. * தாம்தம்மை எனப்பட்டவை! அவை அவற்றை என்னும் பொருளைத் தந்து நின்றன. ஏகாரம் இரண்டும் வினா. பிறநூலா சிரியர்க்கெல்லாம் அவ ரெதிரிகளாலே மறுக்கப்பட்டுவருங்குற்றம்போல்வது இவர்க்குஇல்லையென் றற்கு எதயில் வள்ளுவரென்றும், தாங்குறியவாய்நின்றுகற்போர்க்குவருத்த மில்லையாமைபற்றி! இன்குறளென்றும்,! உணர்வுடையோராலே விரும்பப்பட்





டநற்குணமுடைமைபற்றி ஒண்பொருளென்றும் கூறினார். நூலாசிரியர்க்கும் நூலுக்கும்நூறுதலியபொருளுக்கும் தகுதி தோன்றச்சொல்லப்பட்ட விசேட ணகுணங்களாலேஇவ்வேதம்அவவேதத்தினுஞ்சிறப்புடைமைகுறிப்பித்தபடி.

நரிவெருத்தலைவர்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்—மன்பதைகட்
குள்ள வரிதென் றவ்வள் ளுவநுலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(இ-ள்.) இன்பம் பொரு ளறம் வீடென்னு மிந்நான்கும்-இன்பமுதலிய இந்நாற் பொருளியல்புகளையும், மன்பதைகட்கு - மக்கட்பரப்புக்கு, முன்பு-அக்காலத்தில், அறியச்சொன்ன - அறியும்வண்ணஞ் சொல்லப்பட்ட. முது மொழிநூல் - பழமொழி வேதமானது, உள்ளவரிதென்று-ஓதியுணரப்படுதற் கரிதென்று, வள்ளுவர் - திருவள்ளுவர், அவை-அவற்றை, உலகங்கொள்க. உரைத்தார் எளிதிலுணரும்படி, குறள்-திருக்குறளை, மொழிந்தார்-சொல்லி னார், எ-று. * முன்பறியவெனவே உற்சர்ப்பிணியாதலின் அக்காலத்தோர்க்கு உணர்தற்கேற்ற ஆயுணிட்சியும் உணர்வுவலியும்இருந்தன வென்பதூஉம் அவ சர்ப்பிணியாதலின் இக்காலத்தோர்க்குஅவையிலவென்பதூஉம் பெறப்பட்டி னஇவ்விரண்டும் அவாவறுத்தன்மூன்றும் பாட்டுரையிற்காண்க, தேயவழக்கெ ற்படாததும் வருத்திக் கற்போர்க்கு மாத்திரம் புலப்படுவதுமாய் எல்லாமொ

ழிவட்கு முற்பட்டே கடவுண்மொழியாய் நிற்றலின் முதுமொழி யென்றார், அறமுதலிய நான்கும் பிரிவுபட்டுத் தோன்றுமையை யுடைத்தாதலின் உள்ளவறிதாயிற்று பழையவேத முளதாகவும் வேறிது சொல்லுதற்குக் காரண முணர்த்தியபடி. (௩௰.)

### மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப—னிலவு
பிறங்கொளி மாலைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண் மாலைக்கும் பெயர்.

(இ-ள்.) பூமேல் - பூவுலகின் கண்ணே, புலவர் திருவள்ளுவரன்றி-புலவரென்த் திருவள்ளுவரையன்றி, சிலவர் புலவரெனச் செப்பல் - வேறுசிலரையும் புலவரென்று சொல்லுதல், மாலை - மாலையென்பது, நில பிறங்கொளிமாலைக்கும் பெயர் - நிலவால் விளங்குகின்ற அந்திக்கும்பெயராக, மற்றும்-இவையன்றியும், கறங்கிருண்மாலைக்கும்பெயர்-சூழ்கின்ற விருளையுடைய அந்திக்கும் பெயராக, செப்பல் - சொல்லுதல் போலும், எ-று, * செப்பலென்றது பின்னுங் கூட்டப்பட்டது. புலமையாவது - பலவேறுவகைப்பட்ட நூ



லார்த்தங்களையெல்லாம் ஒருங்கேகொண்ட பேரறிவுடைமையாம். உயர் வொப்பற்ற இவரது புலமையைக்குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமையுமுடிதலின் இவ்வாறு கூறினர். புலவரென்பது நாயனார்க்கே காரணப்பெயரமென்றபடி. (௩௧)

### மதுரையறுவைவாணிகர் இளவேட்டனர்.

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்னுதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா
துன்னி யுணர வுறைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

(இ-ள்.) இன்பமுந் துன்பமுமென்னுமிவை (பின்வரக்கடவனவாய்)சக

முந்தக்கமு மென்னப்பட்ட வினைத்திறனுடைய இரண்டும் இருவகைக் காரணங்களையும், உன்னியுணர - ஆராய்ந்தறியவும், அன்பொழியாது - (தம்மே) லன்புநீங்காமல், மனமகிழ-உள்ளங்களிகூரவும், மன்பதைக்கெல்லாம்-மக்கட் பரப்புக்கெல்லாம், ஒது சீர்வள்ளுவர்-புகழ்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர், வாயுறைவாழ்த்து - வாயுறைவாழ்த்தாக உரைத்தார்-திருக்குறளைச் சொல்லினார், எ-று. * இன்பத்தின்காரணம் விதிக்குறளாலும், துன்பத்தின்காரணம் விலக்குக்குறளாலும் சொல்லப்பட்டன. முன்பறிதற்குப் பயன் அவற்றைச் செய்தலும் தவிர்தலுமாம். வேண்டுவனவெல்லாந் தொகுத்துணர்த்தலின் மனமகிழ்தல் சொல்லப்பட்டது. அவ்வேதம் போலாது பலர்க்கும் உபயோகியாகச் சொல்லலின் மன்பதைக்கெல்லாமென்றார். வாயுறைவாழ்த்தினியல்பு வாயுறைவாழ்த்தேவயங்காடின், வேம்புங்கடுவும்போல வெஞ்சொற்றுஞ்சுதலின்றி, வழிநனிபயக்குமென்றும். படைக்கிளவியின் வாயுறைத்தற்றேனன்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தாலறிக. எதிர்கால வினையுணர்ச்சி பயத்தல் சொல்லியபடி. (௩௫)

## கவிசாகரப் பெருந்தேவனார்.

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக்—கமரரும்ப
றெவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா.

(இ-ள்.) பூவிற்குத் தாமரை-மலர்களுக்குள்ளே தாமரைமலரும் பொன்னுக்குச் சாம்புனதம் - பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், ஆவிற் கருமுனியா - பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைக்கமரரும்பல்-யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவிற்றிருமாலென-தேவர்களுக்குள்ளே திருமாலும்போல், பாவிற்கு வள்ளுவர் வெண்பா - நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள்வெண்பா, சிறந்தது - சிறப்புடையது, என்ப-என்று (அறிவுடையோர்) சொல்லுவர், எ-று. * ஏ-அசை. பா - ஆகுபெயர். பொன் ஆடகம்,

கிளிச்சிலை, சாதரூபம், சம்புனதம் என நால்வகைப்படும். காமதேனு வசிட்டமுனியிடத் தன்னதாதலின் அருமுனியாவென்றார். அமரரும்பலென்பது விகாரப்பட்டுநின்றது. உபமானமுகத்தால் இஃது பலநூல்களினும் சிறந்து நிற்கின்ற மாட்சிமை சொல்லியபடி. (௩௯)

## மதுரைப் பெருமருதனார்.

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனு
ரோத வழுக்கற்ற துலகு.

(இ-ள்.) அறத்திறம் - அறத்தின்கூறுபாடு முப்பத்தெட்டால் - ௩௮-அதிகாரங்களாலும், பொருட்டிறம் - பொருட்கூறுபாடு, எழுபதால் - ௭0-அதிகாரங்களாலும், இன்பத்திறம் - காமத்தின் கூறுபாடு, இருபத்தைந்தால் - ௨௫-அதிகாரங்களாலும், தெளியம்முறையால் - (காரணகாரிய)வொழுங்கால், வேதவிழுப்பொருளை - வேதத்தினுயர்வாகியபொருளை, வெண்குறளால் - குறள்வெண்பாக்கலால்,வள்ளுவனார் - திருவள்ளுவர், ஓத - ஓதலால், உலகு-உலகமானது, வழுக்கற்றது-வழுவுதலினின்றும்நீங்கிற்று, எ-று. * திறமும்மூன்றும் முன்னூல் கூட்டப்பட்டன. உயர்வாகியபொருள்கருமகாண்டம், பிரமகாண்டமிரண்டினுள்ளும் சிறந்த பொருள். வழுக்குதல் - விதியை விலக்கென்றும், விலக்கை விதியென்றும்கோடல். உலகு-மக்களை யுணர்த்திநின்றது. துணிவுபற்றி அற்றதென இறந்தகாலத்தாற் கூறினார். முன்னதின்வேறுபட்டமுப்பால்களினதிகாரத்தொகைகளோடு உலகிற்குவிளையுநன்மைசொல்லியபடி.

## கோவூர்க்கிழார்.

அறமுத லான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

(இ-ள்.) அறமுதனான்கும் - அறம் பொருள் இன்பம்வீடு என நான்கும், அகலிடத்தோரெல்லாம்-மண்ணுலகத்திலுள்ளோரெல்லாம், திறமுறத்தேர்ந்து - வகைபடஅறிந்து, தெளிய - கலக்கந்தீர, குறள்வெண்பாப்பன்னிய -

குறள்வெண்பாக்களாலே சொல்லப்பட்ட, வள்ளுவனார்-நாயனாரது, பான்முறை - முப்பால்களையுடைய புத்தகத்தின்கண்ணே, முன்னை முதுவோர்மொழி - முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு, சேரொவ்வாது-சேர்தல் பொருந்தாது எ-று. * மொழி - ஆகுபெயர். பெரியோராவார், வடமொழியிலும் தென்மொழியிலும் பிறமொழிகளிலும் நூல்செய்த முனிவரும் புலவரும்பிறரும் அந்நூல்களாவன; மனுமுதலியோராலே செய்யப்பட்டஅறநூன்



முதலியன. இதன்புத்தகத்தில் முன்னூல்களி லொன்றும சேர்க்கப்படுதேற்குத் தகுவதன்றென்று சொல்லியபடி. (கஅ)

## உறையூர் முதுகூற்றனார்.

தேவிற் சிறந்த திருவள்ளுவர் குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு.

(இ-ள்.) தேவிற் சிறந்த திருவள்ளுவர் - தெய்வத்தன்மையாற் சிறந்த திருவள்ளுவரது, குறள்வெண்பாவிற் சிறந்திடு - குறள் வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றுகின்ற, முப்பால் - முப்பால்களையும், பகரார் - ஓதாரது, நாவிற்கு - வாக்கிற்கு, உயலில்லை (இன்சொற்சொல்லி)வாழ்தலுண்டாகாது, சொற்சுவையோர்வில்லை - (மனத்திற்குச்) சொற்களின்சுவையை அறிதலுண்டாகாது, மற்றும் - இவையன்றியும், செயலில்லை - (காயத்துக்கு) நல்லசெயலுண்டாகாது, என்னுந் திரு - என்று நினைத்துத் திருமகள் அவரிடத்துச் சேரான். எ-று. * சுவையோர்தற்கும் - செயலுக்கும், உரிய மனமும், காயமும் வருவிக்கப்பட்டன: திருமகள்சேராமையாகியகாரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஓதார்க்குள வாகாமை கூறவே - ஓதுவோர்க்கு இவையுளவாதலின், வாக்கிற்கு கடுஞ்சொல் - பொய்,கோள், புறங்கூறல்களும், மனத்திற்கு – பிறனில் விழைதல் பிறன்பொருள் விழைதல், பிறன்பொருட்குக் கேடெண்ணல், பிறவுயிர்க்கிறுதியெண்ணல்களும், காயத்திற்கு - பிறன்மனையுணர்தல், உயிர்க்கொலை செய்தல், பழியூணுணல், பிறர்பொருள் வெளவல்களும், ஆகியகுற்றங்களெல்லாம் நீங்குமென்பதும் பெறப்பட்டது. அறிவின் பங்கட்குக் காரணமாதற் சிறப்புடைய பொருட்பேறு இஃதோதலினுளதா

மென்றபடி. (௪௯)

## இழிகட் பெருங்கண்ணனார்.

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெரியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி னன்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள் வெண்பா.

(இ-ள்.) இம்மை மறுமை யிரண்டும் - (இகபரங்கட்காவன) விரண்டை யும், எழுமைக்கும் - (வினைப்பயன்றொடர்தற்குரிய) எழ்பிறப்பிற்குமாக, செம்மைநெறியின் - செவ்வையானவழியால், தெளிவுபெற -(யாவரும்) தெளிதல்பெறவும், மும்மையின் - (அறம்பொரு ளின்பமென்று) முப்பால்களுள், அவற்றின் - அம்முப்பாற் பொருள்களோடு, வீடு - வீடாகிய, நான்கின்விதி யாற்பொருள்களதுவிதிகளும், வழங்க - வழங்கவும், வள்ளுவனார் - திருவள்



ளுவர் இன்குறள் வெண்பா - இனியகுறள் வெண்பாவை, பாடினர் - பாடினார், எ-று. *செவ்வையானவழி - விதியும், புத்தியும், ஞானமும், ரோயாளிக்கு மருந்தும், அனுபானமும் பத்தியம்போல் ஒன்றற்கொன்று முரணாத கூடிநிற்கும்வழி, வீட்டுவிதி - துறவறத்திற்காண்க. இம்மை, மறுமை, வீடு மூன்றும் பயக்குமாறு சொல்லியபடி. (௫0)

## செயிர்க்காவிரியார் மகனார்சாத்தனார்.

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள்ளுவர் தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம் பூண்டார்.

(இ-ள்.) (மக்களுக்கு) ஆவனவும் - ஆவனவற்றையும், ஆகாதனவும் - ஆகாதவற்றையும், அறிவுடையார் யாவரும் - அறிவுடையவர் எவரும், எடுத்தியம்ப - (இனி இதிலிருந்து) எடுத்துச்சொல்லுதற்கு, வல்லார் - வல்லவராவார், (ஆதலால்) தேவர் திருவள்ளுவர் - தேவராகிய திருவள்ளுவராலே, செப்பியவே - சொல்லப்பட்டவற்றையே, பொருவிலொழுக்கம்பூண்டார் - ஒப்

பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர், செய்வார் - செய்வார். எ-று. * இவ்வணங்கூறவே அவ்வேதத்திலிருந் தன்னவாறெடுத்துச் சொல்லுதல் அறிவுடையார்க்கு முடியாமையால், ஒழுக்கம்பூண்டார்க்கு அதன்கண்ணே சொல்லப்பட்டபடி வழுவாமற் செய்தல் கூடாமை காட்டப்பட்டது. தாம்-உம் - அசைகள். ஆவன-இன்பத்தைத் தருவன. ஆகாதன - துன்பத்தைத்தருவன. ஒப்பில்லாத வொழுக்கம் - கொல்லாமை முதலியன. போதகாசிரியருக்கும்-கேட்டொழுகு வோர்க்கும், வருநன்மை சொல்லியபடி.

செயலூர்க்கொடுஞ் செங்கண்ணனார்.

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

(இ-ள்.) வேதப்பொருளை-வேதப்பொருளை, உலகோரோத-உலகத்தோரோத, விரகால் - உபாயத்தால், விரித்துத் தமிழாலுரைசெய்தார்-விரித்துத் தமிழினாலே யுரைசெய்தார், (ஆதலால்) உள்ளுநருள்ளும் பொருளெல்லாம்-நினைப்பவர் நினைக்கும் பொருள்களெல்லாம், வள்ளுவர் வாய்மொழி மாட்டு - திருவள்ளுவர் திருவாயிற்பிறந்த திருக்குறளின்கண்ணே, உண்டென்ப-உண்டென்று, (அறிவுடையோர்) சொல்லுவர், எ-று. * உபாயத்தால் விரித்தல் - சொற்சுருக்கத்தால்ஓதற்கெளிதெனமனவெழுச்சியுண்டாக்கிக் கற்போரதறிவளவிற்கேற்கப் பொருளளவுவிரியவைத்தல். நினைக்கப்படும்பொருள்களெல்லாம் இதன்கண்ணே இக்காரணத்தால்தோன்றுகின்றனவென்றுகூறியபடி.



வண்ணக்கஞ் சாத்தனார்.

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் ததனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து.

(இ-ள்.) ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந்து - வடமொழியையுந் தென்மொழியையுமாராய்ந்து, இதனினிது சீரியதென்று-இதைக்காட்டிலும் இது சிறப்புடைத்தென்று, ஒன்றைச்செப்பரிது - ஒன்றைத் தெரிந்துசொல்லுதல் கூடாது, ஆரியம் - வடமொழி, வேதமுடைத்து - வேதமுடையது, தமிழ் - தமிழ், திருவள்ளுவனா ரோது-குறட்பாவுடைத்து (ஆதலால்) எ-று, * ஆல்-அசை. வடமொழியும்-தென்மொழியும்-பிறமொழிகள் போலாது; பாணினியாரும், அகத்தியனாருமுதலாகிய முனிவர்களாலே செய்யப்பட்ட இலக்கணநூல்களாலேசீர்திருத்தி நிற்றன்முதலிய குணங்களுடைமையாலும், அதுபிராகிருத முதலியவற்றுக்குப்போல் இது ஆந்திரமுதலியவற்றுக்கு முதலாய் நிற்றலாலும், ஒன்றற்கொன்று குறைபாடுடைத்தன்றேனும், வேதமுடைமைபற்றி வடமொழிக்குச்சொல்லப்பட்ட உயர்வு தென்மொழிக்கண்ணே திருக்குறள் உண்டாதலின். இனி இல்லையென்றற்கு இதனினிது சீரியதென்றொன்றைச் செப்பரிதென்றார். இத்திருக்குறளாலே வடமொழியோடு தென்மொழிக்கு ஒப்புமை நிறைவு சொல்லியபடி. (சக)

### களத்தூர்கிழார்.

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதனான்குஞ் சாலு—மருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

(இ-ள்.) அருமறைகளைந்தும்-(இருக்குமுதற்பாரதமீறாகிய) அரியவேதங்களைந்தும், சமயநூலாறும்-(அவ்வேதத்தின் வழிப்பட்ட) சமயநூல்களாறும், நம்வள்ளுவர்-நம்முடைய திருவள்ளுவரால், புந்திமொழிந்த பொருள்-(உலகத்தார்க்குப்) புத்தியாகச்சொல்லப்பட்ட நூலிலடங்கும் (ஆதலால்), ஒருவர்-

ஒருவர், இருகுறளே - (ஒரு விகற்பமும் இரு விகற்பமுமாகிய) இருவகைக் குறள்களையுமே, முப்பாலின் - முப்பால்களில், ஓதும்-அத்தியயனஞ்செய்து அறியப்படுகின்ற,தருமமுதனான்கும்-அறமுதலிய நாற்பொருள்களும்,சாலும்-(அவருக்குப்) போதும், எ-று. * ஒருவனுக்கே ஐந்தும் ஓதியுணர முடிவுபெறாது. வேறுவேறான அதிகாரிகளுடைமைபற்றி அருமறைகளைந்துமென்றார் சமயநூலாறும்-ஒன்றேபொருளென்னும் பாட்டுரையிற்காண்க, நமக்கெல்லாம் அறிவொழுக்கங்கொளுத்தி நல்வழிப்படுத்தவந்த பரமாசாரியர் இவரேயென்னுமுரிமை தோன்றற்கு-நம்வள்ளுவனாரென்றார். மந்திரங்களைந்துஞ் சமயநூ






வாறு நம்வள்ளுவனார் புத்திமொழிந்த பொருளெனலால், அவைபலவற்றினும் வேறுவேறு வகைப்பட்டுச் சிறந்துநின்ற கருத்துகளெல்லாம் இவ்வொருநூற்கண்ணே, அடங்கி நிற்கின்றமை சொல்லப்பட்டதாயிற்று. பொருள் - ஆகுபெயர் ஒருவரெனப் பொதுப்படக் கூறலால். இதனை யோதுதற்குப் பெண்பாலாருக்கும் அதிகாரமுண்டென்பது கொள்ளப்பட்டது.இவ்வொருநூலோதியுணர்ந்தோர் அருமறைகளைந்துஞ் சமயநூலாறும் ஓதியுணர்ந்தோ ராவரென்றபடி. (௪௪)

நச்சுமனார்.

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண—மிழுக்கின்றி
யென்றவர் செய்தன வெல்லா மியம்பின
வின்றிவ ரின்குறள் வெண்பா.

இ-ள்.) எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பிவழுக்கில் வனப்பணி வண்ணம்-எழுத்துமுதல் வண்ணமீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள், இழுக்கின்றி-வழுவுதலில்லாமல், என்றெவர்செய்தன-எக்காலத்தில் எவரால்எவை செய்யப்பட்டன, எல்லாம்(அவை) யெல்லாம். இன்றிவரின்குறள் வெண்பா-இக்காலத்து இத்திருவள்ளுவரானே செய்யப்பட்ட இவ்வினிய குறள் வெண்

பாக்களில், இயம்பின - சொல்லப்பட்டன, எ-று, * வனப்பு அம்மை, அழகு தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு. அணி, சொல்லணி, பொருளணி, ஒலியணி, வண்ணம் குறிலகவற்றூங்கிசை, வண்ணமுதலியன. ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொரு பாவலர் ஒவ்வொருகுணத்தினாலே சிறந்து விளங்க நூல்செய்தனர். இவரோவெனின்எல்லாக் குணங்களாலும்நிறைந்து சிறந்து விளங்கச்செய்தமையின் இவ்வாறுகூறினார். இதன்பாக்களின் சிறப்புச் சொல்லியபடி. (௪௫)

## அக்காரக்கனி நச்சுமனார்.

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்—தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ னயத்தின் பயன்.

(இ-ள்.) மதியமும் - முப்பானூலும், கலை - பதினாறு கலைகளாலும், அறுபத்துநாலுகலைகளாலும், நிரம்பி - நிறைந்து, காண்டற்கு - நோக்குதற்கு; ஆராய்ச்சிசெய்தற்கு, இனிதாகி - இனியதாகி, கண்ணினிலை - முகக்கண்ணினிலையில் அகக்கண்ணினிலையில், நிரம்பு - நிரம்புகின்ற, நீர்மைத்தெனினும் - தண்மையுடைத்தாயினும், குணமுடைத்தாயினும். வள்ளுவர் முப்பானூல் - திருவள்ளுவரது முப்பானூலினது, நயத்து - நயத்தால்விளைவதாகிய, இன்பயன் - இனியபயனானது, தொலைவிலாவானூர் மதியந்தனக்கு - ஒழிவின்றி ஆகாயத்தின் கண்ணேதிரிகின்ற மதியினிடத்து, உண்டோ - உண்டோ. எ-று.



* மதியந்தனக்கென்றது - வேற்றுமைமயக்கம். ஓகாரம் - எதிர்மறை. ஆதாரமாகக்கொள்ளுதற்கு ஏற்புடைத்தல்லாதவானை ஆதாரமாகக்கோட விழிவு தோன்ற, தொலைவிலாவானூர்மதியமென்றார். நயம் - மறப்படாமை, மழுங்காமை, குறைவுறாமை, முதலியன - பயன். இம்மைமறுமை வீட்டின்பங்கள் ஒப்புமை சொல்லுதற்கு நூல்களில் ஒன்றும் இன்மையால், எனைப்பொருட் பலவற்றினுஞ் சிறந்த மதியையாயினும் சொல்லுதமெனப்புகின் அதுவுமிந் நூல் தருவதன்றென்றபடி. (௪௬)

## நப்பாலத்தனார்.

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறம்பாவா
வள்ளுவனா ரேற்றினார் வையத்து வாழ்வார்க
ருள்ளிரு ணீக்கும் விளக்கு.

(இ-ள்.) அறம் - தருமம், தகளி - அகலும், பொருள் - பொருள் - திரி - திரியும், இன்பு - இன்பம், நெய் - நெய்யும், செஞ்சொல் - செவ்விய சொல், தீ - நெருப்பும், குறம்பா - குறட்பா, தண்டு - தண்டும், ஆ - ஆக, வள்ளுவனார் - திருவள்ளுவர், வையத்துவாழ்வார்கள்-பூமியின்கண்ணேவாழ்வோரது உள்ளிருள் - அகத்திருளை, நீக்கும் - ஒழிப்பதாகிய, விளக்கு-விளக்கு, ஏற்றினார் - ஏற்றினார், எ-று, * ஆன்றல் - மேம்படுதல். அகத்திருள், அஞ்ஞானம், தீச்சுடர், தகளி முதலியவற்றோடுகூடிப் புறத்திருளை எப்படி யோட்டுமோ அப்படி நாயனாரது திருவாயிற்பிறந்த செஞ்சொல்அறமுதலிய வற்றோடுகூடி அகத்திருளைக் கெடுத்தலின் இவ்வணம் உருவகஞ் செயலாயிற்று. மனையகத் தேற்றப்படுகிற விளக்கு அம்மனையகத் துள்ளார்க்கு மாத்திரமே உபயோகி யாய் நிற்றலாலும் அகத்திருளைக் கெடுக்கவல்லதன்மையாலும், இது உலகத் துவாழ்வோர் பலர்க்கும்உபயோகியாய்நிற்றலாலும், அகத்திருள் கெடுதலாலும்அதனின்இதுபலகோடிமடங்குமிக்குச்சிறந்துநிற்கின்றமையுணர்த்தியபடி.

## குலபதிநாயனார்.

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு ளுள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

(இ-ள்.) உள்ளக் கமல மலர்த்தி - நெஞ்சமாகிய தாமரை மலரை மலர்த்தி, உளத்துள்ள - (மக்களது) அகத்திலுள்ள, தள்ளற்கரிய விருள் - பிறிதொன்றனாலே) நீக்கப்படாத அஞ்ஞானவிருளை, தள்ளுதலால் - நீக்குதலால், வள்ளுவனார் வெள்ளைக் குறட்பாவும் - திருவள்ளுவரது குறள் வெண்பாவும், வெங்கதிரும் - (புறத்துத் தாமரைமலரைமலர்த்திப் புறத்திருளை

க்கு நின்ற சூரியனும், குணத்தைக் கொண்டு - அச்செய்கையைக் கொண்டு, ஒக்குமெனக்கொள்ளத்தகும் - ஒப்பெனக்கொள்ளத்தகும், எ-று. * செயலும் தொழிற் பண்பெனப்படுதலின் குணமெனப்பட்டது அது மலர்த்தலும் தன்னுதலும் ஆம். குணத்தைக்கொண்டெனவே செயப்படுபொருளைக் கொண்டு ஒக்குமெனக் கொள்ளத்தகாதென்றதாயிற்று. உலகுக்கெல்லாம் பேரொளியாகிய சூரியனும் இதற்கு ஒருபுடை யொப்பாமென்றபடி. (௪௩)

## தேனிக்குடிக்கீரனார்.

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலிற்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

(இ-ள்.) தெய்வத் திருவள்ளுவர் - தெய்வத்தன்மையுடைய திருவள்ளுவர், முப்பாலின் - மூன்றுபால்களுடையதாக, செப்பியகுறளால் - சொல்லப்பட்டகுறளுலைக் கேட்டறிதலால், வையத்து வாழ்வார் மனத்து - பூமியில் வாழ்வார்மனதில், பொய்ப்பால - பொய்யின்பகுதியிற்பட்டவை யெல்லாம், பொய்யேயாய்ப்போயின - பொய்யாய்ப்போயின, பொய்யல்லாத-பொய்யல்லாத, மெய்ப்பால - மெய்யின் பகுதியிற் பட்டவையெல்லாம், மெய்யேயாய் விளங்கின - மெய்யாய்விளங்கின, எ-று. *குறளால் - பொய்ப்பாலபொய்யேயாய்ப்போயின. மெய்ப்பால மெய்யேயாய் விளங்கினவெனவே, இதற்கு முன்னெல்லாம் உண்மை துணியப்படாமையின், பொய்ப்பால மெய்ப்பாலபோன் மேற்கொள்ளப்பட்டும், மெய்ப்பாலபொய்ப்பாலபோற்கைவிடப்பட்டும், மயக்கிக்கிடந்தன வென்றதாயிற்று பொய்யேயாய்ப்போதல்-வாய்மையெனப்படுவதென்றற் றொடக்கத்துத் திருக்குறள்களாலும் மெய்யாய் விளங்கல் பொய்யாமையும் வாய்மையிடத்த வென்றற் றொடக்கத்துத் திருக்குறள்களாலும் அறிக. இதன் மெய்யுணர்வு பயத்தற் சிறப்புச்சொல்லியபடி. (௪௪)

## கொடிஞாழன் மாணிபூதனார்.

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு.

(இ-ள்.) மறனெறிந்தவாளார்நெடுமாற - பகைவரையெறிந்த வாட்படை தங்கிய வீரநெருக்கும்பாண்டியனே, வள்ளுவனார்தம்வாயால் - திருவள்ளுவர் வாயால், கேளாதனவெல்லாம் - இதற்குமுன் கேட்கப்பட்டில்லாதனவையெல்லாம், கேட்டு - இப்போது கேட்டு. அறர்திறமறிந்தேம் - தருமமறிந்தோம், பொருட்டிறமறிந்தேம்-பொருளையறிந்தோம், இன்பின் திறனறிந்தேம் - இ



ன்பமறிந்தோம், வீட்டுத்திறன் றெளிந்தேம் - வீடுதெளிந்தோம், எ-று, உ றிறன் - கூறுபாடு அது அறமுதலியவற்றோடுங் கூட்டப்பட்டது. மறன் - ஆகுபெயர். கேளாதன பிறநூலாசிரியர்க் கெல்லாம் அறிந்து சொல்லுதற் கெட்டாதிருந்த அறமுதலியவற்றி னுட்பங்கள், இம்மை மறுமை வீடென்னுங் குறித்துணர்தற்குரிய, உறுதிப் பொருணான்குமுணர்தலின் இனியாதொன்றுமுணர்தலில்லை யென்றபடி. (உ0)

## கவுணியனார்.

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய வின்குறள்வெண் பா.

(இ-ள்.) முந்திய நன்னெறி நாமறிய - முற்பட்டதாகிய நல்வழியை நாமறிய, நாப்புலமை வள்ளுவனார் - நாவால் விளங்குகின்ற புலமையையுடைய திருவள்ளுவனாரால், பன்னிய-சொல்லப்பட்ட, இன்குறள் வெண்பா - இனிய குறள் வெண்பாக்கள், சிந்தைக்கினிய-(நினைத்தால் மனத்திற்கின்பஞ் செய்வதை, செவிக்கினிய-(கேட்டால்) காதுக்கின்பஞ்செய்வன, வாய்க்கினிய-(ஓதினால்) வாய்க்கின்பஞ்செய்வன, வந்த விருவினைக்கு - தொடர்ந்துவருகின்ற

இருவினைகளாகிய நோய்களுக்கு, மாமருந்து - பெரிய மருந்தானவனை, உ-து. * குறட்பாவை மருந்தென்றமைக்கு ஏற்கவினையை நோயென்றமை பால், ஏகதேசரூபகம். நல்வினையும்பிறவிக்கு ஏதுவாகலான், இருவினை யென்றார். முற்பட்டகல்வழி - தன் மக்களுக்கு அறுதியா யமைந்துள்ளது. அது சமயத்தாரது பலவகைப்பட்ட கற்பனையினாலே மறைபட்டு நின்றமையின் ரமறியவென்றார் இந்நூலின் பாக்களைச் சிந்தித்தல் முதலியன செய்யுங்காலும் சொற்பொருணயங்களாலே இன்பம் விளைத்துத் தெய்வத்தன்மையால் வினைத்துயரும் ஒழிக்குமென்றபடி. (௩௰)

## மதுரைப்பாலாசிரியனார்.

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோ
ருள்ளிரு ணீக்கு மொளி.

(இ-ள்.) வெள்ளி வியாழம்விளங்கிரவி வெண்டிங்கள் - சுக்கிரன்குரு சூரியன் சந்திரன் எனப்படுகின்ற இவ்வொளிகள், புறவிருளை - புறத்திருளை, பொள்ளென நீக்கும் - விரைவிலே நீக்கும் (ஆதலின் புறவிருணீக்குதற்கு உண்டாகியஒளிகளாம்) தெள்ளிய - முற்றுணர்ந்த வள்ளுவரின்குறள்வெண்பா) அகிலத்தோர் - உலகத்தோரது, உள்ளிருணீக்கும் - உள்ளிருளை நீக்குதற்கு



உண்டாகிய ஒளி, உ-து, * இங்ஙனங்கூறவே புறத்திருளுக்கு அவை பலவுள அகத்திருளுக்கு இஃதொன்றே யுளதென்றதாயிற்று, அவற்றுள் ஒன்றானும் நீக்கப்படாத அகத்திருளை நீக்கவல்லதாதலின் இதற்கு எவ்வாற்றானும் ஒப்ப தொன்றின் றென்றபடி. (௩௧)

## ஆலங்குடிவங்கனார்.

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாதாற்—றெள்ளமுத
முண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து.

(இ-ள்.) வள்ளுவர் பாட்டின் வளம் - திருவள்ளுவரது பாட்டினது தீஞ் சுவையை, உரைக்கின் - சொல்லுமிடத்து, வாய்மடுக்குந் தெள்ளமுதின் - உண்ணப்படுகின்ற தெள்ளிய அமுதினது, தீஞ்சுவையும் - இனியசுவையும், ஒவ்வாது - ஒப்பாகாது, தெள்ளமுதமுண்டு - அத்தெள்ளியவமுதை யுண்டு, அறிவார்-(அதன்சுவையை)யறிபவர், தேவர் - தேவர், வண்டமிழின் - வளம் பொருந்திய தமிழ்க்கண்ணதாகிய - முப்பால் - முப்பாலாகிய அறின்மும்மடி சிறந்தபாலை, மகிழ்ந்து - களித்து, உலகடைய - எல்லாவுலகத்தாரும், உண் ணும் - உண்டு, தீஞ்சுவையறிவார் - தியசுவையறிவார், எ-று. * வளம் - ஆகு பெயர். ஆல் - அசை. அவ்வமிர்தம் வாயுட்பெய்தவழி சாலிற்பட்ட சிறிது பொழுதளவே தீஞ்சுவை பயப்பது. இப்பாட்டு செஞ்செவிகளிலேபெற்று ஒழி வின்றித் தீஞ்சுவை பயத்தலின் - ஒவ்வாதென்றார். முப்பால் சிலிட்டரூபகம். இனி எவ்வுலகத்தாருக்குங்கருமபூமியாகிய இவ்வுலகத்துட்டோன்றி மெய்ப் பொருளுணர்ந்தன்றிவீட்டின்பம்பெறுதல் கூடாமையின்உலகடையவுண்ணு மென்றார். அன்றிஅவ்வுலகத்துத்தேவர்களும் தமது மேம்பட்ட வறிவினாலே இதனது உயர்வொப்பற்றகுணத்தைஅறிந்து முக்கியபிரமாணமாகக்கொண்டு மகிழ்கூர்வ ரென்பதுபற்றி அங்ஙனங்கூறினாரெனினு மமையும். இஃது இவ் வுலகத்தார்க்கேயன்றி அவ்வுலகத்தார்க்கும் பயன்படுமாறு சொல்லியபடி. ()

## திருவள்ளுவமாலை மூலமும் உரையும்

முற்றிற்று.



## இடைக்காடர் பாடல்.

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

(இ-ள்.) குறள் (காயனூரது நாலி ருயிரத்து முந்நூற்று முப்பது) குறள் வெண்பாக்களும், கடுகை - கடுகை, துளைத்து-(அதனடுவே) துளைசெய்து, ஏழ்கடலை-ஏழ்கடல்நீரையும்,புகட்டி-(அத்துளையுட்) பெய்து, குறுக-(தன்ன

ளவிற்) குறளும்வண்ணம்,தறித்த - தறித்துவைத்தால் அதுபோல்வனவாகும், ஈ-று, * மிக்கசிற்றளவிற்குவமைத்துச் சொல்லப்படுவதொரு நுண் பொருளாத லின்-உவமைசொல்லப்பட்டது, இரண்டனுருபுதறித்தவென்வினைகொண்டது துளைத்தல்-உள்ளீடுபோக்குதல். புகவிடென்பது - புகட்டென விகாரப்பட்டு மூதனிலையாய்நிற்றலின்புகட்டியென்றுயது. துளையினிடைவெளிக்கும்அதன் புறமுடிக்கும் கொள்ளப் பட்டபங்கு சிறிதாக ஒழிந்தபங்குபெரிதாகலின் குறு கவென்றார். தறித்தாலன்னவெனற்பாலது - தறித்தவெனஇடைக்குறைந்து நின்றது. இல்லாதபொருளைஉபமானமாகக்கூறலின்-இல்பொருளுவமை, குறட்பாக்களுள் ஒவ்வொன்றும் அதுபோறலின் தறித்தவெனப்பன்மையாற்கூற லாயிற்று. குறள் - பால்பகாவஃறிணைப் பெயராதலின், இங்கே பன்மைக்கா பது. இங்ஙனங்கூறலே குறட்பாவின்சொற் சுருக்கமும் அதனுள் அடக்கப்பட்ட பொருள்விரிவும் சேர்க்கும்வழி அக்கடுகும் எழ்கடனீரும்போலு மென்ற தாயிற்று பொருள் விரிவினளவுபடாமை சொல்லியபடி. (௯௪)

இப்பாட்டிலே "அணுவைத்துளைத்தேழ். கடலைப்புகட்டிக் குறுகத்தறித்த குறள்" என முதற்சொல்லைமாற்றி ஔவையாரால்புகழ்ச்சி செய்யப்பட்டது.

---

# நாயனார் சொரூபஸ்துதி.

திருமுடிமிசையார் மயிர்முடியழகுந் தீர்க்கபுண்டர முதலழகும்
திரண்மணிபுயத்தை வருஞ்செவியழகுந்திகழ்நெடுந்தாடியினழகும்
அருமுடிசெபமாலிகையின்முத்திரைசேரபயநேர்வலக்கையினழகும்
அழிழ்ந்துறழ்தமிழ்மாததைமுரை ராதம்மைதருமிடக்கையினழகும்
கருமுடியோகப் பட்டையினழகுங்கடிகொள்கிட் கோவணவழகும்
கழல்களிற்றிகிரி வனைவரையழகுங் கமலநல்லாதனத்தழகும் [க்குத்
திருமுடிமுகிநேர்மயிலனிடை மாதவர்கள்கண்டிறைஞ்ச விற்றிரு
தழைபுகழ்த்திருவள்ளுவரொனாமம்சற்குரு,சரணமேசரணம்.

| ஆசிரியர் திருநாமங்கள்—கூ | நூலின் திருநாமங்கள்—கூ. |
| --- | --- |
| திருவள்ளுவர். | திருக்குறள். |
| நாயனர். | முப்பானூல். |
| தேவர். | உத்தரவேதம். |
| முதற்பாவலர். | தெய்வநூல். |
| தெய்வப்புலவர். | திருவள்ளுவர். |
| நான்முகனர். | பொய்யாமொழி. |
| மாதானுபங்கி. | வாயுறைவாழ்த்து, |
| செந்நாப்போதார். | தமிழ்மறை. |
| பெருநாவலர். | பொதுமறை. |

திருவள்ளுவநாயனர் திருவடிவாழ்க.

கடவுள்துணை.

# தற்சிறப்புப் பாயிரம்.

இந்திரன்முதலியவிறைவர்பதங்களும், அந்தமிலின்பத்தழிவில்வீடு, நெறியறிந்தெய்துதற் குறியமாந்தர்க்குறுதியெனவுயர்ந்தோரா னெடுக்கப்பட்டபொருள்கள் நான்கு, அவை, அறம், பொருள், இன்பம், வீடு என்பன. அவற்றுள், வீடென்பது: சிந்தையு மொழியுஞ் செல்லாநிலைமைத்தாதலிற் றுறவறமாகியகாரணவகையாற் பலவதல்லதிலக்கணவகையாற் கூறப்படாமையின் நூல்களாற் கூறப்படுவன? ஏனைய மூன்றுமேயாம். அவற்றுள், அறமாவது: மனுமுதலியநூல்களின் விதித்தன செய்தலும் விலக்கியன வொழிதலுமாம். அஃது, ஒழுக்கம், வழக்கு, தண்டமென மூன்றுவகைப்படும். அவற்றுள், ஒழுக்கமாவது: அந்தணர்முதலிய வருணத்தார் தத்தமக்குவிதிக்கப்பட்டபிரமசாரியமுதலியநிலைகளினின்று அவற்றிற்கோதிய அறங்களின் வழுவாதொழுகுதல். வழக்காவது: ஒரு பொருளைத்தனித்தனியே எனதென்றிருபபாரதுகாரணமாகத்தம்

முண்மாறுபட்டப்பொருள்மேற்சொல்லுவது. அதுகடன்கோடன் முதலியபதினெட்டுப்பதார்த்தமாம். தண்டமாவது: அவ்வொழுக்க நெறியினும், வழக்கநெறியினும், வழீஇயாரை யங்நெறி நிறுத்தற் பொருட்டொப்பநாடி. அதற்குத்தக்கவொறுத்தல்இவற்றுள்வழக் குந் தண்டமு முலகநெறி நிறுத்தற் பயத்தவாயதல்ல தொழுக்கம் போல் மக்களுயிருக் குறுதிபயத்தற் சிறப்பிலவாகலானு மவைதா னலானேயன்றி புணர்வுமிகுதியானுந் தேயவியற்கையானும், அறி யப்படுதலானும், அவற்றையொழித்தீண்டுத் தெய்வப்புலமைத்திரு வள்ளுவராற்சிறப்புடையவொழுக்கமே, அறமெனவெடுத்துக்கொ ள்ளப்பட்டது. அதுதா னால்வகைநிலைமைத்தாய வருணந்தோறும் வேறுபாடுடைமையிற் சிறுபான்மையாகிய அச்சறப்பியல்புக ளொ ழித்தெல்லார்க்குமொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல் புபற்றி இல்லறந் துறவறமென விருவகை நிலையாற் கூறப்பட்டது அவற்றுள்; இல்லறமாவதில் வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக்கணின்றதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடுஞ்செய் யப்படுவதாகலின் அதனைமுதற்கட் கூறுவான்றொடங்கிய வெடுத் துக்கொண்ட இலக்கியமினிது முடித்தற்பொருட்டுக் கடவுள் வா ழ்த்துக் கூறுகின்றார்.



கடவுள் துணை.

## முதல் - அதிகாரம்.

# கடவுள் வாழ்த்து.



அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாயினும் எடுத்துக்கொள்ளப்ப ட்ட பொருளுக்கு ஏற்புடைக் கடவுளையாயினும் வாழ்த்துதலாம். அவைக

னுள் இவ்வாழ்த்து எற்புடைக்கடவுளை யென்றறிக. எப்படியென்றால், சத்துவமுதலாகிய முக்குணங்களாலே அறமுதல் மூன்றாகிய உறுதிப்பொருளுக்கு அக்குணங்களாலே மூவராகிய முதற்கடவுளோடு சம்பந்தம் உண்டாயிருக்கையால் அம்மூன்று பொருள்களையும் சொல்லத்தொடங்கிய இவர்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாதலின் இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படச் சொல்லினாரென்று அறிக.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இதனது பதப்பொருள்.) எழுத்தெல்லாம் - எழுத்துகளெல்லாம், அகர முதல - அகரமாகிய முதலையுடையன: (அதுபோல) உலகு - உலகம், ஆதி பகவன் முதற்று - ஆதிபகவனாகிய முதலையுடைத்து எ-று.

(கருத்துரை.) எழுத்துகளெல்லாம் அகரத்தை முதலாகவுடையன: அது போல உலகம் கடவுளை முதலாகவுடையது என்பதாம்.

(விசேட - உரை.) § ஏகாரம் தேற்றத்தில் வந்தது. தமிழெழுத்துக்களுக்குமாத்திரமல்லாமல், வடவெழுத்துக்களுக்கும் முதலாதலை நோக்கி எழுத்தெல்லாமென்றார். ஆதிபகவனென்னும் இருபெயரொட்டும்பண்புத்தொகை- வடநூன்முடிபாதலின் இயல்பாயிற்று. உலகென்றது இங்கே, உயிர்களின் மேலே நின்றது. காணப்பட்ட உலகத்தைக்கொண்டு காணப்படாத கடவுளுக்கு இருப்பைச் சொல்லவேண்டுதலின் ஆதிபகவன் முதற்றேயென்று உலகின்மேல் வைத்துச்சொல்லினார் அப்படிச் சொல்லினாராயினும் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக்கொள்க § நாதமாத்திரையான இயல்பாற் பிறத்தலால் அகரத்திற்குத் தலைமையும், செயற்கையறிவாலன்றி இயற்கையறிவால் முழுதும் அறிதலால் ஆதிபகவனுக்குத் தலைமையும் சொன்ன தலைமை பற்றிவந்த அகரத்திற்கும், ஆதி பகவனுக்கும் * பிம்பப்பிரதிபிம்பபாவம் சொல்லுதலால் எடுத்துக்காட்டுவமையணி [இப்பாட்டால் முதற்கடவுளது இருப்புச் சொல்லப்பட்டது. (௧)

---

§ நாதம் உயிர்முயற்சியால் எழுகிற உதானவாயுவால் ஆவது. * பிம்பப்பிரதிபிம்பபாவம் ஒப்புமையால், பிம்பமும் பிரதிபிம்பமுமெனத்தோன்றல்.

கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

(ப - ரை.) வாலறிவன்-மெய்யறிவையுடையவனது, நற்றாள் - நல்லவடிகளை, தொழாரெனின் - வணங்காராயின், கற்றதனால் - யாவர் கற்ற அக்கல்வியறிவினால், ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனம், என்-யாது-எ-று.

(க - ரை.) மெய்யறிவுடைய கடவுளை வணங்காராகில் கற்றதனாற் பயனில்லை என்பதாம்.

(வி - ரை.) எவனென்னும் வினைப்பெயர் என்னென்றாய் இல்லையென்னும் பொருளைக் குறிப்பித்து நின்றது கொல்-அசைநிலை - பிறவிப்பிணிக்கு மருந்தாதலின் நற்றாளென்றார். (ஆகமறிவுக்குப் பயன் அவனடிகளைவணங்கி பிறவியை அறுதலென்பது இதனாற் சொல்லப்பட்டது)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்.

(ப - ரை.) மலர்மிசை (அன்பாது செஞ்சமாகிய) தாமரைமலரிடத்து, ஏகினான் - சென்றவனது, மாணடி - பெருமைபொருந்திய வடிகளை, சேர்ந்தார்-சேர்ந்தவர், நிலமிசை-எல்லா உலகங்களுக்குமேலாகியஉலகத்திலே,நீடு வாழ்வார் - அழிவில்லாமல் வாழ்வார்-எ-று.

(க - ரை.) கடவுளடிகளைச் சேர்ந்தவர்கள் மோட்சத்தில் வாழ்வார்கள் என்பதாம்.

(வி - ரை.) மலர்போலு நெஞ்சை மலரென்றது உவமை யாகுபெயர். அன்பினாலே நினைப்பவரது நெஞ்சில் அவர்நினைத்தவடிவோடு விரைந்துசெல்லுதலினாலே ஏகினானென இறந்தகாலத்தாற் சொல்லினார். இது விரைவு பற்றிவந்த-காலவழுவமதி - சேர்தல் - இடைவிடாதுநினைத்தல். (௩.)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

(ப - ரை.)வேண்டுதல்-(யாதொருபொருளையும்)விரும்புதலும்,வேண்டாமை-வெறுத்தலும், இலான்-இல்லாதவனது, அடி-அடிகளை, சேர்ந்தார்க்கு - சேர்ந்தவர்க்கு, யாண்டும்-எக்காலத்திலும், இடும்பை - பிறவித் துன்பங்கள், இல - உண்டாவனவல்ல-எ-று.

(க - ரை.) கடவுளடிகளைச் சேர்ந்தவர்களுக்கு பிறவித் துன்பங்களில்லை என்பதாம்.

(வி-ரை) பிறவித் துன்பங்களாவன : தன்னைப்பற்றி வருவதும், பிறவுயிரைப்பற்றி வருவதும், தெய்வத்தைப்பற்றி வருவதும், என மூவகையால் வருகிற துன்பங்களாம். (அடிசேர்ந்தார்க்கு அவ்விருப்பு வெறுப்புகள் இல்லாமையால் அவை காரணமாகவருகிற மூவகைத் துன்பங்களும் இல்லையாயின.) (௪)

## முதல் - அதி - கடவுள்வாழ்த்து. ௭௫

இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(ப-ரை.) இறைவன் — தலைவனது, பொருள்சேர் - மெய்ம்மைசேர்ந்த, புகழ் - கீர்த்தியை, புரிந்தார்மாட்டு - விரும்பினவரிடத்து, இருள்சேர் - மயக்கத்தைப்பற்றிவருகிற, இருவினையும் - நல்வினைதீவினையென்னுமிரண்டுவினைகளும், சேரா - உண்டாகாவாம்-எ-று.

(க-ரை.) கடவுளுடையகீர்த்தியைவிரும்பினவரிடத்து நல்வினைதீவினையென்னு மிருவினைகளு மடையாவாம்-என்பதாம்.

(வி-ரை.) இப்படிப்பட்டதென்று ஒருவராலும் சொல்லப்படாமையால் அஞ்ஞானத்தை இருளென்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலால் இருவினையும் சேராவென்றும் சொல்லினர். (தலைமைக்குணங்களில்லாதவரை

டையரென்று நினைத்து அறிவிலார்சொல்லுகிற புகழ்பொருள்சேராதாகலின் அவைமுழுதுமுடையதலைவனது புகழ்பொருள் சேர்புகழெனப்பட்டது.) புரிதல் எப்பொழுதும் சொல்லுதல். (௫)

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(ப-ரை.) பொறிவாயில்-(மெய், வாய், கண், மூக்கு, செவி, (என்னும்) ஐம்பொறிகளை வழிகளாகவுடைய, ஐந்து-ஐந்தாசைகளையும், அவித்தான்-அறுத்தவனது, பொய்தீர் - மெய்யான, ஒழுக்கநெறி — ஒழுக்கவழியிலே, நின்றார்-(வழுவாது) நின்றவர், நீடுவாழ்வார்-பிறப்பில்லாமல் எக்காலத்திலும்ஒருதன்மையராய் வாழ்வார்-எ-று.

(க-ரை) கடவுள் வழியிலே நின்றவர்கள்நீடூழி வாழ்வார்களென்பதாம்.

(வி-ரை.) ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை, எனப்பலன்களைந்தாதலின் அவற்றிலே செல்லுமிச்சையையும் - ஐந்தாயிற்று-ஐந்தவித்தான் - ஒழுக்கவழி அவனாற் சொல்லப்பட்ட வேதமார்க்கம். (இவை நான்குபாட்டாலும்கடவுளை நினைத்தோரும், வாழ்த்தினோரும், அவன்வழி நின்றோரும், மோட்சத்தைப் பெறுவரென்பது சொல்லப்பட்டது.

> தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
> மனக்கவலை மாற்ற லரிது.

(ப-ரை.) தனக்கு - தனக்கு, உவமை யில்லாதான்-(ஒரு விதத்தினாலும்) நிகரில்லாதவனது, தாள் - அடிகளை, சேர்ந்தார்க்கல்லால் - சேர்ந்தவர்க்கல்லது, மனக்கவலை - நெஞ்சிலே தோன்றுகின்றதுன்பங்களை, மாற்றல் - நீக்குதல், அரிது - உண்டாகாது-எ-று.

(க-ரை.) கடவுளுடைய திருவடியைச் சேராதவர்களுக்கு மனக்கவலை நீங்குதலில்லை - என்பதாம்.

(வி-ரை.) இங்கே அரிது - இல்லையென்னும் பொருளில்வந்தது. [அடிகளைச்சேராதவர் பிறவிக்கு ஏதுவாகிய காமவெகுளிமயக்கங்களை நீக்கமாட்டாமையினாலே பிறந்தும், இறந்தும், அவற்றால் வருகிறதுன்பங்களுள் அழுந்துவரென்பதாம்.) (எ)

7

௱0 முதல் - அதி - கடவுள்வாழ்த்து.

> அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
> பிறவாழி நீந்தலரிது.

(ப-ரை.) அறவாழியந்தணன் - தருமக்கடலாகிய கடவனது, தாள்-அடியாகிய (மரக்கலத்தை,) சேர்ந்தார்க்கல்லால்-சேர்ந்தவர்க்கல்லாமல், பிறவாழி-(அதனின்) வேறாகிய கடல்களை, நீந்தல் - கடற்றல், அரிது - கூடாது-எ-று.

(க-ரை.) கடவுளடிகளைச் சேராதார்க்குப் பொருளும் இன்பமுமாகிய கடல்களைக் கடத்தல் கூடாது-என்பதாம்.

(வி-ரை.) அறம், பொரு, ளின்பமென, உடனெண்ணப்பட்ட மூன்றுள் அறத்தை முன் பிரித்ததனால் மற்றை பொருளும் இன்பமும் பிறவெனப்பட்டன. [பல வேறுவகைப்பட்ட அறங்களெல்லாம் கடவுளுக்கு வடிவாகலின்

அறவாழி யந்தணனென்றார். அம்மரக்கலத்தைச் சேராதவர் கரைகாணாது; அவற்றன்னே அழுந்துவாராகலின் நீந்தலரிதென்றார்; தாட்புணையென்னுமை யால் ஏகதேசவுருவகம். (அ)

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(ப-ரை.) கோளில் - (தத்தமக்கேற்ற புலன்களை) கொள்ளுகையில்லாத, பொறியின்-பொறிகள்போல், எண்குணத்தான்-எண்வகைப்பட்டகுணங்களை யுடையவனது, தாளை - அடிகளை, வணங்காத்தலை - தொழாததலைகள்,குண மிலவே - பயன்படுதலுடையனவல்லவேயாம்-எ-று.

(க-ரை,) கடவுள் பாதங்களை வணங்காத்தலைகள் பயன்படாவாம் என்ப தாம்.

(வி-ரை.) எண்குணங்களாவன; தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவேபாசங்களினீங்கு தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, என்பனவாம். இவை சைவாகமத்திற் சொல்லப்பட்டன, காணாத கண்முத லானவைபோல் வணங்காத்தலைகள்பயனிலவெனத்தலைமேல் வைத்துச்சொ ல்லினும் இனம்பற்றி வாழ்த்தாதவாக்களும் அப்படியே பயனிலவா மென்ப துங்கொள்க. (இவை மூன்றுபாட்டாலும்) அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும் செய்யாவிடத்தே உண்டாகிறகுற்றஞ் சொல்லப்பட்டது. (க)

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார்.

(ப - ரை.) இறைவன் - தலைவனது, அடி - பாதமாகிய மரக்கலத்தை (சேர்ந்தவர்) பிறவிப்பெருங்கடல் - பிறவியாகிய பெரியகடலை, நீந்துவர்-கட ப்பார்-சேராதார், (அதனைச்) சேராதவர், நீந்தார் - கடக்கமாட்டார்-எ-து.

## உ - ஆம் - அதி - வான்சிறப்பு. ௩௧

(க-ரை.) கடவுள் பாதங்களைச் சேர்ந்தவர்கள் பிறவிக்கடலைக் கடப்பார் கள், சேராதவர்கள் பிறவிக்கடலைக் கடக்கமாட்டார்கள்-என்பதாம்.

(வி-ரை.) சேர்ந்தவரென்பது வருவிக்கப்படுதலாற் சொல்லெச்சம் பிற வி ஒன்றுக்கொன்று காரணகாரிய சம்பந்தப்பட்டுக் கரையில்லாமல் வருத

லால் - பிறவிப்பெருங் கடலென்றார். [கடவுளடிகளையே நினைப்பவர்க்குப் பிறவி நீங்குதலும், உலகியல்பை நினைப்பவர்க்கு அது நீங்காமையும், ஆகிய விரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.] (௧0)

முதல் அதிகாரம் கடவுள்வாழ்த்து

முற்றிற்று.

---

## இரண்டாம் - அதிகாரம்.

## வான்சிறப்பு.

அஃதாவது, கடவுளது ஆணையால் உலகமும், அதற்கு உறுதியாகிய அறம்பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்பைச் சொல்லுதலாம். அதிகார முறைமையும் இதனால் விளங்கும்.

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(ப-ரை.) வான்-மழையானது, நின்று-(தடுவே நீங்காது) நிற்க, உலகம்-உயிர்களானவை, வழங்கி வருதலான் - நிலைபெற்று வருகையினாலே, தான்-அம்மழை தான், அமிழ்தமென்று-(உயிர்களுக்கு) அமிர்தமென்று, உணரற்பாற்று-அறியப்படும் தன்மையை யுடைத்தாம்-எ-று.

(க-ரை.) மழை நீங்காமற்பெய்ய உயிர்கள் நிலைபெற்று வருகையால் அம்மழை யுயிர்களுக் கமிர்தம் என்பதாம்.

(வி-ரை.) நிற்கவென்பது நின்றெனத் திரிந்தது உயிர்கள் நிலைபெற்றுவருதலாவது பிறப்பு நடுவே நீங்காமையால் அவை எக்காலும் உடம்போடு காணப்பட்டு வருதல், அமிர்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின் உயிர்களை நிலைபெறச் செய்கிற மழையை அமிழ்தமென்றார்.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(ப-ரை.) துப்பார்க்கு-உண்பவருக்கு, துப்பாய-நன்மையாகிய, துப்பாக்கி-உணவுகளை யுண்டாக்கி, துப்பாக்கு-(அவ்வுணவுகளை) உண்பவர்க்கு, துப்பாயதூவும்-(தானும்) உணவாய் நிற்பதும், மழை-மழை-எ-று.

---

* அமிழ்தமென்பதற்கு, மரணத்தையொழிப்பதென்பது பொருள், அது அமிர்தமென்னும் வடமொழித் திரிந்தது.

(க-ரை.) உண்பவர்க்கு நன்மையாகிய உணவுகளை யுண்டாக்கி அவ்வுண வை உண்பவர்க்குத் தானும் உணவாக நிற்பது மழையென்பதாம்.

(வி-ரை.) தானும் உணவாதலாவது, தண்ணீராயுண்ணப்படுதல். சிறப்பு டைய மனிதர்மேல் வைத்துச் சொல்லுதலால் மற்றை யுயிர்களுக்கும் இஃது ஒக்கும்; இப்படி உயிர்களது பசிதாகங்களை நீக்குதலால் அவ்வுயிர்கள் வழங்கி வருதலும் உடையவாயின வென்பதாம். (௨)

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

(ப-ரை.) விண்-மழையானது நின்று - (பெய்யவேண்டுங் காலத்தில்) பெய்யாமல், பொய்ப்பின்-பொய்க்குமாயின், விரிநீர்-கடலாலே சூழப்பட்ட, வியனுலகத்துள்-பரந்த வுலகத்திலுள், பசி-பசியானது, நின்று-நிலைபெற்று, உடற்றும்-(உயிர்களை) வருத்தும் எ-று.

(க-ரை.) மழை பெய்யாது பொய்க்குமாகில் உலகிற் பசியானது உயிர் களை வருத்தும்-என்பதாம்.

(வி-ரை.) கடலுடைத்தாயினும் அதனாலே பயனில்லை யென்றற்கு விரி நீர் வியனுலகத்தென்றார்; உணவில்லாமையினாலே பசியால் உயிர்கள் இறக்கு மென்பதாம். (௩)

ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

(ப-ரை.) புயலென்னும்வாரி – மழையென்கிற வருவாய், வளக்குன்றிக் கால் - (தன்) பயன்குறையின், உழவர்-பயிரிடு மாந்தர்கள், ஏரின்-ஏரினால், உழாஅர்-உழமாட்டார்கள் எ-று.

(க-ரை.) மழைவளங் குறைந்தால் பயிர்செய்மாக்கள் ஏருழார் - என்ப தாம்.

(வி-ரை.) குன்றியக்கால் என்பது குறைந்து நின்றது, உணவில்லாமை

க்கு காரணஞ் சொல்லியபடி. (ச)

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை.

(ப-ரை.) கெடுப்பதூஉம் (பூமியினிடத்துவாழ்வாரைப்) பெய்யாதுநின்றுகெடுப்பதும், கெட்டார்க்கு - (அவ்வாறு) கெட்டவர்க்கு, சார்வாய்-துணையாய்ப் (பெய்து), மற்றாங்கே - முன் கெடுத்ததுபோல், எடுப்பதூஉம்-எடுப்பதும், எல்லாம்-(இவை) யெல்லாம் (வல்லது,) மழை-மழையாம்-எ-று.

(க-ரை.) கெடுப்பதும் கெட்டவரைக் காப்பதும், மழை என்பதாம்.

(வி-ரை.) மற்றுவினைமாற்றில் வந்தது கேமம்பெருக்கமும் பெறுதற்குரியவர் மனிதராதலால் கெட்டார்க்கென்றார். எல்லாமென்றது - அம் மனிதர்

## ய ஆம் - அதி - வான்சிறப்பு.

முயற்சி வேறுபாடுகளால் கெடுத்தலெடுத்தல்கள் பலவாகுமே யோக்கி வல்லதென்பது, * அவரவர்வினையால்வந்தது; மழையினது வல்லமையைச் சொல்லியபடி. (ரு)

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(ப-ரை.) விசும்பின் - மேகத்தினின்றும், துளி-துளிகள், வீழினல்லால்-விழுந்தாலன்றியல்லது, மற்றாங்கே-வீழாதாயின்அப்பொழுதே, பசும்புற்றலை-பசும்புல்லினது தலையையும், காண்பு - காணுதல், அரிது - அரிது-எ-று.

(க – ரை.) மழை பெய்யாவிடில் புல்லின் தலையைக் காணுதலரிது-என்பதாம்.

(வி-ரை.) விசும்பு ஆகுபெயர் மற்று மீழாதாயினென்னும் - வினைமாற்றில் வந்தது - தலையுமென்னும் இழிவு - சிறப்பும்மை-விகாரத்தால்தொக்கது ஓரறிவுயிரும் இல்லாமற்போமென்பதாம். (சு)

நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(ப-ரை.) நெடுங்கடலும் - நெடியகடலும், தன்னீர்மைகுன்றும்-தன்னியல்பு குறையும், எழிலிதான் - மேகந்தான், தடிந்து-(அதனைக்) குறைத்து, நல்காதாகிவிடின்- அதனிடத்துப்) பெய்யாதாகிவிடின்-எ-று.

(க-ரை.) மழைபொழியாவிட்டால் நெடியகடலும்வளங்குறையும்-என்பதாம்.

(வி-ரை) உம்மை - உயர்வு சிறப்பு - தன்னியல்பு குறைதலாவது-நீர்வாழுமுயிர்கள் பிறவாமையும் மணிமுதலானவை உண்டாகாமையும், ஆம். இங்கேகுறைத்தலென்றது-முகத்தலே-மழைக்குமுதலாகிய கடலுக்கும் மழைவேண்டுமென்பதாம். [இவைஎழுபாட்டாலும்உலகம் நடத்தற்குமழைஏதுவாதல் சொல்லப்பட்டது.] (எ)

சிறப்பொடுபூசனை செல்லாதுவானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

(ப-ரை.) வானம் வறக்குமேல் - மழைபெய்யாதாயின், வானோர்க்கும் - தேவர்களுக்கும், ஈண்டு - இவ்வுலகத்திலே, சிறப்பொடு- மக்களாலே செய்யப்படுகிற) திருவிழாவுடனே, பூசனை - பூசையானது, செல்லாது - நடவாது.

(க-ரை ) மழை பெய்யாவிட்டால் இவ்வுலகில் தேவர்களுக்கும் பூசை நடவாது - என்பதாம்.

---

* அவாய்நிலை - ஒருசொல் - மற்றொருசொல்லைக் கொள்ளுதற்கு அவாவிநிற்றல்.



(வி-ரை.) உம்மைஉயர்வுசிறப்பு-விழாவோடுகூடிய பூசையெனலால் செல்லாதென்று ஒருமையாகச் சொன்னார் பூசையிலே தாழ்வுதீரச் செயப்படுவது விழாவாதலின் இதனை முன்வைத்தார். (அ)

தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம்
வானம் வழங்காதெனின்.

(ப-ரை.) வானம் - மழை, வழங்காதெனின் - பெய்யாதாயின், வியனுலகம் - விரிந்தவுலகத்திலே, தானந்தவமிரண்டும்-தானமும், தவமுமாகிய விர

ண்டறமும், தங்கா - உளவாகாவாம்-எ-று.

(க-ரை.) மழைபொழியாவிடி னுலகத்தில் தருமமுந் தவமு முண்டாகா வாம் - என்பதாம்.

(வி-ரை.) தானமாவது-தருமவழியால்வந்த பொருள்களைப் பெரியோர்க்கு மகிழ்ச்சியோடு கொடுப்பது. தவமாவது மனம்பொறிவழி போகாமனிற்கும் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கல் முதலானவை மிகுதிபற்றி தானம் இல்லறத்தின் மேலும், தவம் = துறவறத்தின்மேலும் நின்றன. (௯)

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(ப-ரை.) யார்யார்க்கும்-எவ்வகை மேம்பாட்டோர்க்கும், நீர்-நீவர, இன்று-இல்லாமல், உலகு - உலகியலானது, அமையாதெனின் - பொருந்தாதாயின், ஒழுக்கு — (அந்நீரினது நடுவே நீங்காத வொழுக்கமும், வான்-மழையை, இன்று - இல்லாமல், அமையாது - பொருந்தாது—எ-று.

(க-ரை) எவ்வகை மேன்மையுடையோர்க்கும் நீரையல்லாம லுலகியலானது நடவாது அதுபோல மழையல்லாமல் நீரொழுக்கம் கிடையாது - என்பதாம்.

(வி-ரை.) இம்மையிலே அநுபவிக்கப்படுவன வாதலிற் பொரு ளின்பங்களை யுலகியலென்றார், நடுவே நீங்காத வொழுக்கமாவது, எக்காலங்களிலும் எவ்விடங்களிலும் நீருண்டாயிருத்தல், நீரினாலே பொருளின்பங்கள்பொருந்துதல்போல்மழையினாலே அந்நீரொழுக்கம்பொருந்துதல்எல்லாராலும்தெளியப்படுமென்பதைக் காட்டுதற்கு நீரின் றமையா துலகெனினென்றார்.(இவை மூன்றுபாட்டாலும் அறம்பொரு ளின்பங்கள் நடத்தற்கு மழை ஏதுவாதல் சொல்லப்பட்டது.)

யாப்
தும்)

## இரண்டாவது அதிகாரம் வான்சிறப்பு
முற்றிற்று.

யவ

## மூன்றும் - அதிகாரம்.

# நீத்தார்பெருமை.



அஃதாவது: முற்றத்துறந்த முனிவரது பெருமையை சொல்லுதலாம்: அவ்வற முதலாகிய பொருள்களை உலகத்துக்கு உள்ளவாறு அறிவிப்பவர் அவ ராதலால் இது வான்சிறப்பின் பின்வைக்கப்பட்டது.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(ப-ரை.) பனுவல்-நூல்களது, துணிவு - நிச்சயமானது, ஒழுக்கத்து, (தமக்குரிய) வொழுக்கத்திலே நின்று, நீத்தார் - துறந்தாரது, பெருமை-மகி மையை. விழுப்பத்து - மேலானபலபொருள்களுள்ளும், வேண்டும்(இதுவே மேலானதென்று) விரும்பும். எ-று.

(க-ரை.) நூல்களது நிச்சயமானது துறந்தவர் மகிமையை மேலான தென்று விரும்பும் என்பதாம்.

(வி-ரை.) தமக்குரிய வொழுக்கத்திலேநின்றுதுறத்தலாவது தங்கள் தங் கள் வருணாசிரமங்களுக்குஉரிய ஒழுக்கங்கள் தப்பாமல் நடக்கப் புண்ணியம் வளரும்; அது வளரப்பாவம் தேயும்; அதுதேயஅறியாமை நீங்கும், அதுநீங்க இது நித்தியம் இது அநித்தியம் என்கிற பகுத்தறிவும், நிலையில்லாத இம்மை மறுமை யின்பங்களில்வெறுப்பும், பிறவித் துன்பங்களும் தோன்றும்; அவை தோன்ற மோட்சத்தில் ஆசை உண்டாம், அதுஉண்டாகப்பிறவிக்குக் காரண மாகிய வீண் முயற்சிகளெல்லாம்நீங்கி மோட்சத்திற்குக் காரணமாகிய யோக முயற்சிஉண்டாம், அதுஉண்டாகத் தத்துவஞானம்பிறந்து எனதென்பதாகிய மமகாரமும், நானென்பதாகியஅகங்காரமும்விடும், ஆதலின்இவ்விரண்டு பற் றுகளையும் இம்முறையே வெறுத்துவிடுதலாம். நூல்செய்தவரது துணிவு நூ லின்மேல் ஏற்றப்பட்டது. (க)

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

(ப-ரை.) துறந்தார்-(அகங்கார மமகாரங்களை) விட்டவரது பெருமை மகிமையை-துணைக்கூறின் - எண்ணிக்கையினாலே சொல்லி, அறியப்புகுந் தால்-அளவுபடாமையால்) வையத்து - இவ்வுலகத்திலே, இறந்தாரை, -(பிற ந்திறந்தவரை),எண்ணிக்கொண்டற்று எண்ணி -(இத்தனைபேர்களென்று) அ றியப்புகுந்தாற்போலும். எ-று.

(க-ரை.) துறந்தவர் பெருமையைச்சொல்லில் இறந்தவர்களை எண்ணிக் கொண்டாற்போலும் என்பதாம்.

(வி.-ரை.) கொண்டாலென்பது கொண்டெனத் திரிந்து நின்றது (உ)

## ருகூ க - ஆம் - அதி - நீத்தார்பெருமை.

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(ப-ரை) இருமை-(பிறப்பு வீடென்னும்) இரண்டினது, வகை -(துன்ப வின்பக்) கூறுபாடுகளை, தெரிந்து-(அப்பிறப்பைநீக்குதற்கு) ஆராய்ந்து, ஈண்டு-இப்பிறப்பிலே, அறம்-துறவறத்தை,பூண்டார்-கொண்டவரது, பெருமை-மகிமையே, உலகு - உலகத்தில், பிறங்கிற்று-உயர்ந்தது-எ-று

(க-ரை.) துறவறத்தைக் கொண்டவரது பெருமையே யிவ்வுலகிலுயர்ந் தது என்பதாம்.

(வி-ரை. பெருமையே யென்பதி னேகாரம் விகாரத்தால் தொக்கது. அது உலகமுழுதாண்டவரசர் முதலானவருடைய பெருமையைப்பிரித்தலாற் பிரிநிலை யேகாரம் [இவை மூன்றுபாட்டாலும் துறந்தவரது பெருமையே எல்லாப் பெருமைகளினும் உயர்ந்ததென்பது சொல்லப்பட்டது. (ஙு)

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

(ப-ரை.) உரனென்னுந்தோட்டியான்- அறிவென்னு மங்குசத்தினாலே, ஓரைந்தும்-(பொறிகளாகியயானைகள் ஐந்தையும், காப்பான்-(தன் தன்புலன் களின்மேல் செல்லாமற்) காப்பவன், வரனென்னும் வைப்புக்கு-(எல்லா நிலங்களினும்) மேலானதென்று சொல்லப்படுகிற மோட்சநிலத்துக்கு, ஓர் வித்து - ஒரு வித்தாவான்-எ-று.

(க-ரை.) ஐம்பொறிகளை-ஐம்புலன்களிற்செல்லாமற் காப்பவன்மோட்ச நிலத்துக்கு வித்தாவான் என்பதாம்.

(வி-ரை.) அந்நிலத்திலேபோய் முளைத்தலின்வித்தென்றார், இங்கேபிறந்தும்இறந்தும் வருகிறமனிதனல்லனென்பதாம். [ஏகதேச வுருவகவணி.]()

ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

(ப-ரை.) ஐந்தவித்தான் - (புலன்களிற்செல்லுகின்ற)ஐந்துஆசைகளையு

மொழிந்தவனது. ஆற்றல் - வல்லமைக்கு, அகல் விசும்புளார்-அகன்ற பொன்னுலகத்துள்ள தேவர்க்கு, கோமான் - தலைவனுகிய, இந்திரனே-தேவேந்திரனே, சாலுங்கரி - போதுமான சாட்சியாம்-எ-று.

(க-ரை.) கௌதமமுனி வல்லமைக்குத் தேவேந்திரனே சாட்சியாம் என்பதாம்,

(வி-ரை.) ஐந்தாசைகளையும் நீக்காமல்சாபத்தை அடைந்து நின்று அவ்வாசைகளை நீக்கினவனுகியகௌதமமுனிவனதுவல்லமையைத் தெரிவித்ததனுலின் இந்திரனே சாலுங்கரியென்றார். (ரு)

## ங - ஆம் - அதி - நீத்தார்பெருமை. 

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

ப - ரை. (ஒத்த பிறப்பினராகிய மனிதர்களில்) பெரியர் - பெரியோர், செயற்கரிய செய்தற் கரியவைகளை, செய்வார்-செய்வார்கள், சிறியர் - சிறியோர், செய்தற்கரிய - அச் செய்தற்கரியவைகளை, செய்கலாதார்-செய்யமாட்டாதார்-எ-று.

க - ரை. பெரியோர் செய்தற் கரியவைகளைச் செய்வார்கள், சிறியோர் செய்தற்கரியவைகளைச் செய்யார்கள் என்பதாம்.

வி - ரை. எனவேபெரியோர்செய்தற்கெளியவைகளைச் செய்யாரென்பதும், சிறியோர் அவைகளைச்செய்வாரென்பதும்தோன்றுதல்அறிக. செய்தற்கெளியவை மனத்தை வேண்டியபடியே போகவிடுதல், ஆசைகொள்ளுதல், கோபித்தல் இவை முதலானவையாம்; செய்தற்கரியவை - இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம்,தாரணை, தியானம்சமாதியென என்வகை யோகங்களாம். (சு)

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

ப - ரை. உலகு - உலகமானது. சுவையொளி யூறோசைநாற்றம், இரதமும் - உருவமும், ஸ்பரிசமும் - சத்தமும் கந்தமும்என்று - என்று சொல்லப் பட்ட, ஐந்தின் - பஞ்சதன்மாத்திரைகளது, வகை - கூறுபாட்டை, தெரிவான்கட்டே - ஆராய்பவனிடத்தே-எ-று.

க - ரை. உலகமானது பஞ்சதன் மாத்திரைகளை யறிபவனிடத்தே என்பதாம்

வி - ரை. ஐந்தின் வகையான - அவையைந்தும், அவற்றிலேதோன்றிய பூதங்களைந்தும், அவற்றின்கூறிய ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும். ஆகஇருபதுமாம். வகைதெரிவானென்றதனால்தெரிகின்றபுருடனும், அவன் தெரிதற்குக் காரணமாகிய மான் - அகங்காரம்-மனம் - எனப்பட்டவையும்அவற்றுக்குமுதலாகிய மூலப்பகுதியும்-கொள்ளப்படும்.இவ்விருபத்தைந்து தத்துவக் கூட்டமல்லது உலகென வேறில்லையென்று உலகினது இருப்பை யறிதலால் அவ்வறிவினிடத்தாயிற்று, பூதமைந்து, நிலம், நீர், தீ, காற்று, வான், ஞானேந்திரியமைந்து,மெய், வாய், கண், மூக்கு, செவி. கன்மேந்திரியமைந்து, வாக்கு பாதம்,பாணி, பாயு,உபஸ்தம். மூலப்பகுதி-மாயை இவை ஈன்குபாட்டாலும் பெருமைக்குக் காரணங்கள் ஐம்பொறி யடக்கலும், போகப்பயிற்சியும், தத்துவஞானமும், ஆமென்பதுசொல்லப்பட்டது. (௭)

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்.

8

## ௩ - ஆம் - அதி - நீத்தார்பெருமை.

ப - ரை. நிறைமொழி (பயனிறைந்த சொல்லையுடைய, மாந்தர் - முனிவரது, பெருமை-மகிமையை, நிலத்து - நிலவுலகத்தில் மறைமொழி - அவராணையாகச் சொல்லியமந்திரங்களே,காட்டிவிடும் பிரத்தியட்சமாகக் காட்டிவிடும்-எ-று.

க - ரை. முனிவரது மகிமையை - அவர்கள் - மந்திரங்களாலே காட்டும் என்பதாம்.

வி - ரை. பயனிறைந்தமொழியாவது அவர் அருளினாலேசொன்னாலும் கோபத்தினாலே சொன்னாலும், அதனதன்பிரயோசனத்தைக்கொடுத்தேவிடுகிறசொல், காட்டுதல் பிரயோசனப்பட்டு அம்மகிமையை அறிவித்தல். (அ)

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

ப - ரை. குணமென்னுங்குன்று (துறவு மெய்யறிவு ஆசையில்லாமை

முதலான) நற்குணங்களாகிய மலையின்மேல், ஏறிநின்றார்-ஏறிநின்ற முனிவரது வெகுளிகோபமானது, கணமேயும் (தானுள்ளவளவு க்ஷணகாலமேயாயினும், காத்தல் - கோபிக்கப்பட்டவராலே தடுத்தல், அரிது-அரிதாம்-எ-று.

க - ரை. முனிவர்கள் கோபமானது கோபிக்கப் பட்டவராலே தடுத்தல் கூடாது - என்பதாம்.

வி - ரை. அசையாமையும் பெருமையும்பற்றிக்குணங்களைமலையாக உருவகஞ்செய்தார், அறுதியான பழக்கத்தினாலே ஒரேவிடத்துக்கோபம் தோன்றியபோதே அதனை மெய்யுணர்வு அழிக்கும் ஆதலால் கணமேயு மென்றும், நிறைமொழிமாந்தராதலால்காத்தலரிதென்றும்சொல்லினர், (இவைஇரண்டு பாட்டாலும் அவராணை சொல்லப்பட்டது. (௯)

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

ப - ரை. எவ்வுயிர்க்கும்-எல்லாவுயிர்களின் மேலும், செந்தண்மை—செவ்வையான வருளை, பூண்டு-விரதமாகக் கொண்டு, ஒழுகலான்-நடக்கையினாலே, அந்தணரென்போர் - அந்தணரென்று சொல்லப்படுவோர், அறவோர்-துறவறத்தினின்றவர்-எ-று.

க - ரை. அந்தணரென்று சொல்லப்படுவோர் முனிவர்களே—என்பதாம்

வி - மற்று அசைநிலை, அந்தணரென்பது அழகிய தன்மையை யுடையவரென்னும் காரணப்பெயராகலின் அவ்வருளுடையார்க்கல்லது மற்றவர்க்காகாதென்பது கருத்து. (அப்படி ஆணையை யுடையவ ராயினும் உயிர்களிடத்தே அருளுடையரென்பது இதனாற் சொல்லப்பட்டது.

மூன்றாவது அதிகாரம் நீத்தார்பெருமை
முற்றிற்று.



ன்கதிகாரம்

# அறன்வலி யுறுத்தல்.



அஃதாவது: அம்முனிவரால் அறிவிக்கப்பட்ட மூன்றன் அறமானது மற்றைப் பொருளின்பங்கள்போலாகாமல் இம்மை, மறுமை, வீடு, என்கிற மூன்றையும் தருதலால் அவற்றினும் உறுதியுடைத்தென்பதுசொல்லுதலாம், அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

சிறப்பீனுஞ் செல்வமும் மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(ப-ரை.) சிறப்பு - மோட்சத்தையும், ஈனும் - கொடுக்கும், செல்வமும் (சுவர்க்கமுதலாகிய) செல்வத்தையும், ஈனும்-கொடுக்கும், (ஆதலால்) உயிர்க்கு-மனிதருயிர்க்கு, அறத்தினூஉங்கு - தருமத்தின் மேற்பட்ட, ஆக்கம் பெருக்கத்தைத் தருவது, எவன்-யாது, எ-று.

(ப-ரை.) மக்களுயிர்க்குத் தருமத்தின் மேற்பட்டதில்லை-என்பதாம்.

(வி-ரை.) ஓ-அசைநிலை. எல்லாப்பேறுகளினும் சிறந்ததாகலின் மோட்சத்தைச் சிறப்பென்றார், ஆக்கம் - மேன்மேலுயர்தல். [இதனால் அறத்தினும் அதிகமாகிய உறுதி இல்லையென்பது சொல்லப்பட்டது.] (௧)

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(ப-ரை.) (ஒருவனுக்கு) அறத்தினூஉங்கு-தருமஞ் (செய்தலின்) மேற்பட்ட, ஆக்கமும்-பெருக்கத்தைத் (தருவதும்) இல்லை-இல்லை, அதனை - அத்தருமத்தை, மறத்தலினூங்கு (மயக்கத்தால்) மறந்துவிடுதலின் மேற்பட்ட, கேடு-கேட்டைத் (தருவதும்) இல்லை - இல்லை, எ-று.

(க-ரை.) தருமத்தின் மேற்பட்ட செல்வமுமில்லை அத்தருமத்தை மறந்திருப்பார்க்கினும் கேடில்லை - என்பதாம்.

(வி-ரை.) அறத்தினூங்காக்கமுமில்லையெனமுன் சொல்லப்பட்டதையே * அநுவதித்தார் அதனாலே கேடுவருதலைச் சொல்லுதலாகிய பயனோக்கி. [இதனால் அறம் செய்யாதபோது கேடுவருதல் சொல்லப்பட்டது.] (௨)

ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(ப-ரை.) ஒல்லும் வகையால் (தமக்குத் தமக்குக்கூடும்) வகையால், அறவினை-தருமமாகிய நல்வினையை, ஓவாதே-இடைவிடாமல், செல்லும் வாயெல்லாம் (அது) செல்லுமிடங்களிலெல்லாம், செயல்-செய்யக்கடவர்-எ-று.

* அறுவாதமாவது, முன் சொல்லப்பட்டதையே மற்றொன்றை விதித்தற் பொருட்டுப் பின்னுஞ் சொல்லுதல்.

## ௩௦ ௪ - ஆம் - அதி - அறன்வலியுறுத்தல்.

(க-ரை.) மனம், வாக்கு, காயம், இம்மூன்றாலும்*தருமஞ்செய்யக்கடவர்கள்-என்பதாம்.

(வி-ரை.) ஒல்லும் வகையாவது, இல்லறம் பொருளளவுக்கு ஏற்கவும், துறவறம்-சரீர நிலைக்கு ஏற்கவும் செய்தலாம். செல்லுமிடங்களாவன, மனமும், வாக்கும், காயமும், ஆம். அவற்றினாலே செய்யப்படுகிற அறங்களாவன நற்சிந்தையும், நற்சொல்லும், நற்செயலும். ஆம். [இதனால் அறம் செய்யுமாறு சொல்லப்பட்டது.] (௩)

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற.

(ப-ரை.) மனத்துக்கண் (அப்படி அறஞ்செய்பவன் தன்) நெஞ்சினிடத்து, மாசிலனாதல்-குற்றமில்லாதவனாகக் கடவன், அறம்-தருமமாவது அனைத்து-அவ்வளவே, பிற-அது ஒழிந்த சொல்லும் வேடமும், ஆகுலநீர (அறமெனப் படுவனவல்ல) ஆரவாரகுணத்தை யுடையனவாம், எ-று.

(க-ரை.) தருமஞ்செய்பவன் மனமாசற்றிருக்கக்கடவன், அவ்வளவே என்பதாம்.

(வி-ரை.) குற்றம் தீயவைநினைத்தல், பிறர் அறியவேண்டிச் செய்யப்படுதலால் ஆகுல நீரபிறவென்றார். [மனதிலே குற்றமுடையவனுகியபோது அதன் வழிப்பட்ட வாக்கினாலும் காயத்தினாலும் செய்யப்படுகிற அறங்களிலே பயன் இல்லை யென்பது பெறப்பட்டது. (௪)

அழுக்கா றவாவெகுளி யின்னாச் சொன்னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

(ப-ரை.) அழுக்காறு-பிறருயர்ச்சி பொறாமையும், அவா - ஐம்புலவாசையும், வெகுளி (அதை காரணமாகப் பிறர்மேல் உண்டாகிற) கோபமும், இன்னாச்சொல் (அதுபற்றிவருகிற) கடுஞ்சொல்லும், நான்கும்-ஆகிய இந்நான்கினையும், இழுக்கா-கடிந்து, இயன்றது (ஒழிவில்லாமல்) நடந்தது, அறம்-தரு

மையாவது, எ-று.

(க-ரை.) பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல், இந்நான்குங்கடிந்து நடந்ததே தருமம் என்பதாம்.

(வி-ரை.) இதனால் இந்நான்கோடுங்கலந்து நடந்தது அறமெனப்படாதென்பதும் கொள்க. [இவை இரண்டு பாட்டாலும் அறத்தினியல்பு சொல்லப்பட்டது.] (௫)

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(ப-ரை.) நாம் இப்போது இளையோமாகலின் § அன்று இறக்குநாளில், அறிவா மென்னாது செய்வோ மென்று நினையாமல், அறம் தருமத்தை,

§ அகத்தியம் 'அன்று முன்னுளெதிர்வரை அசைநிலை.'



செய்க (நினைத்தோறுஞ்) செய்யக்கடவன், அது-அப்படிச் செய்யப்பட்ட தருமமானது, பொன்றுங்கால்-உடம்பினின்று முயிர்போங்காலத்து, பொன்றாத் துணை (அவ்வுயிர்க்கு) அழியாத துணையாம், எ-று.

(க-ரை.) இறக்கும்போது தருமஞ் செய்வோமென்னாது இளைஞ்செய்க அவ்வறம் இறக்கும்போ துதவியாம்-என்பனவாம்.

(வி-ரை.) மற்று அசைநிலை, செய்தவுடம்பழியவும் உயிரோடுகூடி மற்றையுடம்பினும், செல்லுதலால் அழியாததுணையாயிற்று, [இதனால் அப்படிப்பட்ட தருமத்தை நிலையில்லாத வுடம்பு இருக்கிறபோதே செய்கவென்பது சொல்லப்பட்டது.] (௬)

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

(ப-ரை.) அறத்தாறு - தருமத்தின் பயன், இதுவென - இதுவென்று, (ஆகமவசனவையால் அறிவிக்க, வேண்டா-வேண்டியதில்லை, சிவிகை-தண்டிகையை, பொறுத்தானோடு-சுமப்பவனோடு, ஊர்ந்தானிடை செலுத்துவோனிடத்துக் (காட்சியளவையினாலேயே) அறியப்படும், எ-று.

(க-ரை.) தருமத்தின் பயன்சிவிகை எடுப்பவனிடத்தும், ஏறுபவனிடத்தும் காணப்படும் - என்பதாம்.

(வி-ரை.) எனவென்றதனால், சொல்லளவையாகிய ஆகமபிரமாணமும் பொருத்தாஜே சேர்த்தானிடை என்றதனால், காட்சியளவையாகிய பிரத்தியட்சபிரமாணமும் சொல்லப்பட்டன. அறியப்படுமென்பது குறைந்து நின்றதனால் சொல்லெச்சம். [இதனாலழியாத துணையாதல் தெளிவிக்கப்பட்டது.] ()

வீழ்நாள் படாமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(ப-ரை.) ஒருவன் - ஒருவன், வீழ்நாள் (செய்யாமற்) கழியுநாள், படாமை-உண்டாகாமல், நன்று-தருமத்தை, ஆற்றின்-செய்வானாயின், அஃது-அச்செய்கையானது, வாழ்நாள் (அவன் சரீரத்தோகெடி) வாழுநாளது, வழி (வரு) வழியை, அடைக்குங்கல்-(வாராமல்) அடைக்குங்கல்லாம். எ-று.

(க-ரை.) ஒருவன் அறத்தைச் செய்தால் அவ்வறமவன் பிறப்பை நீக்கும் என்பதாம்.

(வி-ரை.) அஞ்ஞானம், அகங்காரம், அவா, விருப்பு, வெறுப்பு, என்கிற ஐவகைக் குற்றங்களால் வருகிற நல்வினை, தீவினை என்கிற இருவகை வினைகளும் உள்ளவரைக்கு முயிர் உடம்போடு கூடிநின்று அவற்றின் பயன்களாகிய சுகதுக்கங்களை அநுபவிக்கும், ஆதலால் அக்காலமுழுதும் வாழ்நாளெனப்பட்டது.

## ௪௨ ௯ - ஆம் - அதி - அறன்வலியுறுத்தல்.

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(ப-ரை.) அறத்தான்-இல்லறத்தோடுபொருந்தி, வருவதே-வருமின்பமே இன்பம்-இன்பமாகும், மற்றெல்லாம்(அதனோடுபொருந்தாது வருவனவெல்லாம் இன்பமாயினும் புறத்த-துன்பத்துட் சேர்வனவாம், அதுவுமல்லாமல், புகழும் - புகழையும், இல உடையனவல்ல எ-று.

(க-ரை.) தன்மனைவியோடு கூடு மின்பமே யின்பமாகும் பிறன் மனைவியோடு கூடுமின்பம் துன்பமாம் என்பதாம்)

(வி-ரை.) இன்பம் காமத்தி னநுபவம், இன்பத்திற் புறமெனவே துன்ப

மாயிற்று; பாவத்தால் வரும் பிறனில் விழைவு முதலானவை அப்போது இன்பமாய்த்தோன்றுமாயினும், பின்புதுன்பமாய் விளைதலாற்புறத்தவென்றார். புகழுமிலவெனவே அறத்தோடு வருவதாகிய வின்பம்புகழு முடைத் தாமென்பது பெற்றும். [இதனால் அறஞ்செய்வாரே இம்மையின்பமும், புகழும் பெறுவாரென்பது சொல்லப்பட்டது.

செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(ப-ரை.)ஒருவற்கு - ஒருவனுக்கு - செயற்பாலது-செய்தற்றன்மையது, அறனே-நல்வினையே, உயற்பாலது-ஒழுதற்றன்மையது, பழியே தீவினையே எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு செய்யத்தக்கது நல்வினை, செய்யத்தகாதது தீவினையென்பதாம்.

(வி-ரை) தேற்றேகாரம்பின்னுங்கூட்டப்பட்டது. ஒரு மிரண்டும், அசைநிலைகள், பழிக்கப்படுவதாகியதீவினையைப்பழியென்றார். [இதனாற் செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.] (௰)

நான்காம் அதிகாரம் அறன்வலியுறுத்தல்.

பாயிரம்

முற்றிற்று



# இல்லறம்.



இல்லறமாவது:—இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லப்படுகிற வழியிலே நின்று அதற்கு துணையாகிய கற்புடைய மனைவியோடு

கூடிச் செய்யப்படுவதாம். ஆதலின் அதனை முதலிலே சொல்லத் தொடங்கினர்.

## ஐந்தாம்-அதிகாரம்.

# இல்வாழ்க்கை.

அஃதாவது: மனையாளோடுகூடிவாழ்தலின துசிறப்பாம். இல்வாழ்க்கை நிலையானது அறஞ்செய்தற்குரியஇருவகை நிலைகளுள்ளேமுதலாதலின்இது அறன்வலியுறுத்தலின் பின்வைக்கப்பட்டது.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

(ப-ரை.) இல்வாழ்வா னென்பான் - இல்லறத்தோடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவோன், இயல்புடைய (துறவறத்) தன்மையையுடைய மூவர்க்கும்-(மற்றை) மூவர்க்கும், நல்லாற்றில் (அவரது) நல்லொழுக்க-வழிகளில், நின்ற - நிலைபெற்ற, துணை-துணையாவான் -எ-று.

(க-ரை.) இல்லறத்தில் வாழ்பவன் பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்சனியாசி இம்மூவர்க்குந் துணையாவான்-என்பதாம்.

(வி-ரை.) இல்லென்பது அதனறத்தை உணர்த்தலால் ஆகுபெயர். மற்றைமூவராவார்; ஆசாரியனிடத்தேஓதுகின்றவனும், விரதங்காக்கின்றவனும், ஆகியபிரமசாரியும், காட்டினிடத்தேபோய் மனைவியோடுதவஞ்செய்கிறவனுகிய வானப்பிரஸ்தனும், எல்லாப்பற்றுகளையும்விட்டவனாகியசந்நியாசியுமென்றறிக. இல்வாழ்வான் பசி, நோய், குளிர்முதலானவற்ருல் அவரொழுக்கங்களுக்கு இடையூறுவராமல் உண்டி மருந்து முதலானவை கொடுத்து அவரவரொழுக்க வழிகளிலே தப்பாமல்நடத்துகையினலே நல்லாற்றினின்றதுணையென்ருர்.

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

(ப-ரை.) துறந்தார்க்கும் (ஆதாரமானவராலே) விடப்பட்டோர்க்கும், துவ்வாதவர்க்கும்-வறுமைப்பட்டவர்க்கும், இறந்தார்க்கும் (ஒருவருமில்லாமல் இறந்து) இறந்தவர்க்கும், இல்வாழ்வா னென்பான்-இல்வாழ்வானென்று சொல்லப்படுவோனே, துணை - துணையாவான்-எ-று.

## ௪௨ ௫ - ஆம் - அதி - இல்வாழ்க்கை.

(க-ரை.) துறந்தவர்க்கும், வறியவர்க்கும், இறந்தவர்க்கும், இல்வாழ்வான் துணையாம் என்பதாம்.

(வி-ரை.) ஆதாரமானவராலேவிடப்பட்டவர்க்குப்பாலமொழிய அவர்க்கு ஆதாரமாய்நின்று வேண்டுவனசெய்தலாலும், வறுமைப் பட்டவர்க்கு உணவு முதலானவைகொடுத்தலாலும், இறந்தவர்க்குநீர்க்கடன்முதலானவைசெய்து நல்லகதியை அடைவித்தலாலும், துணையென்றார். [இவை யிரண்டு பாட்டானும்இல்வாழ்க்கையெல்லாவுபகாரங்களுக்கும் உரித்தாதல்சொல்லப்பட்டது]

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

(ப-ரை.) தென்புலத்தார்-பிதிரரும், தெய்வம்-தேவரும், விருந்து-அதிதிகளும், ஒக்கல் - சுற்றத்தாரும், தான்-தானும், என்று-என்று சொல்லப்பட்ட, ஐம்புலத்து - ஐந்திடத்துஞ் சொலப்படுகின்ற, ஆறு (அறு) வழியை, ஓம்பல்-வழுவாமற்செய்தல், தலை (இல்வாழ்வானுக்குச்) சிறப்புடையவறமாம். எ-று.

(க-ரை.) பிதிரர்க்குந் தெய்வத்திற்கும், விருந்திற்கும், இனத்திற்குந் தனக்குந், தருமஞ்செய்தல் தலைமையான தருமமாம்-என்பதாம்.

(வி-ரை.) ஆங்கு அசைநிலை. பிதிரர் ஓர் தேவசாதியார், அவர்க்கு இடம் தெற்காதலின் - தென்புலத்தா ரென்றார், தெய்வம், சாதியொருமை, விருந்து, புதுமை, அது இங்கேபுதியவராய் வந்தவரை, உணர்த்தலினாலேஆகுபெயர். தான் செவ்வையாயிருந்துகொண்டு எல்லாவறங்களையும் செய்யவேண்டு

தலின் தன்னைக்காப்பாற்றுதலும்அறமாயிற்று. இவ்வைந்துவகையும் தருமஞ் செய்வதற்கு இடங்களாகையால் ஐம்புலமென்றார், இவ்வைந் திடங்களுக்கும் ஐந்து பங்குவேண்டுதலால் அரசனுக்குஆறில்ஒரு பங்காயிற்று. (ரு)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியஞ்ச லெஞ்ஞான்று மில்.

(ப-ரை.) (பொருள் சம்பாதிக்கும்போது) பழிபாவத்துக்கு, அஞ்சி பயப்பட்டுச் சம்பாதித்து பாத்து (அப்பொருளை முன்சொல்லப்பட்ட பதின்மர்களுக்கும்) பங்கிட்டு, ஊண் (தான்) உண்ணுதலை, வாழ்க்கை (ஒருவனது) இவ்வாழ்க்கையானது, உடைத்தாயின்-உடையதானால், வழி (அவனது) சந்ததியானது, எஞ்சல் - குறைதல், எஞ்ஞான்றும் - எக்காலும், இல்-இல்லை.எ-று.

(க-ரை.) பாவத்திற்குப்பயந்து பொருளைத்தேடிப் பங்கிட்டுண்டால் அவன் சந்ததியானது குறைதலில்லை - என்பதாம்.



(வி-ரை.) பாவத்தால்வந்த பிறன்பொருளைப்பங்கிட்டுண்டால் அறமன்று பொருளுடையானையும், பாவமானது தன்னையும், அடைந்து சந்ததி அழியுமாதலால் பழியஞ்சி யென்றார். [வாழ்பவனது உடைமை வாழ்க்கைமேல் ஏற்றப்பட்டது.] (௬)

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

(ப-ரை.) இல்வாழ்க்கை – (ஒருவனது) இல்வாழ்க்கையானது, அன்பும் – (தன்மனையாளிடத்துச் செய்யத்தகு) மன்பினையும், அறனும் – (பிறர்க்குப் பகுத்துண்ணுதலாகிய) அறத்தினையும், உடைத்தாயின் – உடைத்தானால், அது – அவ்வுடைமையானது, (அவ் வில்வாழ்க்கைக்கு) பண்பும் – குணமும், பயனும் – பிரயோசனமும் ஆம், எ-று.

(க-ரை.) ஒருவ னில்வாழ்க்கை அன்பையு மறத்தையு முடைத்தானால் அவ்வுடைமையானது, குணமும் பிரயோசனமுமாம்-என்பதாம்.

(வி-ரை.) மனையாளுக்கும் கணவனுக்கும் மனவொருமை யில்லாதபோது இல்லறம் முடிவுபெறாதாகையால் அன்புடைமை பண்பும், அற

முடைமை பயனும், ஆயின அன்பையும், அறனையும் முன்வைத்த ஒழுக்கின்படி அவற்றூடு சம்பந்தமுள்ள பண்பையும், பயனையும், வைத்தலால் நிரனிறைபணி. [இவை மூன்றுபாட்டாலும் இல்வாழ்வோன் அறஞ்செய்யுமாறு சொல்லப்பட்டது.] (ரு)

*அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்*
*போஒய்ப் பெறுவ தெவன்.*

(ப-ரை.) (ஒருவன்) இல்வாழ்க்கை – இல்வாழ்க்கையை, அறத்தாற்றின் – தருமத்தின்வழியில், ஆற்றின் – செலுத்துவானாயின், புறத்தாற்றில் – (அவன் அதற்குப்) புறமாகிய வழியிலே, போய் – சென்று, பெறுவது – பெறும்பயன், எவன் – யாது, எ-று.

(க-ரை.) ஒருவன் இல்வாழ்க்கையைத் தருமவழியாக நடத்துவனாகில், துறவறத்திற்போய்ப் பெறும்பயன் என்ன-என்பதாம்.

(வி-ரை.) தருமத்தின்வழி பழியஞ்சிப் பகுத்துண்ணுதலும் அன்புடைமையுமென முன்சொல்லப்பட்ட வழியாம். புறத்தாறு, மனையைவிட்டு வனத்திலே செல்லுகிலை. அங்கிலை தரும்பயனை இது தருமமென்னும் பொருள் தோன்றற்குப் போய்ப் பெறுவதெவ னென்றார். (சு)

*இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்*
*முயல்வாரு ளெல்லாந் தலை.*

(ப-ரை.) இல்வாழ்க்கை – இல்வாழ்க்கையிலே நின்று இயல்பினான் – அதற்குரிய) வியல்போகேடி, வாழ்பவனென்பான் – வாழ்பவ



னென்று சொல்லப்படுவோன், முயல்வாருளெல்லாம் – (ஐம்புலன்களை விட) முயற்சிசெய்வாரெல்லாருள்ளும், தலை–மேற்பட்டவனுவான்–எ-று.

(க-ரை.) அறவியல்போடு இல்லறத்தில் வாழ்பவன் தவஞ்செய்வார்க்கெல்லாந் தலையாவான் – என்பதாம்.

(வி-ரை.) முற்றத்துறந்தவராகிய சந்நியாசிகள் ஐம்புலன்களை விட்டமையால் முயல்வாரென்றது வனத்திலேதவஞ்செய்வோராகிய வானப்பிரஸ்தரை, இல்வாழ்வோன் அம்முயற்சி செய்யாமலே பயனைப் பெறுதலினுலே தலையென்றார். (எ)

*ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை*

நோற்பாரி னோன்மை யுடைத்து.

(ப-ரை.) (தவஞ்செய்வோரையும்) ஆற்றின் (தமது) வழியிலே, ஒழுக்கி - நடத்தி, அறன் - (தானுந்தன்) னறத்தினின்றும், இழுக்கா - தவறாத, இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, நோற்பாரின் - அத்தவஞ்செய்வாரது நிலையினும், நோன்மை - பொறுமையை, உடைத்து-உடையதாம். எ-று.

(க-ரை.) தவத்தோரைத் தவவழியி னடத்தி, தானும் இல்லறத்தினின்று தவறாதவாழ்க்கை தவஞ்செய்வோர் நிலையினும்பொறுமையுடையது என்பதாம்.

(வி-ரை.) பசிமுதலான இடையூறு தீர்த்தலால் ஆற்றி னொழுக்கி யென்றார். நோற்பாரென்றது அவரதுநிலையை உணர்த்தலால் ஆகுபெயர் தவஞ்செய்வோரது நிலை அவருக்கு வந்தநோயை அல்லது இல்வாழ்வானது நிலைபோல் பிறருக்கு வந்தநோயையும் பொறுத்தலில்லாமையால் நோற்பாரி னோன்மையுடைத்தென்றார். (அ)

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

(ப-ரை.) (இருவகையறங்களுள்) அறனெனப்பட்டது - (நூல்களால்) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது, இல்வாழ்க்கை-இல்வாழ்க்கையே, (மற்றத் துறவறமோவென்றால்) அஃதும் - அதுவும், பிறன்பழிப்பது - பிறனால் பழிக்கப்படுவதை, இல்லாயின்-இல்லாதிருந்தால், நன்று-அவ்வில்வாழ்க்கையோடு ஒரு தன்மையாக நன்றும். எ-று.

(க-ரை.) அறனென்று சொல்லப்பட்டது இல்வாழ்க்கையாகும்; துறவறமும் பிறனாற் பழிக்கப்படுவதில்லாதிருந்தால் நல்லதுஎன்பதாம்.

(வி-ரை.) ஏகாரத்தினாலே இல்லறத்தினின்றும் பிரிக்கப்பட்ட துறவறத்தை, அஃதென்பது சுட்டிநின்றது, பிறன்பழிப்பதென்றது கூடாவொழுக்கத்தை துறவறத்தில் மனத்தையும் பொறிகளையும் அடக்கவேண்டிய வருத்தம் உண்டாயிருத்தலால், அது நிறைவேறுவதுஅரிது.

சு - ஆம் - அதி - வாழ்க்கைத்துணைநலம். சுஞ

இல்லறத்திலே அவ்வருத்தம் இல்லாமையால் இது இறைவேறுவது எளிது. ஆதலால் அப்படிப்பட்ட துறவறம் பழுதுபடாமல் நடத்துவரும் போது இல்லறத்தோடு சேர்த்து எண்ணப்படுவதாயிற்று. [இவை நான்கு பாட்டாலும்; இல்லறமே பயனுடையதென்று அதன்சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(ப-ரை.) வாழ்வாங்கு - இல்லறத்தோடு கூடிவாழு மியல்பினால், வையகத்துள் - மண்ணுலகத்துள், வாழ்பவன் - வாழ்பவன், (மண்ணுலகத்தானே யாயினும்) வானுறையும்-விண்ணுலகத்தி லிருக்கின்ற, தெய்வத்துள் - தேவருள், வைக்கப்படும் - (ஒருவனாக) வைத்து நன்றாகமதிக்கப்படுவான். எ-று.

(க-ரை.) இல்லறத்து வழுவாது வாழ்பவன் தெய்வத்து ளொருவனாக மதிக்கப்படுவான் என்பதாம்.

(வி-ரை.) பின்னே தேவனாய்ப் பிறந்து அவ்வறப்பயனை அனுபவித்தல் நிச்சயமா யிருக்கையால், தெய்வத்துள் வைக்கப்படுமென்றார். [இதனால் இல்லறத்தின் மறுமைப்பயன் சொல்லப்பட்டது.] இம்மைப்பயன் புகழ் அதை இறுதியிலே சொல்லுகின்றார். (௰)

ஐந்தாம் அதிகாரம் இல்வாழ்க்கை
முற்றிற்று.

---

## ஆறாம் - அதிகாரம்.
# வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது: அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம், இதனாலேயே அதிகாரமுறைமையும் விளங்கும்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(ப-ரை.) மனைத்தக்க-இல்லறத்துக்குத் தக்க, மாண்புடையளாகி-(நற்குண நற்செய்கைகளை) யுடையவளாகி, தற்கொண்டான் - தன்னைக்

கொண்டகணவனது, வளத்தக்காள் வாழ்க்கை – வரவுக்குத்தகுந்த வாழ்க்கையை யுடையவள், துணை – (அவ்வில்லறத்துக்குத) துணையாவாள். எ-று.

(க-ரை.) இல்லறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கையோடு தன் கணவன் வரவுக்குத்தக்க செலவுசெய்பவள் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள் என்பதாம்.

(வி-ரை.) நற்குணங்களாவன, துறந்தவரை யுபசரித்தலும், விருந்தோம்பலும், வறியவரிடத்தே யருளுடைமையும், முதலானவையாம்.

## ௬-வது அதி - வாழ்க்கைத் துணைநலம்.

நற்செய்கைகளாவன, வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களறிந்து காப்பாற்றிவைத்தலும், உண்டிசமைத்தல் வல்லமையும், உபசாரஞ்செய்தலும் முதலானவையாம். வருவாய்க்குத்தக்க வாழ்க்கையாவது முதலுக்குத்தக்கபடி செலவுசெய்தல். [இதனால் இவ்விரண்டு தன்மைகளும் சிறந்தனவென்பது சொல்லப்பட்டது] (க)

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

(ப-ரை.) மனைமாட்சி – இல்லறத்துக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள், இல்லாள்கண் – ஒருவனது) மனையாளிடத்தே, இல்லாயின் – இல்லையாயின், வாழ்க்கை – அவ்வில் வாழ்க்கையானது, எனைமாட்சித்தாயினும் – (செல்வத்தால் எவ்வளவு பெருமையை உடையதாயினும், இல் – அப்பெருமையை உடையதன்று. எ-று.

(க-ரை.) இல்லறத்திற்குரிய குணம் மனையாளிடத்திலில்லையேல், அவ்வில்வாழ்க்கை எவ்வளவு சிறப்புடைத்தாயினும் பயனில்லை – என்பதாம்.

(வி-ரை.) பயன்படாமையால் இல்லையென்றார். (உ)

இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ
னில்லவள் மாணாக் கடை.

(ப-ரை.) (ஒருவனுக்கு) இல்லவள் – மனையாள், மாண்பானால் – நற்குண நற்செய்கைகளாயிருந்தால், இல்லது – இல்லாதது, என் – யாது, இல்லவள் – அம்மனையாள், மாணாக்கடை – (அப்படிப்பட்டவ) ளாகாதி

ருந்தால், உள்ளது - உள்ளது, என் - யாது: எ-று.

(க-ரை.) மனையாள், நற்குண நற்செய்கையுடையவளாகில் அவ்வில் வாழ்க்கை எல்லாம் உடைத்து - என்பதாம்.

(வி-ரை.) மாண்பென்னும் குணப்பெயர் இங்கே அதனை உடையவளுக்கு ஆயிற்று. [இவ்விரண்டுபாட்டாலும் இல்வாழ்க்கைக்கு வேண்டுவது மனையாளது நற்குண நற்செய்கையே மற்றவை யல்லவென்பது சொல்லப்பட்டது.] (௩.)

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(ப-ரை.) கற்பென்னுந்திண்மை - கற்பென்னும் கலங்காநிலைமை, உண்டாகப்பெறின் - (அவளிடத்தே) உண்டாயிருக்கப்பெற்றால், (ஒருவன்பெறுதற்குரிய பொருள்களுள்) பெண்ணின் - மனையாளினும், பெருந்தக்க - உயர்வாகிய பொருள்கள், யா - எவை, உள - இருக்கின்றன, எ-று.

(க-ரை.) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் கற்புடைய மனைவியைப் பார்க்கிலும் எவை யிருக்கின்றன என்பதாம்.

### ௬ - ஆம் - அதி - வாழ்க்கைத்துணைநலம். ௫௫

(வி-ரை.) கற்புடையாள் போல அறமுதலாகிய மூன்றற்கும் ஏதுவாம் பொருள்கள் வேறில்லாமையால் யாவுளவென்றார். [இதனால் கற்புநலத்தது சிறப்புச் சொல்லப்பட்டது.]

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை.

(ப-ரை.) தெய்வம் - (பிற) தெய்வத்தை, தொழாஅள்-வணங்காளாகி, கொழுநன் - (தனது தெய்வமாகிய) கணவனை, தொழுது - வணங்கி நின்று, எழுவாள் - (நித்திரைவிட்) டெழுந்திருப்பவள், பெய்யென-பெய்யென்று சொல்ல, மழை-மழையானது, பெய்யும்-பொழியும். எ-று.

(க-ரை.) பிறதெய்வத்தை வணங்காது கணவனை தொழுதெழுபவள், பெய்யென்றுசொல்ல மழைபெய்யும் - என்பதாம்.

(வி-ரை.) தெய்வத்தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங்காலத் தாதலின் தொழுதெழுவாளென்றார். தொழாளின்றெனபது தொழுதெ னத்திரிந்துநின்றது தெய்வமும் ஏவல்செய்யு மென்பதாம். [இதனால் கற்புடையவளது வல்லமை சொல்லப்பட்டது.]

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(ப-ரை.) தற்காத்து - கற்பினின் றுவழுவாமல்) தன்னைக் காப்பாற் றிக்கொண்டு, தற்கொண்டாற்பேணி-தன்னைக்கொண்டவனையும் (உண் டிமுதலானவற்றால் உபசரித்து, தகைசான்ற - தம்மிருவரிடத்தும் நன் மையமைந்த, சொற்காத்து - புகழைநீங்காமற் காப்பாற்றி, சோர்வி லாள் - (முன் சொல்லப்பட்ட நற்குணநற்செய்கைகளிலும்) மறவியில் லாதவளே, பெண் - பெண்ணாவாள். எ-று.

(க-ரை.) கற்பையும் கணவனையும் நற்குண நற்செய்கைகளையும் காப்பாற்றுபவளே மனையாள் - என்பதாம்.

(வி-ரை.) தன்னிடத்துப் புகழாவது - ஊரார் - கற்பினாலே தன் னைப் புகழ்வது. [இதனால் தன்னைப்புகழ்தற் சிறப்புச் சொல்லப்பட் டது.] (௬)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(ப-ரை.) மகளிர் - பெண்டிரை, சிறை - சிறையினாலே, காக்கும்- தலைவர்காக்கும், காப்பு - காவலானது, எவன - என்னபிரயோசனத் தை, செய்யும் - செய்யும், நிறை - தமதுநிறையால், காக்கும் - (அவர்) காக்கும், காப்பே - காவலே, தலை - முதன்மையான காவல். எ-று.

(க-ரை.) பெண்கள் - கற்பால் தங்களைக்காத்துகொள்ளுதலே தலை மையான காவல் என்பதாம்.

(வி-ரை.) * சிறை, மதிற்காவல், வாயிற்காவல், முதலானவை நிறை - மனதைக் கற்பினவழியிலே நிறுத்தல். காவலிரண்டினும் நிறைக் காவல் இல்லாதவிடத்துச் சிறைக்காவலாலே பயன் இல்லை என்றதற்கு நிறைகாக்குங் காப்பேதலையென்றார். • [இதனால் தன்னைக் காத்தலினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௭).

பெற்றார் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

(ப-ரை.) பெண்டிர் - மகளிர், பெற்றார் - (தம்மைக்)கொண்டகணவனை, பெறின் - (பூசித்தல்) பெறுவாராயின், புத்தேளிர் - தேவர், வாழும் - வாழ்தற்கிடமாகிய, உலகு - உலகத்தில், பெருஞ்சிறப்பு-(அவராற்செய்யப்படும்) பெரியசிறப்பினை, பெறுவர் - அடைவர். எ-று.

(க-ரை.) தன்கணவரை வணங்கும் பெண்களைத் தேவர்கள்தொழுவார் என்பதாம்.

(வி-ரை.) பூசித்தல் வருவிக்கப்படுதலால் சொல்லெச்சம். [இதனால் தன்னைக் கொண்டவனைப் பூசித்தபெண்டிர் தேவர்களாலே பூசிக்கப்படுவரென்பது சொல்லப்பட்டது.] (௮)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

(ப-ரை.) புகழ் - கீர்த்தியை, புரிந்த - விரும்பிய, இல் - மனையாளை, இலோர்க்கு - இல்லாதவர்க்கு, இகழ்வார்முன், (தம்மை யிகழ்ந்து பேசும் பகைவர்முன், ஏறுபோல் - ஆண்சிங்கம்போலும், பீடுநடை - பெருமிதநடை, இல்லை - இல்லை. எ-று.

(க-ரை.) கற்பாகிய கீர்த்தியையுடைய மனையாளில்லாதவர்க்குப் பகைவர்முன் சிங்கம்போன்ற நடையில்லை என்பதாம்.

(வி-ரை.) புரிந்தவென்பதனீறுவிகாரத்தால் தொக்கது. பெருமித நடையானுக்குச் சிங்கவேறுநடையினால், உபமானமாதலால் ஏறுபோலென்றார். [இதனால் புகழைக்காப்பாற்றாத விடத்தே உண்டாகும் குற்றஞ் சொல்லப்பட்டது.]

மங்கலமென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

(ப-ரை.) (அறிந்தோர்) மனை - மனையாளது, மாட்சி - நற்குண நற்செய்கைகளே, மங்கலம் - (ஒருவனுக்கு) நன்மையாம், என்ப - என்று சொல்லுவார், நன்மக்கட்பேறு-நல்லப் புதல்வரைப்பெறுதலே, அதன் - அவற்றுக்கு, நன்கலன் - நல்லவாபரணம், (என்ப) - என்று சொல்லுவார். எ-று.

(க-ரை.) மனையாளது நற்குண நற்செய்கைக ளொருவனுக்கு நன்மை என்றும், நற்புதல்வரைப் பெறுதல் அநநன்மைக் காபரணமென்றும் சொல்லுவார் என்பதாம்.

(வி-ரை.) அறிந்தோரென்பது வருவிக்கப்பட்டது. மற்று – அசை. [இதனால் வாழ்க்கைத்துணைக்காவதோ ரணிகலஞ்சொல்லி அதனால் பின்வருவதாகிய அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.]

ஆறும் அதிகாரம் வாழ்க்கைத்துணைநலம்
முற்றிற்று.

ஏழாம் - அதிகாரம்.

# புதல்வரைப் பெறுதல்.

அஃதாவது: முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும் தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறுதலாலும், அல்லது செலுத்தக்கூடாமையால் அக்கடன் செலுத்தற் பொருட்டு நல்ல மக்களைப்பெறுதலாம். அதிகாரமுறைமை முன்பெறப்பட்டது.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(ப-ரை.) பெருமவற்றன் – (ஒருவன்) பெறும்பேறுகளுள், அறிவறிந்த – அறியவேண்மெவைகளை அறிதற்குரிய, மக்கட்பேறல்ல – புதல்வரைப் பெறுதலையல்லது, பிற-மற்றைப்பேறுகளை, யாம்-நாம், அறிவ தில்லை—மதிப்பதில்லை. எ-று.

(க-ரை.) ஒருவன் பெறும்பேறுகளுக்குள் அறியவேண்டியவைகளையறிந்த மக்கட்பேற்றை மதிக்கவேண்டும் என்பதாம்.

(வி-ரை.) அறிதற்குக் காரணமாகிய வுரிமை அவ்வறிவாலே உண்டாக்கியே விடுமாதலின் அத்துணிவுபற்றி அறிந்தவென இறந்தகாலத்தாற் கூறினார்: அறிவறிந்த வென்றதனால் மக்களென்னும் பெயர் பெண்பாலை யொழித்துநின்றது. [இதனாலே புதல்வரைப்பெறுதலினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (க)

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(ப-ரை.) பழிபிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத, பண்புடை-நற் குணங்களையுடைய, மக்கட்பெறின்-புதல்வரைப் பெறுவானாயின், எழு பிறப்பும் - (வினைவசத்தினாலே யுண்டாகிற) எழுவகைப்பட்ட பிறப் பிலும், தீயவை - துன்பங்கள், தீண்டா - (சென்று ஒருவனை) யடையா வாம். எ-று.

(க-ரை.) பழிக்கப்படாத நற்புதல்வரைப் பெறுவானாயின் எழுபிறப் பிலும் துன்பங்களணுகா என்பதாம்.

(வி-ரை.) தந்தை தாய்களது தீவினை செய்தற்பொருட்டு அவரைக் குறித்துப் புதல்வராலே செய்யப்படும் தானதருமங்களுக்கு அவரது நற் குணம் காரணமாகலின் பண்புடை மக்களென்றார். எழுபிறப்பு - எழு வகைப்பிறப்புமாம். எழுபிறப்பாவன. தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம், என்பனவாம். (௨)

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்.

(ப-ரை.) தம்மக்கள் - தம்முடைய புதல்வரை, தம்பொருள் - தம் முடையபொருள்கள், என்ப - என்றுசொல்லுவார், அறிந்தோர், அவர்



பொருள் - அப்புதல்வர் சம்பாதித்தபொருள்கள், தந்தம் வினையான் - தம்மைக்குறித்து அவர்செய்யும் நல்வினையினாலே, வரும் - (தம்மிடத்து) வரும், (ஆதலால்) எ-று.

(க-ரை.) பின்னைதேடியபொருள் பிதாவிற்கு வருகையால் புதல் வரைத் தம்பொருளென்று சொல்லுவர் என்பதாம்.

(வி-ரை.) பொருள்சம்பாதித்த புதல்வரைப்பொருளென வுபசரித் தார். [இவை இரண்டு பாட்டாலும். நல்ல புதல்வரைப் பெற்றோர் அடையும் மறுமைப்பயன் சொல்லப்பட்டது.] (௩)

அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகையளாவிய கூழ்.

(ப-ரை.) தம்மக்கள் - தம்முடைய மக்களது, சிறுகை - சிறியகை களால், அளாவிய - அளைபப்பட்ட, கூழ் - சோறானது, அமிழ்தினும்

(சுவையினுலேமிகுந்த) அமிர்தத்தினும், ஆற்றவினிது - மிகவுமினிமை யையுடைத்தாயிருக்கும். எ-று.

(க-ரை.) தம்மக்கள் சிறுகையாலளாவிய சோறனது அமிர்தத்தினும் மிகவினிது என்பதாம்.

(வி-ரை.) சிறுகையளாவல் தாய்தந்தையரோடு உடனிருந்து உண்ணும்போது சோற்றைத்துழாவுகை முதலாயின. (௪)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(ப-ரை.) உடற்கு - (ஒருவனது) உடம்புக்கு, இன்பம் - இன்பமாவது, மக்கள் - மக்களது, மெய் - உடம்பை, தீண்டல் - தொடுதல், செவிக்கு - (அவனது) காதுக்கு, இன்பம் - இன்பமாவது, அவர் - அவரது, சொல் - சொற்களை, கேட்டல் - கேட்குதல். எ-று.

(க-ரை.) மக்களுடலைத் தொடுதல் உடற்கின்பம், அவர் சொற்களைக்கேட்டல் செவிக்கின்பம் என்பதாம்.

(வி-ரை.) மற்று - அசைநிலை. பிள்ளைகளது மழலைச் சொல்லேயன்றி அவர் கற்றறிந்துபேசுஞ்சொல்லும் இன்பமாகலின் அவையிரண்டிற்கும் பொதுப்படச்சொல்லென்றார். தீண்டல்கேட்டல்களினால் உண்டாகும் இன்பங்களைத் தீண்டல் கேட்டலெனலால் ஆகுபெயர்கள். (௫)

குழலினி தியாழினி தென்பர்தம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

(ப-ரை.) தம்மக்கள் - தம்முடைய புதல்வரது, மழலைச்சொல்-குதலைச்சொற்களை, கேளாதவர் - கேட்காதவர், குழல் - குழலினிசை, இனிது - இனியது. யாழ் - வீணையினிசை, இனிது - இனியது, என்ப - என்றுசொல்லுவார். எ-று.



(க-ரை.) தம்மக்கள் மழலைச் சொற்களைக் கேளாதவர்கள் புல்லாங்குழலிசை யினிதென்றும், வீணையிசையினிதென்றுஞ்சொல்லுவர் என்பதாம்.

(வி-ரை.) குழல் - யாழ் - அவற்றினிசையைக் காட்டுதலால் ஆகுபெயர்கள். கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல் இனிதென்று சொல்

லுவரென்றதாயிற்று. இனியவை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்பு வகையாற் சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் இம்மைப்பயன் சொல்லப்பட்டது.] (௬)

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

(ப-ரை.) தந்தை – தகப்பனானவன், மகற்கு – புதல்வனுக்கு, ஆற்றும் – செய்யத்தகும், நன்றி – நன்மையாவது, அவையத்து – (கற்றவரது) சபையினிடத்து, முந்தியிருப்ப – (அவரினும்) மேற்பட்டிருக்க, செயல் – [கல்வியை யுடையவ]னாக்குதலாம். எ-று.

(க-ரை.) பிதா பிள்ளைக்குச்செய்யும் உதவியானது சபையில் கல்வியில் கல்வியில் வல்லவனென முற்பட்டிருக்கச்செயல் என்பதாம்.

(வி-ரை.) பொருளுடையவனாக்கல் முதலானவை பின்னே துன்பத்தைத் தரினுந் தரும். ஆதலால் அவை நன்மையாகா வென்பது கருத்து, [இதனால் தந்தைகடன் சொல்லப்பட்டது.] (௭)

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

(ப-ரை.) தம்மக்கள் – தம்மக்களது, அறிவுடைமை – அறிவுடையரா யிருக்கையானது, மாநிலத்து – பெரியநிலத்தில், மன்-நிலைபெற்ற, உயிர்க்கெல்லாம் – உயிர்களுக்கெல்லாம், தம்மின் – தமக்கு (இனியதாதலினும்) இனிது – இனிதாயிருக்கும். எ-று.

(க-ரை.) தம்மக்க ளறிவுடைமையானது தம்மைவிட உலகத்துயிர்களுக்கெல்லா மினிதாயிருக்கும் என்பதாம்.

(வி-ரை.) இங்கே அறிவென்றது இயற்கை யறிவோடு கூடிய – கல்வியறிவை அறிவுடைமைகண்டு மகிழ்தற்குரியவர் அறிவுடையோ ராதலால் இங்கேமன்னுயிரென்றது அவர்மேல்நின்றது. [இதனால் தந்தையினும் உலகத்தார் மகிழ்வரென்பது சொல்லப்பட்டது.] (௮)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(ப-ரை.) தன்மகனை – தன்புத்திரனை, சான்றோனென – (கல்வி கேள்விகளினாலே) நிறைந்தோனென்று (அறிவுடையோர்) சொல்ல, கேட்டதாய் – கேட்டதாயானவள், ஈன்றபொழுதின் – பெற்றகாலத்தினும், பெரிதுவக்கும் – மிகமகிழ்வாள். எ-று.

(க-ரை.) தன்மகனைக் கல்வியில் வல்லவனெனக் கேட்டதாயானவள் பெற்றகாலத்திலும் பெருமகிழ்ச்சி யடைவாள் என்பதாம்.

(வி-ரை.) மடியின்மேலே கண்டதனால் உண்டாகிய பொதுவான மகிழ்ச்சியினும் நிறைந்தகல்வி கேள்விகளை யுடையவனெனக் கேட்டதனால் உண்டாகிற சிறப்பான மகிழ்ச்சி பெரிதாகலின் பெரிதுவக்குமென்றும், பெண்மைக்குணத்தினால் தானாக அறியமாட்டாமையால் கேட்டதாயெனவும் சொல்லினர், அறிவுடையோரென்பது வருவிக்கப்பட்டது. சான்றோரென்று அறிந்துசொல்லுதற்கு உரியவர்அவராகையால், [தாய் மகிழ்ச்சிக்கு அளவில்லாமையால் அது இதனால் வேறெடுத்துச் சொல்லப்பட்டது.] (௯)

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

(ப-ரை.) தந்தைக்கு – (தன்னைக் கல்வியுடையவனாக்கிய) தகப்பனுக்கு, மகன் – புத்திரன், ஆற்றும் – செய்யும், உதவி – எதிர்நன்றியானது (தன்னறிவையும் ஒழுக்கத்தையும் கண்டவர்) இவன் – இவனது, தந்தை – தகப்பன், (இவனைப் பெறுதற்கு) என் – என்ன தவத்தை, நோற்றான்கொல் – செய்தானோ, என்னும் – என்கிற, சொல் – சொல்லை, உண்டாக்குதலாம். எ-று.

(க-ரை.) பிள்ளை பிதாவுக்குச் செய்யும் உதவியானது இவன்பிதா இவனைப்பெறுதற் கென்ன தவஞ் செய்தானோவென்று பிறர்சொல்லுஞ் சொல்லை யுண்டாக்கல் என்பதாம்.

(வி-ரை.) சொல்லென்பது உண்டாக்குதலாகியதன் காரணத்தைக் குறிப்பித்து நின்றது, உண்டாக்குதல் அப்படிச்சொல்லநடத்தல். [இதனால் புதல்வனது கடன்சொல்லப்பட்டது.] (௧௦)

ஏழாம் அதிகாரம் புதல்வரைப்பெறுதல்
முற்றிற்று.

---

எட்டாம் - அதிகாரம்

# அன்புடைமை.

அஃதாவது: அம்மனைவி புதல்வர் முதலாகிய சம்பந்த முடையவ ரிடத்து ஆசையுடையவனாயிருக்கை. அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும், இல்லறமினிதுநடத்தலும் பிறவுயிர்களின்மேல் அருள்பிறத் தலும் அன்பின்பயனாதலால் இது வேண்டப்பட்டது.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

(ப-ரை.) அன்பிற்கும் – அன்பினுக்கும், அடைக்கும் – (பிறரறியா மல்) அடைத்துவைக்கும், தாழ் – தாழும், உண்டோ – உளதோ, (தம்



மால்) அன்புசெயப்பெற்றவரது துன்பங்கண்டவிடத்தே (பொழிகின்ற) ஆர்வலர் – அன்புடையாரது, புன்கணீர் – புல்லியகண்ணீரே, பூசறரும் – (உள்ளே இருக்கிற) அன்பினை எல்லாரும் அறியத் (தூற்றும்) ஆத லால். எ-று.

(க-ரை.) அன்புகொள்ளப்பட்டவரது துன்பங்கண்டபோதே, அன் புடையவர் கண்ணீரே உள்ளிருந்த வன்பைக்காட்டும் என்பதாம்.

(வி-ரை.) உம்மை அன்பைச் சிறப்பித்து நின்றது. காட்சியளவை யால் அறியப்படாதாயினும் அநுமானவளவையால் வெளிப்படுமென்ப தாம். [இதனால் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது.] (க)

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

(ப-ரை.) அன்பிலார் – அன்பிலாதவர், (பிறருக்குப் பயன்படாமை யால்) எல்லாம் – எல்லாப்பொருள்களாலும், தமக்கு – தமக்கே, உரி யர் – உரியராவர், அன்புடையார் – அன்புடையவர், (அவைகளாலே மா த்திரமல்லாமல்) என்பும் (தம்) முடம்பாலும், பிறர்க்கு – பிறருக்கு, உரியர் – உரியராவார். எ-று.

(க-ரை.) அன்பிலார் எல்லாப்பொருளையுந் தமக்கே யுரியராவர், அன்புடையவர் பிறர்க்கு எலும்பையுங்கொடுக்க வுரியராவர் என்பதாம்.

(வி-ரை.) தமக்கேயென்ற பிரிநிலை யேகாரம். வருவிக்கப்பட்டது. என்பு – உடம்பிற்காதலால் ஆகுபெயர். [என்புமுரியராகுகை புறவுக் காகத் துலையேறியசிபியும் தனமுதுகெலும்பை இந்திரனுக்கு கொடுத்த

நதிசியு முதலாயினோரிடத்தே காண்க.] (௨)

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(ப-ரை.) ஆருயிர்க்கு-பெருதற்குரிய மனிதருயிர்க்கு, என்போடு-உடம்போடு, இயைந்த – உண்டாகிய, தொடர்பு – சம்பந்தத்தை, அன்போடு – அன்போடு, இயைந்த – பொருந்துதற்குவந்த, வழக்கு – வழியின்பயனாகும், என்ப – என்று (அறிந்தோர்) சொல்லுவார். எ-று.

(க-ரை.) மக்களுயிருக் குடலோடுண்டாகிய சம்பந்தத்தை அன்போடு பொருந்தவந்த பயனென்பர் என்பதாம்.

(வி-ரை.) மனிதப்பிறப்பி னருமை அதனையடைந்த உயிர்களின் மேல் ஏற்றப்பட்டது. வழக்கென்பது அதன்பயனை யுணர்த்தலால் ஆகுபெயர், உடம்போடு கூடியல்லாமல் அன்புசெய்யக்கூடாமையால், அது செய்தற்பொருட்டு இத்தொடர்ச்சியுண்டாயிற்றென்பதாம் ஆகவே [இத்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமை யென்றாயிற்று.] (௩)

அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

௭௬ அ: ஆம் - அதி - அன்புடைமை.

(ப-ரை.) அன்பு – (சம்மந்தமுடையவரிடத்தே செய்யப்பட்ட) அன்பானது (அத்தன்மையினாலே) ஆர்வமுடைமை (பிறரிடத்தே) ஆசையையுடையவனாயிருக்கையை, ஈனும் – (ஒருவனுக்கு) தரும், அது-அவ்விருக்கையானது, நண்பென்னும்-இவனுக்கு யாவரும்) நட்பினரென்று சொல்லப்படுகிற, நாடாச்சிறப்பு-அளவிறந்தசிறப்பை, ஈனும்-தரும். எ-று.

(க-ரை.) அன்பானது ஆசையைத்தரும், அது சிநேகத்தையும் தரும் என்பதாம்.

(வி-ரை.) எல்லாரும்நட்பினராதல் எல்லாப்பொருளையும் அடைதற்குக் காரணமாதலின் அதனை நாடாச்சிறப்பென்றார். (௪)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(ப-ரை.) வையகத்து – இவ்வுலகத்தில், இன்புற்றார்—(இல்வாழ்க்கையிலேநின்று) இன்பத்தை யனுபவித்தவராகி, எய்தும்—(அதன் பின்னே விண்ணுலகத்திற் சென்று) அடையும், சிறப்பு – பேரின்பத்

இனை, அன்பு - அன்பை, உற்று - உடையவராகி, அமர்ந்த - (இல்லறத்தோடு) பொருந்திய, வழக்கு - வழியின் பயனாகும், என்ப - என்று (அறிந்தோர்) — சொல்லுவார். எ - று.

(க-ரை.) விண்ணுலகிலடையும் பேரின்பத்தை மண்ணுலகில் இல் வாழ்க்கையில் பொருந்தியவன் பின்பயனென்பர் என்பதாம்.

(வி-ரை.) இல்வாழ்க்கையிலே நின்று மனைவியோடும், மக்களோடும், சுற்றத்தோடும், கூடி இன்பமுற்றவர் தம்மாலே செய்யப்பட்ட வேள்வித் தொழிலினாலே தேவராய்ப்பிறந்து அங்கேயும் இன்பத்தை அநுபவிப்பாராகலின் இன்புற்று செய்தலுஞ்சிறப்பென்றார். தவத்தினாலே துன்பமுற்று அடையப்படுவதாகிய விண்ணுலக வின்பத்தை இங்கேயும் இன்பமுற்று அடைதல் அன்பாலன்றி இல்லை என்பதாம். (௫)

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

(ப-ரை.) அறியார் - அறியாதவர் (சிலர்) அன்பு - அன்பானது, சார்பு — துணையாவது, அறத்திற்கே - தருமத்துக்கே, என்ப - என்று சொல்லுவார், மறத்திற்கும் - மறத்தை நீக்குதற்கும், அஃதே - அவ்வன்பே, துணை - துணையாவது. எ - று.

(க-ரை.) அறியாதவர் அறத்திற்கே யன்பு துணையென்பர், மறத்தை நீக்குதற்கும் அவ்வன்பே துணையாம் என்பதாம்.

(வி-ரை.) ஒருவனாலே செய்யப்பட்ட பகைமைபற்றி உள்ளத்திலே மறந்தோன்றியவிடத்தே அவனை நட்பாகநினைந்து அவன்மேல் அன்பு செய்ய அது நீங்குமாதலின் மறத்தை நீக்குதற்கு துணையாமென்றற்கு மறத்திற்குமஃதே துணையென்றார். மறத்திற்குமஃதே துணையென்றதற்கு அஃது ஆகும் - அது - அன்புடைமை, என்னுதற்குப் பெண்டீர் புதல்வர் முதலாயினோரை நல்வழிப்படுத்தும்பொருட்டு அவரைக்குறித்துச் செய்யப்படும் கோபத்துக்கும் அன்பே துணையாமெனப் பொருளுரைப்பினும் ஆம். [இவை ஐந்துபாட்டாலும் அன்பினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௬)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

(ப-ரை.) என்பிலதனை — எலும்பில்லாதவுடம்பை, வெயில்போல — வெயிலானது கடிதல்போல, அன்பிலதனை — அன்பில்லாதவுயிரை,

அறம் - அறக்கடவுள், காயும் - சுவோன். எ-று.

(க-ரை.) என்பில்லாப்புழுக்களைச் சூரியன் சுடுதல்போல அன்பில்லாவுயிர்களை யறக்கடவுள் சுடும்-என்பதாம்.

(வி-ரை.) ஏ - அசைநிலை. என்பிலதென்றதனுல் உடம்பென்றும், அன்பிலதென்றதனுல் உயிரொன்றும், கொள்ளப்பட்டன. வெறுப்பில்லாமல் எங்கும ஒருதன்மைத்தாகிய வெயிலின்முன்னே புழுமுதலானவை கெடுதல்போல், அப்படிப்பட்ட அறத்தின்முன்னே அன்பில்லாதவுயிர் தன்னியல்பாற் கெடுமென்பதாம். (எ)

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

(ப-ரை.) அன்பகத்தில்லாவுயிர் — மனதிலன்பில்லாத வுயிரானது, வாழ்க்கை — (இல்லறத்தோகூடி) வாழ்தலானது, வன்பாற்கண் — வன்பாலென்னுநிலத்திலே, வற்றன்மரம் — உலர்ந்தமரமானது, தளிர்த்தற்று — தளிர்த்தாற்போலும். எ-று.

(க-ரை.) அன்பில்லா வுயிர்வாழ்க்கையானது வன்னிலத்திற் பட்டமரந் தளிர்த்தாற்போலும் என்பதாம்.

(வி-ரை.) கூடாதென்பதாம். வன்பால், கடினநிலம். (அ)

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பண்பி லவர்க்கு.

(ப-ரை.) யாக்கையகத்து - உடம்பினகத்திலே நின்ற; உறுப்பு- (இல்லறத்துக்கு) அங்கமாகிய, அன்பிலவர்க்கு - அன்பில்லாதவர்க்கு, புறத்து - மற்றைப்புறத்திலேநின்ற, உறுப்பெல்லாம் - அங்கமாவனவெல்லாம், எவன் - (அவ்வறஞ்செய்தலிலே) என்னவுதவியை, செய்யும் - செய்யும். எ-று.

(க-ரை.) உள்ளன்பில்லாதார்க்குப் பிறவுறுப்புகளிருந்தும் பயனில்லை என்பதாம்.

(வி-ரை.) புறத்துறுப்பாவன, இடம்பொருளேவலாதிகளாம் அன்பாகிய துணைபோகூடாதவிடத்தே அவைகளாற் பயனில்லாமையால் எவன்செய்யுமென்றார் [உறுப்புப்போலுதவால் உறுப்பெனப்பட்டது.]

# ௭௮ ௯-ஆம் - அதி - விருந்தோம்பல்.

அன்பின்வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(ப-ரை.) அன்பின்வழியது - அன்புமுதலாக அதன்வழிநின்ற, உடம்பே உயிர்நிலை - உயிர்நின்ற உடம்பாகும், அஃதிலார்க்கு - அவ்வன்பில்லாதார்க்குள்ள, உடம்பு-உடம்புகளானவை, என்பு-எலும்பை, தோல்-தோலினாலே, போர்த்த - போர்க்கப்பட்டனவாம், உயிர்நின்ற வுடம்பாகா. எ-று.

(க-ரை.) அன்போடு பொருந்திய வுடலே யுயிருள்ள வுடலாகும், அவ்வன்பில்லா வுடலே யுயிரற்றவுடலாகும் என்பதாம.

(வி-ரை.) இல்லறம் பயன்படாமையால் அப்படிப்பட்ட வுடம்புகளாயின. [இவை நான்குபாட்டாலும் அன்பில்லாதவிடத்தே உண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது] (ய)

எட்டாம் அதிகாரம் அன்புடைமை
முற்றிற்று.

---

ஒன்பதாம் - அதிகாரம்.

# விருந்தோம்பல்.

அஃதாவது: விருந்தினரை யுபசரித்தல், தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான், என்கிற ஐவகையோரை உபசரித்தல்களிலே முன்னவையிரண்டும் கண்ணாற் காணப்படாதவரை நினைத்துச் செயப்படுவனவாதலாலும், பின்னவை இரண்டும் பிறர்க்குக் கொடுத்தலல்லாமையாலும், நடுநின்றவிருந்தோம்பல் சிறப்பை யுடையதாகி அவ்வில்லறங்களுக்கு முதலாயிற்று. வேறுபாடில்லாத அன்பையுடைய கணவனுமனையாளும் கூடியல்லது செய்யக்கூடாமையால் இது அன்புடைமையின் பின்வைக்கப்பட்டது.

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(ப-ரை.) (மனைவியோடே காட்டினிடத்தேசெல்லாமல்) இல்-இல்லினிடத்தே, இருந்து - இருந்து, ஓம்பி - (பொருள்களைக்)காப்பாற்றி, வாழ்வதெல்லாம - வாழுஞ் செய்கைகளெல்லாம், விருந்து - விருந்தினரை, ஓம்பி - உபசரித்து, வேளாண்மை - உபகாரத்தை, செய்தற்பொருட்டு - (அவருக்குச்) செய்தற்பொருட்டாம். எ-று.

(க-ரை.) இல்வாழ்க்கையில் வாழ்வதெல்லாம் விருந்ினரைக் காப் பாற்றும்பொருட்டு என்பதாம்.

(வி-ரை.) எனவே - உபகாரஞ் செய்யாதவிடத்தே இல்லிருத்த லாலும், பொருள்காப்பாற்றலாலும உண்டாகிற துன்பச் செயல்களுக் கெல்லாம் பயனில்லை என்பதாம். (க)

## ௯-ஆம் - அதி - விருந்தோம்பல். ௭௧

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(ப-ரை.) (உண்ணப்படும்பொருள் சாவாமருந்தெனினும் - அமிர்த மாயினும், விருந்து - (தன்னைநோக்கிவந்த) விருந்தினர், புறத்ததா-தன் வீட்டின்புறத்திருக்க, தானுண்டல் - தானே புண்ணுதல், வேண்டற் பாற்றன்று - விரும்பப்படுமுறைமையை யுடையதன்றும். எ-று.

(க-ரை.) வந்தவிருந்தினரைப் புறம்வைத்துத் தேவாமிர்தமாயினு முண்ணப்படாது என்பதாம்.

(வி-ரை.) சாவாமருந்து சாவாமைக்குக்காரணமாகியமருந்து.[இவை இரண்டுபொட்டாலும் விருந்தோம்பலின் சிறப்புச்சொல்லப்பட்டது. (உ)

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(ப-ரை.) வருவிருந்து - தன்னைநோக்கி வந்தவிருந்தை, வைகலும்-நாளுநாளும், ஓம்புவான் - உபசரித்து வருபவனது, வாழ்க்கை - இல்வா ழ்க்கையானது, பருவந்து - (வறுமையாய்) வருந்தி, பாழ்படுதலின்று- கெடுதலில்லை. எ-று.

(க-ரை.) வந்தவிருந்தினரைக் காப்பாற்றுபவன் வாழ்க்கை கெடுத லில்லை என்பதாம்.

(வி-ரை.) தினந்தோறும் விருந்தோம்புவானுக்கு அதனாலே பொ ருள்குறையாமல் மேலுமேலும் வளருமென்பதாம். (ந)

அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

(ப-ரை.) செய்யாள் - திருமாதானவள், முகனமர்ந்து - முகமினிய னாய், நல்விருந்து - தகுந்த விருந்தினரை, ஓம்புவான் - காப்பவனது,

இல் – வீட்டினிடத்தே, அகனமர்ந்து – மனமகிழ்ந்து, உறையும் – வாழ்ந்துகொண்டிருப்பான். எ-று.

(க-ரை.) விருந்தினரைக் காப்பவன்வீட்டில் – இலக்குமி வாசம் பண்ணுவாள் என்பதாம்.

(வி-ரை.) மனமகிழ்தற்குக் காரணம் – தன்செல்வம் நல்வழிப்படுதலாம். [தகுதியாவது – ஞானத்தினாலும், ஆசாரத்தினாலும், உயர்தல், பொருள்வளர்தற்குக் காரணம் சொல்லியபடி.] (ச)

**வித்துமிடல் வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி**
**மிச்சின் மிசைவான் புலம்.**

(ப-ரை.) விருந்தோம்பி – (முன்னே) விருந்தினரை புசிப்பித்து, மிச்சில் – மிகுதியை, மிசைவான் – (பின்) உண்பவனது, புலம் – விளைநிலத்துக்கு, வித்தும் – விதையும்; இடல்-இடுதலும், வேண்டுங்கொல்-வேண்டுமோ? வேண்டுவதில்லை. எ-று.

# ருய கூ-ஆம் - அதி - விருந்தோம்பல்.

(க-ரை.) விருந்தினரைக்காப்பவன் விளைநிலத்தானே விளையும் என்பதாம்.

(வி-ரை.) ஓ – அசைநிலை, எனவே தானேவிளையுமென்பதாயிற்று. [இவைமூன்றுபாட்டாலும் விருந்தோம்புவார் இம்மையிலே அடையும் பயன் சொல்லப்பட்டது.] (ரு)

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு.

(ப-ரை.) செல்விருந்து-(தன்னிடத்திலே) வந்தவிருந்தை, ஓம்பி-உபசரித்து, வருவிருந்து – (பின்) வரும்விருந்தை, பார்த்து – எதிர்நோக்கி, இருப்பான் – (தான் அதனோடுண்ண) விருப்பவன், மறுபிறப்பிலே (தேவனாய்) வானத்தவற்கு – வானிலுள்ளவருக்கு, நல்விருந்து – நல்ல விருந்தாவான். எ-று.

(க-ரை.) வந்தவிருந்தாளிகளைக் காப்பாற்றி வரும்விருந்தாளிகளுக்கெதிர்பார்ப்பவன் தேவர்களுக்கு விருந்தாளியாவான் என்பதாம்.

(வி-ரை.) நல்விருந்து – கிடைத்தற்கரியவிருந்து, [இதனாலே மறுமையில் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (சு)

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

(ப-ரை.) வேள்விப்பயன் - (விருந்தினரை யுபசரித்தலாகிய) வேள்வியினதுபயன், இனைத்துணைத்தென்பது - இன்னவளவினதென்பதாகிய, ஒன்றில்லை - ஓரளவினையுடையதன்று, விருந்தின - அவ்விருந்தினரது, துணை - (தகுதி) யளவே, துணை - (அதற்கு) அளவாம். எ-று.

(க-ரை.) விருந்தினரைக் காக்குமுதவி யிவ்வளவென்பதொன்றில்லை. விருந்தினர்க்குத் தகுதியளவேயாம் என்பதாம்.

(வி-ரை.) தேவயாகம், பிதிருயாகம், மனிதயாகம், பூதயாகம், பிரமயாகம் என்கிற ஐம்பெருவேள்வியில் மனிதயாகம் என்னப்பட்ட விருந்தோம்பலொன்றாகலின் வேள்வியென்றும், பொருளளவு சிறிதாயினும் சற்பாத்திரத்திலே சேர்ந்தாயின் மிகப்பெரிதாமாதலின் இனைத்துணைத்தென்பதொன்றில்லையென்றும் சொல்லினர், [இதனால் இருமையும் பயத்தற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (எ)

பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

(ப-ரை.) விருந்து - விருந்தினரை, ஓம்பி - (இனையப்பொருளைக் கொண்டு) உபசரித்து, வேள்வி - அவ்வேள்விப்பயனை, தலைப்படாதார் - அடையும் அறிவிலாதவர், பரிந்தோம்பி - (அப்பொருளை) வருந்திக்காத்து (பின்பு) அதனையிழந்து, பற்றற்றேம் - (இப்போது) பற்றுக்கோடிலமாயினேம், என்பர் - என்றிரங்குவார், எ-று.



(க-ரை.) விருந்தாளிகளைக் காப்பாற்றாதார் பொருளைக்காப்பாற்றி யிழந்தோமென்பார்-என்பதாம்.

(வி-ரை.) சம்பாதிக்கப்பட்ட பொருளைக்காத்தலும் கஷ்டமாதலால் பரிந்தோம்பியென்றார், வேள்வி அதன்பயனை உணர்த்தலால் ஆகுபெயர். (அ)

உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

(ப-ரை.) உடைமையுள் - (பொரு) ளுடையராயிருக்குங்காலத்து,

இன்மை - வறுமையாவது, விருந்தோம்பல் — விருந்தினரை யுபசரித்தலை, ஓம்பா - இகழும், மடமை - பேதைமையாகும், {அது அறிந்தோரிடத்திராது} மடவார்கண்-அறிவிலாதவரிடத்து,உண்டு-உண்டு, எ-று.

(க-ரை.) செல்வத்துள் வறுமையாவது விருந்தினரை யுபசரியாமை, அது அறிவில்லாரிடத்துண்டு-என்பதாம்.

(வி-ரை.) மடமையானது பொருளாலே கொள்ளும்பயனை இழப்பித்து உடைமையை இல்லாமையாக்கலால் அதை வறுமையாக உபசரித்தார். பேதைமையால் விருந்தோம்பலை இகழ்ந்தால் பொருளிருந்தவிடத்தும் அதனால் பயனில்லை யென்பதாம். [இவை யிரண்டுபாட்டானும் விருந்தோம்பாவிடத்தும் உண்டாம் குற்றஞ் சொல்லப்பட்டது.]

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(ப-ரை.) அனிச்சம் — அனிச்சப்பூவானது, மோப்ப - மோந்தவிடத்தே, குழையும் - வாடும், விருந்து - விருந்தினர், முகந்திரிந்து - முகம் வேறுபட்டு, நோக்க - பார்க்க, குழையும் - வாடுவர். எ-று.

(க-ரை.) அனிச்சப்பூ மோந்தவிடத்துவாடும், விருந்து முகம்வேறுபட்டுப் பார்க்க வாடும்-என்பதாம்.

(வி-ரை.) தூரத்திலே கண்டவிடத்து முகமலர்ச்சிகாட்டலும்,அது கண்டு சமீபித்துவந்தவிடத்து இன்சொற் சொல்லுதலும், அதுகேட்டு உடன்பட்டபோது உபசாரஞ்செய்தலும், ஆகிய-விருந்தோம்புவார்க்கு அவசியமிருக்கவேண்டிய மூன்றினுள்-முதலாகிய முகமலர்ச்சியில்லாதபோது தூரத்திலிருந்தே வாடிநிற்குதலால் தீண்டியவிடத்தல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியராயிருப்பரென்பதாம். [இதனால் விருந்தோம்புவார்க்கு முதலிலே முகமலர்ச்சி வேண்டுமென்பது சொல்லப்பட்டது.]

ஒன்பதாம் அதிகாரம் விருந்தோம்பல்
முற்றிற்று.

---

11

பத்தாம் - அதிகாரம்.

## இனியவைகூறல்.

அஃதாவது: மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிற இனிய சொல்லுகளைச் சொல்லுதலாம். இதுவும் விருந்தோம்புவோர்க்கு அவசியம் வேண்டியதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது.

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(ப-ரை.) இன்சொல் - இனிய சொற்களாவன, ஈரமளைஇ - அன்போடுகலந்து, படிறிலவாம் - வஞ்சனையில்லனவாயிருக்கின்ற, செம்பொருள் - அறத்தினை, கண்டார் - அறிந்தவரது, வாய்ச்சொல் - வாய்ச்சொற்களாகும். எ-று.

(க-ரை.) அறத்தின்வழியை யறிந்தவர் வாய்ச்சொற்களே இனிய சொற்களென்பதாம்.

(வி-ரை.) ஆல் - அசை. அன்போடுகலத்தல் அன்புடைமையை வெளிப்படுத்தல், வஞ்சனையில்லாமை, மெய்மை, மெய்யுணர்ந்தவர், கருத்துக்கெல்லாம் செம்மையுடையதாய்த் தோன்றலாலே செம்பொருளெனப்பட்டது. இலவாஞ்சொல்லெனக் கூட்டுக. [இதனால் இனிய சொல்லுக்கு இலக்கணம் சொல்லப்பட்டது.] (க)

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின்.

(ப-ரை.) முகனமர்ந்து - (கண்டபொழுதே) முகமலர்ந்து, இன்சொலனாக - (அதனோடு) இன்சொல்லையு முடையவனாக, பெறின்-பெற்றால், (அது) அகனமர்ந்து - மனமகிழ்ந்து, ஈதலின் - (ஒருவருக்குவேண்டியபொருளைக்) கொடுத்தலினும், நன்றே - நல்லதாம். எ-று.

(க-ரை.) முகமலர்ந்தினிய சொற்களைச் சொல்லுவானாகில் அகமலர்ந்து கொடுத்தலினு நல்லது-என்பதாம்.

(வி-ரை.) முகமலர்ச்சியோடு கூடிய வின்சொல் கொடுத்தல்போல் பொருள்வசத்ததாகாமல் தன்வசத்ததாயிருந்தாலும் தருமசிந்தையுடையவர்க்கல்லது சுபாவமாக இராதாகையால் அதனினும் அறிதென்னும் கருத்தால் இன்சொலனாகப் பெறினென்றார். (உ)

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

(ப-ரை.) அறம் - தருமமானது, முகத்தானமர்ந்து - (கண்டபோ

தே) முகத்தால்விரும்பி, இனிதுநோக்கி – இனிதாகப்பார்த்து (பின் சேர்ந்தவிடத்து) அகத்தானும் – மனத்துடனுகிய, இன்சொலினதே- இனியசொற்களைச் சொல்லுதலினிடத்தே. எ-று.



(க-ரை.) தருமமானது இன்சொல்லினிடத்தே என்பதாம்.

(வி-ரை.) அறமானது, ஈகையினிடத்தே உள்ளதல்ல வென்பதாம். [இவை யிரண்டோட்டாலும் முகமலர்ச்சியோடுகூடிய இன்சொல் முன்னுகவே பற்றிக்கொள்ளுதலால் விருந்தோம்பலிலே சிறந்ததென்பது சொல்லப்பட்டது.] (ங)

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

(பதை.) யார்மாட்டும் – எல்லாரிடத்தும், இன்புறூஉம் – இன்பத்தை மிகுவிக்கும், இன்சொலவர்க்கு – இனியசொற்களை யுடையவர்க்கு, துன்புறூஉம் – துன்பத்தை மிகுவிக்கும், துவ்வாமை - வறுமையானது, இல்லாகும் - இல்லை. எ-று.

(க-ரை.) இன்சொற்களையுடையவர்க்குத் துன்பமில்லை என்பதாம்.

(வி-ரை.) அப்படிப்பட்ட இன்சொல்லை யுடையவர்க்கு யாவரும் நட்பினராதலால் எல்லாச் செல்வமும் பெறுவரென்பது கருத்து. (ச)

பணிவுடைய னின்சொல னாதலொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(ப-ரை.) ஒருவற்கு – ஒருவனுக்கு, அணி – ஆபரணமாவது, பணிவுடையன் – (பெரியோரிடத்தே) வணக்கமுடையவனுகி, இன்சொலனாதல் – (எல்லாரிடத்திலும்) இனியசொல்லையுடையவனுயிருக்கையாம், பிற – இவ்விரண்டுமல்லாமல், உடம்பில் அணியுமற்றை யாபரணங்கள் அல்ல – ஆபரணங்களாகாவாம். எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு இன்சொல்லே ஆபரணமென்பதாம்.

(வி-ரை.) வணக்கமும் இன்சொல்லுக்கு இனமாதலால் உடன் கூறினர். மற்று – அசை. தன்னின்வேறு யிருக்கையால் அணியும் ஆபரணங்களைப் பிறவென்றும், இவைபோல் பேரழகு செய்யாமையால்

அல்லவென்றும் சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் இன்சொல்லுகளைச் சொல்வார்களுக்கு இம்மைப்பயன் சொல்லப்பட்டது.] (௬)

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(ப-ரை.) நல்லவை-(பொருளினாலே பிறர்க்கு) நன்மையைத்தருஞ் சொற்களை, நாடி - (மனத்தால்) ஆராய்ந்து, இனிய - இனிமையுள்ளனவாக, சொலின் - (ஒருவன்) சொல்லுவானாயின், (அவனுக்கு) அல்லவை - பாவங்கள், தேய - தேய, அறம் - தருமமானது, பெருகும் - வளரும். எ-று.

(க-ரை.) ஒருவன் இன்சொற் சொல்லுவானாகில் பாவந்தேயப்புண்ணியம் வளரும். என்பதாம்.

அஅ. ௰ - ஆம் - அதி - இனியவைகூறல்.

(வி-ரை.) தேய்தலாவது - பாவம் தன்பகையாகிய அறம் வளர்தலால் தனக்கு இடமில்லாமல் குறைதல், நல்லசொற்களை ஒருவன் நாடச்சொல்லுமிடத்தும் கடினமாகச்சொல்லின் அறமாகாதென்பதாம். [இதனால் மறுமைப்பயன் சொல்லப்பட்டது.] (௭)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(ப-ரை.) பயனீன்று - (பொருளினாலே பிறர்க்கு) நன்மையைச் சேர்த்து, பண்பின் - (இனிமைக்) குணத்தினின்றும், தலைப்பிரியா - நீங்காத, சொல் - சொற்களானவை, (ஒருவனுக்கு) நயனீன்று - (இம்மைக்கு) நீதியையுமுண்டாக்கி, நன்றிபயக்கும் - (மறுமைக்கு) அறத்தையும் தரும். எ-று.

(க-ரை.) இனிய சொற்களானவை நீதியையும், தருமத்தையும் தரும் என்பதாம்.

(வி-ரை.) நீதி உலகத்தோடு பொருந்துதல். (௭)

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(ப-ரை.) சிறுமையுணீங்கிய - (பொருளினாலேபிறர்க்கு) வருத்தஞ் செய்யாத, இன்சொல் - இனிய சொற்களானவை, (ஒருவனுக்கு) மறு

மையுமிம்மையும் – வருபிறப்பிலு மிப்பிறப்பிலும், இன்பம் – இன்பத்தை, தரும் – கொடுக்கும். எ-று.

(க-ரை.) இன்சொற்களானவை இருபிறப்பிலு மின்பத்தைத்தரும் என்பதாம்.

(வி-ரை.) மறுமையின்பம் பெரிதாகலின் முன்சொல்லப்பட்டது. இம்மை இன்பமாவது, உலகம் தனக்கு வசப்படுதலால் நற்பொருள்களை அடைந்து இன்புறுதல். [இவையிரண்டு பாட்டானும் இருமைப்பயன்களும் ஒருசேர அடைதல் உறுதி செய்யப்பட்டது.] (அ)

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(ப-ரை.) இன்சொல் – (பிறருடைய) இனிய சொற்களானவை, இனிதீன்றல் – (தனக்கு) இன்பந்தருதலை, காண்பான் – அநுபவித்தறிபவன் (அதுவிடுத்து) வன்சொல் – கடுஞ்சொற்களை, வழங்குவது – (பிறரிடத்தே) சொல்வது. எவன் – என்னபயனைக்குறித்து. எ-று.

(க-ரை.) இன்சொலின்பந் தருதலைக்காண்பவன் வன்சொற் சொல்லுவதென்ன என்பதாம்.

(வி-ரை.) கடுஞ்சொல் பிறருக்கும் இனி தன்றாகையால், அது சொல்லலாகாதென்பது கருத்து. (கூ)

## கக.-ம் அதி - செய்நன்றியறிதல். அதி:

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(ப-ரை.) இனிய – (அறமுண்டாகும்) இன்சொற்களும், உளவாக – (தன்னிடத்தே யுண்டாயிருக்க) அவற்றைச் சொல்லாமல், இன்னாத – (பாவமுண்டாகும்) கடுஞ்சொற்களை, கூறல் – (ஒருவன்) சொல்லுதல், கனி – (இனிய) கனிகளும், இருப்ப – (தன்னிடத்தே) யுண்டாயிருக்க (அவற்றைத்தின்னாமல்,) காய் – (இனிமையில்லாத) காய்களை, கவர்ந்தற்று – தின்பதனோடொக்கும். எ-று.

(க-ரை.) இன்சொலிருக்க வன்சொற் சொல்லுதல் கனியிருக்கக் காயைத்தின்றற்போலும் என்பதாம்.

(விசை.) உபமேயத்துக்குச்சொல்லப்பட்ட இனிமையும், இன்னாமையும் உபமானத்துக்கும் கொள்ளப்பட்டன. இனியகனிகள் ஔவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிர்தானவை இன்னாதகாய்கள் எட்டிக்காய்போல் நஞ்சானவை, கடுஞ்சொற்சொல்லுதல் முடிவிலே தனக்கே இனிதாகாதென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் கடுஞ்சொற்சொல்லுதலின் குற்றம்சொல்லப்பட்டது,] (கo)

பத்தாம் அதிகாரம் இனியவைகூறல்

முற்றிற்று.

---

## பதினோராம் - அதிகாரம்.

# செய்நன்றி யறிதல்.

அஃதாவது: தனக்கு பிறர்செய்த நன்றியை மறவாமை, இனிய சொற்களைச்சொல்லி இல்லறத்தின்வழுவாதவர்க்கு நன்றிமறத்தல்நீராக் குற்றமாதலின் இதனைநீக்குதற்பொருட்டு அதன்பின் வைக்கப்பட்டது.

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

(ப-சை.) செய்யாமல் - (தனக்கு முன்னொருதவியும்) செய்யாதிருக்க, செய்த - (ஒருவன் பிறனுக்குச்) செய்த, உதவிக்கு - உதவிக்கு, வையகமும் - மண்ணுலகத்தையும், வானகமும் - விண்ணுலகத்தையும், மாற்றல் - ஈடாகக்கொடுத்தலும், (ஒத்தல்) அரிது - அருமை. எ-று.

(க-சை.) ஒருவன் பிறருதவி வேண்டாதுசெய்தவுதவிக்கு மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையுந் தந்தாலுமொத்தலரிது என்பதாம்.

(வி-சை.) பிரதியுபகாரங்களுக் கெல்லாம், காரணமிருக்கையால் காரணமில்லாத இவ்வுபகாரத்திற்கு அவை போதாவாயின. (க)

அகூ கக - ஆம் - அதி - செய்நன்றியறிதல்.

காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது.

(ப-ரை.) காலத்தினால் - (ஒருவனுக்கு) முடிவுவந்த வளவிலே, செய்த - ஒருவன் செய்த, நன்றி - உபகாரமானது, சிறியதெனினும் - (தன்மைநோக்கச்) சிறிதாயிருந்ததாயினும், (அக்காலத்தை நோக்க) ஞாலத்தின் - நிலவுலகத்தினும், மாணப்பெரிது - மிகப் பெரிதாயிருக்கும். எ-று.

(க-ரை.) ஒருவன் காலத்திற்செய்தவுதவி சிறிதாயினும், அது உலகினும் பெரிது என்பதாம்.

(வி-ரை.) அக்காலத்தை நோக்கவேண்டுமே யல்லாமல், பொருட்சிறுமை நோக்கலாகாதென்பதாம், காலத்தினாலென்பது வேற்றுமை மயக்கம். (உ)

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

(ப-ரை.) பயன் - (தாம்செய்யும் உதவியைப்பெறுவோராலே தமக்குப்பின்வரும்) பயனை, தூக்கார் - ஆராய்தலிலராய், செய்த - செய்த, உதவி - உதவியாகிய, நயன் - நேசத்தை, தூக்கின் - ஆராயின், நன்மை - அதனன்மையானது, கடலின் - கடலினும், பெரிது - பெரிது. எ-று.

(க-ரை.) பின்வரும்பலனை யெண்ணாதுசெய்தவுதவியி னன்மைகடலினும்பெரிது என்பதாம்.

(வி-ரை.) [இவை மூன்றுபாட்டாலும் முறையே செய்யாமற் செய்ததும் ஆபத்துவேளையிற் செய்ததும், பிரயோசனத்தை ஆராயாமற்செய்ததும், அளவில்லாதவையாகுதல் சொல்லப்பட்டது.] (ங)

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

(ப-ரை.) தினைத்துணைநன்றி - (தமக்குத்) தினையளவதாகிய உபகாரத்தை, செயினும் - (ஒருவன்) செய்தானாயினும், அதனை - அவ்வளவதாகநினையாமல், பனைத்துணையா - பனையளவதாக, கொள்வர் - நினைப்பார், பயன் - அந்நினைப்பின்பயனை, தெரிவார் - அறிபவர். எ-று.

(க-ரை.) தினையளவு நன்றிசெய்தாலும் பனையளவு நன்றியாகக் கொள்வர் பெரியோர் என்பதாம்.

(வி-ரை.) தினைபனையென்பன - சிறுமை பெருமைகளுக்குக் காட்டும் அளவைகள், அந்நினைப்பின்பயனாவது அப்படிநினைப்போர்க்குவரும் பிரயோசனம். (ச)

உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(ப-ரை.) உதவி - (எதிர்செய்யும்) உதவியானது, உதவிவரைத்தன்று - (காரணமும், பொருளுங் காலமுமாகிய மூன்றையாலு முன் செய்த) உதவியளவினதன்று, உதவிசெயப்படார் - அவ்வுதவி செயப்பெற்றுக்கொண்டவரது, சால்பின்வரைத்து - தகுதியளவினதாம் எ-று.



(க-ரை.) உதவிக்களவில்லை உதவிசெய்யப் பெற்றுக்கொண்டவர் தகுதியளவே யளவாம் என்பதாம்.

(வி-ரை.) சால்பு எவ்வளவு பெரிதாயுள்ளது உதவியும் அவ்வளவு பெரிதாமென்றற்குச் சால்பின்வரைத்தென்றார். [இவை யிரண்டுபாட்டாலும் செய்யாமற் செய்வதுமுதவான மூன்றுமல்லாத உதவியும், அறிவோர்க்குச் செய்தவிடத்துப் பெரிதாமென்பது சொல்லப்பட்டது.] (ரு)

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

(ப-ரை.) துன்பத்துள் - துக்ககாலத்தில், துப்பாயார் - (தனக்கு) உதவியானவரது, நட்பு - சிநேகத்தை, துறவற்க - விடாதிருக்கக் கடவன்; மாசற்றார் - (அறிவொழுக்கங்களிற்) குற்றமற்றவரது, கேண்மை - உறவாந்தன்மையை, மறவற்க - மறவாதிருக்கக்கடவன். எ-று.

(க-ரை.) குற்றமற்றவர் சிநேகத்தைமறவாதிருக்கக்கடவன், துன்பகாலத்துதவியானவர் சிநேகத்தை விடாதிருக்கக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) இம்மைக்கு உறுதிசொல்லவந்தவர் மறுமைக்கும் உறுதி உடன்சொல்லினார்.] (சு)

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைப்பவர் நட்பு.

(ப-ரை.) தங்கண் - தம்மிடத்து உண்டாகிய, விழுமம் - துன்பத்தை, துடைத்தவர் - நீக்கினவரது, நட்பு - நட்பினை, எழுமை - (வினைப்பயன்றொடரு) மெழுமையினையுடைய, எழுபிறப்பும் - தம்மெழுவகைப் பிறப்பினும், உள்ளுவர் - (நல்லோர்) நினைப்பார். எ-று.

(க-ரை.) துன்பத்தை நீக்கினவர் சிநேகத்தை யெழுபிறப்பினு

நினைப்பர் பெரியோர் என்பதாம்.

(வி-ரை.) விரைவுதோன்றத் துடைத்தவரென்றார். எழுமையெழு பிறப்புமென்றதற்கு ஏழேழுதலைமுறையு மெனினுமாம். [இவை இரண்டுபாட்டாலும் நன்றிசெய்தவரது நட்பை விடலாகாதென்பது சொல்லப்பட்டது. (எ)

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

(ப-ரை.) நன்றி - (ஒருவன்முன்செய்த) நன்மையை, மறப்பது - மறந்துவிடுவது, நன்றன்று - (ஒருவனுக்கு) அறனல்ல, நன்றல்லது - (அவன்செய்த) தீமையை, அன்றே - செய்தபொழுதே, மறப்பது - மறந்துவிடுவது, நன்று - அறமாம். எ-று.

(க-ரை.) பிறர்செய்த நன்றியை மறப்பது தருமமல்ல, தீமையை மறப்பது தருமம் என்பதாம்.

(வி-ரை.) இதனால் நன்மையும் தீமையும் ஒருவனாலேசெய்யப்பட்ட விடத்து அவ்விரண்டிலே மறப்பதும் மறவாததும் வகுத்துச் சொல்லியவாறு. (அ)

## அஅ கஉ - ஆம் - அதி - நடுவுநிலைமைதல்.

கொன்றன்ன வின்னாசெயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

(ப-ரை.) (தமக்கு முன்னொரு நன்மைசெய்தவர்) கொன்றன்ன - (பின்) கொன்றாற்போலும், இன்னா - வெறுக்கப்படுமவைகளை, செயினும் - செய்தாராயினும், அவர்செய்த - அவர்செய்த, ஒன்று நன்று - அந்நன்மை யொன்றையும், உள்ள - நினைக்க, கெடும் (அவையெல்லாம்) இல்லையாம். எ-று.

(க-ரை.) நன்மை செய்தவர் கொன்றார்போலுந் தீமை செய்யினு நன்மை யொன்றைநினைக்கத் தீமையெல்லாங் கெடும் என்பதாம்.

(வி-ரை.) தினையளவு பனையளவாகக் கொள்ளப்படுதலினாலே அவ்வொன்றுமே அவைகளையெல்லாம் கெடுக்குமென்பதாம். [இதனால் நன்றல்லத்தை அன்றேமறக்கும் விதம் சொல்லப்பட்டது.] (கூ)

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(ப-ரை.) எந்நன்றி – எந்தவறங்களை, பெரியவறங்களை யென்றபடி) கொன்றார்க்கும் – கெடுத்தவர்க்கும், உய்வு-பாவத்தினீங்கும்வழி, உண்டாம் – உண்டாகும், செய்ந்நன்றி – (ஒருவன்) செய்த உபகாரத்தை, கொன்றமகற்கு – கெடுத்தமனிதனுக்கு, உய்வு – அப்பாவத்தி னீங்கும் வழி, இல்லை – இல்லை. எ-று.

(க-ரை.) எவ்வகைத்தருமங்களை யழித்தவர்களுக்கு மீட்டேறும்வழி யுண்டாம்; செய்ந்நன்றியைக் கெடுத்தவர்களுக் கீடேறும்வழி யில்லை யென்பதாம்.

(வி-ரை.) பெரிய அறங்களைச் சிதைத்தலாவது, மகளிர் கருவை யழிக்கைமுதலாகிய பாதகங்களைச்செய்தல். [இதனாலே செய்த நன்றியைக் கெடுத்தலின் கொடுமைசொல்லப்பட்டது.] (க0)

பதினோராம் அதிகாரம் செய்ந்நன்றியறிதல்
முற்றிற்று.

---

## பனிரெண்டாம் - அதிகாரம்

# நடுவு நிலைமை.

அஃதாவது: பகைவர் அயலோர் நட்பினர் இம்மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்பற்றநிலைமை, இது நன்றிசெய்தவரிடத்து அந்நன்றியை நினைத்தவிடத்தே கெமென்றே அவ்விடத்தும் கெடலாகாதென்றதற்குச் செய்ந்நன்றி யறிதலின்பின் வைக்கப்பட்டது.

தகுதியென வொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

கஉ-ஆம் - அதி - நடுவுநிலைமை. அக

(ப-ரை.) தகுதியெனவொன்றே – நடுவுநிலைமையென்ற சொல்லப்படும் ஓரறமுமே, நன்று – நன்றாகும், பகுதியால்-பகைவர், அயலோர்-(நட்பினரென்னும்) பிரிவுதோறும், பாற்பட்டு – (தன்) முறைமையை விடாது, ஒழுகப்பெறின் – நடக்கப்பெறின். எ-று.

(க-ரை.) நடுவு நிலைமையென்ற சொல்லும் அறமே நல்லது என்பதாம்.

(வி-ரை.) ஏகாரம் ஒன்று என்பதனோடு கூட்டப்பட்டது. பெறின் என்பது அவ்வொழுக்கத்தி னருமைதோன்றநின்றது. [இதனால் நடுவுநிலைமையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

(ப-ரை.) செப்பமுடையவன் - நடுவுநிலைமையை யுடையவனது, ஆக்கம் - செல்வமானது, சிதைவின்றி - (பிறர் செல்வம்போல்) அழிதலின்றி, எச்சத்திற்கும் - அவன் சந்ததியார்க்கும், ஏமாப்பு - உறுதியாதலை, உடைத்து - உடையதாம்: எ-று.

(க-ரை.) நடுவுநிலைமையுடையவன் செல்வமானது அவன் சந்ததிக்குறுதியுடைத்து என்பதாம்.

(வி-ரை.) விகாரத்தினாலே தொக்குநின்ற வருவிக்கப்பட்டவெச்சவும்மையால் சாமளவும் அவனுக்கும் உறுதியாதல் பெறப்படும் அறத்தோடு வருதலால் அப்படிப்பட்டதன்று. (உ)

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

(ப-ரை.) நன்றே தரினும் - (தீங்கன்றி) நன்மையே தரினும், நடுவிகந்து - நடுவுநிலைநீங்கலால், ஆம் - உண்டாகின்ற, ஆக்கத்தை - செல்வத்தை, அன்றே - அப்போதே, ஒழிய - நீங்க, விடல் - விடக்கடவன். எ-று.

(க-ரை.) நடுவுநிலைமை யில்லாதுவருஞ் செல்வ நன்மையைத்தரினு மப்பொழுதே விடக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) நன்மைதாராமையால் நன்றேதரினு மென்றார். [இவை இரண்டுபாட்டாலும் முறையேநடுவுநிலைமையால் வந்தசெல்வம் நன்மையைத்தருதலும், மற்றைச்செல்வம் - தீமையைத் தருதலும் சொல்லப்பட்டன. (ங)

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

(ப-ரை.) தக்கார் - (இவர்நடுவு) நிலைமையையுடையவர், தகவிலர் - இவர்) நடுவுநிலைமையை யில்லாதவர், என்பது - என்னும் விசேஷம், அவரவர் - அவரவருடைய, எச்சத்தால் - நல்ல புதல்வரது, இருப்பினாலும் - இல்லாமையாலும், காணப்படும் - அறியப்படும். எ-று.

(க-ரை.) நடுவுநிலைமை யுடையவர், நடுவுநிலைமை யில்லாதவர், என்பதைச் சந்ததியாற் காணலாம் என்பதாம்.

(வி-ரை.) நடுவுநிலைமையை யுடையவருக்குச் சந்ததி உண்டாதலும், இல்லாதவர்க்கு இது இல்லாமற்போதலும், நிச்சயமாதலின் அவ்விருவகையோர்களையும் அறிதற்கு அவை அடையாளங்களாயின. [இதனால் நடுவுநிலையோரையும், அல்லாதோரையும், அறியுமாறு சொல்லப்பட்டது.

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(ப-ரை.) கேடும் – (தீவினையினாலே) கேடும், பெருக்கமும் – (நல்வினையினாலே) பெருக்கமும், இல்லல்ல – (யாவருக்கும்) இல்லாதவையல்ல, (முன்னமே அமைந்துகிடைந்தன வென்றபடி) (அவ்வுண்மை) அறிந்து, நெஞ்சத்து – மனதிலே, கோடாமை – (அவை காரணமாகச்) சாய்தலில்லாமையே, சான்றோர்க்கு – (அறிவால்) நிறைந்தோர்க்கு, அணி – அழகாம். எ-று.

(க-ரை.) பெரியோர்க்கு நடுவுநிலைமையே யழகாம் என்பதாம்.

(வி-ரை.) அவை காரணமாகச் சாய்தலாவது கேடும்பெருக்கமும் பழவினையினாலே வந்துகொண்டிருக்க இப்போதை முயற்சியால் வருமவையாக நினைத்துக் கேடுவாராமையைக் குறித்தும் பெருக்கம் வருதலைக்குறித்தும் ஒருபக்கத்திலே சாய்தலாம் அவற்றுக்குக் காரணம் பழவினையே இச்சாய்தலல்ல என உண்மை யுணர்ந்து நடுவுநிலையராயிருக்கை அறிவுடைமைக்கு அழகுசெய்தலாலே சான்றோர்க்கணியென்றார்.

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

(ப-ரை.) (ஒருவன்) தன்னெஞ்சம் – தனதுமனம், நடுவு-நடுவுநிலைமையிலிருந்து, ஒரீஇ – நீங்கி, அல்ல – பட்சபாதங்களை, செயின்-செய்ய நினைக்குமாயின், (அந்நினைவை) யான் – நான், கெடுவல் – கெடக்கடவேன், என்பது – என்றுணரு முற்பாதமாக, அறிக – அறியக்கடவன். எ-று.

(க-ரை.) தன்மனம் நடுவுநிலைமை நீங்கின் கெடுவனென் றறியக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) உற்பாதம் பின்வரும் நன்மை தீமைகளை முன்னறிவிக் குங்குறி. நினைத்தலும் செய்தலோடொக்குமாதலின் செயினென்றார்.

கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(ப-ரை.) உலகம் - உயர்ந்தோர், நடுவாக - நடுவாக (நின்று) நன்றிக்கண் - அறத்தின்கண்ணே, தங்கியான் - தங்கினவனது, தாழ்வு- வறுமையை, கெடுவாக - வறுமையாக, வையாது வைபார் - (நினையாரென்றபடி) எ-று.

(க-ரை.) நடுவுநிலைமையினின்றவன் வறுமையைப் பெரியோர் தாழ்வாகநினையார் என்பதாம்.



(வி-ரை.) கேடேலென்பது விகுதிகெட்டு வந்தது செல்வமென்று கொள்ளுவாரென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் முறையே கேடும் பெருக்கமும் பட்சபாதத்தால் வருவனவல்லவென்பதும், இதனாலே கேடுண்டாமென்பதும், இது செய்யாதவனது தாழ்வு கேடாகாதென் பதும், சொல்லப்பட்டன. (எ)

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(ப-ரை.) சமன்செய்து - (முன்னே தன்னைச்) சமனாகச்செய்து, சீர் தூக்கும் - (பின்னே தன்னிடத்து வைக்கப்பட்டபாரத்தை) அளவுசெய் வதாகிய, கோல்போல் - துலாம்போல், அமைந்து - (இலக்கணங்களா லே) நிறைந்து, ஒருபால் - ஒருபாகத்திலே, கோடாமை - சாயாமை யானது, சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோருக்கு, அணி - அழகாம். எ-று.

(க-ரை.) ஒருவர்பக்கமுஞ் சாயாமையே பெரியோர்க் கழகென்ப தாம்.

(வி-ரை.) கோலுக்குச் சொல்லப்பட்ட சமன்செய்தலும், சீர்தூக் கலும், சான்றோருக்கும், சான்றோருக்குச் சொல்லப்பட்ட, அமை தலும், ஒருபாற் கோடாமையும், கோலுக்கும் கூட்டுக, சான்றோர் சீர் தூக்கலாவது - வாதி பிரதிவாதிகளாலே அறிவிக்கப்பட்டவற்றைமுறை யாலுள்ளபடியறிதல், ஒருபாற் கோடாமையாவது - அவ்வுள்ளவற்றை

மறைக்காமல் பகைவர், அயலோர், நட்பினர், இம்மூவகையோருக்கும் ஒப்பச்சொல்லுதல். (அ)

சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

(ப-ரை.) செப்பம் - நடுவுநிலைமையாவது, சொல் - சொல்லினிடத்தே, கோட்டமில்லது - கோணுதலில்லாததாகும், (அது அறமாவது) உள்மனத்தினிடத்தே, கோட்டமின்மை - கோணுதலல்லாமையை, ஒருதலையா - உறுதியாக, பெறின் - பெற்றால், எ-று.

(க-ரை.) மனக்கோணலும்; சொற்கோணலு மில்லாமையே, நடுவு நிலைமை என்பதாம்.

(வி-ரை.) [சபையாரைநோக்கி இவை இரண்டுபொட்டாலும் வாயினாலே தருமத்தின்படியேசொல்லினும் மனது ஒருபக்கத்திலே சாய்ந்திருக்குமாயின் அச்சொல் நடுவுநிலைமை யாகாதென்பது சொல்லப்பட்டது.] (க)

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

(ப-ரை.) பிறவும் - பிறர்பொருள்களையும், தம்போல் - தம்பொருள்களைப்போல், பேணி - காத்து, செயின் - செய்தால், (அச்செய்கையானது) வாணிகஞ்செய்வார்க்கு - வியாபாரஞ்செய்வார்க்கு, வாணிகம் - நல்லவியாபாரமாம். எ-று.

## ௧௨ கக-ஆம் - அதி - அடக்கமுடைமை.

(க-ரை.) பிறர்பொருளையுந் தம்பொருளைப்போல் வியாபாரஞ்செய்தல் நல்லவியாபாரம் என்பதாம்.

(வி-ரை.) பிறவுந் தம்போற்செய்தலாவது கொள்வது அதிகமும், கொடுப்பதுகுறைவும். ஆகாமல் ஒப்பனடிச்செய்தல். [வணிகரைநோக்கி இதனால் பிறர்பொருள்களையும் தம்பொருள்களைப்போற் செய்யும் நடுவு நிலைமையுடையவர்க்கு வாணிகம் நன்றாமென்பது சொல்லப்பட்டது.]

பனிரண்டாம் அதிகாரம் நடுவுநிலைமை
முற்றிற்று.

பதின்மூன்றாம் - அதிகாரம்.

# அடக்கமுடைமை.

அஃதாவது: காயமும், வாக்கும், மனமும்; தீயவழியிலே செல்லாமல் அடங்குதலுடையனா யிருத்தலாம் - இது பிறர்குற்றம்போலத் தங்குற்றம் காணும் நடுவுநிலைமை யுடையவனுக்கு உரித்தாதலால் அந்நடுவுநிலைமையின் பின்வைக்கப்பட்டது.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

(ப-ரை.) (ஒருவனை) அடக்கம் - அடக்கமாகிய அறமானது, அமரருள் - தேவருலகத்தில், உய்க்கும் - கொண்டுபோய்விடும், அடங்காமை - அடங்காமையாகிய பாவமானது, ஆரிருள் - பொறுத்தற்கரிய நரகத்தில், உய்த்துவிடும் - செலுத்திவிடும். எ-று.

(க-ரை.) அடக்கம் ஒருவனைத் தேவருலகத்திலும் அடங்காமை நரகத்திலும் செலுத்தும் என்பதாம்.

(வி-ரை.) இருளென்பது நரகவகையிலொன்று. (க)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூங் கில்லை யுயிர்க்கு.

(ப-ரை.) அடக்கத்தை - அடக்கத்தை, பொருளாக - (உறுதிப்) பொருளாக, காக்க - காக்கக்கடவன், உயிர்க்கு - மக்களுயிர்க்கு, அதனினூங்கு - அதனின்மேற்பட்ட, ஆக்கம் - செல்வமானது, இல்லை - இல்லை (ஆதலால்) எ-று.

(க-ரை.) மக்களுயிர்க்கு அடக்கத்தினுஞ் சிறந்த செல்வமில்லை என்பதாம்.

(வி-ரை.) உயிர் இங்கே மனிதருயிரைக் காட்டிநின்றது, அறிந்து அடங்கிப் பயன்கொள்வது அதுவேயாகலின். (உ)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

(ப-ரை.) அறிவறிந்து – (அடங்குதலே நமக்கு) அறிவாவதென்று அறிந்து, ஆற்றின் – நல்வழியால், (ஒருவன்) அடங்கப்பெறின் – அடங்கப்பெற்றால், செறிவு – அவ்வடக்கமானது, அறிந்து – (நல்லோரால்) அறியப்பட்டு, சீர்மை – மேம்பாட்டை, பயக்கும் – (அவனுக்குத்) தரும். எ-று.

(க-ரை.) ஒருவனடங்கி நடப்பானாகில் அவ்வடக்க மேன்மையைத் தரும் என்பதாம்.

(வி-ரை.) இல்வாழ்வானுக்கு அடங்கும்வழியாவது – காயமும், வாக்கும், மனமும், அவன் வசப்படுதல். (௩)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

(ப-ரை.) நிலையின் – (இல்வாழ்க்கையாகியதன்) வழியில், திரியாது – வேறுபடாது (நின்று) அடங்கியான் – அடங்கினவனது, தோற்றம் – உயர்ச்சியானது, மலையினும் – மலையுயர்ச்சியினும், மாணப்பெரிது – மிகப்பெரிதாம். எ-று.

(க-ரை.) அடக்கமுடையவன் உயர்ச்சிமலையினு மிகப்பெரிது என்பதாம்.

(வி-ரை.) வேறுபடாதுநின்று அடங்குதல் ஐம்பொறிகளாலும், ஐம்புலன்களையும் அநுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(ப-ரை.) பணிதல் – பெருமைப்பாடில்லா) தடங்குதல், எல்லார்க்கும் – யாவருக்கும், நன்றாம் – (ஒப்ப) நன்றாகும், (ஆயினும்) அவருள்ளும் – அவருள்ளும், செல்வர்க்கே செல்வந்தகைத்து – வேறொருசெல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம். எ-று.

(க-ரை.) அடக்கம் யாவர்க்கும் சிறந்ததாயினும் செல்வர்க்கு மேலான செல்வம் என்பதாம்.

(வி-ரை.) பெருமைப்பாட்டை யுண்டாக்கும், கல்வியும், குடிப்பிறப்பும், உடையவர் அதுவில்லாமல் அவைகளாலே அடங்கியவிடத்து, அவ்வடக்கம் சிறந்துதோன்றுதாதலின் செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வந்தகைத்தெனறது - விகாரப்பட்டுநின்றது, [இவையைந்து பாட்டாலும் பொதுவகையால் அடக்கத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௬)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

(ப-ரை.) (ஒருவன்) ஒருமையுள் - ஒரு பிறப்பின்கண்ணே, ஆமைபோல் - ஆமையைப்போல், ஐந்து - ஐந்தை, அடக்கலாற்றின் - அடக்க வல்லவனாகில், (அவ்வல்லமை அவனுக்கு) எழுமையும் - எழுபிறப்பின்கண்ணும், ஏமாப்புடைத்து - காவலாதலை யுடையதாம். எ-று.

௧௨௬ கஙு-ஆம் - அதி - அடக்கமுடைமை.

(க-ரை.) ஒருவனைப் பொறியடக்க வல்லவனாகில் எழுபிறப்பிற்கு முறுதியுடைத்து என்பதாம்.

(வி-ரை.) ஆமை அடக்குமைந்து, (கால்கள்) நான்கும் தலையொன்றும், ஆகிய வுறுப்புகள், அவ்வடக்கம். துன்பம் சேராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டுமைந்து - மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் - பாவஞ்சேராதிருத்தற்கு ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்பயன் எழுபிறப்புந் தொடருமென்பது இதனாலறிக. [இதனாலே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (௭)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(ப-ரை.) யா - (காக்கவேண்டுமவை) யாவையும், காவாராயினும் - காக்கமாட்டாராயினும், நா - நாவொன்றையும், காக்க - காக்கக்கடவன், காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின், சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்பட்டு, சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று.

(க-ரை.) எதைக்காக்காவிடினும் நாவைக்காக்கவேண்டுமென்பதாம்.

(வி-ரை.) யாவென்பது, எவையென்னும் பொருளைத்தருகிற அஃறிணைப்பன்மை வினைப்பெயர். சொற்குற்றம், சொல்லிடத்தே தோன்றுங்குற்றம், சோகாப்பரென்பது, ஒருசொல். (௮)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

(ப-ரை.) தீச்சொல் - தீயசொற்களது, பொருட்பயன் - பொருள்க ளாலே (பிறருக்குவரும்) பயனானது, ஒன்றானும் - ஒன்றாயினும், உண் டாயின் - (ஒருவனிடத்தே) உண்டாவதாயின், நன்று - (அவனுக்குப் பிறவறங்களாலுண்டாகிய) நன்மையானது, ஆகாதாகிவிடும் - தீதாய் விடும். எ-று.

(க-ரை.) கொடுஞ்சொல் லொன்றுண்டாயின் அவனுக்கு நன்மை யுண்டாகாது என்பதாம்

(வி-ரை.) தீயசொல் பொய் - குறளை - கடுஞ்சொல் ஆம் - பயன் துன்பம். (அ)

தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

(ப-ரை.) (ஒருவனையொருவன்) தீயினால் - நெருப்பால், சுட்ட - சுட்ட, புண் - புண்ணானது (உடம்பிடத்தே யிருந்தாலும்) உள் - மன

தினிடத்தே, ஆறும் - அப்பொழுதே) ஆறும், (அப்படியல்லாமல்) நாவி னால் - தீயசொற்களையுடைய) நாவினாலே, சுட்ட - சுட்ட, வடு - வடு வானது, (அதனிடத்து எப்போதும்) ஆறாது - ஆறாது. எ-று.

(க-ரை.) தீயாற்சுட்ட புண்ணாறும், நாவாற்சுட்டப் புண்ணாறாது, என்பதாம்.



(வி-ரை.) ஆறிப்போதலால் தீயினாற் சுட்டதனைப் புண்ணென் றும், ஆறாமையால் நாவினாலேசுட்டதனை வடுவென்றும், சொல்லினர். தீயாகிய உபமானத்தினும் தீயசொல்லாகிய உபமேயத்திலே ஆறாமை யை அதிகமாகச்சொல்லுதலாலே வேற்றுமையணியாகும். [இவைமூன் றுபாட்டாலும் வாக்கினடக்கம் சொல்லப்பட்டது] (க)

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(ப-ரை.) கதம் - கோபத்தை, காத்து - (மனதிலே தோன்றாமல்) காத்து, கற்று - கல்வியுடையவனாகி, அடங்கல் - அடங்குதலை, ஆற்று

வான் – வல்லவனு யிருப்பவனது, செவ்வி – சமயத்தை, அறம் – அறக்கடவுளானவன், பார்க்கும் – பாரர்ந்ற்பான, ஆறறில-(அவனைச்சேரும்) வழியிலே, நுழைந்து – நுழைந்து. எ-று.

(க-ரை.) கற்றடக்க வல்லவனுயிருப்பவன சமயத்தைத் தருமக்கடவுள் பார்க்கும் என்பதாம்.

(வி-ரை.) அடக்குதல் மனம் புறத்திலே பரவாமல் அறத்திலேநிற்றல், செவ்வி, தன்குறை சொல்லுதற் கேற்றகாலம் இப்படிப்பட்டவனை – அறக்கடவுள் தானேசென்று அடைவானென்பதாம். [இதனுலே மனவடக்கம் சொல்லப்பட்டது] (௧0)

பதிமூன்றும் அதிகாரம் அடக்கமுடைமை
முற்றிற்று.

---

பதினாலாம் - அதிகாரம்
# ஒழுக்கமுடைமை.

அஃதாவது: தங்கள் தங்கள் வருணாசிரமங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசாரத்தையுடையவனு யிருக்கையாம். இதுகாயமுதலானவை யடக்கினவர்க்கல்லது முடியாதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது.

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

(ப-ரை) ஒழுக்கம் – ஆசாரமானது, விழுப்பம் – சிறப்பை, தரலான் – (எல்லாருக்கும்) கொடுத்தலால், ஒழுக்கம் – அவ்வாசாரமானது, உயிரினும்-உயிரைப்பார்க்கினும், ஓம்பப்படும்-காப்பாற்றப்படும். எ-று.

(க-ரை.) ஒழுக்கம், சிறப்பைத்தரலா லவ்வொழுக்க முயிரினுமேலானது என்பதாம்.



(வி-ரை.) உயர்ந்தோர்க்கும், இழிந்தோர்க்கும், சமமாகச் சிறப்பினைத்தருதலால்; விழுப்பந்தரலாமெனப் பொதுப்படச் சொல்லினர். சுட்டுப்பெயர் வருவிக்கப்பட்டது, உயிர் – எல்லாப்பொருளினுஞ்சிறந்ததாயினும் ஒழுக்கம்போற் சிறப்பைத்தாராமையால் – உயிரினு மோம்பப்படுமென்றார். (௧)

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

(ப-ரை.) ஒழுக்கம் – ஆசாரத்தை, ஒம்பி – ஒன்றும் அழிவுபடாமற்பேணி, பரிந்து – வருந்தியும் காக்கக்கடவன், தெரிந்து – (பலவறங்களையும்) ஆராய்ந்து (இவற்றுள்) இருமைக்குந் துணையாவது எதுவென்று, ஓம்பி – (மனத்தை) அடக்கி, தேறினும் – அறிந்தாலும், துணை- துணையாய்முடிவது, அஃதே –'அவ்வாசாரமே, (ஆதலால்.) எ-று.

(க-ரை.) ஒழுக்கத்தைக்காக்கி னவ்வொழுக்கமே துணைஎன்பதாம்.

(வி-ரை.) பரிந்துமென்னுமும்மை விகாரத்தால் தொக்கது.[இவை இரண்டுபாட்டாலும் ஒழுக்கத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.] (உ)

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

(ப-ரை.) (எல்லார்க்கும்) ஒழுக்கமுடைமை – (தத்தம் வருணத்துக்கு எற்ற) ஆசாரமுடைமையானது, குடிமை – குலமுடைமையாம், இழுக்கம் – (அவ்வாசாரத்தினின்றுந்) தவறுதலானது, இழிந்தபிறப்பாய்விடும் – தாழ்ந்தவருணமாய்விடும், எ-று.

(க-ரை.) ஒழுக்கமே உயர்குலமென்பதாம்.

(வி-ரை.) ஒழுக்கத்திலிருந்து தவறுதல் இழிந்தபிறப்பாய் விடுமெனவே ஒழுக்கத்தினுயர்தல் உயர்ந்தபிறப்பாய் விடுமென்பதும் கொள்ளப்படும். குலம் – குடிச்சிறப்பு. (ங)

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(ப-ரை.) ஒத்து – (கற்ற) வேதத்தை, மறப்பினும் – மறந்தானாயினும், கொளலாகும் – (வருணங் கெடாமையினாலே பின்னும்) ஓதிக்கொள்ளலாம், பார்ப்பான் – பிராமணனது, பிறப்பு – உயர்ந்த வருணமானது, ஒழுக்கங்குன்ற – ஆசாரங்குறைய, கெடும் – அழியும், எ-று.

(க-ரை.) பார்ப்பான் வேதமறந்தாலுங் கற்கலாம், ஒழுக்கங்குறைந்தா லிழிகுலனாவன் என்பதாம்.

(வி-ரை.) மறந்தவிடத்தே இழிகுலத்தானாம். ஆதலால் மறக்கலாகாதென்னுங்கருத்தால் மறப்பினுமென்றார். சிறப்பையுடையமுதல் வருணத்துக்குச் சொல்லுதலினாலே இது மற்றை வருணங்களுக்கும் கொள்ளப்படும். (ச)

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

(ப-ரை.) அழுக்காறுடையான்கண் - பொறாமையுடையவனிடத்தே, ஆக்கம்போன்று — செல்வமானதுபோன்று, ஒழுக்கமிலான்கண் — ஆசாரமில்லாதவனிடத்தே, உயர்வு-உயர்ச்சியானது, இல்லை-இல்லை. எ-று.

(க-ரை.) பொறாமையுள்ளவனிடத்துச் செல்வமில்லாமைபோல, ஆசாரமில்லாதவனிடத்து மேன்மையில்லை என்பதாம்.

(வி-ரை.) கொடுப்ப தழுக்கறுப்பானென்னும் குறளிற் சொன்னபடியே இவ்வுபமானத்தினால், ஒழுக்கமில்லாதவனது சுற்றத்தாருக்கும் உயர்ச்சியில்லையென்பது கொள்ளப்படும், உயர்வு உயர்குலமாதல். (௫)

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

(ப-ரை.) உரவோர் — மனவலிமையையுடையோர் (செய்தற்கருமை நோக்கி) ஒழுக்கத்தின் — ஆசாரத்தில், ஒல்கார் — சுருங்கார், இழுக்கத்தின் — அத்தவறுதலால், ஏதம் — (இழிகுலமாதலாகிய) குற்றம், படுபாக்கு — உண்டாதலை, அறிந்து — தெரிந்து, எ-று.

(க-ரை.) பெரியோர் இழுக்கத்தால் இழிகுலமாதலை அறிந்துஒழுக்கத்தில் குறையார் என்பதாம்.

(வி-ரை.) ஒழுக்கத்தின் சுருக்கம் அதனை உடையார்மே லேற்றப்பட்டது, கொண்டவிரதம் விடாமைப்பற்றி உரவோரென்றார். (௬)

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

(ப-ரை.) (எல்லாரும்) ஒழுக்கத்தின் — ஆசாரத்தினாலே, மேன்மை — மேம்பாட்டை, எய்துவர் — அடைவர், இழுக்கத்தின் — (அதிலிருந்து) தவறுதலாலே, எய்தாப்பழி — (தாம்) அடைதற்கு உரித்தல்லாத பழியை, எய்துவர் — அடைவார். எ-று.

(க-ரை.) ஆசாரத்தால் மேன்மையடைவர், என்பதாம்.

(வி-ரை.) பகைமையால் அடாதபழியைச் சொல்லியவிடத்து அதனையும் அத்தவறுபற்றி அடுக்குமென்று உலகம் கொள்ளுமாகலின் எய்தாப்பழி — எய்துவரென்றார். [இவை ஐந்துபாட்டாலும் ஒழுக்கமுள்ளவிடத்து உண்டாகும் குணமும், இல்லாதவிடத்து உண்டாகும் குற்ற

மும் சொல்லப்பட்டன.] (எ)

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

(ப-ரை.) (ஒருவனுக்கு) நல்லொழுக்கம் - நல்ல வாசாரமானது, நன்றிக்கு - அறத்துக்கு, வித்தாகும் - காரணமாகும், தீயொழுக்கம்-





தீயவாசாரமானது, என்றும் - இருமைகளிலும், இடும்பை - துன்பத்தை, தரும் - கொடுக்கும், எ-று.

(க-ரை.) ஆசாரம் தருமத்திற்குக் காரணமாகும், என்பதாம்.

(வி-ரை.) நல்லொழுக்கம் அறத்துக்குக் காரணமாமென்றதனால், தீயொழுக்கம், பாவத்திற்குக் காரணமாமென்பதும், தீயொழுக்கம்-இருமைகளிலும் துன்பத்தருமென்றதனால், நல்லொழுக்கம் இருமைகளிலும் இன்பந்தருமென்பதும் கொள்ளப்படும். [இதனாலே பின்விளைவு சொல்லப்பட்டது.] (அ)

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(ப-ரை.) வழுக்கியும் - மறந்தும், தீய - தீயசொற்களை, வாயாற் சொலல் - வாயினாற்சொல்லல், ஒழுக்கமுடையவர்க்கு - நல்லொழுக்கமுள்ளவர்க்கு, ஒல்லா - முடியாவாம், எ-று.

(க-ரை.) நல்லொழுக்கமுள்ளவர் தீயசொற்களைச் சொல்லார் என்பதாம்.

(வி-ரை.) தீயசொல்லுகளாவன: பிறருக்குத் தீங்கைத்தரும்பொய் முதலானவையும், வருணத்துக்கு உரியனவல்லாதவையுமாம். நல்ல சொற்களிலே பழுதென்னும் பொருள்படுதற்குச் சொல்லென்றது வாயாற்சொல்லென்றார். (கூ)

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(ப-ரை.) உலகத்தோடு - உலகத்தாரோடு, ஒட்ட - பொருந்த, ஒழுகல் - நடத்தலை, கல்லார் - கற்றிலாதவர், பல - பலநூல்களையும், கற்றும் - கற்றாராயினும், அறிவிலாதார் - விவேகமில்லாதவராவர், எ-று.

(க-ரை.) உலகநடை கல்லாதவர்கள் பலநூலைக்கற்றுங் கல்லாதவர்

களே என்பதாம்.

(வி-ரை.) உயர்ந்தாரோடு பொருந்த நடத்தலாவது: அவரெப்படி நடந்தாரோ அப்படிநடத்தல் அறநூலிலே சொல்லப்பட்டவைகளில் இக்காலத்துக்கு ஏற்காதவைகளைவிட்டு அதிலே சொல்லப்படாதவை களில் ஏற்குமவைகளைத் தழுவிவருதலால், அவையும் அடங்குதற்கு உலகத்தோடொட்ட வொழுகவென்றும், கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்கமும், ஆதலின் அவ்வொழுக்கத்தைக் கல்லாதார் பலகற்றும் அறிவிலாதாரென்றும் சொல்லினர். [இவை இரண்டுபாட்டாலும், சொல்லாலும், செயலாலும்வரும். ஒழுக்கங்களெல்லாம் ஒரு விதத்தினாலே தொகுத்துச் சொல்லப்பட்டன. (௧0)

பதினாலாம் அதிகாரம் ஒழுக்கமுடைமை
முற்றிற்று.

# இருபதாம் - அதிகாரம்.

# பயனில்சொல்லாமை.

---

அஃதாவது: தமக்கும் பிறர்க்கும் அறம்பொருளின்பங்களுள் ஒன்றையுந் தாராதசொற்களைச் சொல்லாமையாம், பொய்குறளை கடுஞ்சொல் பயனில் சொல்லென வாக்கினிடத்தே உண்டாம் பாவம் நான்கினுள், பொய் துறந்தோர்க்கு அல்லது பற்றற விடக்கூடாமையால், அதனை ஒழித்து இல்வாழ்வாரால் விடக்கூடுமெவையாகிய மற்றைமூன்றினுள், கடுஞ்சொல், இனியவைகூறலாலும், குறளை புறங்கூறாமையாலும், விலக்கின்ற பயனில்சொல்லை இதனால் விலக்குகின்றாராகலால், இது புறங்கூறாமையின் பின்வைக்கப்பட்டது.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

(ப-ரை.) பல்லார் - (அறிவுடையோர்) பலரும், முனிய - (கேட்டு) வெறுக்க, பயனில் - பயனில்லாதசொற்களை, சொல்லுவான் - சொல்பவன், எல்லாரும்-எல்லாராலும், எள்ளப்படும்-இகழப்படுவான். எ-று.

(க-ரை.) பயனில்லாச் சொற்களைச் சொல்பவன் யாவராலு மிகழப் படுவான் என்பதாம்.

(வி-ரை.) அறிவுடையோர் பலரும் வெறுக்கவே மற்றோரும் இகழ்வாராகலால் எல்லாரு மெள்ளப்படுமென்றார். (௧)

பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

(ப-ரை.) பல்லார்முன் - (அறிவுடையோர்) பலர்முன்னே, பயனில் - பயனில்லாத சொற்களை, சொல்லல் - (ஒருவன்) சொல்லுதலானது, நட்டார்கண் - (தன்) னட்பாளரிடத்தே, நயனில் - விருப்பமில்லாத, செயல்களை - செய்தலின் செய்தலினும், தீது - குற்றமாம். எ-று.

(க-ரை.) பயனிலாச் சொற்களைச்சொல்லுதல் சிநேகரிடத்துச் செய்யும் தீமையினுந் தீது என்பதாம்.

(வி-ரை.) விருப்பமில்லாத செயல்கள் வெறுக்கப்படு செயலாம், இச்சொல் அச்செயலைக்காட்டிலும் மிகவும் இகழப்படுதலை உண்டாக்குமென்பதாம். (௨)

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

(ப-ரை.) பயனில - பயனில்லாத பொருள்களை, பாரித்து - விரித்து, உரைக்குமுரை-(ஒருவன்) உரைக்கும்உரையானது, நயனிலனென்பது-(இவன்)நீதியில்லாதவனென்பதனை, சொல்லும்-அறிவிக்கும். எ-று.



(க-ரை.) பயனில்லாச்சொல் சொல்லுவோனை நீதியில்லாதவனென்பதை அறிவிக்கும் என்பதாம்.

(வி-ரை.) இப்படிப்பட்ட உரையினாலே இவன் நீதியில்லாதவனென்பதை அறியலாமென்றற்கு அதனை உடைமையிலேற்றி உரைசொல்லுமென்றார். (௩)

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

(ப-ரை.) பயன்சாரா - பயனோடு பொருந்தாத, பண்பில்சொல் - குணமில்லாத சொற்களை, பல்லாரகத்து - பலரிடத்தே (ஒருவன் சொல்லுவானாயின் அவை அவனிடத்தே) நயன்சாரா - நீதியோடு பொருந்தாதனவையாகி, நன்மையின் - நற்குணங்களினின்றும், நீக்கும் - (அவனை)

(ப-ரை.) சான்றோர் – அறிவுடையோர், பெனில – நீதியோடு பொருந்ாதசொற்களை, சொல்லினும் – சொன்னாலும், சொல்லுக – சொல்லக்கடவர், பயனில – பயனில்லாதசொற்களை, சொல்லாமை – சொல்லாமை (பெறின்) நன்று – (அது) நன்று. எ-று.

(க-ரை.) அறிவுடையோர் நீதியில்லாத சொற்களைச் சொன்னாலும் பயனிலாச சொற்களைச் சொல்லாமை நல்லது, என்பதாம்.

(வி-ரை.) சொல்லினும் எனவே சொல்லாமை பெறப்பட்டது, நயனில்லாதசொல் தீதெனபதாம். (எ)

அரும்பய னாயு மறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

(ப-ரை.) அரும்பயன் – அரிதற்கரியபயன்களை, ஆயும் – ஆராயவல்ல, அறிவினர் – அறிவையுடையார், பெரும்பயனில்லாத சொல்-மிகுந்த பயனில்லாதசொற்களை, சொல்லார் – சொல்லார்கள். எ-று.

(க-ரை.) அறிவுடையார் - பயன்படாசசொற்களைசசொல்லார் என்பதாம்.

(வி-ரை.) அரிதற்கரியபயன்களாவன - முத்திப்பேறு, மேற்கதியடைவு முதலானவை பெரும்பயனில்லாத சொலலெனறதனால்சிறிது பயனுடையசொல்லும தள்ளப்பட்டது. (அ)

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்.

(ப-ரை.) மருள்தீர்ந்த – மயக்கத்தினின்நீங்கிய, மாசறு – மாசற்ற (பரிசுத்தமாகியவென்றபடி) காட்சியவர் – அறிவினையுடையோர், பொருள்தீர்ந்த – பயனினீங்கியசொற்களை, பொச்சாந்தும் – மறந்தும், சொல்லார்-சொல்லார்கள். எ-று.

(க-ரை.) குற்றமற்ற வறிவுடையோர் பயனில்லாதசொற்களை மறந்துஞ் சொல்லார் என்பதாம்.

(வி-ரை.) பரிசுத்தமாகியவறிவு – மெய்யறிவு, [இவை மூன்றுபாட்டாலும் பயனில்லாதவை சொல்லாமையின் குணம்சொல்லப்பட்டது.]

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

(ப-ரை.) சொல்லில் – சொற்களிலே, பயனுடைய - பிரயோசனமுடையசொற்களை, சொல்லுக-சொல்லக்கடவர், சொல்லில்-சொற்களிலே,

பயனிலாச்சொல் - பிரயோசனமில்லாத சொற்களை, சொல்லற்க-சொல்லாதிருக்கக் கடவர், எ-று.

(க-ரை.) பயனிலாச் சொற்களை நீக்கி பயனுடைய சொற்களைச் சொல்லக்கடவர், என்பதாம்.

(வி-ரை.) இதனாலே சொல்லததகுவனவும் தகாதனவும் நியமிக்கப்பட்டன.

இருபதாம் அதிகாரம் பயனிலசொல்லாமை
முற்றிற்று.

---

## இருபத்தோராம் அதிகாரம்
# தீ வி னை ய ச் ச ம்.

---

அஃதாவது பாவங்களா யுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதலாம். இதனால் காயத்தினிடத்தே விளைகின்ற பாவங்களையெல்லாம் தொகுத்து விலக்குகின்றாராகலின், இது பயனில சொல்லாமையின் பின் வைக்கப்பட்டது.

> தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
> தீவினை யென்னுஞ் செருக்கு.

(ப-ரை.) தீவினையென்னுஞ் செருக்கு-தீவினையென்ற சொல்லப் படுமேவக்கததிற்கு, தீவினையார் (முன்செய்த) தீவினையுடையோர், அஞ்சார் பயப்படார், விழுமியார், (அதுவில்லாத) மேலோர், அஞ்சுவர் - பயப்படுவோர், எ-று.

(க-ரை.) பாவத்துக்குத தீவினையார் பயப்படார் - நல்வினையார் பயப்படுவோர் - என்பதாம்.

(வி-ரை.) தீவினையாகியகாரியம் அதன் காரணமாகிய செருக்கென உபசரிக்கப்பட்டது, முன்னே தொடங்கிச்செய்து பழகிவந்தமையால் அஞ்சாரென்றும்செய்தறியாமையால் அஞ்சுவாரென்றும-சொல்லினர்.

> தீயவை தீய பயத்தலாற் றீயவை
> தீயினு மஞ்சப் படும்.

(ப-ரை.) தீயவை - (இன்பத்தின் பொருட்செய்யுந) தீவினைக

ன், (பின்னே) தீய — துன்பங்களை, பயத்தால் - தருதலால், தீயவை (அப்படிப்பட்ட) தீவினைகள், தீயினும் — தீயினும் அதிகமாக, அஞ்சப்படும் (ஒருவனால்) அஞ்சப்படும், எ-று.

(க-ரை.) பாவமானவை துன்பங்களைக்கொடுத்தலால் அப்பாவங்கள் தீயினுங்கொடியன - என்பதாம்.

கஉ௰ உக - ஆம் - அதி * தீவினையச்சம்.

(வி-ரை.) வேறொருகாலத்திலும் வேறோரிடத்திலும் வேறொருடம்பிலும் போய்ச்சுடுதல் தீவினைக்கே அல்லாமல் நெருப்புக்கு இல்லாமையால் தீயினும் அஞ்சப்படுமென்றார். (உ)

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(ப-ரை.) செறுவார்க்கும் (தம்மை) வருத்துவோரிடத்தும், தீய-தீவினைகளை, செய்யாவிடல் - செய்யாமல்விடுதலே, அறிவினுளெல்லாம்-(தமக்கு உறுதிநாடும்) அறிவுகளெல்லாவற்றிலும், தலை — முதலானவறிவாகும், என்ப (என்று நல்லோர் சொல்லுவர், எ-று.

(க-ரை.) தம்மை வருத்துவோரிடத்துந் துன்பங்களைச்செய்யாமல் விடுதல் எல்லாவறிவினுள்ளுந் தலைமை என்பதாம்.

(வி-ரை.) விசேஷத்துக்குக் காரணமாகிய அறிவை விடலென்றும் செய்யத்தக்கவிடத்தும் செய்யாதிருந்தால் தமக்குத் துன்பம் வாராதென்று ஆலோசித்தறிதலால் அதனை அறிவினுளெல்லாந் தலையெனவும் சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும், தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது சொல்லப்பட்டது] (௩)

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(ப-ரை) (ஒருவன்) பிறன — பிறனுக்கு, கேடு — கேட்டைத்தருமவினையை, மறந்தும — மறவியைப்பொருந்தியும், சூழற்க — எண்ணாதிருக்கக்கடவன், சூழின் — எண்ணுவானாயின், சூழ்ந்தவன் — அவ்வெண்ணினவனுக்கு, கேடு - கேட்டைத்தருமவினையை, அறம் — அறக்கடவுள், சூழும் — எண்ணுவான், எ-று

(க-ரை) ஒருவன் மறந்தும் பிறனுக்குக் கேட்டை நினைப்பானாகில் அவனுக்குத் தருமதேவதை கேட்டை நினைக்கும் என்பதாம்.

ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு.

(ப-ரை.) உலகு — உலகத்தாரை, அவாம் — விரும்பிச்செய்யும், பேரறிவாளன் — பெரியவறிவினை யுடையவனுடைய, திரு — செல்வத்தினாலே (நிறைதல்) ஊருணி — ஊரிலுள்ளார் (நீருண்ணுங்குளமானது) நீர் நிறைந்தற்று — நீரினாலே நிறைந்தது போலாம், எ-று.

(க-ரை.) அறிவாளர் செல்வம் ஊராருண்ணுங் குளநிறைந்தாற்போலும் — என்பதாம்.

(வி-ரை.) அச்செல்வம் பாழ்படாமல் கெடுங்காலம் எல்லாருக்கும் வேண்டுமெனவில் உதவுமென்பதாம். (ரு)

பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்.

(ப-ரை.) செல்வம் — செல்வமானது, நயனுடையான்கண் — உபகாரஞ்செய்பவனிடத்தே, படின் — உண்டாகுமாகில் (அப்படியுண்டாதல்) உள்ளூர் — உள்ளூரிலே, மரம் — பயந்தருமொரு மரத்தில், பயன் — பழமானது, பழுத்தற்று — பழுத்தல்போலும், எ-று.

(க-ரை.) உபகாரஞ் செய்பவன் செல்வம் ஊர்நடுவில் மரம் பழுத்தாற்போலும் — என்பதாம்.

(வி-ரை.) ஆல் — அசை, உலகநீதி பலவகையினும் ஒப்புரவு சிறந்தமையால் அதனை நயமென்றார், அவன் அம்மரம்போல் எல்லார்க்கும் எளிதிலே பயன் கொடுப்பானென்பதாம். (சு)

மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

(ப-ரை.) செல்வம் — செல்வமானது, பெருந்தகையான்கண் (உபகாரஞ்செய்யும்) பெரியதகைமையை யுடையவனிடத்தே, படின் — உண்டாகுமானால் (அச்செல்வமானது) மருந்தாகி — எல்லாவுறுப்பும் (பிணிகளுக்கு)மருந்தாய், தப்பா—தப்பாத, மரத்தற்று—மரத்தையொக்கும், எ-று.

(க-ரை.) பெரியோரிடத் துண்டாகியசெல்வம் மருந்தாகியமரத்துக் கொப்பாகும் — என்பதாம்.

(வி-ரை.) ஆல் — அசை, எல்லாவுறுப்புமென்றது மரத்துக்கு-இலை, பூ, காய், கனி முதலானவைகளை செல்வத்துக்கு அநுபவித்தற்குரியபல பொருள்களை தப்பாமையாவது, கொள்ளுதற்கரிய விடங்களிலே நின்றாவது, மறைந்துநின்றாவது, காலத்தால் வேறுபட்டாவது, பயன்படாமை தன்குறைவைநோக்காமல் எல்லாவருத்தமும் தீர்க்குமென்பதாம்,

[இவை மூன்றுபாட்டாலும் உபகாரஞ்செய்பவனது பொருள் பயன்படு மாறு சொல்லப்பட்டது.] (எ)

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(ப-ரை.) கடனறி (காம்) செய்யத்தகுவனவைகளை அறிந்த, காட்சியவர் — இயற்கை யறிவையுடையவர், இடனில் பருவத்தும் — செல்வஞ் சுருங்கியகாலத்திலும், ஒப்புரவிற்கு — உபகாரஞ்செய்தற்கு, ஒல்கார் — தளரார், எ-று.

(க-ரை.) அறிவுடையோர் வறுமையிலும் உதவி செய்வர் என்பதாம்.

(வி-ரை.) மற்றவைகளை செய்யாமல் விட்டாலும் இதனை விடாரென்பதாம். (அ)

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

(ப-ரை.) நயனுடையான் — உபகாரஞ்செய்தலை யுடையவன், நல்கூர்ந்தானாதல் — வறுமைப்பட்டவனாதல், செயும் — (ஒழியாமற்) செய்யும், நீர — குணத்தையுடைய அவ்வுபகாரங்களை, செய்யாது — செய்யப்பெறாமல், அமைகலாவாறு — வருந்துகின்ற இயல்பாம், எ-று.

(க-ரை.) உபகாரி வறியவனாதல் செய்யுமுதவி செய்யாமையால் என்பதாம்.

(வி-ரை.) தான் அனுபவிக்கப்படும் பொருள்களைப் பெறாமை அவனுக்கு வறுமையல்லவென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் வறுமையால் ஒப்புரவுசெய்யாது விடத்தக்கதல்லவென்பதுஞ்சொல்லப்பட்டது.]

ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

(ப-ரை.) ஒப்புரவினால் — உபகாரஞ்செய்தலினாலே, வருங்கேடெனின் (ஒருவனுக்குப் பொருட்) கேடுவருமென்பவருண்டாயின். அஃது— அக்கேடெனின் (ஒருவனுக்குப் பொருட்) கேடுவருமென்பவருண்டாயின், அஃது — அக்கேடானது, ஒருவன்விற்று (தன்னை) விற்றாயினும், கோட்டக்கதுடைத்து — வாங்கத்தகுந்த தகுதியை யுடையதாகும். எ-று.

(க-ரை.) உதவி செய்தலாற் கேடு வருமெனின் அவ்வுதவியைத் தன்னை

வல்லமையாவது, பசியாற்றல் - (தம்மை அடைந்த) பசியைப்பொறுத்த லாம், (அவ்வல்லமைதான்) அப்பசியை - அப்படிப்பொறுத்தற்கரிய பசியை, மாற்றுவார் (கொடையினாலே) நீக்குவோரது, ஆற்றலிற்பின் - வல்லமைக்குப்பின், எ-று.

(க-ரை.) தவத்தோர் பசியைப்பொறுக்கும் வல்லமையிலும்பசியை யாற்றுவோர் வல்லமை பெரிது என்பதாம்.

(வி-ரை.) தாமும்பசித்துப் பிறருக்கும் அது தீர்க்கமாட்டாதவரது வல்லமையைக்காட்டிலும் தாமும் பசியாது பிறருக்கும் அதுதீர்ப்பவரது வல்லமை நன்றென்பதாம். (௫)

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(ப-ரை.) அற்றார் - வறியவரது, அழிபசி - மிகுந்தபசியைத்தீர்த்தல், (அறனுக்கித்) தீர்க்கக்கடவன், அஃது - அவ்வறம், பொருள்பெற்றானொருவன் - பொருள்படைத்தவனாகியவொருவன், வைப்புழி - (அப்பொருளைத் தனக்குதவ) வைக்குமிடம் (ஆகவால்) எ-று.

(க-ரை.) பொருள்பெற்றவன் வறியவர்பசியைத் தீர்த்தலே யவன் பொருள்வைக்குமிடம் என்பதாம்.

## கஉஅ உ௬-ஆம் - அதி - ஈகை.

(வி-ரை.) எல்லாநன்மைகளும் அழியவருதலால் அழி பசியென்றார் அற்றாரழிபசிதீர்த்த பொருள் பின் தனக்கேவந்து உதவுமென்பதாம்.

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(ப-ரை.) பாத்து (எக்காலும்) பகுத்து ஊண் - உண்ணுதல், மரீஇயவனை - பழகியவனை, பசியெனும் - பசியெனப்படும், தீப்பிணி - தீயநோய், தீண்டலரிது - தீண்டுதலில்லை, எ-று.

(க-ரை.) பிறர்க்கிட்டுண்ணுமவனைப் பசிநோய்தீண்டாது என்பதாம்.

(வி-ரை.) இவ்வுடம்பிலே நின்று ஞானத்தையும் ஆசாரத்தையும் கெடுத்து அதனுடம்பின்வரும் உடம்புகளுக்கும் துன்பஞ்செய்தலால் தீப்பிணியெனப்பட்டது. தனக்குமருந்தாவன் தானேயாகையால் பசிப்பிணி சேராதென்பதாம். [இவை ஆறுபாட்டாலும் ஈதலின்சிறப்புச்சொல்லப்பட்டது.]

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(ப-ரை.) தாமுடைமை - தாமுடையபொருளை, வைத்து (கொடாது) வைத்து (பின்னே) இழக்கும் - இழக்குமிடத்தும், வன்கணவர் - அருளில்லாதவர், ஈத்து (வறியவர்க்கு வேண்டியபொருளைக்) கொடுத்து, உவக்கும் (அவர்) மகிழ்தலினால் (அருளுடையாரடையும்) இன்பம் - மகிழ்ச்சியை, அறியார்கொல் - கண்டறியாரோ, எ-று.

(க-ரை.) பொருளை ஈதலின்றி வைத்திழப்பவர் கொடுத்து மகிழுமின்பத்தையறியார் என்பதாம்.

(வி-ரை.) ஈத்தென்பது எதுகைநோக்கி ஈத்தென்றாயிற்று. அறிந்தாராயின் தாமுமஅவ்வின்பத்தை அனுபவிப்பாரேயல்லாமல் வைத்திழவாரென்பது கருத்து. (அ)

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(ப-ரை.) நிரப்பிய (பொருளினளவுகளை) நிறைக்கவேண்டி (இரந்தவர்க்குக்கொடாமல்) தாமே - தாமே, தனித்தவராகி, உணல் - உண்ணுதலானது (ஒருவருக்கு) மன்ற - நிச்சயமாக, இரத்தலின் (பிறரிடத்தேபோய்) இரத்தலினும், இன்னாது - துன்பஞ்செய்வதாம், எ-று.

(க-ரை.) பிறர்க்குக்கொடாமல் தாமேயுண்ணுதல் யாசிப்பதினுந் துன்பம் என்பதாம்.

(வி-ரை.) பொருளின் தொகையை நிறைத்தலாவது, ஒவ்வொருதொகையைக்குறித்து அவ்வளவு சம்பாதிப்போமென்று அத்தொழிலையே மேற்கொண்டு உலோபஞ்செய்து சேர்த்தல், தனித்தல், பிறரைச்சேராமை, இரத்தலுக்கு உள்ளது அப்போதையிழிவே. பின்னே வறுமையில்லை. தனித்துண்ணுதலுக்கு அவ்விரண்டுமே உண்டாகுமாதலால் இரத்தலினின்னாதென்றார். (க)



சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

(ப-ரை.) (ஒருவனுக்கு) சாதலின் - இறத்தல்போல், இன்னாதது-

ஈவார்மேல் - கொடுப்பவரிடத்தே, நிற்கும் - நிற்கும், புகழ் - கீர்த்திகளாம், எ-று.

17

௨௩௨ உச - ஆம் - அதி - புகழ்.

(க-ரை.) கொடுப்பவரிடத்தே கீர்த்திநிற்கும் - என்பதாம்.

(வி-ரை.) புகழ்தான், உரையும், பாட்டும், என இருவகைப்படும். அவற்றுள் உரைப்பாருரைப்பவையென எல்லார்க்கும் உரிய வழக்கத்தையே எடுத்தாராயினும், இனம்பற்றிப் புலவர்க்கே உரியபாட்டும்கொள்ளப்படும். பாடுவார் பாடுவவெல்லா மிரப்பார்க்கொன் றீவார்மேனிற்கும் புகழ் என்பதூஉம் பெற்றாம், புகழின் காரணங்களில் ஈதல் சிறந்தமை இதனாற் காண்க. (௨)

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

(ப-ரை.) ஒன்றா - தனக்கு இணையில்லையாக, உயர்ந்த - ஓங்கிய, புகழல்லால் - கீர்த்தியல்லாமல், உலகத்து - உலகத்திலே, பொன்றாது - அழியாமல், நிற்பது - நிலைபெறுவது, ஒன்று - வேறொன்று, இல் - இல்லை, எ-று.

(க-ரை.) உலகத்தில் அழியாது நிற்பது புகழ் - என்பதாம்.

(வி-ரை.) தனக்கு இணையில்லாத வோங்குதலாவது கொடுத்தற்கரிய உயிரையும், உறுப்பையும், பொருளையும், கொடுத்தமைபற்றி வருதலால், தன்னோடு ஒப்பது இல்லாமல் தானே உயர்தல். அப்படிப்பட்ட புகழையே மனிதனாய்ப்பிறந்தவன் சம்பாதிக்கவேண்டுமென்பதாம். [இவை மூன்றுபாட்டானும் புகழது சிறப்புச்சொல்லப்பட்டது.] (௩)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(ப-ரை.) (ஒருவன்) நிலவரை - பூமியினெல்லையில், நீள்புகழ் - அழியாதுநிற்கும்புகழை, ஆற்றின் - செய்வானாயின், புத்தேளுலகு - தெய்வலோகமானது (அவனையல்லாமல்) புலவரை (தன்னை யடைந்திருக்கிற) ஞானிகளை, போற்றாது - பேணாது, எ-று.

(க-ரை.) உலகில் அழியாப்புகழைச் செய்வானாகில் தேவலோகம் தேவர்களைத் தழுவாது - என்பதாம்.

(வி-ரை.) இவன்போல் அவர் புகழ் வடிவால் இவ்வுலகத்தையும், தேவவடிவால் அவ்வுலகத்தையும், ஒருசேர அடையாமையால் புலவரை

ப்போற்றாது புகழ்தேறலென்றார். (௪)

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

(ப-உரை.) வித்தகர்க்கல்லால் - திறமையுடையவர்க்கு அல்லாமல் (மற்றவர்க்கு) நத்தமாகும் - (புகழுடம்பிற்கு) பெருக்கமாகும், கேடும் - வறுமையும், அரிது - இல்லை, உளதாகும் - அப்புகழுடம்பு) நிலைபெறுவதாகும், சாக்காடும் - மரணமும், அரிது - இல்லை, எ-று.

(க-உரை.) புகழுடம்பை வளர்த்தலும் நிலைபெறச்செய்தலும் அறிவிலார்க்கு அரிது - என்பதாம்.



(வி-உரை.) நந்துஎன்னு முதனிலைத்தொழிற்பெயர் நத்து என விகாரப்பட்டு அம்விகுதிபெற்று வந்தது-போல்-உரையசை-ஆகும்-அரிது-இவற்றை மூன்றுங்கூட்டப்பட்டன. பெருக்கமாகும்கேடாவது-புகழுடம்பு செல்வத்தை அடைவதற்குப்பூதவுடம்பு வறுமைப்படல் நிலைபெறுவதாகும் மரணமாவது; புகழுடம்பு நிலைபெறற்குப் பூதவுடம்பு இறத்தல் நிலையில்லாதவுடம்பை வருத்தியுடவிட்டும் நிலையானபுகழை வளர்த்தலும் நிறுத்தலும் பிறர்க்குமுடியாமையால் வித்தகர்க்கல்லாலரிதென்றார். [இவை இரண்டுபொட்டாலும் புகழுடையாரது மேன்மைசொல்லப்பட்டது] (௫)

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(ப-உரை.) தோன்றின் (மனிதராய்ப்) பிறந்தால், புகழொடு-புகழுக்கு ஏதுவாகிய - குணத்தோடு, தோன்றுக - பிறக்கக்கடவர், அஃதிலார் - அக்குணமில்லாதவர், தோன்றலின் - (மனிதராய்ப்) பிறத்தலினும், தோன்றாமை - பிறவாமையானது (விலங்குகளாய்ப் பிறத்தலன்றபடி) நன்று - நல்லது, எ-று.

(க-உரை.) பிறந்தாற் புகழொடு பிறக்கக்கடவர், அஃதில்லாதவர்கள் பிறவாமையே நல்லது என்பதாம்.

(வி-உரை.) புகழுக்கு ஏதுவைப் புகழென்றதால் ஆகுபெயர், இலாரென்றதனால் மனிதராய் என்பதும், மனிதராய்ப் பிறவாமை என்ற அருத்தாபத்தியினாலே விலங்காய்ப் பிறத்தலென்பதும், சொல்லப்பட்டன. இகழ்வாரில்லாமை பயனென்றுணர்க. (௬)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை

செய்யும் - செய்யும், அறம் - அறத்தை, தேரின் - ஆராயின், தெருளா தான் - ஞானமில்லாதவன், மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற் சொல்லப் பட்டபொருளை, கண்டற்று - (ஒருகால்) கண்டதுபோலாம், எ-று.

(க-ரை.) அருளில்லாதவன் செய்யும் தருமத்தை யாராயின் மெய் ஞானமில்லாதவன் மெய்ப்பொருளைக் கண்டாற்போலும் என்பதாம்.

(வி-ரை.) ஆல் - அசை. எப்படி மெய்பெற்ற ஞானமில்லாதவன் நடுவே மெய்ப்பொருளை உணர்ந்தவனால் அதனைத் தன் ஞானமில்லாமை யாற் றனே அழித்துவிடுவானோ அப்படியே அருளில்லாதவன் நடுவே அறஞ்செய்தால் அதனைத் தன் அருளில்லாமையாற் றனே அழித்துவிடு வானென்பதாயிற்று. ஆகவே மற்றெல்லா அறங்களுக்கும் அருளுடை மை மூலமென்பது பெறப்பட்டது. [இவை நான்குபாட்டாலும் அருளி ல்லாதவர்க்கு வருங்குற்றஞ் சொல்லப்பட்டது.] (௯)

வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.



(ப-ரை.) (அருளில்லாதவன்) தன்னின் மெலியார்மேல்-தன் னினு மெலியவர்கள்மேல், தான் - செல்லுமிடத்து (வருத்துதற்குச்) செல்லு மிடத்து, வலியார் - (தன்னின்) வலியவர் (தன்னைவருத்துதற்கு வரும் போது), முன் - (அவர்) முன், தன்னை - (அஞ்சிநிற்கும்) தனதுநிலை யை, நினைக்க - நினைக்கக்கடவன், எ-று.

(க-ரை.) வலியவன் மெலியவனை வருத்தச்செல்லும்போது தன்னி னும்வலியவன் தன்னைவருத்தியதை நினைக்கக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) மெலியாரெனினும் - அஃறிணைக்குங் கொள்க. அதனை நினைக்கவே இத்தவுயிருக்கும் அப்படியே அச்சமுண்டாகுமென்று அறிந் து அதன்மேல், அருளுடையவனுவானென்பது கருத்து. [இதனுலே அருள்பிறத்தற்கு உபாயம் சொல்லப்பட்டது.] (௰)

இருபத்தைந்தாம் அதிகாரம் அருளுடைமை
முற்றிற்று.

---

## இருபத்தாறும் - அதிகாரம்.

# 2. புலான்மறுத்தல்.

அஃதாவது: ஊனுண்ணுதலை ஒழிதலாம், கொலைப்பாவத்தைப் பின்உண்டாக்கலால், அதற்குக் காரணமாதலையும், முன்னும் அதனால் வருதலால் அதன்காரியமாதலையும் ஒருசேர உடைத்தாகிய ஊனுண்ணுதல் அருளுடையார்க்கு இயைவது அன்றாகலி னதனை விலக்குதற்கு இது அருளுடைமையின் பின்வைக்கப்பட்டது.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

(ப-ரை.) தன்னூன் - தன்னுடம்பை, பெருக்கற்கு-வளர்த்தற்பொருட்டு, தான்பிறிதூன் - மற்றொன்றினுடம்பை, உண்பான் - தின்பவன், எங்ஙனம்-எவ்வகையால், அருள்-அருளை, ஆளும்-ஆளுவான், எ-று.

(க-ரை.) தன்னுடல் பெருக்கற்குப் பிறவுடலைத் தின்பவனெவ்வகையாற் கிருபையுடையவனாவான் - என்பதாம்.

(வி-ரை.) பயனில்லாத தன்னூன்வளர்த்தலைப் பயனெனக்கொண்டு இக்கொடுமைசெய்வோனே அறிவிலாதகொடியோனென்றதாயிற்று. எங்ஙனமாளுமருளென்பது ஆளானென்பது படநின்ற இகழ்ச்சிக்குறிப்பு.

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(ப-ரை.) பொருளாட்சி - பொருளினாலே பயன்கொள்ளுதல், போற்றாதார்க்கு - (அதனைக்) காப்பாற்றாதவருக்கு, இல்லை - இல்லையாம்,

18



ஆங்கு - அதுபோல், அருளாட்சி - அருளினாலே பயன் கொள்ளுதல், ஊன்றினபவர்க்கு - புலாலுண்பவருக்கு, இல்லை, எ-று.

(க-ரை.) அருளைக் காப்பாற்றார்க் - குளிங்வரும் இன்பமில்லை- என்பதாம்.

(வி-ரை.) எப்படி பொருட்பயனை இழத்தற்கு அதனைக்காப்பாற்றாமையோ அப்படியே அருட்பயனை இழத்தற்கு, ஊன்றினல் காரணமென்றதாயிற்று. ஊனுண்டினுயிறும் உயிர்களுக்கு ஒருதீங்கு நினையாராயின் அழிவாகுதற்குக் குறைவில்லை யென்பாரை மறுத்து அது உண்டென்பது. [இவை இரண்டொட்டாலும் சொல்லப்பட்டது.] எடுத்துக் காட்டுவமையணி. (உ)

னிடத்தது (ஆதலால்) உண்ணாமை (அங்ஙனஞ்செய்யாது) ஒருவன் அதனை, உண்பானாயின், அளறு — அவனை (விழுங்கிய) நரகமானது, அண்ணாத்தல் செய்யாது (பின் உமிழ்தற்கு) வாய்திறவாது, எ-று.

(க-ரை.) ஒருவன் ஊனுண்பானாயின் அவனை நரகம் விழுங்கிவிடும்-என்பதாம்.

(வி-ரை.) உண்ணப்படுகிற விலங்குகள் அதனாலே குறைந்துபோக மற்றவை பல்குதலால் உண்ணாமையுள்ள துயிர்நிலையென்றார். உண்ணா வென்பது உண்ணாமையென்னும் பொருளில் வந்தது. [ஊனுண்டவன் அப்பாவத்தினாலே நெடுங்காலம் நரகத்துள் அழுந்துவனென்பதாம். கொலைப்பாவம் [illegible] பாவத்தில் [illegible] சொல்லப்பட்டது.] (ரு)

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(ப-ரை.) தினற்பொருட்டால் — தின்னுதல் காரணமாக, உலகு — உலகத்தார், கொள்ளாரெனின் — (ஊனைக்) கொள்ளாராயின், விலைப் பொருட்டால் — விலைப்பொருள் காரணமாக, ஊன்றருவார் — ஊனை விற்பவர், யாரும் — எவரும், இல் — இல்லை, எ-று.

(க-ரை.) ஊனை வாங்குவாரில்லாயினதை விற்பாரில்லை-என்பதாம்.

(வி-ரை.) [பின்னே உண்டாவதாகிய ஊனைத்தின்னுதல், அதற்கு முன்னே உண்டாவதாகிய கொலைக்குக்காரணமாகாமையால் தின்பார்க்குக் காரணத்தால் வரும்பாவம் இல்லையென்ற வாதியைநோக்கி அருத்தாபத்தி பிரமாணத்தினாலே காரணமாகுதல் சாதித்தலின் இதனால் முன்பாட்டிலே சொல்லியது உறுதிசெய்யப்பட்டது.] (சா)

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(ப-ரை.) புலாஅல் — புலாலானது, பிறிதொன்றன் — பிறிதோருடம்பினது, புண் — புண்ணாகும், அது — அப்புலாலின் அசுத்தத்தன்மையை, உணர்வார் — அறிவோரை, பெறின் — பெற்றால், உண்ணாமைவேண்டும் (அப்புலாலை) உண்ணாதிருக்கவேண்டும், எ-று.

(க-ரை.) பிறவுடலின் புண்ணென்றறிந்தவர்களைப் பெற்றால் ஊனையுண்ணாதிருக்கவேண்டும் — என்பதாம்.

(வி-ரை.) அந்தமெய்ம்மையை அறியாமையால் அதனை உண்கின்றாரென்பதாம், [இதனால் யுத்தியினாலும் ஊனுண்ணல் இழிந்ததென்பது சொல்லப்பட்டது.] (எ)

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(ப-ரை.) செயிரின் (மயக்கமாகிய) குற்றத்தினின்றும், தலைப்பிரிந்த - நீங்கிய, காட்சியார் - அறிவினையுடையவர், உயிரின் - ஒருயிரினின்றும், தலைப்பிரிந்த-நீங்கிவந்த, ஊன்-ஊனை, உண்ணார்-தின்னார், எ-று.

(க-ரை.) அறிவுடையோர் ஊன்தின்னார்-என்பதாம்.

(வி-ரை.) தலைப்பிரிவு ஒருசொல் பிணமென்று ஊனின் மெய்ம்மை தாமே அறிதலால் உண்ணாரென்றார். (அ)

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

(ப-ரை.) அவி - (நெய்முதலாகிய) அவிகளை, சொரிந்து - (தீயினிடத்தே) பெய்து, ஆயிரம் வேட்டலின் - ஆயிரம் யாகஞ்செய்தலினும், ஒன்றன - ஒருவிலங்கினது, உயிர் - உயிரை, செகுத்து-போக்கி, உண்ணாமை (அவ்வுயிர்நின் றவுடலை) உண்ணாமை, நன்று - நல்லது, எ-று.

(க-ரை.) ஆயிரம் யாகஞ்செய்தலினும் புலாலைத்தின்னாமை நல்லது என்பதாம்.

(வி-ரை.) அந்த யாகங்களால்வரும் பயனினும் இந்த விரதத்தால் வரும்பயன் பெரிதென்பதாம்.] (கூ)

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

(ப-ரை.) கொல்லான் (ஒருயிரையும்) கொல்லாதவனுமாய், புலாலை மறுத்தானை - புலாலையு முண்ணாதவனை, எல்லாவுயிரும் - எல்லாவுயிர்களும், கைகூப்பி - கைகுவித்து, தொழும் - வணங்கும், எ-று.

(க-ரை.) ஊனைத்தின்னாதவனை யெல்லாவுயிரும் வணங்கும் - என்பதாம்.

(வி-ரை.) இவ்விரண்டறங்களையும் ஒருமிக்கவுடையவர்க்கு அல்லாமல் ஒன்றைமாத்திரம் உடையவர்க்கு அதனாற்பயனில்லையாகலின்கொல்லாமையும் உடன் சொல்லினார், இப்பேரருளுடையவன் மறுமையிலே தேவரினும் உயர்ந்தவனாமென்னை அப்பயனது பெருமை சொல்லியபடி. [இவை மூன்றுபாட்டாலும் ஊனுண்ணாமையினது உயர்ச்சி சொல்லப்பட்டது.] (௪0)

இருபத்தாறும் அதிகாரம் புலான்மறுத்தல் முற்றிற்று.

## ✓ இருபத்தேழாம் - அதிகாரம்

## 3. தவம்.

—o—

அஃதாவது: மனம்பொறிவழிபோகாமல் கீர்த்தியின்பொருட்டுவிரதங்களினாலே உண்டிசுருக்குதல் முதலானசெயல்களை மேற்கொண்டு அவைகளால், தம்முயிர்க்குவருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களைக் காப்பாற்றலாம், புலாலைமறுத்து உயிர்களின்மேல் அருள்மூண்டவிடத்தே செய்யப்படுவதாகலின் இதுபுலான் மறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

(ப-ரை.) தவத்திற்கு - தவத்தினுக்கு, உரு - வடிவமானது, உற்றநோய் உண்டிசுருக்குதல் - (முதலானவைகளால்) தம்முயிர்க்குவருந் துன்பங்களை, நோன்றல் - பொறுத்தலும், உயிர்க்கு - பிறவுயிர்க்கு, உறுகண்செய்யாமை - (தாம்) துன்பஞ்செய்யாமையும் ஆகிய, அற்றே - அவ்வளவினதேயாகும், எ-று.

(க-ரை.) பசிபொறுத்தலும் உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமையும் தவத்திற்கு வடிவம் என்பதாம்.

(வி-ரை.) மற்றைய விரதங்களெல்லாம் இவ்விரண்டிலே அடங்குமாதலின் அற்றேயெனத் தேற்றேகாரங்கொடுத்தார். [இதனால் தவத்தி

னது இலக்கணஞ் சொல்லப்பட்டது.] (௯)

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(ப-ரை.) தவமும் - (பயனையல்லாமல்) தவம் உண்டாவதும், தவமுடையார்க்கு (முன்னைத்) தவத்தையுடையவர்க்கே, ஆகும் - உண்டாகும்(ஆதலால்) அதனை-அத்தவத்தை, அஃதிலார்-அம்முன்னைத்தவமில்லாதவர், மேற்கொள்வது-செயத்தொடங்குவது, அவம்-வீணாம், எ-று.

(க-ரை.) முற்பிறப்பிற் றவஞ்செய்தவர்க்குத் தவம்பலிக்கும் என்பதாம்.

(வி-ரை.) முன்பழக்கத்தால் அறிவும் வல்லமையும் உடையராய் முடித்தலால் தவமுடையார்க்காகுமென்றும் பழக்கமில்லாதவர்க்கு அவ்விரண்டும் இல்லாமையினாலே முடியாமையால் அவமென்றுங்கூறினார்.

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

(ப-ரை.) மற்றையவர்கள் - இல்லறத்தையேபற்றி நிற்பவர்கள், துறந்தார்க்கு (இருவகைப்பற்றையுந்) துறந்தவர்களுக்கு, துப்புரவு - உண்டியும் மருந்தும் இருப்பிடமும், வேண்டி (உதவுதலை) வேண்டி, தவம்-(தாம்) தவஞ்செய்தலை, மறந்தார்கொல் - மறந்தார்போலும், எ-று.

௩௬௨ உ௭-ஆம் - அதி - தவம்.

(க-ரை.) இல்வாழ்வோர் துறவிகளுக்கு உண்டிமருந்து இடம் உதவ வேண்டித் தவத்தை மறந்தார்போலும் என்பதாம்.

(வி-ரை.) துப்புரவு அனுபவிக்கப்படும் பொருள்கள். தவமானது-வேண்டியவைகளை வேண்டியபடியே பெறத்தருவதாதலால் யாவராலும் செய்யத்தகுவதாகிய அதைத் தம்மாலே செய்யப்படுகிற தானத்தின்மேல் விருப்பமிகுதியால், மறந்தார்போலுமெனவே தானத்தினும் தவம் உயர்ந்தது என்றதாயிற்று. (௩)

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

(ப-ரை.) ஒன்னார் (தமது அறத்துக்கு இடையூறுசெய்த) பகைவரை, தெறலும் - கெடச்செய்தலையும், உவந்தாரை (அதனை) விரும்பினவரை, ஆக்கலும் - உயரச்செய்தலையும், எண்ணின் (தவஞ்செய்வோர்)

நினைப்பாராயின், தவத்தான் - (அவரது) தவவலிமையினால், வரும் (அவை அவருக்கு) உண்டாகும், எ-று.

(க-ரை.) சாபம், அநுக்கிரகம், தவத்தால்வரும் - என்பதாம்.

(வி-ரை.) முழுதுந் துறந்தவர்க்கு பகைவரும், நட்பினரும், இருப்பது கூடாமையால் தவத்திற்கு ஏற்றிச்சொல்லப்பட்டது. எண்ணின் என்றதனால் அவர்க்கு அவை எண்ணுமளவே இயல்பென்பது தோன்றுகின்றது. பகைவர்பெரியராயினும் அவருக்குக்கேடும் விரும்பினவர் சிறியராயினும் அவருக்கு உயர்வும் நினைத்தவளவில்வந்து நிற்குமெனத் தவஞ்செய்வார்மேல்வைத்துத் தவத்தின் வல்லமைசொல்லியபடி. (ச)

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(ப-ரை.) வேண்டிய (முயன்றால்) பெறவேண்டியபயன்களை, வேண்டியாங்கும் - வேண்டியபடியே, எய்தலால் - (மறுமையிலே தாம்) பெறலாகுதலால், செய்தவம் - செய்யத்தருவதாகிய தவமானது, ஈண்டு - இம்மையில், முயலப்படும் - (அறிவுடையோராலே) முயலப்படும், எ-று.

(க-ரை.) மறுமையின்பங்களையடையத் தவமுயற்சி செய்யப்படும்- என்பதாம்.

(வி-ரை.) ஈண்டென்றதனால் மறுமைவருவிக்கப்பட்டது, மேலே கதியும், மோக்ஷமும், தவத்தாலல்லாமல் அடைதல் கூடாதென்பதாம். இவை [நான்குபாட்டாலும் தவத்தினது சிறப்புச்சொல்லப்பட்டது.]

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(ப-ரை.) தவஞ்செய்வார் - தவத்தைச் செய்வார், தங்கருமஞ் செய்வார் - தமதுகருமத்தைச்செய்பவராவார், மற்றல்லார் - மற்றைப்பொருளின்பங்களைச்செய்வார், ஆசையுட்பட்டு (அவைகளி) னாசையாகிய வலையில் அகப்பட்டு அவஞ்செய்வார் (தமக்குக்) கேடுசெய்பவராவார், எ-று.



(க-ரை.) தவஞ்செய்பவர் நித்தியப்பொருளை அடைவர்-என்பதாம்.

(வி-ரை.) அநித்தியமாய் மூவகைத்துன்பத்துக்கு இடமாய் உயிரின் வேறாய் உள்ள உடம்புக்கு வருத்தம் வருமென்று விடாமல் தவத்தைச்

செய்தால், பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு, இவைகளால் அநாதியாகத் துன்பப்பட்டுக்கொண்டுவருகிற உயிரானது ஞானம்பெற்று மோக்ஷத்தை அடையும், ஆதலால் தவஞ்செய்வாரைத் தங்கருமஞ் செய்வாரென்றும், க்ஷணத்தில் அழிவதாகிய சிற்றின்பத்தின்பொருட்டுப் பலபிறவிகளிலும் துன்பப்படத்தக்க பாவஞ்செய்துகொள்ளுதலால்அல்லாதாரை அவஞ்செய்வாரென்றும், சொல்லினர். நித்தியமின்மை-அநித்தியம்.(சு)

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(ப-ரை.) சுடச்சுடரும் (புடத்தீயானது) சுடச்சுடரும், பொன்போல் - பொன்னுக்குக் குற்றநீங்கல்போல், நோக்கிற்பவர்க்கு தவஞ்செய்யவல்லவர்க்கு. துன்பம் (அதனால் வருகிற) துன்பம், சுடச்சுட, ஒளிவிடும் - ஒளிமிகும், எ-று.

(க-ரை.) புடத்தால் பொன்பிரகாசிப்பதுபோல் தவத்தால்ஞானம் பிரகாசிக்கும்-என்பதாம்.

(வி-ரை.) ஒளி பொன்னுக்கு காந்தியும் தவஞ்செய்வோர்க்கு ஞானமும் ஆம். காந்திமிகுந்தோறும் பொன்னுக்கு குற்றம்நீங்கல்போல ஞானமிகுந்தோறும் அவர்க்குப் பாவம்நீங்கல் கொள்க. ஒளிபோற் பொருளை விளக்கலால் ஞானம் ஒளியெனப்பட்டது. (எ)

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(ப-ரை.) தன்னுயிர் - தனது உயிரை, தானற - தனக்கு உரித்தாக, பெற்றானை - பெற்றவனை, ஏனைய-அது பெறாதவையாகிய, மன்னுயிரெல்லாம் - நிலைபேறுடைய உயிர்களெல்லாம், தொழும் - வணங்கும், எ-று.

(க-ரை.) தவத்தாலுயிர்பெற்றவனை எல்லா உயிரும் வணங்கும்.

(வி-ரை.) தனக்குரித்தாதல் - தவமாகிய தன் கருமஞ்செய்தல் அதைக்காட்டிலும் பெறுதற்கு உரியது இல்லாமையால், பெற்றானை யென்றார். அது பெறாதவையென்றது, ஆசையிற்பட்டு அவஞ்செய்யு முயிர்களை, சாபானுக்கிரகவல்லமையைப் பெற்றிருக்கையினாலே எல்லாவுயிருந் தொழுமென்றார். (அ)

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

(ப-ரை.) கூற்றம் - இயமனை, குதித்தலும் - கடத்தலும், கைகூடு ம் - உண்டாகும், நோற்றலின் - தவஞ்செய்தலால் வருவதாகிய, ஆற் றல் - வல்லமையை, தலைப்பட்டவர்க்கு - கூடியவர்க்கு, எ-று.

(க-ரை.) தவத்தலைமை யடைந்தவர் இயமனை வெல்லுவர்-என்பதாம்.

(வி-ரை.) குதித்தலுமென்னும் உம்மை அதுகூடாமையை விளக்கி யது. ஆற்றல் - சாபாநுக்கிரகம். [இவைநான்குபாட்டாலும் தவஞ்செய் வோரது உயர்ச்சிசொல்லப்பட்டது.] (கூ)

இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(ப-ரை.) (உலகத்திலேசெல்வர் சிலராக) இலர் - வறியவர், பலரா கியகாரணம் - பலராதற்குக்காரணம் (யாதென்றால்) (அது) நோற்பார்- தவஞ்செய்வோர், சிலர் - சிலராக, நோலாதவர் - தவஞ்செய்யாதவர், பலர் - பலராதல், எ-று.

(க-ரை.) தவஞ்செய்யாதவர் பலராதலால் திர்ப்பாக்கியர் பலர்-என் பதாம்.

(வி-ரை.) இங்கே செல்வம் (ஞானத்தையும்) வறுமை - அஞ்ஞான த்தையும், குறித்தும்நின்றன. நோற்பார்சிலரெனக் காரணத்தைச்சொ ல்லலால் அதன்காரியமாகியசெல்வர் சிலராதல் வருவிக்கப்பட்டது. [இ தனால் தவஞ்செய்யார்க்கு இம்மையின்பமும் இல்லையென்று இதனால் அதனது தாழ்வுசொல்லப்பட்டது.] (கo)

இருபத்தேழாம் அதிகாரம் தவம்
முற்றிற்று.

---

## இருபத்தெட்டாம் - அதிகாரம்.

## ௪. கூடாவொழுக்கம்.

அஃதாவது: தாம்விட்ட காமவின்பத்தை உறுதியில்லாமையினா லே பின்னும் விரும்பும் வழிதோன்ற அவ்வழியே கொண்டுநின்று தவத் தோடு பொருந்தாததாகிய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

(ப-ரை) வஞ்சமனத்தான் - வஞ்சம்பொருந்திய மனத்தை யுடையவனது, படிற்றொழுக்கம் - மறைந்த ஒழுக்கத்தை, பூதங்களைந்தும் (உடம்பாய் அவனோடு கலந்துநிற்கின்ற) பஞ்சபூதங்களும் (கண்டு) அகத்தே (தம்) முன்னேநகும் - சிரிக்கும், எ-று.



(க-ரை) வஞ்சகன் ஒழுகத்தைக்கண்டு அவன் பஞ்சபூதங்களுஞ் சிரிக்கும் என்பதாம்.

(வி-ரை) காமம் தன்னுள்ளே வருத்திக்கொண்டிருக்கவும் காமமில்லாமையைச் சொல்லிப் புறத்தாரை வஞ்சித்தலால், வஞ்சமனமென்றும், அவ்வருத்தம் பொறுக்கமாட்டாமற் செய்யும் கள்ளச் செய்கையைப் படிற்றொழுக்கமென்றும், உலகத்திலே களவுடையவர் பிறர் அறியாமற்செய்யுங் காரியங்களுக்கும் ஐம்பெரும் பூதமேயே சாட்சியாகலின் அச்செய்கையையும், அவன் மறைக்கின்ற விதத்தையும், அறிந்து அவன் அறியாமல் தம்முள்ளே சிரித்தலால் அகத்தேநகுமென்றும், சொல்லினர். செய்த குற்றம் மறையாதாகலின் தவஞ்செய்வோனுக்கு அவ்வொழுக்கம், ஆகாதென்பது கருத்து. (க)

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்.

(ப-ரை.) தான் அறி - அறிந்த, குற்றம் - குற்றத்திலே, தன்னெஞ்சம், தனது மனம், படின் - தாழுமாயின் (ஒருவனுக்கு) வானுயர் - வான்போலுயர்ந்த தோற்றம் - தவவேடமானது, எவன் - என்னபயனை செய்யும் - எ-று.

(க-ரை) தன்மனம் தானறிந்த, குற்றத்திற்படில் உயர்ந்த தவவேடம் என்னபயன் என்பதாம்.

(வி-ரை) அறியாதுசெய்த குற்றத்துக்கு அல்லாமல் அறிந்துசெய்த குற்றத்துக்கும் பிராயசித்தம் இல்லாமையால் நெஞ்சு குற்றமுடையதாகிவிடும் விடவே நின்ற வேஷமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலே அல்லது வேறுபயன் இல்லையென்பதாம்.

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்து மேய்ந் தற்று.

(ப-ரை) வலி (மனத்தை அடக்கும்) வல்லமையை, இல் - இல்லாத, நிலைமையான் - இயல்புடையவன், வல்லுருவம் - அவ்வல்லமையை யுடையவரது

வேடத்தைக்கொண்டு (மனம் போனவழி போகுதல்) பெற்றம் - பசுவானது (காவற்காரர் துரத்தாதிருக்கும்படி) புலியின்றோல் - புலியினதுதோலை,போர்த்து-போர்த்துக்கொண்டு, மேய்ந்தற்று - பயிரைமேய்ந்தால் அச்செய்கைபோலும், எ-று.

(க-ரை) மனமடங்காதவன் தவவேடம் பசு புலித்தோல்போர்த்து மேய்ந்தாற்போலும் - என்பதாம்.

(வி-ரை) மேய்தலுக்கு ஏற்க மனம்போனவழி போகுதல் வருவிக்கப்பட்டது. காவற்காரர் துரத்தாமை "புலிபசித்தாற் புல்லைத்தின்னாது" என்பதனாலும், அச்சத்தாலும், ஆம் - ஆகவே, அவ்வல்லுருவங்கொள்ளுதற்குப் பயன் அப்படிப்பட்ட காரணங்களால், உலகத்தார் சந்தேகப்படாமையாயிற்று. பசு தனக்கு உரிய புல்லைவிட்டுப் புலித்தோல்போர்த்துப்பிறர்க்குஉரியபயிரைமே





ய்தல்போல் அக்கூடாவொழுக்கத்தான் தனக்கு உரிய மனைவியைவிட்டுத் தவவேடங்கொண்டு பிறருக்கு உரிய பெண்டிரை அநுபவித்தலெனக. [அப்படி செய்கிறபசு இல்லாமையால் இப்பொருளுவமையணி.] (௩)

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(ப-ரை) (அவ்வல்லமையில்லாத நிலைமையான்) தவம் - தவவேடத்திலே, மறைந்து - அல்லவை, தவமல்லாதவைகளை - செய்தல், வேட்டுவன் - வேடன், புதல்-புதலிலே மறைந்து, புள் - பறவைகளை, சிமிழ்த்தற்று - பிடித்தல் போலும், எ-று.

(க-ரை.) தவவேடத்தில் மறைந்தொழுகுவோன் வேடனை ஒப்பான்-என்பதாம்.

(வி-ரை.) தவம் அதன் வேடத்துக்கு ஆகுதலால் ஆகுபெயர். தவமல்லவற்றைச் செய்தலாவது பிறர்க்குஉரிய மகளிரைத் தன்வசதாராக்குதல், இப்படி செய்தலென்பது, இத்தொழிலுவமையினாலே தோன்றுதல் அறிக. (௪)

பற்றற்றேமென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம பலவுந் தரும்.

(ப-ரை.) (பிறர் தம்மை நன்கு மதித்தற்பொருட்டு) பற்றற்றேமென்பார்-

பற்றற்றேமென்று (சொல்லுவாரது) படிற்றொழுக்கம் - மறைத்தவொழுக்கமானது (அப்பொழுது இனிதுபோல தோன்றுமாயினும்) எற்றெற்றென்று (பின்) என்செய்தாம் என்செய்தோமென்று (தாமே இரங்கும்படி) ஏதம்பலவும்பல - துன்பங்களையும், தரும் (அவருக்குக்) கொடுக்கும், எ-று.

(க-ரை.) பற்றற்றேமென்பவரது பொய்யொழுக்கம் பின்பு துன்பந்தரும் என்பதாம்.

(வி-ரை.) சொல்லினளவி லல்லதுபற்று நீங்காமையால் பற்றற்றேமென்பாரென்றும், சிறிதாய்க் கணத்துள்ளே அழிவதாகிய இன்பத்தின்பொருட்டுப் பெரிதாய் நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச்செய்வோர் அது துன்பத்தைத்தரும்போது ஐயோ பாவமேயென்று அழுவாராதலின் எற்றெற்றென்றும் சொல்லினர். [இவை ஐந்துபாட்டாலும் கூடாவொழுக்கத்தினது இழுக்குச்சொல்லப்பட்டது.] (ரு)

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

(ப-ரை.) நெஞ்சின் - மனத்தினால் துறவார் - (பற்றுகளைத்) துறவாராகி, துறந்தார்போல் - பாசநீங்கினவர்போல், வஞ்சித்து - தானஞ்செய்வாரை) வஞ்சித்து, வாழ்வாரின் - வாழுமவர்போல், வன்கணார் - இரக்கமில்லாதவர், இல் - இல்லை, எ-று.



(க-ரை.) துறந்தவர்போல் வஞ்சித்து வாழ்பவரிலுங் கொடியவரில்லை என்பதாம்.

(வி-ரை.) தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம்மறுமையிலே நற்கதி அடைதற்பொருட்டு இந்த அரியதவத்தோர்க்கு இன்னது கொடுப்போமென்று அறியாமற்கொடுத்தவரை அதைவாங்கிக்கொண்டு தாழ்ந்தகதியை அடைவித்தலாம், தமக்கு ஆமவைகளைசசெய்தார்க்கு ஆகாதவைகளைச் செய்தலால் வன்கணாரில்லென்றார். (சு)

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(ப-ரை.) புறம்-மேலே, குன்றி-குன்றிமணியானது, கண்டனையரேனும் காணப்படுதல்போற் காணப்படுகிற செம்மையை யுடையவராயினும், அகம்-

உள்ளே, குன்றின் மூக்கின்-அக்குன்றிமணியின் மூக்குப்போல, கரியார்-கறுத்திருப்பவரையும், உடைத்து (உலகமானது) உடையதாயிருக்கின்றது-எ-று.

(க-ரை.) குன்றிமணிபோற் புறத்திற் சுத்தமும் அகத்திற்குற்றமும் உடையவரை உலகமுடைத்து என்பதாம்.

(வி-ரை.) குன்றியாகிய உபமானத்திலே சிறத்தைக்காட்டுகிற செம்மை கருமைகள் உபமேயத்திலே செவ்வையா யிருக்கையையும் அறிவில்லாமையையும் காட்டுகின்றன. (எ)

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(ப-ரை.) மாசு - அழுக்கானது, மனத்ததாக (தம்) மனத்திலுள்ளதாக, மாண்டார் (பிறர்க்குத் தவத்தால்) மாட்சிமையுடையவராக, நீராடி - நீரிலே முழுகிக் (காட்டி) மறைந்து (தாம் அவனிடத்தே) மறைந்து, ஒழுகும் - நடக்கும், மாந்தர்-மனிதர், பலர் - (உலகத்திலே) பலர், எ-று

(க-ரை.) உள்ளத்தழுக்கிருக்க உடலழுக்கைக்கழுவுவார் பலர்-என்பதாம்.

(வி-ரை.) மாசு காமவெகுளி மயக்கங்கள் அவை போதற்காக வல்லாமல் மாட்சிமைபட்டவரென்று பிறர் நினைத்தற்காக நீராடுதலால் அத்தொழிலே அவர் மறைதற்கு இடமாகின்றது [இவை மூன்றுபாட்டாலும் கூடாவொழுக்கத்தாரது குற்றமும் அவரை அறிந்து நீக்கவேண்டுமென்பதும் சொல்லப்பட்டன.] (அ)

கணைகொடி தியாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

(ப-ரை.) கணை-அம்பானது (வடிவினாலே செவ்விதாயிருந்தாலும்) கொ - (செயலினாலே) கொடியதாயிருக்கின்றது, யாழ்-வீணையானது, கோடு-(வடிவினாலே) வளைவினதாயிருந்தாலும், செவ்விது-(செயலினாலே) செவ்விதா



யிருக்கின்றது, ஆங்கு-அவ்வகையே, அன்ன-தவஞ்செய்வார், கொடியர்-செவ்வியராயிருக்கைகளை (அவரது வடிவினாலே கொள்ளாமல்) வினைபடுபாலால் (அவரது)செயல்பட்டபகுப்பினாலே, கொளல்-அறிந்துகொள்ளக்கடவர், எ-று.

(க-ரை.) தவத்தோர் என்பதை நடக்கையாலறியப்படும்-என்பதாம்.

(வி-ரை.) அம்புக்குச்செயல் - கொல்லுதல், வீணைக்குச்செயல் - இசையினாலே இன்பத்தைத்தருதல். அவ்வகையே அவர் பாவத்தைச்செய்தால்-கொடியரென்றும், அறத்தைச்செய்தால்-செவ்வியரென்றும், சொல்லவேண்டுமென்பதாம். [இதனால் அவரை அறியும்வழி சொல்லப்பட்டது.] (௯)

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

(ப-ரை.) (தவஞ்செய்வோர்க்கு) மழித்தலும், (தலைமயிரை) மழித்தலும் நீட்டலும் - (அதனைச்) சடையாக்கலும், அல்லது வளர்த்தலும், வேண்டா - வேண்டுவனவல்ல, உலகம்-உயர்ந்தோரால், பழித்தது - (தவத்திற்கு ஆகாதென்று) குற்றஞ்சொல்லப்பட்ட ஒழுக்கத்தை, ஒழித்துவிடின் - நீக்கி விடுவாராயின், எ-று.

(க-ரை) உயர்ந்தோர் குற்றமென்று சொன்னவைகளை நீக்கவேண்டும் - என்பதாம்.

(வி-ரை.) மழித்தலென்பதே தலைமயிரைக் காட்டலால் அதைச்சொல்லினரில்லை. [இதனாலே கூடாவொழுக்கத்தைவிட்டுத் தவஞ்செய்வோர்க்கு வேஷமும் வேண்டாமென அவரது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௧௦)

இருபத்தெட்டாம் அதிகாரம் - கூடா ஒழுக்கம்
முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாம் அதிகாரம்
## 4 கள்ளாமை.



அஃதாவது: பிறருடைமையாயுள்ளவைகளில் யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக்கொள்ள நினையாமையாம். நினைத்தலும் செய்தற்குச் சமானமாதலால் கள்ளாமை யென்றார்.

இல்லறத்தார்க்குத் தம்மவரோடு விளையாட்டாகவாவது, செய்யக்கூடும் துறவறத்தாருக்கு நினைத்தவிடத்தும் பெரியதவறாம், ஆதலின் இது துறவறமாயிற்று. புறத்திலே போகாமல்மடங்கி ஓரிடத்தையுற்று உயிரை நோக்கவேண்டியதாகிய அவரது மனம் அதைவிட்டுப் புறத்திலேபோய்ப் பல விடத்தையுற்று உடம்பின்பொருட்டுப் பொருளைநோக்குதலல்லாமலும் அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ளநினைத்தல் அவருக்குப் பெரியகுற்றமாதல் அறிக. இவ்விதம் வாய்மைமுதற்சொல்லாமை முடிவாகிய நான்கதிகாரத்துக்கும் ஒக்கும். இது

பொருளைப்பற்றி யுண்டாங் குற்றத்தை விலக்குவதாகலின் காமம்பற்றி யுண்டாங் கூடாவொழுக்கத்தின் பின்வைக்கப்பட்டது.

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(ப-ரை) எள்ளாமை - (முத்தியை) இகழாமல், வேண்டுவா னென்பான், விரும்புவோன், இவனென்று - (தனத்தோராலே) நன்றாக மதிக்கப்படுவோன்- எனைத்தொன்றும் - யாதொரு பொருளையும், கள்ளாமை - பிறரை வஞ்சித்துக் கொள்ள நினையாதபடி, தன்னெஞ்சு - தனது நெஞ்சை, காக்க - காக்கக் கடவன், எ-று.

(க-ரை.) முத்தியை வேண்டுபவன் களவை நினையாதபடி தன் மனதைக் காக்கக்கடவன், என்பதாம்.

(வி-ரை.) முத்தியை இகழ்தலாவது காட்சியே பிரமாணமென்றும், நிலம், நீர், நெருப்பு, காற்று, எனப் பூதம், நான்கேயென்றும், அவைகள் கூடுதலின் சிறப்பினாலே தோன்றிப் பிரிவினாலே அழிவதாகிய உடம்பினிடத்தே அறிவு மதுவினிடத்தே களிப்புப்போல் வெளிப்பட்டு அழியுமென்றும், இறந்தவுயிர் பின்னே பிறவாதென்றும், இன்பமும் பொருளும் முயர்ச்சியால் வருவதென்றும், சொல்லும். உலோகாயுத மதமுதலாகிய மயக்க நூல்களைத் தெளிந்து அவற்றுக்கு ஏற்காடத்தலாம். ஞான நூற்பொருளை யாயினும் ஆசாரியனுக்கு வழிபாடுசெய்யாமல் வஞ்சித்துக்கொள்ளின் அதுவும் களவாமாகலின் எனைத் தொன்றுமென்றார். நெஞ்சு கள்ளாமை காக்கவென்றலால் துறந்தோர்க்கு விலக்கப்பட்ட கள்ளுதலாவது, களவு செய்ய நினைத்தலென்பது பெற்றும். (க)

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

(ப-ரை.) (குற்றங்களை) உள்ளத்தால்-(தமது) நெஞ்சினாலே, உள்ளலும் - நினைத்தலும், தீதே-(துறந்தார்க்குப்) பாவமேயாகும்-(ஆதலால்) பிறன் - பிறனதுபொருளை, கள்ளத்தால் - அவனறியாத வகையினாலே, கொள்வோம்-வஞ்சித்துக்கொள்வோம், எனல்-என்று நினையாதிருக்கக்கடவர், எ-று.

(க-ரை) தீமைகளை நினைத்தலுங் குற்றமாதலால் பிறன்பொருளைக்களவு செய்ய நினையாதிருக்கக்கடவர் என்பதாம்.

(வி-ரை.) அவருள்ளம் சிறந்ததென்பது தோன்றுதற்கு உள்ளத்தாலென்

பது அதிகமாகச் சொல்லப்பட்டது. [இவை யிரண்டுபாட்டாலும் துறந்தோர்க்குக் களவாவது இது வென்பதும் அதை நீக்கவேண்டு மென்பதும் சொல்லப்பட்டன.] (உ)

களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

கஅ0 உக - ஆம் - அதி - கள்ளாமை.

(ப-ரை.) களவினால் - களவுசெய்தலினால், ஆகிய - உண்டாகிய, ஆக்கம் - பொருளானது, ஆவதுபோல - வளர்வதுபோல, (தோன்றி) அளவிறந்து - (தனது) எல்லையைக்கடந்து, கெடும் - அழியும், எ-று.

(க-ரை.) களவால் வந்தசெல்வம் வளர்வதுபோலக் கெடும் என்பதாம்.

(வி-ரை.) ஆக்கத்துக்கு ஏதுவாகலால் ஆக்கமெனப்பட்டது. எல்லையைக் கடந்து கெடுதலாவது போங்கால் பாவத்தையும், பழியையும்நிறுத்திச் செய்த அறத்தையும் உடன் கொண்டுபோகுதல். (ங)

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(ப-ரை.) களவின்கண்-பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்ளுதலிலே, கன்றிய - மிகுந்த, காதல் - ஆசையானது, (அப்போது இனிதுபோல் தோன்றி) விளைவின்கண் - தான் பயனைக்கொடுக்கும்போது, வீயாவிழுமம்-தொலையாத துன்பத்தை, தரும்-கொடுக்கும், எ-று

(க-ரை.) களவை யிச்சிக்கு மிச்சைகெடாத துன்பத்தைத்தரும் - என்பதாம்.

(வி-ரை.) மிருதலால் எக்காலும் அக்களவையே கற்பித்துப் பாவமும்பழியும் கொடுத்தே வருதலால் வீயாவிழுமந் தருமென்றார். [இவை இரண்டுபாட்டாலும் அதை நீக்குதற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (ச)

அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(ப-ரை.) அருள்-அருளினது உயர்ச்சியை, கருதி-அறிந்து, அன்புடைய ராதல் - (அதன்மேல்) அன்புடையராய் நடத்தல், பொருள் - (பிறர்) பொருளை, கருதி - (வஞ்சித்துக்கொள்ள) நினைத்து, பொச்சாப்பு - (அவரது) சோர்வை, பார்ப்பார்கண் - பார்ப்போரிடத்து, இல்-உண்டாகாது, எ-று.

(க-ரை.) பிறர்பொருளைக் களவுசெய்ய நினைப்பவர்களுக்கு அருளும் அன்புமில்லை - என்பதாம்.

(வி-ரை.) தமக்கு உரியபொருளையும் தீதென்று வெறுத்துத் துறந்தவர்

பின்னே பிறர்க்கு உரியபொருளை நன்றென்று விரும்பி அதனை வஞ்சித்துக் கொள்ளுதற்கு அவரது சோர்வைப்பார்ப்பாராயின் அவரிடத்தே பிறவுயிர்களி ன்மேலே செய்தற்கு உரிய அருளினாலே தவறாது நடத்தல் கூடாதென்பதாம்.

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

(ப-ரை.) களவின்கண் – களவினிடத்தே, கன்றிய – மிகுந்த, காதலவர் – ஆசையையுடையவர், அளவின்கண் - (உயிர் முதலானவைகளை) அளவுசெய்த லாகிய வழியிலே, நின்று-நிலைபெற்று, ஒழுகலாற்றார் - (அதற்கு) ஏற்க நடக்க மாட்டார், எ-று.



(க-ரை.) களவிலிச்சை யுடையவர்கள் இருமை வழியிலே நடவார் - என்பதாம்.

(வி-ரை.) உயிர் முதலானவைகளை யளவுசெய்தலாவது, காட்சி முதலா கிய பிரமாணங்களைக்கொண்டு உயிர்ப்பொருளையும், அதற்கு அநாதியாய் வரு கிற குற்றவினை விளைவுகளையும், அவற்றால் அவ்வுயிர் * நாற்கதியிலே பிறந் திறந்துவருதலையும், அதனை ஒழித்தற்கு உபாயமான யோக ஞானங்களையும், அவற்றால் அவ்வுயிர் அடையுமுத்தியையும், அளவுசெய்து, உள்ளவாறு அறி தல். அதற்கு ஏற்பநடத்தலாவது, அளவு செய்யப்பட்டவைகளிலே தீயவை களினீங்கி நல்லவைகளின் வழிநிற்கை. (௭)

களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

(ப-ரை.) களவென்னும் - களவென்று சொல்லப்படும், கார் – இருண்ட, அறிவாண்மை–அறிவினையுடையராயிருக்கையானது, அளவென்னும் – (உயிர் முதலானவைகளை) அளத்தலென்று சொல்லப்படும், ஆற்றல் - பெருமையை, புரிந்தார்கண் - விரும்பினவரிடத்து, இல்–இல்லை, எ-று.

(க-ரை.) களவு செய்வோமென்னு மறியாமை பெருமை யுடையோரிடத் தில்லை என்பதாம்.

(வி-ரை.) இருள்மயக்கம் களவென்னுங் காரியவாண்மை எனக் காரியத்தைக் காரணமாகவும், அளவென்னு மாற்றல் எனக் காரணத்தைக் காரியமாகவும் உபசரித்தார். [களவும், துறவறமும், இருளும், ஒளியும்போல் ஒன்றற்கொன்று வகையாகலின் கூடி நிற்பனவல்லவென்பது இவை மூன்றுபாட்டானும் சொல்லப்பட்டது.] (எ)

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

(ப-ரை.) களவறிந்தார்-களவை அறிந்தவரது, நெஞ்சில் - மனதில், கரவு வஞ்சனையானது, அளவறிந்தார் - அவ்வளத்தலை அறிந்தவரது, நெஞ்சத்து - நெஞ்சில், அறம்போல - அறமானதுபோல, நிற்கும்-நிலைபெறும், எ-று.

(க-ரை.) களவுசெய்வோரிடத்து வஞ்சனைவளரும் - என்பதாம்.

(வி-ரை.) உயிர் முதலானவைகளை அளந்து அறிந்தவர்களுக்குத் துறவறமானது அசையாது நிற்குமென்பது இவ்வுபமானத்தினாலே கொள்ளப்பட்டது. [களவோடு நீங்காது நிற்பது இதனாற் சொல்லப்பட்டது.] (அ)

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.



(ப-ரை.) களவல்ல - களவல்லாத, மற்றைய – மற்றவைகளை, தேற்றாதவர்-அறியாதவர் (களவொன்றையே அறிந்தவரென்றபடி) அளவல்ல – அவ்வளவல்லாத தீயவினைகளை, செய்து-நினைத்து, ஆங்கே-அப்போதே, வீவர் கெடுவார், எ-று.

(க-ரை.) களவை அறிந்தோர் பாவங்களைச்செய்து அழிவர் என்பதாம்.

(வி-ரை.) தீய நினைவுகளாவன: பொருளுடையாரை வஞ்சிக்கும் விதமும், அவ்வஞ்சனையால் அதைக்கொள்ளும்விதமும், கொள்ளப்பட்ட அப்பொருளினாலே தாம் போகங்களை அனுபவிக்கும் விதமும், முதலானவை நினைத்தலுஞ் செய்தலோடொக்கு மாகலின் செய்தென்று அந்நினைப்பு உள்ள அறங்களைப்போக்கி, மறைப்பான சொல்லையும் செயலையும் புகுவித்து, அப்போதே கெடுக்குமாதலால் ஆங்கே வீவரென்றும் சொல்லினர். மற்றவையான துறந்தார்க்கு உணவாகச்சொல்லப்பட்ட, காய், கனி, கிழங்கு, சருகு முதலானவையும், இல்லறத்தோரால் தானஞ்செய்யப்பட்டவையும் ஆம் அறியாமையாவது

அவைகளையே உண்டு போதுமென்றிருக்க அறியாமை. [இதனால் களவினாலே கெடுமாறு சொல்லப்பட்டது]　(௯)

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

(ப-ரை.) கள்வார்க்கு - களவிலே பழகுவோர்க்கு, உயிர்நிலை (தம்மின்வே றல்லாத) உடம்பும், தள்ளும்-தவறும், கள்ளார்க்கு - களவிலே பழகாதவர்க்கு - புத்தேளுலகு (கெடுத்தராமாகிய) தேவருலகமும் தள்ளாது-தவறாது, எ-று.

(க-ரை) களவுசெய்வோர் நரகம் அடைவர்-என்பதாம்.

(வி-ரை) தொக்குநின்ற சிறப்பும்மை இரண்டும் வருவிக்கப்பட்டன, இம்மையிலும் அரசனால் ஒறுக்கப்படுதலால், உடம்பும்தள்ளுமென்றும் மறுமையிலும் தேவராகுதல் கூடுமாதலால், தேவருலகம் தள்ளாதென்றும் சொல்லப்பட்டன. [இதனால் இருவர் பயன்களும் சேர்த்துச் சொல்லப்பட்டன.]

இருபத்தொன்பதாம் அதிகாரம் - கள்ளாமை
முற்றிற்று.

---

## முப்பதாம் - அதிகாரம்.

# வாய்மை.



அஃதாவது: மெய்யினது தன்மையாம் பெரும்பாலும் காமமும் பொருளைப்பற்றி உண்டாவதாகிய பொய்ம்மையை விலக்கலால், இது கூடாவொழுக்கங்கள் கள்ளாமைகளின் பின்வைக்கப்பட்டது.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

௩0 - ஆம் - அதி - வாய்மை.　௨௯௧

(ப-ரை.) வாய்மை யெனப்படுவது - மெய்ம்மையென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, யாதெனின்-யாதென்று வினவினால், அது (பிறிதோருயிர்க்கு) யாதொன்றும்-சிறிதாயினும், தீமையில்லாத-தீமையைத் தராத சொல்லுகளை, சொலல்-சொல்லுதல், எ-று.

(க-ரை) பிறருக்குத் தீமையைத் தராத சொற்களைச் சொல்லுதல் சத்தியம் - என்பதாம்.

(வி-ரை) இதனால் நடந்ததைச் சொல்லுதல் வாய்மை அல்லவென்று நீக்கப்பட்டது அங்நடந்ததைச் சொல்லுதலும் தீங்கைத் தராதிருக்குமாயின் மெய்

மையாம் தருமாயின் பொய்மையாமென்பது கருத்து. (௪)

பொய்ம்மையும் வாய்ம்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

(ப-ரை.) பொய்ம்மையும்-பொய்மைச் சொற்களும், புரைதீர்ந்த குற்றத்தினின்று நீங்கிய, நன்மை - நன்மையை பயக்குமெனின் (பிறருக்குத்) தருமாயின், வாய்மையிடத்த-மெய்மைச்சொற்களி னிடத்தனவாம், எ-று.

(க-ரை.) குற்றமற்ற நன்மையைதரின் பொய்ம்மையும் வாய்மையை ஒக்கும்-என்பதாம்.

(வி-ரை.) குற்றந்தீர்ந்த நன்மை-அறம், அதனைத் தருதலாவது கேட்டையாவது மரணத்தையாவது அடைய நின்றதோருயிர் அச்சொற்களின் பொய்ம்மையினாலே அதுநீங்கி இன்புறுதல் நடவாததைச் சொல்லுதலும் நன்மையைத் தாராதாயின் பொய்ம்மையாம்-தருமாயின் மெய்ம்மையா மென்பது கருத்து [இவை இரண்டுபாட்டாலும் தீங்கைத்தாராத நடந்ததைச் சொல்லுதலும், நன்மையைத்தரும் நடவாததைச் சொல்லுதலும் மெய்ம்மையாம் எனவும், தீங்கைத்தரும் நடந்ததைச்சொல்லுதலும், நன்மையைத் தராத நடவாததைச்சொல்லுதலும் பொய்மையாம்எனவும், அவைகளினிலக்கணஞ் சொல்லப்பட்டது.]

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(ப-ரை.) (ஒருவன்) தன்னெஞ்சு-தனது நெஞ்சினாலே, அறிவது - அறியப்படுவதொன்றை, பொய்யற்க (பிறர் அறிந்திலரென்று) பொய்யா தொழியக்கடவன், பொய்த்தபின்-பொய்த்தானாயின், தன்னெஞ்சே (அதனை அறிந்த) தனது மனம், (அப்பாவத்துக்குச் சாக்ஷியாய் நின்று) தன்னை சுடும்-தபிக்கும் அதன் பயனாகிய துன்பத்தை அடைவிக்கும், எ-று.

(க-ரை.) தானறிந்த பொய்யைச் சொன்னால் தன்மனமே தன்னைக் கெடுக்கும் - என்பதாம்.

(வி-ரை.) [பொய் மறையாததாயிருக்கையால் அதைச் சொல்லலாகாதென்பது இதனால் சொல்லப்பட்டது.] (௩.)



 ௩௦ - ஆம் - அதி - வாய்மை.

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

(ப-ரை.) (ஒருவன்) உள்ளத்தால்-தன்மனதுக்கேற்ப, பொய்யாது-பொய் பேசாமல், ஒழுகின்-நடப்பானாயின், (அவன்) உலகத்தார்-உயர்ந்தோரது, உள்ளத்துளெல்லாம்-மனங்களிலெல்லாம், உளன் - இருப்பான், எ-று.

(க-ரை) பொய்யாத உள்ளமுடையோன் உயர்ந்தோர் உள்ளத்திலிருப்பான்-என்பதாம்.

(வி-ரை) உள்ளத்துக்கு என்பது உள்ளத்தாலென வருதலால், வேற்றுமை மயக்கம் பொய்பேசாமல் நடத்தலாவது, மெய்பேசி நடத்தல், அவனது அவ்வறத்தி னருமையை நோக்கி உயர்ந்தோர் எப்பொழுதும் அவனையே நினைப்பாரென்பதாம். [இதனால் இம்மைப்பயன் சொல்லப்பட்டது.] (ச)

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை

(ப-ரை.) (ஒருவன்) மனத்தோடு (தன்) மனத்தோடு பொருந்த, வாய்மை-உண்மையை, மொழியின் - சொல்லுவானாயின் (அவன்) தவத்தோடு - தவத்துடனே, தானம் - தானத்தை, செய்வாரின் - (ஒருமிக்கச்) செய்வாரினும், தலை - சிறப்புடையவனாவான், எ-று.

(க-ரை.) உண்மைசொல்லுவோன் தவம், தானம், செய்பவரினும் மேலானவன் என்பதாம்.

(வி-ரை.) புறமாகிய மெய்யினாலே செய்யப்படும் அவைகளினும் அகமாகிய மனோவாக்குகளாலே செய்யப்படும் இது மிகப்பயனுடையதென்பதாம்.

பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

(ப-ரை.) (ஒருவனுக்கு) பொய்யாமை யன்ன - பொய்பேசாமைக்கு ஒப்பாகிய, புகழ்-புகழ்க்காரணம், இல்லை-(இம்மைக்கு) இல்லை (அது அவனுக்கு) எய்யாமை-(உடம்பு) வருந்தாமல், எல்லாவறமும்-எல்லாவறங்களையும், தரும்-(மறுமைக்குந்தானே) தரும், எ-று.

(க-ரை.) பொய் சொல்லாமையே புகழ்-அது எல்லாத் தருமமுங் கொடுக்கும்-என்பதாம்.

(வி-ரை.) புகழ் அதன் காரணத்தைக் காட்டலா லாகுபெயர். இல்லறத்திற்குப் பொருள் சம்பாதிக்கை முதலானவைகளாலும் - துறவறத்துக்கு உண்ணாமை முதலானவைகளாலும், வருத்தப் படவேண்டுமல்லவா அவ்வருத்தங்கள் அடையாமல் அவ்விருவகை அறங்களும் கொடுக்கும் பயன்களைப் பொய்யாமைதானே கொடுக்குமென்றற்கு-எய்யாமை யெல்லாவறமுந் தருமென்றார்.

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(ப-ரை.) (ஒருவன்) பொய்யாமை பொய்யாமை - பொய் பேசாமையை யே பொய் பேசாமையையே, ஆற்றின் - செய்யவல்லவனாயின் (அவன்) அறம் பிற - பிறவறங்களை, செய்யாமை செய்யாமை - செய்யாமையே செய்யாமையே நன்று - நல்லது, எ-று.

(க-ரை.) பொய்சொல்லாது நடக்கில் வேறு தருமஞ் செய்யாமையே நல்லது - என்பதாம்.

(வி-ரை.) பொய்யாமை பொய்யாமை யென்னும் அடுக்கு இடைவிடாமை பற்றி வந்தது, செய்யாமை செய்யாமை என்னும் அடுக்கு துணிவு பற்றி வந்தது, பல வறங்களையும் மேற்கொண்டு செய்தற்கு அருமையாதலால் சிலதவினால் குற்றப்படுதலின் அவ்வெல்லா வறங்களின பயன்களையும் தானே தரவல்ல, தாகிய இப்பொய் பேசாமை யொன்றையே மேற்கொண்டு தவறாமற் செய்தல் நல்லதென்றற்கு செய்யாமை செய்யாமை, நன்றென்றார். [பிறவறங்களெல்லாம் அரும்பயனைத் தானே தரவல்லதென்று மறுமைப்பயனது மிகுதி இவை மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.] (எ)

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்

(ப-ரை.) (ஒருவனுக்கு) புறம் - உடம்பு, தூய்மை - பரிசுத்தமாந்தன்மை, நீரான் - நீரினாலே, அமையும் - உண்டாகும், (அதுபோல்) அகம் - மனது, தூய்மை - பரிசுத்தமாந் தன்மை, வாய்மையான் - உண்மையால், காணப்படும் - உண்டாகும், எ-று.

(க-ரை.) உடம்பு நீராற் சுத்தமாகும் உள்ளஞ் சத்தியத்தாற் சுத்தமாகும் - என்பதாம்.

(வி-ரை.) புறத்தூயதாதல், அழுக்கு நீங்குதல், அகந்தூயதாதல், மெய்

யுணர்தல், எப்படி புறஞ் சுத்தமாதற்கு நீரல்லாமற் காரணம் இல்லையோ அப்படியே அகம் சுத்தமாதற்கு வாய்மையல்லாமற் காரணமில்லையென்றதாயிற்று.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(ப-ரை.) சான்றோர்க்கு (துறவிலுலே) நிறைந்தோருக்கு, எல்லாவிளக்கும் (புறத்திருளை நீக்குகிற உலகத்தோராறு) விளக்குகளெல்லாம், விளக்கல்ல-விளக்குகளாவனவல்ல, பொய்யாவிளக்கே (அகத்திருளை நீக்குகிற) (பொய்மையாகிய விளக்கே) விளக்கு-விளக்காம், எ-று.

(க-ரை.) பெரியோர்க்குப் பொய்சொல்லாமையே விளக்குஎன்பதாம்.

கருசு ௯௧ - ஆம - அற - மவகுளாமை.

(வி-ரை.) உலகத்தோராறு விளக்குகளாவன; சந்திரன், சூரியன், அக்கினி, அகத்திருள், அஞ்ஞானம், இவ்விளக்குகளுக்குப் போகாத அகத்திருள் போகலால், பொய்யாவிளக்கே விளக்கென்றார். (க)

யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற

(ப-ரை.) யாம் - எம்மால், மெய்யா - மெய்நூல்களாக, கண்டவற்றுள் - காணப்பட்ட நூல்களுள், எனைத்தொன்றும் - யாதொரு தன்மையாலும், வாய்மையின் - உண்மையினும், நல்ல - மேற்பட்டவையாகிய, பிற - பிறவறங்கள், இல்லை-கண்டதில்லை, எ-று

(க-ரை.) மெய்போன்ற பிறதருமங்களை யாம கண்டதில்லை-என்பதாம்

(வி-ரை.) மெய்யை அறிவிக்கிற நூல்களை மெய்யென்றதால் ஆகுபெயர் அந் நூல்களாவன: கடவுளாலும் அவனருள் வழிப்பட்டு பொருள்களை உள்ள வண்ணம் அறிந்து அறிந்தவண்ணம் சொல்ல வல்லவராலும் உலகத்தார் பிழைக்கும்பொருட்டு அருளிச்செய்யப்பட்ட ஆகமங்கள், அவை யெல்லாவற்றிலும் இது ஒப்பமுடிந்ததென்பதாம். [இவை மூன்று பாட்டாலும் இவ்வறத்தினது தலைமை சொல்லப்பட்டது.] (௰)

முப்பதாம் அதிகாரம் - வாய்மை
முற்றிற்று.

---

## முப்பத்தோரும் - அதிகாரம்.

# வெகுளாமை.

அஃதாவது: கோபஞ்செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்தே உண்டாகிய விடத்தும் கோபஞ்செய்யாமையாம் இது பொய்மைபற்றி உண்டாம் கோபத்தை விலக்கலால் வாய்மையின் பின் வைக்கப்பட்டது.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

(ப-ரை.) சினம் (தன்) கோபத்தை, செல்லிடத்து (அது) பலிக்குமிடத்து காப்பான் (எழும்பாமல்) தடுப்பவனே, காப்பான் (அருளினாலே) தடுப்பவனாவான், அல்லிடத்து-மற்றைப் பலியாதவிடத்து, காக்கின் (அதனைத்) தடுத்தால் என்-என்ன, காவாக்கால்-தடுக்காவிட்டால், என்-என்ன, எ-று.

(க-ரை.) கோபஞ்செல்லுமிடத்து காப்பவனே கோபத்தைக் காப்பவன்-என்பதாம்.

(வி-ரை.) தவத்தினாலே தன்னின் மெலியவரைச் செல்லிடமென்றும், வலியவரை அல்லிடமென்றும் சொல்லினர். வலியவர்மேலே கோபஞ்செய்தவிடத்தும் அதனால் அவருக்கு ஒருதீங்கு உண்டாகாமையால், அடக்கியவிடத்தும் அறம் இல்லையென்றதற்கு காக்கினென் காவாக்கா லென்னென்றார். [இதனால் கோபியாமைக்கு இடம் சொல்லப்பட்டது.] (க)



செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

(ப-ரை.) சினம் - (ஒருவனது) கோபமானது, செல்லாவிடத்து-தன்னின் வலியவர்மேல் (உண்டாயின்) தீது (தனக்கே) தீதாம், செல்லிடத்தும் (தன்னினெளியவர்மேல் உண்டாயினும்) அதனின் - அக்கோபத்தினும், தீயபிற - தீமையையுடையவை வேறே, இல்-இல்லை, எ-று.

(க-ரை.) கோபத்தை வலியார்மேற் செலுத்திற் றனக்கே குற்றம் மெலியார்மேற் செலுத்தி லதனினுங் குற்றம் - என்பதாம்.

(வி-ரை.) வலியவர்மேலே செய்யுங் கோபத்தால் உண்டாவது இம்மையிலே அவரால் வருந் துன்பமொன்றே எளியவர்மேலே செய்யுங்கோபம் இம்மையிலே பழியையும், மறுமையிலே பாவத்தையும் தருதலால், இல்லதனிற்

தீயபிறவென்றார். கோபம் வலியவர் எளியவர் யாரிடத்தும் ஆகாதென்பதாம்.

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

(ப-ரை.) யார்மாட்டும்-யாவரிடத்திலும், வெகுளியை - கோபத்தை மறத்தல்-மறக்கக்கடவர், (ஒருவருக்கு) தீய-தீமையுடையவையெல்லாம், பிறத்தல்-உண்டாகுதல், அதனால் - அக்கோபத்தினாலே, வரும்-ஆதலால், எ-று.

(க-ரை.) கோபத்தாற் பாவம் வருதலாலதை மறகக்கடவன்-என்பதாம்.

(வி-ரை) வலியவர், ஒப்பானவர், எளியவர், என்னு மூவரிடத்தும் ஆகாமையால் யார்மாட்டுமென்றும் மனத்தினாலே துறந்தவர்க்கு ஆகாதவையாகிய தீய சிந்தைகளையெல்லாம் உண்டாக்கலால் தீயபிறத்த லதனான்வருமென்றுஞ் சொல்லினர்.

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற

(ப-ரை.) (துறந்தோர்க்கு அருளினாலே உண்டாகிய) நகையும் (முகத்தினிடத்து) மலர்ச்சியையும், உவகையும் (மனத்தினிடத்து) மகிழ்ச்சியையும், கொல்லும் - கெடுத்து எழுகின்ற, சினத்தின் - கோபத்தின், பிற - வேறாகிய, பகையும்-பகைகளும், உளவோ-உண்டோ, (இல்லை) எ-று.

(க-ரை) முகமலர்ச்சியையு மனமகிழ்ச்சியையுங் கோபங் கெடுக்கும் அக்கோபத்தினும் பகையில்லை - என்பதாம்.

(வி-ரை) துறந்தோர்க்குப் புறப்பகை இல்லையாயினும் உட்பகையாய் நின்று அவருக்கு கட்பாகிய அருள் முதலான வவகளையும் நீக்கிப் பிறவித்துன்பத்தை அடைவித்தலால் அவர்க்குக் கோபததின மிகுந்த பகையில்லை யாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும் கோபத்தினது தீங்கு சொல்லப்பட்டது.]

## கரு அ  ௩௧ - ஆம் - அதி - வெகுளாமை.

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்

(ப-ரை) தன்னை-தான், காக்கின் - (துன்பம் அடையாமல்) காக்க நினைத்தானாகில், சினம் - (தன்மனத்திலே) கோபம்வராமல், காக்க-காக்கக்கடவன், காவாக்கால் - காவாதாயின், சினம்-அக்கோபமானது, தன்னையே கொல்லும், கொடுக்கும் கடுந்துன்பங்களை-அடைவிக்கும், எ-று.

(க-ரை.) கோபத்தைக் காக்காவிடில் அது தன்னையே கொல்லும் - என்

பதாம்.

(வி-ரை.) வேண்டிய நன்மையைத் தருவதாகிய தவத்தைப் பிறர்மேலே சாபமிடுதற்காக இழக்க அன்பத்தோடு பழைய பிறவித் துன்பமும் ஒருமிக்க அடைதலால் தன்னையே கொல்லுமென்றார். (௫)

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

(ப-ரை.) சினமென்னும் - கோபமாகிய, சேர்ந்தாரைக்கொல்லி - நெருப்பானது - (தனக்கு இடமானவரை மாத்திரமல்லாமல்) இனமென்னும் - (அவருக்கு) இனமாகிய, ஏமம் - இதோபதேசஞ் செய்கிற, புணையை - மரக்கலத்தையும் சுடும், எ-று.

(க-ரை.) கோபத்தீயானது தன்னையுந் தன்னினத்தையுஞ் சுடும் - என்பதாம்.

(வி-ரை.) இனம் உறுதிமொழி போதிப்பவர், இனத்தைப் புணையாக உருவகஞ் செய்தவால் பிறவிக்கடலைக் கடப்பித்து முத்திக்கரையைச் சேர்க்கின்றவென வருவித்து அப்புணைக்குமுன் கூட்டுக. புணையையு மென்னுமெச்ச வும்மை, தொக்குநின்மையால் வருவிக்கப்பட்டது. சுடுமென்றதற்குத் தனக்கு இடமானவரை விட்டு நீங்கச்செய்யு மென்பது கருத்து. தன்னையும் பிறவிக்கடலில் வீழ்வித்து எடுப்பாரையும் நீக்குமென்பதாம். [நெருப்பிற்குச் சேராத விடத்தையும் சுடுதலையும் மரக்கலத்திற்கு இதோபதேசஞ் செய்தலையும் அதிகமாகச் சொல்லுதலால் மிகையொற்றுமை யுருவகவணி.] (௬)

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(ப-ரை.) சினத்தை - கோபத்தை, பொருளென்று - (தனது வல்லமையைக் காட்டுகிற) ஒரு குணமென்று கொண்டவன் - (தன்னிடத்தே) கொண்டவனது, கேடு - அவ்வல்லமையிழப்பு, நிலத்து-பூமியினிடத்து, அறைந்தான் - அறைந்தவனது, கை - கையானது, பிழையாதற்று - (அந்நிலத்திலேபடுதல்) தப்பாத விதம்போல் தப்பாது, எ-று.

(க-ரை.) நிலத்தறைந்தவன் கைப்பயன்போல் கோபமாகிய பொருளைக் கொண்டோன் வருந்துவன் - என்பதாம்.

(வி-ரை.) தர்க்க நூலினது கடைபற்றி குணம்பொரு ளெனப்பட்டது. பிழையாத வற்றென்பது குறைந்து நின்றது, [இவை மூன்றுபாட்டாலும் கோபஞ் செய்தோர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.]

இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(ப-ரை.) இணர்-பல சுடர்களையுடைய, எரி-பெருநெருப்பானது, தோய்வன்ன (வந்து) தழுவினாற்போலும், இன்னா-துன்பந் தருமவைகளை செயினும் (ஒருவன் செய்தானாயினும், வெகுளாமை (அவன்மேலே) கோபஞ் செய்யாமை, புணரின்-கூடுமாயின், நன்று (அது) நன்று, எ-று.

(க-ரை.) ஒருவன் தீயொத்த துன்பஞ் செய்யினு மவன்மேற்கோபியாமை நல்லது – என்பதாம்.

(வி-ரை.) இன்னாமையின் மிகுதிதோன்ற இணரெரியென்றும், அதனை மேலுமேலுஞ் செய்தல்தோன்ற இன்னாவென்றும், அச்செய்கை முனிவரையும் கோபிக்கச் செய்யுமென்பது தோன்ற புணரினென்றுஞ் சொல்லினர். [இதனால் கோபஞ் செய்யாமையினது நன்மை சொல்லப்பட்டது.] (அ)

உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

(ப-ரை.) (தவஞ்செய்வோன்) - உள்ளத்தால் தன் மனத்தால், வெகுளி - கோபத்தை, உள்ளானெனின் - (ஒருபோதும்) நினையானாயின், உள்ளியவெல்லாம் – நினைக்கப்பட்ட பேறெல்லாம், உடன் – ஒருங்க்க, எய்தும் – பெறுவான், எ-று.

(க-ரை.) கோபத்தை நினையானாகி லவன் நினைத்தவெல்லா மடைவான் என்பதாம்.

(வி-ரை.) அருளுடை யுள்ளமென்பது தோன்றற்கு உள்ளத்தாலென்பது அதிகமாகச் சொல்லப்பட்டது. இம்மை, மறுமை, வீடு இவையெல்லாம் இவ் வொன்றினாலேயே கிடைக்குமென்றற்கு உள்ளியவெல்லா முடனெய்து மெ

என்றார். [இதனால் கோபஞ் செய்யாதவர்க்கு வருநன்மை சொல்லப்பட்டது.]

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(ப-ரை.) இறந்தார் (கோபத்திலே) யிருந்தவர் (உயிருடையவரா யிருக்கினும்) இறந்தாரனையர் - செத்தாரோ டொப்பாவார், சினத்தை - அக்கோபத்தை, துறந்தார் - நீக்கினவர் (சாந்தன்மையை யுடையவராயிருக்கினும்) துறந்தார்துணை - அதனையொழித்தவரோ டொப்பாவார் எ-று.

## கஙo ௩௨ - ஆம் - அதி - இன்னாசெய்யாமை.

(க-ரை.) கோபங்கொண்டவர் இறந்தாரையும் விட்டவர் இறவாதவரையும் ஒப்பர் என்பதாம்.

(வி-ரை.) அதிக கோபமுடையவர்க்கு ஞானம் பெறுதற்கு உரிய உயிர் இருக்கினும், கலக்கத்தினாலே அதனை அடையாமை நிச்சயமாதலால், இறந்தாரனையரென்றும், கோபத்தைவிட்டவர்க்கு நிலையில்லாதவுடம்பு இருந்தாலும், ஞானத்தினால் முத்தியை அடைவது நிச்சயமாதலால், முத்திபெற்றாரோடொப்பாரென்றும் சொல்லினார் [இதனால் அவ்விருவர்பயன்களும் சேர்த்துச்சொல்லப்பட்டன.] (க0)

முப்பத்தோராம் அதிகாரம் - வெகுளாமை
முற்றிற்று.

---

## முப்பத்திரெண்டாம் அதிகாரம்

# இன்னாசெய்யாமை.



அஃதாவது: தனக்கு ஒருபயனைக் குறித்தாவது வைரம் பற்றியாவது சோர்வினாலாவது ஒருயிர்க்குத் துன்பந்தருமவைகளைச் செய்யாமை அவைகளைச்செய்த வெகுளி ஒழியவும் உண்டாமென்பதை அறிவித்தற்கு இது வெகுளாமையின் பின் வைக்கப்பட்டது.

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(ப-ரை.) சிறப்பு-யோகமாகிய சிறப்பினாலே, ஈனும் தரப்படுவனவாகிய செல்வம் - அணிமாமுதலாகிய செல்வங்களை, பெறினும் - பெறலாமாயினும், பிறர்க்கு-அயலார்க்கு, இன்னா-துன்பந்தருமவைகளை, செய்யாமை, மாசற்றார் (ஆகமவழியினாலே) குற்றமற்றோர் யாவருக்கும் கோள் - துணிவாம், எ-று.

(க-ரை.) சிறந்த செல்வம் பெறினும் தீமைசெய்யாமை பெரியோர் துணிவு-என்பதாம்.

(வி-ரை.) சிறப்புடைய யோகத்தைச் சிறப்பென்றும் அதனாற் பெறப்படுதலால், எண்சித்திகளையும் சிறப்பினுஞ் செல்வமென்றும் காமம் வெகுளி மயக்கம் என்னு முக்குற்றங்கள் அற்றமையால் மாசற்றாரென்றும் சொல்லினார். [இதனாலே தமக்கு ஒரு பயனைக்குறித்துச் செய்தல் விலக்கப்பட்டது.] (௧)

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(ப-ரை.) (ஒருவன்) கறுத்து (தம்மேல்) வைரங்கொண்டு, இன்னா-துன்பந்தருமவைகளை, செய்தவக்கண்ணும் - செய்தவிடத்தும், மறுத்து - மீண்டு,



இன்னா-அத்துன்பந்தருமவைகளை, செய்யாமை (தாம்) செய்யாமையும், மாசற்றார்-அக்குற்றமற்றவரது, கோள்-துணிவு, எ-று.

(க-ரை.) ஒருவன் துன்பங்களைச்செய்தாலும் அவனுக்குத் துன்பங்களைச்செய்யாமையே பெரியோர் கொள்கை என்பதாம்.

(வி-ரை.) தொக்குநின்ற செய்யாமையும் [illegible] முன் பாட்டின்பொருளைத் தழுவிய எச்சவும்மை [illegible]. அவன் செய்தவைகளை மனதிலே வையாமல் [illegible] என்பதாம். (௨)

செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

(ப-ரை.) செய்யாமல் [illegible] செய்யாதிருக்க, செற்றார்க்கும் ([illegible]), இன்னாத-துன்பந்தருமவைகளை, செய்தபின் [illegible] அச்செயலானது) உய்யா-[illegible], விழுமம்-[illegible], தரும் (அவனுக்குக்) கொடுக்கும். எ-று.

(க-ரை.) [illegible] தான் துன்பஞ்செய்தல் கேட்டைத்தரும் என்பதாம்.

(ப-ரை) இன்னாவென - (இவை மனிதருக்குத்) துன்பந் தருமவையென்று, தானுணர்ந்தவை - (அனுமானப் பிரமாணத்தினாலே) தன்னால் அறியப்பட்டவைகளை, பிறன்கண்-பிறனிடத்தே, செயல் - செய்தலை, துன்னாமை - பொருந்தாமை, வேண்டும்-துறந்தவனுக்கு வேண்டும், எ-று.

(க-ரை) துன்பமென்றறிந்தவற்றைப் பிறனிடத்துச் செய்யாமைவேண்டும் என்பதாம்.

(வி-ரை) இன்பத் துன்பங்கள் உயிர்க்குண மாகலால் அவை பிரத்தியக்ஷ பிரமாணத்தினாலே அறியக்கூடாமை அறிக. அறமும் பாவமும் உண்டாவது மனமறிந்து செய்தவிடத்தே ஆகலின் உணர்ந்தவையென்றார். (௬)

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
மாணா செய்யாமை தலை

(ப-ரை) மனத்தானாம்-மனத்தோடு உண்டாகின்ற, மாணா- துன்பந்தருமவைகளை, எஞ்ஞான்றும்-யாதொருகாலத்திலும், யாவர்க்கும்-யாவரொருவர்க்கும், எனைத்தானும்-எவ்வளவு சிறிதாயினும், செய்யாமை-தலை முதன்மையான அறம், எ-று.

(க-ரை.) யாருக்கும் சிறிய துன்பந் தருமவைகளையும் செய்யாமையே தலைமையான தருமம்-என்பதாம்

(வி-ரை.) மனமறிந்து செய்யாதவிடத்தே பாவம் இல்லையென்பது பெற்றாம்-வல்லமையுண்டான காலத்திலும் செய்யலாகாமையால், எஞ்ஞான்றுமென்றும், எளியவருக்கும் ஆகாமையால் யார்க்குமென்றும், செயல் சிறிதாயினும் பாவம் பெரிதாகலால், எனைத்தானுமென்றும், சொல்லினார். (௭)

## ௩௨ - ஆம் - அதி - இன்னாசெய்யாமை. ௧௬௩

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

(ப-ரை,) (பிறர் செய்யும் துன்பந்தருமவை) தன்னுயிர்க்கு-தனதுயிருக்கு, இன்னாமை - துன்பந்தருமவையான தன்மையை, அறிவான் (அனுபவித்து) அறிபவன், மன்னுயிர்க்கு-நிலையுள்ள பிறவுயிர்களுக்கு, இன்னா - அத்துன்பந் தருமவைகளை, தான்-செயல் செய்தல், என்-என்னகாரணத்தால், எ-று.

(க-ரை.) தன்னுயிர்க்குத் துன்பந்தருவதை அறிபவன் பிற உயிருக்குச் செய்வதென்ன-என்பதாம்.

(வி-ரை.) கொலை-ஆதிகள் முற்படியே இவை பிறருயிர்க்கும் துன்பந் தருமவைகளென்பது அனுமானத்தால் அறிந்திருந்தும் செய்கின்ற பாவம் பரிகரிக்கக் கூடாமையால் துன்பந்தருமவைகள் பின்னேவந்து தன்னை வருத்துமென்பது ஆகமத்தாலும் அறிந்துவிடக் கடவனென்பது தோன்ற, தானென்றும் அத்தன்மையால் ஒழியாமைக்குக் காரணம் மயக்கமென்பது தோன்ற, என்னென்றும் சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் பொதுவாகையால் இன்னாசெயல் விலக்கப்பட்டது.] (அ)

> பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
> பிற்பகற் றாமே வரும்.

(ப-ரை.) (துறந்தவர்) பிறர்க்கு-பிறர்களுக்கு, இன்னா-துன்பந்தருமவைகளை, முற்பகல் - ஒரு முகூர்த்தத்தினது முன்பங்கிலே, செய்யின்-செய்தால், (தமக்கு) இன்னா - துன்பந்தருமவைகள், பிற்பகல் - அம்முகூர்த்தத்தினது, பின்பங்கிலே- (அவர் செய்யாதிருக்க) தாமே வரும், எ-று.

(க-ரை.) முன்பு ஒருவருக்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமை தனக்கே வரும்-என்பதாம்.

(வி-ரை.) தவமிழக்கல் இப்படிக் கடிதிலும் எளிதிலும் வரும் அதனால் அவை செய்யாதிருக்கக் கடவரென்பதாம். முகூர்த்தம் இரண்டுநாழிகை. (கூ)

> நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர்

(ப-ரை.) நோயெல்லாம் - துன்பந் தருமவையெல்லாம், நோய்செய்தார் மேலவாம் (ஒன்றனுயிர்க்குத்) துன்பந்தருமவைகளைச் செய்தவர்மேலனவாம், (அதனால்) நோயின்மை வேண்டுபவர் (தம்முயிர்க்குத்) துன்பந்தருமவையில்லாமையை வேண்டுவோர், நோய் (ஒன்றனுயிர்க்குத்) துன்பந் தருமவைகளை, செய்யார், எ-று.

(க-ரை.) தன்னுயிர்க்குத் துன்பமில்லாமையை விரும்புவோர் துன்பஞ் செய்யார்-என்பதாம்.



## ௩௩ - ஆம் - அதி - கொல்லாமை.

(வி-ரை.) உலகிலத்திலே விளைவித்திட்டார்க்கு விளைவும் அதுவே யாக

லால் நோயெல்லாம் நோய், செய்தார் மேலவாமென்றார். [சொற்பொருட் பின் வருநிலையணி. [இவை இரண்டுபாட்டாலும் அது செய்தவர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது.] (௰)

முப்பத்திரண்டாம் அதிகாரம் இன்னாசெய்யாமை.

முற்றிற்று

---

## முப்பத்துமூன்றாம் அதிகாரம்.

## கொல்லாமை.

அஃதாவது: ஓரறிவுடையவை முதல் ஆறறிவுடையவை * கடையாகிய உயிர்களைச் சோர்விலும் கொல்லுதல் செய்யாமை. இது முன்சொல்லப்பட்ட அறங்களெல்லாவற்றினும் சிறப்புடைத்தாய் கொல்லாமொழிந்த மற்றைய வறங்களையெல்லாந் தன்னுள் அடக்கிநிற்கையில் இறுதியில் வைக்கப்பட்டது.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(ப-ரை.) அறவினை - அறங்களெல்லாமாகிய செய்கை, யாதெனின் - எது வென்றால் (அது) கொல்லாமை (ஓருயிரையும்) கொல்லாமையாம், கோறல் (அவற்றைக்) கொல்லுதல், பிறவினையெல்லாம் - பாவச் செய்கைகளெல்லாவற் றையும், தரும் - (தானே) தரும் (ஆதலால்), எ-று.

(க-ரை.) கொலை செய்யாமையே தருமச்செய்கை - என்பதாம்.

(வி-ரை.) விலக்கப்பட்டதைச் செய்யாமையும் அறஞ்செய்தலாம். ஆத லால், கொல்லாமையை அறவினையென்றார். இங்கே பிறவினையென்றது அவ் வினைகளின் விளைவை, கொலைப்பாவம் விளைக்குந் துன்பத்தை மற்றைப்பாவ ங்களெல்லாம் கூடியும் விளைக்கமாட்டாவென்பதாம். கொல்லாமை தானே பிற வறங்களின் பயனெல்லாந் தருமென்று மேற்கோள் சொல்லி அதற்கு ஏது எதிர்மறை முகத்தாற் சொல்லியபடியாயிற்று. (௧)

* புல், மரம் முதலியன பரிசத்தை அறிகிற ஓரறிவுயிர்கள். சிப்பி, சங்கு முதலியன அதனோடு ரசத்தையும் அறிகிற ஈரறிவுயிர்கள். கறையான், எறும்பு

முதலியன அவ்விரண்டோடு சுந்தத்தையும் அறிகிற மூவறிவுயிர்கள் தும்பி வண்டுமுதலியன அம்மூன்றோடுரூபத்தையும் அறிகிற நாலறிவுயிர்கள் வானவர், மக்கள், நரகர், விலங்கு, புள் முதலியன அக்நான்கோடு சத்தத்தையும் அறிகிற ஐயறிவுயிர்கள்.

## ௩௩ - ஆம் - அதி - கொல்லாமை. ௧௩௫

பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(ப-ரை.) பகுத்து (உண்ணப்பட்டதைப் பசித்த உயிர்களுக்குப்) பங்கிட்டுக், கொடுத்து - உண்டு, பல்லுயிர்-இவகை யுயிர்களையும், ஓம்புதல் - காப்பாற்றல், நூலோர் - அறநூ லுடையோரால், தொகுத்தவற்றுளெல்லாம் (அறத்தவர்க்குத்) தொகுத்து வைக்கப்பட்ட அறங்களெல்லாவற்றினும், தலை முதன்மையான அறமாம், எ-று.

(க-ரை) கிடைத்தவற்றைப் பசித்த உயிர்களுக்குப் பங்கிட்டு உண்டல் தலைமையான அறம் - என்பதாம்

(வி-ரை.) பல்லுயிரும் என்கிற முற்றும்மை வருவிக்கப்பட்டது. ஓம்புதல் மறந்தும் கொலைவராமற் குறிக்கொண்டு காத்தல், அதற்குப் பகுத்துண்ணுதல் அவசியம் இருக்கவேண்டிய அங்கமாதலால், அச்சிறப்புதோன்ற பகுத்துண்டு என்றார். எல்லா அறநூல்களிலும் நல்லவைகளை எடுத்து எல்லாருக்கும் பொதுப்படச் சொல்லுதல் இந்நூலாசிரியருக்கு இயல்பாதலால், இங்கேயும் பொதுப்பட நூலோரென்றும், அவரெல்லாருக்கும் ஒப்பமுடிதலால் தலையென்றும் சொல்லினர். (௨)

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று

(ப-ரை) (நூலோரால் தொகுக்கப்பட்ட அறங்களுள்) ஒன்றாக தன்னோடு இணைப்பது இல்லாமல்) தானேயாக, கொல்லாமை - கொலைசெய்யாமை நலலது (அதற்கிணைய) பொய்யாமை - பொய்சொல்லாமை, பின்சார (அதன், பின்னே நிற்க நன்று-நல்லது, எ-று.

(க-ரை.) கொல்லாமை நல்லது, அதிலும் பொய்சொல்லாமை நல்லது என்பதாம்.

(வி-ரை.) அதிகாரங் கொல்லாமையாயினும் முன் பொய்யாமை பொய்

யாமை யாற்றினென்றும், யாமெய்யாக்கண்டவற்று ளில்லையென்றும் சொல்லுதலால், பொய்யாமை சொல்லாமைகளிலே சிறந்தது எதுவென்று சந்தேகம் உண்டாமென்றே அது உண்டாகாமற்பொருட்டு இங்கே பின்சாரப் பொய்யாமை நன்றென்றார். முன் சொன்னதினும் பின்சொன்னது உறுதி யுடையதாமாகலால் [இவை மூன்று பாட்டாலும் கொல்லாமையினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

நல்லாறெனப் படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

(ப-ரை) (மேற்கதியும் முத்தியும் பெறுதற்கு) நல்லாறெனப்படுவது - நல்ல வழியென்று சொல்லப்படுவது, யாதெனின் - எதுவென்றால் (அது) யாதொன்றும் - யாதோருயிரையும், கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தினை, சூழும் (காக்க) நினைக்கும், நெறி - வழியாம், எ-று.



௩௩ - ஆம் - அதி - கொல்லாமை.

(க-ரை.) யாதோருயிரையுங் கொல்லாமையே நல்லவழி - என்பதாம்.

(வி-ரை.) புல்லுமுதலாகிய ஓரறிவுயிரையும் உள்ளாக்குதற்கு யாதொன்று மென்றார், காத்தல் தவறுமற் காத்தல் [இதனால் கொல்லாமையை யுடையதே நல்வழியென்பது சொல்லப்பட்டது.] (௪)

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

(ப-ரை) நிலை (பிறப்புகின்ற) நிலையை அஞ்சி - பயந்து, (பிறவாமைப் பொருட்டு) நீத்தாருளெல்லாம் (மனைவாழ்க்கையைத்) துறந்தவரெல்லாருள்ளும் கொலை - கொலைப்பாவத்தை, அஞ்சி - பயந்து, கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தை, சூழ்வான் - மறவாதவன், தலை - உயர்ந்தோன், எ-று.

(க-ரை.) கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன் துறவிகளுள் தலையாவான் - என்பதாம்.

(வி-ரை.) பிறப்புகின்ற நிலையாவது மனிதர் முதலாகிய சரமும் மர முதலாகிய அசரமும் ஆகிய இருவகைப் பிறப்புக்களிலும் இன்பமென்பதொன்று இல்லாமல் உள்ளவையெல்லாம் துன்பமேயாகிய நிலைமை துறவு ஒன்றேயாயினும் சமயவேறுபாட்டால் பலவாமாதலால், நீத்தாருளெல்லா மென்றார். [இதனால் கொல்லாமையை மறவாதவனது உயர்ச்சி சொல்லப்பட்டது] (௫)

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண் ணுங் கூற்று.

(ப-ரை) உயிருண்ணுங்கூற்று-உயிரைக்கொண்டுபோம் இயமனானவன் கொல்லாமை-கொலைசெய்யாமையாகிய விரதத்தை, மேற்கொண்டு - மேலாகக்கொண்டு, ஒழுகுவான்-நடப்பவனது, வாழ்நாண்மேல்-ஆயுளின்மேல், செல்லாது-செல்லான், எ-று.

(க-ரை) கொலை செய்யாதவன் வாழ்நாளின்மேல் இயமன் செல்லான் என்பதாம்

(வி-ரை) மிகவும் பெரிய அறஞ்செய்தவரும், மிகவும் பெரிய பாவஞ் செய்தவரும், இம்மையிலேதானே அவைகளின் பயன்களை அனுபவிப்பாரென்னும் அறநூலினது துணிவுபற்றி, இப்பெரிய அறஞ்செய்தவன் தானும், கொல்லப்படானுகவே அவன் கருவுறும்போது நியமிக்கப்பட்ட ஆயுட்காலம் குறைவுபடாதென்றற்கு, வாழ்நாண்மேல் கூற்றுச்செல்லாதென்றார். செல்லாதாகவே காலநீடித்திருந்து ஞானத்தைச்சம்பாதித்து மோட்சத்தை அடைவானென்பது கருத்து [இதனுல் கொல்லாவிரதத்தோர்க்கு வரும் நன்மைசொல்லப்பட்டது] (௬)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

## ௩௩ - ஆம் - அதி - கொல்லாமை. கஅஎ

(ப-ரை.) தான்-பிறிது, வேறொன்றனது - இன்னுயிர் - இனிதாயவுயிரை, நீக்கும் (அதனுடம்பிலிருந்து) நீக்குதலாகிய, வினை-தொழிலை (அதுசெய்யாவிடத்து) தன்னுயிர்-தனதுவுயிரானது நீப்பினும் (உடம்பைவிட்டு, நீங்கிப்போமாயினும், செய்யற்க செய்யாதிருக்கக்கடவன், எ-று

(க-ரை.) தன்னுயிர்போனாலும் பிறவுயிரைக்கொல்லாதே - என்பதாம்.

(வி-ரை.) பாவம் தான் கொலையுண்டவிடத்தே தேய்தலும் ஒன்றைக் கொன்றவிடத்தே வளர்தலும் நோக்கி, தன்னை வொன்று கொன்றாலும் தான் அதனைக் கொல்லலாகாதென்றதென்க. (௭)

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(ப-ரை) (யாகத்திலே கொன்றால்) நன்றாகும் - இன்பமிகுவதாகிய, ஆக்கம் - செல்வமானது பெரிது - பெரிதாகும், எனினும்-என்று சொல்லப்பட்டதாயினும், சான்றோர்க்கு (அறவினாலே) நிறைந்தோர்க்கு, கொன்று (ஒருயிரைக்) கொன்று, ஆகும் (அதனால்) உண்டாவதாகிய, ஆக்கம் - செல்வமானது, கடை இழிந்ததாம், எ-று.

(க-ரை.) பெரியோர்க்குக் கொலையால் வருஞ் செல்வம் இழிந்தது - என்பதாம்.

(வி-ரை) இன்பமிகுஞ்செல்வமானது, தாமுந்தேவராய் சுவர்க்கத்திலே சென்று அடையும் செல்வம் அது சிறிதாகையாலும், பின்னும்பிறத்தற்குஏதுவாகலாலும், மோட்சமாகிய அழிவில்லாதசுகத்தை அடைவோருக்கு கடையெனப்பட்டது. சுவர்க்கபோகத்தை விரும்பினவருக்கு ஆகுமாயினும் மோட்சத்தைவிரும்பினவருக்கு ஆகாதென்றதனால் விதிவிலக்குகள் தங்களிலே விரோதப்படாமல் வினகியவாறுயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் கொலையினது குற்றம்சொல்லப்பட்டது.

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து

(ப-ரை.) கொலைவினையராகிய-கொலைத்தொழிலை யுடையவராகிய, மாக்கள்-மனிதர் (அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினராயிருந்தாலும்) புன்மை தெரிவாரகத்து-அவ்விழிவை அறிவோரதுநெஞ்சிலே, புலைவினையர்-புலைத்தொழிலராய்த் தோன்றுவர், எ-று.

(க-ரை.) கொலை இழிந்ததென வறிந்தோர் அது செய்வோரைப் புலைத்தொழிலர் என்று எண்ணுவர் - என்பதாம்.

(வி-ரை.) கொலைவினைய ரென்ற அடியினாலே யாகக்கொலை யல்லாமையறிக புலைவினையரென்றது தொழிலினாலே புலையராவரென்றபடி அவர் இம்மையிலே தாழ்வை அடைவரென்பதாம். (க)

உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

க்கஅ ௩௪ - ஆம் - அதி - நிலையாமை.

(ப-ரை.) செயிருடம்பின்-பார்க்கக்கூடாத நோயுடம்புடனே, செல்லாத் தீவாழ்க்கையவர் - வறுமையோடேகூடிய இழிதொழில் வாழ்க்கையுடையவரை (இவர் முற்பிறப்பிலே) உயிர்-உயிர்களை, உடம்பின் (அவைநின்ற) உடம்புகளிலிருந்து, நீக்கியார்-நீக்கினவர், என்ப-என்று (வினைவிளைவுகளை அறிந்தோர்) சொல்லுவார், எ-று.

(க-ரை.) வறுமையும் பிணியுமுடையவரை முற்பிறப்பிற்கொலைசெய்தவ ரென்று பெரியோர் சொல்லுவர் - என்பதாம்.

(வி-ரை.) செல்லாவாழ்க்கை தீவாழ்க்கையெனக் கூட்டுக. நோயுடம்பு - பெருவியாதிமுதலானவை கொண்டவுடம்பு. மறுமையிலே இவையும் அடைவ ரென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் கொல்வோர்க்கு வருந்தீங்கு சொல்லப்பட்டது] அருளுடைமைமுதல் கொல்லாமை இறுதியாகியவைகளிலே சொல்லப்படாதவிரதங்களும் அடங்கும் அஃது அறிந்து அடக்கிக்கொள்க. ()

முப்பத்து மூன்றாம் அதிகாரம் கொல்லாமை
முற்றிற்று.

---

# ஞானம்.

இனி அவ்விரதங்களினாலே கரணங்கள் பரிசுத்தமானவிடத்து உண்டாவதும், மோட்சத்தைத்தருவதும், ஆகிய அறிவு அது நிலையாமைமுதல் அவாவறுத்தல் இறுதியாக நான்கதிகாரத்தான் அடக்கிச் சொல்லப்படுகிறது.

## முப்பத்திநான்காம் - அதிகாரம்.

## நிலையாமை.

அஃதாவது, தோற்றமுடையவை யெல்லாம் நிலைபெறாத தன்மையாம், இதனை, அறிந்தவிடத்தே யல்லாமல் பொருள்களிலே பற்றுவிடாதாகலின் முன்வைக்கப்பட்டது.

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(ப-ரை.) நில்லாதவற்றை - நிலையில்லாதவைகளை, நிலையினவென்று -

நிலையுடையவையென்று, உணரும்-நினைக்கின்ற, புல்லறிவாண்மை - அற்பபுத்தியையுடையவராயிருக்கை, கடை (துறந்தார்க்கு) இழிவு, எ-று.

(க-ரை.) அழிவதை அழியாதாக நினைக்கும் அறியாமை அறிவோர்க்கு இழிவு - என்பதாம்.

## ௩௪ - ஆம் - அதி - நிலையாமை. கஙக

(வி-ரை.) தோற்றமுடையவைகளை அழிவில்லாதவையென்றுநினைக்கும் அற்ப புத்தியால் அவைகளின்மேல் பற்றுச் செய்தல் பிறவித் துன்பத்துக்கு ஏதுவாகலால் அது மோட்சத்தை அடைவோர்க்குத் தவறுமென்பது இதனாற் சொல்லப்பட்டது. இனிப் புல்லறிவாளர் பெரும்பாலும் பற்றுச்செய்வது சிற்றின்பத்துக்கு ஏதுவாகிய செல்வத்தினிடத்திலும், அதனை அனுபவிக்கும்உடம்பினிடத்திலும் ஆகலின், வருகிற பாட்டுகளால் அவைகளினது நிலையாமையை வேறெடுத்துச் சொல்லுவார். (௧)

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(ப-ரை.) (ஒருவனிடத்தே) பெருஞ்செல்வம் - பெரிய செல்வம் வருதல் கூத்தாட்டு-கூத்தாடுதல் செய்கின்ற, அவை - சபையினிடத்தே, குழாத்தற்று, (காண்போர்) கூட்டம்வருதல்போலும், போக்கும் (அச்செல்வம் போகுதலும், அது-அக்கூட்டமானது,விளிந்தற்று (அக்கூத்தாட்டுமுடிந்தவிடத்தே) போகுதல்போலும், ஏ-று.

(க-ரை.) செல்வம் கூத்தாட்டில் கூட்டம்போல்வரும் அதுபோதல்போல் போம் - என்பதாம்.

(வி-ரை.) பெருஞ் செல்வமெனவே சுவர்க்கச் செல்வமும் அடங்கிற்று. போக்குமென்ற உம்மையால் வருதலென்பது சொன்னப்பட்டது. எப்படிஅக் கூட்டமானது கூத்தாட்டுக்காரணமாகச்சபையினிடத்தேபலவிதத்தால்தானே வந்து அதுபோனவிடத்தேதானும்போகுமோ அப்படியேசெல்வமானது ஒருவனது நல்வினை காரணமாக அவனிடத்தே பலவிதத்தால் தானேவந்து அது போனவிடத்தே தானும்போமென்பதாயிற்று. (௨)

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல.

(ப-ரை.) செல்வம்-செல்வமானது, அற்கா-நில்லாத, இயல்பிற்று-இயல்பையுடையதாகும், அதுபெற்றால் - அச்செல்வத்தைப் பெற்றால், அற்குப(அதனாலேசெய்யப்படும்) அறங்களை, ஆங்கே-பெற்றபொழுதே, செயல் - செய்யக்கடவன், எ-று.

(க-ரை ) செல்வம்பெற்றபொழுதே தருமஞ்செய்யக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) அல்காவென்பது, விகாரப்பட்டுநின்றது ஊழ் உள்ளவிடத்தே யல்லது பெறக்கூடாமையால் அது பெற்றாலென்றும் அவ்வூழ் இல்லாதவிடத்தே நில்லாமையால் ஆங்கேயென்றும் சொல்லினர். அதனாலேசெய்யப்படும் அறங்களாவன, பயனைக் குறியாதுசெய்யும் கடவுட்பூசையும், தானமும் முதலானவை அவை ஞானத்துக்கு ஏதுவாய் மோட்சத்தைக் கொடுத்தலால் அவற்றை அற்குபவென்றும், செயலென்றும், சொல்லினர். [இவை யிரண்டுபாட்டாலும் செல்வ நிலையாமை சொல்லப்பட்டது]

நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

22

## கஎ0 ருச - ஆம் - அதி - நிலையாமை.

(ப-ரை.) உயிர்-உயிரானது, நாளென-நாளென்று அளவுசெய்யப்படுவதாகிய, ஒன்றுபோல்-ஒருகாலவளவுபோல், காட்டி(தன்னைக்)காட்டி, ஈரும்-அறுத்துச்செல்லுகின்ற, வாளது-வாளினது வாயினிடத்தது, உணர்வார்ப்பெறின் (அது) அறிவாரைப் பெற்றால், எ-று.

(க-ரை.) நாளாகிய வாளின் வாயினிடத்தது உடல் என்பதை அறிவாரில்லை - என்பதாம்.

(வி-ரை ) காலமென்னும் அருவப்பொருள்-உலகியல்நடத்தற்பொருட்டுச் சூரியன் முதலாகிய அளவைகளால் கூறுபட்டதாக்கி வழங்கப்படுவதல்லாமல் தானாகக் கூறுபடாமையால், நாளென வொன்றுபோலென்றும், அதுதன்னை வாளென்று அறியமாட்டாதவரை, நமக்குப் பொழுது போகாநின்றதென்று மகிழும்படிமயக்கலால், காட்டியென்றும், இடைவிடாமல் அறுத்தலால் வாளதென்றும், அது அறுக்கின்றபடியை அறியவல்லவர் இவ்வுலகத்திலே அரியராயிருக்கையால் உணர்வார்ப்பெறினென்றும் சொல்லினர். அறுக்கப்படுவது

உடம்பாகலால் உயிரென்பது இங்கே உடம்பைக்காட்டி நின்றது வாளினது வாயை வாளென்கையால் ஆகுபெயர். [இதனால் உடம்புகளுக்கு அளவுசெய்யப்பட்டநாள் கழிகிறவிதம் சொல்லப்பட்டது]

நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப்படும்.

(ப-ரை.) நாச்செற்று (பேசாதிருக்கும்படி) நாவையடக்கி, விக்குள்-விக்கலானது, மேல்வாராமுன் - எழுவதற்கு முன்னே, நல்வினை (மோக்ஷத்துக்கு ஏதுவாகிய) அறமானது, மேற்சென்று-விரைந்து, செய்யப்படும், எ-று.

(க-ரை.) நாவடக்கிச் சேத்தும மெழுமுன் அறத்தைவிரைந்து செய்யப்படும் - என்பதாம்.

(வி-ரை.) நாவை அடக்கி விக்கல்மேலெழுதலுக்கு ஐயமில்லாமையாலும் அது நேரிட்டபோது நல்வினையைச்செய்தலே அல்லாமல், சொல்லலும் கூடாமையாலும் வாராமுனென்றும், அதுதான் இன்னகாலத்திலே வருமென்று அறியக் கூடாமையால் மேற்சென்றென்றும் சொல்லினர். நல்வினைசெய்யும் வழியின்மேல்வைத்து நிலையாமைசொல்லியபடி [இதனால் அந்நாள்கழிந்தால் உண்டாகு நிலையாமை சொல்லப்பட்டது.] (௫)

நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(ப-ரை.) இவ்வுலகு-இந்தவுலகம், ஒருவன், நெருநல்-நேற்றைக்கு, உளன் உளனாயினான் (பிறந்தவனென்றபடி) (அவனே) இன்று-இன்றைக்கு, இல்லை இலனாயினான் (இறந்தானென்றபடி) என்னும் பெருமை யென்று சொல்லும் (நிலையாமையின்) மிகுதியை, உடைத்து-உடையதாயிருக்கின்றது, எ-று.

(க-ரை.) இவ்வுலகம் நேற்றிருந்தவனின்றில்லையென்னும் பெருமையுடையது - என்பதாம்.



(வி-ரை.) பெண்பாலுக்கும் உண்டாயினும் சிறப்புப்பற்றி ஆண்பாலைச் சொல்லினர். இந்நிலையாமையே உலகத்திலேமிகுந்ததென்றபடி. [இதனால் அவ்வுடம்புகள் ஒரோவிடத்துப்பிறந்தவளவிலே இறத்தல் சொல்லப்பட்டது.

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப

கோடியு மல்ல பல.

(ப-ரை.) (அறிவில்லாதவர்) ஒருபொழுதும்-ஒருபொழுதளவும்,வாழ்தலு-தம்முடம்பும் உயிரும் கூடியிருக்கையை,அறியார்-அறியமாட்டார் (மாட்டாதிருக்தும) கோடியுமல்ல-கோடியளவுமன்றி, பல (அதனிலும்) பலவாகிய நினைவுகளை, கருதுப-நினையா நிற்பார், எ-று.

(க-ரை) ஒருநாளளவும் வாழ்வதறியாதவர்கள் அளவிலா எண்ணங்களை எண்ணுகிறார்கள் - என்பதாம்.

(வி-ரை) ஒருபொழுதும் என்ற இழிவு சிறப்பும்மையால் இக்கேபொழுதென்பது கணத்தைக்காட்டி நின்றது. காரணமாகியவினையினளவே வாழ்தற்கும் அளவாகலால், அது அறியப்படாததாயிற்று. பலவாகிய நினைவுகளாவன: அநுபவிக்கப்படும் இன்பங்களுக்குரியவை ஆகும்விதமும், அதற்குப்பொருள் வேண்டியவிதமும், அது தம்முயற்சிகளால் வரும்விதமும், அம்முயற்சிகளைத் தாம் செய்யும் விதமும், அவைகளுக்குவரும் இடையூறுகளும், அவைகளைநீக்கும்விதமும், நீக்கியபின் அப்பொருளைச் சேர்க்கும் விதமும், அதைப் பிறர் கொண்டுபோகாமற் காப்பாற்றும் விதமும், அதனால் சிநேகித்தவரை ஆக்கும் விதமும், பகைத்தவரை அழிக்கும் விதமும், தாம் அவ்வின்பங்களை அநுபவிக்கும்விதமும் முதலானவையாம். அறிவில்லாதவரியல்பின்மேல்வைத்து நிலையாமை சொல்லியபடி. [அவ்வுடம்புகள் ஒருகணமாயினும் நிற்குமென்பது எம்பப்படாமை சொல்லப்பட்டது. (எ)

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

(ப-ரை.) உடம்போடு - சரீரத்தோடு, உயிரிடை - உயிருக்கு உண்டாகிய, நட்பு-சிநேகமானது, குடம்பை (முன்னே தனியாயிருந்த) முட்டையானது, தனித்தொழிய-தனித்துக்கிடக்க, புள் (அதனுளிருந்த) பறவை, பறந்தற்று (பருவம் வந்த விடத்தே) பறந்தபோக் தன்மையே யுடையதாகும், எ-று.

(க-ரை.) முட்டைக்கும் பறவைக்கும் சம்பந்தமில்லாமைபோல், உடலுக்கும் உயிருக்கும் சம்பந்தமில்லை-என்பதாம்.

(வி-ரை.) முன்னே தனிமையாவது: கருவும்தானும், ஒன்றாய்ப் பிறந்து வேறுறுமளவும் அதற்கு இடமாயிருத்தல், அதனால் அம்முட்டை உடம்புக்கு உவமானமாயிற்று அதனுள்ளே வேறுபாடில்லாம லிருந்தே பின்பு திரும்பி

அழையாமற் போகலால், புள் உயிர்க்கு உவமானமாயிற்று. கட்டுநிலைமையில்லா மற்பொருளையைக் குறிப்பினாலே காட்டினது. அறிவாகியும் அருவாகியும்



நித்தியமாகியும், உள்ள உயிரும் அருமையாகியும், உருவாகியும் அநித்தியமாகியும், உள்ள உடம்பும் தம்முள்ளே மாறுகலால் வினைவசத்தினாலே கூடிய தல்லாமல் நிலைமையில்லை யென்பது அறிக. [இதனால் அவ்வுடம்புகள்உயிர்நீங்கிய விடத்துக் கிடக்குமாறு சொல்லப்பட்டது. (அ)

உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு

(ப-ரை) (ஒருவனுக்கு) சாக்காடு-மரணம் வருதல், உறங்குவது போலும் தூக்கம் வருதல் போலும், பிறப்பு (அதன்பின்னே) பிறப்பு வருதல், உறங்கி விழிப்பதுபோலும்-தூங்கி விழித்தல் வருதல்போலும், எ-று.

(க-ரை) மரணம் நித்திரையையும் பிறப்பு விழித்தலையும் ஒக்கும் - என்பதாம்.

(வி-ரை.) உயிர்களுக்கு உறங்கலும் விழித்தலும்போல் இறத்தலும்,பிறத்தலும், இயல்பாகக் கடிதிலேமாறிமாறி வருமென்பதுகருத்து நிலையாமையே நிலைபெற்றவிதத்தை அறிவித்தற்குப்பிறப்பும் உடன்சொல்லப்பட்டது. [இதனால் அவ்வுடம்புகளுக்கு இறப்பும்,பிறப்பும், மாறிவருமாறுசொல்லப்பட்டது.

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

(ப-ரை.) உடம்பினுள் - (வாதமுதலானவைகளது வீடுகளாகிய - உடம்புகளுள், துச்சிலிருந்த - ஒதுக்குக்குடியிருந்துவந்த, உயர்க்கு-உயிருக்கு, புக்கில் என்றைக்கும் இருப்பதாகிய ஒருவீடானது, அமைந்தின்றுகொல்-(இதுவரையில்) அமைந்ததில்லைபோலும், எ-று.

(க-ரை.) உடலுள்ளே யொதுக்குக் குடியிருந்த உயிருக்கு என்று மிருக்க வீடமைந்ததில்லை . என்பதாம்.

(வி-ரை.) உயிரானது-அவ்வாதமுதலான நோய்கள் அமைந்தகாலத்திலே இருந்தும், கோபித்த காலத்திலே விட்டுப்போகியும், ஒருடம்பிலும்நிலைபெறாமல் வருதலால், துச்சிலிருந்த வென்றார். பின்னேபுறப்படாமல் புகுந்தே விடுகிற இல், அமைந்ததாயின் பிறர் இற்களிலே ஒதுக்குக்குடி இராதென்பதாம். ஆகவே உயிரோடுகூடி நிற்பது, ஒருடம்பும் இல்லையென்பதுபெறப்பட்டது.

[இதனால் அவ்வுடம்புகன் உயிருக்கு உரியவை அல்லவென்பது சொல்லப்பட்டது.] ஈரென்னவென்பது முதலாகிய எழுபாட்டுகளாலும் யாக்கைநிலையாமை சொல்லப்பட்டது என்றறிக.

முப்பத்திநான்காம் அதிகாரம் - நிலையாமை.

முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாம் - அதிகாரம்.

# துறவு.

அஃதாவது: புறமாகிய செல்வத்திலும், அகமாகியவுடம்பிலும், உண்டாகியவற்றை அவைகளது நிலைமையைப்பார்த்துவிடுதலாம். அதிகாரம் வைத்த முறைமையும் இதனுலேவிளங்கும்.

யாதனின் யாதனி னீங்கியா னோதல்
லதனி னதனி னிலன்.

(ப-ரை.) (ஒருவன்) யாதனின் – யாதனின், யாதொரு பொருளின் யாதொரு பொருளின், நீங்கியான - நீங்கினன் - (அவன்) அதனினதனின்-அப்பொருளினாலே அப்பொருளினாலே, நோதல் - துன்பத்தை அநுபவித்தலை, இலன்-உடையவனல்லான், எ-று.

(க-ரை.) ஐம்பொறி விடயங்களை ஒவ்வொன்றாகவிடின் விட்டவையால் துன்பமடையான்-என்பதாம்.

(வி-ரை.) இங்கே துன்பமென்றது இப்பிறப்பிலே அவைகளைத் தேடுதலாலும், காப்பாற்றலாலும், இழத்தலாலும் வருவமையும், மறுமையிலேபாவத்தால் வருமவையும், ஆகிய இருவகைத் துன்பங்களையும் ஆம். எல்லாப்பொருள்களையும் ஒருமிக்கவிடுதலே, தலைமையான துறவாகும் அப்படிக் கல்லாமல் ஒவ்வொன்றாக விட்டாலும் அவைகளால் வருந்துன்பம் அவனுக்கு இல்லையென்பது கருத்து. (க)

வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

(ப-ரை.) துறந்தபின்-(எல்லாப்பொருள்களையும்) துறந்தபின் (ஒருவனு

க்கு) ஈண்டு-இப்பிறப்பிலே, இயற்பால உண்டாகுமுறைமையுடைய இன்பங்கள், பல-பலவாம். வேண்டின் - (அவ்வின்பங்களை) வேண்டினால், உண்டாக (காலம்) உண்டாக, துறக்க - அப்பொருள்களைத் துறக்கக்கடவன், எ-று.

(க-ரை.) துறந்தபின் உண்டாகும் பல இன்பத்தை வேண்டினால் துறக்கக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) அவ்வின்பங்களாவன; அப்பொருள்களுக்காக மனமும், வாக்கும், காயமும், அலையாத நிற்கையாலும், அவைகள்வழியிலேசெலுதலாலும் வருவன, இளமையிலே துறந்தவன் அவ்வின்பங்களை நெடுங்காலம் அநுபவிப்பானாகலால், உண்டாகத்துறக்கவென்றபடி; இன்பமும்,காலமும், வருவிக்கப்பட்டன. இப்பிறப்பிலே துன்பங்கள்இல்லாமற்போதலே அகலாமல் இன்பங்களும் உண்டாமென்பதாம். (௨)

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.



(ப-ரை) (முத்தியை அடைவோர்க்கு) ஐந்தன் - செவிமுதலாகிய ஐம்பொறிகளுக்கு உரிய, புலத்தை - ஓசைமுதலாகிய ஐம்புலன்களையும், அடல் வேண்டும் - கெடுத்தல் வேண்டும் - (கெடுக்கும்போது) வேண்டியவெல்லாம் (அப்புலன்களை அநுபவித்தற்பொருட்டுத்) தாம்படைத்த பொருள்களையெல்லாம், ஒருங்கு-ஒருமிக்க, விடல்வேண்டும்-விடுத்தல்வேண்டும், எ-று

(க-ரை.) முத்தியை விரும்புவோர் ஐம்பொறிகளுக்குரிய புலன்களைக் கெடுத்தல்வேண்டும்-என்பதாம்.

(வி-ரை.) புலன்களை அநுபவித்தலைப் புலமென்றார். அவ்வநுபவிப்புமனத்தைத் துன்பத்தினாலும் பாவத்தினாலும் தேடப்பட்டு வரும் பொருள்களின் மேல் அல்லாமல முத்திவழியாகிய யோக ஞானங்களிலே செல்லவொட்டாமையால் அடல் வேண்டுமென்றும், அம்மனம் அப்பொருள்களிலே சென்றால் அவ்வநுபவிப்பு வளர்வதல்லது கெடுக்கப்படாமையால் வேண்டியவெல்லா, மொருங்கு விடல்வேண்டுமென்றும், சொல்லினார். (௩)

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

(ப-ரை.) நோன்பிற்கு - தவஞ்செய்வோர்க்கு, ஒன்று-பற்றப்படுவதொரு பொருளும், இன்மை-இல்லாதிருக்கை, இயல்பாகும்-சுபாவமாகும், உடைமை (ஒன்றாயினும்) உடைமை, பெயர்த்து - (அத்தவத்தைப்) போக்குதலால் மற்

றும்-மீண்டும். மயலாகும்-மயக்கத்துக்கு ஏதுவாகும், எ-று.

(க-ரை) தவத்தோர்க்குப் பற்றற்றிருப்பது இயல்பாகும் - என்பதாம்.

(வி-ரை.) கோற்பாவை கோன்பென்றும், மயலுக்கு ஏதுவை மயலென்றும், சொல்லுதலால் ஆகுபெயர்கள். எல்லாப்பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாதவிடத்தும் அதுசார்வாக விடப்பட்டவையெல்லாம் திரும்பி வந்து தவத்துக்குவிரோதமாய் மனக்கலக்கஞ்செய்யுமென்பது கருத்து [இவை நான்குபாட்டாலும் எனதென்னும் புறப்பற்று விடுதல்சொல்லப்பட்டது. (௪)

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை

(ப-ரை) பிறப்பறுக்கலுற்றார்க்கு - பிறவியைநீக்கு முயற்சியை மேற்கொண்டவருக்கு, உடம்பும் - (அதற்கு) உதவியாகிய உடம்பும் மிகை அதிகமாம்-(ஆனபின்) மற்றும் - அதற்குமேலும், தொடர்ப்பாடு-(சம்பந்தமில்லாதவையுஞ் சில பொருள்கள்) பற்றப்படுதல், எவன்-என்னாகும், எ-று.

(க-ரை.) பிறவியை நீக்க முயல்வோர்க்கு உடல்பாரமாம், மற்றவையாலென்னபயன் - என்பதாம்.

(வி-ரை.) கொல் - அசை பொதுப்பட உடம்பென்றதனால் - உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப்படும் அருவுடம்பு - இந்திரியவுணர்வுகளோடும் பிராணவாயுக்களோடும் காமவினை வினைவுகளோடும் கூடியமனம், இது சூட்சமசரீரமெனவும்படும். (௫)



யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(ப-ரை.) யானெனதென்னும்-(தானல்லாதவுடம்பை)யானென்றும்(தன்னொடு சம்பந்தமில்லாத பொருளை) எனதென்றும் நினைத்து அவைகளிலே பற்றச் செய்தற்கு ஏதுவாகிய, செருக்கு-மயக்கத்தை, அறுப்பான் - கெடுப்பவன், வானோர்க்கு தேவருக்கும், உயர்ந்த-அடைதற்கரிதாகிய, உலகம்-முத்தியுலகத்தில், புகும்-செல்லுவான், எ-று.

(க-ரை.) நான், எனது, என்று மயக்கமற்றவன் முத்தி அடைவன் என்பதாம்.

(வி-ரை.) மயக்கம் அறியாமை. அதனைக் கெடுத்தலாவது, குருவுபதேச

த்தாலும்,யோகாப்பியாசத்தாலும், அவ்வுடம்பையானல்லவென்றும், அப்பொருளை எனதல்லவென்றும், தெளிந்து அவைகளிலே பற்றைவிடுதல் வானோர்க்குமென்னும் சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. [இதனுல் இருவகைப்பற்றையும் விட்டவர்க்கே மோக்ஷமுண்டென்பது சொல்லப்பட்டது. (க)

பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(ப-ரை) பற்றினை-(இருவகைப்) பற்றுக்களையும், பற்றி — இறுகப்பற்றி விடாதவர்க்கு-விடாதவரை, இடும்பைகள் -- துன்பங்கள்பற்றி - இறுகப்பற்றி விடா-விட்டு நீங்காவாம், எ-று.

(க-ரை.) இருவகைப்பற்றையும் விடாதவர்களைத் துன்பங்கள்விடா என்பதாம்.

(வி-ரை.) இறுகப்பற்றல், ஆசைமிகுதல் விடாதவர்க்கென்பது வேற்றுமை மயக்கம். [இதனுல் பற்றுகளை விடாதவர்க்கு மோக்ஷம் இல்லையென்பது சொல்லப்பட்டது.] (எ)

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(ப-ரை.) தீரத்துறந்தார் - முழுதுந் துறந்தவர், தலைப்பட்டார் - முத்தியை) அடைந்தவராவர், மற்றையவர்-அப்படி துறவாதவர், மயங்கி-மயக்கமுற்று, வலைப்பட்டார்-(பிறப்பாகிய) வலையிலே அகப்பட்டவராவர், எ-று.

(க-ரை.) முற்றத் துறந்தவர்கள் முத்திபெறுவர் துறவாதவர் பிறப்பிலழுந்துவர்-என்பதாம்.

(வி-ரை.) முழுதுந் துறத்தலாவது - பொருள்களையும், இருவகை உடம்புகளையும் வெறுத்துப் பற்றறவிடுதல். அப்படித் துறவாமையாவது, அவைகளிலே ஒன்றனிடத்தே சிறிதாயினும் பற்றுச்செய்தல். துணிவுபற்றி, தலைப்பட்டாரென்றும், பொய்வழிகண்டே பிறப்புவலையுள் அகப்படுதலால் மயங்கியென்றும் சொல்லினர். (அ)

## க்எஃ ௩ட௯ - ஆம் - அதி - மெய்யுணர்தல்.

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(ப-ரை ) (ஒருவன்) பற்றற்ற கண்ணே-(இருவகைப்) பற்றுகளையும் அற்றபொழுதே-(அப்பற்றறுதியானது) பிறப்பு-(அவனது)பிறவியை- அறுக்கும்- ஒழிக்கும், மற்று—அவை அறாதபொழுது, நிலையாமை - (அவற்றால் பிறந்தும்

இறத்தும்-(வருகிற) நிலையாமையானது, காணப்படும்-அறியப்படும், எ-று.

(க-ரை) பற்றற்ற பொழுதே பிறப்பறும் - என்பதாம்.

(வி-ரை.) காரணம் அற்றபொழுதே காரியமும்அற்றதா முறைமைபற்றி பற்றற்ற கண்ணே என்றார் [இவை இரண்டு பாட்டாலும் அவை இரண்டும் சேர்த்துச் சொல்லப்பட்டன.] (க)

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(ப-ரை.) பற்றற்றான் -(எல்லாப்பொருள்களையும் பற்றிநின்றே) பற்றில்லாத கடவுளாலே சொல்லப்பட்ட, பற்றினை - முத்திவழியை, பற்றுக (இதுவே நல்லவழியென்று) மனத்திற் கொள்ளக்கடவர் - (கொண்டு) அப்பற்றை அதனிடத்து உபாயத்தை, பற்றுக - மனத்தினாலே செய்யக்கடவர், பற்று (விடாதுவந்த) பற்று, விடற்கு - விடுதற்கு, எ-று.

(க-ரை) பற்றற்றான் சொல்லிய முத்திவழியைப் பற்றக்கடவர் - என்பதாம்.

(வி-ரை.) கடவுள் வாழ்த்துக்கேற்க இங்கும் பொதுவகையினாலே பற்றற்றானென்றார். அதனிடத்து உபாயமும், தியானமும், சமாதியும் ஆம். விடாதுவந்தபற்று அநாதியாய்வருமுடற்பற்று. [இதனால் அப்பற்றுவிடுதற்கு உபாயஞ் சொல்லிப்பட்டது.

முப்பத்தைந்தாம் அதிகாரம் - துறவு
முற்றிற்று.

---

## முப்பத்தாறும் அதிகாரம்.

# மெய்யுணர்தல்.

அஃதாவது: பிறப்புவீடுகளையும், அவற்றின் காரணங்களையும் * விபரீத † சந்தேகங்களால் அல்லாமல் உண்மையால் அறிதல், இதை வடநூலார் தத்துவஞான மென்பர். இதுவும் பற்றற்றான் பற்றினைப்பற்றிய விடத்தே உண்டாவதாகையால், அக்காரண வொற்றுமைபற்றி துறவின் பின்வைக்கப் பட்டது.

* விபரீத ஞானமாவது கயிற்றைப் பாம்பென்று அறிதல்போல்வன.

‡ சந்தேக ஞானமாவது கயிறோ பாம்போவெனத் துணியாததுபோல்வன.

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

(ப-ரை.) பொருளல்லவற்றை-மெய்ப்பொருள்களல்லாதவைகளை, பொரு ளென்று - மெய்ப்பொருள்களென்று, உணரும்-அறிகின்ற, மருளான்-விபரீத ஞானத்தினாலே, மாணாப்பிறப்பு - மாட்சிமைப்படாத பிறவி (இன்பமில்லாத பிறவியென்றபடி) ஆம்-உண்டாகும், எ-று.

(க-ரை.) பொய்ப்பொருள்களை மெய்ப்பொருளென்றெண்ணு மயக்கத் தாற் பிறப்புண்டாம்-என்பதாம்.

(வி-ரை.) இங்கே பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தலாவது - மறுபிறப்பும் இருவகைப் பயன்களும், கடவுளும் இல்லையென்றும், மற்றும் இப்படிப்பட்டவைகளைச் சொல்லுகிற மயக்கநூல் வழக்கத்தை மெய்ந்நூல் வழக்கமென்று துணிதல் நரகர், விலங்கு, மக்கள், தேவரென்கிற நால்வகைப் பிறப்புகளிலும் உள்ளது துன்பமேயாகலால் மாணாப்பிறப்பென்றார். [இதனால் பிறப்புத் துன்பமென்பதும், அதற்கு முதற்காரணம் விபரீத ஞானமென்பது சொல்லப்பட்டது.] (௧)

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(ப-ரை.) மருள் - அவ்விபரீத ஞானத்திலிருந்து, நீங்கி - மாசறு குற்ற மற்ற, காட்சியவர்க்கு-மெய்யறிவை யுடையவராயினவர்க்கு (அம் மெய்யறிவானது) இருள்-பிறவியை, நீங்கி-நீங்கச்செய்து, இன்பம்-முத்தியை, பயக்கும்-கொடுக்கும், எ-று.

(க-ரை.) விபரீத ஞானத்தை விட்டோர்க்கு முத்தி இன்பம் உண்டு - என்பதாம்.

(வி-ரை) இருள் நரகம் அது தன் காரணமாகிய பிறவிக்கு ஆகுதலால் ஆகுபெயர். நீங்கியென்னுந் தன்வினை நீக்கியென்னும் பிறவினைப் பொருளில் வந்தது மாசறுகாட்சி - கேவலஞானம் [இதனால் வீடாவது உயர்வொப்பில்லாத இன்பமென்பதும், அதற்கு நிமித்தகாரணம் கேவலப்பொருளாகிய பிரம மென்பதும் சொல்லப்பட்டன.] (௨)

ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து

(ப-ரை.) ஐயத்தின் — சந்தேகத்திலிருந்து, நீங்கி - தெளிந்தார்க்கு, மெய் யுணர்ந்தவர்க்கு - வையத்தின், (அடைந்துநின்ற) நிலவுலகத்திலும், வானம் - (அடையக்கடவதாகிய) — வீட்டுலகம், நணியது - அடைந்ததாதலை, உடைத்து - உடையதாம், எ—று.

(க-ரை.) சந்தேக ஞானத்தை விட்டோர்க்கு முத்தியுலகம் மிக்கச் சமீப மாகும்-என்பதாம்.

23



## ௩௫௪ - ஆம் - அதி - மெய்யுணர்தல்

(வி-ரை.) இங்கே ஐயமாவது, மறுபிறப்பும், இருவினைப் பயன்களும், கடவுளும் உண்டோ இல்லையோ என்று ஒன்றிலே துணிவுபிறவாமல் நிற்றல். ஒரு விதத்தினாலே பிறர்மதத்தைக் களைந்து தமதுமதத்தை நிறுத்துதல் சமய நூல்களுக்கெல்லாம் இயல்பாகலால், அந்நூல்களாலே சொல்லப்பட்ட பொருள்களிலே மெய்யெதுவோவென்று உண்டாகிற சந்தேகத்தை யோகிகள் தமது அநுபவஞானத்தினாலே நீக்கி மெய்யை அறிவாராகலால், அவரை ஐயத்தி னீங்கித் தெளிந்தாரென்றும் அவ்வநுபவஞானம் மேலிடுந்தோறும் பழைய லோகாசாரஞானம் மறைபட்டுக்கொண்டே வருமாதலால், அதனைப்பயன்மேல் வைத்து வையத்தின்வான நணியதுடைத்தென்றும் சொல்லினர் சொல்லவே சந்தேகஞானமும் பிறவிக்குக் காரணமாகுதல் சொல்லப்பட்டதாயிற்று. (௨)

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(ப-ரை.) மெய்யுணர் வில்லாதவர்க்கு - மெய்யையறித லில்லாதவர்க்கு, ஐயுணர்வு - (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் இவ்வைந்து புலன்களிலும் செல்லுதலால்) ஐந்தாகிய உணர்வு எய்தியக்கண்ணும் (அப்புலன்களைவிட்டுத்) தமக்கு வசப்பட்டவிடத்தும் (அதனாலே) பயன் - பிரயோசனம், இன்று - இல்லை, எ—று.

(க-ரை.) மெய்யை யறியாதவர்க்கு ஐம்புலன்களும் வசப்பட்டாலும் பிர யோசனமில்லை-என்பதாம்.

(வி-ரை.) ஐந்தாகிய உணர்வு, மனம், அது வசப்படுதலாவது, மடங்கி யோகக் குறியிடத்தே நிற்கை. அப்படி நின்றவிடத்தும் அது முத்தியைத்தாரா மையால் பயனின்றேயென்றார். [இவை இரண்டுபாட்டானும் மெய்யையுணர்ந் தவர்க்கே முத்தி உண்டென்று மெய்யுணர்வின் சிறப்புச் சொல்லப்பட்டது.]

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

(ப-ரை.) எப்பொருள்-யாதொருபொருள், எத்தன்மைத்தாயினும்-யாதோரியல்புடையதாய்த்தோன்றினும் (அத்தோன்றிய விதத்தைக் கண்டுவிடாமல்) அப்பொருள் (தோன்றிய) அப்பொருளிடத்திருந்தும், மெய்ப்பொருள்-மெய்யாகியபொருளை, காண்பது அறிவு-மெய்யுணர்வு, எ-று.

(க-ரை.) எந்தப் பொருளிடத்தும் உண்மைப்பொருளை அறிவதேயறிவு என்பதாம்.

(வி-ரை.) சராசரமாகிய பொருள்களிலெல்லாம் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து நின்ற உண்மையைக் காண்பதே மெய்யுணர்வு என்றபடி யாயிற்று. அதாவது, அரசன் சேரமான் என்றவிடத்தே அரசனென்பதோர் சாதியும், சேரமானென்பதோர் குடியும் ஒருவ



னிடத்தே கற்பனையாதலால், அக்கற்பனையை விட்டு அவனை நிலமுதல் உயிரீறாகிய தத்துவங்களின் கூட்டமென்று அறிந்து அத்தத்துவங்களை நிலமுதலாக அதனதன் காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டுபோய் முடிவிலே காரண காரிய மிரண்டும் இல்லாமல் நிற்பதனை அறிதலாம். [இதனால் மெய்யுணர்வினது இலக்கணம் சொல்லப்பட்டது] (௫)

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி

(ப-ரை.) ஈண்டு-ஆன்மாவிலே பிறப்பினிடத்து, கற்று (உபதேசத்தை) ஞானாசாரியனிடத்தே கேட்டு (அதனால்) மெய்ப்பொருள் உண்மைப்பொருளை கண்டார்-உணர்ந்தவர், மற்றீண்டு - திரும்பி இப்பிறப்பினிடத்து, வாராநெறி-வாராதவழியை, தலைப்படுவர்-அடைவார், எ-று.

(க-ரை.) இப்பிறப்பி லுபதேசத்தைக்கேட்டு உண்மைப்பொருளையறிந்தவர் பிறவார்-என்பதாம்

(வி-ரை.) கற்றென்றதனால்-பலரிடத்தும் பலநாளும் பழகுதலும், ஈண்டென்றதனால் - மோக்ஷத்தை அடைதற்கு உரிய மனிதப்பிறப்பு பெறுதற்கு அரியதென்பதும் சொல்லப்பட்டன. ஈண்டு வாராநெறி - மோக்ஷமார்க்கம் மோட்சத்துக்கு நிமித்தகாரணமாகிய முதற்பொருளை அறிதற்கு உபாயம்

மூன்று அவை கேட்குதல், சிந்தித்தல், தெளிதல் என்பன. [அவற்றுள் கேட்குதல் இதனாலே சொல்லப்பட்டது.]

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(ப-ரை) (அப்படி கேட்கப்பட்ட உபதேசப்பொருளை) உள்ளம் (ஒருவனது) உள்ளமானது, ஒருதலையா நிச்சயப்பட, ஓர்த்து (பிரமாணங்களாலும் யுத்தியினாலும்) ஆராய்ந்து (அதனால்) உள்ளது - முதற்பொருளை, உணரின் - அறியுமாயின், பிறப்பு - (அவனுக்குப்) பிறவியுள்ளதாக, பேர்த்து-மாறி, உள்ள வேண்டா-நினைக்கவேண்டுவதில்லை, எ-று.

(க-ரை.) ஒருவன் மனம் உபதேசத்தால் உண்மைப்பொருளை யறியின் அவனுக்குப் பிறவி இல்லை—என்பதாம்.

(வி-ரை.) [இதனால் சிந்தித்தல் சொல்லப்பட்டது.] (எ)

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(ப-ரை.) பிறப்பென்னும்-பிறவிக்கு முதற்காரண மெனப்படுகிற, பேதைமை—அஞ்ஞானமானது, நீங்க-கெட, சிறப்பென்னும் - மோக்ஷத்துக்கு நிமித்த காரணமெனப்படுகிற, செம்பொருள் - செவ்வியபொருளை, காண்பது - அறிவதே, அறிவு (ஒருவனுக்கு) மெய்யுணர்வாம், எ-று.

## கஅ0 ௩௬ - ஆம் - அதி - மெய்யுணர்தல்.

(க-ரை) பிறவிக்குக்காரணமாகிய அஞ்ஞானங்கெட உண்மைப்பொருளைக் காண்பதேயறிவாகும்-என்பதாம்.

(வி-ரை.) பிறப்பென்னும் பேதமையென்றும், சிறப்பென்னுஞ் செம்பொருளென்றும், காரியங்களைக் காரணங்களாக உபசரித்தார், ஐவகைக் குற்றங்களுள் அஞ்ஞானம் மற்றை நான்குக்கும் காரணமாதலால் அச்சிறப்புப் பற்றி அதனையே பிறப்புக்குக் காரணமாக்கிச்சொல்லினார். எல்லாப் பொருள்களினும் சிறந்ததாகலால் மோட்சம் சிறப்பெனப்பட்டது. நித்தியமாகியும், பரிசுத்தமாகியும், எங்குநிறைந்துள்ள பிரமமென்னப்பட்ட முதற்பொருள் விகாரமில்லாமல் எக்காலமும் ஒரே தன்மையதாயிருத்தல்பற்றி அதனைச்செம்பொருளென்றார். முன்னே மெய்ப்பொருளென்றும், உள்ளதென்றும், சொல்லியதும் இது பற்றியென்றறிக அதனைக் காண்கையாவது உயிர் தனது அஞ்

ஞானங்கெட்டு அப்பொருளோடு ஒற்றுமையுற இடைவிடாமல் நினைத்தல். இதனைச் சமாதியென்பர் மரணகாலத்தில் நினைக்கிறபடி பிறவிவருமென்றிருத்தலால் மோட்சமடைவோர்க்கு அக்காலத்திலே தத்துவப்பொருளைப் பாவிக்கும்படி முன்னே பழகுதலாகிய இதனின் மிகுந்த உபாயம் இல்லையென்பதறிக. [இதனாலே தெளிதல் சொல்லப்பட்டது] (அ)

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்

(ப-ரை.) (ஒருவன்) சார்பு (எல்லாப் பொருள்களுக்கும்) சார்பாகிய அச் செம்பொருளை, உணர்ந்து-அறிந்து, சார்பு-இருவகைப்பற்றுக்களும், கெட-நீக்க, ஒழுகின்-நடக்கவல்லனாயின், சார்தரும் (முன் அவனைச்)சேர்தற்குரியவையாயின்ற, நோய்-துன்பங்கள், அழித்து (அவ்வுணர்வையும் ஒழுக்கத்தையும்) அழித்து, மற்றச்சார்தரா-பின்சேரமாட்டாவாம், எ-று.

(க-ரை.) மெய்ப்பொருளையறிந்து இருவகைப் பற்றுகளுங்கெட நடப்பவனைத் துன்பங்கள் ணுகா-என்பதாம்.

(வி-ரை) இங்கே ஒழுக்கமென்றது-யோகவழிநடத்தலை. அது-இயமம், நியமம், ஆசனம் பிராணயாமம், பிரதியாகாரம். தாரணை, தியானம், சமாதி, என எண்வகைப்படும். அத்துன்பங்களாவன பிறவி அநாதியாய் வருதலால் உயிரினாலே அளவில்லாமல் சம்பாதிக்கப்பட்டிருக்கிற வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளால் அநுபவிக்கப் பட்டவையும், பிறந்த வுடம்பால் மொண்டு கொள்ளப்பட்டவையும், நீங்கலாக பின்னே அநுபவிக்கும்படி கிடந்தவையாம். அவை விளக்கின்முன் இருள்போல் ஞானயோகங்களின் முன்னேகெடுதலால் அழித்துச் சார்தராவென்றார். பிறவிக்குக் காரணமாதலால் நல்வினைப்பயனும் நோயெனப்பட்டது. முன்மூன்றுபாயங்களாலும் பரம்பொருளை அறியப் பிறப்பறுமென்றார். அது அறமிடத்தே பின்வரக்கிடக்குந்துன்பங்களெல்லாம் எப்படி போமென்னும் வினாவை எழுப்பிக்கொண்டு ஞானயோக முதிர்ச்சியுடைய உயிரைச்சேரமாட்டாமையைத்தெரிவிக்கின்றதென்பது [இதனாலேசொல்லப்பட்டது.]

## ௩ எ - ஆம் - அதி - அவாவறுத்தல். கஅ௩

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

(ப-ரை.) (ஞானயோகங்களின் முதிர்ச்சியுடையவர்க்கு) காமம், வெகுளி,

மயக்கம், விருப்பம், வெறுப்ப, அஞ்ஞானம், எனப்படுகிற இவை மூன்றன், இக்குற்றம் - மூன்றனது, நாமம்-பெயரும், கெட-கெடுதலால், நோய் (அவைகளின் காரியங்களாகிய) வினைப்பயன்கள், கெடும் - உண்டாதலில்லை, எ-று.

(க-ரை.) ஞானவான்களுக்கு முக்குற்றங்களால் வருந்துன்பங்களில்லை - என்பதாம்.

(வி-ரை.) அநாதியாகிய அவித்தையென்னும் அஞ்ஞானமும், அதுபற்றி யானெனமதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளிடத்தே செல்லும் ஆசையும், அதுபற்றி அதனை மறுதலைவிடத்தேசெல்லும் கோபமும் என வடநூலார் குற்றம் ஐந்தென்பார். இவர் அவற்றுள் அகங்காரம் அவித்தையிலும், அவாவுதல் ஆசையிலும் அடங்குதலால் மூன்றென்றார். இடையறாத ஞானயோகங்களுக்கு முன்னே இக்குற்றமூன்றும் காட்டுத்தீ முன்னே பஞ்சுபோலுமாம். ஆதலால் அம்மிகுதி தோன்ற இவை மூன்றனுமங்கெடவென்றார். விகாரத்தாலே தொக்கநாமமும் என்னுமிழிவு சிறப்பும்மை வருவிக்கப்பட்டது [காரணமாகிய அக்குற்றங்களைக் கெடுத்தோர் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையால் அவர்க்கு வருவதற்குரிய துன்பங்களும் இல்லையென்பது இதனாலே சொல்லப்பட்டது.] முன்னெடுத்த துன்பங்களும் மேல்வருந் துன்பங்களும் இல்லாமற் போகுகை மெய்யுணர்வின் பயனாதலால் இவைஇரண்டும் இவ்வதிகாரத்திலே சொல்லப்பட்டன. இவ்விதத்தால் மெய்யுணர்ந்தார்க்கு உள்ளவை எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப்பயனுமே யென்பது பெற்றாம். (௪0)

முப்பத்தாறும் அதிகாரம் மெய்யுணர்தல்.
முற்றிற்று.

---

## முப்பத்தேழாம் - அதிகாரம்.

# அவாவறுத்தல்.

அஃதாவது: முன்னும் பின்னும் வினைத்தொடர்பு அறுத்தார்க்கு நின்றவுடம்பும், அதுகொண்ட வினைப்பயன்களும், நின்றமையால் அதுபற்றி ஒரோவிடத்துத் துறக்கப்பட்ட புலன்களின்மேலே பழைய பழக்க வசத்தினாலே நினைவுசெல்லுமன்றே அந்நினைவும் பிறவிக்கு வித்தாமாதலால் அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வால் அறுத்தலாம். அதிகாரமுறைமையும்

இதனால் விளங்கும்.

## கஅுஉ ௩௭ - ஆம் - அதி - அவாவறுத்தல்.

அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(ப-ரை.) எல்லாவுயிர்க்கும் - சகல வுயிர்களுக்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், தவா - கெடாதுவருகின்ற, பிறப்பு - பிறவியை, ஈனும் - விளைப்பதாகிய, வித்து - விதை, அவா - அவாவாகும், என்ப - என்று (நூலோர்) சொல்லுவார், எ-று.

(க-ரை.) எவ்வுயிர்களின் பிறவிக்கு விதை ஆசை-என்பதாம்.

(வி-ரை.) உடம்பு நீங்கிப்போங்காலத்திலே அடுத்தவினையும், அது காட்டுங்கதி நிமித்தங்களும், அக்கதியிலவாவும், உயிரினிடத்தே முறையேவந்து உதிக்க, அறிவை மோகமானது மறைக்க, அவ்வுயிரை அவ்வவாவானது கதியினிடத்தே கொண்டுசெல்லுமாகலால், அதனைப்பிறப்பீனும் வித்தென்றும், கதிவசத்தால் உளதாகிய அவ்வுயிரின் வேறுபாட்டிலும் * உற்சர்ப்பிணி † அவசர்ப்பிணியென்னுங் காலவேறுபாட்டிலும் அது வித்தாதலை வேறுபடாமையால் எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும் என்றும் இது எல்லாச்சமயங்களுக்கும் ஒத்தலால் என்பவென்றும் கூறினர். [இதனால் பிறப்புக்கு அவாவிதையாதல் சொல்லப்பட்டது] (க)

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

(ப-ரை.) (பிறப்புத் துன்பமாயிருக்கையை அறிந்தவன்) வேண்டுங்கால் - ஒன்றைவேண்டினால், பிறவாமை - பிறவாதிருக்கையையே, வேண்டும் - இச்சிக்கவேண்டும், அது - அப்பிறவாமையானது, வேண்டாமை (தான் ஒருபொருளையும்) அவாவாமையை, வேண்ட - இச்சிக்க, வரும் (அவனுக்குத்) தானே உண்டாம், எ-று.

(க-ரை.) ஒருவன் பிறவாமையையே யிச்சிக்கவேண்டும்-என்பதாம்.

(வி-ரை.) அநாதியாகத் தான் பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு, இவைகளினாலே துன்பப்பட்டுக்கொண்டுவருகின்றமையை அறிந்தவனுக்கு இன்பத்தில்

ஆசையுண்டாமாதலால் பிறவாமையை வேண்டுமென்றும் இவ்வுலகத்துச் சிற்றின்பத்தைக்குறித்து ஒருபொருளை அவாவினுல் அது பிறவியைத்தரும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலாலே அது வேண்டாமை வேண்டவருமென்றுஞ் சொல்லினர். (உ)

வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

* உற்சர்ப்பிணி-உலகம் வாழ்நாள் போகம் இவை முதலானவைகளாலே வளர்பிறைபோல் பெருகுங்காலம்.

‡ அவசர்ப்பிணி- அது அவைகளாலே தேய்பிறைபோல் சுருங்குங்காலம்.

## கஎ - ஆம் - அதி - அவாவறுத்தல். கஅங

(ப-ரை.) வேண்டாமையன்ன - (ஒருபொருளையும்) அவாவாமைபோலும், விழுச்செல்வம்-மேலாகிய செல்வமானது, ஈண்டு-(காணப்படுகிற) இவ்வுலகத்திலே, இல்லை - (அவ்வளவேயன்றி) ஆண்டும்-(கேட்கப்படுகிற) அவ்வுலகத்திலும், அஃதொப்பது-அதுபோல்வது, இல்-இல்லை, எ-று.

(க-ரை.) இச்சியாமைக் கொப்பான செல்வம் இவ்வுலகத்திலும் மோக்ஷத்திலும் இல்லை-என்பதாம்.

(வி-ரை.) மக்களது செல்வமும், தேவரது செல்வமும், மேலுமேலு நோக்கச் சிறிதாதலால் தனக்கு மேலில்லாத வேண்டாமையை விழுச்செல்வமென்றும், அதற்கு இரண்டுலகங்களிலும் ஒப்பதில்லை யென்றும் சொல்லினர் [இவ்விரண்டுபாட்டாலும் பிறவாமைக்கு வழியாமெனவும், மேலாகிய செல்வமாமெனவும், வேண்டாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (ங.)

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(ப-ரை.) தூய்மையென்பது - (ஒருவர்க்கு) முத்தியென்று சொல்லப்படு மெய்ம்மையை, வேண்ட-இச்சிக்க, வரும்-தானேயுண்டாம், எ-று.

(க-ரை.) மெய்ம்மையை யிச்சிக்கவருவது ஆசையில்லாமை அதே முத்தி-என்பதாம்.

(வி-ரை.) வீடாவது – உயிர் அஞ்ஞான முதலாகிய அழுக்கறுதலாதலால் அதனைத் தூய்மையென்றும் காரணத்தைக் காரியமாக உபசரித்துத் தூய்மையென்பது அவாவின்மையென்றும், வாய்மையையுடைய, பரத்தை ஆதபெய

ரால் வாய்மையென்றும சொல்லினர். மற்றது - அசை, வேண்டுதல் - இடைவிடாது பாவித்தல். [அவாவறுத்தல் முத்திக்குநேரே காரணமென்பதும் அது வருவழியும் இதனாலே சொல்லப்பட்டன.] (௪)

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(ப-ரை.) அற்றவரென்பார் - (பிறவி) யற்றவரென்று சொல்லப்படுமவர், அவாவற்றார் - (அதற்கு நேரே ஏதுவாகிய) அவ்வாசையற்றவர், மற்றையார் - பிறவேதுக்கள் அற்று அதுவொன்றும் அறாதவர், (அவ்வேதுக்களாலே சில துன்பங்கள் அற்றவரல்லாமல்) அற்றாகவற்றதிலர் - அவர்போற் பிறவியற்றிலர், எ-று.

(க-ரை.) பிறவியற்றவரென்று சொல்லப்படுபவர் ஆசையற்றவர் - என்பதாம்.

(வி-ரை) [இதனால் அவாவற்றவரது சிறப்பு விதியினாலும் எதிர்மறையினாலுஞ் சொல்லப்பட்டது.] (௫)

## ௩௬௬ ௩௭ - ஆம் - அதி - அவாவறுத்தல்.

அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(ப-ரை.) ஒருவனை - (மெய்யுணர்தல் முடிவாகிய காரணங்களெல்லாம் பெற்று அவைகளால் முத்தியை அடைதற்குரியவனாகிய) ஒருத்தனை, வஞ்சிப்பது - மறவிவழியினாலே நுழைந்து பின்னும் பிறவியிலே தள்ளிக் கெடுக்கவல்லது, அவா - அவாவாம் (ஆகலால், அஞ்சுவது - அவ்வவாவை) அஞ்சிக்காப்பதே, அறன் - துறவறமாம், எ-று.

(க-ரை.) ஒருவனைக் கெடுக்கவல்லதாகிய ஆசையை நீக்குவதே துறவறம் என்பதாம்.

(வி-ரை.) ஓரும்-இரண்டும் - அசைகள். அநாதியாய்வந்த அவ்வவா ஒரோவிடத்து வாய்மையை வேண்டுதலையொழிந்து பார்க்கினாலே காத்திடானாயின் அது இடமாக அவன் அறியாமல் புகுந்து பழைய வியற்கையாய் நின்று பிறப்பினை உண்டாக்குதலால் அதனை வஞ்சிப்பதென்றார். காத்தலாவது - வாய்மை

வேண்டலிலே இடைவிடாமற் பழகிப்பரிசுரித்தல், [இதனால் அவாவின் குற்றமும் அதனைக் காப்பதே அறமென்பதும் சொல்லப்பட்டது.] (௮)

அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(ப-ரை.) (ஒருவன்) அவாவினை - ஆசையினை, ஆற்றவறுப்பின் - முழுதும் அறுத்தால் (வஞ்சித்தும் வாராமற்கெடுக்கவல்லவனாயினென்றபடி) (அவனுக்கு) தவாவினை - கெடாமைக்கு ஏதுவாகியசெயல், தான் - வேண்டுமாற்றால், தான் விரும்பும் வழியினாலே வரும்-உண்டாகும், எ-று.

(க-ரை.) ஒருவனிச்சையை நீக்கினாலவன் கெடாமைக் கேதுவுண்டு - என்பதாம்.

(வி-ரை.) கெடாமை பிறவித்துன்பங்களால் அழியாமை அதற்கு ஏதுவாகிய வினையென்றது மேற்சொல்லிய துறவறங்களை தான் விரும்பும்வழி மெய் வருந்தாதவழி. அவாவைமுழுவதும் அறுத்தவனுக்கு மேலேதவஞ்செய்யவேண்டுவதில்லை, அவனால் செய்யப்பட்டவையெல்லாம் அறமாமென்பது கருத்து.

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

(ப-ரை.) அவாவில்லாதவர்க்கு-ஆசையில்லாதவர்க்கு, (துன்பம்வரக்கடவ) தொருதுன்பம், இல்லாகும்-இல்லையாகும், ஒருவனுக்குப் பிறகாரணங்களெல்லாம் (இல்லாதிருந்தும்) அஃதுண்டேல்-அவ்வொன்றுமாத்திரம் உண்டாயின் (அதனால் எல்லாத்துன்பங்களும்) தவாது-முடிவில்லாமல், மேன்மேல்-மேலுமேலும் வரும், எ-று.

## ௩௭ - ஆம் - அதி - அவாவறுத்தல். ௧௮௫

(க-ரை.) ஆசையற்றவர்களுக்குத் துன்பமில்லை - என்பதாம்.

(வி-ரை.) உடம்பு மெய்கொண்ட துன்பம் முன்பே செய்துகொள்ளப்பட்டதாகலின் இங்கே துன்பமென்றது, இப்போது அவாவாலேசெய்து கொள்ளப்படுகின்றவைகளை மேன்மேல் வருமென்றதனால் தன்னைப் பற்றிவருவதும், பிறவுயிரைப்பற்றி வருவதும், தெய்வத்தைப் பற்றிவருவதும், ஆகிய மூவகைத் துன்பங்களென்பது பெற்றாம். இதனால் அவாவே அத்துன்பத்திற்

குக் காரணமென்பது சொல்லப்பட்டது.] (அ)

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(ப-ரை.) அவாவென்னும் - அவாவென்றுசொல்லப்படுகிற, துன்பத்துட் டுன்பம்-துன்பங்களுள்ளே மிகுந்த துன்பமானது, கெடின் (ஒருவனுக்குக்கெடுமாயின் (அவன்) முத்திபெற்றவிடத்தேயல்லாமல், ஈண்டும்-இவ்வேயும்(உடம்போடுகூடி நின்றவிடத்துமென்றபடி) இன்பம்-ஆனந்தமானது இடையறாது-நடுவே நீங்காது, எ-று.

(க-ரை.) மிகத் துன்பந் தருவதாகிய ஆசைகெடின் இவ் வுலகத்திலும் இன்பம் என்பதாம்.

(வி-ரை.) துன்பத்துட்டுன்பமாவது-மற்றைத்துன்பங்களெல்லாம் துன்பங்களாய்த் தோன்றும்படியாகவருங் கொடிய துன்பமாம். அவாவானது பயனைக் கொடுக்கும்போதே யல்லாமல் தோன்றும்போதும் துன்பமாகலால் இப்படிச் சொல்லப்பட்டது. அவாவென்னுந் துன்பத்துட் டுன்பமென்ற காரணத்தைக் காரியமாக உபசரித்தார் அவ்வவாக்கெட்டவர்க்கு மனந் தமொருஅ நிரப்பி நிற்கு மாகையால் ஈண்டும் இன்பம் இடையறாதென்றார். [இதனால் அவாவறுத்தவர் முத்தியின்பத்தை உடம்போடுநின்றே அடைவரென்பது சொல்லப்பட்டது.] (க)

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

(ப-ரை.) ஆராவியற்கை (ஒருபோதும்) நிரம்பாதஇயல்பையுடைய,அவா-அவாவை, நீப்பின் (ஒருவன்) விடுவானாயின் அவ்விடுகை அவனுக்கு, அந்நிலையே-அப்போதே, பேராவியற்கை (எப்போதும்) ஒரு நிலைமையனாந் தன்மையை, தரும்-கொடுக்கும், எ-று.

(க-ரை.) நிரம்பாத ஆசையைவிடில் அது பிறவாமையைத் தரும் என்பதாம்.

(வி-ரை.) நிரம்பாமையாவது - தாமேயல்லாமல் தம்பயனும் நிலையாமையால் வேண்டத்தகாத பொருள்களைவேண்டி மேலுமேலும் வளர்தல். அவ்வளர்ச்சிக்கு அளவில்லாமையால் விடுதலே தக்கதென்பது கருத்து. களிப்புக் கவலைகளும், பிறப்புப்பிணி மூப்பிறப்புகளும், முதலானவை இல்லாமல் உயிர் ஒப்புயர்வில்லாத இன்பத்தை அடைந்து நிற்கையால் வீட்டினைப் பேராவியற்

கையென்றும், அதை அவாவை விட்டவிடத்துப் பெறுதற்கு ஐயமில்லாமையால் அந்நிலையே தருமென்றும் சொல்லினர். அந்நிலைமையை யுடையவனைச் சீவன் முத்தனென்பர். [இதனால் வீடாவது இதுவென்பதும் அது அவாவறுத்தவர்க்கு அப்போதே உண்டாமென்பதும் சொல்லப்பட்டன.] (௧0)

முப்பத்தேழாம் அதிகாரம் - அவாவறுத்தல் முற்றிற்று.

துறவியல் முற்றுப்பெற்றது.

ஆக அதிகாரம்-௩௭-க்கு திருக்குறள் - ௩௭0.

இவ்விதத்தால் இம்மை, மறுமை, வீடு என்கிற மூன்றையும் உண்டாக்குஞ் சிறப்புடைத்தாகிய அறத்தை அருளிச்செய்தார். இனி முறையே பொருளும், இன்பமும், அருளிச்செய்யத் தொடங்கியவர் அவைகளுக்கு-முதற்காரணமாகிய ஊழின் வலிசொல்லுகிறார்.

---

## முப்பத்தெட்டாம் - அதிகாரம்.

## ஊழ்.

---

அஃதாவது: நல்வினைப் பயனாகிய இன்பமும், தீவினைப்பயனாகிய துன்பமும் அவ்வினைகளைச் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதியாம். ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பவை ஒரு பொருட்சொற்கள். [இது பொருளின்பங்க ளிரண்டிக்கும் பொதுவாய் ஒரு றுன் வைக்கப்படாமையாலும், முன் சொல்லப்பட்ட அறத்தோடு சம்பந்த முடைமையாலும் அதனிறுதியிலே சொல்லப்பட்டது]

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(ப-ரை.) (ஒருவனுக்கு) கைப்பொருள் - கையிலிருக்கும்பொருள், ஆகூழால்-ஆகுதற்குக் காரணமாகிய ஊழினாலே, அசைவின்மை - முயற்சியானது, தோன்றும்-உண்டாகும், போகூழால்-போகுதற்குக் காரணமாகிய ஊழினாலே, மடி-சோம்பலானது, தோன்றும்-உண்டாகும், எ-று.

(௧-ரை.) ஒருவனுக்குப் பொருள்வரும் விதியால் முயற்சியும் பொருளழியும் விதியால் சோம்பலும் உண்டாகுமென்பதாம்.

(வி-ரை.) ஊழானது ஒருபொருளினது ஆக்கவழிவுகளுக்குத் தனைக்

காரணமாகிய முயற்சி சேம்பல்களையும் தானே தோன்றச்செய்யு மென்பது கருத்து. (௪)

பேதைப் படுக்கு மிழவூழ் றறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

௩௱௭௰௨ ‍ - ஆம் - அதி - ஊழ். ௩௭௨

(ப-ரை.) (ஒருவனுக்கு) அறிவு - எல்லாவறிவும் உண்டாயிருந்தாலும், இழவு (கைப்பொருளை) இழத்தற்குக் காரணமாகிய, ஊழ் (உற்றக்கடை) பொருந்தியவிடத்து, பேதைப்படுக்கும் (அதனை) அறியாமையாக்கும் (அவனறிவு சுருக்கியிருந்தாலும்) ஆகல் (கைப்பொருள்) ஆகுதற்குக் காரணமாகிய ஊழ் உற்றக்கடை-பொருந்தியவிடத்து, அகற்றும் (அதனை) விரிக்கும். எ-று.

(க-ரை.) போகும் ஊழ் அறிவில்லாமையையும் ஆகும் ஊழ் அறிவையும் தரும்-என்பதாம்.

(வி-ரை) கைப்பொருளென்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது, ஊழ் இயற்கையாலாகிய அறிவையும் வேறுபடுத்து மென்பதாம். (௨)

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

(ப-ரை.) (அறியாமையாக்குவதாகிய ஊழுடையவனொருவன்) நுண்ணிய-நுட்பமான பொருள்களையுடைய, நூல்பல-பல நூல்களையும், கற்பினும்-கற்றாலும் (அவனுக்கு) மற்றும்-பின்னும், தன்னுண்மை-தனது ஊழினாலாகிய அறிவே, மிகும்-மேற்படும், எ-று.

(க-ரை.) ஒருவ னுட்பமாகிய நூல்களைக் கற்றாலும் அவனுக்கு ஊழினாலாகிய அறிவே, மிகும்-என்பதாம்.

(வி-ரை.) பொருளினுண்மை-நூலின்மேல் ஏற்றப்பட்டது. மேற்படுதல்-கல்வியறிவைப் பின்னே இதை என்செய்தோமென்று துன்பப்படுதற்காக்கிச் செயலுக்குத் தான் முற்படுதல். செயற்கையாலாகிய அறிவையும் கீழ்ப்படுத்து மென்பதாம்.

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

(ப-ரை.) உலகத்து - உலகத்தில், இயற்கை (ஊழினாலாகிய) இயற்கையானது, இருவேறு - இரண்டுகூறு யிருக்கின்றது (ஆதலால்) திரு - செல்வ

முடையவராதலும்வேறு, தெள்ளியராதலும்-அறிவுடையராதலும்வேறு, எ-று.

(க-ரை) உலகில் ஊழின் இயல்பு செல்வமுடைமை அறிவுடைமை என இரண்டுவகை - என்பதாம்.

(வி-ரை.) செல்வத்தைப் படைத்தலும், காப்பாற்றலும், பயன் கொள்ளுதலும் அறிவுடையவர்க்கல்லது கூடாவென்றே அவ்விதமல்லாமல் அறிவுடையவர் வறியவராகவும், மற்றவர் செல்வராகவும் காணுதலால், அறிவினராதற்கு ஆகிறஊழ் செல்வராகுதற்கும் செல்வராதற்கு ஆகிறஊழ் அறிவினராகுதற்கும் ஆகாவென்றதாயிற்று, ஆகவே செல்வத்தைத் தேடும்போது அறிவையுடைமை காரணமும் வேண்டாமென்பது பெற்றும். (௪)

# ௧௮௮ ௩௮ - ஆம் - அதி - ஊழ்.

நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(ப-ரை) செல்வம்-செல்வத்தை, செய்தற்கு-உண்டாக்குதற்கு, நல்லவை யெல்லாம் - நன்மை யுள்ளவையெல்லாம், தீயவாம் - தீயவையாய் அழிக்கும் (அநுமாத்திரமல்லாமல்) தீயவும்-தீயவைதாமும், நல்லவாம் - நல்லவையாயாக்கும் ஊழ்வசத்தால் எ-று.

(க-ரை) விதிவசத்தால் நல்லவை யெல்லாந் தீயவாந் தீயவையெல்லாம் நல்லவாம் - என்பதாம்.

(வி-ரை.) நல்லவை தீயவை என்றது, காலமும், இடமும், கருவியும், தொழிலும் ஆகிய இவை முதலானவைகளை ஊழாலென்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது, அழிக்குமூழ் உற்றவிடத்துக் காலமுதலானவைகள் நல்லவையாயிருந்தாலும் அழியும், ஆக்குமூழ் உற்றவிடத்து அவை தீயவையாயிருந்தாலும் ஆகுமென்றதாயிற்று ஆகவே ஊழ்காலமுதலான துணைக்காரணங்களையும் வேறுபடுத்துமென்பது பெற்றும். (௫)

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

(ப-ரை) பால் - ஊழினாலே, அல்ல - தம்முடையவை யாகாதபொருள்

கள், பரியினும்-வருந்திக் காப்பாற்றினாலும் ஆகாவாம் (தம்மிடத்து) நில்லாமற் போகும், தம-தம்முடையவையாகிய பொருள்கள், உய்த்து (புறத்தே) கொண்டு போய், சொரியினும் - பெய்துவிட்டாலும், போகா (தம்மைவிட்டுப்) போகாவாம், எ-று.

(க-ரை) ஊழினால் தமக்குரித்தாகாப் பொருள்களைக் காப்பாற்றினாலும் நில்லாவுரித்தாகும் பொருள்களைப் புறத்திற்போக்கினாலும் போகா-என்பதாம்

(வி-ரை.) பொருள்களது நிலையும், போக்கும் ஊழால் ஆவதல்லது காப்பினாலும், இகழ்ச்சியினாலும் ஆகாதென்பதாம். [இவை இருபாட்டாலும்பொருள்களுக்குக் காரணமாகிய ஊழின்வலி சொல்லப்பட்டது.] (அ)

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(ப-ரை.) கோடி - (அனுபவிக்கப்படும்பொருள்கள்) கோடியை, தொகுத்தார்க்கும் - வருந்திச் சேர்த்தவர்க்கும், வகுத்தான் - தெய்வத்தினால் வகுத்த வகுக்கப்பட்ட, வகையலலால் - வகைப்படியல்லது, துய்த்தல் - அநுபவித்தல், அரிது-உண்டாகாது, எ-று.

(க-ரை.) கோடி பொருளைச் சம்பாதித்தவர்க்குங் கடவுளமைத்த வகைப் படியன்றி யநுபவித்தலரிது-என்பதாம்.



(வி-ரை.) எந்தவினை எந்த வுயிரினாலே செய்யப்பட்டதோ அந்த வினைப்பயனை அந்த வுயிர்க்கே வகுத்தலால் வகுத்தானென்றார். தொகுத்தார்க்கு மென்னுமும்மை தொகுக்காதவர்க்கு மாத்திரமல்லாமல் என்னும் பொருளைத் தருதலால் எச்சவும்மை. வேறு முயற்சிகளாலே பொருள்களைச் சேர்க்கலாமே, யல்லாமல் அநுபவித்தல் கூடாது அதற்கு ஊழ்வேண்டுமென்பதாயிற்று. (எ)

துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழிவு மெனின்.

(ப-ரை.) துப்புரவில்லார் - (வறுமையினாலே) அநுபவித்தல் இல்லாதவர் துறப்பார் (இல்வாழ்க்கையைத்) துறக்குங் கருத்துடையவராவார் (ஊழ்கள்) உறற்பால - அடையும் பகுதியையுடைய துன்பங்களை, ஊட்டா - அடைவிக்காமல், கழியுமெனின்-நீங்குமாயின், எ-று.

(க-ரை.) ஊழ்வினைகள் துன்பங்களை யடைவிக்காமல் நீங்கின் வறுமை

யநுபவமில்லார் துறப்பார்-என்பதாம்.

(வி-ரை.) தம்மால் விடப்படும் பற்றுகளெல்லாம் தாமே விடப்பெற்றிருக்கும் கருத்து வேறுபாட்டால் துன்பப்படுவது ஊழ்வலியாலென்னும் ஒழிந்த சொற்பொருளைக் காட்டலால்-மன்-ஒழியிசை. (அ)

நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

(ப-ரை.) நன்று - நல்வினை, ஆங்கால் - இன்பங்களைக் கொடுக்கும்போது, (அவ்வின்பங்களை நீக்கும்விதந்தேடாமல்) நல்லவா - இவை நல்லவையென்றிசைந்து, காண்பவர்-அநுபவிப்பவர், அன்று-அற்றைத்தீவினை, ஆங்கால்-துன்பங்களைக்கொடுக்கும்போது (அத்துன்பங்களையும் அப்படி அநுபவியாமல், அல்லற்படுவது (நீக்கும்விதந்தேடித்) துன்பப்படுவது, எவன்-என்னகினைத்து, எ-று.

(க-ரை.) நன்மையை யநுபவிப்பதுபோலத் தீமையையும் அநுபவிக்க வேண்டும்-என்பதாம்

(வி-ரை.) தாமே முன்செய்துகொண்டமையாலும் பயனைக்கொடாமல் ஒழியாமையாலும் இரண்டும்இசைந்து அநுபவித்தற்கு உரியவையாம். அவைகளிலே ஒன்றற்கு இசைந்து அநுபவித்து மற்றதற்கு அதுசெய்யாமல் வருந்துதல் அறிவு அன்று - என்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் இன்ப துன்பங்களுக்குக் காரணமாகிய ஊழின் வழிசொல்லப்பட்டது.] (கூ)

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(ப-ரை.) மற்றொன்று-(தன்னை விலக்குதற்பொருட்டுத்) தனக்குப் பகையாகிய ஒருபாயத்தை, சூழினும் - ஆராய்ந்தாலும், தான் முந்துறும் (அவ்வுபா



யத்தையாவது மற்றொன்றையாவது வழியாகக் கொண்டுவந்து அவ் வாராய்ச்சிக்கு) முற்பட்டுநிற்கும் (அதனால்) ஊழின் - ஊழ்போல், பெருவலி - மிகுந்த வலிமையுடையவை, யா-எவை, உள-இருக்கின்றன, எ-று.

(க-ரை.) ஊழை விலக்க நினைக்கின் அதுவே முன்னிற்கும் ஆதலால் அவ்வூழினும் வலியவை இல்லை-என்பதாம்.

(வி-ரை.) பெருவலி அதனையுடைய ஊழுக்கு ஆகுதலால் ஆகுபெயர் சூழ்தல் பலருடனும் பழுதறவெண்ணுதல், ஊழானது அவ்வுபாயத்தைச் செய்தற்கேயல்லாமல் ஆராய்தற்கும் சமயங் கொடாதென்கிற பொருளைக்குறித்து

கிற்கையால் உம்மை எச்சவும்மை எல்லாம் வழியாக வருதலுடைமையால் அஃ தேழுவலியையுடையதென்பதாம். [இதனால் அவ்விருவகை யூழ்களின்வல்லமை யும் பொதுவாகச் சொல்லப்பட்டது.] (கo)

இனி இல்லறத்தின் வழிப்படுவனவாகிய பொருளின்பங்களுள் இம்மை மறுமை இரண்டையும் தருவதாகிய பொருளைச் சொல்லும்படி எடுத்துக் கொண்டார்.

முப்பத்தெட்டாம் அதிகாரம் - ஊழ் முற்றிற்று.

முதலாவது அறத்துப்பால்

முற்றிற்று.

ஆக அதிகாரம்-கூஅ-க்கு திருக்குறள் - கூஅo.

---

இரண்டாவது.

# பொருட்பால்.

பொருளாவது: அறவழியினாலே சேர்க்கப்பட்ட பொன்மணி முதலான வையாம். அது, தனக்குத் துணைக்காரணமாகிய அரசநீதிசொல்லவே அடங் கும். அவ்வரசநீதியாவது, காவலை நடத்து முறைமையாம். அதனை அரசியல் அங்கவியல், ஒழிபியல், என மூன்றியல்களால் அருளிச்செய்தார்.

# அரசியல்.

அரசாவது: உலகத்திற்கு உயிரெனச் சிறந்த அரசனது தன்மையாம். அவ் வரசியலை இருபத்தைந் ததிகாரங்களினாலே சொல்லத்தொடங்கி முதலிலே இறைமாட்சி சொல்லுகிறார்.

---

## முப்பத்தொன்பதாம் அதிகாரம்.

## இறைமாட்சி.

அஃதாவது: அரசனது நற்குண நற்செய்கைகளாம்.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

(ப-ரை.) படை - சேனையும், குடி - நாடும், கூழ் - பொருளும், அமைச்சு - அமைச்சும், நட்பு - நட்பும், அரண் - அரணும் (என்று சொல்லப்படுகிற ஆறங்கங்களையும்) உடையான் - உடையவன், அரசருளேறு - மன்னருள் ஆண்சிங்கம்போல்வானாவான், எ-று.

(க-ரை.) சேனை, நாடு, பொருள், அமைச்சு, நட்பு, அரண் இவ்வாறங்கங்களையு முடையவ னரசரு ளாண்சிங்கம்போன்றவன் என்பதாம்.

(வி-ரை.) குடியையுடைய நாடு - குடியென்றும், கூழுக்கு ஏதுவாகிய பொருள் - கூழென்றும், சொல்லப்பட்டன. அமைச்சு-நட்பு, பொருள், நாடு அரண், படை, என்பதே முறையாயினும் இங்கே செய்யுளுக்கேற்ப பிறழவைத்தார். ஆறுமுடையானென்றதனால் இவைகளிலே ஒன்று குறையினும் அரசவீதி செல்லாதென்பது பெற்றும். [இதனால் அரசனுக்கு அங்கமாவன, இவையென்பதும் இவை முழுதுமுடைமையே அவன் வெற்றிக்கு ஏதுவென்பதும் சொல்லப்பட்டன.] (க)

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

(ப-ரை.) வேந்தற்கு - அரசனுக்கு, இயல்பு - இயல்பாவது, அஞ்சாமை - திண்மையும், ஈகை - கொடையும், அறிவு - விவேகமும், ஊக்கம் - மனவெழுச்சியும், இந்நான்கும - இந்த நான்கு குணங்களும், எஞ்சாமை - ஒருபோதும் நீங்காதிருத்தல், எ-று.

(க-ரை.) அரசனுக் கியல்பாவது; வல்லமை ஈகை, யறிவு, மனவெழுச்சியாகும் - என்பதாம்.

(வி-ரை.) ஊக்கம் தொழில்செய்தலில் மனவெழுச்சி இவற்றுள் அறிவு ஆறங்கங்களுக்கும உரித்து ஈகை-படைக்குரித்து. மற்றவை தொழிலுக் குரியன. உயிர்குணங்களுள் ஒன்றுதோன்ற மற்றவை அடங்கிவரும் அவற்றுள் இவை அடங்கினுல் அரசனுக்குக் கெடுவன பலவாம். ஆதலால் இவை எப்பொழுதும் தோன்றநிற்றல் இயல்பாக வேண்டுமென்பது தோன்றற்கு எஞ்சாமை வேந்தர் கியல்பென்றார். (உ)

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

(ப-ரை.) கிலனுள்பவர்க்கு-கிலத்திலினயாளுக் திருவினையுடையவனுக்கு ஆக்கமையுடைமை-அக்காரியங்களிலே விரைவுடைமையும், கல்வியுடைமை

## ௨௨௨. ௯௯-ஆம் - அதி - சான்றாண்மை.

(ப-ரை.) கடனறிந்து (நமக்கு இது) தகுவதென்று - அறிந்து, சான்று - (பலகுணங்களாலும்) நிறைந்து. ஆண்மை (அவைகளை) ஆளுதற்றன்மையை, மேற்கொள்பவர்க்கு - மேற்கொண்டு நடப்பவர்க்கு, நல்லவையெல்லாம் - நல்ல குணங்களெல்லாம், கடன் - இயல்பாயிருக்கும், என்ப- என்று நூலோர்) சொல்லுவர், எ-று.

(க-ரை.) பெரியவர்களுக்கு நற்குணங்களை மேற்கொள்ளுதல் கடைமையாயிருக்கும் - என்பதாம்.

(வி-ரை.) சில குணங்களில்லாவிடத்தும், உள்ளவை இயல்பாயிராதவிடத்தும், சான்றாண்மை யென்னுஞ் சொற்பொருள் கூடாமையால், இவ்வேதுப் பெயர்பற்றி அவரிலக்கணம் இப்படிச் சொல்லினரென்பதாம்.()

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

(ப-ரை.) சான்றோர் நலன் - சான்றோர் நலமாவது, குணநலம்-குணங்களாலாகிய நலமே, பிறநலம்-அது நீங்கலான உறுப்புகளாலாகிய நலம், எந்நலத்துள்ளதூஉம்-எந்தநலத்திலுமுள்ளதும், அன்று-அல்ல, எ-று.

(க-ரை.) சான்றோர்க்குக் குணநன்மையே பெரிய நன்மையாம், மற்ற நன்மை நன்மையல்ல-என்பதாம்.

(வி-ரை.) அகநலத்தை முன்னே பிரித்தமையால், மற்றைப் புறநலத்தை பிறநலமென்றும், அது குடிப்பிறப்புக் கல்விமுதலாக நூலோரிடத்து நலங்களுள்ளே சொல்லாமையால், எந்நலத்துள்ள தூஉ மன்றென்றும் சொல்லினர். [இவை இரண்டு பாட்டாலும் சால்புக்கு ஏற்ற குணங்கள் பொதுவகையாற் சொல்லப்பட்டன.] (உ)

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

(ப-ரை.) அன்பு (சுற்றத்தார்மேலே யல்லாமற் பிறர்மேலும் உண்டாகிய) அன்பும், நாண் (பழிபாவங்களி) னாணும், ஒப்புரவு (யாவரிடத்தும்)

உபகாரஞ் செய்தலும், கண்ணோட்டம் (பழையவர்மேல்) கண்ணோடலும், வாய்மையோடு (எவ்விடத்தும்) மெய்ம்மை சொல்லுதலோடும், சால்பு-சால்பென்னும் (பாரத்தை) ஊன்றிய - தாங்கிய, தூண்-தூண்கள், ஐந்து-அஞ்சு. எ-று.

(க-ரை.) அன்பு, நாணம், உபகாரம், தாட்சணியம், சத்தியம், இவ்வைந்துஞ் சால்பென்னும் பாரத்தைத் தாங்குந் தூண்கள்-என்பதாம்.

(வி-ரை.) இக்குணங்கள் இல்லாவிடத்தே சால்பு நிலைபெறாமையால், இவைகளைத் தூணென்றார். (௩)

## ௧௯௨ ௩௯ - ஆம் - அதி - இறைமாட்சி.

(அவைகளை அறிதற்குஏற்ற) கல்வியுடைமையும், துணிவுடைமை - ஆண்மையுடைமையும் (ஆகிய) இம்மூன்றும் - இம்மூன்று குணங்களும் நீங்கா (ஒருபோதும்) நீங்காவாம், எ-று.

(க-ரை.) விரைவுடைமை, கல்வியுடைமை, வலியுடைமை, இம்மூன்றும் அரசனைவிட்டு நீங்கா என்பதாம்.

(வி-ரை.) கல்வியது கூறுபாடு பின்னேசொல்லப்படும். ஆண்மையாவது ஒன்றையும்பாராமல் கடிதிலே செய்வதாகலால் அது இங்கே துணிவென்று உபசரிக்கப்பட்டது. இவற்றுள்-கல்வி ஆறங்கத்துக்கும் உரித்து, மற்றவை தொழிலுக்குரியன நீங்காமையென்பதற்கு முன்னே அஞ்சாமைக்கு உரைத்தபடி உரைத்துக்கொள்க. (௩)

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(ப-ரை.) அறன் - (தனக்குச்சொல்லப்பட்ட) அறத்திலிருந்து, இழுக்கா-தவறாது நடந்து, அல்லவை-அறமல்லாதவைகளை, நீக்கி (தனதுநாட்டிலும்) உண்டாகாமற் கடிந்து, மறன் - வீரத்திலிருந்து, இழுக்கா - தவறாத, மானம்-மானத்தை, உடையது-உடையவன், அரசு-அரசனாவான், எ-று.

(க-ரை.) தன்னறத்திலிருந்து பாவங்களை நீக்கி வலிமையினால் தவறாத மானமுடையவன் அரசன் - என்பதாம்.

(வி-ரை.) அவ்வறமானது. வேதமோதல், யாகஞ்செய்தல், ஈதல் என்னும் பொதுத் தொழில்களிலும், படைக்கலம் பயிலல், பல்லுயிரோம்பல், பகைத்திறமழித்தல், என்னுஞ் சிறப்புத் தொழில்களிலும தவறாமல்நிற்கை அல்

ல்லை. கொலை, களவு, முதலானவை குற்றமாகிய மானத்தை நீக்குதற்கு மற விழுக்கா மானமென்றார். அரசு-அரசனது தன்மையாதலால் அது உபசார வழக்கால் அவன்மேலே நின்றது. (௪)

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(ப-ரை) இயற்றலும் (தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேலு மேலும்) உண்டாக்கலும், ஈட்டலும் (அப்படிவந்தவைகளை) ஓரிடத்தே தொகுத்தலும், காத்தலும் (தொகுக்கப்பட்டவைகளைப்) பிறர் கொள்ளாமல் காத்தலும், காத்த-காக்கப்பட்டவைகளை, வகுத்தலும் (அறம்பொருளின்பங்களின் பொருட்டுச்) செலவு செய்தலும், வல்லது - வல்லவன், அரசு-அரசனாவன், எ-று.

(க-ரை.) பொருள் வரவுதேடலிலும், சேர்த்தலிலும், காத்தலிலும், அற வழியில் செலவுசெய்தலிலும், வல்லவன் அரசனாவான்-என்பதாம்.

(வி-ரை.) பொருள்களாவன: மணி, பொன், நெல், முதலானவை அவை வரும் வழிகளாவன: பகைவரை யழித்தலும், இறைகொள்ளலும்,



தன்னுடு காத்தலும், முதலானவை பிறரென்றவர், பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில்செய்வோர், முதலானவர், கடவுளர், அந்தணர், வறியோர், என்கிற இவர்க்கும் புகழுக்கும், கொடுத்தலை-அறத்தின்பொருட்டாகவும், யானை, குதிரை, படை, நாடு, அரண் என்கிற இவற்றுக்கும் பகையோடு கூடும்போது பிரிக்கப்படுவோர்க்கும், தன்னைவிட்டுப் பிரியும்போது கூட்டப்படுவோர்க்கும், கொடுத்தலை-பொருட் பொருட்டாகவும், மண்டபம், வாவி, செய்குன்று, இளமரக்கா, முதலானவைகளைச் செய்தற்கும், ஐம்பொறிகளால் அநுபவிக்கப்படுமவைகளுக்கும் கொடுத்தலை - இன்பம்பொருட்டாகவும், கொள்க. இயற்றுதல் முதலானவைகளைத் தவறாமல் செய்தல் அரிதாகலால் - வல்லதரசென்றார். [இவை நான்கு பாட்டாலும் அரசனது நற்குண நற்செய்கையாகிய மாட்சியே சொல்லப்பட்டது.] (௫)

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம்.

(ப-ரை.) மன்னன்-அரசன், காட்சிக்கெளியன் - (வழக்கறிவிப்பவர்க்கும் குறையிரப்பவர்க்கும்) காணுதற்கு எளியவனாகி கடுஞ்சொல்ல னல்லனேல் (யாவரிடத்தும்) கடியசொல்லினன் அல்லாதவனுமா யிருந்தால், நிலம் (அவனது) நிலத்தை, உலகம் - மீக்கூறும் (எல்லா நிலங்களினும்) உயர்த்திச்சொல்லும், எ-று.

(க-ரை.) காண்கைக்கு எளியவனும் இன்சொற்சொல்பவனும் ஆகிய அரசன் நிலத்தை உலகம் உயர்த்திச்சொல்லும்-என்பதாம்.

(வி-ரை.) காணுதற்கு எளியானாவது பெரிய அரசாட்சி மண்டபத்திலே அந்தணர், சான்றோர், உள்ளிட்டவரோடு சமயமுடையவனாயிருத்தல். கடுஞ்சொல்-கேள்வியிலும் தொழிலிலும் கடுமையாகிய சொல். நிலத்தை உயர்த்திச்சொல்லுமெனவே மன்னனை உயர்த்திச் சொல்லுதல் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. உயர்த்திச் சொல்லுதல் - இவன் காக்கின்றநாடு பசி, பிணி, பகை, முதலானவை இல்லாமல் யாவர்க்கும் மிகுந்த வின்பந் தருவதென்று புகழ்ந்து சொல்லல். (௬)

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.

(ப-ரை.) இன்சொலால்-இனியசொல்லுடனே, ஈத்து-கொடுத்து, அளிக்க-காப்பாற்ற, வல்லார்க்கு-வல்ல அரசனுக்கு, இவ்வுலகு - இந்தவுலகம், தன் சொலால்-தன் புகழோடுபொருந்தி, தான்கண்டனைத்து - தான் நினைத்த அளவினதாகும், எ-று.

(க-ரை.) இனியசொல்லுடன் கொடுத்துக் காக்குமரசனுக்கு தான்நினைத்தவை உண்டாகும்-என்பதாம்.

(வி-ரை.) இன்சொல் - கேள்வியிலும், தொழிலும், இனிமையாகிய சொல். ஈதல் - வேண்டுவோர்க்கு வேண்டுவன கொடுத்தல், அளித்தல், தன்பரி





வாரத்தினாலும், பகைவராலும், நலிவுபடாமற் காத்தல். இவைசெய்தல் அருமையாகலால் வல்லாற்கென்றும், அவன் மண்முழுதும் ஆளுமாகலால் இவ்வுலகென்றும், சொல்லினர். கருதியவை விற்றுதல் - நினைத்தபொருளெல்லாம் சாத்தல். (எ)

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
இறையென்று வைக்கப் படும்

(ப-ரை.) முறைசெய்து (தான்) முறைசெய்து, காப்பாற்றும் (பிறர்வருத்தாமற்) காத்தலுஞ்செய்யும், மன்னவன்-அரசனானவன் பிறவியினாலே மனிதனேயாயினும்) மக்கட்கு-மனிதர்களுக்கு, இறையென்று (செயலினாலே) கடவுளென்று, வைக்கப்படும்-வேறுவைக்கப்படுவன், எ-று.

(க-ரை.) மநுமுறைப்படி குடிகளைக்காக்கும் அரசன் அக் குடிகளுக்குத் தெய்வம்-என்பதாம்.

(வி-ரை.) முறை-அறநூலிலும், நீதிநூலிலும், சொல்லும்வழி பிறர்மேலே சொல்லப்பட்டவர். வேறுவைத்தல் மனிதரிற்பிரித்து உயர்த்திவைத்தல். (அ)

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(ப-ரை.) சொல்-(கண்டித்துப்புத்திசொல்லுந் துணையாயினவரது) சொற்களை, செவிகைப்ப-(தன்)செவிபொறாதாகவும், பொறுக்கும்(அவைகளின்-பயனைக்குறித்துப்) பொறுக்கும், பண்புடை-குணமுடைய, வேந்தன்-அரசனது கவிகைக்கீழ்-குடைநிழலின்கீழே, உலகு-உலகம், தங்கும்-பொருந்தும், எ-று.

(க-ரை.) மந்திரி முதலானோர் கடிந்துசொல்லுஞ் சொற்களைப்பொறுக்குமரசன் உலகமுழுதும் ஆள்வான்-என்பதாம்.

(வி-ரை.) காவின்கைப்பு-செவியிலேற்றப்பட்டது. பண்புடைமை சிறப்பறிவுடையவனாகுகை. அறநூல் நீதிநூல்களிலே தவறுமையாய் பூமிமுழுதும் தானே ஆள்வானென்பதாம். (க)

கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

(ப-ரை.) கொடை (வேண்டுவோர்க்கு வேண்டுமவைகளைக்) கொடுத்தலும், அளி (யாவரிடத்தும்) முகமலர்ந்து இன்சொற் சொல்லுதலும், செங்கோல்-முறைசெய்தலும், குடியோம்பல் (தளர்ந்த) குடிகளைப்பேணலும், ஆகிய, நான்கும்-இந்நான்கு செயல்களையும், உடையான்-உடையவன், வேந்தர்க்கு-அரசர்க்கெல்லாம், ஒளியாம்-விளக்காம், எ-று.

(க-ரை.) ஈகை, இருபை, செங்கோல், குடிகளைக்காத்தல், இவையுடையோன் அரசர்களுக்கு விளக்கு-என்பதாம்.

(வி-ரை.) செவ்விய கோல்போலுதலால் முறையைச் செங்கோலென்றார் குடியோம்பல் வறுமையுற்றவிடத்தே ஆறிலொன்றாகிய பொருளையும் வாங்காமை முதலானவை செய்தல் தன் சாதிமுழுதும் விளக்கலால் விளக்கென்றார். [இவை இச்செய்யுளால் மாட்சியும் பயனும் உடன் சொல்லப்பட்டன.] ()

முப்பத்தொன்பதாம் அதிகாரம் இறைமாட்சி.

முற்றிற்று.

---

## நாற்பதாம் - அதிகாரம்.

# கல்வி.

அஃதாவது: அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல், அவையாவன. அறநூலும், நீதிநூலும், தேர், யானை, குதிரை, படைக்கலம் எனப்பட்ட இவற்றினூல்களும், முதலானவையாம். அரசன் அறிவுடையவனாயிருந்தால் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் குறித்து இது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும் யாவர்க்கும் உறுதியைத்தருவதாகிய சிறப்புடைமையினாலே பொதுப்படச் சொல்லுகின்றார். முன்னதிகாரத்திலே தூங்காமையென்னும்பாட்டிலே தோற்றுவாய் செயப்பட்ட மாட்சியை விரித்துச் சொல்லுதலால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக

(ப-ரை.) (ஒருவன்) கற்பவை - கற்கப்படு நூல்களை, கசடற - பழுதறக் கற்க - கற்கக்கடவன், கற்றபின் (அப்படி) கற்றபின்னே, அதற்கு - அக்கல்விக்கு, தக - தகுதியாக, நிற்க (அவைகளாலே சொல்லப்பட்ட வழியிலே) நிற்கக்கடவன், எ-று.

(க-ரை.) (ஒருவன்) கற்கப்படுநூல்களைக் குற்றமறக்கற்று அக்கல்வியறிவிற்குத்தக்கபடி நிற்கக்கடவன் - எனபதாம்.

(வி-ரை.) கற்பவையென்றதனால் அறம், பொருள், இன்பம், வீடு, என்கிற உறுதிப்பொருள்களை உணர்த்துகிற நூல்களென்பது பெற்றாம். கசடறக்கற்றலாவது விபரீத சந்தேகங்களை நீக்கி, மெய்ப்பொருளை வல்லோர் பலருடனேயும் பலகாலும் பழகுதல், நிற்றலாவது, இல்வாழ்க்கையிலே கருமங்களைச் செ

ய்து யோக்கியருக்குக்கொடுத்துத் தானநுபவித்தலிலும் துறவிலே நவத்தால் மெய்யுணர்ந்து அவாவறுத்தலிலும், நவனுமை. [இதனால் சிறப்புடையவனுக்குக் கற்கவேண்டுமென்பதும் கற்கத்தகு நூல்களும் அவைகளைக் கற்கும் விதமும் கற்றதனும் பயனும் சொல்லப்பட்டன.] (க)

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு



## ௪0 - ஆம் - அதி - கல்வி.

(ப-ரை.) (அறியாதவராலே) எண்ணென்ப - எண்ணென்று சொல்லப்படுமவையும், ஏனை யெழுத்தென்ப - மற்றை யெழுத்தென்று சொல்லப்படுமவையும் ஆகிய, இவ்விரண்டும் - இக்கலைகளிரண்டையும் (அறிந்தோர்) வாழு முயிர்க்கு - வாழ்தற்குரிய மனிதர்க்கு, கண் - கண்களாகும், என்ப - என்று சொல்லுவார், எ-று.

(க-ரை.) கணித நூல்களு, மிலக்கண நூல்களு, மனிதர்களுக்குக் கண்களாகும் - என்பதாம்.

(வி-ரை.) எண் - கணிதம், எழுத்து - இலக்கணம், இவ்விருவித நூல்களும், அறமுதலாகிய பொருள்களைக் காணுதற்குக் கருவியாதலால், கண்ணெனப்பட்டன [இதனால் கற்கப்படு நூல்களுக்குக் கருவியாவனவும் அவைகள் அவசியம் வேண்டியவையென்பதும், சொல்லப்பட்டன.] (உ)

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(ப-ரை.) கற்றோர் - கற்றவரே, கண்ணுடையர் - கண்களுடையவர், என்பவர் என்று உயர்த்திச் சொல்லப்படுபவர், கல்லாதவர் - கற்றிலாதவர், முகத்து - முகத்தினிடத்து, இரண்டு புண்ணுடையர் - இரண்டு புண்களை யுடையவர் (கண்ணிலார்) எ-று.

(க-ரை.) கற்றோர் முகத்திலுள்ளது கண், மற்றோர் முகத்திலுள்ளது புண்-என்பதாம்.

(வி-ரை.) தூரமான காலதேசங்களில் உள்ளவைகளையும் காணும் ஞானக் கண்ணுடைமையால் கற்றோரை கண்ணுடையரென்றும், அஃது இல்லாமல் நோய்முதலானவைகளாலே, துன்பஞ்செய்யும் ஊனக்கண்ணேயுடைமையால் கல்லாதவரை புண்ணுடையரென்றும் சொல்லினர் [முன்பாட்டிலே கண்ணல்லாமை குறிப்பிக்கப்பட்ட ஊனக்கண்ணினது மெய்ம்மையாகிய சொரூபத்

தைச் சொல்லியவிதத்தினாலே பொருணூல்களையுங் கருவிநூல்களையுங் கற்றோரது உயர்வும், கல்லாரது இழிவும், இதனாலே சொல்லப்பட்டன.] (௩)

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(ப-ரை.) புலவர் - கற்றறிந்தவரது, தொழில், உவப்ப (யாவரும்) மகிழும் படி, தலைக்கூடி (அவரைச்) சேர்ந்து, உள்ள (இனி யிவரை நாம் எப்போது காண்போமென்று) நினைக்கும்படி, பிரிதல்-நீங்குதலாகிய, அனைத்து-அத்தன்மையை யுடையதாம், எ-று.

(க-ரை.) கற்றோரோடே பழகியமற்றோர் அவர்பிரியவருந்துவர்என்பதாம்.

(வி-ரை.) தாம் நல்வழி நடத்தலும், பிறருக்கு உறுதி சொல்லுதலும், தொழிலென ஒன்றாய் அடக்குதலால் அத்தன்மைத்தென்றார். அத்தன்மை அப்பயனைத்தரும் தன்மை. எனுதலாலே நல்லொழுக்கமும், மதுரமான



வுறுதிச்சொற்களைக் கேட்கையால் இன்பமும், உண்டாதலால் கற்றவரிடத்தே எல்லாரும் அன்புடையவராவரென்பதாம். [இதனால் கற்றோரது உயர்வு வகுத்துச் சொல்லப்பட்டது] (௪)

உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(ப-ரை.) உடையார்முன் – செல்வர்முன்னே, இல்லார்போல் - வறியவர் போல், ஏக்கற்றும் (தம்மாசிரியர்முன்) ஏக்கற்று நின்றும், கற்றார் - கற்றவர் (உயர்ந்தவராவார்) கல்லாதவர் - (அந்நிலைக்குநாணிக்) கல்லாதவர், கடையரே- (எப்போதும்) இழிந்தவரேயாவர், எ-று.

(க-ரை.) கற்றோருயர்ந்தோரு மற்றோரிழிந்தோருமாவர் - என்பதாம்.

(வி-ரை.) ஏக்கறுதல்- ஆசையினாலே தாழ்தல். கடையரென்றதனால் அதற்கு எதிராகிய உயர்ந்தோரென்பது வருவிக்கப்பட்டது. பொய்யாகிய மானத்தைநோக்கி மெய்யாகிய கல்வியை யிழந்தவர் பின்னொருநாளும் அறிவுடையவராகாமையால், கடையரே யென்றார். [இதனாலே கல்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.] (௫)

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்

கற்றனைத் தூறு மறிவு.

(ப-ரை.) மணல்-மணலினிடத்தே, கேணி-கேணியானது, தொட்டனைத்து தோண்டிய அளவினதாக, ஊறும்-சுரக்கும், (அதுபோல்) அறிவு-(மனிதருக்கு) அறிவானது, கற்றனைத்து-கற்ற அளவினதாக, ஊறும்-சுரக்கும், எ-று.

(க-ரை.) மணற்கேணி தோண்டியவளவு சுரப்பதுபோல மனிதருக்கறிவு கற்றவளவாகும்-என்பதாம்.

(வி-ரை.) இங்கே கேணியென்றது-அகன்ற சிறிது கற்றளவிலேயே போதுமென்று விடாமல் மேன்மேலும் கற்றல்வேண்டுமென்பதாம். இக்கல்வியறிவுமிகுதல் ஊழ்மாறு கொள்ளாவிடத்தே யாகலால் முன்னே உண்மையறிவே மிகுமென்றதனோடு இப்பாடல் விரோதப்படாமை அறிக. (௬)

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(ப-ரை.) (கற்றவனுக்குத் தன்னுடைய ஊருமேயல்லாமல்) யாதானும் - யாதாயினுமொருநாடும், நாடாம்-தன்னுடைய நாடாம், (யாதாயினும்) யாதாயினுமொரு ஊரும், ஊராம்-தன்னூராம், (அப்படியிருக்க) ஒருவன்-சாந்துணையும் இறக்குமளவும், கல்லாதவாறு-கல்லாமற் கழிகின்றது, என-என்ன வினைத்து, எ-று.

(க-ரை.) கற்றவர்க்கு எந்நாடும் எவ்வூரும தன்னதாயிருக்க ஒருவன் கற்காமலிருப்பதென்ன-என்பதாம்.



(வி-ரை) ஆல் - அசை. பின்னும் உயிரோடு செல்லுதலால், சாந்துணையுமென்றார், பிறநாடுகளும் ஊர்களும் தம்முடையவைபோலிருந்து மகிழ்ந்து பொருள்கொடுத்துப் பூசை செய்தற்கு ஏதுவாகலால், கல்விபோற் சிறந்தது வேறொன்று இல்லையாகலின் அதனையே எப்போதும் கற்கவேண்டும் என்பதாம். (௭)

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

(ப-ரை.) ஒருவர்க்கு-ஒருவனுக்கு, தான்-ஒருமைக்கண் ஒரு பிறப்பினிடத்து, கற்ற கல்வி – கற்ற வித்தையானது, எழுமையும் - எழுபிறப்புகளினும், ஏமாப்பு-போய் உதவுதலை, உடைத்து-உடையதாகும், எ-று.

(க-ரை.) ஒரு பிறவியில் கற்றகல்வி எழுபிறப்பிலும் உதவும்-என்பதாம்.

(வி-ரை.) வினைகள்போல் உயிரிடத்தே தங்கி அது சென்றவிடத்தே செல்லுமாகலால் எழுமையு மேமாப்புடைத்தென்றார். உதவுதல் நல்வழியிலே சேர்த்தல். (அ)

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(ப-ரை.) தாம் - தாங்கள், இன்புறுவது-இன்பமடைதற்கு ஏதுவாகிய கல்விக்கு, உலகு - உலகமானது, இ ் புற - இன்பமடைய, கண்டு-(அச்சிறப்பு) நோக்கி, கற்றறிந்தார்-கற்றறிந்தவர்கள், காமுறுவர்—பின்னும் அதனையே விரும்புவார், எ-று.

(க-ரை.) கற்றவர் கல்விக்கு உலகத்தா ரின்புறுதல் கண்டு மேன்மேலுங் கற்பார் - என்பதாம்.

(வி-ரை.) தாமின்புறுதலாவது; கற்கிறபோது சொற் பொருள்களின் சுவையை அனுபவித்தலாலும், புகழும், பொருளும், பூசையும், பெறுதலாலும்; பின்னே அறத்தையும், வீட்டையும், அடைதலாலும், அதனால் இடையறாத இன்பத்தை அனுபவித்தல் உல கின்புறுவதாகிய இப் பெரியவரைச் சேர்ந்து அறியாதவைகளையெல்லாம் அறிந்தோமென்று மகிழ்தல், சம்பாதித்தல், காப்பாற்றல், இழத்தல், இவைகளாலே துன்பஞ்செய்து பலரையும் பகையாக்கல் பற்றி செல்வத்தை விரும்பாமையால் கற்றறிந்தாரென்று கரும்பு தின்னுதற்குக் கூலிபோல் தாமின்புறுதற்கு உலக மின்புறுவது மற்றொருவழியால் இல்லாமையால் அதனையே காமுறுவரென்றும் சொல்லினர். (க)

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

(ப-ரை.) ஒருவற்கு - ஒருவனுக்கு, கேடில்-அழிவில்லாத, விழு-சிறந்த, செல்வம்-செல்வமானது, கல்வி-வித்தையாகும், மற்றவை-அதுநீங்கலாகிய மணியும், பொன்னும்-முதலானசெல்வம், மாடல்ல-செல்வமல்ல, எ-று.

## சக - ஆம் - அதி - கல்லாமை. கூகூக

(க-ரை.) ஒருவனுக்குக் கல்வி அழிவில்லாதசெல்வம்-என்பதாம்.

(வி-ரை.) அழிவில்லாமையாவது; பங்காளிகள் கள்வர், வலியவர், அரசர், இவர்களாலே கொள்ளப்படாமையும், வழிப்பட்டவர்க்குக் கொடுத்தவிடத்தே குறையாமையும் ஆம், சீர்மை-யோக்கியரிடத்தே நிற்கை மணி, பொன், முதலானவைகளுக்கு இவ்விரண்டும் இல்லாமையால் அவற்றை மாடல்லவென்றார் [இவை ஐந்துபாட்டாலும் கல்வியது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௧0)

காற்பதாம் - அதிகாரம்.

முற்றிற்று.

---

## நாற்பத்தோரும் - அதிகாரம்.

# கல்லாமை.

அஃதாவது: கற்றலைச் செய்யாமையி னிழிவாம் கல்வியது சிறப்பை முன்னே சொல்லியவனவால் முடிவுபெருமை நோக்கி எதிர்மறையினாலேயும் சொல்லுதலால் இது அதன் பின்வைக்கப்பட்டது.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(ப-ரை.) நிரம்பிய - (தான்) நிரம்புதற்கு எதுவாகிய, நூல் - நூல்களை, இன்றி-இல்லாமல் (ஒருவன்) கோட்டிகொளல்-சபையினிடத்தே (தான் ஒன்றைச்சொல்லுதல்) அரங்கு-வகுப்பிடத்தை, இன்றி - இல்லாமல், வட்டாடியற்று-உண்டை உருட்டியதுபோலும், எ-று.

(க-ரை) கல்வி கல்லாதவன் சபையிலொன்றைச் சொல்லல் வகுப்பறையில்லாமல் சூதாடியதுபோலும்-என்பதாம்.

(வி-ரை.) நிரம்புதல்-அறியவேண்டு மவைகளையெல்லாம் அறிதல் - அப்படிசெய்தலால், சொல்லும், பொருளும், வழிப்படாமற் போமென்பதாம். (௧)

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

(ப-ரை.) கல்லாதான் - கல்வியில்லாதவனொருவன், சொல் - (சபையினிடத்தே ஒன்றுசொல்லுதலை, காமுறுதல்-வேண்டுதல், முலையிரண்டும் - இரண்டு முலைகளும், இல்லாதாள்-இல்லாதவளொருத்தி, பெண்-பெண்மையை, காமுற்றற்று-வேண்டுவதுபோலும், எ-று.

(க-ரை.) கல்லாதவன் சபையிற்பேச விரும்பின் இருகுஜங்களு மில்லாள் பெண்டன்மையை யிச்சித்தல்போலும்-என்பதாம்.

(வி-ரை.) மூலையிரண்டு மில்லாதான்-மூலை சிறிதுமில்லாதவனென்பதாம் அவாவியவிடத்து முடிவுபெறு துமுடிவுபெற்றாலும்கைவிளக்குமென்பதாம்.

## ௨00 ௪௧ - ஆம் - அதி - கல்லாமை.

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(ப-ரை.) கல்லாதவரும் - கற்றிலாதவரும், நனிநல்லர் - மிகவும் நல்லவராவார் (தாமே தம்மையறிந்து) கற்றார்முன் - கற்றோர் சபையிடத்து, சொல்லா திருக்கப்பெறின் (யாதொன்றையும்) சொல்லாதிருக்கப்பெறுவாராயின், எ-று.

(க-ரை.) கற்றார்முன் யாதொன்றையுஞ் சொல்லாதிருப்பின் கல்லாதவர் மிகநல்லர்-என்பதாம்.

(வி-ரை.) தம்மைத் தாமறியாமையின் அது கூடாதென்றற்கு பெறினென்றும், பெற்றால் அங்கே தம்மை வெளிப்படுத்தாமையாலும், பின்கல்வியை விரும்புவாராகலாலும் நனி நல்லரென்றும், சொல்லினர். [இவை மூன்று பாட்டாலும் கல்லாதவர் சபையிலே பேசுதற்கு உரியரல்லரென்பது சொல்லப் பட்டது.] (௧)

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(ப-ரை.) கல்லாதான் - கல்லாதவனது, ஒட்பம் - அறிவுடைமையானது, கழியநன்றாயினும் (ஒரோவிடத்தே) மிகநன்றாயிருப்பினும், அறிவுடையார்-விவேகமுடையவர்கள், கொள்ளார் (அதனை அறிவுடைமையாகக்) கொள்ளார்.

(க-ரை.) கல்லாதானறிவு ஒருவேளை நன்றாயிருப்பினும் கற்றோர் கொள்ளார்-என்பதாம்.

(வி-ரை.) கல்லாதவனது அறிவுடமை நன்றாகாது நன்றாயிற்றாயினும் நீர்மேலெழுத்துப்போல் நிலைபெறாதாகலால் நிலைபெற்ற நூலறிவினையுடையவர் அவ்வறிவுடைமையை மதியாரென்பதாம். (௪)

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

(ப-ரை.) கல்லாவொருவன் - (நூல்களைக்) கல்லாதவொருவன், தகைமை (அறிவுடையேனென்றுதன்னைமதிக்கும்)மதிப்பானது, தலைப்பெய்து(அவை களைக்கற்றவன்) கண்டு, சொல்லாட-பேச, சோர்வுபடும்-கெடும், எ-று.

(க-ரை.) கல்லாதவன்மதிப்பு கற்றவன் முன்பேசக்கெடும்-என்பதாம்.

(வி-ரை.) கற்றவனென்பது வருவிக்கப்பட்டது, யாதாயினும் ஒருவார்த்தைசொல்லுமட்டுமே நிற்பது சொல்லியவிடத்து எதிருத்தரம் தரும்போதே அழிப்படுதலால் தன்னை மதித்தமதிப்பு அழிந்து விடுமென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் கல்லாதவரது இயற்கை யறிவின்குற்றம் சொல்லப்பட்டது.]

## கூகூ-ஆம் அதி - சான்றாண்மை. [illegible]

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(ப-ரை.) நோன்மை-தவமாவது, கொல்லா நலத்தது (பிறவறங்களும் வேண்டுமாயினும்) ஒருயிரையுங் கொல்லாத அறத்தினிடத்தாம் (அதுபோல) சால்பு-சால்பாவது, பிறர்தீமை சொல்லாநலத்தது (பிறர்குணங்களும் வேண்டுமாயினும்)பிறர்தீமையைச் சொல்லாதகுணத்தினிடத்ததாம்-எ-று.

(க-ரை.) நோன்பாவது யாதொன்றையுங் கொல்லாமையாம்,சால்பாவது, பிறர்குற்றத்தைச் சொல்லாமையாம் - என்பதாம்.

(வி-ரை.) தவத்திற்குக் கொல்லா வறம்போல் சால்பிற்குப் பிறர்குற்றம் சொல்லாக்குணம் சிறந்த தென்பதாம். (ச)

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(ப-ரை.) ஆற்றுவார் (ஒரு கருமத்தைச) செய்து முடிப்பவரது, ஆற்றல் - வலிமையாவது, பணிதல் (அதற்குத் துணையாவாரைத்) தாழ்ந்து தேடிக்கொள்ளுதல், சான்றோர்-இனிச் சால்புடையவர், மாற்றாரை-பகைவரை, மாற்றும்படை-பகைமை யொழிக்குஞ் சாதனமும், அது-அப்பணிதல், எ-று.

(க-ரை.) காரியமுடிப்பவர் வல்லமையாவது பணிதல் அது சத்துருக்களை வெல்லும் படையாம்-என்பதாம்.

(வி-ரை.) ஆற்றல்-செயவல்லராந்தன்மை. சால்பிற்கு ஏற்ற பணிதற்குணத்துச் சிறப்புச் சொல்லுவார். மற்றதுமுடன் சொல்லினர். (ரு)

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(ப-ரை.) சால்பிற்கு-சால்பாகிய (பொன்னினை) வறிதற்கு,கட்டளை உரைகல்லாகிய (செயல்) யாதெனில்-யாதென்றால், தோல்வி (தம்மினுய ர்ந்தவரிடத்துக் கொள்ளுந்) தோற்பை, துலையல்லார் கண்ணும்-இழிந்தவ ரிடத்தும் கொளல்-கொள்ளுதல், எ-று.

(க-ரை.) சால்பிற்குரைகல் எதுவெனில் இழிந்தவரிடத்துந் தோல்வி கொள்ளுதல்-என்பதாம்.

(வி-ரை.) எச்சவும்மையால் இருநிறத்தாரிடத்தும் வேண்டுதல்பெற் றும். கொள்ளுதல் வெல்லும் வலிமையுடையராயிருந்தே எற்றுக்கொள்ளு தல், இழிந்தாரை வெல்ல நினைத்துத் தமக்குச் சமானமாக்கிக் கொள்ளா மல் தோற்பான் அவரின் உயர்வாராயின் அதனாலே சால்பளவு அறியப்படு மென்பதாம்.

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

## ௬௧ - ஆம் - அதி - கல்லாமை. ௨0௬

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

(ப-ரை.) கல்லாதவர் - கல்லாதவர்கள், (காணப்பட்டுக்கொண் டிருக்கை யால்) உளரென்னு மாத்திரையரல்லால் உளரென்ற (பிறராலே சொல்லப் படும் அளவினராதலன்றி (தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால்) பயவாக் களரனையர்-விளையாத களர்நிலத்தோடொப்பாவர், எ-று.

(க-ரை.) கல்லாதவர் விளைவில்லாக்களர்நிலத்தையொப்பாவர்-என்பதாம்.

(வி-ரை.) எப்படி களர்நிலம் தானும்விரும்பப்படுதலே இழந்து உயிர்களுக் கும்உணவுமுதலானவைகளை உதவுவதில்லையோ அப்படியேகல்லாதவர்தாமும் நன்கு மதிக்கப்படுதலை இழந்து பிறர்க்கும் அறிவு முதலானவைகளை உதவா

ரென்பதாம். [இதனாலே கல்லாதவரது பயன்படாமை சொல்லப்பட்டது.] (௬)

நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.

(ப-ரை.) நுண்-நுட்பமாகி, மாண்-மாட்சிமைப்பட்டு, நுழை-(பலநூல்களினும்) சென்ற, புலம்-அறிவை, இல்லான்-இல்லாதவனது, எழில்-எழுச்சியும், நலம்-அழகும், மண்-சுண்ணச்சாந்திறலே, மாண்-மாட்சிமைப்பட, புனை-அலங்கரிக்கப்பட்ட, பாவையற்று-பாவையினது எழுச்சியும் அழகும்போலும், எ-று.

(க-ரை.) நூலறிவில்லான் எழுச்சியும் அழகும் மண்பாவையை ஒக்கும்-என்பதாம்.

(வி-ரை.) அறிவுக்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிலே காணலும், மறவாமையும், முதலாயின. பாவை அதன் எழுச்சியழகுகளைக் காட்டலால் ஆகுபெயர். உருவின் மிகுக்கமே தோற்றமும் கிடைத்தலும் அரிதாகலால் எழினலங்களும் ஒரு பயனேயாயினும் நூலறிவில்லாவிடத்தே சிறப்பில்லனவாம்-என்பதாம். [இதனால் அவர் வடிவழகினாலே பயனில்லாமை சொல்லப்பட்டது.] (எ)

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

(ப-ரை.) கல்லார்கண்-கல்லாதவரிடத்து, பட்ட-உண்டாகிய, திரு-செல்வமானது, நல்லார்கண்-கற்றவரிடத்து, பட்ட-உண்டாகிய, வறுமையின்-வறுமையினும், இன்னாதே-துன்பஞ்செய்வதேயாகும், எ-று.

(க-ரை.) கல்லாதவரிடத்துண்டாகிய செல்வம் கற்றவரிடத்துண்டாகிய வறுமையினுந் துன்பஞ்செய்யும்-என்பதாம்.

(வி-ரை.) செல்வம் தனக்குரிய கற்றவரையும், வறுமை தனக்குரிய கல்லாதவரையும், விட்டு மாறிநிற்கையால் அவ்விரண்டும் தாம் இடுக்கட்பட்டு உல





கிற்கும் துன்பஞ்செய்தலால் ஒக்குமாயினும்செல்வம் கல்லாதவரைக்கெடுக்கும் வறுமை - கற்றோரைக்கெடுக்காது ஆதலால் அவ்வறுமையினும் இச்செல்வம் இன்னாதென்றார். [இதனால் அவர்செல்வத்தின் குற்றம் சொல்லப்பட்டது]

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

(ப-ரை.) கல்லாதார்-கல்லாதவர்கள், மேற்பிறந்தாராயினும்-உயர்ந்த சாதி

பிலே பிறந்தாராயினும், கீழ்ப்பிறந்தும் - தாழ்ந்தசாதியிலேபிறந்திருந்தும், கற்றாரனைத்து-கற்றவரது பெருமையளவினதாகிய, பாடு - பெருமையை, இலர்- இல்லாதவர்களாவார்கள், எ-று.

(க-ரை.) மேற்குலத்திற் பிறந்தும் கல்லாராயின் கீழ்க்குலத்திற்பிறந்த கற்றாரோடொப்பாகார்-என்பதாம்.

(வி-ரை) உடம்போடு அழியும் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லும் கல்வியுயர்ச்சி சிறப்புடையதென்பதாம். [இதனால் கல்லாதவரது சாதியுயர்ச்சியால் பயனில்லாமை சொல்லப்பட்டது.] (க)

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

(ப-ரை) இலங்குநூல்-விளங்கியநூலை, கற்றாரொடு-கற்றவருடன், ஏனையவர்-கல்லாதவர், விலங்கொடு-மிருகங்களோடு, மக்களனையர்-மனிதர் எவ்வளவு நன்மையுடையவரோ அவ்வளவு தீமையுடையவராவர், எ-று.

(க-ரை.) கற்றவர் மக்களையுங் கல்லாதவர் மிருகங்களையு மொப்பாவார் என்பதாம்.

(வி-ரை.) விளங்கல்-மேம்படுதல். விலங்கைக் காட்டிலும் மனிதர்க்கு மேலான அறிவுமிகுதி, கற்றவரிடத்தே காணப்படுதலால் கல்லாதவரும் அவரும் சமானமான பிறப்பினரல்லரென்பதாம். [இதனால் கல்லாதவர் மனிதப்பிறப்பினாலே பயனடையாமை சொல்லப்பட்டது.] (க0)

நாற்பத்தோராம் அதிகாரம் - கல்லாமை.

முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டாம் - அதிகாரம்.

# கேள்வி.

அஃதாவது: கேட்கத்தகுநூலின் பொருள்களைக் கற்றறிந்தவர்சொல்லக் கேட்குதல். கற்றவிடத்தே அதனுலாகிய அறிவை உறுதிப்படுத்தலாலும் கல்லாதவிடத்தும் அதனை உண்டாக்கலாலும் இது கல்வி கல்லாமைகளின் பின் வைக்கப்பட்டது.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை

(ப-ரை.) (ஒருவனுக்கு) செல்வத்துட்செல்வம் - சிறப்புடைய செல்வமாவது, செவிச்செல்வம்-செவியால்வருஞ் செல்வமாம், அச்செல்வம்-அந்தச்செல்வம், செல்வத்துளெல்லாம் - பிறசெல்வங்களெல்லாவற்றிலும், தலை - தலைமையாம் (ஆதலால்), எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு எல்லாச் செல்வங்களிலும் கேள்விச்செல்வம் தலைமையானது-என்பதாம்.

(வி-ரை.) செவியால்வருஞ் செல்வம்-கேள்வியால் எல்லாப் பொருளையும் அறிதல். பிறசெல்வங்கள் - பொருளால் வருவன அவை நிலைபெறாமையாலும், துன்பந்தருதலாலும் இது தலையாயிற்று. அவற்றைவிட்டு இவற்றையே தேடுகவென்பது கருத்து. (க)

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(ப-ரை.) செவிக்கு-காதுக்கு, உணவு-உணவாகிய கேள்வியானது, இல்லாதபோழ்து-இல்லாதகாலத்தே, வயிற்றுக்கும் - வயிற்றினுக்கு, சிறிது - சிறிதளவு, ஈயப்படும்-கொடுக்கப்படும், எ-று.

(க-ரை.) காதுக்கு கேள்வி யுணவில்லாதகாலத்து வயிற்றுக்குணவுகொடுக்கவேண்டும்-என்பதாம்.

(வி-ரை.) கேட்கிறபோது மிகுந்தசுவையையும் பின்னேபயனையும் தருவதாகிய கேள்வி உள்ளபோது வயிற்றுணவு வெறுக்கப்படுதலால் இல்லாதபோதென்றும் அதிகமானவிடத்தே சம்பாதிக்குந்துன்பமாத்திரம் அல்லாமல் நோயும் காமமும் பெருகுதலால் சிறிதென்றும் அச்சிறிது கொடுத்தலும் பின்னே பிழைத்திருந்து கேட்குதற்பொருட்டாகலால் ஈயப்படுமென்றும் சொல்லினர். [இவை இரண்டுபாட்டாலும் கேள்வியது சிறப்புச் சொல்லப்பட்டது.] (உ)

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து

(ப-ரை.) செவியுணவின்-செவியுணவாகிய, கேள்வி - கேள்வியை, உடையார் - உடையவர், நிலத்து - பூமியிலிருக்கினும், அவியுணவின் - அவியாகிய

வுணவினையுடைய, ஆன்றோரொடு-தேவரோடு, ஒப்பர்-ஒப்பாவார், எ-று.

(க-ரை.) கல்வி கேள்வியையுடையவர் பூமியிலிருப்பினுந் தேவரையொப்பாவார்-என்பதாம்.

(வி-ரை.) செவியுணவினென்பதன் இன்சாரியை னகரம்வலித்தல் விகாரம்பெற்றது. அவியுணவு தேவர்க்கு யாகத்திலே கொடுக்கப்படுவது. அறிவால்



நிறைந்தமையால் ஆன்றோரென்றும் துன்பமறியாமையால் தேவரோடொப்பரென்றும் சொல்லினர். [இதனாலே கேள்வியை யுடையவரது சிறப்புச்சொல்லப்பட்டது.] (ரு)

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. ௯

(ப-ரை.) கற்றிலனாயினும் - (உறுதிநூல்களைத்தான்) கற்றிலனாயினும், கேட்க, (அவைகளின் பொருள்களைக் கற்றார்சொல்லக்) கேட்கக்கடவன், அஃது அக்கேள்வியானது, ஒருவற்கு-ஒருவனுக்கு, ஒற்கத்தின்-தளர்ச்சிவந்தவிடத்து ஊற்றாந்துணை-பற்றுக்கோடாந்துணையாம் (ஆதலால்) எ-று.

(க-ரை.) கல்லாதவனாலும் கேள்வியுடையவனாயின் அக்கேள்வி அவனுக்குத் தளர்ச்சிவந்தவிடத்தது துணையாகும்-என்பதாம்.

(வி-ரை.) உம்மை கற்கவேண்டுமென்பது தோன்றநின்றது. தளர்ச்சி வறுமையாலாவது அறிவில்லாமையாலாவது இடுக்கணுற்று மனந்தளர்தல். அத்தளர்ச்சியை கேள்வியாலாகிய அறிவு நீக்குமாதலால் ஊற்றாந் துணையென்றார். (௬)

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்

(ப-ரை.) (ஒருவருக்கு ஆபத்திலே) ஒழுக்கமுடையார்-நல்ல நடை யுடையவரது, வாய்ச்சொல்-வாயிற் பிறக்கின்றசொல், இழுக்கலுடையுழி - வழுக்குதலையுடைய சேற்றுநிலத்திலே, ஊற்றுக்கோலற்றே - ஊன்றுகோல்போலுதவும், எ-று.

(க-ரை.) சேற்றுநிலத்திற்கு ஊன்றுகோல்போல் நல்லவர்கள் சொல்லுஞ் சொல் கேள்வியுடையானுக்கு உதவும்-என்பதாம்.

(வி-ரை.) ஊன்றுகோல்போலுதவுதல்-தளர்ந்தவிடத்து அதனை நீக்குதல் ஒழுக்கமில்லாதவர் கல்வியுடையவராயினும் அறிவில்லாராதலால் அவர் வாய்ச் சொல் கேட்கலாகாதெனபது தோன்ற ஒழுக்கமுடையார் வாய்ச்சொல்லென் றார். தீச்சொலறியாமையாகிய சிறப்புத்தோன்றற்கு வாயென்பது அதிகமாகச் சொல்லப்பட்டது. அச்சொல்லைக் கேட்கக்கடவனென்பது கருத்து (௬)

எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்

(ப-ரை.) (ஒருவன்) நல்லவை, உறதிப்பொருள்களிலே எனைத்தானும் - எவ்வளவு சிறிதாயினும், கேட்க-கேட்கக்கடவன், (அக்கேள்வியானது) அனைத்தானும் - அவ்வளவினாலும், ஆன்றபெருமை - நிறைந்த பெருமையை, தரும் கொடுக்கும், எ-று.



(க-ரை.) ஒருவ னல்லவைகளைக் கேட்கின் அவை மிகுந்தபெருமையைத் தரும்-என்பதாம்.

(வி-ரை.) அச்சிறிய கேள்விகளும் மழைத்துளிகள்போல் வந்து உள்ளே நிறைந்து எல்லா வறிவுகளையும் உண்டாககலால் சிறிதென்று இகழலாகா தென்பதாம். (௭)

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

(ப-ரை.) இழைத்துணர்ந்து (பொருள்களை) நுட்பமாக ஆராய்ந்து அறிந்து, ஈண்டிய (அதன்மேலும்) நிறைந்த, கேள்வியவர்-கேள்வியையுடையவர், பிழைத்துணர்ந்தும்-பிறழ அறிந்தவிடத்தும், பேதைமை - (தமக்குப்) பேதமையை உண்டாக்குஞ் சொற்களை, சொல்லார், எ-று.

(க-ரை.) கற்றவர்கள் அறிவீனமான சொற்களைச் சொல்லார்-என்பதாம்.

(வி-ரை.) பிழைப்பவென்பது - பிழைத்து எனத்திரிந்தது. பேதமை - அதை உண்டாக்குஞ்சொல்லுக்கு ஆகுதலால் ஆகுபெயர் ஈண்டுதல்-பலவழிக ளாலும் வந்துநிறைதல், பொருள்களின் மெய்ம்மையைத் தாமும் அறிந்து அறிந் தவரிடத்தேயும் அவர் சொல்லக்கேட்டு ஒப்புப்பார்த்து இருப்பவர் தமோ குணத்தால் மயங்கினராயினும் அவ்வாறல்லது சொல்லாரென்பதாம். [இவை

சான்குபாட்டாலும் கேள்வியினாலே பெறப்பட்டவர்க்குவரும் நன்மைசொல்லப் பட்டது] (எ)

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி

(ப-ரை.) கேள்வியால் - கேள்வியினாலே, தோட்கப்படாத - துளைக்கப் படாத, செவி - காதுகள், கேட்பினும் - தமக்குரிய (ஓசையைக் கேட்கு மாயி னும், கேளாத்தகையவே-செவிடாந் தன்மையினவேயாம், எ-று.

(க-ரை.) கேள்வியாலே துளைக்கப்படாத செவிகள் செவிடு உடையன- என்பதாம்.

(வி-ரை.) ஓசைமாத்திரத்தால் உறுதி அடையாமையால் கேளாத்தகைய வென்றும் மனதிலே நூற்பொருள் நுழைதற்கு வழியாகலால் கேள்வியைக் காரணமாக்கியும் சொல்லினர். பழைய துளை துளையன்றென்பதாம் (அ)

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

(ப-ரை.) நுணங்கிய-நுட்பமாகிய, கேள்வியரல்லார் - கேள்வியை யுடை யவரல்லாதவர், வணங்கிய - வணக்கத்தைக்காட்டுகிற, வாயினராதல்-சொல்லை யுடையவராகுதல், அரிது-கூடாது, எ-று

(க-ரை.) நுட்பமான கல்வி கேள்வியில்லார் வணக்கமுள்ள சொல்லை யுடையவராகார் - என்பதாம்.

## உ0க சாடு - ஆம் - அதி - அறிவுடைமை.

(வி-ரை.) கேட்கப்படுகின்ற பொருளினது நுட்பம் கேள்விமேல் ஏற்றப் பட்டது. வாய், அதன்சொல்லுக்கு ஆகுதலால் ஆகுபெயர். கேளாதார் அறி வில்லாமையால் தம்மைத்தாமே வியந்து சொல்லுவாரென்பதாம். (க)

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(ப-ரை.) செவியிற்சுவை-காதுகளால் அறியப்படுஞ் சுவைகளை, உணரா- அறியாத, வாயுணர்வின்-வாயால் உண்ணப்பட்ட சுவையை, அறியும் - அறி வினையுடைய, மாக்கள் - மனிதர், அவியினும்-இறந்தாலும், வாழினும் - வாழ்ந் தாலும், என் (உலகத்துக்கு வருவது) யாது, எ-று.

(க-ரை.) கேள்விச்சுவை யறியாத மனிதர் இறந்தும் இருந்தும் பய

னில்லை என்பதாம்.

(வி-ரை.) செவியா லுணரப்படுஞ் சுவைகள், சொற்சுவையும் பொருட்சுவையும் ஆம். இவைகளிலே சொற்சுவை, குணாலங்காரங்கள். பொருட்சுவை, சிங்காரமுதலாகிய நவரசங்கள். வாய்ச்சுவை, கைப்பு முதல் அறுவகைப்படும். அவர் செத்தால் இழப்பதும், வாழ்ந்தால் பெறுவதும் இல்லாமையால் இரண்டும் சமானந்தானென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் கேளாவிடத்து உண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.] (௧0)

நாற்பத்திரண்டாம் அதிகாரம் - கேள்வி
முற்றிற்று.

---

## நாற்பத்திமூன்றும் - அதிகாரம்.

# அறிவுடைமை.



அஃதாவது: கல்வி கேள்விகளினாலாகிய அறிவோடு உண்மையறிவுடையதனால் அதிகார முறைமையும் இதனால் விளங்கும்.

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண்

(ப-ரை.) அறிவு - (அரசர்க்கு) அறிவென்பது, அற்றம் - முடிவுவாராமல், காக்கும் - காக்கின்ற, கருவி - படையாம், (அதுவல்லாமல) செறுவார்க்கும் - பகைவர்க்கும், அழிக்கலாகா - அழிக்கக்கூடாத, உள் - உள்ளாகிய, அரண் - காவலிடமுமாம், எ-று.

(க-ரை.) அரசர்க்குத் தன்னைக் காக்கும் படையாயும் பகைவரால் அழிக்கக்கூடாத அரணாயும் உள்ளது அறிவு என்பதாம்.

(வி-ரை.) காத்தல் - முன்னறிந்து பரிகரித்தல். [இதனால் அறிவினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௧)



சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(ப-ரை.) (மனத்தை) சென்றவிடத்தால் (அது) போனவிஷயத்திலே செலவிடா - போகவிடாமல் (அவ்விஷயங்களி னன்மை தீமைகளை ஆராய்ந்து)

தீது-தீயதிலிருந்து, ஒரீஇ-நீக்கி, நன்றின்பால் - நல்லதனிடத்து, உய்ப்பது-போகவிடுவது, அறிவு-விவேகம், எ-று.

(க-ரை.) மனம்போனவழியிற் போகவிடாமல் நன்மையிற் செலுத்துவதே யறிவு-என்பதாம்

(வி-ரை.) குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல் வேறுக்கி மனத்தைப்புலமறிந்து செல்லுவது அறிவென்றார் அது உயிர்க்குணமாகலால்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

(ப-ரை.) எப்பொருண் - யாதொருபொருளை, யார்யார்வாய் - எவரெவர் வாயில், கேட்பினும்-கேட்டாலும், அப்பொருள் - அப்பொருளினது, மெய்ப்பொருள்-மெய்யாகியபயனை, காண்பது-காணவல்லது, அறிவு-விவேகம், எ-று.

(க-ரை.) எவரெவர் வாயினால் எந்தெந்த பொருளைக் கேட்டாலும் அதனுள் மெய்ப்பொருளை அறிவதே அறிவு-என்பதாம்.

(வி-ரை.) முக்குணங்களும் மாறிமாறிவருதல் யாவர்க்கும் உண்டாதலால் உயர்ந்தபொருளை இழிந்தார் வாயிலும், இழிந்தபொருளை உயர்ந்தார் வாயிலும், உறுதிப்பொருளை பகைவர்வாயிலும், கெடுபொருளைச் சிநேகர்வாயிலும், ஒரேவிடத்தே கேட்கப்படுதலால் எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினுமென்றார். சொல்லுவாரியல்பு நோக்காமல் அப்பொருளின் பயனைநோக்கி நல்லதைக்கொண்டு தீயதைவிடுவது அறிவென்பதாம். (கூ)

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு

(ப-ரை.) (தன்னாலே சொல்லப்படும் சொற்கள் அரிய பொருளினவாயிருந்தாலும்) எண்பொருளவாக (கேட்பவர்க்கு) எளியபொருளினவாம்படி, செல-மனங்கொள்ள, சொல்லி - தான், பிறர்வாய் பிறர்வாயிற் (கேட்கப்படுஞ் சொற்களில்) நுண்பொருள் (காணுதற்கரிய) நுட்பப்பொருளையும், காண்பது-காணவல்லது, அறிவு-விவேகம், ஏ-று.

(க-ரை.) பிறர்க்கு அரியவைகளையும் எளியனவாக விளக்கும்படி சொல்லி பின் அவர்வாயினால் அறிவதே அரசனுக்கு அறிவு - என்பதாம்.

(வி-ரை.) அறிவுடையவனது தொழில் அறிவினமேலேற்றப்பட்டது நீ
ச்சொல்பவைகளை வழுவில்லாமல் நன்றாகவிளங்கச் சொல்லவேண்டுமென்ப



ஞாலும் நன்றாக விளங்காமற் போனாலும் அவைகளின் பயனைக்கொண்டு விட வேண்டுமென்பதற்குப் பொருளின்மேல் வைத்துஞ் சொல்லினார். (ச)

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(ப-ரை.) (ஒருவனுக்கு) உலகம் - உயர்ந்தோரை, தழீஇயது - நட்பாக்குவது, ஒட்பம் - அறிவுடைமையாம், மலர்தலும் (முன்னே) விரிதலும், கூம்பலும் - பின்னே குவிதலும், இல்லது (அந்நட்பினிடத்தே) இல்லாதது அறிவு, எ-று.

(க-ரை.) விருப்பால் முகமலர்தலும், வெறுப்பால் முகங்குவிதலும், இல்லாத அறிவு உயர்ந்தோரை நட்பாக்கும்-என்பதாம்

(வி-ரை) உயர்ந்தோரோடு நீர்ப்பூப்போல் வேறுபடாமல் கோட்டுப் பூப்போல் ஒருநிலையே நட்பாயினுல் எல்லா வின்பங்களும் உண்டாகலால் அதனை அறிவென்றார். (ரு)

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(ப-ரை) உலகம் - உலகமானது, எவ்வது - எவ்விதத்தினுல், உறைவது நடப்பதாயிருக்கின்றது, உலகத்தோடு அவ்வுலகத்துடன்பொருந்தி, அவ்வது அவ்விதத்தால், உறைவது (தானும்) நடப்பது, அறிவு அரசனுக்கு அறிவாம், எ-று

(க-ரை.) உலகம் எவ்வகையில் நடக்கின்றதோ அவ்வகையில் நடப்பது அரசனுக்கு அறிவு - என்பதாம.

(வி-ரை.) உலகத்தையெல்லாம் யான் நியமித்தலால் என்னை நியமிப்பார் இல்லையென்று நினைத்துத் தான் நினைத்தபடி நடந்தால் பழியும் பாவமும் ஆம். ஆதலால் அப்படிநடத்தல் அரசனுக்கு அறிவன்றென்று விலக்கியபடியாயிற்று. [இவையிரண்டுபாட்டாலும் அறிவுடைமையி னிலக்கணம் சொல்லப்பட்டது.] ()

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்

(ப-ரை.) ஆவது - வரக்கடவதை, அறிவார் (முன்னே) அறியவல்லவர் அறிவுடையார்-அறிவையுடையவராவார், அஃது-அவ்வரக்கடவதை, அறி கல்லாதவர்(முன்னே) அறியமாட்டாதவர், அறிவிலார்-அறிவில்லாதவராவார், எ-று.

(க-ரை.) முன்வரக்கடவதை அறியவல்லவர் அறிவுடையவர்-என்பதாம்.

(வி-ரை.) முன்னறிதலாவது - முன்னே எண்ணியறிதல். (எ)

## சுங - ஆம் - அதி - அறிவுடைமை. உ0க

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

(ப-ரை.) அஞ்சுவது - அஞ்சத்தகுவதை, அஞ்சாமை - பயப்படாமை, பேதைமை - அறிவில்லாமை ஆம், அஞ்சுவது - அஞ்சத்தகுவதை, அஞ்சல் - பயப்படுதல், அறிவார்தொழில் - விவேகிகளது தொழில் ஆம், எ-று.

(க-ரை.) அறிவுடையவர் அஞ்சத்தகுவதற்கு அஞ்சுவர்-என்பதாம்.

(வி-ரை.) அஞ்சத்தகுவன: பாவம் பழிகேடுமுதலாகிய பலவாயினும் சாதிபற்றி அஞ்சுவதென்று ஒருமையாகக்கூறினர். அஞ்சாமை, எண்ணாது செய்து நிற்றல். அஞ்சுதல் - எண்ணிச் செய்யாதுவிடுதல் அஞ்சாமையை இழைமாட்டியாக முன்னே சொல்லுதலால் இங்கே அஞ்சவேண்டு மிடம் சொல்லியபடி [இவை இரண்டுபாட்டாலும் அறிவுடையவரது இலக்கணம் சொல்லப்பட்டது.] (அ)

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

(ப-ரை.) (வரக்கடவதாகிய அதனை) எதிரதாக்காக்கும் - முன்னே அறிந்து காக்கவல்ல அறிவினார்க்கு-விவேகமுள்ளவர்க்கு, அதிர - (அவர்) நடுங்கும்படி, வருவதோர்நோய்-வருவதாகிய, ஒருதுன்பமும்-இல்லை, எ-று.

(க-ரை.) வருந்துன்பங்களை முன் அறிந்துகாக்கும் அறிவுடையார்க்குத் துன்பம் இல்லை-என்பதாம்.

(வி-ரை.) இதனாலே வரக்கடவதாகிய துன்பத்தைக்காத்தற்குரிய காவல் அறிவிக்கப்பட்டது காத்தல் - அத்துன்பத்தின் காரணத்தை விலக்குதல் [அவர்க்குத் துன்பமில்லாமை இதனாலே சொல்லப்பட்டது] (க)

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

(ப-ரை.) அறிவுடையார் - விவேகமுடையவர்கள், எல்லாமுடையார் - (வேறொன்றும் இல்லாதவராயிருந்தாலும்) எல்லாமுடையவராவார், அறிவிலார் - விவேகமில்லாதவர்கள், என்னுடையரேனும் - எல்லாமுடையவராயிருந்தாலும், இலர் - (ஒன்றும்) இல்லாதவராவார், எ-று.

(க-ரை.) அறிவு இல்லார் எல்லாம் வுடையவராயினும் ஒன்றுமில்லாதவராவாரென்பதாம்.

(வி-ரை.) செல்வங்களெல்லாம் அறிவினாலே சம்பாதிக்கவும் காக்கவும்படுதலால் அதனையுடையவரை-எல்லாமுடையாரென்றும், அவையெல்லாம் முன்னாகவே அமைந்து கிடந்தாலும் அழியாமற் காத்தற்கும் அழிந்தவிடத்தே சம்பாதித்தற்கும் கருவியாகிய அறிவில்லாமையால் அறிவில்லாதவரை - என்னு



டையரேனு மிலரென்றும் சொல்லினர். [இதனால் அறிவுடையவரது உடைமையும், மற்றவரது இல்லாமையும் சொல்லப்பட்டன.] (௪0)

நாற்பத்திமூன்றாம் - அதிகாரம் - அறிவுடைமை.

முற்றிற்று.

---

## நாற்பத்திநான்காம் - அதிகாரம்.

# குற்றங்கடிதல்.

அஃதாவது: காமம், குரோதம், உலோபம், மானம், உவகை, மதம் எனப்பட்ட ஆறுகுற்றங்களையும், அரசன் தன்னிடத்தே தோன்றாமற் கடிதல். இவைகளைக் குற்றமென்று அறிதலும், கடிதலும், அறிவுடையார்க் கல்லது மற்றவர்க்குக் கூடாமையால் அதன்பின் வைக்கப்பட்டது.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

(ப-ரை.) செருக்கும் - மதமும், சினமும்-குரோதமும், சிறுமையும் - காம

மும், ஆகிய-(குற்றங்களை,) இல்லார்-இல்லாத அரசனது, பெருக்கம் - செல்வமானது, பெருமிதநீர்த்து-மேம்பாட்டுக் குணத்தையுடையதாம், எ-று.

(க-ரை.) மதமும் கோபமும் காமமுமில்லாத வரசர் செல்வம்மேலானது என்பதாம்.

(வி-ரை.) மதம்-செல்வக்களிப்பு சிறியவாது செயலாதலால்-அளவிறந்த காமம் சிறுமையெனப்பட்டது. இக்குற்றங்கள் அநீதிகளைச் செய்வித்தலால் இவையில்லை நீங்கினவாது செல்வம் நல்வழிப்படுதலும் நிலைபெறுதலு முடைமையால், மதிப்புடைத்தாகு மென்பதாம் மிகுதிபற்றி இக்குற்றங்கள் முன் சொல்லப்பட்டன. (க)

> இவறலு மாண்பிறந்த மானமு மாணு
> வுவகையு மேத மிறைக்கு.

(ப-ரை.) இவறலும் (வேண்டுமிடத்துப் பொருள்கொடாமையும், மாண்பிறந்த மானமும்-நன்மையினீங்கியமானமும், மாணுவுவகையும் - அளவிறந்த மகிழ்ச்சியும், இறைக்கு-அரசனுக்கு, ஏதம்-குற்றங்களாம், எ-று.

(க-ரை.) கொடாமையும் நன்மைநீங்கிய மானமும் அளவிலா மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றங்களாகும்-என்பதாம்.

(வி-ரை.) மாட்சிமையான மானத்தை நீக்குதற்கு மாண்பிறந்த மானமென்றார். அம்மானமாவது, அந்தணர், சான்றோர், அருந்தவர் தம்முன்னோர், தந்தை, தாய் என்றிவரை, வணங்காமையும் முடிக்கத் தகாதவாயினும்

---

ச்ஆ௬ கக - ஆம் - அதி - சான்றாண்மை

(ப-ரை.) (சால்புடையவர்) இன்னா (தமக்குத்) துன்பந் தருமவைகளை செய்தார்க்கும்-செய்தவர்களுக்கும், இனியவே-இன்பந் தருமவைகளையே, செய்யக்கால்-செய்யாவிட்டால், சால்பு - சான்றாண்மை, என்னபயத்தது (வேறே) என்னபயனுடைத்து, எ - று.

(க-ரை.) துன்பஞ் செய்தவர்களுக்கு இன்பஞ் செய்யாவிடில் சான்றாண்மை யென்னபயனைத்தரும்-என்பதாம்.

(வி-ரை.) ஓ அசை. சிறப்பும்மை சால்புடையவரும் இன்னா செய்தற்கு இடமாதல் விளக்கிநின்றது. தாமும் அவர்க்கு இன்னாசெய்வாராயின் தம்முடைய சால்பால் ஒருபயனும் இல்லையென்பதாம். [இவை ஏந்து பாட்

டாலும் சிறப்புவகையாற் சொல்லப்பட்டது.] (௭)

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

(ப-ரை.) சால்பென்னும்-சால்பென்று சொல்லப்படும், திண்மை-வலிமை, உண்டாகப்பெறின்-தன்னிடத்துண்டாகப்பெற்றால், ஒருவற்கு-ஒருவனுக்கு,இன்மை-வறுமையால் 'வருவது' இளிவன்று-இகழ்வாகாது-எ-று.

(க-ரை.) சால்பின் வலிமையுண்டாகப்பெற்றால். வறுமை இகழ்வாகாது-என்பதாம்.

(வி-ரை.) தளராமல் நாட்டுதலால் வலியாயிற்று. சால்புடையவர் வறுமையிலும் மேன்படுபவரென்பதாம். (அ)

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழியெனப்படு வார்.

(ப-ரை.) சான்றாண்மைக்கு-சால்புடைமையாகிய (கடலுக்கு) ஆழியெனப்படுவார்-கரையென்று சொல்லப்படுவார், ஊழிபெயரினும் (மற்றைக் கடலும் கரையுள் நில்லாமற்) காலம் வேறுபட்டாலும், தாம்பெயரார்-தாம்வேறுபடார், எ-று.

(க-ரை.) சான்றோர் காலம் வேறுபடினுந் தாங்கள் வேறுபடார்-என்பதாம்.

(வி-ரை.) சான்றாண்மையின் பெருமைதோன்ற அதனை கடலாக்கியும் அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலால், அதனையுடையாரை கரையாக்கியும் சொல்லினர். [ஏகதேசவுருவகம்] (௯)

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

(ப-ரை.) சான்றவர்- (பலகுணங்களாலும்)நிறைந்தவர், சான்றாண்மை (தமது) தன்மை, குன்றின்-குன்றுவாராயின்,இருநிலந்தான்-மற்றைப்பெரியபூமிதானும், பொறை (தன்) பாரத்தை, தாங்காது - தாங்காதாய் முடியும்



நினைத்து முடித்தே விடுதலும் முதலானவை. அளவிறந்த உவகை மிகுந்த மகிழ்ச்சி. [இவை இரண்டுபோட்டாலும் குற்றங்கள் இவையெனச் சொல்லப் பட்டன. (௨)

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(ப-ரை.) பழிநாணுவார்-பழியை அஞ்சுவோர், தினைத்துணையாக்குற்றம்-தினையளவு சிறியகுற்றமானது, வரினும் (தம்மிடத்து) வந்ததாயினும் (அதனை) (அவ்வளவாகவல்லாமல்) பனைத்துணையா - பனையினளவு பெரிதாக, கொள்வர்-கொள்வார்கள், எ-று.

(க-ரை.) பாவத்துக்கு அஞ்சுவோர் தினையளவுகுற்றத்தைப் பனையளவாக என்னுவார்-என்பதாம்.

(வி-ரை.) குற்றம்-சாதியொருமைப்பெயர். சிறுகுற்றமும் தமக்கு ஏற்காமையால் சிறிதென்று பொருர் பெரிதாகக்கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமல் காப்பரென்பதாம். (௩)

குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை.

(ப-ரை.) அற்றம்-முடிவை, தரூஉம்பகை (தனக்குத்) தரும்பகை, குற்றமே-குற்றமேயாம் (ஆதலால்) குற்றமே - அக்குற்றம் (தன்னிடத்து வாராமையையே) பொருளாக-பயனாகக்கொண்டு, காக்க-காக்கவேண்டும், எ-று.

(க-ரை.) தனக்கு முடிவைத்தரும் பகையாகிய குற்றத்தைக் காக்கக் கடவன்-என்பதாம்.

(வி-ரை.) இக்குற்றங்களிலே ஒன்றைப்பற்றி யல்லாமல் பகைவர் தனக்கு முடிவைச் செய்யாமையால் இவையே அரசனுக்குப் பகையாவன வென்றும் இவைகளி னில்லாமையையே குணங்களி னிருப்பாகக்கொண் டென்றற்கு பொருளாகவென்றும், சொல்லினர். (௪)

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(ப-ரை.) வருமுன்னர்-(குற்றம்) வருவதன்முன்னே, காவாதான் (அதனை வாராமல்) காவாத அரசனது, வாழ்க்கை-வாழ்வானது, (அதுவந்தால்) எரிமுன்னர்-தீமுகத்துநின்ற, வைத்தூறுபோல - வைக்கோலின் கூட்டம்போல, கெடும்-அழிந்துவிடும், எ-று.

(க-ரை.) குற்றம்வருமுன்னே காத்துக்கொள்ளா வரசன் வாழ்வு அக்கினி முன்னின்ற வைக்கோல்போலக்கெடும்-என்பதாம்.

(வி-ரை.) குற்றமென்பது - அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது, முன்னமென்றதனுல்-காத்தலாங்காலம் பெறப்பட்டது. [குற்றம் சிறிதாயினும் அதனாலே பெரியசெல்வம் அழிக்கப்படுமென்பது உபமானத்தினாலே சொல்லப்பட்டது.] (௫)



## சச - ஆம் - அதி - குற்றங்கடிதல்.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

(ப-ரை.) தன்குற்றம்-தனது குற்றத்தை, நீக்கி (முன்னேகண்டு) கடிந்து பிறர்குற்றம்-பிறரது குற்றத்தை, காண்கிற்பின் (பின்னே) காணவல்லவனுயின், இறைக்கு-அரசனுக்கு, ஆகும்-ஆகக்கடவதாகிய, குற்றம் என் - யாது, எ-று.

(க-ரை.) தன் குற்றத்தை முன்நீக்கிப் பிறர்குற்றத்தைப் பின்நீக்கு மரசனுக்குக் குற்றமில்லை-என்பதாம்.

(வி-ரை.) அரசனுக்குத் தன்குற்றங் கடியாதவிடத்தே பிறர் குற்றங் கடிதல் குற்றமாம், அது செய்தவிடத்தே முறைசெய்தலாம் என்றற்கு என் குற்றமாகுமென்றார். எனவே தன்குற்றங் கடிந்தவனே முறைசெய்தற்கு உரியவனென்றதாயிற்று. [இவை நான்குபாட்டாலும் குற்றங்கடிதல் பொதுவகையினாலே சொல்லப்பட்டது.] இனிச் சிறப்புவகையாற் கூறுகின்றார். (௬)

செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

(ப-ரை.) செயற்பால-(பொருளினாலே தனக்குச்) செய்துகொள்ளப்படுமவைகளை, செய்யாது - செய்துகொள்ளாமல், இவறியான் (அதனிடத்து) லோபஞ்செய்தவனது, செல்வம்-செல்வமானது, உயற்பாலதன்றி-பின்னுள்ளதாகும் பகுப்பினதன்றி, கெடும்-வீணாகக்கெடும், எ-று.

(க-ரை.) செய்யப்படுமவற்றைச் செய்துகொள்ளாமல் உலோபஞ்செய்யுமரசன் செல்வங்கெடும்-என்பதாம்.

(வி-ரை.) செய்துகொள்ளப்படுமவை, அறம்பொருளின்பங்கள் பொரு

னால் இம்மூன்றிலே ஒன்றாகிய பொருள்செய்தலாவது, அதனைப் பெருக்குதல் செல்வமானது அறஞ்செய்யாமையாலும். பொருள் பெருக்காமையாலும், பின் னுண்டாகாதென்றும் இன்பப்பயன் கொள்ளாமையால் கெடுமென்றும அறிக.

பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

(ப-ரை.) பற்றுள்ளமென்னும் (பொருளைவிடத் தகுமிடத்துவிடாது) பற்றுகின்ற உள்ளமாகிய, இவறன்மை - உலோபத்தன்மையானது, எற்றுள்ளும் - எல்லாக் குற்றத்தன்மைகளுள்ளும், எண்ணப்படுவது (வைத்து) நினைக்கப்படுவது, ஒன்றன்று-ஒன்றல்ல (மிகுந்ததாம்,) எ-று.

(க-ரை.) பொருளைப்பற்று முலோபத் தன்மையானது எல்லாக் குற்றத்திலு மிகுந்ததுஎன்பதாம்.

(வி-ரை.) இவறன்மை – குணங்களெல்லாம் சேர்ந்திருந்தாலும் அவைகளைக் கீழ்ப்படுத்தித் தான்மேற்படவல்ல, வியல்பு, மற்றவை அது செய்யமாட்டாமையால் எற்றுள்ளு மெண்ணப்படுவ தொன்றன்றென்றார். எற்றுள்ளு மென்பது இடக்குறைவிகாரம். [இவை இரண்டு பாட்டாலும் உலோபத்தின் றீமை சொல்லப்பட்டது.] (அ)

## சரு-ஆம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல். உகஉ

வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(ப-ரை.) எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், (தான் மிகவும் உயர்ந்த காலத்திலுமென்றபடி) தன்னை, வியவற்க - (மகத்தினிலே) நன்கு மதியாதிருக்கக் கடவன், நன்றி-நன்மையை, பயவா - (தனக்குத்) தாராத, வினை-தொழில்களை, நயவற்க - (மானத்தால்) விரும்பாதிருக்கக்கடவன், எ-று.

(க-ரை.) ஒருவன் எக்காலத்தும் தன்னை மதியாமலும் நன்மையைத் தராத தொழிலை விச்சியாமலும் இருக்கக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) தன்னை நன்குமதித்தவிடத்தே இடமும், காலமும், வலியும், அறியப்படாமையாலும், அறமும, பொருளும், இகழப்படுதலாலும், எஞ்ஞான்றும் வியவற்கவென்றும், நினைத்தது முடிந்தே விடுவனென்ற அறம்பொருளின்பங்களைத் தராத தொழில்களை விரும்பினால் அவைகளால் பாவமும் பழியும் கேடும் வருமாதலால் அவற்றை நயவற்கவென்றும் சொல்லினார். [இதனால்

மதமானங்களினது தீமை சொல்லப்பட்டது] (௯)

காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

(ப-ரை.) காதல (தன்னாலே) விரும்பப்பட்ட பொருள்களை, காதல்-அவ் விருப்பத்தை, அறியாமல் (அவர்) அறியாதிருக்கும்படி உய்க்கிற்பின்-அனுபவிக்க வல்லவனாயின், ஏதிலார் - பகைவர், நூல் (தன்னை வஞ்சித்தற்கு எண்ணும்) எண்ணமானது, இல்-பழுதாம், எ-று.

(க-ரை.) தன்னா லிச்சிக்கப்பட்ட பொருள்களையுந் தன்னிச்சையையும் பகைவரறியாம லனுபவிக்க வல்லவனானா லப்பகைவரெண்ணம் பழுதாம் என்பதாம்.

(வி-ரை.) அறிந்தவிடத்தே அவைவழியாகப் புகுந்து வஞ்சிப்பாராதலால் அறியாமல் அனுபவிக்க வேண்டுமெனபதாம். இதனாலே முழுதும் விடலாகாத கர்மத்தை அனுபவிக்கும்விதம் சொல்லப்பட்டது.] (௧௦)

நாற்பத்துநான்காம அதிகாரம் - குற்றங்கடிதல்
முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாம் - அதிகாரம்

# பெரியாரைத் துணைக்கோடல்.

அஃதாவது - அவ்வறுவகைக் குற்றங்களையும் கடிந்த அரசன் தன்னைத் தீயவழியில் விலக்கி நல்லவழியிலே செலுத்தும் பேரறிவுடையவரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல், அதிகார முறைமையும் இதனால் விளங்கும்

## ௨௧௪௫-ஆம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல்.

பேரறிவுடையவ ராவார். அரசாட்சிக்குக் குற்றம்வாராமற் காத்தற்குரிய அமைச்சர் புரோகிதர்.

அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

(ப-ரை.) அறனறிந்து - அறத்தினது நுட்பத்தை அறிந்து, மூத்த (தன்னின்) மூத்த, அறிவுடையார் - அறிவுடையவரது, கேண்மை - நட்பை, தேர்ந்து (அதனது அருமையைத்) தெரிந்து, திறனறிந்து (கொள்ளும்) திறமறிந்து, கொளல் (அரசன்) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) அரச னறிவுடையோர் சினேகத்தைக் கொள்ளக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) மூத்தல் அறிவாலும், சீலத்தாலும், காலத்தாலும், முதிர்தல் அறிவுடையார், நீதியையும், உலகியலையும், அறிதலையுடையவர், திறனறிதலாவது—நன்குமதித்தல், உயரச்செய்தல், அவர் சொல்வழிநடத்தல் இவை முதலாக, அவர் தனக்கு உள்ளாந்திறமறிந்து செய்தல். (க)

உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(ப-ரை.) உற்ற - (தெய்வத்தாலாவது மனிதராலாவது தனக்கு) வந்த, நோய் - துன்பங்களை நீக்கி (நீக்கும் விதம் அறிந்து) உறாமை (பின் அப்படிப் பட்டவை) வாராதபடி, முற்காக்கும் - முன் (னறிந்து) காக்கவல்ல பெற்றியார் தன்மையுடையவரை, பேணி அவர் ‡ மகிழத் தக்கவைகளைச்செய்து கொளல் (அரசன் துணையாகக்) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) வந்த துன்பங்களைநீக்கி அத்துன்பங்கள் வாராமற் காக்க வல்லவரை யரசன் சிநேகிக்கக்கடவன் என்பதாம்

(வி-ரை.) தெய்வத்தால்வருந் துன்பங்களாவன: மழையில்லாமையாலும், அதிகமழையாலும், காற்றுத்தீப்பிணி இவைகளாலும் வருவன, அவை கடவுளரையும், தக்கோரையும்நோக்கிச் செயப்படுஞ் சாந்திகளால் நீக்கப்படும். மக்களால் தருந்துன்பங்களாவன; பகைவர், கள்வர், சுற்றத்தார், தொழில்செய்வார், இவர்களால் வருவன. அவை சாமபேத தானதண்டங்களாகிய நால்வகையுபாயங்களுள் ஏற்றதனுல் நீக்கப்படும். முற்காத்தலாவது - தெய்வத்தால் வருமவைகளை உற்பாதங்களால் அறிந்து அச்சாந்திகளாலே காத்தலும் மனிதரால் வருமவைகளை அவரதுகுணம் † இங்கிதம் ‡ ஆகாரம். செயல், என்பவைகளால் அறிந்து அவ்வுபாயங்களுள் ஒன்றாலே காத்தலும் ஆம். ஆகவே புரோகிதரையும், மந்திரிகளையும், சொல்லியபடியாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் பெரியோரது இலக்கணமும், அவரைத் துணையாகக்கொள்ளவேண்டுமென்பதும் கொள்ளும்விதமும் சொல்லப்பட்டது.] (உ)

‡ மகிழத்தக்கவை - நன்கு மதிக்கை முதலானவை.

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்

(ப-உரை) பெரியாரை - பேரறிவுடையவர்களை, பேணி - அவர்மகிழத்தக்கவைகளைச் செய்து, தமரா - தமக்குச் சிறந்தவராக, கொளல் - கொள்ளுதல் (அரசர்க்கு) அரியவற்றுளெல்லாம் - அரிய பேறுகள் பலவினும் அரிதே அரிது, எ-று.

(க-உரை) பெரியோரைச் சிநேகித்தல் அரசன்பெறும் பேறுகளுள் மிகச் சிறந்தபேறு என்பதாம்.

(வி-உரை.) உலகத்திலே அரியவையெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப்பேறு சிறந்ததென்றது இதனால் அவையெல்லாம் உண்டாதலைக் குறித்தென்க. (௩)

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(ப-உரை) தம்மிற்பெரியார் (அறிவுமுதலானவைகளாலே) தம்மின்மிக்கவர், தமரா - தமக்கு சிறந்தவராக, ஒழுகுதல் (தாம் அவர்வழியிலே நின்று) நடத்தல் (அரசர்க்கு) வன்மையுளெல்லாம் - வலியுடைமைபலவினும், தலை - முதன்மையாம், எ-று.

(க-உரை.) தம்மினும் பெரியோரைச் சிநேகித்தல் அரசன் வல்லமையுள் தலைமையான வல்லமை-என்பதாம்.

(வி-உரை.) இப்பெரியார் பொருள்படை யரண்களால் நீக்கக்கூடாதவையாகிய தெய்வத்தால்வருந் துன்பமுதலானவைகளையும் நீக்குதற்குரியவராகலால் அவைகளாலாகிய வலியினும் இத்துணைவலி சிறந்ததெனப்பட்டது, (௪)

சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(ப-உரை.) சூழ்வார் - மந்திரிகளை, கண்ணாக - கண்ணாகக்கொண்டு, ஒழுகலால் (தன்பாரம்) நடத்தலால், மன்னவன் - அரசன், சூழ்வாரை - அப்படிப்ப

ட்ட மந்திரிகளை, சூழ்ந்து-ஆராய்ந்து, கொளல் (தனக்குத் துணையாகக்) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை) அரசன் மந்திரிகளைக்கொண்டு பூமியாராடத்தலால் அவர்களைத் துணையாகக் கொள்ளவேண்டும்.என்பதாம்.

(வி-ரை.) தானே ஆராயவல்லவனு யிருந்தாலும் அளவில்லாத தொழில்களால் வருத்தமடையு மரசனது பாரம் அவ்வாராய்ந் லொன்றே தொழிலாகிய மந்திரிகளால் அல்லாமல் இனிது நடவாமைபற்றி அவரைக்கண்ணுக்கிச்சொ

## ௪௪௩ சரு-ஆம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல்.

ல்வினர். ஆராய்தல் அமைச்சியலிலே சொல்லப்படுகிற இலக்கணமுள்ளவரென்பதனை ஆராய்தல், [இவை மூன்றுபாட்டாலும் பெரியாரைத் துணைக்கொள்ளுதலின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௭)

தக்கா ரினத்தனுய்த் தானொழுக வல்லானைச்
செற்றூர் செயக்கிடந்த தில.

(ப-ரை.) தக்காரினத்தனாய்-யோக்யராகிய இனத்தினையுடையவனாகி தானொழுக - தானும் (அறிந்து) நடக்க. வல்லானை - வல்லவரசனை, செற்றார்-பகைவர், செயக்கிடந்தது-செய்யக்கிடந்த ஒரு துன்பமும்,இல்-இல்லை,எ-று.

(க-ரை.) பெரியோரினத்தை யுடையவனுகி அவழிப்பட்ட அரசன் பகைவரால் வெல்லப்படான்-என்பதாம்.

(வி-ரை.) தக்கோர்-அறிவொழுக்கங்களாலே தகுதியுடையவர். ஒழுகுதல்-அறநீதிகளின் வழிதவறாது நடத்தல். வஞ்சித்தல் - கூடினவரைப் பிரித்தல்-வேறு பகைவிளைத்தல் என்கிற இவைகளாலும், வலிமையாலும் பகைவர்செய்யுந் துன்பங்கள் பலவகைப்பட்டிருப்பினும் தானும் அறிந்து அறிந்தோரது சொல்லையும் கேட்டு நடக்கையால் - அத்துன்பங்களிலே ஒன்றும் வாராதென்றற்கு - செற்றூர் செயக்கிடந்த தில்லென்றூர். (௮)

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(ப-ரை ) (தீயவைகளைக்கண்டால்) இடிக்கும் - கோபித்துப் புத்திசொ

ல்லும், துணையாரை - துணையாந் தன்மையை யுடையவரை, ஆள்வாரை - (இவர் நமக்குச் சிறந்தவரென்று கொண்டு ஆளுகிற அரசரை, கெடுக்குந் தகைமையவர் - கெடுக்கும் பெருமையையுடைய பகைவர், யார் (உலகத்தில்) யாவர், எ-று.

(க-ரை) அறிவுறுத்திச் சொல்லும் மந்திரிகளைக்கொண்டு அரசாளு மரச ருக்குப் பகைவரில்லை-என்பதாம்.

(வி-ரை.) தீயவை - பாவங்களும், நீதியல்லாதவையும், துணையாந்தன்மை யாவது - தமக்கு அவை யில்லாமையும். அரசனிடத்து அன்புடையவராயிருக் கையும் ஆம். அப்படிப்பட்டவர் நல்வழியி னீக்கவிடாமையால் அவரை யாளு மரசர் ஒருவராலும் கெடுக்கப்படாரென்பதாம். ஏ - அசை. [இவை இரண்டு பாட்டாலும் அதன் பயன் சொல்லப்பட்டது.] (௭)

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(ப-ரை.) இடிப்பாரை - கண்டித்துப் புத்தி சொல்வாரை, இல்லாத (தனக்குத் துணையாகக்) கொள்ளாமையால், ஏமரா - காவலற்ற மன்னன்

## ௪௫ - ஆம் - அதி - பெரியாரைத் துணைக்கோடல். ௨௧௭

இராசன் கெடுப்பாரிலானும் (பகையைக்) கெடுப்பவர் இல்லாதிருந்தாலும் கெடும் (தானே) கெடுவான், எ-று.

(க-ரை.) புத்திசொல்லு மந்திரிகளைப் பெற்றிலாவரசன் கெடுக்கும் பகை வரில்லாமற் கெடுவான்-என்பதாம்.

(வி-ரை.) கெடுப்பார் உண்டாயிருப்ப ரென்பது தோன்ற இலானு மென் றார். தானே கெடுதலாவது - பாகனில்லாத யானைபோல் வழியல்லாத வழி யிலே சென்று கெடுதல். (௮)

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(ப-ரை.) முதலிலார்க்கு - முதற்பொருளில்லாத செட்டிகளுக்கு, ஊதி யம் (அதனால் வருகிற) லாபமானது, இல்லை (அதுபோல்) மதலையாம் (தம்மைத் தாங்குவதாகிய) சார்பிலார்க்கு - துணையில்லாத அரசர்க்கு, நிலை

(அதனால் வருகிற) நிலையானது. இலை, எ-று.

(க-ரை.) முதற்பொருளில்லாதவர்க்கு இலாபமில்லை. அதுபோல மந்திரிகளில்லாத வரசனுக்குத் துணையில்லை-என்பதாம்.

(வி-ரை.) எப்படி முதலைக் கொண்டே இலாபம் பெறவேண்டுமோ அப்படியே தாங்குவாரைக்கொண்டே நிலைபெறவேண்டு மென்பதாம். நிலை அரசர் அது அரசாட்சியின் பாரத்தோடு அசையாது நிற்கை. (௯)

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்

(ப-ரை.) (அரசன்) நல்லார் - பெரியவரோடு, தொடர்கைவிடல் - நட்புக் கொள்ளாது விடுதல் (தான் தனியனுயிருந்துகொண்டு) பல்லார் - பலரோடும், பகைகொளலின்-விரோதங் கொள்ளுதலினும், பத்தடுத்த பத்துப்பங்கு அடுத்த தீமைத்தே-தீமையையுடையதேயாம், எ-று.

(க-ரை.) அரசன் பெரியோர் சினேகத்தை விடுதல் பலபேர் பகைகொள்ளுதலினும் பத்துப்பங்கு தீமையுடையதாம்-என்பதாம்.

(வி-ரை.) பலர்பகையால் ஒருமுகமாயெதிர்த்தகாலத்து ஒருவிதத்தாலே பிழைத்தல் கூடினும் பெரியோர் நட்பைவிட்டால் ஒருவிதத்தாலும் பிழைத்தல் கூடாமையால் இதுசெய்தல் அதனினும் தீதென்பதாம் [இவை மூன்று பாட்டாலும் அதுசெய்யாதவிடத்து உண்டாகுங் குற்றம் சொல்லப்பட்டது.] (௧0)

நாற்பத்தைந்தாம் அதிகாரம்- பெரியாரைத்துணைக்கோடல்.

முற்றிற்று.

---

## நாற்பத்தாறும் - அதிகாரம்.

# சிற்றினஞ்சேராமை.

அஃதாவது: சிறியவினத்தைப் பொருந்தாமை சிறிய வினமாவது, நல்லதிலே நன்மையும், தீயதிலே தீமையும், இல்லை யென்போரும், விடரும், தூர்த்தரும் முதலாயின கூட்டம் அறிவை வேறுபடுத்தி இருமையுங் கெடுக்கு

யியல்பினதாகிய இதனைப்பொருந்திஞல், பெரியாரைத் துணைக்கோடல் பய னில்லை யென்பது அறிவித்தற்கு இது அதன்பின் வைக்கப்பட்டது.

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்

(ப-ரை.) பெருமை - பெரியோரியல்பு, சிற்றினம் - சிறியவினத்தை, அஞ்சும் - அஞ்சுதல்செய்யும், சிறுமைதான் - மற்றைச் சிறியோரியல்பு (அது சேர்ந்தபொழுதே) சுற்றமா (தனக்கு) உறவாக சூழ்ந்துவிடும் - எண்ணித் துணியும், எ-று.

(க-ரை.) பெரியோரியல்பு சிறியவினத்திற் கஞ்சும் சிறியோ ரியல்பு சிறிய வினத்தைச் சுற்றமாகக்கொள்ளும்-என்பதாம்.

(வி-ரை.) தம்மறிவு வேறுபடும் விசயமும் அதனுல் தமக்கு வரும் துன்ப மும் நோக்கலால், அறிவுடையார் அஞ்சுவரென்றுர், அறிவை ஒற்றுமைப்பட்டு நிற்கையால், வேறு நோக்காமையால் அறிவில்லாதவர் தமக்குச் சுற்றமாகத் துணிவரென்றும் சொல்லிஞர். பெரியோரும் சிறியோரும்ஆன குணத்தோர் தது அஞ்சுதலும் அஞ்சாமையுமாகிய தொழில்கள் பெருமையுஞ் சிறுமையும் ஆகிய குணங்களின்மேல் ஏற்றிச் சொல்லப்பட்டன. [இதனுல் சிற்றினம் பெரியோர்க்கு ஆகாதென்பது சொல்லப்பட்டது.] (க)

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

(ப-ரை.) நீர் - நீரானது, நிலத்து (தான்சேர்ந்த) நிலத்தினது, இயல் பான் - இயல்பிஞலே, திரிந்து (தனது) தன்மை வேறுபட்டு, அற்றாகும் - அந்நிலத்தினது தன்மையதாகும் (அதுபோல்) மாந்தர்க்கு - மனிதர்க்கு, அறிவு-அறிவானது, இனத்து (தாம்) சேர்ந்த இனத்தினது, இயல்பு-இயல் பிஞலே (திரிந்து) தனது தன்மைவேறுபட்டு, அதாகும் - அவ்வினத்தினது தன்மையதாகும், எ-று.

(க-ரை.) நிலத்தி னியல்பிஞலே நீர் திரிந்தாற்போலும் அவரவர் சேர்ந்த வினத்திஞலே அறிவுதிரியும்-என்பதாம்.

(வி-ரை.) [ஆகாசத்திலே தன்றன்மையதா யிருந்த நீருக்கு நிலத்தோடு சேர்ந்தவிடத்து நிறஞ்சுவை முதலாகிய குணங்கள்போல் தனித்திருக்கையி லே தன்றன்மையதாயிருந்த அறிவுக்குப் பிறவினத்தோடு சேர்ந்தவிடத்துக் காட்சிமுதலாகிய தொழில்கள் வேறுபடுமென்று இதனுல் அதனது காரணம் சொல்லப்பட்டது.] (உ)

மனத்தா னாமாந்தர்க் குணர்ச்சி யினத்தா
னின்னா னெனப்படுஞ் சொல்.

(ப-ரை.) மாந்தர்க்கு - மனிதர்க்கு, உணர்ச்சி - பொதுவறிவானது மனத்தான (தம்) மனத்தினாலே, ஆம் - உண்டாகும், இஃ னென்னப்படும் (இவன் இப்படிப்பட்டவனென்று (உலகத்தாராலே) சொல்லப்படுகிற, சொல் - சொல்லானது, இனத்தான்-இனத்தினாலே, ஆம்-உண்டாகும், எ-று.

(க-ரை.) மனத்தினாலே யறிவுண்டாம் அதுபோல் ஒருவன் சேர்ந்தவினத்தினாலே யின்னானென் றெண்ணப்படுவான்-என்பதாம்.

(வி-ரை.) இயற்கையாகிய ஐம்புலவறிவு மாத்திரத்துக்கு இனம் வேண்டாமையால் அதனை மனத்தானு'மென்றும் செய்கையாகிய சிறப்பறிவுபற்றி நல்லவனென்றாவது தீயவனென்றாவது உண்டாகுஞ்சொல்லுக்கு இனம் வேண்டுதலால் அதனை இனத்தானுமென்றும் சொல்லினர். [உபமான பிரமாணத்தை அங்கீகரியாமல் அவ்வறிவு வேறுபாடும் மனத்தாலாமென்பாரை நோக்கி இதனுல் அது மறுத்துக் கூறப்பட்டது.] (க)

மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

(ப-ரை.) அறிவு - அச்சிறப்பறிவு, ஒருவற்கு - ஒருவனுக்கு, மனத்து - மனத்தினிடத்து, உளதுபோல (அப்போதே) உண்டாவதுபோல், காட்டி (தன்னை) காட்டி, இனத்து (அவன்சேர்ந்த) இனத்தினிடத்தே, உளதாகும்- உண்டாகும், எ-று.

(க-ரை.) ஒருவனுக் கறிவான தவஞ்சேர்ந்த வினத்தினாலாகும் - என்பதாம்.

(வி-ரை.) மெய்ம்மை நோக்குதற்கு முன்னே மனத்துள்ளதுபோலக்காட்டியும் பின்னோக்கியவிடத்தே பழகிய இனத்துள்ளதாகியும் இருக்கையால் காட்டி என விறந்தகாலத்தினாலே சொல்லினர். [சிறப்பறிவும் மனத்தினிடத்து அப்போதே உண்டாவதென்பவரை நோக்கி அங்கே வெளிப்படுமெனவே புள்ளது அதற்கு மூலம் இனமென்பது இதனாலே சொல்லப்பட்டது.] (உ)

மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

(ப-ரை.) மனம் - அச்சிறப்பறிவு வெளிப்படுமென் [illegible] ஆகிய மனம், தூய்மை-பரிசுத்தனாகத் தன்மையும், செய்வினை-செய் [illegible] தூய்மை பரிசுத்தனாகத் தன்மையும் ஆகிய, இரண்டும் - இவ்வி[illegible] [illegible]மை (சேர்ந்த) வினம், தூய்மை - பரிசுத்தனாகத்தன்மை, தூவா - [illegible] [illegible]கோடாக, வரும்-உண்டாகும், எ-று.

(க-ரை.) மனப்பரிசுத்தமும் செய்வினைப் பரிசுத்தமும் சேர்ந்த [illegible]வினத் தாலாகும்-என்பதாம்.

## ௨௨௦ ௪௬ - ஆம் - அதி - சிற்றினஞ்சேராமை.

(வி-ரை.) மனத்தூயனாதலாவது - சிறப்பறிவுவெளிப்படும்படி இயற்கை யாகிய அறியாமை நீங்குதல் செய்வினை தூயனாதலாவது; மனோவாக்குக ளாலே செய்யப்படுகிற நல்ல தொழிலையுடையவனாகுதல் [ஒருவன் பரிசுத்த வினத்தனாகவே அவ்வினத்தோடு பழக்கவசத்தால் பரிசுத்தமனத்தனாகி அம் மனதினிடத்தே சிறப்பறிவுதோன்ற அதனால் பரிசுத்தமான சொல்லும் செய லும் உடையவனாவனென்று இதனால் இனத்தில் உள்ளதாம் விதம் சொல்லப் பட்டது] (௫)

மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(ப-ரை.) மனந்தூயார்க்கு - மனது பரிசுத்தமானவர்க்கு, எச்சம்-மக்கட் பேறு, நன்றாகும்-நன்றாகவிளைவதும், இனந்தூயார்க்கு, இனம் - பரிசுத்தமான வர்க்கு, நன்றாகாவினை நன்றாகாதசெயல், இல்லை (யாதும்) இல்லை, எ-று

(க-ரை.) மனஞ் சுத்தமுள்ளவர்க்கு மக்கட்பேறு நன்றாகும், இனம் பரி சுத்தமுள்ளவர்க்கு நன்மையிலலாச் செயலில்லை-என்பதாம்.

(வி-ரை.) காரணத்திலே எந்தக்குணம் உள்ளது அது காரியத்தினிடத் தும் உண்டாமாதலால் தந்தைகுணம் மைந்தனிடத்திலும் உண்டாமெனபது பற்றி எச்சநன்றாகுமென்றும் நல்வினத்தோடு எண்ணிச் செயப்படுதலால இல்லை நன்றாகா வினையென்றும் சொல்லினர். (௬)

மனநல மன்னுயிர்க் காக்க மிடைநல
மெல்லாப் புகழுந் தரும்.

(ப-ரை.) மன்னுயிர்க்கு நிலைபெற்ற உயிர்களுக்கு, மனநலம் - மனத்தி னது நன்மையானது, ஆக்கம்-செல்வத்தை (தரும்; இனநலம் - இனத்தினது

நன்மையானது, எல்லாப்புகழும்; அதனோடு; எல்லாப்புகழ்களையும், தரும்-கொடுக்கும், எ-று.

(க-ரை.) மனத்தினன்மை செல்வத்தைத் தரும். இனத்தின் நன்மை புகழைத்தரும்-என்பதாம்

(வி-ரை.) மனநன்றாகுகை தானே அறமாகலால் அதனை ஆக்கந்தருமென்றும் புகழ் கொடுத்தற்குரிய நல்லோர்தாமே இனமாகலால் இனநலமெல்லாப்புகழுந் தருமென்றுஞ் சொல்லினர். [முன்னே மனநன்மை இனநன்மை பற்றிவருமென்பதை [illegible]கொண்டு அதை இயல்பாகவே யுடையார்க்கு இவ்வின நன்மை வேண்டுவதின்றென்பாரை நோக்கி அதுவே யல்லாமல் அப்படிப்பட்ட பலவும் தருமெனுதிரிபு அவர்க்கும் இது வேண்டுமென்பது இவ்விரண்டு பாட்டாலும் சொல்லப்பட்டது.] (எ)

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

(ப-ரை.) மனநலம் - மனநன்மையை, நன்கு (முன்னே) நல்வினையினாலே உடையாராயினும் (தாமே) உடையவராயிருந்தாலும், சான்றோர்க்கு - நிறைந்



தோர்க்கு, இனநலம் இன-நன்மையானது, ஏமாப்பு (அதற்கு) வலிமையாதலை, உடைத்து-உடையது, எ-று.

(க-ரை.) மனநன்மை யுடையவரானாலும் பெரியோர்க்கு இனநன்மை யுறுதியுடையதாம்-என்பதாம்.

(வி-ரை.) அந்நல்வினை உள்ளவிடத்தும் மனநலத்தை வளர்த்துவருதலால் அதற்கு வலியாதலுடைத்தாயிற்று. (அ)

மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(ப-ரை.) (ஒருவனுக்கு) மனநலத்தின் - மனநன்மையால், மறுமை-மறு, பிறப்பின்பம், ஆகும் - உண்டாம், மற்றஃதும் - அதற்கு அச்சிறப்புத்தானும், இனநலத்தின்-இனநன்மையால் ஏமாப்பு - வலிமை பெறுதலை, உடைத்து - உடையது, எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு மனநன்மையால் வருபிறப் பின்பமுண்டாம் இனநன்மையால் வலிமையுண்டாம்-என்பதாம்.

(வி-ரை.) மனநலத்தினது மறுமையொன்பது மறுமையைத் தருவது மன நன்மையே வேறொன்று அன்று என்கிற மதத்தை உடன்பட்டுச் சொல்லியபடி [சிலவேளைகளிலே தமோகுணத்தினாலே மனநலம் வேறுபட்டாலும் நல்லினஞ் சிறந்த மறுமையினின்பத்தைத் தருவிக்குமென்று அதனிலைபெறச் செய்யுமாறு இதனாலே சொல்லப்பட்டது.] இவ்வைந்துபாட்டாலும் சிற்றினஞ்சேராமையினது சிறப்பு நல்லினஞ்சேர்தலாகிய எதிர்மறை முகத்தினாலே சொல்லியபடி அறிக. (௯)

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்

(ப-ரை.) ஒருவனுக்கு) நல்லினத்தினூங்கு நல்லினத்தின் மிகுந்த துணையும், சகாயமும், இல்லை, தீயினத்தினூங்கு மிகுந்த அல்லற் படுப்பதூஉம் துன்பந்தரும் பகையும், இல் இல்லை, எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு நல்லினத்தின் மிகுந்த துணையில்லை, தீய வினத்தின் மிகுந்த கேடில்லை என்பதாம்.

(வி-ரை.) ஊங்கு பின்னும் கூட்டப்பட்டது. நல்லினம் அறியாமையை நீக்கித் துயரப்படாமல் காத்தலால் அதனைத் துணையென்றும், தீயினம் அறிவை நீக்கித் துயரப்படச் செய்தலால் அதனைப் பகையென்றும் சொல்லினார். [இதனால் விதியும் எதிர்மறையும் சேர்த்துச் சொல்லப்பட்டன.] (௰)

## நாற்பத்தாறும் அதிகாரம் - சிற்றினஞ்சேராமை

முற்றிற்று

---

## நாற்பத்தேழாம் - அதிகாரம்.

# தெரிந்துசெயல்வகை.

அஃதாவது: அரசன் தான் செய்யுந் தொழில்களை ஆராய்ந்து செய்யுந் திறம் அச்செயல் பெரியாரைத் துணைக்கொள்ளுதல் பயனுடைத்தாயவிடத்து அவருடன் செய்யப்படுவதாகலால் இது சிற்றினஞ்சேராமையின் பின் வைக்கப்பட்டது.

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(ப-ரை.) தொழில் செய்யுமிடத்து அழிவதூஉம் (அப்போது) அதனுல், அழிவதையும், ஆவதூஉம் (அழிந்தால பின்னே) ஆவதையும், ஆகி - ஆய் ஏனது, வழிபயக்கும் - பிற்காலத்துத் தரும், ஊதியமும் - இலாபத்தையும் சூழ்ந்து-ஆராய்ந்து (உறவதாயின்) செயல்-செய்பக்கடவன், எ-று.

(க-ரை.) ஒருவனழிவதையு மாவதையு மிலாபத்தையு மாராய்ந்து தொழில்செய்பக்கடவன்-என்பதாம்.

(வி-ரை) உறுதலாவது செய்கிறபோது அழிவதின் ஆவது மிருந்து பிற்காலத்தும் வளர்ந்துவருதல். அழிவதில்லாமையால் பின்வரும் ஆக்கத்தை ஊதியமென்றூர் எனவே அவ்வூதியம் பெற்றால் செய்யும்போது அழிவதும் ஆவதும் ஒத்திருக்தாலும் விடலாகாதென்றதாயிற்று இரண்கோலத்திலும் பயனுடைமை தெரிந்து செய்யவேண்டு மென்பதாம். (௰)

தெரிந்த வினகதொடு தேர்ந்தெண்ணிச் சேய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில.

(ப-ரை) தெரிந்த (தம்மாலே) தெரிந்துகொள்ளப்பட்ட, இனத்தொடு - இனத்துடனே, தேர்ந்து (செய்யத்தகுந்தொழிலை) ஆராய்ந்து எண்ணி (பின்னே தாமேயும்) எண்ணி, செய்வார்க்கு - செய்து முடிக்கவல்ல அரசருக்கு, அரும்பொருள்-பெறுதற்கரிய பொருள், யாதொன்றும் இல்-இல்லை, எ-று.

(க-ரை.) கல்வினத்தோ டாராய்ந்து செய்யு மரசர்க்குப் பெறுதற்கரிய பொருளொன்றுமில்லை-என்பதாம்.

(வி-ரை.) தொழிலாவது-போர்க்குச் செல்லுகைமுதல் வெல்லுகை முடிவாகிய தொழில், பொருள்களுக்கு ஏதுவாகிய அதனில் அருமையால் அரிய பொருள்களெல்லாம் எளிதிலே பெறுவரென்பதாம். [இவை இரண்பாட்டா லும்செய்பத்தகுந் தொழிலும் அது செய்யும்விதமும் சொல்லப்பட்டன.] ()

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

(ப-ரை.) ஆக்கங்கருதி(பின்பெறக்கடவதாகிய) லாபத்தைநோக்கிமுதல் (முன்பெற்றுள்ள) முதலையும், இழக்கும் இழத்தற்கு ஏதுவாகிய செய்வினை அறிவுடையார்-விவேகமுள்ளவர், ஊக்கார்-மேற்கொள்ளார், எ-று.

சஎ - ஆம் - அதி - தெரிந்துசெயல்வகை. ௨௨௩.

(க-வை.) அறிவுடையோர் இலாபத்தை நினைத்து முதலிழக்குந் தொழிலைச்செய்யார்-என்பதாம்.

(வி-வை.) ஆக்கமேயன்றி முதலிழக்குந்தொழில்களாவன, வலியும், காலமும், இடமும், அறியாமல் பிறர்தேசத்தைப் பிடிக்கப்போய்த் தந்தேசத்தையும் இழத்தல்போல்வன உம்மை வருவிக்கப்பட்டது, முன்செய்தவந்த வினையாவினு மென்றற்குச் செய்வினையென்றார். (௩)

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

(ப-வை.) இளிவென்னும் (தமக்கு) இளிவரவென்னும், ஏதப்பாடு-குற்றமுண்டாதலை, அஞ்சுபவர்-அஞ்சுவோர், தெளிவிலதனை (இனத்தோடும் தனித்தும்ஆராய்ந்து) துணியப்படாததொழிலை தொடங்கார் - தொடங்கமாட்டார், எ-று.

(க-வை.) குற்றத்திற் கஞ்சும் பெரியோர் துணியப்படாத தொழிலைச் செய்யார்-என்பதாம்.

(வி-வை.) தொடங்கினால் நடுவிலேயும் விடக்குதல் கூடாமையால் தொடங்காரென்றார், இளிவரவு - அத்தொழிலால் பின்னே அழிவை அடைந்தவிடத்து அதன்மேலும் அறிவும் மானமும் இலரென்று உலகத்தார் இகழுமிகழ்ச்சியாம் அது நிச்சயமாக உண்டாமாதலால் தெளிவுள்ள விடத்துத் தொடங்குக வென்பதாம். (௪)

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு

(ப-வை.) வகை (செய்யத்தக்கும்) விதங்களையெல்லாம், அறச்சூழாது-முற்றவெண்ணாமல் (சிலவெண்ணிய வளவிலென்றபடி) எழுதல் - (அரசன் பகைவர்மேலே) செல்லுதல், பகைவரை - அப்பகைவரை; பாத்தி - வளருநிலத்திலே, படுப்பது-நிலைபெறச்செய்வது, ஓராறு-ஒருவழியாம், எ-று.

(க-வை.) அரசன் யோசியாமற் பகைவர்மேற் செல்லப் பகைவரை நிலைபெறச்செய்தலாம்-என்பதாம்.

(வி-ரை) வகையாவன; வலி, காலம், இடமென்கிற இவைகளால் தனக்கும் பகைவர்க்கும் உண்டாகிய நிலைமைகளும், தொழிலைத்தொடங்கும் விதமும் அதற்குவரும் இடையூறுகளும், அவைகளை நீக்கும்விதமும் அவரை வெல்லும்விதமும், அதனாலேபெறும் பயனும் முதலானவை சில குறைந்தாலும் பகைவர்க்கு இடமாம். ஆதலால் முற்றப்பெற எண்ணவேண்டு மென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் விடத்தகுந்தொழிலும் விடாதவிடத்து உண்டாம் இழுக்கும் சொல்லப்பட்டன.]

செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

**௪௬௬ ௪௭ - ஆம் - அதி - தெரிந்துசெயல்வகை.**

(ப-ரை) (அரசன் தனது தொழில்களிலே) செய்தக்கவல்ல - செய்யத்தகாதவைகளை, செய-செய்தவால், கெடும்-கெடுவான் (இனி அதனாலே மாத்திரமல்லாமல்) செய்தக்க-செய்யத்தக்கவைகளை, செய்யாமையானும் - செய்யாமையினாலும், கெடும்-கெடுவோன், எ-று.

(க-ரை.) அரசன் செய்யத்தகாதவற்றைச் செய்தாலும் செய்யத்தக்கவற்றைச் செய்யாமையாலுங் கெடுவான்-என்பதாம்.

(வி-ரை.) செய்யத்தகாதவை - பெருமுயற்சியை யுடையவையும், செய்தாற் பயனில்லாதவையும், பயன்சிறிதானவையும், ஐயமானவையும், பின்னே துயரம் விளைப்பவையும் ஆம், செய்யத்தக்கவை முன் சொ லப்பட்டவைகளுக்கு எதிரானவை இனிச்செய்தல் செய்யாமைகளால் அறிவு, ஆண்மை, பெருமை, என்கிற மூவகைப்பட்ட ஆற்றல்களிலே - பொருளும் படையும் எனவிருவகைப்பட்ட பெருமையான தகைந்தவைகளுக்கு எளியவனாவான். ஆதலால் இரண்டும் கேட்டிற்குவ தவாயின [இதனால்செய்யத்தக்கவைகளைச் செய்துவிடத் தக்கவைகளை விடுகவென்று இருவகையும் உடன் சொல்லப்பட்டன.] (௬)

எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு

(ப-ரை.) கருமம்- செய்யத்தக்க)தொழிலும், எண்ணி (முடிக்கும்) உபாயத்தை)எண்ணி, துணிக - தொடங்கக்கடவன், துணிந்தபின் - தொடங்கியபின், எண்ணுவம்-எண்ணக்கடவோமென்பது இழுக்கு குற்றமாகலால், எ-று.

(க-ரை.) இராசன் செய்தொழிலை முடிக்கு முபாயமாகவெண்ணிச் செய்யக்கடவன், தொடங்கியபின் னெண்ணுதல் குற்றம்-என்பதாம்.

(வி-ரை.) உபாயமாவது - கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறு படுத்தல், ஒறுத்தல், என்பன. இவற்றை வடநூலார்-தானம், சாமம், பேதம், தண்டம், என்பர், இவையெல்லாம் எண்ணாது தொடங்கில் அத்தொழில் பகைவனால் விலக்கப்பட்டு முடியாமையாலும், மேலே விடுதல் கூடாமை யாலும், அரசன்பின் துயரப்படுவோனாதலால் இழுக்கென்றார். செயத்தக்க வையும் உபாயம் அறிந்து தொடங்கவேண்டுமெனபதாம். (எ)

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(ப-ரை.) ஆற்றின் - முடியுமுபாயத்தால், வருந்தா - வருத்தம் (கருமத் தைக்குறித்து) வருந்தாதமுயற்சியானது, பலர்நின்று (துணைவர்) பலர்நின்று, போற்றினும் (புரைபடாமல்) காப்பினும், பொத்துப்படும்-புரைபடும், எ-று.

(க-ரை.) முடியு முபாயத்தால் வருந்தா முயற்சியானது பலர் காத்தலும் குற்றம் படும்-என்பதாம்.

## சஎ - ஆம் - அதி - தெரிந்துசெயல்வகை. உஉ௫

(வி-ரை.) முடியு முபாயத்தாலே முயலலாவது: பொருளாசைக்கார னிடத்தே கொடுத்தலையும், நடுநிலையாளன், சோம்பலாளன், பிறரோடுபோ ர்செய்து நொந்தவன், இவரிடத்தே இன் சொல்லையும், துணைப்படையா ளன் தன் பகுதியோடு பொருந்தாதவன்; இவரிடத்தே வேறுபடுத்தலையும் இவைகளின்வழி வாராதவிடத்து இவரிடத்தேயும், நம்பக்கூடாத கீழ்மக்க ளிடத்தேயும், ஒறுத்தலையும், செய்துவெல்லும் வழியால் முயற்சிசெய்தலா ம். புரைபடுதல் - நன்மையைத்தாராது தீமையைத்தருதல், உபாயத்தின் சிறப்புச்சொல்லியபடி. (அ)

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(ப-ரை) (வேற்றரசரிடத்து) நன்று-நல்லவுபாயத்தை, ஆற்றலுள்ளும் செய்தலுள்ளும், தவறு-குற்றம், உண்டு-உண்டாம், அவரவர் - அவரவரு டைய பண்பு-குணங்களை, அறிந்து-(ஆராய்ந்)தறிந்து, ஆற்றாக்கடை - (அ க்குணங்களுக்கு இசையச) செய்யாவிடத்து, எ-று.

(க-ரை.) அவரவர்குணங்களை யறிந்திசையச் செய்யாவிடில் நன்மை செய்தலுள்ளும் குற்றமுண்டாம்-என்பதாம்.

(வி-ரை) நல்லஉபாயம் கொடுத்தலும் இன்சொற் சொல்லலும் ஆம்அவரவர் குணங்களை யறிந்து செய்யாமையாவது அவைகளுக்கு உரியவரல்லாவிடத்தே செய்தல் தவறுதொழின் முடியாமை. கசு

என்னாதவெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(ப-ரை.) தம்மொடு - தமதுநிலைமையோடு, கொள்ளாத-பொருந்தாதஉபாயங்களை-(அரசர்தொழில் முடித்தற் பொருட்டுசெய்வாராயின்)உலகு உலகமானது, கொள்ளாது-அங்கீகரியாது-(இகழு மென்றபடி)(ஆதலால்) எள்ளாத-(அவ்வுலகத்தால்) இகழப்படாதவுபாயங்களை, எண்ணி-நாடி,செயல்வேண்டும் - செய்யவேண்டும், எ-று.

(க-ரை.) அரசர் பொருந்தாத வுபாயங்களைச் செய்வாராஞ லுலகமேற்றுக்கொள்ளாது - என்பதாம்.

(வி-ரை.) தமது நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது தாம் வலியராயிருந்துக்கொண்டு மெலியார் செய்தற்குரியதான சாமபேதங்களைச் செய்தலும், மெலியராயிருந்துக்கொண்டு வலியார்செய்தற்குரிய தண்டம் செய்தலும் ஆம். இவை அறிவிலார் செயல்களாதலால் உலகங்கொள்ளாதென்றார். [இவைநான்குபாட்டாலும் செய்யப்படுந்தொழில்களுக்கு உபாயமும் அதனுரிமையும் சொல்லப்பட்டன.] ௪0

நாற்பத்தேழாம்-அதிகாரம்-தெரிந்துசெயல்வகை
முற்றிற்று.

---

29

## நாற்பத்தெட்டாம் அதிகாரம்

# வலியறிதல்.

அஃதாவது: அவ்வுபாயங்களுள் தண்டஞ்செயக்குறித்த அரசனவன் நால்வகை வலிமைகளையும் அளந்து அறிதலாம். அதிகார முறைமையும் இதனுலே விளங்கும்.

வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்

துணைவலியுந் தூக்கிச் செயல்.

(ப-ரை.) வினைவலியும்-(தான்செயக்கருதிய) தொழிலது வலிமையை யும், தன்வலியும்-(அதனைச்செய்துமுடிக்கும்) தனது வலிமையையும், மாற றான்வலியும்-(அதனை விலக்கும்) பகைவனது வலிமையும், துணைவலியும்-(இருவர்க்கும்) துணையாவோரது வலிமைகளையும், தூக்கி-ஆராய்ந்து-(தன துவலிமை மிகுமாயின்) செயல்-(அத்தொழிலைச்) செய்யக்கடவன், எ-று.

(க-ரை.) தொழில் வலிமையையும், தன்வலிமையையும், பகைவன்வலி மையையும், துணைவலிமையையும், ஆராய்ந்து தன்வலி மிகுமாகி லரசனத் தொழிலைச்செய்யக்கடவன்- என்பதாம்.

(வி-ரை.) இக்கால்வகை வலிகளும், தொழில்வலி-கோட்டையைவளை த்தலும், பிடித்தலும் முதலாகிய தொழில்களாலும், மற்றவை மூவகை யாற் றல்களாலும், கூறப்படும். ஆராயப்படும் தன் வலிமைமிகுந்த விடத்துச்செ ய்கவென்றதனால் தோற்றல் நிச்சயமாகிய தன்வலிமைக்குறைவினிடத்தும் வெல்லுதல் ஐயமாகிய தன்வலிமையும் அவன்வலிமையும் ஒத்தவிடத்தும் ஒழிகவென்றதாயிற்று.

ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(ப-ரை.) ஒல்வது-(தமக்குச்) செய்யக்கூடுந் தொழிலையும், அறிவது-(அதற்கு) அறியவேண்டும் வலியையும், அறிந்து-தெரிந்து, அதன்கண்-அ தனிடத்து, தங்கி-(மனமொழிகளை எப்போதும்) வைத்து, செல்வார்க்கு-(பகையின்மேலே) செல்வார்க்கு, செல்லாதது-முடியாதபொருள், இல்-இல்லை.

(க-ரை.) செய்யக்கூடுந் தொழிலையு மறியவேண்டும் வலியையுமறிந்து செய்யு மரசர்க்கு முடியாத பொருளில்லை - என்பதாம்.

(வி ரை.) இங்கே அறிவது துணைவலியாம், [எல்லாப்பொருள்களையும் எளிதிலே அடைவரென்பதாம். இவை இரண்டுபாட்டாலும் வலியின் பகு ப்பும், அதனை அறிந்து ...பகைமேற்செல்வோர் பெறும்பயனும் சொல்லப்ப ட்டன.] ௨

உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(ப-ரை.) உடைத்-(தலைவனுதலை) யுடைய, தம்வலி-தமது வலிமையின ளவை, அறியார்-தெரிந்துகொள்ளாதவராகி, ஊக்கத்தின்-மனவெழுச்சி



யால், ஊக்கி-(தம்மின் வலியவரோடு) போர்செய்யத்தொடங்கி (அவர்வரு த்தலால் அதுசெய்து முடிக்கப்பெறுமல், இடைக்கண்-நடுவிலே முரிந்தார் கெட்டவரசர், பலர்-(உலகத்துப்) பலராவர், எ-று.

(க-ரை.) தமது வலிமையைத்தெரிந்து கொள்ளாது வலியவரோடு போர்செய்து இடையில் புறங்கொடுத்த வரசர்பலர் - என்பதாம்.

(வி-ரை.) மூவகை யாற்றல்களுள்ளும் சிறப்பினதாகிய அறிவையுடை யவர் சிலராதலால் முரிந்தார் பலரென்றார். அதனால் தம்வலிமை அறிந்தே தொடங்குகவென்பது குறைந்து நின்றது.

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(ப-ரை.) ஆங்கு-அடல்வேந்தரிடத்து, அமைந்து-பொருந்தி, ஒழுகா ன்-நடவாதவனாகியும், அளவு-(தன்வலி) யளவை, அறியான்-அறியாதவனா கியும், தன்னை வியந்தான்-மெச்சிக்கொண்டு-(அவரோடு பகைத்த) அரசன் விரைந்து-விரைவாக, கெடும்-கெடுவான், எ-று.

(க-ரை.) தன் வலியினளவை யறியாது தன்னைப்புகழ்ந்த வரசன்கெ டுவான் - என்பதாம்.

(வி-ரை.) பகைத்தல் வியத்தலாலாதலின் வியந்தானென உபசரித் தாம் நட்பாய் நடத்தலாவது: வலிமையறிந்து பகைத்தலாவது: அயல்வேந் தரோடு செயத்தக்கதாயிருக்க, அஃது இல்லாமல் தான் மெலியவனாயிருந் துகொண்டு அவரோடு பகைத்துக்கொண்டு ஒருபொழுதும் நிலையில்லாமல் வி ரைந்து கெடுமென்றார் இவை இரண்டோட்டாலும் தன்வலிமையறியாத விடத்து உண்டாகும் இழுக்குச்சொல்லப்பட்டது.

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(ப-ரை.) பீலி-மயிலிறகை, பெய்-ஏற்றப்பெற்ற, சாகாடும்-பண்டியும்; அச்சிறும்-அச்சிமுறியும்; அப்பண்டம்-அம்மயிலிறகை-(அது சுமக்குமளவி னல்லாமல்) சாலமிகுத்து-மிகவும் அதிகப்படுத்தி, பெயின்-ஏற்றினல்,

(க-ரை.) மயிலிறகை ஏற்றப்பட்ட பண்டியு மச்சிமுறியும், அவ்விறகை யதிகமாகவேற்றினல் - என்பதாம்.

(வி-ரை) உம்மை பண்டியினது வலிமையையும், மயிலிறகினது மெலி மையையும் காட்டிநின்றது. எளியரென்று பலரோடும், பகைகொள்வோன் தான்வலியனு யிருந்தாலும், அவர் கூடியவிடத்தித் வலியழியா னென்னும் பொருள்பட நிற்கையால், இது பிறிதுமொழிதல் ணி. [அது செயலாகா தென்றமையின், இதனல் பகைவன்வலியும் அவ்வ னுணை-வலியும் அறியதா விடத்துப்படுங் குற்றஞ் சொல்லப்பட்டது.] ௬

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

## உஉஅ சஅ - ஆம் - அதி - வலியறிதல்.

(ப-ரை.) கொம்பர்-(ஒருமரக்) கொம்பினது, நுனி-நுனியிலே, ஏறி னர்-ஏறிநின்றவர், அஃது-அவ்வளவினை, இறந்து-கடந்து, ஊக்கின்-(மே லும்ஏற) மனவெழுச்சி கொள்ளின் (அவ்வெழுச்சி) உயிர்க்கு(அவ)ருயிர்க் கு, இறுதியாகிவிடும்-முடிவாகிவிடும், எ-று.

(க-ரை.) நுனிக்கொம்பிலேறினவர் அவ்வளவைக்கடந்தேறுவராகி லவருயிர்க்கு, முடிவுவரும் - என்பதாம்.

(வி-ரை.) இறுதிக்கு ஏதுவாமதனை இறுதியென்றார். பகைவற்மேற் போர்க்குச் செல்லத்தொடங்கித் தன்னாற்செல கூடியமட்டுஞ்சென்று நின்ற வர்பின் அவ்வளவிலே நில்லாமல் மனவெழுச்சியினாலே மேலுஞ் செல்லு வானாயின் அவ்வெழுச்சியானது தொழில் முடிதற்கு ஏதுவாகாமல் அவ னுயிர் முடிதற்கு ஏதுவாகும் என்கிறபொருள்பட நிற்கையினாலே இதுவும் அவ்வணி. [அளவறிந்து நிற்கவேண்டுமென்றமையின் இதனல் தொழில் வலிமை அறியாதவிடத்து உண்டாங் குற்றஞ்சொல்லப்பட்டது.] கூ

ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்

போற்றி வழங்கு நெறி.

(ப-ரை.) ஆற்றின்-(கொடுக்கும்) வழியினாலே, அளவு-(தனக்குள்ள பொருளி) னளவை, அறிந்து-தெரிந்து, ஈக-(அதற்கு ஏற்கக்) கொடுக்கக்கடவன், அது-அக்கொடுத்தலானது, பொருள்-பொருளை, போற்றி-வழங்கு நெறி காப்பாற்றிக்கொண்டு நடக்கும் வழியாம். எ-று.

(க-ரை.) தனக்குள்ள அளவறிந்து கொடுக்கக்கடவன் அக்கொடை பொருளைக்காப்பாற்றும் வழியாம் - என்பதாம்.

(வி-ரை.) கொடுக்கும்வழி - இயற்றலென்னுங் குறளுரையிற் சொல்லப்பட்டது. அளவுக்கேற்பக் கொடுத்தலாவது: ஒன்றனைநாலுபகுதியிட்டு அவற்றுள் இரண்டை-தன் செலவுக்காக்கி, ஒன்றைப் பின்னை அபத்து வந்தவிடத்து அதை நீக்குதற்கு வைப்பாக்கி, மற்றொன்றைக்கொடுத்தல் காப்பாற்றிக்கொண்டு நடத்தலாவது, ஒருவர்க்குமா நட்பில்லாதவரைத் தம்மோடு நட்புண்டாக்கிக்கொண்டு நடத்தல். முறையாலே செலவு சுருங்கினால் பொருள் ஒருகாலும் நீங்காதென்பதாம்.

ஆகா றளவிட் டிதாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(ப-ரை.) ஆகாறு-(அரசனுக்குப்பொருள்) வருகின்ற வழியானது, அளவு-அளவினாலே, இட்டிதாயினும்-சிறியதாயிருந்தாலும், கேடு-(அதனாலே) கெடுதல்இல்லை, போகாறு-போகின்றவழி-(அளவு) அளவினாலே, அகலாக்கடை-(அதிலும்) விரியாதாயின், எ-று.

(க-ரை.) அரசனுக்குப் பொருட்செலவுங்காவிடில் அப்பொருள்வரவு சிறிதாகிலுங் கெடுதியில்லை - என்பதாம்.

(வி-ரை.) பொருளென்பது-அதிகாரத்தினாலே வருவிக்கப்பட்டது. வரவும் செலவும் தம்முள் ஒத்திருந்தாலும் கேடில்லை யென்பதாம்.

## சஅ - ஆம் - அதி-காலமறிதல். உஉஅ

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

(ப-ரை) அளவு (தனக்குள்ளபொருளி னளவை, அறிந்து-தெரிந்து,

(அதற்கேற்க) வாழாதான்-வாழமாட்டாதவனது, வாழ்க்கை-வாழ்க்கைக ளானவை, உளபோல-உள்ளவைபோலத் (தோன்றி) இல்லாகி (மெய்ம்மை யால்) இல்லையாகி, தோன்றா (பின்பு) அத்தோற்றமும் இல்லாமல், கெடும்-அழியும், எ-று.

(க-ரை.) தனக்குள்ள பொருளளவை யறிந்துவாழாதவன் வாழ்க்கை உள்ளவைபோலத் தோன்றியழியும் - என்பதாம்.

(வி-ரை.) அவ்வளவிற்கேற்க வாழ்தலாவது: முதலிலே சுருக்கக்கூடா மலிருந்தால் அதற்குச் சமமாகவாவது கொடுத்தும், அனுபவித்தும், வாழ்தல். ஆரம்பத்திலே கேடு வெளிப்படாமையால் உளபோலத் தோன்றின வெனப்பட்டது. முதலினும் செலவு மிகுந்தால் வரும் குற்றம் சொல்லியபடி.

உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(ப-ரை.) உளவரை (தனக்கு) உள்ளவளவை, தூக்காத - ஆராயாமைக் கேதுவாகிய, ஒப்புரவாண்மை-உபகாரமுடைமையால், வளவரை (ஒருவனது) செல்வத்தினளவு, வல்லைக்கெடும்-விரைவாகக்கெடும், எ-று.

(க-ரை.) தனக்குள்ளவற்றை யாராயாத உதவியாலே செல்வத்தளவு கெடும் - என்பதாம்.

(வி-ரை.) உபகாரமே யாயினும் மிகலாகா தெனலால் இதுவுமது. [இவை நான்குபாட்டாலும் மூவகை யாற்றலுள் பெருமையின் பகுதியாகிய பொருள் வலியறிதல் சிறப்பு நோக்கி வகுத்துச் சொல்லப்பட்டது.] ௧௦

நாற்பத்தெட்டாம்-அதிகாரம்-வலியறிதல்.
முற்றிற்று.

---

## நாற்பத்தொன்பதாம்-அதிகாரம்.

# காலமறிதல்.



அஃதாவது: வலிமையினாலே மிகுதியுடையவனும் பகைவன்மேல் போர்க்குச் செல்லுமரசன் அச்செல்லுதலுக்கு ஏற்ற காலத்தினை அறிதல். அதிகாரமுறைமையும் இதனாற்றானே விளங்கும்.

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்

வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

(ப-ரை.) காக்கை - காகமானது, கூகையை (தன்னின் வலிதாகிய) கோட்டானை, பகல்-பகற்பொழுதில், வெல்லும், (அதுபோல்) இகல்-பகை



வரை, வெல்லும்-வெல்லக் கருதுகின்ற, வேந்தர்க்கு-அரசர்க்கு, பொழுது (அதற்கேத்த) காலம், வேண்டும், எ-று.

(க-ரை.) காகம் கோட்டானைப் பகலில் வெல்லும்-அதுபோல அரசர் பகைவரை வெல்லக் காலம்வேண்டும்-என்பதாம்,

(வி-ரை.) காலமல்லாதவிடத்தே வலிமையினாலே பயனில்லை யென்பது விளங்க நின்றது. இனிக்காலமாவது வெம்மையும் குளிர்ச்சியும் சமமாய் நோய்செய்யாமல் நீரும் உணவு முதலானவைகளை யுடைத்தாய்ச் சேனை வருந்தாமல் செல்லுந் தன்மையதாம். (இது எடுத்துக்காட்டுவமையணி) [இதனால் காலத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.] க

பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(ப-ரை.) (அரசன்) பருவத்தோடொட்ட-காலத்தோடுபொருந்த, ஒழுகல் (தொழில்செய்து) நடத்தல், திருவினை (ஒருவரிடத்தும் நில்லாது நீங்குஞ் செல்வத்தை தீராமைதன்னிடத்து நீங்காமல் ஆர்க்கும் கட்டுவதாகிய) கயிறு-கயிறாகும். எ-று,

(க-ரை.)) காலமறிந்து தொழிலை நடத்தல், செல்வத்தைக் கட்டுங்கயிறும்-என்பதாம்.

(வி-ரை) காலத்தோடு பொருந்துதல் - காலந்தப்பாமற் செய்தலாம். தொழில் கைகூடிவருவதலால் அதனால் உண்டாகும் செல்வம் எக்காலும் நீங்காதென்பதாம்.

அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(ப-ரை.) அருவினை யென்ப (அரசராற்) செய்தற்கரிய தொழில்களென்று சொல்லப்படுமவை, உளவோ-உண்டோ, கருவியால் (அவைகளை முடித்தற்காகும்) சாதனங்களுடனே, காலம்-செய்தற்காகும், காலத்தை, அறிந்து-தெரிந்து, செயின்-செய்தால். எ-று.

(க-ரை.) காலமறிந்துசெய்தால் அரியதொழில்களுளவோ-என்பதாம்.

(வி-ரை.) கருவிகள்-மூவகையாற்றல்களும், நால்வகை உபாயங்களும் ஆம். அவை உண்டாகிய விடத்தும், காலம் வேண்டுமென்பது அறிவித்தற்குக் கருவியாலென்றார். இப்படி செய்வார்க்கு எல்லாத் தொழில்களும் எளிதின் முடியுமென்பதாம்.

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(ப-ரை.) (ஒருவன்) ஞாலம்-பூமிமுழுதையும், கருதினும் (தானே ஆள நினைத்தாலும் (அது) கைகூடும்-கைக்குள்ளாம், காலம் - காலத்தை,கருதி



அறிந்து, இடத்தால்-இடத்தோடு பொருந்த, செயின் (அதற்குச் செய்யும் தொழிலைச்) செய்வானாயின், எ-று.

(க-ரை.) அரசன் காலமறிந்து தொழில்செய்தால் உலகெல்லாமாள நினைத்தாலும் கைவசப்படும்-என்பதாம்.

(வி-ரை) இடமுண்டாகிய விடத்தும் காலம்வேண்டுமென்பதற்குஇடத்தானென்றார். இப்படி செய்வார்க்குக் கைகூடாதவையும் கைகூடுமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் காலமறிதலின் பயன்சொல்லப்பட்டது.

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(ப-ரை.) ஞாலம் - பூமியெல்லாம், கலங்காது - தப்பாது,கருதுபவர்-(கொள்ள)நினைக்குமரசர், (தம்வலிமிகுமாயினும் அதனை நினையாமல்காலம்-அதற்கு ஏற்ற) காலத்தையே, கருதி-நினைத்து,இருப்பர் (அதுவருமளவும்) இருப்பர், பகைமேற் செல்லார், எ-று.

(க-ரை.) பூமிமுற்றுமாள நினைக்குமரசர் பகைவரை வெல்லக் காலம் பார்த்திருப்பார்-என்பதாம்.

(வி-ரை) அதை நினையாமற் சென்றால் பொருளும் படையும்ஆகியஇரு வகைப் பெருமைகளும்தேய்ந்து வருந்துவராகலால் இருப்பரென்றார். இருத்தலாவது-நட்பாக்கல், பகையாக்கல், மேற்செல்லுதல், இருத்தல், பிரித்தல், கூட்டல், என்கிற அறுவகைக் குணங்களுள்மேற் செல்லுதலுக்கு, எதிராகிய தொழில், [இதனாற் காலம் வாராதவிடத்தே செய்யவேண்டியது சொல்லப்பட்டது.] ௬

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(ப-ரை.) ஊக்கமுடையான் மிகுந்த வலிமையுடையவரசன், ஒடுக்கம் (பகைமேற்செல்லாது) காலம் பார்த்திருக்கின்ற விருப்பு, பொருதகர்-போர்செய்கின்ற ஆட்டுக்கடா [illegible] (தன் பகைகெடப்) பாய்தற்பொருட்டு, பேருந்தகைத்து-பின்வாங்குந் தன்மைத்து. எ-று.

(க-ரை.) வலிமையுள்ள [illegible] பின்வாங்குகல் வெல்லும் பொருட்டாம்-என்பதாம்.

(வி-ரை.) உபமானத்திலே தாக்கற்கென்று சொல்லப்பட்டிருக்கையினாலே உபமேயத்திலே வெற்றிபெறுதற் கென்பது கொள்க. [இதனால் அவ்விருத்தலின் சிறப்புச்சொல்லப்பட்டது.

பொள்ளென வாங்கே புறம்வேரார்காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

## ௪௮௭ - ஆம் - அதி - காலமறிதல்.

(ப-ரை.) ஒள்ளியவர்-அறிவுடைய வரசர், ஆங்கே (பகைவர் தீங்குசெய்த) அப்பொழுதே (அவரறிய)பொள்ளென-விரைவாக, புறம்வேரார்-புறத்திலே கோபஞ்செய்யார், காலம் (தாம் அவரை வெல்லுதற்கேற்ற)காலத்தை, பார்த்து-அறிந்து (அது வருமளவும்) உள்வேர்ப்பர்-உள்ளே கோபஞ்செய்வார். எ-று.

(க-ரை.) அறிவுடைய வரசர் கோபத்தைப் புறங்காட்டார் காலம் வருமளவு மக்கோபத்தை யுள்வைத்திருப்பார்-என்பதாம்.

(வி-ரை.) பகைவரறியக் கோபஞ்செய்தவிடத்தே அவர் தம்மைக்காத்துக் கொள்வாராகலால் புறம் வேராரென்றும் கோபஞ்செய்யாமல் அடக்குதல் கூடாமையால் உள்வேர்ப்ப ரொள்ளியரென்றும் சொல்லினர். எ

செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(ப-ரை.) (வெல்லக்கருதிய அரசர்) செறுநரை-பகைவரை, காணின்-கண்டால், சுமக்க (அவர்க்கு முடிவுகாலம் வருமளவும்)பணியக்கடவர்,இறுவரைகாணின்-அக்காலம்வந்து முடியுமிடத்து, தலை- (அவரது) தலை, கிழக்காம்-கீழ்விழும். எ-று.

(க-ரை.) அரசர் பகைவரைக்கண்டா லவர்க்கு முடிவுகாலம் வருமளவும் பணியக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) பகைமை திரும்படி மிகவும் வணங்குகவென்றற்கு சுமக்கவென்றும் அப்படி வணங்கவே அவர் தம்மைக்காத்துக் கொள்ளாமையினலே தப்பாமல் கெடுவாரென்றற்கு கிழக்காந் தலையென்றும் சொல்லினர். [இவ்விரண்டு பாட்டாலும் காலம் பார்த்திருக்கு மிடத்துப் பகைமைதோன்றாமல் இருக்கவேண்டு மென்பது சொல்லப்பட்டது.] அ

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(ப-ரை.) (பகையைவெல்ல நினைக்கின்ற அரசர்) எய்தற்கரியது (தம்மாலே பெறுதற்கரிய காலம், இயைந்த-று. [illegible]-வந்து கூடியக்கால், அந்நிலையே-அது நிற்குமளவிலே, செய்தற்[illegible]ல் அரியதொ[illegible]ன்னே) செய்தற்கு அரியவையாயிருந்த தொழில்களை, செ[illegible]டவர். எ-று.

(க-ரை.) அரசர் பகையை வெ[illegible]ம், காலம் [illegible] வாய்த்தா லப்பொழுதே யத்தொழிலைச் செய்யக்கடவர்-என்ப[illegible]

(வி-ரை.) ஆற்றல் முதலானவைகளாலே செய்துகொள்ளக்கூடாததாயிருக்கையால் எய்தற்கரிய தென்றும் அது தானேவந்து கூடுதல் அரிதாகலால் இயைந்தக்காலென்றும் கூடிய விடத்துப் பின்னில்லா தோடிப்போமாதலால் அந்நிலையே யென்றும், அது பெறுதவிடத்தே செய்யக்கூடாமையால் செய்தற்கரியவென்றும் சொல்லினர். [இதனல் காலம் வந்தவிடத்து விரைந்து செய்கவென்பது சொல்லப்பட்டது.] க

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(ப-ரை.) கூம்பும் பருவத்து-தொழிலின்மேலே செல்லாதிருக்க வே ண்டுங் காலத்திலே, கொக்கொக்க-கொக்கு இருக்கு மாறுபோல் இருக்கக் கடவன், மற்றுச் சீர்த்தவிடத்து-மற்றைச் (செல்லுங்காலம்) வாய்த்தவிட த்து, அதன்குத்தொக்க-அது தப்பாமற் செய்துமுடிக்கு மாறுபோல் தப் பாது செய்து முடிக்கக்கடவன், எ-று.

(க-ரை.) அரசன் பகையைவெல்லக் காலம்வாய்க்கா விடத்துக்கொக் கடங்கல்போலிருக்கக் கடவன் வாய்த்தவிடத்து அதன் குத்தைப்போல் வெல்லக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) மீன் கொள்ளுதற்கு இருக்குமிடத்து அது வருமளவும்அது தன்முயற்சியை முன்னறிந்து தப்பிப்போகாமற்பொருட்டு உயிரில்லது போல் இருக்குமாகலாலும்வந்தவிடத்துத் தப்பிப்போவதற்குமுன்னுகவே விரைந்து குத்துமாதலாலும் இருத்தலுக்கும் செய்தலுக்கும் கொக்கு உவ மானமாயிற்று. கொக்கொக்க வென்றூராயினும் அது கூம்புமாறுபோற் கூம்புகவென்றும், குத்தொக்க வென்றூராயினும் அது குத்துமாறுபோற் குத்துக வென்றும் உரைக்கப்படும். [இதனல் இருத்தலுக்கும், தொழில் செய்தலுக்கும், இலக்கணம் சொல்லப்பட்டது.]

நாற்பத்தொன்பதாம்-அதிகாரம்-காலமறிதல்.

முற்றிற்று.

---

## ஐம்பதாம் அதிகாரம்.

# இடனறிதல்.

அஃதாவது: வலியும் காலமும் அறிந்து பகைமேற் செல்லுவோன் தா ன் வெல்லுதற்கு ஏற்ற நிலத்தினை அறிதலாம் அதிகாரமுறைமையும் இத னூற்றூனே விளங்கும்.

தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று

மிடங்கண்ட பின்னல் லது.

(ப-ரை.) முற்றும் (பகைவரை) வளைத்துக் கொல்வதற்காகும், இடம்-இரிடத்தை, கண்டபின்னல்லது-பெற்றபின்னல்லாமல், எவ்வினையும்-யாதொருதொழிலையும், தொடங்கற்க அவரிடத்துத்) தொடங்கா திருக்கக்கடவர், எள்ளற்க (அவரைச்சிறியவரென்று) இகழாதிருக்கக்கடவர், எ-று.

(க-ரை.) அரசர் பகைவரை வெல்ல இடங்கண்டாலல்லது எத்தொழிலுஞ் செய்யாதிருக்கக்கடவர் அவரை இகழாதிருக்கக்கடவர் -என்பதாம்.

80

## ௫0 - ஆம் - அதி - இடனறிதல்.

(வி-ரை) அத்தகாவிடமாவது - வாயில்களாலும், மறைகளாலும், அப்பகைவர் வருதலும் போகுதலும் ஒழியும் வகை அரணைச்சூழ்ந்து ஒன்றற்கொன்று துணையாய்த் தமக்குள்ளே நலிவில்லாது பலபடைகள் இருப்பிற்கும் பதிவும் அகழும் முதலாகிய அரண்செய்யப்பட்ட அரசிருப்பிற்கும் ஏற்ற நிலக்கிடக்கையையும் உடையது அவ்விடத்தைப் பெற்றால் தொடங்குதலும், இகழ்தலும் செய்க வென்பதாம். க

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா<br>மாக்கம் பலவுந் தரும்.

(ப-ரை.) முரண்-மாறுபாட்டை, சேர்ந்த - மொய்ம்பினவர்க்கும், வலிமையை யுடையவருக்கும், அரண்-அரணை சேர்ந்து, ஆம்-ஆகின்ற, ஆக்கம் பெருக்கமானது, பலவும் - பலபயன்களையும், தரும்-கொடுக்கும், எ-று.

(க-ரை.) வலியவரசருக்கும் அரணைச் சேர்ந்தாகின்ற பெருக்கமானது பலபயன்களையுக் தரும் - என்பதாம்.

(வி-ரை) மாறுபாடாவது-பூமி பலவரசர் ஆளுதற்குப் பொதுவாயுள்ளதென்பது பொருத அரசாது மனதிலே தோன்றுவதாதலாலும், வலியுடைமை சொன்னவதனாலும், இது பகைவர்மேலே சென்ற அரசருக்கு ஆயிற்று, அரண்சேர்ந்து ஆகின்ற ஆக்கமும் இருக்கையால் இங்கே ஆக்கம் விசேஷிக்கப்பட்டது. ஆக்கமென்றது-அதற்கு ஏதுவாகிய வளைத்தலை அறுகொடுக்கும் பயன்கள். பகைவராலே தமக்கு நலிவில்லாமையும், தாம் நிலைபெற்று நின்று அவருக்கு நலிவுசெய்தலும் முதலானவை. உ

ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

(ப-ரை) ஆற்றாரும் - வலிமையில்லாதவரும், ஆற்றி - வலிமையுடையவராய், அடுப-வெல்வார், இடன் (அதற்கேற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து போற்றி (தம்மைக்) காத்துக்கொண்டு, போற்றார்கண்-பகைவரிடத்து செயின் (தொழிலை) செய்வாராயின், எ-று.

(க-ரை.) வல்லமையில்லா வேந்தரு மிடமறிந்து போர்செய்வாராகில் வெற்றிபெறுவர் - என்பதாம்.

(வி-ரை.) காத்துக்கொள்ளுதலாவது: பகைவரால் நலிவு வாராதிருக்கும்படி அரணாலும், மடையாலும் காத்தல், இப்படி தொழின்செய்வாராயின் முன்சொல்லப்பட்ட வலிமை யில்லாதிருந்தாலும் வெல்வரென்பதாம்

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(ப-ரை) இடன் (தாம்தொழில் செய்தற்கேற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து, துன்னியார்-சென்றவரசர், துன்னி (அரணைப்) பொருந்தின்று, செயின் (அத்தொழிலைச்) செய்வாராயின், எண்ணியார் (முன்புஅவ



ரைவெல்ல) எண்ணியிருந்த பகைவர், எண்ணம்-அவ்வெண்ணத்தை இழப்பர்-இழந்துவிடுவோர், எ-று.

(க-ரை.) அரசர் இடமறிந்து போர்செய்வாராகில் பகைவரெண்ணமுடியாது - என்பதாம்.

(வி-ரை) எண்ணப்பட்ட வெற்றியை எண்ணமென்றார். பகைவர்போர்செய்யாமல் தம்மைக்காத்துக் கொள்ளுதலால் எண்ணமிழப்பரென்றார். இதனால் அவர் பகைவர் தோற்பரென்பதாயிற்று. [இவை நான்கு பாட்டாலும் பகைவரது அரணின் புறத்து இறங்கற்கு ஆமிடமறிதல் சொல்லப்பட்டது.]

நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

(ப-ரை.) முதலை-முதலையானது, நெடும்புனலுள்-ஆழமுள்ள நீரிலானால், பிற-பிறவுயிர்களை யெல்லாம், வெல்லும்-வென்றுவிடும், புனலின்-அந்நீரினின்றும், நீங்கின்-நீங்கினால், அதனை-அதை, பிற-பிறவுயிர்களெல்லாம் அடும்-வெல்லும், எ-று.

(க-ரை.) முதலை நீரிலிருந்தால் எல்லாவுயிரையும் வெல்லும். அது அந்நீரைவிட்டால் மற்றவுயிர்களாலே தோல்வியடையும் - என்பதாம்.

(வி-ரை.) எல்லாரும் தமது இடத்திலே வலியராயிருப்பாரென்பது சொல்லப்பட்டது. [நிலையாத நீரினிடத்தே பிறவுயிர்கள் நிற்கமாட்டாமையால், அவையெல்லாம் முதலைக்கு எளியனவாகும். அவைசஞ்சரித்தற்குரிய நிலத்தினிடத்தே அம்முதலைச் சஞ்சரிக்க மாட்டாமையால், அவைகளுக்கெல்லாம் எளிதாமென்பது மேற்செல்லுமரசன் பகைவர்நிற்கமாட்டாத விடமறிந்து சென்றால் அவர் அவனுக்கு எளியவராவார். தான் நிற்கமாட்டாதவிடத்தே சென்றால் அவருக்கு அவன் எளியவனாவான் என்கிற பொருள்தோன்ற நின்றமையால் பிறிதுமொழிதலணி.]

கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

(ப-ரை.) கால்வல (நிலத்தில் ஓடுகின்ற) வலிமைபொருந்திய உருளைகளையுடைய, நெடுந்தேர்-பெரியதேர்களானவை, கடல்-கடலில் ஓடுகின்ற நாவாயும்-மரக்கலங்களும், நிலத்து-நிலத்தில், ஓடா-ஓடமாட்டாவாம், எ-று.

(க-ரை.) நிலத்திலோடுந் தேர்கள் கடலிலோடாவாம், கடலிலோடும் மரக்கலங்கள் நிலத்திலோடாவாம் - என்பதாம்.

(வி-ரை) ஓடுதற்கேற்ற காலும் பெருமையும் உடையதாயிருப்பினும் என்பது தோன்ற கால்வனெடுந்தேரென்றார் [இப்பாட்டு போர்க்குச் சென்றவன் பகைவரிடங்களை அறிந்து அவைகளுக்கேற்ற சாதனங்களால் தொழில்செய்ய வேண்டுமென்னும் பொருள்தோன்ற நிற்கையினாலே இதுவும் அவ்வணி.]

## ௨௯ ௫ - ஆம் - அதி - இடனறிதல்.

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

(ப-ரை.) (அரசர்) எஞ்சாமை (பகைவரிடத்துத் தொழில்செய்யும்வித ங்களை யெல்லாம்) குறையாமல், எண்ணி-ஆலோசித்து, இடத்தால்-இடத் தோடுபொருந்த, செயின்-செய்வாராயின் (அச்செயலுக்கு) அஞ்சாமைய ல்லால் (தமது) தைரியமல்லாமல், துணை (வேறொரு) துணைவேண்டா-வே ண்டுவதில்லை, எ-று.

(க-ரை.) குறைவில்லாதெண்ணி யிடமறிந்து போர்செய்தால் தைரிய மின்றி வேறுதுணைகள் வேண்டாவாம் - என்பதாம்.

(வி-ரை.) அத்தொழில் தவறுதலுக்கு ஏது இல்லாமையால், தைரிய முடையராய் நின்று முடித்தலல்லது துணை வேண்டாவென்றார். [இவைமூ ன்றுபாட்டாலும் போர்செய்தற்கு ஆமிடமறிதல் சொல்லப்பட்டது.] எ

சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடைய
னூக்க மழிந்து விடும்.

(ப-ரை.) உறுபடையான்-பெருஞ்சேனையையுடைய அரசன், சிறுப டையான்-சிறிய சேனையை யுடையவனது, செல்லிடம்-செல்லிடத்தை, சேரின் (அவனை அழிக்கநினைத்துச்) சேர்வனாயின் (அவனால்) ஊக்கம் (தன்) பெருமை, அழிந்துவிடும்-அழிவான், எ-று.

(க-ரை) நிறைசேனையையுடைய அரசன் குறைசேனையையுடைய அர சனிடத்தைச் சேர்ந்தழிக்க நினைக்கி லவனாற் பெருமையை யிழந்துவிடு வான் - என்பதாம்.

(வி-ரை.) செல்லிடம்-செல்லுமிடம் என விரியும் ஊக்கத்தினழிவு உடையான்மேல் ஏற்றப்பட்டது. தன்சேனையின் பெருமைநோக்கி இடம் நோக்காமல் செல்வானாயின் அசசெலவு அச்சேனைக்கு ஒருசேரச்சென்று தொழில் செய்யக்கூடாமையாலாவது பரக்கவில்லாமையாலாவது, அப் பெருமையாற் பயனில்லாமல் அழிவானென்பதாம். அ

சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(ப-ரை.) சிறைநலனும்-அரணழித்தற் கருமையையும், சீரும்-பெருமை யாகிய ஆற்றலையும், இலரெனினும்-உடையரல்லாராயினும், மாந்தர் (தொ ழில்செய்தற்குரிய) மனிதரை, உறைநிலத்தோடு (அவரது) இருப்பிடத்திற் சென்று, ஒட்டல்-தாக்குதல் அரிது, எ-று.

(க-ரை.) அரண்வலியும் பலமுமில்லாரானலும் பகைவர் இருப்பிடஞ் சென்று வெல்லலரிது - என்பதாம்.

(வி-ரை.) ஆண்மையுடையவரைச் சிறுமைநோக்கி அவரிருப்பிடத்திலேசென்று தாக்கினல் அதைவிட்டும் போவதற்குத் துணியாமல் சாவதற்குத்துணிவுகொண்டவராய்ப் போர்செய்வா ராதலால் அவருக்குப்பெரிய சேனையும் தோற்றேடிப்போமென்பதாம்.



காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

(ப-ரை.) கண்ணஞ்சா-பாகர்க்கு அடங்காதவையும், வேலாண்முகத்த வேலையுடைய ஆள்களைக்கோத்த கொம்பையுடையவையும் (ஆகிய) களிறு களிறுகளை, காலாழ்-கால்புதைகிற இயல்பினதாகிய, களரில்-சேற்றுநிலத்திலே (அகப்பட்டவிடத்து) நரி-நரிகளானவை, அடும்-கொல்லும், எ-று.

(க-ரை.) நரிகள் யானைகளைச் சேற்றுநிலத்தில் வெல்லும்-என்பதாம்.

(வி-ரை.) முகம் கொம்புக்கு ஆகுதலால் ஆகுபெயர். (ஆண்மையும்பெருமையும் உடையராயினும் தகாத இடத்திலே சென்றால் அவைகளாற் பயனின்றி மிகவும் எளியரால் அழிவரென்பதுதோன்ற நிற்கையால் இதுவும் அவ்வணி. [இவை மூன்று பாட்டாலும் பகைவரைச் சார்தலாகாத இடமும், சார்ந்தவிடத்து உண்டாகும் இழுக்கும் சொல்லப்பட்டது.] ௫0

ஐம்பதாம்—அதிகாரம்-இடனறிதல்.
முற்றிற்று.

---

## ஐம்பத்தோராம்-அதிகாரம்.
# தெறிந்துதெளிதல்.

அஃதாவது. மந்திரி முதலானவர்களைப், பிறப்பு, குணம், அறிவு, எனப்படுகின்றவைகளையும், செய்கையையும், காட்சி, கருத்து, ஆகமம் என்கிறபிரமாணங்களினலே ஆராய்ந்து தெளிதல். வலிமுதலாகிய மூன்றையும் அறிந்துபகைமேற்செல்வானுக்குச்சேனை கருத்தோடுதொழில் செய்தற்கும்எதி

ரிடாமைக்கும், இத்தெளிவு வேண்டுதலால் அவைகளின் பின்வைக்கப் பட்டது.

அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும்.

(ப-ரை.) (அரசனாலே தெளியப்படுவோ னொருவன்) அறம்-அறமும் பொருள்-பொருள்களும், இன்பம்-இன்பமும், உயிர்ச்சம்-உயிர்ப்போருட்டு வரும் அச்சமும், நான்கின் (என்கின்ற) உபதை நான்கினது, திறம்-திறத்தி னால், தெரிந்து (மனவியல்பு) ஆராய்ந்து, தேறப்படும் (பின்பு) தெளியப் படுவான், எ-று.

(க-ரை.) ஒருவன் அறம்பொரு ளின்ப முயிரச்ச மென்கிறநான்கின் றி றத்தாற் தேர்ந்துகொள்ளப்படுவான் - என்பதாம்.

(வி-ரை.) அவற்றுள் அறவுபதையாவது: புரோகிதரையும், அறவோரை யும் விட்டு அவரால் இவ்வரசன் அறமில்லாதவனா யிருக்கையால் இவனை நீக்கி அறமும் உரிமையும் உடைய ஒருவனை வைத்தற்கு எண்ணினோம்.

## உ௩அ ௫௧-ஆம்-அதி-தெரிந்துதெளிதல்.

இதுதான் யாவர்க்கும் சம்மதம்; உன்கருத்து என்னவென்று சபதத்தோடு சொல்லுவித்தல், பொருளுபதையாவது: சேனைத் தலைவரையும், அவரோ டு சம்பந்தமான வரையும் விட்டு அவரால் இவ்வரசன் உலுத்தனா யிருக்கை யால் இவனை நீக்கி ஈகையும். உரிமையும் உடைய வொருவனை வைத்தற்கு எண்ணினோம். இதுதான் யாவர்க்கும் சம்மதம்; உன்கருத்து என்னவென் று சபதத்தோடு சொல்லுவித்தல், இன்பவுபதையாவது: ஆதிதொட்டு உரி மையோடு பழகிய ஒருதவ முதுமகளைவிட்டு அவளால் உரிமையுள இன்னா ள் உன்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூட்டவேண்டுமென்று என்னைவிடுத் தாள் அவளைக் கூடுவையானால் உனக்கு அதிக சுகமாத்திர மல்லாமல் அதிக திரவியமும் கிடைக்குமென்று சபதத்தோடு சொல்லுவித்தல். உயிரச்ச வுபதையாவது: ஒரு நிமித்தத்தின் மேல்வைத்து ஒரு மந்திரியினாலே மற்ற வரை அவன்வீட்டில் அழைப்பித்து இவர் எதிரிடும்படி எண்ணற்குக் கூடி னரென்று தான் காவல்செய்து ஒருவனால் இவ்வரசன். நம்மைக் கொல்ல எண்ணுகின்றமையால் முந்திநாம் அவனைக்கொன்று நமக்கு இனிய ஒருவ னை வைத்தல் இங்கே யாவர்க்கும் சம்மதம், உன்கருத்து என்னவென்று

சபதத்தோடு சொல்லுவித்தல் இந்நான்கினும் வேறுபடாதவனை யிருந்த விடத்துப் பிற்காலத்திலும் வேறுபடானென்று கருத்தளவையால் தெளியப்படுவானென்பதாம். ௪

குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.

(ப-ரை.) தெளிவு (அரசனது) தெளிவானது, குடிப்பிறந்து(உயர்ந்த) குடியிலே பிறந்து, குற்றத்தின்-குற்றங்களி னின்றும், நீங்கி, வடு-(நமக்குப் பழுது வருமோவென்று, பரியும்-அஞ்சி நிற்கும், நாணுடையான்கட்டே-நாணமுடையவ னிடத்தே, எ-று.

(க-ரை.) நற்குடியிற்பிறந்து குற்றத்தி லிருந்து நீங்கி நிற்கு நாணமுடையவனை யரசன் தெளிந்து கொள்வான் - என்பதாம்.

(வி-ரை.) குற்றங்களாவன (குற்றங்கடித லதிகாரத்திற் சொல்லப்பட்டவைகளாம். நாணம்-இழிதொழில்களிலே மனஞ்செல்லாமை. இவை மிகுதியாக யோக்கியர்வாயிற் கேட்டலாகிய ஆகம பிரமாணத்தினாலே தெரிவன. இந்நான்கு முடையவனையே தெளிகவென்பதாம். ௫

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(ப-ரை) அரிய (கற்றற்கு) அருமையாகிய நூல்களை, கற்று, ஆசு(முன் சொல்லப்பட்ட) குற்றங்கள், அற்றார் கண்ணும்-அற்றவரிடத்தும்-தெரியுங்கால் (நுட்பமாக) ஆராயுமிடத்து, வெளிறு-அறிமையானது, இன்மையில்லாதிருக்கை, அரிதே- அருமையே, எ-று.

(க-ரை.) அரியநூல்களைக் கற்றுக் குற்றமற்றவ ரிடத்தும் அறியாமையில்லாதிருக்கையரிது-என்பதாம்.

# திருக்குறள்-தெரிந்துதெளிதல். ௨௩௯

(வி-ரை.) அறியாமை-இன்னிடத்து மனநிலையாமைபற்றி ஓரோ விடத்துண்டாமையாகும். தெரியுங்காலென்றார், காட்சிப் பிரமாணத்தினால் தெளிந்தால் அக்குற்றம் இல்லாதாரே தெளியப்படுவரென்பதாம். [இப்பிரமாணங்களாலே குணமும் குற்றமும் தெரிந்து குணமுடையவரைத் தெளிகவென்பது இம்மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது.] ௬

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

(ப-ரை.) (குணகுற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகில் இல்லாமையால்) குணம்-குணங்களை, நாடி-ஆராய்ந்து, குற்றமும்-மற்றைக் குற்றங்களையும், நாடி-ஆராய்ந்து, அவற்றுள் (பின்பு) அவ்விருவகையுள்ளும், மிகை-மிகுந்தவைகளை, நாடி-ஆராய்ந்து, மிக்க-மிகுந்தவைகளால், கொளல் (அவரை) அறியக்கடவன். எ-று.

(க-ரை.) அரசன் ஒருவன் குணங்களையுங் குற்றங்களையும் ஆராய்ந்து கொள்ளக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) மிகுதல் தலைமையினாலாவது பன்மையினாலாவது உயர்தல். மிகுந்தவைகளால் அறிதலாவது-குணமிகுந்திருந்தால் தொழிலுக்கு உரியவரென்றும், குற்ற மிகுந்திருந்தால் அல்லரென்றும் அறிதல். [குணமாத்திரமுடையவர் உலகத்தில் அரியராகலால் இவ்வகை யாரையுந் தெளிகவென்பது இதனாற் சொல்லப்பட்டது.] ௭

பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

(ப-ரை.) (குடிப்பிறப்பு குணம் அறிவு என்பவைகளால் மனிதரடையும்) பெருமைக்கும்-மற்றைச்சிறுமையாகிய (பொன்னின் மாற்றறிதற்கும்) ஏனைச்சிறுமைக்கும்-மற்றைச் சிறுமையாகிய(பொன்னின் மாற்றறிதற்கும்) கட்டளைக்கல்-உரைக்கல்லாவது, தத்தங்கருமமே-தங்கள் தங்கள் செய்கையே, எ-று.

(க-ரை.) மனிதர் பெருமையுஞ் சிறுமையு மறியு முரைகல்லாவது அவரவர் தொழில்களாம்-என்பதாம்.

(வி-ரை.) மனிதருடைய பெருமை சிறுமைகளைத் தப்பாமல் அறிய வேண்டியவர்களுக்கு முடிவானசாதனம் அவர்செயலே என்றற்கு கருமமே எனத் தேற்றேகாரத்தோடு சொல்லினார். பெருமை சிறுமைகளைப்பொன்

னெனுமல் கருமம் ஒன்றைக் கட்டளைக்கல்லெனலால் ஏகதேசவுருவகணி. [இதனற் குண குற்றங்களை அறிதற்குக் கருவி சொல்லப்பட்டது.] ௬

அற்றாரைத் தேறுத லோம்புக! மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

௫௬௰ ருக-ஆம்- அதி-தெரிந்துதெளிதல்.

(ப-ரை.) அவற்றாரை-சுற்றமில்லாதவரை, தேறுதலோம்புக - தெளிதலொழியககடவன் (அவர்) மறுப்பற்றிலர்-உலகத்தோடு சம்பந்தமிலராதலால், பழி-பழியை, நாணார்-அஞ்சார், எ-று.

(க-ரை.) அரசன் சுற்றமற்றவரைத் தெளிதலொழியக்கடவன் அவருலகத்தோ டொட்டாதவ ராதலாற் பழிக்கஞ்சார்-என்பதாம்.

(வி-ரை.) உலகத்தாரால் பழிக்கப்படுவன எவை அவை விடுதற்கும் புகழப்படுவன எவை அவை செய்தற்கும், காரணமாகிய உலக நடையினியல்பு சுற்றமில்லாதவர்க்கு இல்லாமையால் அவரைநம்பலாகாதென்பதாம்.

காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதமை யெல்லாந் தரும்.

(ப-ரை.) காதன்மை-அன்புடைமையானது, கந்தா-பற்றுக்கோடாக அறிவு- (தமக்கு) அறியவேண்டு மவைகளை, அறியார்-அரியாதவரை,தேறுதல்-தெளிதலானது, பேதமையெல்லாம்-அறிவில்லாமையை யெல்லாம், தரும் (அரசனுக்குத்) தரும். எ-று.

(க-ரை.) அறியவேண்டியவைகளை யறியாதவர்களை யரசன் தெரிந்துகொள்ளுத லவனுக் கறிவின்மை யெல்லாந்தரும்-என்பதாம்.

(வி-ரை.) தன்னேடு அவரிடத்துநின்ற அன்புபற்றி அரசன் அறிவில்லாதவரைத் தொழில் செய்யவைத்தால் அத்தொழில் அவரறி வில்லாமையினலே கெடும் கெட்டால் அவர்க்குள்ளது மாத்திரமல்லாமல் தொழிலுக்குரியவரை அறியாமையும், மேல்விளைவை அறியாமையும், முதலாக அவனுக்கு அறியாமைகள் பலவும் உண்டாகும்-என்பதாம். எ

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(ப-ரை.) பிறனை-தன்னேடு சம்பந்தமில்லாதவனை, தேரான் (பிறப்பு முதலானவைகளாலும் செய்கையாலும்) ஆராய்ந்திலனுகி, தெளிந்தான்-தெளிந்த அரசனுக்கு(அத்தெளிவு) வழிமுறை(அவன்)சந்ததி முறையினும்

தீரா-நீங்காத, இடும்பை-துன்பத்தை, தரும்-கொடுக்கும். எ-று,

(க-ரை.) தன்னோடு சம்பந்த மில்லாதவனைத் தெரிந்துகொண்ட அரசனுக்கு அத்தெளிவு துன்பந்தரும்-என்பதாம்,

(வி-ரை) சம்பந்தம்-தன்குடியோடு தொடர்ந்த மரபுதெளிதல், அவனிடத்தே தொழிலை வைத்தல், அத்தொழில் கெடுதலால் அவன் குலத்திற் பிறந்தவரும் பகைவர் கைப்பட்டுக் கீழாவரென்பதாம். அ

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும்பொருள்.

(ப-ரை.) யாரையும், தேராது-ஆராயாமல், தேறற்க-தெளியாதிருக்கக் கடவன், தேர்ந்தபின்-ஆராய்ந்தபின், தேறும்-பொருள் தெளியப்படு பொருள்களை, தேறுக-தெளியக்கடவன், எ-று.

## ருஉ - ஆம் - அதி - தெரிந்துவினையாடல். உசக

(க-ரை.) அரசன் யாரையுமாராயாமல் கொள்ளாதிருக்கக் கடவன் ஆராய்ந்தபின் கொள்ளக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) தேறற்கவென்று பொதுப்படச் சொன்னமையால் யாதொருதொழிலிலும் தெளியலாகா தென்பது பெறப்பட்டது. இங்கே தேறுகவென்றதற்கு ஐயுறாதிருக்கக்கடவ னென்பது கருத்து, தேறும் பொருள் அவரவர் வல்லமைக்கு ஏற்றதொழில்கள். பொருள்-ஆகுபெயர். க

தேரான் றெளிவுந் றெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(ப-ரை.) (அரசன்) தேரான் (ஒருவனை) ஆராய்ந்திலனாகி, தெளிவும்-தெளிதலும், தெளிந்தான்கண்-ஆராய்ந்து-தெளியப்பட்டவனிடத்தே, ஐயுறவும்-சந்தேகப்படுதலும், தீராவிடும்பை-நீங்காத துன்பத்தை தரும் (அவனுக்குக்) கொடுக்கும், எ-று.

(க-ரை.) அரசன் ஒருவனை யாராய்ந்திலனாகித் தெளிதலும், ஆராயப்பட்டவனிடத்தி லையங் கொள்ளுதலும், அவனுக்குத் துன்பந்தரும் என்பதாம்.

(வி-ரை) அரசன் ஒருவனிடத்து ஒரு தொழிலை வைத்தபின் ஒருதவ றும் காணாமல் சந்தேகப்படுவானாயின் அதனை அவன் அறிந்து இனி நில்லாதென்னுங் கருத்தால் அத்தொழிலைத் தாரவிடுவான் அதுவல்லாமல் பகைவராலே எளிதிலே பிரிக்கவும் படுவான் ஆதலால் தெளியப்பட்டவனிடத்தே சந்தேகப்படுதலும் ஆகாதாயிற்று தெளிவுக்கு அளவு சொல்லியபடி. [இவை ஐந்து பாட்டாலும் தெளியப்படாதவர் இவரென்பதும், அவரைத்தெளிந்தால் உண்டாகும் இழுக்கும், தெளிவுக்கு அளவும் சொல்லப்பட்டன.] ௰

ஐம்பத்தோராம்-அதிகாரம்-தெரிந்துதெளிதல்.

முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாம்-அதிகாரம்.

# தெரிந்துவினையாடல்

அஃதாவது: அத்தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல தொழில்களை அறிந்து அவைகளிலே ஆளுந்திறம். அதிகார முறைமையும்இதனாலே விளங்கும்.

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

(ப-ரை) (அரசன்) முதலிலே ஒரு தொழிலைக் கொடுத்தால் நன்மையுந்தீமையும் (அத்தொழிலிலே) ஆமவையும் ஆகாதவையும் ஆகிய செயல்க





ளை நாடி-ஆராய்ந்தறிந்து நலம் (அவைகளுள்) ஆமவைகளைய, புரிந்தேவிரும்பிய, தன்மையான்-இயல்பையுடையவன் (பின்னே அவ்வரசனாலே) ஆளப்படும் (சிறந்த தொழில்களிலே) ஆளப்படுவான், எ-று.

(க-ரை.) நன்மை துன்மைகளறிந்து ஆமவைகளைச் செய்பவன் அரசனாலாளப்படுவான்-என்பதாம்.

(வி-ரை.) தன்னை உரிமை அரிதற்பொருட்டு உள்ளுக்கும் புறம்புக்கும் நவோகிய ஒருதொழிலை அரசன் தன்னிடத்தே வைத்தவிடத்து அதிலே

ஆகுஞ்செயல்களையே செய்தவன் பின்னும் அத்தன்மைய னாகுதல்பற்றி உள்ளாகிய தொழிலிலே ஆளப்படுவா னென்பதாயிற்று. [புரிந்தவென் று இறந்தகாலத்தினாலே சொல்லுதலால் முன்னே உரிமையை அரிதற்பொ ருட்வைத்த தொழிலென்பது பெறப்பட்டது.]

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

(ப-ரை.) வாரி (பொருள்கள்) வரும்வழிகளை, பெருக்கி - விரியச்செய்து, வளம்படுத்து (அப்பொருள்களாலே) செல்வங்களை வளர்த்து, உற்றவை (அவ்வரும் வழிகளுக்கும், பொருள்களுக்கும், செல்வங்களுக்கும்) வந்த-இடையூறுகளை, யாராய்வான் (தினந்தோறும்) ஆராய்ந்து நீக்கவல்லவன் வினை-தொழிலை, செய்க (அரசனுக்குச் செய்யக்கடவன், எ-று.

(க-ரை.) பொருள் வரும்வழியை விருத்திசெய்து பொருளைவளர்த்து இடையூறுகளை யாராய்பவன் அரசனுககுத் தொழில் செய்யக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) வரும் வழிகளாவன-முன் இறைமாட்சி அதிகாரத்தில் இயற்றலு மென்றவிடத்து உரைக்கப்பட்டவையும், உழவு, பசுக்காவல்,வாணிகம் என்பவையும் ஆம்-செல்வங்களாவன-அங்கே பொருளும், இன்பமும், ஆகச்சொல்லப்பட்டவைகள். இடையூறுகளாவன-அரசன் தொழில்செய்வோர், சுற்றத்தார், பகைவர், கள்வர் என்கிற இவர்களால் வரும் நலிவுகள்.

அன்பறிவு தேற்ற மவாவின்மை யின்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

(ப-ரை.) அன்பு (அரசனிடத்தே) அன்பும். அறிவு (அவனுக்கு ஆம வைகளை) அறியும்-அறிவும், தேற்றம் (அவைகளைச்செய்யுமிடத்துக் கலங்காமையும்) அவாவின்மை (அவைகளாலே) பொருள் கைகூடியவழி அதன் மேல் அளவில்லாமையும் ஆகிய; இந்நான்கும்-இந்நான்கு குணங்களையும், நன்குடையான்கட்டே-நன்றாக உடையவனிடத்தே, தெளிவு (தொழிலை விட்டிருக்கும்) தெளிவு, எ-று.

(க-ரை.) அன்பு, அறிவு, தெளிவு, ஆசையில்லாமை இந்நான்குமுடையவனிடத்தே யரசனுக்குத் தெளிவுண்டாம் - என்பதாம்.

(வி-ரை) இந்நான்கையுமுடைய அவன் செய்கின்ற தொழிலிலே சிறிதும் ஆராயவேண்டுவ தில்லையென்று அரசன் தெளிதற்கு ஏதுவாகலால் அவனை அதன் பிறப்பிடமாக்கினர். [இவை மூன்றுபாட்டாலும் ஆளுதற்கு உரியவனது இலக்கணஞ்சொல்லப்பட்டது.] ௯

எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர்.

(ப-ரை.) எனைவகையால்-எல்லாவகைகளாலும், தேறியக்கண்ணும் - (ஆராய்ந்து) தெளிந்து (தொழிலைவைத்த) பின்னும், வினைவகையான்-அத்தொழிலியல்பினாலே, வேறாகும்-வேறுபடுகின்ற, மாந்தர்-மனிதன், பலர் (உலகத்திலே) பலர், எ-று.

(க-ரை.) எவ்வகையா லறிந்தவிடத்தும் தொழில்வகையால் வேறுபடு மனிதர் பலர்-என்பதாம்.

(வி-ரை.) அரசவின்பத்தை விரும்பி வேறுபடுவோரே யல்லாமல் அதனைக்குற்றமென்று விட்டுத் தம்மியல்பிலே நிற்பவர் அரியராதலால்-வேறாகுமாந்தர் பலரென்றார். தொழில் வைப்பதற்குமுன்னே எல்லாக்குணங்களுமுடையராகி வைத்தபின் வேறுபடுவோரை, நல்வானதோன் தொழிலை வைத்து அறிந்து நீக்கவேண்டு மென்பதாம். [இதனால் ஒருவகையால் ஒழிக்கப்படுவோர் இவரென்பது சொல்லப்பட்டது. ௭

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(ப-ரை.) வினைதான் - தொழில்தான், அறிந்து (செய்யும் உபாயங்களை) அறிந்து, ஆற்றி (செயலாலும், இடையூறுகளாலும் வருந்துன்பங்களை பொறுத்து, செய்கிற்பாற் கல்லால் (முடிவு) செய்யவல்லவனை யல்லது சிறந்தானென்று (இவனிடத்து) அன்புடையவனென்று, எவற்பாற்றன்று (வேறொருவனை) ஏவுதற்றன்மையை உடையதன்று, எ-று.

(க-ரை.) தொழில்செய்யு முபாயங்களை யறிந்து முடிப்பவனுக்கல்லது தொழிலை மற்றவனுக்குக் கொடுக்கலாகாது - என்பதாம்.

(வி-ரை.) அறிவாற்றல்களாலல்லது அன்பினாலே முடியாதென இதனால் தொழிலினது இயல்பு சொல்லப்பட்டது. ௫

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(ப-ரை.) செய்வானை-செய்பவனிலக்கணத்தை, நாடி(முன்னே) ஆராய்ந்து, வினை (செய்யப்படுந்) தொழிலினியல்பை, நாடி (பின்னே) ஆராய்ந்து, (அதன்பின்பு அவனையும் அதனையும்)காலத்தோடு-காலத்துடனே (சேர்த்து) எய்த-பொருந்த, உணர்ந்து-அறிந்து, செயல் (அவனை அத்தொழிலினிடத்து ஆளுதல்) செய்யக்கடவன், எ-று.

## ௨௱௪௪ ௫௨ - ஆம் - அதி - தெரிந்துவினையாடல்.

(க-ரை.) அரசன் தொழில்செய்பவனை யறிந்து பின்னத்தொழிலை யறிந்து அவனைத் தொழிலில் வைத்தாளக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) செய்பவனிலக்கணமும், தொழிலினியல்பும், முன்னே சொல்லப்பட்டன. காலத்தோடு பொருந்த அறிதலாவது-இக்காலத்தில் இவ்விலக்கணமுடையவன் செய்தால் இவ்வியல்புடைத்தாகிய தொழில் முடியுமென்று கூட்டி அறிதல். ௬

இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன் கண்விடல்.

(ப-ரை.) இதனை-இத்தொழிலை, இதனால்-இச்சாதனத்தால், இவன்முடிக்குமென்று-இவன்முடிக்க வல்லவனென்று, ஆய்ந்து (கூறுபடுத்தி) ஆராய்ந்து (இம்மூன்றும் தம்முள் ஒத்திருந்தவிடத்து) அதனை-அத்தொழிலை, அவன்கண்-அவனிடத்தே, விடல்-விடக்கடவன், எ-று.

(க-ரை) அரசன் இத்தொழிலை யிச்சாதனத்தா லிவன் முடிக்கவல்லவனென்றறிந்து அத்தொழிலை யவனிடத்து விடக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) சாதனம்-துணைவரும், பொருளும் முதலானவை செய்பவனும், சாதனமும், தொழிலும், தம்முள் ஒத்திருத்தலாவது-ஒவ்வொன்றோடு மற்றவை யிரண்டுக்கும் பொருத்தம் உண்டாகுதல் விடுதல்-அவனை-அத்தொழில் செய்தற்கு உரியவனாக்குதல். ௭

வினைக்குரிமை நாடியபின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.

(ப-ரை.) (ஒருவனை அரசன்) உரிமை (தனது) தொழில் செய்தற்கு உரியனாயிருக்கையை, நாடியபின்றை-ஆராய்ந்து துணிந்தபின்பு, அவனை, அதற்கு-அத்தொழில் செய்தற்கு, உரியனாக உரியவனாக, செயல் (உயரச்) செய்யக்கடவன், எ-று.

(க-ரை.) அரசன் ஒருவனைத் தொழிற்குரியவனாயிருக்கையை யறிந்து அவனை யத்தொழிற்குரியவனாகச் செய்யக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) உயரச்செய்தல்-அதனைத்தானே செய்துமுடிக்க வல்லவனாக்கல், அது செய்யாதவிடத்தும் கெடுமென்பது கருத்து. அ

வினைகண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

(ப-ரை.) வினைக்கண் (தனது) தொழிலினிடத்தே, வினையுடையான்-(எப்போதும்) முயற்சியையுடையவன் (அவ்வுரிமையால்) கேண்மை (தனக்குச்) சுற்றமாய் நடக்கின்ற தன்மையை (அது பொறாதவரது சொல்லைக் கேட்டு) வேறாக-மாறுபட, நினைப்பானை-நினைக்கும்-அரசனை, திரு-சீதேவி, நீங்கும்-நீங்குவாள், எ-று.



(க-ரை.) தனது தொழிலிலே முயற்சியுடையவனை வேறாக நினைக்குமரசனைச் சீதேவி நீங்குவாள் - என்பதாம்.

(வி-ரை) சுற்றமாய் நடக்கின்ற தன்மையாவது-தான் பிறனாய் நில்லாமல் சுற்றத்தார் செய்யும் உரிமையை எல்லாம் செய்து நடத்தல். அவனை அவமதித்துக் கோபிக்க நினைப்பானாயின் பின் ஒருவரும் உட்பட்டு முயல்வாரில்லாமல் செல்வம் கெடுமென்பது கருத்து [இந்நான்கு பாட்டாலும் ஆளுதற்கு உரியவனை ஆளும் திறம் சொல்லப்பட்டது.] ௰

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(ப-ரை.) வினைசெய்வான்-தொழில் செய்பவன், கோடாமை-கோணாதிருக்க, உலகு-உலகமானது கோடாது-கோணாது (ஆதலால்) நாடோறும் தினந்தோறும், மன்னன்-அரசன், நாடுக (அவன் செயலை) ஆராயக்கடவன். எ-று.

(க-ரை.) தொழில் செய்பவன் கோணாதிருக்க உலகமுங் கோணாது. ஆகையா லரசனவனை நாள்தோறு மாராயக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) அவ்வொன்றனையும் ஆராயவே அதன் வழிப்பட்ட உலகெல்லாம் ஆராய்ந்தவனாணவன் அதனால் அவனுரிமை, அழியாமல் தன்னானே ஆராய்ந்து கொண்டு வரக்கடவ னென்பதாம். [இதனால் ஆண்டவிடத்துச்

ஐம்பத் திரண்டாம்-அதிகாரம்-தெரிந்துவினையாடல்.
முற்றிற்று.

---

# ஐம்பத்திமூன்ரும் அதிகாரம்.

## சுற்றந்தழால்.

அஃதாவது: அரசன் தனது சுற்றத்தாரைத் தன்னைவிட்டு நீங்காதிருக்கும்படி தழுவுதல். தொழில் செய்வோரைச் சொல்லி மற்றைச் சுற்றத்தாரைச் சொல்லுதலால், இதுதெரிந்து வினையாடலின்பின்வைக்கப்பட்டது.

பற்றற்றகண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(ப-ரை) பற்றற்ற கண்ணும் (ஒருவன்) செல்வம் தொலைந்து வறுமைப்பட்ட விடத்தும், பழமை (தம்மோடு அவனிடத்து உண்டாகிய) பழமையை, பாராட்டுதல் (எடுத்துக்கொண்டாடு) மியல்புகள், சுற்றத்தார்கண்ணே உறவினரிடத்தே, உள-உளவாகும், எ-று.

**உ௫௨ ருக - ஆம் - அதி - சுற்றந்தழால்.**

(க-ரை.) ஒருவன் செல்வப் பற்றற்ற விடத்தும், பழமை கொண்டாடுதல் சுற்றத்தாரிடத்தே யுண்டாம் - என்பதாம்.

(வி-ரை.) பற்றற்ற கண்ணும் என்பதி னும்மை வறியனை விடத்துப் பாராட்டாமையை விளக்கினின்றபழமை-செல்வத்தோடிருந்தகாலத்திலே தமக்குசெய்த உபகாரம்சுற்றத்தார் பாராட்டுதலைத்தெளிவித்தலால்ஏகாரம் தேற்றேகாரம். [இதனாலே சுற்றத்தினது சிறப்பு சொல்லப்பட்டது.]

விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(ப-ரை.) விருப்பறா-அன்பு நீங்காத, சுற்றம்-சுற்றமானது, இயையின் (ஒருவனுக்குக்) கிடைக்குமாயின் (அது) அருப்பறா-கிளைத்தல் நீங்காத,ஆக்

கம்பலவும்-பலசெல்வங்களையும், தரும்-அவனுக்குக்)கொடுக்கும், எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு அன்புள்ள சுற்றங் கிடைத்தாலது பல செல்வங் கொடுக்கும்-என்பதாம்,

(வி-ரை.) உட்பகை யாயினோரை நீக்குதற்கு விருப்பச் சுற்றமென்றும், தானேவளர்க்கும் செல்வத்தை நீக்குதற்கு அப்பறு வாக்கமென்றும், அடைகொடுத்துச் சொல்லினார். இயையினென்பது-அதுகிடைத்தலினது அருமையைக் காட்டி நின்றது. பலவுமென்றது அங்கங்கள் ஆறினையும்பலர் கூடிவளர்த்தலால் அவை மேலு மேலுங் கிளைக்குமென்பது கருத்து. உ

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிரைந் தற்று.

(ப-ரை.) அளவளாவில்லாதான் (அசசுற்றத்தோடு) நெஞ்சுகலத்தலில்லாதவனது, வாழ்க்கை-வாழ்வானது, குளவளா-குளப்பறப்பானது, கோடின்றி-கரையில்லாமல், நீர் நிறைந்தற்று-நீர் நிறைந்தாற்போலும், எ-று.

(க-ரை.) சுற்றத்தாரோடு கலவாதவன் வாழ்வானது கரையில்லாக்குள நீர் நிறைந்தாற்போலும்-என்பதாம்.

(வி-ரை.) சுற்றம் அதிகாரத்தாலே வருவிக்கப்பட்டது. வாழ்க்கைக்கு ஏதுவான செல்வங்களை வாழ்க்கை என்றார். சுற்றமில்லாதவனது செல்வங்கள் தாங்குவா ரில்லாமையால் புறத்திலே போமென்பதாம்.

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்றற் பயன்.

(ப-ரை) செல்வம் - செல்வத்தை, பெற்றத்தால் - பெற்ற அதனால் பெற்றபயன் (ஒருவன்) பெற்ற பயனாவது (தன்) சுற்றத்தால் - உறவினால், தான் சுற்றப்பட-தான் சூழப்படும்வகை, ஒழுகல் (அச்சுற்றத்தைத்) தழுவி நடத்தலாம், எ-று.

## ருஉ - ஆம் - அதி - சுற்றந்தழால். ஃ௪ள

(க-ரை.) செல்வம் பெற்றத்தினால் வரும் பயனாவது சுற்றத்தைக்காத்தலாம்-என்பதாம்.

(வி-ரை.) இக்கடக்கை பகையில்லாமல் அரசாளுதற்கு ஏதுவாகலால் இதனைச் செல்வத்திற்குப் பயனென்றார். [இவை மூன்று பாட்டாலும் சுற்றத்தைத் தழுவுதல் செல்வத்துக்கு ஏதுவும். அரணும்,பயனும் ஆமென்பது

சொல்லப்பட்டது.]

கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

(ப-ரை.) (சுற்றத்துக்கு) கொடுத்தலும் (வேண்டுமவைகளைக் கொடுத்தலையும், இன்சொலும்-இனியசொற் சொல்லுதலையும், ஆற்றின் (ஒருவன் செய்ய) வல்லவனாயின், அடுக்கிய (தம்மிலே) தொடர்ந்த, சுற்றத்தால் (பலவகைச்) சுற்றத்தாலும். சுற்றப்படும்-சூழப்படுவான், எ-று.

(க-ரை.) கொடுத்தலும் இனியசொற் சொல்லுதலும் ஒருவன் செய்தாலவன் சுற்றத்தார் சூழப்பட வாழ்வான்-என்பதாம்.

(வி-ரை.) அவ்விரண்டும் அளவறிந்து செய்தல்-அரிதென்பதுதோன்ற ஆற்றினென்றார். தம்மிலே தொடர்தலாவது உறவினது உறவும், அதனதுஉறவும் ஆகச் சம்பந்தப் பட்டுவருதல். ௫

பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

(ப-ரை.) (ஒருவன்) பெருங்கொடையான்-மிகுந்த கொடையையுடையவனும், வெகுளி-கோபத்தை, பேணான்-விரும்பாதவனும் (ஆனால்) அவனின்-அவன்போல், மருங்குடையார் - சுற்றமுடையவர், மாநிலத்து இப்பெரிய உலகத்தில், இல்-இல்லை. எ-று,

(க-ரை.) மிகுந்த கொடையுங் கோபகுல்லாமையு முடையவனாகி லவன்போற் சுற்றமுடையவரில்லை-என்பதாம்.

(வி-ரை.)மிகுந்தகொடை ஒன்றினாலும் வறுமைப்படாதிருக்கக்கொடுத்தல். விரும்பாமை இது அரசர்க்கு வேண்டுவதென்று அளவுகடந்து செய்யாமை. ௬

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

(ப-ரை.) காக்கை-காகங்கள் (தமக்கு இரையைக் கண்டவிடத்து) கரவா-மறைக்காமல், கரைந்து (இனத்தை) அழைத்து, உண்ணும் (அதனோடு கூடி) உண்ணும், ஆக்கமும்(சுற்றத்தினாலாகிய) பெருக்கங்களும், அன்னநீரார்க்கே-அப்படிப்பட்ட இயல்பையுடையவர்க்கே, உள-உளவாகும். எ-று

(க-ரை.) காகமிரைகிடைத்தா லினத்தை யழைத் துண்ணுதல்போல இச்செய்கை நல்லினத்தார்க் குளவாம் - என்பதாம்.

(வி-ரை) அப்பெருக்கங்களாவன - பகையில்லாமை பெருஞ் செல்வமுடைமை முதலானவை எச்ச உம்மையால் அறமும் இன்பமும் அன்றி பொருளும் பெறுவரென்பதாயிற்று. அப்படிப்பட்ட வியல்பு தம்மால் அனுபவிகசப்பட்டவைகளை யெல்லாம் அவரும் அனுபவிக்கும்படிவைத்தல் எ

பொதுநோக்கான் வேந்தன் வரிசை நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(ப-ரை.) வேந்தன்-அரசனானவன், பொதுநோக்கான், எல்லாரையும் ஒருத்தன்மையாக நோக்காமல், வரிசையா-அவரவர் தகுதிக்கு எற்க,நோக்கின்-நோக்குவானாயின், அது நோக்கி-அச்சிறப்பு நோக்கி, வாழ்வார்(அதனைவிடாது) வாழுஞ் சுற்றத்தார், பலர்-அனேகர், எ-று.

(க-ரை.) அரசனவரவர்க்குத் தகுதியறிந்து நடப்பானாகி லதனைவிடாதுவாழுஞ் சுற்றத்தார் பலர் - என்பதாம்.

(வி-ரை.) உயர்ந்தார் நீங்குதல் குறித்து பொது நோக்கை விலக்கி எல்லாரும் விடாதொழுகுதல்குறித்து வரிசைநோககைவிதித்தார். [இவை நான்கு பாட்டாலும் சுற்றந் தழுவுதற்கு உபாயம் சொல்லப்பட்டது.] அ

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

(ப-ரை.) தமராகி (முன்னே)சுற்றத்தாராயிருந்து, தற்றுறந்தார்(தன்னோடு பொருந்தாமல் யாதாயினும் ஒருகாரணத்தினாலே தன்னைப்பிரிந்துபோனவர், சுற்றம் (பின்னும்வந்து)சுற்றத்தாராகுதல், அமராமைக்காரணம் அப்பொருந்தாமையின் காரணம், இன்றி (தன்னிடத்தே) இல்லையாக,வரும்தானே உண்டாகும். எ-று.

(க-ரை.) முன் சுற்றத்தாராகிப் பின் பிரிந்தவர் மற்றுஞ் சுற்றத்தாராகுதல் காரணமில்லாதுண்டாம்-என்பதாம்.

(வி-ரை.) பொருந்தாமையின் காரணமாவது-தான்வழிதப்பி நடத்தல் வெறுப்பவைசெய்தல், இவை முதலியவைகளால் வருவது. இயற்கையாவே அன்புடையராகிய சுற்றத்தார்க்குச் செயற்கையால் வந்தபிரிவு. அச்செயற்கையை ஒழிக்க ஒழிதலால் அவர்க்கு அன்பு பழைய இயல்பாகவே நிற்குமென்றதற்கு வருமென்றார். க

உழைப்பிரிந்து காரணத்தின் வேந்த

இழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(ப-ரை.) உழை (தன்) னிடத்தினின் றும் பிரிந்து (காரணமில்லாமற் பிரிந்துபோய், காரணத்தின் (பின்பு)காரணத்தினாலே, வந்தானை-வந்தசுற்



றத்தானை வேந்தன்-இராஜனானவன், இழைத்திருந்து-அந்தக் காரணத்தைச்செய்துவைத்து, எண்ணி - ஆராய்ந்து, கொளல் (தழுவிக்) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) ஒருவன் காரணமில்லாமற் பிரிந்துபோய்ப் பின்னொருகாரணத்தால் வந்தவனை அரசன் ஆராய்ந்து கொள்ளக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) சும்மா உழைப்பிரிந் தென்றமையால், பிரிதற்குக் காரணமில்லாமை கொள்ளப்பட்டது. வருதற் காரணத்தைச் செய்யாதவிடத்துப் பின்னும் பிரிந்துபோய்ப் பகைவரோடு கூடுவானாதலால் இழைத்திருந்தென் றும், அன்பில்லாமற்போய்ப் பின்னுங் காரணத்தால் வந்தமையால் எண்ணிக்கொள்ளென் றும், சொல்லினர். பிரிந்துபோன சுற்றத்தாருள் தீமைசெய்யப்போய் அதனை விடவருவானும், அது செய்யாமற்போய்ப் பின்பு நன்மை செய்யவருவானும், தழுவப்படுதலால் தழுவுமாறு முறையே [இவ்விரண்பொட்டாலும் சொல்லப்பட்டது.] ௫0

ஐம்பத்திமூன்றும்-அதிகாரம்-சுற்றந்தழால்.

முற்றிற்று.

---

## ஐம்பத்திநான்காம்-அதிகாரம்.

# பொச்சாவாமை.

அஃதாவது: அழகும், செல்வமும், ஆற்றலும் முதலானவைகளால்மகிழ்ந்து தன்னைக்காத்துக் கொள்ளுதலிலும், பகையழித்தல் முதலாகிய காரியங்களிலும்; மறதிசெய்யாமையும், முன் சொல்லப்பட்ட சுற்றத்தாரால் பயனுள்ளது. இம்மறதி யில்லாவிடமதாகலால், இது சுற்றந்தழாவின் பின் வைக்கப்பட்டது.

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(ப-ரை.) சிறந்தவுவகை-மிகுந்த அகமலர்ச்சியினது, மகிழ்ச்சியின் - க ளிப்பால் வருவதாகிய, சோர்வு-மறதியானது, இறந்த வெகுளியின்-அளவு கடந்த கோபத்திலும், தீதே-(அரசனுக்குத்) தீதேயாம், எ-று.

(க-ரை.) மிகு மகிழ்ச்சியால் வரு மறதியானது அளவுகடந்த கோபத் தைப்பார்க்கிலும் அரசனுக்குக் குற்றந்தரும்-என்பதாம்.

(வி-ரை.) மிகுந்த வுவகையாவது பெருஞ்செல்வம் பேரின்பம் பெரு மிதம் என்கிற இவைகளால் வருவது அளவு, பகைவரை வெல்லுதலுக்கும் கோடியோரை ஒறுத்தலுக்கும், வேண்டுவது. அக்கோபம் ஒரேவிடத்துப் பகைவரையும் கொல்லும், இது அப்படிப்பட்ட தல்லாமல் தன்னையேகொ ல்லலால் அதனினும் தீதாயிற்று.

32

## உ௩௰ ரு-ஆம்-அதி-பொச்சாவாமை.

பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(ப-ரை.) பொச்சாப்பு-மறதியானது. புகழை-(ஒருவனது) கீர்த்தியை கொக்கும்-கெடுக்கும், நிச்சநிரப்பு-நித்திய வறுமையானது, அறிவினை-புத் தியை, கொன்றாங்கு-கெடுக்கும் விதம்போல், எ-று.

(க-ரை.) தரித்திர மறிவைக்கெடுக்கும் அதுபோல மறதிபுகழைக்கெ டுக்கும்-என்பதாம்.

(வி-ரை) நித்தியவறுமை-நினைந்தோறும் யாசகத்தால் வருந்தித்தன்வ யிறு நிறைத்தல், எப்படி அந்நித்தியவறுமை அறிவுடையானிடத்தே உண்

டானல் அவனுக்கு இளி வரவாலும், பாலத்தாலும், இகழ்ச்சியை உண்டாக்கி அவன் கனத்தை அழிக்குமோ அப்படி மறதியும் புகழுடையவனிடத்தே உண்டாயின் அவனுககுத் தன்னைக் காத்துக்கொள்ளாமையாலும், காரியக்கெடுதியாலும், இகழ்ச்சியை யுண்டாக்கி அவன் கனத்தை அழிக்குமென்பதாயிற்று. [இவ்விரண்டு பாட்டாலும் மறவியின் குற்றம் சொல்லப்பட்டது.] ௬

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(ப-ரை.) புகழ்மை-புகழுடையாரா யிருக்கையானது, பொச்சாப்பார்க்கு-மறந்து நடப்பவர்க்கு, இல்லை அது-அஃதில்லாமையானது (இக்கீதிநூலுடையவர்க்கு மாத்திரமல்லாமல்) உலகத்து-உலகத்தில், எப்பானூலோர்க்கும்-எவ்வகைப்பட்ட நூலுடையவர்க்கும்; துணிவு-ஒப்பமுடிந்தது, எ-று.

(க-ரை.) புகழ்சசி மறதியுடையோர்க்கில்லை இது எல்லா நூலார்க்குந் துணிவுதான் - என்பதாம்.

(வி-ரை.) அரசருக்கே யல்லாமல் அறமுதலாகிய நான்கிலும் முயல்பவர் யாவர்க்கும் அவை கைகூடாமையினாலே புகழில்லை யென்பதுதோன்ற எப்பா நூலோர்க்குந் துணிவு என்றார். ௭

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(ப-ரை.) அச்சமுடையார்க்கு-பயமுடைய வர்க்கு, அரண்-(காடு மலை முதலாகிய) அரணங்களில், (இருந்தாலும்) இல்லை-(அவைகளாலேபயன்) இல்லை, ஆங்கு-அதுபோல், பொச்சாப்புடையார்க்கு-மறதியுடையவர்க்கு, நன்கு-செல்வமெல்லாம் (உடையராயிருந்தாலும்) இல்லை-(அவைகளாலே பயன்) இல்லை, எ-று.

(க-ரை.) பயமுடையவர்க்கு நால்வகை யரணிங்களிருந்தும்பயனில்லை, அதுபோல மறதி புடையவர்க்குச் செல்வங்களிருந்தும் பயனில்லை-என்பதாம்.

## ருச - ஆம் - அதி - பொச்சாவாமை உருக

(வி-ரை.) செல்வம் நன்குக்கு ஏதுவாகலால், அதனை நன்கென்றார். எப்படி அச்சமுடையவரது அரணம் அழியுமோ அப்படி மறதியுடையவர்

செல்வமும் அழியுமென்பதாயிற்று.

முன்னுறக் காவா திழுக்கியான்
பின்னூ றிரங்கி விடும்.

(ப-ரை.) (வாராமற் காக்கப்படுந் துன்பங்களை) முன்னுற-(அவைவருதற்கு) முற்பட, காவாது-(அறிந்து) காவாமல், இழுக்கியான் - மறந்திருந்தவன், பின்-பின்பு, ஊறு-உற்றகாலத்து, (காக்கக்கூடாமையால்) தன்பிழை தன்னுடையதவறு (நினைத்து) இறங்கிவிடும்-இரங்கிவிடுவான், எ-று.

(க-ரை.) துன்பம்வருமுன் காக்காமல் மறந்திருந்தவன் தன் குற்றத்தைக் குறித்தும் பின் விசனப்படுவான்-என்பதாம்.

(வி-ரை.) அத்துன்பங்களானை மறதிபார்த்துப் பகைவராலே செய்யப்படுவன துன்பம் உற்ற காலத்திலே காக்கக்கூடாமையால் இரங்கிவிடுமென்றார். [இவை மூன்று பாட்டாலும் மறதியுடையவர்க்கு வரும்துன்பஞ் சொல்லப்பட்டது.] ௬

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்பதில்.

(ப-ரை.) (அரசர்க்கு) இழுக்காமை-மறவாமையானது, யார்மாட்டும்-யாவரிடத்தும், என்றும் - எக்காலத்திலும், வழுக்காமை - ஒழிவில்லாமல், வாயின்-நேர்படுமாயின், அது-அதனை, ஒப்பது-ஒக்கு தன்மையானது, இல்-இல்லை, எ-று,

(க-ரை.) யாவரிடத்து மறவில்லாமை வாய்க்குமானால நற்கொப்பென்றுமில்லை-என்பதாம்.

(வி-ரை.) தொழில்செய்வோர், சுற்றத்தார் என்கிற தம்மவரிடத்தும் சமமாகவேண்டுதலால், யார்மாட்டுமென்றும், தன்பெருக்கக் காலத்திலும் சுருக்கக்காலத்திலும் சமமாமவேண்டுதலால் என்று மென்றும், எல்லாக் காரியங்களிலும் சமமாக வேண்டுதலால் வழுக்காமை யென்றும் சொல்லினார்.

அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(ப-ரை.) அரியவென்று-(இவை) அரியவையென்று சொல்லப்பட்டு ஆகாத-(ஒருவனுக்கு) முடியாத காரியங்கள், இல்லை-இல்லையாகும், பொச்சாவா-மறவாத, கருவியால் - மனத்தினாலே, போற்றி - எண்ணி, செயின் செய்தால், எ-று.

(க-ரை.) மறவாத மனத்தா லாலோசித்துச்செய்தால் அரசனுக்கரியவை யொன்றுமில்லை - என்பதாம்.

(வி-ரை.) அந்தக் கரணமாதலால், மனத்தைக் கருவியென்றார் இடைவிடாத நினைவும் தப்பாத எண்ணமும் உடையவர்க்கு எல்லாம் எளிதின்முடியுமென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் மறவாமையினது சிறப்புச் சொல்லப்பட்டது.] கரணம் - காரணம்.

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(ப-ரை.) புகழ்ந்தவை (நீதிநூலுடையாரால் இவை அரசர்க்கு உரியவையென்று) உயர்த்திச் சொல்லப்பட்ட செயல்களை, போற்றி-முடிவுபற்றி, செயல்வேண்டும் - செய்யக்கடவர், செய்யாது (அப்படி) செய்யாமல், இகழ்ந்தார்க்கு-மறந்தவர்க்கு, எழுமையும்-எழுபிறப்பிலும் வரும் நன்மை, இல்-இல்லை (ஆதலால்) எ-று.

(க-ரை.) மேலானவற்றை யரசரெண்ணிச் செய்யக்கடவர் செய்யாது மறந்தவர்க கெழுபிறப்பிலும் நன்மையில்லை - என்பதாம்.

(வி-ரை.) அச்செயல்களாவன: மூவகை ஆற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத்தொழிலும், அறுவகைக்குணமும் முதலானசெயல்கள். சாதிதருமமாகிய இவைகளில் வழுவிய அரசர்க்கு நரகதுக்கமேஉள்ளதாகலால் எழுமையு மில்லையென்றார். எழுமை-ஆகுபெயர். [இதனால் மறவாதுசெய்யவேண்டுமவைகள் சொல்லப்பட்டன.]

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(ப-ரை) (அரசர்) தம்மகிழ்ச்சியின்-தமது மகிழ்ச்சியினிடத்து, தாமைந்துறும்போழ்து-தாம் செறுக்குறும்பொழுது, இகழ்ச்சியின்-(முற்காலத்திலே அதனால்ஆகிய) மறதியினாலே, கெட்டாரை-கெட்டவர்களை, உள்ளுக-நினைக்கக்கடவர், எ-று.

(க-ரை.) அரசர் செல்வத்திலே மகிழ்ச்சி யடையும்போது முற்காலத்திலே மகிழ்ச்சியிலே மறதியடைந்தவர்களை நினைக்கக்கடவர் - என்பதாம்.

(வி-ரை) மகிழ்ச்சிக்குக் காரணமா யுள்ளவைகளோடு அவர்க்கு உண்டாகிய உரிமையை மகிழ்ச்சிமேலேற்றி தம் மகிழ்ச்சியினென்றும், இகழ்

ச்சியும் கேடும் உடன்தோன்றுமாகலால் மகிழ்ச்சியின் மைந்துறும், போழ்தென்றும் சொல்லினர். கெட்டாரை நினைக்கவே நாமும் அப்படியே கெடுவோமென்று அதனிடத்தே செருக்குறு ரென்பது கருத்து.

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

**ருசு-ஆம்-அதி-செங்கோன்மை. உருசு.**

(ப-ரை.) (அரசனுக்கு) உள்ளியது (தான்பெற) நினைத்த பொருளை-எய்தல்-(அந்நினைத்தபடியே) அடைதல், எளிதுமன்-எளிதாகும், மற்றும், பின்னும், தான், உள்ளியது-அந்நினைத்த பொருளையே, உள்ளப்பெறின்-நினைக்கக்கூடுமானால், எ-று.

(க-ரை.) அரசன் நினைத்தபொருளை நினைக்கக்கூடுமானா லப்பொருளை யடைத லெளிதாகும் - என்பதாம்.

(வி-ரை.) அது கூடாதென்னும் ஒழிந்த சொற்பொருளைக் காட்டலால் மன், ஒழியிசையிலே வந்தது, இசையென்பது சொல். அதனையே நினைத்தலாவது மறதியில்லாமல், அதனிடத்திலே முயற்சிசெய்தல். [இவையிரண்டுபாட்டாலும் மறவாமைக்கு உபாயஞ் சொல்லப்பட்டது.] ௪௦

ஐம்பத்துநான்காம்-அதிகாரம்-பொச்சாவாமை.

முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாம் அதிகாரம்.

# செங்கோன்மை.

அஃதாவது. அரசனாலே செய்யப்படு முறையினது தன்மை. அந்த முறையானது ஒருபக்கத்திலே சாயாமற் செவ்வையாகிய கோல்போலுதலாலே செங்கோலெனப்பட்டது. அது மறதியில்லாத அரசனாலே செய்யத்தக்கதாகலால் இது பொச்சாவாமையின் பின் வைக்கப்பட்டது.

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(ப-ரை.) (தன்கீழ் வாழ்வோராலே செய்யப்பட்ட குற்றத்தை) ஓர்ந்து நாடி, யார்மாட்டும் - யாவரிடத்தும், கண்ணோடாது - முகங்கொடாமல், இறைபுரிந்து - நடுவு நிலைமையைப் பொருந்தி, தேர்ந்து - (அக்குற்றத்துக்குச் சொல்லப்பட்ட தண்டத்தை நூலோரோடும்) ஆராய்ந்து, செய்வஃதே - அவ்வளவினதாகச் செய்தலே, முறை - செங்கோலாம். எ-று.

(க-ரை.) அரசன் குற்றத்தை யாராய்ந்து எல்லாரிடத்துநடுவு நிலைமை பொருந்தி யாசான்வதே செங்கோலாம் - என்பதாம்.

(வி-ரை.) நடுவாய் நிற்கை இறை என்கிற அரசனுக்கு இயல்பாகலால் அதனை இறையென்றும் உயிரினும் சிறந்தவரிடத்தும் என்றற்கு யார்மாட்டு மென்றும், சொல்லினார். இறைமை - இறை - எனம் செய்வது - செயவஃது - எ-ம். விகாரப்பட்டன. [இதனுவல செங்கோன்மையினது இலக்கணம் சொல்லப்பட்டது.]

## ௫௱௪௰௧ ருரு - ஆம் - அதி - செங்கோன்மை.

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(ப-ரை.) உலகெல்லாம் - உயிர்களெல்லாம், வானோக்கி - மழையை நோக்கி, வாழும் - (என்றாலும்), குடி - குடிகளானவை, மன்னவன் - அரசனது, கோனோக்கி - செங்கோலை நோக்கி, வாழும், எ-று.

(க-ரை.) உயிரனைத்து மழையை நோக்கி வாழும், குடிகளனைத்துஅரசன் செங்கோலை நோக்கி, வாழும், எ-று.

(வி-ரை) வானாலாகிய உணவை வானென்றும் கோலாலாகிய எமத்தைக் கோலென்றும், சொல்லினார். அவ்வேமம் இல்லாதவிடத்தே உணவு உளதாயிருந்தாலும் குடிகளுக்கு அதனாலே பயன் இல்லை என்பதாம். ௨

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(ப-ரை.) மன்னவன்கோல் - அரசன் செங்கோலானது, அந்தணர் நூற்கும் - அந்தணர்க்கு உரித்தாகிய வேதத்திற்கும், அறத்திற்கும் - (அதனாலே சொல்லப்பட்ட) தருமத்திற்கும், ஆதியாய் - காரணமாகி, நின்றது - நிலை பெற்றது, எ-று.

(க-ரை.) வேதத்திற்கும் தருமத்திற்குங் காரணமாகி நின்றது அரசன்

செங்கோலா - என்பதாம்.

(வி-ரை.) வேதமும், அறமும், அகாரியாயினும் செங்கோல் இல்லாத விடத்து நடவாதாகலால் அதனை அவைகளுக்கு ஆதியென்றும், அப்பெற் றியே தனக்கு ஆதியாவது வேறொன்றும் இல்லையென்றற்கு நின்றதென்ற ம், சொல்லினர். [இவை இரண்டு பாட்டாலும் செங்கோலது சிறப்புச்சொ ல்லப்பட்டது.] ௪

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

(ப-ரை.) உலகு-உலகத்தார், குடிதழீஇ-(தன்) குடிகளையும் அணைத்து, கோலோச்சும் - செங்கோலையும் செலுத்தும், மாநிலமன்னன் - பெருநில வேந்தனது, அடிதழீஇ-அடியைப் பொருந்தி, நிற்கும்-நிற்பார், எ-று.

(க-ரை.) உலகத்தார் குடிகளைத்தழுவி அரசனடியைப் பொருந்தி நிற் பார் - என்பதாம்.

(வி-ரை.) அணைத்தல் - இன்சொற சொல்லுதலும், தளர்ந்த விடத்து வேண்டுமவை கொடுத்தலும், முதலானவை, இவ்விரண்டும் தப்பாமற்செய் பவன் நிலமுழுதும், ஆள்வானுகையால் அவனை மாநில மன்னனென்றும், அவனிடத்தில் யாவரும் நீங்காத அன்புடையவராகலால், அடிதழீஇ நிற்கு முலகென்றும், சொல்லினர். ரு

## ருரு-ஆம்-அதி-செங்கோன்மை. உருரு

இயல்புளிக் கோலோச்சு மன்னவனாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(ப-ரை.) பெயலும்-பருவமழையும், விளையுளும் - (குறையாத) விளை வும், தொக்கு-கூடி, இயல்புளி-(நூல்களாலே சொல்லப்பட்ட) இயல்பால், கோலோச்சும்-செங்கோலைச் செலுத்தும், மன்னவன்-அரசனது, நாட்ட- நாட்டினுள்ளனவாம், எ-று.

(க-ரை) நீதிமன்ன நாட்டிலே மழையும் விளைவு நிறைந்திருப்பனவாம் -என்பதாம்.

(வி-ரை) அவனது நாட்டிலே வானமும் நிலமும் சேரத்தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம். ௧

வேலன்று வென்றி தருவது மன்னவன்

கோலதூவுங் கோடா தெனின்.

(ப-ரை.) மன்னவன்-அரசனுக்கு, வென்றிவருவது-(போரில்)வெற்றியைத்தருவது, வேலன்று-(அவனெறியும்) வேற்படையன்றாகும், கோல்-(அவனது) செங்கோலாகும், அதூஉம்-அக்கோலும், (அப்படிப்பட்டதாவது) கோடாதெனின்-(தான்) கோணுதிருக்குமாயின், எ-று.

(க-ரை.) அரசனுக்கு வேல் வெற்றியைத்தராது செங்கோல் வெற்றியைத்தரும்-என்பதாம்.

(வி-ரை.) கோல் செம்மையா யிருக்கின்ற விடத்தவேல் பயன்படுமென்றற்கு வேலன்று வெற்றி தருவது கோலென்றார்.

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

(ப-ரை) இறை-அரசனானவன், வையகமெல்லாம் - பூமிமுழுதையும், காக்கும் காப்பாற்றுவான், முறை - (அவனது) செங்கோலாவது, அவனை, காக்கும்-காப்பாற்றுவதாகும், முட்டாச்செயின்-முட்டாமற் செலுத்துவானுயின், எ-று.

(க-ரை.) அரசன் பூமியைக் காப்பான், செங்கோ லவனைக் காக்கும்-என்பதாம்,

(வி-ரை.) முட்டாமற் செங்கோல் செலுத்திய விதத்தை மகனைத் தேர்க்காலில் வைத்தூர்ந்த, சோழனிடத்தும், அயலார் வீட்டுக்கதவைத் தட்டிய தன் கையைக் குறைத்த பாண்டிய னிடத்தும், காண்க. [இந்நான்குபாட்டாலும் செங்கோல் செலுத்தியவன் அடையும் பயன் சொல்லப்பட்டது.]

எ

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

## ௨௱௪௰ ௫ - ஆம் - அதி - செங்கோன்மை.

(ப-ரை.) (வழக்கறிவிப்பவர்க்கு) எண்பதத்தான்-எளிதானசமயத்தையுடையவனுகி, ஓரா-(அவரால் அறிவிக்கப்பட்டவைகளை நூலோர்பலரோடும்) ஆராய்ந்து, முறைசெய்யா-(நின்ற உண்மைக்கு ஒப்பாக) முறைசெய்யாத, மன்னவன் - அரசன், தண்பதத்தால் - தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும்-தானே கெடுவான், எ-று.

(க-ரை.) எளிய சமயமுடையவனுகி யாராய்ந்து முறைசெய்யாத மன்

ன்ன் தானே கெடுவான் - என்பதாம்.

(வி-ரை.) தாழ்ந்தபதம்-பாவமும், பழியும், அடைந்து நிற்கும் நிலை அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றமாகலால் பகைவரில்லாதிருந்தாலும்தானே கெடுமென்றார். [இதனால்முறைசெலுத்தாதவனது கேடுசொல்லப்பட்டது.]

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங்கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(ப-ரை.) குடி-குடிகளை, புறங்காத்து-பிறர் வருத்தாமற்காத்து, ஓம்பி-தானும்வருத்தாமல் ஆதரவுசெய்து, குற்றம்(அவரிடத்திலே)குற்றம்உண்டானால், கடிதல்-(அதனைத்தீர்க்கும்படி) தண்டித்தல், வேந்தன்றொழில்-அரசனது தொழிலாம்-(ஆதலால்) வடுவன்று-பழியாகாது, எ-று.

(க-ரை.) குடிகளைக்காத்துக் குற்றங்கடிதல் அரசனது தொழிலாம்-என்பதாம்.

(வி-ரை.) துன்பஞ்செய்தல், பொருள் வாங்கல், கொல்லுதல், என்ற ஒறுப்பு எண்கிற தண்டம் மூன்றும், அவைகளுள் இங்கே சொல்லப்பட்டவை குற்றங் கடிதலென்றதனால் முன்னைய விரண்டுமாம். தன்கீழ் வாழ்வாரை ஒறுத்தல். அறனல்லாமையால் வடுவாமென்பதனை ஆக்ஷேபமாக்கிக்கொண்டு அது அரசனுக்கு அவரை அக்குற்றத்தினிக்கிப் பரிசுத்தராக்குதலால் சாதி தருமமென்றார். ௯

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

(ப-ரை.) வேந்து-அரசனானவன், கொடியாரை-கொடியவரை, கொலையின்-கொலையினாலே, ஒறுத்தல்-தண்டித்து (நல்லோரைக்காப்பாற்றல்) உழவனானவன், பைங்கூழ்-பயிரை, களை கட்டதனொடு - களையைக் களைந்து காப்பாற்றலோடு, நேர்-ஒக்கும். எ-று.

(க-ரை.) அரசன் கொடியவரைத் தண்டித்து நல்லவரைக் காத்தல் உழவன் பயிர்க்குக் களையெடுத்தல் போலாம் - என்பதாம்.

(வி-ரை.) கொடியோர்-தீக்கொளுவுவோர், நஞ்சிடுவோர், படையிற் கொல்வோர், கள்வர், வழியலைப்போர், கொள்ளையிடுவோர், பிறனில்லாளை விரும்புவோர் இவர் முதலாயினோர்கள். இப்படிப்பட்டவரை அரசன்கொல்

௫௫ - ஆம் - அதி - கொடுங்கோன்மை உரை

லாத விடத்தும் புல்லுக்களைக்கு அஞ்சாநின்ற பயிர்போன்று பலவருத்த

ங்களை அடைந்து உலகத்தார் துன்பப்படுவர். [இவை யிரண்டாலும் செங்கோல் செலுத்தும் அரசனுக்குத் தீயாரிடத்து மூவகைத்தண்டமும் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது.]

ஐம்பத்தைந்தாம்-அதிகாரம்-செங்கோன்மை.

முற்றிற்று.



## ஐம்பத்தாறாம்-அதிகாரம்.

# கொடுங்கோன்மை.

அஃதாவது: அம்முறையினது கோணுதற்றன்மையாம், செங்கோன்மைக்கு மாறுகலால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

கொலைமேற்கொண் டாரிற் கொடியதே யலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

(ப-ரை.) அலை (பொருளைவிரும்பிக் குடிகளை) அலைத்தற் றொழிலை, மேற்கொண்டு-(தன்) மேற்கொண்டு, அல்லவை-முறையல்லாதவைகளை, செய்து ஒழுகும்-நடக்கும், வேந்து-அரசனானவன். கொலை-(பகைமைபற்றிக்) கொல்லுதற்றொழிலை, மேற்கொண்டாரின்-(தம்) மேற்கொண்டொடப்பவரினும், கொடிதே-கொடியவனுவான், எ-று.

(க-ரை.) அநியாயஞ் செய்யு மரசன் கொலைசெய்பவரினுங்கொடியன் என்பதாம்.

(வி-ரை.) அவர் செய்வது ஒருநாளைத்துன்பம் இவன் செய்வது எந்நாளும் துன்பமாமென்பது பற்றி அவரினும் கொடிய னென்றார், அலைத்தல் கொலையினும் கொடியதென்பதாயிற்று.

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

(ப-ரை.) கோலொடு-ஒறுத்தற்குறுழிலொடு, நின்றான் - நின்றவரச இரவு (குடிகளைப்பொருள்) வேண்டுதலானது, வேலொடு-வேலாயுதத்தொடு, நின்றான்-(வழியில் அலைத்துப்பறிக்கு மிடத்துத்தனியே) நின்றகள்வன் இடுவென்றதுபோலும்-(வழிப்போக்கரை நோக்கி உன்கைப்பொருளைத்) தரவென்று வேண்டுதல்போலும், எ-று.

(க-ரை.) கொடுங்கோலரசன் குடிகளை வருத்திப் பொருள் வேண்டுதல் வழிப்போக்கரைக் கள்வன் வருத்திப் பொருள்கொடு வென்றல்போல் என்பதாம்.

33

## டுஅ இல் - ஆம் - அதி - கொடுங்கோன்மை.

(வி-ரை.) வேலொடுநின்றா னென்றதனாலே பிறரொடு நில்லாமையும், இடுவென்றதனாலே குடியிறையில்லாமையும், கொள்ளப்பட்டன. தராக்கால் தண்டிப்பேனென்னும் குறிப்பினாதலால் இரந்து வாங்குதலும் கொடுங்கோன்மை யாயிற்று. [இவ்விரண்டு பாட்டாலுங் கொடுங்கோன்மையினது குற்றம் சொல்லப்பட்டது.] உ

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

(ப-ரை.) நாடொறும்-நாள்தோறும், நாடி (தன்னாட்டிலே தோன்றும் தீமைகளை) ஆராய்ந்து, முறை-முறைமையை, செய்யா - (அதற்கு ஒக்கச்) செய்யாத, மன்னவன்-அரசன், நாடொறும்-நாள்தோறும், நாடுகெடும்-நாடிழப்பான், எ-று.

(க-ரை.) தன்னாட்டிற் குற்றங்களை யாராய்ந்து நீதி செலுத்தாத மன்னன் தன்னாட்டை யிழப்பன்-என்பதாம்.

(வி-ரை.) நாடு உறுப்பாதலால் அதன் கெடுதல் அவன்மேல்நின்றது இழத்தல் பயன் அடையாமை. ௩

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

(ப-ரை.) சூழாது-(மேல்வினைவை) எண்ணுமல், கோல்கோடி-முறை தப்ப செய்யும, அரசு-அரசனுனவன்; (அச்செயலால்) கூழும்-(முன்னே சம்பாதிக்கப்பட்ட) பொருளேயும், குடியும் - பின் (அது சம்பாதிக்கைக்கு ஏதுவாகிய) குடிகளேயும், ஒருங்கு-ஒன்றுசேர, இழக்கும்-இழப்பான்எ-று.

(க-ரை.) மநுநீதிதப்ப வரசாளுமரசன் பொருளேயுங் குடிகளேயு மிழப்பான்-என்பதாம்.

(வி-ரை) கோடியென்னும் வினையெச்சம் கோடமென்னும் வினையெச்சப் பொருளில் வந்தது. முன்சம்பாதிக்கப்பட்ட பொருளே இழத்தற்கு ஏது வருகிற பாட்டாற் சொல்லுகிருர். ௪

அல்லல்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(ப-ரை.) செல்வத்தை-(அரசன்) செல்வமாகிய (மரத்தை) தேய்க்கும் குறைக்கும், படை-வாளாவது, (அவன்) முறைசெய்யாமையினுலே, அல்லற்பட்டு (குடிகள்) துன்பப்பட்டு, ஆற்று து-(அதனைப்) பொறுக்கமாட்டாமல், அழுதகண்ணீரன்றே-அழுதகண்ணீரல்லவோ, எ-று.

(க-ரை.) குடிகளழுத கண்ணீரல்லவோ கொடுங்கோல்வேந்தைசெல்வத்தை யறுக்கும் வாளென்பதாம்.

## ௫௬-ஆம்-அதி-கொடுங்கோன்மை. ௩௬௧

(வி-ரை.) அல்லற்படுத்திய பாவத்தினது தேய்த்தல் அதற்குயேதுவாகிய கண்ணீர்மேல் நின்றது. அக்கண்ணீரைக்காட்டிலும் கொடியது வேறல்லாமையால் செல்வங்கடிதிலே தேயுமென்பது கருத்து (ஏகதேசவுருவகணி.)

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னவா மன்னர்க் கொளி.

(ப-ரை.) மன்னர்க்கு-அரசர்க்கு, மன்னுதல்-(புகழ்களாலே) நிலைபெறுதல், செங்கோன்மை-செங்கோன்மையினுல் (ஆகும்) அஃது - அச்செங்கோன்மை, இன்றேல்-இல்லையாயின். மன்னர்க்கு-அரசர்க்கு, ஒளி-அப்புகழ்களானவை, மன்னுவாம்-உண்டாகாவாம், எ-று.

(க-ரை.) அரசர்க்கு செங்கோன்மையே புகழ்களாம், அஃதில்லாவிடி லப்புகழ்க ளுண்டாகாவாம்-என்பதாம்.

(வி-ரை.) மன்னுமை ஒருப்பாதும் நிலையாமை. பழிக்கப்பட்டால் புகழ்நிலையாமையால் தாமும் நிலையாரென்பதாயிற்று. வெற்றிக் கொடைமுதலாகிய ஏதுக்களால், புகல் பலவகைப்படுதலால் மன்னு எனப்பன்மையாற் சொல்லினர். அப்புகழ்களெல்லாம் செங்கோன்மை யில்லாதவிடத்து இல்லையாமென்பதாம். [இவை நான்குபாட்டாலும் கொடுங்கோன்மையான் அடைபுங்குற்றம் சொல்லப்பட்டது.]

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(ப-ரை.) வேந்தன்-அரசனது, அளியின்மை-அருளில்லாமையானது, வாழும்-(அவனுட்டிலே) வாழும், உயிர்க்கு-குடிகளுக்கு, துளி-மழையினது, இன்மை-இல்லாமையானது, ஞாலத்திற்கு-பூமியில் வாழுமுயிர்களுக்கு எற்று எவ்வகைத்துன்பந்தருமோ, அற்றே-அவ்வகைத்துன்பமேதரும்எ-று

(க-ரை.) மழையில்லாமை துன்பந்தரும், அதுபோல அரசனருளில்லாமை குடிகளுக்குத் துன்பந்தரும்-என்பதாம்.

(வி-ரை) உயிரென்றது குடிகளை முன் வானோக்கி வாழுமென்றதனை எதிர்மறை முகத்தாற் சொல்லியபடி. ௭

இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற் கீழ்ப்படின்.

(ப-ரை.) முறைசெய்யா-முறையைச் செய்யாத, மன்னவன்-அரசனது கோற்கீழ்-கொடுங்கோலின்கீழ், படின்-வாழின், (யாவர்க்கும்) உடைமை-(பொருளு) ருடைமையானது, இன்மையின்-இல்லாமையினும், இன்னாது அதிக துக்கத்தைச் செய்வதாகும், எ-று.

## ௨௩௦ இகூ-ஆம் அதி. கொடுங்கோன்மை.

(க-ரை) அரசன் கொடுங்கோலின்கீழ் வாழ்தல்வறுமையிலுங்கொடிய துன்பந்தரும்-என்பதாம்.

(வி-ரை.) தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் விரும்புவனது காட்டிலே அடிகுத்து முதலானவை பொருளுடையார்க்கே ஆதலாச்

அவ்வுடைமை யில்லாமையினும் இன்றாயிற்று. [இவை இரண்டுபாட்டா லும் அவனாட்டு வாழ்வார்க்கு வரும் குற்றஞ்சொல்லப்பட்டது.] ௬

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

(ப-ரை.) மன்னவன்-அரசன், முறைகோடி-முறைதப்ப, செய்யின் (பொருளைச்) சம்பாதிப்பானாயின் (அவனதுநாட்டிலே) உறை-பருவமழை யானது, கோடி-இல்லாமற்போக, வானம்-மேகமானது, பெயல்-பொழித லை, ஒல்லாது-பொருந்தாது, எ-று.

(க-ரை.) அரசன் மநுமுறைதப்பி வரசாளி லவனாட்டிலே மழைபெய் யாது-என்பதாம்.

(வி-ரை.) பருவமழை யில்லாமைக்கு ஏதுவாகின்ற பாட்டாற்சொல் லுகின்ற கோடி எனவந்த இரண்டு சொற்களும் கோடஎன்னுஞ் சொற் பொருளில்வந்தன. ௭

ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

(ப-ரை) காவலன்-காப்பாற்றற்கு உரிய அரசன், காவானெனின் (உயிர்களைக்) காப்பாற்றானாயின் (அவனதுநாட்டிலே) ஆ-பசுக்களும், பய ன்குன்றும்-பால்சுருக்கும், அறுதொழிலோர்-அந்தணரும், நூல்-நூல்களை மறப்பர்-மறந்துவிடுவர், எ-று.

(க-ரை.) அரசன் உயிர்களைக்காவாவிடி லவனாட்டிற் பசுக்கள்பால்சு ருக்கும், வேதியர் வேதமறப்பர்-என்பதாம்.

(வி-ரை.) ஆபயன்-ஆவினின்றும் கொள்ளப்படும் பயன் அறுதொழி லாவன: வேதமோதல், ஓதுவித்தல், யாகஞ்செய்தல், செய்வித்தல், ஈதல் ஏற்றல்-என்பவை, பால் குறைதலாலும், நூலை மறைத்தலாலும், தேவர்க்கு யாகம் நடவாமையால் மழைபெய்யா தென்பதாயிற்று. [இவை இரண்டு பாட்டாலும் அவனாட்டில் உண்டாம் குற்றம் சொல்லப்பட்டது. ௬0

ஐம்பத்தாறும்-அதிகாரம்—கொடுங்கோன்மை
முற்றிற்று.

# ஐம்பத்தி ஏழாம் அதிகாரம்.

# வெருவந்த செய்யாமை.

அஃதாவது: குடிகள் அஞ்சுவதும், பகுதியென்று சொல்லப்படுமெமர் திரிமுதலாகிய அங்கங்கள் அஞ்சுவனும், தான் அஞ்சுவதும், ஆகிய தொழில்களைச் செய்யாமை, அவை செய்தல் கொடுங் கோன்மையிலே சேர்தலால், இது அதன்பின் வைக்கப்பட்டது.

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

(ப-ரை.) (ஒருவன் மெலியவனுக்குத் தீங்கு செய்தவிடத்து) தக்காங்கு-நடுவொய்நின்று, நாடி-(அதனை) ஆராய்ந்து, தலைச் செல்லாவண்ணத்தால் (பின்னும்) அப்படிப்பட்ட காரியத்திலே செல்லாமற்பொருட்டு,ஒத்தாங்கு (அகுற்றத்துக்கு) ஏற்க, ஒறுப்பது-(அவனைத்) தண்டிப்பவனே, வேந்து-அரசனுவான், எ-று.

(க-ரை.) நடுவொய்நின்று ஒருவன் குற்றத்தை யாராய்ந்து தக்கபடிதண்டிப்பவனே யரசன் - என்பதாம்.

(வி-ரை) இதனாலே தருந்த தண்டம் நாடாமையும். வேறொருகாரணம் பற்றி அதிகமாகத் தண்டித்தலும், குடிகள் அஞ்சுந்தொழிலாதல்பெற்றும்.

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர்.

(ப-ரை) ஆக்கம் - செல்வமானது, நெடிது நெடுங்காலம், நீங்காமை-நீங்காமையை, வேண்டுபவர்-விரும்புவோர், கடிதோச்சி- (அத்தருத்த தண்டம்செய்யத் தொடங்கும்போது) அளவுகடக்கச் செய்பவர்போலே,தொடங்கி-மெல்லவெறிக(செய்யும்போது அளவுகடவாமற்செய்யக்கடவர்), எ-று

(க-ரை.) செல்வம் வேண்டுவோர் வலியதண்டனை செய்பவர்போலத் தொடங்கி மெலிய தண்டனைசெய்யக்கடவர் - என்பதாம்.

(வி-ரை.) கடிதோச்சல்-குற்றஞ்செய்வார் அதனை அஞ்சுதற் பொருட்டும், மெல்லவெறிதல் யாவரும் அஞ்சாமைப் பொருட்டும், ஆம் தொடங்கி

னவளவிக்குக்குறைதல்பற்றி, தகுந்ததண்டஞ் செய்தலை மெல்லவென்றார். ஓச்சுதல்-எறிதல், இவ்விரண்டும் உவமைபற்றி வந்தன. [இவையிரண்டுபாட்டாலும்குடிகள் அஞ்சுவன செய்யாமையின தூஇலக்கணம்சொல்லப்பட்டது]

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

(ப-ரை.) (அரசன்) வெருவந்த (குடிகள்) அஞ்சப்பட்ட செயல்களை செய்து, ஒழுகும்-நடக்கும், வெங்கோலனாயின்-கொடுங்கோலனாயிருந்தால் ஒருவந்தம் - நிச்சயமாகவே, ஒல்லை-கடிதில், கெடும் - (அவன்) கெடுவான், எ-று.

## ௫௬௨ ௫௭-ஆம்-அதி-வெருவந்தசெய்யாமை.

(க-ரை.) குடிகளஞ்சத்தக்க வற்றைச் செய்யுங் கொடுங்கோலரசன் விரைவிற் கெடுவான் - என்பதாம்.

(வி-ரை.) அச்செயல்களும் கேடும் பின்னே சொல்லப்படும்.

இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(ப-ரை.) இறை-(நம்) மரசனானவன், கடியனென்று - பொல்லாதவனென்று, உரைக்கும்-(குடிகளாலேசொல்லப்படுகிற) இன்னாச்சொல்-துன்பந்தருஞ் சொல்லையுடைய, வேந்தன்-அரசன், உறைக்குறுகி - ஆயுளுக்குறைந்து, ஒல்லைகெடும்-(செல்வமும்) கடிதினிழப்பான், எ-று,

(க-ரை.) கொடியனென்று சொல்லப்பட்ட கொடுங்கோ லரசன் ஆயுள்குறைந்து செல்வ மிழப்பான் - என்பதாம்.

(வி-ரை.) ஆயுள் குறைதலாவது-அச்சொல் வில்லாதவர்க்கு உள்ளத்திலே குறைதல்.

அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

(ப-ரை.) அருஞ்செவ்வி-(தன்னைக் காணவேண்டுவோர்க்கு) அரிதாகி யசமயத்தையும், இன்னாமுகத்தான்-(கண்டால்) இனிமையில்லாத முகத்தையும் உடையவனது, பெருஞ்செல்வம்-பெரியசெல்வம், பேய்-பேயால், கண்டதன்னது-காணப்பட்டது போல்வதொரு குற்றத்தை, உடைத்து-உடையதாகும், எ-று.

(க-ரை.) அரிய சமயத்தையும் கடிய முகத்தையுமுடைய அரசன் செல்வமானது பேய்கண்ட செல்வம்போலாம் - என்பதாம்.

(வி-ரை.) எனவே இவை இரண்டும் அஞ்சுவன செய்தலாயிற்று. இவை செய்வானை ஒருவரும்சேராமையால் அவன்செல்வம் தனக்கும் பிறருக்கும் பயன்படாதென்பது பற்றிப்பேய் கண்டன்ன துடைத்தென்றார் காணுதல் தன்வசமாக்கல். ௯

கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

(ப-ரை.) (அரசன்) கடுஞ்சொல்லன் - கடிய சொல்லையுடையவனும், கண்ணிலன்-கண்ணோட்ட மில்லாதவனும், ஆயின்-ஆனால், நெடுஞ் செல்வம்-(அவனது) பெரியசெல்வமானது, நீடின்றி-நீடுதலில்லாமல், ஆங்கே-அப்பொழுதே, கெடும்-அழியும். எ-று.

(க-ரை.) அரசன் வன்சொல்லுடையவனு மிரக்கமில்லாதவனுமானால் அவன் செல்வம் கெடும்-என்பதாம்.

## ௫௭-ஆம்- அதி-வெருவந்தசெய்யாமை. உ௬௯

(வி-ரை.) வேட்டல் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொருளீட்டல்கள் காமமோ டேழு எனப்பட்ட வினைகளுள்,கடுஞ்சொல்லையும், மிகுதண்டத்தையும் இவர் அச்சஞ் செய்தலுள் அடக்கினர். இவை செய்த பொழுதே கெடுஞ் சிறுமையதல்லாதாயினு மென்றற்கு நெடுஞ்செல்வமென்றார். ௰

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

(ப-ரை.) கடுமொழியும்-கடியசொல்லும், கையிகந்த தண்டமும்- (குற்

நத்தின்) மிகுந்த தண்டமும், வேந்தன்-அரசனது, அடும்-(பகை) வெல்லு தற்கு ஏற்ற, முரண்-மாறுபாடாகிய, (இரும்பை) தேய்க்கும்-தேய்க்கின்ற, அரம்-அரங்களாம், எ-று.

(க-ரை.) வன்சொல்லும் அதிக தண்டமும் அரசன் பலன்களையழிக்கும் அரங்களாம் - என்பதாம்.

(வி-ரை.) கடியசொல்லாற் சேனையும் அதிக தண்டத்தினாலே தேசமும் கெட்டு மாறுபாடு சுருங்கி வருதலால் அவைகளை அரமாக்கினர். (ஏக தேசவுருவகம் [இவை ஐந்து பாட்டாலும் சமயமில்லாமை இன்னா முகமுடைமை கண்ணோட்ட மில்லாமை கடுஞ்சொற் சொல்லல், அதிகதண்டம் இவைகள் குடிகள்அஞ்சுக்தொழில்களென்பதும்)-இவைசெய்தவன் ஆயுளும் பகைவெல்லு முரணும் செல்வமும் இழக்குமென்பதும், சொல்லப்பட்டன.

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(ப-ரை.) (காரியவெண்ணத்தை) இனத்தாற்றி - மந்திரிகளிடத்தே வைத்து, எண்ணாத-(அவரோடு தானும்) எண்ணிச்செய்யாத, வேந்தன்-அரசன், (தன் காரியந்தப்பியவிடத்து) சினத்தாற்றி-(தன்னைக்) கோபத்திலே செலுத்தி, சீறின்-(அவரைக்) கோபிப்பானாயின், திரு-(அவனது) செல்வமானது சிறுகும்-(நாடோறும்- சுருங்கும், எ-று.

(க-ரை.) காரியங்களை மந்திரிகளுக் கொப்பித்து அவரோடெண்ணிச் செய்யாத அரசன் அம்மந்திரிகளைக் கோபிக்கி லவன் செல்வங்கெடும்-என்பதாம்.

(வி-ரை.) இராச்சிய பாரத்தைத் தாங்கிச் செலுத்துதலொப்புமையால் மந்திரிகளை இனமென்றும், அத்தவறு தன்னதென் றிராமல் அவர்மேலேற்றிக்கோபித்தால் அவர் அஞ்சி நீங்குவாராதலால் அத்தவறுதிரும் விதமும், அப்பாரம் இனிது செலுத்தும் விதமும், இலனுமென்பது நோக்கித் திரு சிறுகுமென்றும், சொல்லினர். [இதனால் மந்திரிமுதலாகிய பகுதிஅஞ்சுந் தொழிலும், அதுசெய்தால் அடைவதும். சொல்லப்பட்டது.]

உ௬௯ இ-ர - ஆம்- அதி-கண்ணோட்டம்.

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

(ப-ரை.) சிறைசெய்யா-(முன்னே தனக்கொரு காப்பிடமாக) அரண் செய்து கொள்ளாத, வேந்தன்-அரசன், செருவந்த போழ்தில்-போர்வந்த காலத்திலே, வெருவந்து-(காப்பு இல்லாமையால்) அஞ்சி, வெய் - விரைவிலே, கெடும்-கெடுவான், எ-று.

(க-ரை.) அரண் கட்டிக்கொள்ளாத அரசன் விரைவிற் கெடுவான்-என்பதாம்.

(வி-ரை.) பகையை அஞ்சிச்சேர்ந்தவர் நீங்குதலால் தனியனுமித்தாறும் அஞ்சிப்பகை வசத்தனுவனென்பதாம். [இதனால் தான் அஞ்சும் செயலும் அது செய்தால் அடைவதும் சொல்லப்பட்டன.] ஏமம், காப்பு, ஒரு பொருட் சொற்கள். ௯

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

(ப-ரை.) கடுங்கோல்-கடுங்கோலனுகிய அரசன், கல்லார்(நீதிநூலாதிகளைக்) கல்லாதவரை, பிணிக்கும்-(தனக்கு பகுதியாகக்) கூட்டாநிற்பான், அதுவல்லது-அக்கூட்டமல்லாமல், நிலக்கு-பூமிக்கு, பொறை (அதிகமான) பாரம், இல்லை-(வேறே) இல்லை, எ-று.

(க-ரை.) கொடுங்கோலரசன் கல்வி கல்லாதவர்களை மந்திரிகளாகிக் கொள்வான் அதுவே பூமிக்குப்பாரம் - என்பதாம்.

(வி-ரை) கடுங்கோல்-இங்கே அதிக தண்டம் செல்வானுக்கு ஆயிறறு அவன் அதுசெய்தற்கு உடன்படுவோரை யல்லது கூடாமையால் கல்லார்ப் பிணிக்கு மென்றும், மற்றவையெல்லாம் சுமக்கிறது இயல்பாகலால் நிலத்துக்குப் பாரம் அது வல்லதில்லையென்றும், சொல்லினர். [இதனால் அஞ்சுவனசெய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.] ௰

ஐம்பத்தியேழாம்-அதிகாரம்-வெருவந்தசெய்யாமை.
முற்றிற்று.

---

## ஐம்பத்திஎட்டாம்-அதிகாரம்.

# கண்ணோட்டம்.

அஃதாவது. தன்னோடு பழகினவரைக்கண்டால் அவராலேசொல்லப் பட்டதினை மறக்கமாட்டாமை, இது அவர்மேலே கண் ஓடியவிடத்து நிகழ்வதாகலால் அப்பெயர் பெற்றது இது தாட்சிணியமென்றும், முகம்

## ருஅ - ஆம் அதி - கண்ணோட்டம். ௨௪௫

கொடுத்தலென்றும், சொல்லப்படுகின்றது, முன்னதிகாரத்திலே சொல்லப்பட்டதையே சிறப்புப்பற்றி இதிலே விரித்துச் சொல்லுதலால் அதன் பின் வைக்கப்பட்டது.

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

(ப-ரை.) கண்ணோட்டமென்னும் - கண்ணோட்டமென்று சொல்லப்படுகிற, கழிபெருங்காரிகை - மிகவும் பெரியஅழகானது, உண்மையால் (அரசரிடத்தே) உண்டாயிருக்கையால், இவ்வுலகு-இவ்வுலகமானது, உண்டு-உண்டாகின்றது, எ-று.

(க-ரை.) அரசனுக்குத் தாட்சிண்ணியமென்னு மழகுண்டாயிருப்பதை யால் இவ்வுலகமுண்டா யிருக்கின்றது-எனபதாம்.

(வி-ரை.) கண்ணோட்டமில்லாமை வெருவந்த செய்தலென்கிற அஞ்சுவன செய்தலாகலால், அவர்நாட்டு வாழ்வார் புலியைசேர்ந்தமானினம் போற் காப்பிடம் பெறுமைபற்றி இ வுலகு உண்டென்றார்.

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை

(ப-ரை.) உலகியல்-உலகநடையானது, கண்ணோட்டத்து-கணணோட்டத்தினிடத்தே, உள்ளது-நிகழ்வதாகும், (ஆதலால்) அஃதிலார்-அக்கண்ணோட்டமில்லாதவர், உண்மை-உளராதல், நிலக்கு-பூமிக்கு, பொறைபாரமாவதற்கே (வேறொன்றுக்கு அன்று) எ-று.

(க-ரை.) உலகத் தாட்சிணியத்திலே நடப்பதாம், இஃதில்லாதவர்பூமிக்குப் பாரமாவர்-என்பதாம்

(வி-ரை.) உலககடையாவது-உபகாரஞ்செய்தல், காப்பாற்றல், பிழை பொறுத்தல் இவை முதலானவை அவை உண்டாகாமையால், கண்ணோட்டமில்லாதவர் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பதுபற்றி நிலத்துக்கு பொறையென்றார் [இவை இரண்டுபாட்டாலும் கண்ணோட்டத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது ] உ

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னுங்
கண்ணோட்ட மில்லாத கண்

(ப-ரை.) [illegible] பாடற்கு-பாடற்றொழிலோடு, இயைபு [illegible] என்ன பயனுடைத்தாகும், [illegible] கண்ணோட்டமில்லாதகண்-கண்ணோட்டமில்லாதவிடத்து, என்னும்- என்னபயனுடைத்தாகும், எ-து.

34

உஎஙு ரு அ - ஆம் - அதி - கண்ணோட்டம்

(க-ரை.) பாடற் கிசையில்லாவிடிற் பயனில்லை, அதுபோலக் கண்ணுக்குத் தாட்சிணிய மில்லாவிடிற் பயனில்லை-என்பதாம்.

(வி-ரை.) எப்படி பாடற்றொழிலோடு பொருந்தாதவிடத்து இசையாலே பயனில்லையோ அப்படியே கண்ணோட்டத்தோடு பொருந்தாதவிடத்துக் கண்ணினாலே பயனில்லை என்பதாம்.

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்

(ப-ரை.) அளவினால்-தகுமளவினால், கண்ணோட்டமில்லாத-தாட்சிணியமில்லாத, கண்-கண்களானவை, முகத்து-முகத்தினிடத்து, உளபோல்-உள்ளவைபோல் (கண்டோற்குத் தோன்றுவதல்லாமல்) எவன் (வேறு) என்ன பயனை, செய்யும்.

(க-ரை.) கண்ணோட்டமில்லாதகண் [illegible] பயனை தருமென்பதாம்

(வி-ரை.) தோன்றுதலே யல்லாமலென்னுஞ் சொற்கள் வருவிக்கப்பட்டன. அதிகமான கண்ணோட்டத்தை விலக்குதற்கு அளவினாலென்றார். அக்கண்கள் ஒருபயனையும் செய்யாவென்பது கருத்து.

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(ப-ரை.) கண்ணிற்கு (ஒருவனது) கண்ணிற்கு; அணிகலம்-அணியும் அணியாவது, கண்ணோட்டம்-தாட்சிணியமாகும், அஃதின்றேல்-அஃது இல்லையாயின் (அக்கண்) புண்ணென்று, உணரப்படும்(அறிவுடையவரால்) அறியப்படும், எ-று.

(க-ரை.) கண்ணிற்கு ஆபரணந் தாட்சிணியமாம். அஃதில்லாவிடில் கண் புண்-என்பதாம்.

(வி-ரை) கண்ணிற்கு வேறே அணியில்லாமையால், கண்ணிற் கலமென்றும், கண்ணாய்த் தோன்றினும், நோய்களாலும், நீர்பற்றலாலும் துயர்விளைத்தலை நோக்கி, புண்ணென் றுணரப்படுமென்றும்சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் அது செய்யாத கண்ணின் குற்றம் சொல்லப் பட்டன.]

> மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
> டியைந்துகண் ணோடா தவர்.

(ப-ரை.) கண்ணோடு (தழுவதற்குரிய) கண்ணோடு, இயைந்து-பொருந்தியிருந்தும், கண்ணோடாதவர்-அக்கண்ணோட்டமில்லாதவர் (சஞ்சரிக்கின்ற) வராயிருக்கினும், மண்ணோடு-மண்ணுடனே, இயைந்த-பொருந்தி நின்ற மரத்தனையர்-மரத்தினையொப்பர், எ-று.

## ருஅ - ஆம்-அதி-கண்ணோட்டம். உகூ

(க-ரை.) தாக்ஷிணியமில்லாதவர், மரத்திற்கொப்பாவார்-என்பதாம்.

(வி-ரை) கண்ணினது தொழிலாகிய ஓடுதல்கண்ணை யுடையவன்மேலேகின்றது. மரம் கண்ணோடு பொருந்தியும் கண்ணோடாமையால் உபமானமாயிற்று.

> கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
> கண்ணோட்ட மின்மையு மில்.

(ப-ரை.) கண்ணோட்டமில்லவர்-கண்ணோட்டமில்லாதவர், கண்ணிலர்-கண்ணுடையவருமல்லர், கண்ணுடையார்-கண்ணுளார், கண்ணோட்டமின்மையும், கண்ணோட்டமில்லாதவராதலாலும், இல்-இல்லை, எ-று.

(க-ரை.) கண்ணோட்டமில்லாதவர், குருடர் கண்ணோட்டமுள்ளவர் கண்ணுளார்-என்பதாம்.

(வி-ரை.) நெருப்பு எங்கே இல்லையோ அங்கே புகையும் இல்லை, புகை எங்கே இருக்கின்றதோ அங்கே நெருப்பும் இருக்குமென்பதுபோல, கண்ணோட்டம் எவரிடத்து இல்லையோ அவரிடத்தே கண்ணும் இல்லை, கண் எவரிடத்து இருக்கின்றதோ அவரிடத்தே கண்ணோட்டமும் இருக்கும்என அனுமானப் பிரமாணம் பற்றிச் சொல்லியது [இவையிரண்டுபாட்டாலும் கண்ணோடாதாரிழிவுசொல்லப்பட்டது.] எ

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(ப-ரை.) (இவ்வுலகு) இந்தவுலகம், கருமம் (முறைசெய்தலாகியதமது தொழில்) சிதையாமல்-அழியாமல், கண்ணோடவல்லார்க்கு-கண்ணோட்டஞ்செய்யவல்ல அரசர்க்கு, உரிமை-உரியதாந்தன்மையை, உடைத்து-உடையதாகும், எ-று

(க-பொ.) கண்ணோட்டமுடையவராகிய அரசருக்கு இவ்வுலகமுரிமையுடையது என்பதாம்.

(வி-ரை.) தம்மோடு பழகினோர் பிறருக்கு இடுக்கண் செய்தவிடத்து அவரைக் கண்ணோட்டத்தினாலே தண்டிக்காதவர்க்கு முறைகெடுதல்முன்னே ஓர்த்து கண்ணோடாதென்றமுறையிலே சொல்லப்பட்ட முறை விலக்கணத்தாலும் பெற்றும். முறைகெட வருமிடத்துக் கண்ணோட்டஞ்செய்யாமையும், அது வாராதவிடத்துக் கண்ணோட்டஞ்செய்தலும். ஒருவனுக்கு நச்சுபாவமாகுதல் அருமையாகலால், கண்ணோட வல்லார்க்கென்றும், அசபாவமுடையவர்க்கு உலகமுழுதும் நெடுங்காலம் வசப்படுதலால், உரிமையுடைத்தென்றும் சொல்லினார். [இதனால் கண்ணோட்டஞ்செய்யும் விதம் சொல்லப்பட்டது.] அ

**[illegible]** **இக-ஆம்-அதி-ஒற்றாடல்.**

ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(ப-ரை.) ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணும் (தம்மை) ஒறுக்குமியல்புடையவரிடத்தும், கண்ணோடி-கண்ணோட்டமுடையவராகி, பொறுத்தாற்றும்-பண்பே (அக்குற்றத்தைப்) பொறுக்குமியல்பே, தலை (அரசர்க்குத்) தலைமையான வியல்பு; எ-று.

(க-ரை.) தம்மை வருத்துவோரிடத்தும் கண்ணோட்டமுடையவரசரே தலையாவார் - என்பதாம்

(வி-ரை.) பண்பினரென்றதனால் அவர் பழக்கம் பெற்றும், ஒறுத்தாற்றும், பொறுத்தாற்றும்-ஒருசொல்,

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(ப-ரை) நயத்தக்க (யாவராலும்) விரும்பத்தக்க நாகரிகம்-கண்ணோட்டத்தை, வேண்டுபவர்-வேண்டுவோர், நஞ்சு-நஞ்சை, பெயக்கண்டும்-(பழகினவர்) இடக்கண்டும், உண்டு (கண்மறுக்கமாட்டாமையால் அதனை) உண்டு, அமைவர் (பின்னும் அவரோடு) பொருந்துவார், எ-று.

(க-ரை.) தாட்சிணியம் வேண்டுவோர சினேகர் நஞ்சிடக்கண்டுமுண்டு சேகிப்பர்-என்பதாம்.

(வி-ரை) [இவ்விரண்டு பாட்டாலும் அவரைத்தண்டிக்காமல் கண்ணோட்டஞ் செய்யவேண்டுவது பிறருக்குக் குற்றஞ்செயதவிடத்தன்றுதமக்குக் குற்றம்செய்தவிடத்தே யென்பது சொல்லப்பட்டது.] கο

ம்பத்திஎட்டாம்-அதிகாரம்-கண்ணோட்டம்
முற்றிற்று.

---

## ஐம்பத்தொன்பதாம் அதிகாரம்

# ஒற்றாடல்.



அஃதாவது. பகைவர் அயலோர் நட்பினர் என்னு மூன்று திறத்தாரிடத்தும் நிகழ்தவை அறிதற்கு ஒற்றரை ஆளுதலால், முன்சொல்லப்பட்ட இலக்கணமுடைய அரசனுக்குத் தன்னுடு காக்கும்போதும் பிறர்நாடுபிடிக்

ரும்போதும் வேண்மெமைகளைச் சொல்லத்தொடங்கினு ராதலால் அவ
ர்ன்கொரியங்களுக்கும் அவசியம் வேண்டுவதாகிய இது முன்னே வைக்க
ப்பட்டது.

### .இக-ஆம்- அதி-ஒற்றாடல். உகக.

ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

(ப-ரை.) மன்னவன்-அரசனானவன், ஒற்றும்-ஒற்றனும், உரைசான்ற-புகழ்நிறைந்த, நூலும்-நீதிநூலும் (ஆகிய) இவை இரண்டும்-இவ்விரண்டும், கண் (தன்னிரு) கண்களுமாக, தெற்றென்க-தெளியக்கடவன். எ-று.

(க-ரை. அரசனானவன் ஒற்றனையும் நீதிநூலையுந்-தன்னிரு கண்களா கத் தெளியக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) ஒற்றனானவன் தன்கண்ணுக்கு எட்டாததூரமெல்லாம்போ ய்க்கண்டு, அங்கே நடந்தவையெல்லாம் அறிவித்தலாலும், நூலானது அந் நடந்தவைகளுக்குத் தன்னறிவுக்கு எட்டாத தொழில்களை யெல்லாஞ் சொல்லி அறிவித்தலாலும், இவவிரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணு

ம் ஞானக் கண்ணுமாக நிசசயித்துக்கொணடு நடககக் கடவனென்பதாம். [இதனல் ஒற்றினது சிறப்புச சொல்லப்பட்டது.]

எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்.

(ப-ரை.) எல்லார்க்கும்-எல்லாரிடத்தும், நிகழ்பவை யெல்லாம்-நடப் பவைகளை யெல்லாம், எஞ்ஞான்றும்-நாடோறும் வல்லறிதல் (ஒற்றனாலே) விரைந்தறிதல், வேந்தன்றொழில்-அரசனுக்கு உரியதொழில், எ-று.

(க-ரை.) யாவரிடத்து நடப்பவைகளை யொற்றதனலறித லரசனது தொழிலாம்-என்பதாம்.

(வி-ரை.) எல்லார்க்குமென்றது பகைவர், அயலோர், நட்பினர்,என்னுமூவகையாரையும், நிகழ்பவை யெல்லாமென்றது. நல்லவையும், தீயவையும் ஆகிய சொற்களையும், செயல்களையும், அவை நிகழ்ந்தபொழுதே,அவைகளுக்குத் தக்கவழியாகவாவது தேறுதலாகவாவது செய்ய வேண்டுதலால் வல்லறிதலென்றார். அவ்விரு தொழில்களுக்கும் அறிதல் காரணமாகலால் அதனைத் தொழிலென்று உபசரித்தார். ஒற்று அதிகாரத்தால் வந்தது [இதனால் ஒற்றினாலாகிய பயன் சொல்லப்பட்டது.] உ

ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

(ப-ரை.) ஒற்றினால்-ஒற்றனைக்கொண்டு, ஒற்றி (எல்லாரிடத்தும்நிகழ்ந்தவைகளை) அறிந்துவரச்செய்து, பொருள் (அவைகளால் அமையும்) பயனை தெரியா-ஆராய்ந்தறியாத, மன்னவன் - அரசனவன், கொற்றங் கொளக்கிடந்தது-வெற்றியடையக் கிடந்தது, இல்(வேறொருவழி)இல்லை, எ-று

## உஅ௰ ருக - ஆம் - அதி - ஒற்றாடல்.

(க-ரை.) ஒற்றனைக்கொண்டு பகைவர் காரியங்களை யறியாத அரசன் வெற்றியடையான்-என்பதாம்

(வி-ரை.) அந்நிகழ்ந்தவையும் பயனும் அறியாமல் பகைகருத எளியனாதல் ஒற்றதனாலே நீங்குவதன்றி வேறொன்றினாலே நீங்காமையால், கொற்றங்கொளக்கிடந்த தில்லென்றார். [இதனால் அத்தொழில் செயயாதவிடத்துவரும் குற்றஞ் சொல்லப்பட்டது ]

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

(ப-ரை.) தம்-தம்முடைய, வினை செய்வார்-காரியஞ் செய்பவர் சுற்றம்-சுற்றத்தார், வேண்டாதார்-பகைவர், என்று - என்ற சொல்லப்பட்ட அனைவரையும்-எல்லாரையும், ஆராய்வது சொல்லாலும் செயலாலும் ஆராய்பவனே, ஒற்று-ஒற்றனவான், எ-று

(க-ரை) தொழிலாளரையும், உறவினரையும், பகைவரையும், ஆராய்பவனே ஒற்றனுவான்-என்பதாம்.

(வி-ரை.) அரசனுக்குக் காரியஞ் செய்வோராலே செய்யப்படு மவையும், சுற்றத்தாராலே தன்னிடத்தும் காட்டிடத்தும் செய்யப்படுமவையும், பகைவராலே தன்சோர்வு பார்த்தாலும் மேலேதேறப்படுதலும், முன்னிட்டுச் செய்யப்படுமவையும், அறிந்து அவைகளுக்கு ஏற்பவைகளைச் செய்ய வேண்டுதலால் இம்மூவகையாரையும் குறையாமல் ஆராயவேண்டு மென்றற்கு-அனைவரையு மாராய்வ தொற்றென்றார்.

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

(ப-ரை.) (எவரது செய்தியை அறிதற்குச்சென் றனோ அவரால்) கடாஅ சந்தேகிக்கப்படாத, உருவொடு-வடிவோடு (பொருந்தி), (அவர் சந்தேகித்து அறியத்தொடங்கினல்) கண்ணஞ்சாது (சேர்த்துப் பார்க்கின்ற அவர்கண்ணிற்கு அஞ்சாமலின்று, யாண்டும்-எவ்வுபாயங்களும் செய்தாலும் உகாஅமை (மனதிலுள்ளவைகளை) வெளியிடாதிருக்க, வல்லதே-வல்லவனே, ஒற்று-ஒற்றனுவான், எ-று.

(க-ரை.) ஐயமில்லா வடிவோடு பொருந்தி யஞ்சாதிருந்து பகைவர் என்செய்யினு முள்ளதைச் சொல்லாதவனே ஒற்றன்-என்பதாம்.

(வி-ரை) சந்தேகிக்கப்படா வடிவு பார்ப்பார், வணிகர், முதலானவர் வடிவு

துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று



(ப-ரை.) துறந்தார்-முழுதுந் துறந்தோரும், (படிவத்தர்-விரதவொழுக்கத்தோரும், ஆகி ஆக இறந்து போகக்கூடாத விடங்களிலெல்லாம்)போய் ஆராய்ந்து-ஆராய வேண்டியவைகளெல்லாம் ஆராய்ந் தறிந்து, என் செயினும் அவ்விடத்தோர்(சந்தேகித்துப்பிடித்து)என்ன துன்பஞ்செய்து கேட்டாலும் எ-று. சோர்விலது - தன்னைவெளிப்படுத்தாதவனே, ஒற்று - ஒற்றனுவான்.

(க-ரை.) துறவிகள் விரதர்கள் வடிவாகி, எங்கும்போயாராய்ந்தறிந்து பகைவர் துன்பஞ்செய்யினுந் தன்னைக்காட்டாதவ னொற்றனுவான் - என்பதாம்.

(வி-ரை.) விரதவொழுக்கம்-தீர்த்தயாத்திரை முதலானவை செயிலுமென்பது. அரவோரென்பதுசெய்யாரென்பதை விளக்குகின்றது. முன்னே சால்வகை உபாயமுஞ் சொல்லி இங்கேயும் நண்டத்தைப் பிரித்துச்சொல்லியது அதன்பொருத்தர் மருமை சிறப்புநோக்கி. ■

மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று.

(ப-ரை) மறைந்தவை (எவரது செயல்களை, அறியச்சென்றானோ அவரது)மறைவாயுள்ளசெயல்களை,கேட்கவற்றாகி(அவருக்கு உள்ளானவராலே கேட்கவல்லவனாகி, அறிந்தவை(கேட்டு)அறியப்பட்ட அச்செயல்களிலே, ஐயப்பாடில்லாத எ-று, (பின்) சந்தேகப்படுத லில்லாதவனே, ஒற்று-ஒற்றனாவான்.

(க-ரை.) இரகசியங்களைக் கேட்கவல்லவனாகிப் பகைவர் சந்தேகப்படாதவனே ஒற்றனாவான்-என்பதாம்.

(வி-ரை.) அம்மறைவாயுள்ள செயல்களைச் சொல்லுவாரை அறிந்து அவர் சந்தேகியாதபடிபோய் கூட்டி அவரே சொல்லும்படிக்கு அதற்கேற்றசொல்லையாவது செயலையாவது முன்னே உண்டாக்கி அச்சம்மந்தத்தினாலே கேட்கும்போதும் அன்னியர்போலே நின்று கேட்கவேண்டுதலால்-கேட்கவற்றாகியென்றும், கேட்டு அறியப் படுமவைகளைத் தானே சந்தேகித்து வந்து சொன்னால் அரசனால் அவைகளுக்கு ஏற்றகாரியம் செய்யக்கூடாமையால் ஐயப்பாடில்லதேயென்றும், சொல்லினார். [இவை நான்குபாட்டாலும் ஒன்றனது இலக்கணம் சொல்லப்பட்டது ] எ

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.

(ப-ரை.) ஒற்று-ஒரொற்றனாலே, ஒற்றி-மறைவாயறிந்து வந்து, தந்த-அறிவிக்கப்பட்ட, பொருளையும்-காரியத்தையும், மற்றுமோ ரொற்றினால்-பின்னும் (ஒரொற்றனாலும்) ஒற்றி-அறிந்து வரச்செய்து கொளல் (மெய்ப்புமைகண்டு) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) ஓரொற்றனறிந்து வந்தபொருளை மற்றொரு ஒற்றனாலறிந்து வரச்செய்து அரசன் கொள்ளக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) அவரோடு கலந்து நின்று மாறுபடச் சொல்லுதலும் கூடுமாகையால் அரசனுக்கு ஒருவன் சொல்லையே நம்பலாகா தென்பதாம். ()

ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(ப-ரை.) (ஒற்றரை ஆளு மிடத்து) ஒற்று-ஓரொற்றன், ஒற்று மற்றொரொற்றனை, உணராமை-அறியாதிருக்கும்படி, ஆள்க-ஆளக்கடவர் அப்படி ஆளப்பட்ட) ஒற்றர்களுள் உடன்மூவர் ஒரு பொருண்மேலே வேறுவேறு விடப்பட்ட) மூவருடைய சொல்-சொற்களும், தொக்க பயனால் ஒத்திருக்குமாயின்(தேறப்படும்) அப்பொருள்மெய்யென்று தெளியப்படும், எ-று.

(க-ரை.) ஓரொற்றன் மற்றொரொற்றனை யறியாதிருக்கும்படி யரசனாக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) ஆயினென்பது வருவிக்கப்பட்டது. ஒருவனையொருவன் அறிந்தால் தம்மிலேகலந்துகொண்டு ஒப்பச்சொல்வாராகையால்,உணராமைஆள்கவென்றும்,மூவர்க்கும் நெஞ்சஒருதன்மைப் படுதலும் பட்டால்நீடித்திருத்தலும்,கூடாமையால் தேறப்படுமென்றும், சொல்லினர். இதனாலே மூவர் சொல்லும்ஒத்திராமற்போனால்பின்னும்ஆராய்கவென்பதும்பெறப்பட்டது

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(ப-ரை.) ஒற்றின்கண (மறைந்தவைகளை அறிந்துசொல்லிய) ஒற்றனிடத்து, சிறப்பு-சிறப்பை, அறிய(பிறர்)அறிய, செய்யற்க-செய்யா திருக்கக்கடவன், செய்யின்-செய்தால், மறை (தன்னுள்ளே அடக்கப்படுமவைகளை புறப்படுத்தானாகும்(தானே) வெளியில் இட்டவனாவான்.

(க-ரை.) அரசன் ஒற்றனுக்குப் பிறரறியச சிறப்புச்செய்யா திருக்கக்கடவன், செய்தால் தனதுஇரகசியங்களை வெளிப்படுத்தினவனாவான்-என்பதாம்.

(வி-ரை.) மறையாவது-அவன் ஒற்றனென்பதும், அவன் சொல்லியதும், இச்சிறப்புப்பெற்ற இவன் யாரென்றும், இது பெறுதற்குக் காரணம் யாதென்றும், வினவுவாரும், சொல்வாரும், அயலாராகலால் புறப்படுத்தானாமென்றார். [இவை மூன்று பாட்டாலும் ஒற்றரை ஆளும்விதமும், அவரை விடுத்தலை அறியும் விதமும், அறிந்தாற் சிறப்புச்செய்யும் விதமும், சொல்லப்பட்டன.]

# அறுபதாம் - அதிகாரம்.

# ஊக்கமுடைமை.



அஃதாவது: மனமானது தொழில் செய்தலிலே எழுச்சியை உடைத்தா தலாம் ஒற்றால் உடைத்தனை அறிந்து அவைகளுக்கு ஏற்ற தொழில்செய்வோ னுக்கு இது அவசியம் வேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா
ருடைய துடையரோ மற்று.

(ப-ரை.) உடையரெனப்படுவது - (ஒருவரை) உடையவரென்று சொல் லுதற்குச் சிறந்தது, ஊக்கம்-மனவெழுச்சியாம், அஃதில்லார் - அம்மனவெழு ச்சியில்லாதவர், மற்றுடையது-வேறுடையது தானும், உடையரோ-உடைய ராவரோ, (ஆகார்) எ-று.

(க-ரை.) உடையவரென்று சொல்லத்தக்கது மனவெழுச்சியாம், அவ் வெழுச்சியில்லாதவர் யாதுமில்லாதவர்-என்பதாம்.

(வி-ரை.) வேறுடையதென்றது, முன் அடைந்துநின்ற பொருளை, உம் மை வருவிக்கப்பட்டது காப்பாற்ற வலிமையில்லாமையால் அதையும் இழப்ப ரென்பதாம். (க)

உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(ப-ரை.) (ஒருவனுக்கு) உள்ளமுடைமை - மனவெழுச்சி யுடைமையே, உடைமை-(நிலைபெற்ற) வுடைமையாம், பொருளுடைமை-பொருளுடைமை நில்லாது-நிலைபெறாமல், நீங்கிவிடும்-நீங்கும், எ-று.

(க-ரை.) மனவெழுச்சி நிலையுள்ளவுடைமையாம், பொருளுடைமை நிலை யில்லாதாம்-என்பதாம்.

(வி-ரை.) மனவெழுச்சி யுள்ளத்தின் குணமாகலால் அதற்கு நிலைபெறு தலும், பொருள் உடம்பினும் வேறாய் அழிவதாயிருக்கையில் அதற்கு நிலை

பெறுதலும், பொருள் உடம்பிறும் வேறாய் அழிவதாயிருக்கையில் அதற்கு நிலைபெருமையும், சொல்லப்பட்டன சொல்லவே அதுவுடைமை. [அதுவென்பது பெறப்பட்டது.] (௨)

ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

(ப-ரை.) ஒருவந்தம் - நிலைபெற்றதாகிய, ஊக்கம்-மனவெழுச்சியை, கைத்து - கைப்பொருளாக, உடையார் - உடையவர் (இழந்தவராயினும்), ஆக்கம்-கைப்பொருளை, இழந்தேமென்று-இழந்துவிட்டோமென்று, அல்லாவார்-மனஞ்சுழலார், எ-று.

(க-ரை.) மனவெழுச்சி யுடையவர் பொருளிழந்தும் வருந்தார் - என்பதாம்.

(வி-ரை.) மனஞ்சுழலாமைக்கு ஏதுவருகின்ற பாட்டாற் சொல்லப்படுகின்றது. (௩)

35

உஎச ௬0-ஆம் அதி-ஊக்கமுடைமை.

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை.

(ப-ரை.) அசைவிலா - அசைவில்லாத, ஊக்க முடையானுழை - மனவெழுச்சியுடையவனிடத்தே, ஆக்கம்-பொருளானது, அதர்வினாய் - வழிகேட்டுக்கொண்டு, செல்லும்-போகும், எ-று.

(க-ரை.) மனவெழுச்சி யுடையவனிடத்துச் செல்வம்வரும் - என்பதாம்.

(வி-ரை.) அசைவின்மை இடுக்கண் முதலாயினவைகளால் தளராமை. வழிகேட்டுச் சென்று சேர்வார்போலே தானேசென்று சேருமென்றற்கு - அதர்வினாய்ச் செல்லுமென்றார். [இவை நான்கு பாட்டாலும் அடைந்து நின்ற பொருளினும் அதற்குக் காரணமாகிய ஊக்கம் சிறந்ததென்பது சொல்லப்பட்டது. (௪)

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

(ப-ரை.) மலர் - நீர்ப்பூத்தாள்களது, நீட்டம் - நீட்சியானவை, வெள்ளத்தனைய-நின்றநீரளவினவாம் (அதுபோல), மாந்தர்-மனிதர்கள், உயர்வு - உயர்

ச்சியானது, உள்ளத்தனையது - (அவர்) மனவெழுச்சி யளவினதாம், எ-று.

(க-ரை.) நீர்ப்பூத்தாள்கள் நிறை நீரளவாம் அதுபோல மனிதர்களுயர்வு மனவெழுச்சியளவாம்.

(வி-ரை.) மலர் அதன்றாளுக்கு ஆதலால் ஆகுபெயர், நீர் மிகுந்தமட்டும் மலர்கள் நீளுமெனபதும்தானற - வெள்ளத்தனைய வென்றார். இவ்வுபமான வலிமையால் ஊக்கமிகுந்தவளவும் மனிதர் உயர்வரென்பது பெறப்பட்டது. உயர்வு-பொருள் படைகளால் மிகுதல். (௫)

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(ப-ரை.) (அரசரானவர்) உள்ளுவதெல்லாம்-நினைப்பதெல்லாம், உயர்வு - (தமது) உயர்ச்சியையே, உள்ளல - நினைக்கக்கடவர், அது - அவ்வுயர்ச்சி யானது, தள்ளினும் - (ஊழ்வகையினாலே கூடாமற்போயினும்), அந்நினைப்பு தள்ளாமை நீர்த்து-தள்ளாமைக் குணமுடையதாம், எ-று.

(க-ரை.) அரசருயர்வை நினைக்கக்கடவர் அவ்வுயர்ச்சி கூடாவிடினு மந் நினைப்பு நீக்காகுணமுடையதாம்-என்பதாம்.

(வி-ரை.) மற்று-அசை. தள்ளினுமென்றதனால் தள்ளாமை மிகுதியாதல் விளங்கிற்று. தள்ளியவிடத்தும் முயற்சியிலே அவர் தவறுதல் இல்லாமல் நல்லோராலே பழிக்கப்படாமையால் தள்ளாத இயற்கை யுடைத்தென்பதாம். முன்னே உள்ளத்தனையதுயர், வென்றதனை உறுதிசெய்தபடி. (௬)

## ௬0 - ஆம் - அதி - ஊக்கமுடைமை. ௨௭௫

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(ப-ரை.) களிறு - யானையானது, புதையம்பின்-கட்டாகிய அம்பினாலே, பட்டுபுண் - பட்டவிடத்து, பாடூன்றும் - (தளராமல்தன்) பெருமையை நிலை நிறுத்தும் (அதுபோல), உரவோர் - மனவெழுச்சியை யுடையவர், சிதைவிடத்து - (தாம் நினைத்த உயர்ச்சிக்கு) அழிவுவந்தவிடத்து, ஒல்கார் - தளராமல், தம்பெருமையை நிலைநிறுத்துவார், எ-று.

(க-ரை.) யானை கணையாற் புண்பட்டவிடத்தும் தளராமற் பெருமையை

சிறத்தும் அதுபோல மனவெழுச்சியுடையார் வருத்தம்வந்தவிடத் தளரார்-என்பதாம்.

(வி-ரை.) பட்டு - பட்டாலென்பதன் பொருளிலேவந்தது ஒல்காமை - தளர்தலுக்கும். பாடூன்றல் - உரவோருக்கும், கூட்டப்பட்டன நினைக்கப்பட்ட வுயர்ச்சியானது - உடாமற்போயினும் தவறாமல் அதனை முடிப்பரென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் ஊக்கமுடையாரது உயர்ச்சி சொல்லப்பட்டது.]

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(பரை.) உள்ளமிலாதவர்-மனவெழுச்சி யில்லாத அரசர், உலகத்து - இவ்வுலகத்தாருள், வள்ளியமென்னும் - வண்மையை யுடையமென்று, (தம்மைத் தாமேமதிக்கும்) செருக்கு-மதிப்பை, எய்தார்-பெறார், எ-று.

(க-ரை.) மனவெழுச்சி யில்லாதவர் மதிப்புடையார் - என்பதாம்.

(வி-ரை) ஊக்க மில்லாதவர்க்கு முயர்ச்சி, பொருள், கொடை, செருக்கு, இவை முறையே இல்லாமற்போதலால். செருக்கெய்தாரென்றார். கொடை வெற்றிகளால் ஆகியவின்பம் தமக்கல்லது பிறருக்குக் காணப்படாமையால் தன்மையிடத்தாற் சொல்லப்பட்டது. (அ)

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

(ப-ரை.) யானை - யானையானது, பரியது - (எல்லா விலங்குகளினும்) பெரிய உடம்பையுடையது, (அதுவல்லாமலும்) கூர்ங்கோட்டது - கூர்மையான கொம்புகளையு முடையது, ஆயினும்-ஆனாலும், புலி - புலியானது, தாக்குறின் - (தன்னை, எதிர்ப்படின், வெரூஉம் - (அதற்கு) அஞ்சும், எ-று.

(க-ரை.) யானை பெரிதும் கொம்புடையது மானாலும் புலியடிக்கஞ்சும்-என்பதாம்.

(வி-ரை.) பெருடம்பால் வலிமிகுதி சொல்லப்பட்டதாயிற்று. புலியைக்காட்டிலும் மிகுந்த உடல்வலிமையும் வெல்லுதற்குச் சிறந்த ஆயுதமும்

உ-எண் கக - ஆம் - அதி - மடியின்மை.

உடையதாயினும் யானை ஊக்கமில்லாமையால் அதனையுடைய அப்புலிக்கு அஞ்சுமென்ற இத்தாரக்கியம், பகைவரைக் காட்டிலும் மிகுந்த உடல் வலிமையும், வெல்லுதற்குச் சிறந்த ஆயுதமும் உடையவராயினும் அரசர் ஊக்க

யில்லாயின் அதனையுடைய அரசர்க்கு அஞ்சவேண்டுவது தோன்ற நிற்றலால் பிறிது மொழிதல். (௯)

உரமொருவற் குள்ள வெறுக்கை யஃதில்லார்
மரமக்க ளாதலே வேறு

(ப-உரை.) ஒருவற்கு - ஒருவனுக்கு, உரம் - திடமான அறிவாவது, உள்ள வெறுக்கை - மனவெழுச்சியின் மிகுதியாம், அஃது - அதனை, இல்லார் - இல்லாதவர், மரம் (மனிதராகார்) - மரங்களாவார், வேறு - (சாதிமரங்களோடு இம்மரங்களிடத்து) வேற்றுமை, மக்களாதலே - (மனிதவடிவா யிருக்கையே வேறில்லை) எ-று.

(க-உரை.) ஒருவனுக் கறிவாவது மனவெழுச்சியாம் அஃதில்லாதவர் மரங் களுக் கொப்பாவர்-என்பதாம்.

(வி-உரை.) மனிதருக்கு இருக்கவேண்டிய நல்லறிவும் காரிய முயற்சியும் இல்லாமைபற்றி மரமென்றும், மரத்தில் உண்டாம்பயன் இல்லாமைபற்றி மக்களாதலே வேறென்றும் சொல்லினர். மரத்திற்குப்பயன் - பழமுதலான வையும், ஆலயம், வீடு, தேர், மரக்கலம். இவைகளுக்கு உறுப்பாதல் முதலான வையும் ஆகும். [இவை மூன்று பாட்டாலும் ஊக்கமில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.] (௬௦)

அறுபதாம் அதிகாரம் - ஊக்கமுடைமை.
முற்றிற்று.

---

# அறுபத்தோராம் - அதிகாரம்

## மடியின்மை.

அஃதாவது: நினைக்கப்பட்டவைகளைச் செய்யும்போது சோம்புதலில்லாமையாம். ஊக்கமுடையவர்க்கு ஒரேவிடத்தே குணவசத்தால் சோம்பல் வருதலைக்குறித்து இது அதன்பின் வைக்கப்பட்டது.

குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

(ப-உரை.) குடியென்னும் குன்றாவிளக்கம் - (தான்பிறந்த) குடியாகிய மழுங்கா விளக்கானது, மடியென்னுமாசு - (ஒருவனது) சோம்பலாகிய இருளானது, ஊர - நெருங்க, மாய்ந்துகெடும்-மழுங்கிக்கெடும், எ-று.

(க-ரை.) ஒருவன் குடியென்னும்விளக்கானது அவன் சோம்பலாற்கெடும்-என்பதாம்.

(வி-ரை.) உலகாலடையுள்ளவரைக்கும் இடையறுதலின்றுட்பிறந்தவரை விளக்குதலால், குடியைக்குன்று விளக்கமென்றும், தமோ குணத்தினுலே வருதலால் சோம்பலை இருளென்றும், அது மற்றை யிருள்போலாகாமல் அவ் விளக்கத்தைத் தான்செருக்கி மாய்க்கும் வலியுடைமையால், மாசூரமாய்த்து கெடுமென்றும் சொல்லினர். கெடுதல் பெயரும் வழக்காமற் போகுதல். (௧)

மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(ப-ரை.) குடியை - (தாம்பிறந்த குடியை, குடியாக-(மேன்மேலுயரும்) நற்குடியாக, வேண்டுபவர் - வேண்டுவோர், மடியை-சோம்பலை, மடியாசோம் பலாகவே (நினைத்து), ஒழுகல்-(முயற்சியோடு) நடக்கக்கடவர், எ-று

(க-ரை.) தாம்பிறந்த குடியை நற்குடியாகவேண்டுவோர் சோம்பலை விட க்கடவர் - என்பதாம்

(வி-ரை.) நெருப்பைக்காட்டினுங்கொடியது வேறில்லாமைப்பற்றி நெரு ப்பாகவே நினைக்கவேண்டும். என்பதுபோல் மடியைக்காட்டினுங் கொடியது வேறில்லாமைப்பற்றிப்பின்னும் அப்பெயரானற்றுனேசொல்லினர். சோம்பலை ச்சோம்பலாகவே நினைத்து முயற்சிசெய்து நடந்தால் தாம் உயர்தலாலே குடி உயருமென்றற்கு குடியைக்குடியாக வேண்டுவரென்றூர் அப்படி நடவாமற் போனால் குடி அழியுமென்பது கருத்து (உ)

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(ப-ரை.) மடி-மடிக்கத் தருவதாகிய, மடி - சோம்பலை, கொண்டு - (தன் னுள்ளே( கொண்டு, ஒழுகும் - நடக்கும், பேதை - அறிவில்லாதவன், பிறந்த குடி - குடியானது, தன்னினும் - அவனினும், முந்து - முற்பட, மடியும் அழி யும், எ-று.

(க-ரை.) சோம்பலுடையவன் குடியானது கெடும் - என்பதாம்.

(வி-ரை.) அழிவுதருஞ் சோம்பலை உட்கொண்டு நடத்தலாலே பேதை என்றும், அதனாலே காப்பாற்றப்படுவதாதலால் - குடிதன்னினு முந்த மடியு மென்றும் சொல்லினர். ஆக்கத்திலே பிற்படினும் அழிவிலே முற்படுமென்ப தாம். (௩)

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

உ௭அ        கக - ஆம் - ஞீதி - மடியின்மை.

(ப-ரை.) மடி - சோம்பலிலே, மடிந்து - வீழ்தலால், மாண்ட வுஞற்றில வர்க்கு - திருத்தமாகிய முயற்சியில்லாதவ ராயினவர்க்கு, குடி-குடியும், மடிந்து அழிந்து குற்றம் - குற்றங்களும், பெருகும்-பல்கும், எ-று.

(க-ரை.) முயற்சி யில்லாதவர்க்குக் குடியுங்கெட்டுக் குற்றங்களும் பெருகும் - என்பதாம்.

(வி-ரை) குற்றங்கள் பின்வருங்குறளிலே சொல்லப்படுகின்றன. (இவை நான்கு பாட்டாலும் சோம்பலினது தீமை சொல்லப்பட்டது.)

நெடுநீர் மறவி மடி துயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

(ப-ரை) மடி - சோம்பலும், நெடுநீர் - (விரைவிற் செய்தற் குரியவை களை) நீட்டித்துச் செய்யுங் குணமும், மறவி - மறதியும், துயில் - துயிலும் ஆகிய, நான்கும் - இந்நான்கும், கெடுநீரார் - இறக்கு மியல்பினை யுடையவர் காமக்கலன் - விரும்பியேறு மரக்கலமாம். எ-று.

(க-ரை.) சோம்பலும், தாமதமும், மறதியும், நித்திரையும், கெடுவோ ரேறு மரக்கலங்களாம் - என்பதாம்.

(வி-ரை.) மடிசெய்யுளமைவு நோக்கி நடுநின்றது. மடியோடு மற்றை மூன்றும் தமோகுணத்திலே தோன்றி - உடனிகழ்வன வாதலால் சேர்த்து எண்ணப்பட்டன. காமக்கல னென்பதனால் எப்படிமரக்கலம் மரணம் சமீபித் தவர்க்குப் பெருக்கத்தருவதுபோலே தோன்றி அவர்விரும்பி ஏறியவிடத்துக் கடலிலே விழுத்துமோ அப்படியே இந்நான்குந்துன்பஞ்சமீபித்தவர்க்குஇன் பஞ் செய்பவைபோலே தோன்றி அவர் அவைகளை விரும்பிக்கொண்ட விட த்தே துன்பத்திலே விழுத்துமென்பது தோன்றலறிக.

படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது

(ப-ரை.) படியுடையார் - நிலமுழுதும் ஆண்ட அரசரது, பற்று - செல்வமானது, அமைந்தக் கண்ணும் - தானே வந்து சேர்ந்தவிடத்தும், (அதனால்) மடியுடையார் - சோம்பலுடையவர், மாண்பயன் - பெரும்பயனை, எய்தலரிது அடைதலில்லை, எ-று.

(க-ரை.) உலகொருங்குடைய அரசச் செல்வம் வலியவந்தாலும் சோம்பலுடையவர் பயனடைதலில்லை - என்பதாம்

(வி-ரை.) உம்மை - அருமையாமையை விளக்கி நின்றது. பயன் இன்பம் அச்செல்வம் காக்கு முயற்சியில்லாமையால் அழிவதாலே தத்துன்பம் நீங்கா தென்பதாம்.

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.



(ப-ரை.) மடிபுரிந்து - சோம்பலை விரும்புதலால், மாண்ட - பெருமை பொருந்திய, உஞற்றிலவர் - முயற்சியில்லாதவர், இடிபுரிந்து - (நட்பாளர்) கண்டித்துப் புத்திசொல்லி (அதனாற் பயன்காணாமையினாலே, எள்ளுஞ்சொல் - (பின்) இகழுஞ்சொல்லை, கேட்பர் - கேட்பார். எ-று.

(க-ரை) சோம்ப லுடையவர் பிறரிகழுஞ் சொல்லைக்கேட்பர் - என்பதாம்.

(வி-ரை) அவரிகழ்தல் சொல்லவே - பிறரிகழ்தல் சொல்ல வேண்டுவதில்லையாயிற்று அவைகளுக்கெல்லாம் எதிர் பேசமாட்டாமையால் கேட்ப ரென்றார். (எ)

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(ப-ரை.) மடிமை - சோம்பற் றன்மையானது, குடிமைக்கண் - குடிமையுடைய அரசனிடத்தே, தங்கின் - தங்குமாயின் (அது), தன்னொன்னார்க்கு - தன் பகைவர்க்கு, அடிமை - அடியனாந்தன்மையை, புகுத்திவிடும் - (அவனை) அடைத்துவிடும். எ-று.

(க-ரை.) சோம்பலரசனிடத்துத் தங்குமானாலது அரசன் தன்னைப் பகைவருக் கடிமையாக்கும் - என்பதாம்

(வி-ரை.) சோம்பலினது தன்மை - காரியக்கேடு. குடிமை - குடிசெய்

த்தன்மை. அது அதனையுடைய அரசனுக்காதல் தன்னொன்னார்க் கென்றதனால் அறிக. அடியனுத்தன்மை தாழ்ந்து நின்றேவல் கேட்டல் [இவை நான்கு பாட்டாலும் சோம்பற் குற்றங்கள் சொல்லப்பட்டன. (௮)

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(ப-உரை.) ஒருவன், மடியாண்மை சோம்பலை ஆளுந்தன்மையை, மாற்ற ஒழிக்கவே, குடி - (அவனது) குடியுள்ளும், ஆண்மையுள் - ஆண்மையுள்ளும், (வந்த) குற்றம் - குற்றங்கள், கெடும் - அழியும் எ-று.

(க-உரை.) ஒருவன் சோம்பலை யொழிக்க அவன் குடியிலும் ஆண்மையிலும் வந்த குற்றங்களழியும் - என்பதாம்.

(வி-உரை.) சோம்பலை ஆளுந்தன்மையாவது சோம்பலுடைக்கு ஏதுவாகிய தமோகுணம். அவற்றுள்வந்தகுற்றமென்றது. சோம்பலாலன்றி முன்னே வேறுகாரணங்களால் நிகழ்ந்தவைகளை அவையும் சோம்பலுடைமையை ஒழித்து முயற்சியுடையவனாக நீங்குமென்பதாம். (௯)

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

## ௬௨ - ஆம் - அதி - ஆள்வினையுடைமை.

(ப-உரை.) மடியிலா - சோம்பலில்லாத, மன்னவன் - அரசன், அடி (தன் னடியளவினாலே, அளந்தான் - (எல்லாவுலகத்தையும்) அளந்த கடவுள், தாஅய தெல்லாம் - கடந்தபரப்பு முழுவதையும், ஒருங்கு - ஒருசேர, எய்தும் - அடைவான், எ-று.

(க-உரை.) சோம்பலில்லாவரசன் உலகெல்லாமடைவான் - என்பதாம்.

(வி-உரை.) எப்பொழுதும் தொழிலினிடத்தே முயன்றால் இடையீடில்லாமல் அடைவானென்பதாம், [இவை இரண்டு பாட்டாலும் சோம்பலில்லாதவன் அடையும் பயன் சொல்லப்பட்டது] (௧௦)

அறுபத்தோராம்-அதிகாரம்-மடியின்மை.

முற்றிற்று.

---

# அறுபத்திரண்டாம் - அதிகாரம்

# ஆள் வி னை யு டை மை.

அஃதாவது: இடைவிடாத மெய்ம்முயற்சியை யுடையனாதல். அது ஆளும் வினையெனக்காரியத்தாற் சொல்லப்பட்டது. சோம்பலைக் கெடுத்தாலும்தொழிலை முயற்சியாலல்லாமல் ஆளக்கூடாமையினாலே இதுமடியின்மையின் பின் வைக்கப்பட்டது.

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(ப-ரை.) தமது சிறுமையை நோக்கி அருமையுடைத்தென்று - நாம் இத் தொழிலைமுடித்தல் அருமையையுடைத்தென்று நினைத்து, அசாவாமைவேண்டும்-தளராதிருக்கவேண்டும்; பெருமை-அத்தொழிலைமுடித்தற்கு ஏற்றபெருமையை, முயற்சி-முயற்சியானது, தரும்-தமக்கு உண்டாக்கும். எ-று.

(க-ரை.) தொழிலைக்குறித் தருமையென்று தளரா திருக்க வேண்டும் தளரா முயற்சி பெருமைதரும் - என்பதாம்

(வி-ரை.) சிறுமையை நோக்கி யென்றது - பெருமை தருமென்றதனாலும், தொழிலை முடித்தலென்றது - அதிகாரத்தாலும் வருவிக்கப்பட்டன. விடாது முயற்சிசெய்தால் தாம் பெருமையை யுடையவராதலால் அரியதொழில்களும் எளிதிலே முடியுமென்பதாம். (க),

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.



(ப-ரை.) உலகு - உலகம்; வினைக்குறை - தொழிலாகிய குறையை, தீர்ந்தாரின் செய்யாது விட்டவரை, தீர்ந்தன்று - விட்டது, அதனால் வினைக்கண் - செய்யத்தகுந் தொழிலினிடத்தே, வினைகெடல் - செயலற்றிருக்கையை, ஓம்பல் - ஒழியக்கடவன். எ-று

(க-ரை.) தொழிலின்குறையைச்செய்யாதவிட்டவரை, யுலகம் விட்டதாகையால் தொழிலிற் செய்கையற்றிருக்கையை விடக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) குறை - அவசியம் வேண்டியபொருள் (௨)

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(ப-ரை.) வேளாண்மை யென்னுஞ் செருக்கு, (எல்லார்க்கும்) உபகாரஞ் செய்தலென்னு மேம்பாடானது, தாளாண்மையென்னுந் தகைமைக்கண் - முயற்சியென்னும் உயர்ந்த குணத்தினிடத்தே, தங்கிற்றே - நிலைபெற்றதே, என்றவாறு.

(க-ரை.) உபகாரமேன்மைமுயற்சியினிடத்து நிலைபெற்றது-என்பதாம்.

(வி-ரை.) பொருள் கைகூடுதலால் உபகாரஞ்செய்தற்கு உரியவர் முயற்சியை யுடையவரே யென்றற்கு அதனைதன் குணத்தின்மேல் வைத்தும்; அம்மேம்பாடானது பிறரிடத்தே இல்லையென்றற்குத் தங்கிற்றேயென்னுஞ்சொல்லினர். [இவைமூன்றுபாட்டாலும் முயற்சியது சிறப்புஞ்சொல்லப்பட்டது.]

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

(ப-ரை.) தாளாண்மை யில்லாதான்-முயற்சியில்லாதவன், வேளாண்மை, உபகாரியாந் தன்மையானது. பேடி, (சேனையைக் கண்டால் (அஞ்சும் பேடியானவன், கைவாளாண்மைப்போல, (அச்சேனையினிடத்தே) கையில் வாளை ஆளுகை தன்மைபோல, கெடும் - இல்லையாம். எ-று.

(க-ரை.) முயற்சியில்லாதவனுபகாரத்தன்மை பேடிகைவாள்போலாம் - என்பதாம்.

(வி-ரை.) எப்படிப் பேடியானவன் வாளால்வெட்டுதற்குக் கருத்துடையனாயினும் அது அவனச்சத்தால முடியாதோ அப்படியே முயற்சியில்லாதவன் பலருக்கும் உபகாரஞ்செய்தற்குக் கருத்துடையவனாயினும் அது அவன் வறுமையால் முடியாதென்பதாம். [இதனால் முயற்சியில்லாதவனது குற்றஞ் சொல்லப்பட்டது.] (௪)

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

36

உ-அஉ கூஉ-ஆம்-அதி-ஆள்வினையுடைமை.

(ப-ரை.) இன்பம் விழையான், (தனக்கு) இன்பத்தைவிரும்பாதவனுமி- வினைவிழையான்-தொழில்முடித்தலையே விரும்புவோன், தன் கேளிர் - தன் சுற்றத்தாரும் நட்பாளருமாகிய கேளிரது, துன்பம் (பாரத்தின்) துன்பத்தை

துடைத்து-ஒழித்து, வன்றும் (அதனைத்) தாங்கும், தூண்-தூணும். எ-று.

(க-ரை.) தனக்கின்பம் விரும்பாதவனுகி முயற்சியை விரும்புவோன் தன்னுறவினர் துன்பத்தைத் தாங்கும் தூண்-என்பதாம்.

(வி-ரை.) கேளிரது வறுமையுந் தீர்த்து அவரைக் காத்தலுஞ் செய்ய வல்லவனுமெனவே தனக்கு அவைசெய்து கொள்ளுதல் சொல்ல வேண்டுவ தில்லையாயிற்று. காரியமாகிய இன்பத்தை விரும்பாமல் காரணமாகிய முயற்சியை விரும்புவோன் எல்லாப் பயன்களும் அடைவானென்றதனுல் அக்காரணத்தை விட்டு அக்காரியத்தை விரும்புவோன் ஒருபயனும் அடையானென்பது பெறப்பட்டது. (ஏகதேச வுருவகம்) [இதனுல் அதனையுடையவனது தன்மை சொல்லப்பட்டது.]

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(ப-ரை.) முயற்சி - (அரசரிடத்தே உண்டாகிய) முயற்சியானது, திருவினை-(அவரது) செல்வத்தை, ஆக்கும் - வளர்க்கும், முயற்றின்மை - அம்முயற்சி யில்லாமையானது, இன்மை-வறுமையை, புகுத்திவிடும் - அடைவித்து விடும், எ-று.

(க-ரை.) முயற்சி செல்வத்தை வளர்க்கும் அம் முயற்சியில்லாமை தரித்திரத்தைக்கொடுக்கும்-என்பதாம்.

(வி-ரை.) இங்கே செல்வம் - மந்திரிமுதலாகிய அறுவகை அங்கங்கள். வறுமை அவையில்லாதவராதல், அதனை அடைவித்து விடவே பகைவரால் அழிவரெனபது கருத்து. (௬)

மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(ப-ரை.) மாமுகடி - கரிய மூதேவியானவள், மடி-(ஒருவனது) சோம்பலினிடத்தே, உளாள் - இருப்பாள், தாமரையினாள் - சீதேவியானவள், மடியிலான் - சோம்பலில்லாதவனது, தாள் - முயற்சியினிடத்தே, உளாள் - இருப்பாள், என்ப-என்று (அறிந்தோர்) சொல்லுவர். எ-று.

(க-ரை.) மூதேவி சோம்பலுடையவனிடத்திருப்பாள், சீதேவி சோம்பலில்லாதவனிடத்திருப்பாள் - என்பதாம்.

(வி-ரை.) பாவத்தின் கருமை அதன்பயனாகிய முகடிமேல் வேற்றப்பட்டது, சோம்பலையும் முயற்சியையும் உடையவரிடத்தே அவர்களிருத்தலை அவைகளின் மேலே ஏற்றினர். [இவை பிரம்பொட்டாலும் அவ்விரண்டிற்கும்-ஏதுக்கள் சொல்லப்பட்டன.] (௭)

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

(ப-ரை.) பொறியின்மை - (பயனைத் தருவதாகிய) விதியில்லாமையார்க்கும் - யாவருக்கும், பழியன்று பழியாகாது, அறிவறிந்து - அறியவேண்டியவைகளை அறிந்து, ஆள்வினையின்மை-தொழில்செய்யாமையே, பழி - பழியாகும். எ-று.

(க-ரை.) யாவருக்கும் விதியில்லாமை பழியாகாது முயற்சியில்லாமை பழியாகும் - என்பதாம்.

(வி-ரை.) அறியவேண்டியவைகளை வலிமுதலானவையாம், ஊழ்பொருந்தாதவிடத்தே தொழில் செய்தவாலே பயன் இல்லையென்பவரை நோக்கி உலகம் பழைய வினைபற்றிப்பழியாது இவ்விடத்தேதொழில் செய்யாத குற்றமுடைமை பற்றியே பழிப்பென்றார். அதனால் விடாதுமுயல் வென்பது கருத்து.

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(ப-ரை.) (முயற்சி செய்த தொழில்) தெய்வத்தான் - ஊழ்வகையால் ஆகாதெனினும்-(நிலைக்கப்பட்டபயனைத்) தாராதாயினும், முயற்சி, தன்மெய்-தனக்கிடமாகிய உடம்பு, வருத்தக்கூலி-(வருந்திய) வருத்தத்தின் கூலியளவு தரும்-கொடுக்கும் (பாழாகாது) எ-று.

(க-ரை.) ஊழில்லாவிடினு முயற்சி பலனைத்தரும்-என்பதாம்.

(வி-ரை.) ஊழினால் ஆகிய விடத்துத் தன்னளவின் மிகுந்தபயனைத்தருமென்பது உம்மையால் பெற்றும். ஆனவிடத்தும் ஆகாவிடத்தும் பாழாகாமையால், ஊழை நோக்கி இராமல் முயல்கவென்பது கருத்து. (௬)

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(ப-ரை.) ஊழையும்-(பயனை விலக்குவ தாகிய) ஊழையும், உப்பக்கங்காண்பர்-புறங்காண்பார், உலைவின்றி-(அவ்விலக்குதற்கு) இளையாமல், தாழாது-தாழ்வற, உஞற்றுபவர்-(தொழிலை) முயல்வோர், எ-று.

(க-ரை.) இடைவிடாது முயற்சி செய்வோர் விதியையும் விலக்குவார் -

என்பதாம்.

(வி-ரை.) தாழ்வருதல்-ஆலோசனையிலும் வலிமுதலானவையறிதலிலும், செயலிலும், குற்றமறுதல், ஊழானது தொழிலை ஒருகால் இருகால் அல்லாமல், விலக்காமையாலே பலகாலும் முயற்சி செய்வோர்பயனை அடையாரென்றதற்கு உபலக்கண காண்பரென்றார். [ஊழினாலே இடுக்கண் வரினும், முயற்சிவிடத்தக்க தல்லவென்பது இம்மூன்றுபாட்டாலும் சொல்லப்பட்டது.]

அறுபத்திரண்டாம்-அதிகாரம்- ஆள்வினையுடைமை
முற்றிற்று.

# அறுபத்துமூன்றாம் அதிகாரம்
# இடுக்கணழியாமை.



அஃதாவது: தொழிலிலேமுயல்பவன் ஊழினாலாவதுபொருளில்லாமையினாலாவது, மெய்வருத்தத்தாலாவது தனக்குத்துன்பம்வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை, அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

இடுக்கண் வருங்கா னகுவ கதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(ப-ரை.) (ஒருவன்) இடுக்கண் - துன்பமானது, வருங்கால் - வினையினாலே தனக்கு வருமிடத்து, நகுக-(அதற்கு அழியாமல்) உள்ள மகிழக்கடவன், அதனை,அத்துன்பத்தை, அடுத்து-மேலுமேலுமாய், ஊர்வது-நெருக்கவல்லது அஃதொப்பது - அம்மகிழ்ச்சி போல்வது, இல் (வேறே) இல்லை (ஆதலால்) என்றவாறு.

(க-ரை.) ஒருவன் துன்பம்வரும்போது மகிழக்கடவன் அத்துன்பத்தை நெருக்கக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) தொழில் நன்றாக முடித்தவிடத்தே உண்டாவதான மகிழ்ச்சியை அதற்கு நடுவிலே துன்பம் வருமிடத்து உட்கொண்டால் அவன் அழிவின்றிமனவெழுச்சியால் அதனைத்தள்ளி அக்குறைமுடிக்க வல்லவனானதனால் அதனையடுத்தூர்வ தஃதொப்ப தில்லென்றார். (க)

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(ப-ரை.) வெள்ளத்தனைய-வெள்ளம்போலே கரையில்லாத, இடும்பை - துன்பமெல்லாம், அறிவுடையான்-புத்தியுள்ளவன், உள்ளத்தின்-உள்ளத்திலே, உள்ள-(ஒன்றை) நினைத்தவளவிலே, கெடும்-அழியும், எ-று.

(க-ரை.) அறிவுள்ளவ னொன்றை நினைக்கத் துன்பமெல்லாங் கெடும் என்பதாம்.

(வி-ரை.) துன்பமாவது, உள்ளத்து ஒருகோட்பாடே என்பதும் - அது மாறுபாடாகக் கொண்டால் நீங்குமென்பதும் அறியவேண்டுதலால், அறிவுடையானென்றும் அவ்வுபாயத்தினெளிமைதோன்ற, உள்ளத்திலுள்ள வென்றும்சொல்லினர். [இவ்விரண்டுபாட்டானும் வழினலாகிய இடுக்கணால் அழியாமைக்கு உபாயம் சொல்லப்பட்டது;]

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

(ப-ரை.) இடும்பைக்கு - (தொழில் செய்யும்போது அதற்கு இடையிலே வந்த) துன்பத்திற்கு, இடும்பை படாதவர் - வருந்ாதவர், இடும்பைக்கு-அத் துன்பத்திற்கு, இடும்பை-துன்பத்தை, படுப்பர் - உண்டாக்குவார், எ-று.

## சுஉ - ஆம் - அதி - இடுக்கணழியாமை. உஅ௫

(க-ரை.) துன்பத்திற்குத் துன்பப்படாதவர் துன்பத்திற்குத் துன்பத்தைக்கொடுப்பார்-என்பதாம்.

(வி-ரை.) வருந்துதல் இனைத்துச் செய்யாமல் விடநினைத்தல் - மனத்திடமுடையவராய் விடாதுமுயன்றால் தொழில்முடிவு பெற்றுப் பயன் படுமாதலால் எல்லாத்துன்பங்களும் நீங்குமென்பதுபற்றி இடும்பைக்கிடும்பை படுப்பரென்றார் வருகின்றபாட்டிரண்டிலும் இதற்கு இப்படியேபொருள்கொள்க. ()

மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(ப-ரை.) மடுத்தவாயெல்லாம் - தடைபட்டவிடங்களிலெல்லாம், பகடன்னான் - (பண்டியை இழுத்துச்செல்லுங்) கடாப்போல தொழிலைமேற்கொண்டுசெலுத்த வல்லவனை, உற்ற-அடைந்த, இடுக்கண்-துன்பமானது, இடர்ப்பாடு - (தானே) துன்பப்படுதலை, உடைத்து - உடைத்தாம், எ-று.

(க-ரை.) தொழில்செய்ய வல்லவனையடைந்த - துன்பமானது தானே துன்பப்படும்-என்பதாம்.

(வி-ரை.) தடைபடு மிடங்கள் - பண்டிக்குச் சேற்று நிலமுதலானவையும் தொழிலுக்கு இடையூறுகளும் ஆம். கடா-பக்கத்திலொற்றியும், மூச்சுப்பிடித்தும், கால் மடக்கியும், அரிதிலே செலுத்தும் விதம்போல் தன் மெய்வருத்தம் நோக்காமல் முயன்று செலுத்துவா னென்றதற்கு பகடன்னா னென்றார். (௪)

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.

(ப-ரை.) அடுக்கிவரினும்-இடைவிடாது மேலுமேலும் வந்தனவாயினும், அழிவிலான் - (தன்னுள்ளக்கோட்பாடு) விடாதவனை, உற்ற-அடைந்த, இடுக்கண்-துன்பமானது, இடுக்கட்படும் - (தான்) துன்பத்திலேபடும், எ-று.

(க-ரை.) தைரியம் விடாதவனையடைந்த துன்பமானது துன்பப்படும் என்பதாம்.

(வி-ரை.) ஒன்றே பலகால் வருதலும், வேறுபல கலந்துவருதலும், அடங்க - அடுக்கிவரினுமென்றார். அழிவென்னுங் காரணப்பெயர் - காரியத்தின் மேல்நின்றது. [இவை மூன்றுபாட்டாலும் ஊழாலாகிய துன்பத்திற்கு அழியாமை சொல்லப்பட்டது (௫)

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

(ப-ரை.) பெற்றேமென்று - (செல்வகாலத்து இது) பெற்றேமென்று, ஓம்புதல்-உலோபஞ்செய்தலை, தேற்றாதவர் - அறியாதவர், அற்றேமென்று-(வறுமைக்காலத்திலே) - வறியே மாகேனுமென்று, அல்லற்படுபவோ-(மனதிலே) துன்பப்படுவாரோ, எ-று.

## ௬௩ - ஆம் - அதி - இடுக்கணழியாமை

(க-ரை.) செல்வத்திலு லோபஞ்செய்யாதவர் வறுமையில் விசனப்படார் என்பதாம்.

(வி-ரை) பெற்றவிடத்து உலோபஞ் செய்யாமையைநோக்கி அற்றவிடத்தும் மந்திரிமுதலானவர்கள் விட்டு நீங்காமையால், அல்லற் படுதலில்லையாயிற்று. [இதனாலே பொருளில்லாமையால்வந்த துன்பத்துக்கு அழியாமையும்,

அதற்கு உபாயமும் சொல்லப்பட்டன ] (௬)

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தை
கையாறாக் கொள்ளாதா மேல்.

(ப-ரை.) மேல் - அறிவுடையார், உடம்பு - தேகமானது, இடும்பைக்கு - துன்பமாகியவாறுக்கு, இலக்கமென்று - குறியிடமென்றுதெளிந்து, கலக்கத்தை - (தம்மேல்வந்த) துன்பத்தை, கையாறு - துன்பமாக, கொள்ளாதாம் - கொள்ளார், எ-று.

(க-ரை.) அறிவுடையவன் துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளான்-என்பதாம்.

(வி-ரை) [இடும்பையை வாளென்னுமல் உடம்பை இலக்கமென்றதனால் ஏகதேசவுருவகம்] இயல்பாகக் கொள்வரென்றறிக. (௭)

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன்.

(ப-ரை.) இன்பம் - (தன்னுடம்பிற்கு இன்பமானவைகளை, விழையான் - விரும்பானாகி, இடும்பை - (வினையால்) துன்பமடைதல், இயல்பென்பான் - இயல்பென்று தெளிந்திருப்பான், துன்பமுறுதலிலன் - (தன்முயற்சியால்) துன்பமடையான், எ-று.

(க-ரை.) இன்பத்தை இச்சியாதவனாகித் துன்பத்தை யியல்பென்று நினைப்பவன் துன்பமடையான்-என்பதாம்.

(வி-ரை.) இன்பம் விரும்பினாலும், இயல்பென்னாது வாராமல் காக்கக் கருதினாலும், துன்பம் விளைதலால் இவ்விரண்டும் செய்யாதவனை துன்ப முறுத லிலனென்றார். (௮)

இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(ப-ரை.) இன்பத்துள்-(வினையினாலே) இன்பம்வந்தவிடத்து, இன்பம் - அவ்வின்பத்தை, விழையாதான் - (அனுபவித்துக்கொண்டே மனத்தால்) விரும்பாதவன், துன்பத்துள்-துன்பம்வந்தவிடத்தும், துன்பம் - அத்துன்பத்தை, உறுதலிலன் - (அனுபவித்துக்கொண்டே மனத்தால்) அடையான், எ-று.

(க-ரை.) இன்பத்தை இச்சியாதவன் துன்பத்தில் வருந்தமாட்டான் - என்பதாம்.

(வி-ரை.) துன்ப முயற்சியால் வரும் இடுக்கண் இரண்டும் ஒருதன்மை யைச் சொன்னதால் பயன்களும் இலவாயின. (௯)

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு

(ப-ரை.) (ஒருவன்றொழில் செய்யுமிடத்து) இன்னாமை - முயற்சியால் வருந் துன்பத்தையே, இன்பமெனக்கொளின் - (தனக்கு) இன்பமாக நினைத்துக் கொள்ளுவானாயின், (அதனால்) தன்னொன்னார்-தன்பகைவர், விழையும் - நன்கு மதித்தற்கு ஏதுவாகிய, சிறப்பு - உயர்ச்சியானது, ஆகும் - உண்டாகும், எ-று.

(க-ரை.) துன்பத்தை இன்பமாகக் கொள்வானாகி லவன்பகைவராலே மதிக்கப்படு முயற்சியடைவான், என்பதாம்.

(வி-ரை.) துன்பத்தானும் உயிர்க்கு இயல்பன்றிக் கணிதமாய் மனத்தினிடத்தே நிகழ்வதோர் கோட்பாடாகலின் அதனை மாறுபடக் கொண்டால் அதற்கு அழியாமல் மனமகிழ்ச்சி யுடையனாகி அதனாலே தொடங்கிய தொழிலைமுடிக்க வல்லவனாகுமென்பது கருத்து. [இவை நான்குபாட்டாலும் மெய் வருத்தத்தாலாகிய துன்பத்துக்கு அழியாமையும், அதற்கு உபாயமும், சொல்லப்பட்டது. (௧௦)

அறுபத்துமூன்றும்-அதிகாரம்-இடுக்கணழியாமை.
முற்றிற்று.

---

# அங்கவியல்.

இனிமுறையானே அரசியலை நடத்துதலிலே ஒன்றற்கொன்று துணையாகிய அங்கங்களது இயல்பை முப்பத்திரண்டு அதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆக்கினை சக்கரத்தைச் செலுத்துதலிலே அவ்வரசனுக்குச் சமானமாகிய அமைச்சனது இயல்பு பத்ததிகாரத்தினாலே சொல்லத்தொடங்கி முதலிலே அமைச்சைச் சொல்லுகின்றார்.

# அறுபத்திநான்காம் - அதிகாரம்.

## அ மை ச் சு.

அஃதாவது: அமைச்சனது தன்மை, அத்தன்மை அவன்குணங்களும் செய்கைகளும் ஆம்

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

(ப-ரை.) (தொழில் செய்யும்போது) கருவியும் - (அதற்கு வேண்டும்) சாதனங்களும், காலமும் - (அதற்குஏற்ற) காலமும், செய்கையும் - (அது) செய்யும்விதமும், செய்யுமருவினையும் - (அவ்விதத்திலே செய்யப்படும்) அரிய தொழில்களும், மாண்டது - பொருந்த வெண்ண வல்லவனே, அமைச்சு மந்திரியாவான், எ-று.

(க-ரை.) கருவியும் - காலமும் செய்கையும் தொழிலும் இவற்றையெண்ண வல்லவன் மந்திரி-என்பதாம்.

(வி-ரை.) சாதனங்கள் - சேனையும், பொருளும், காலம் - அத்தொழிலைத் தொடங்குங்காலம், செய்கை யெனவே அது தொடங்கு முபாயமும், இடையூறு நீக்கி முடிக்கும்விதமும், அடங்கின. சிறிய முயற்சியினாலே பெரிய பயன் தருமென்றற்கு அருவினை யென்றார். இவ்வைந்தையும் வடநூலார் மந்திரத்திற்கு அங்கமென்பார். (௧)

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு

(ப-ரை.) வன்கண் - (தொழில்செய்தலிலே) அசைவில்லாமையும், குடிகாத்தல் - குடிகளைக்காத்தலும், கற்றறிதல் - (நீதிநூல்களைக்) கற்று விதிவிலக்குகளை அறிதலும், ஆள்வினை-முயற்சியும், ஐந்துடன் - முன்சொல்லப்பட்ட) அங்கங்களைத்துடனே, மாண்டது - திருந்தவுடையவனே அமைச்சு-மந்திரி

யாவான், எ-று.

(க-ரை.) அசைவில்லாமையும் குடிகளைக்காத்தலும் கற்றறிதலும் முயற்சியும் உடையவன் மந்திரி - என்பதாம்.

(வி-ரை.) இக்காண்கினையும் முன்னை யவைகளோடு சேர்த்துச் சொல்லியது - அவைகளும் இவைகளோடு கூடியே மாட்சிமைப் படவேண்டு மென்பதை அறிவித்தற்கும் அவை ஐந்தென்னும் தொகை பெறுதற்கும் என்க. (௨)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(ப-ரை.) (போர்வந்தவிடத்து) பிரித்தலும் - பகைவர்க்குத் துணையாயினவரை அவரைவிட்டுப் பிரிக்கவேண்டினால் பிரித்தலும், (பேணிக்கொளலும்) - தம்மிடத்தோரை அவர்பிரியாமற் கொடையினாலும் இன்சொல்லினாலும் காத்துக்கொள்ளுதலும், பிரிந்தார் - (தம்மைவிட்டும் தம்மவரைவிட்டும்) பிரிந்தவரை, பொருத்தலும் - (தருபடி பொருத்தவேண்டினால்) பொருத்தலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான், எ-று.

(க-ரை.) பிரித்தலும், காத்தலும், பிரிந்தவரைப் பொருத்தச்செய்தலும், வல்லமையுடையவன் மந்திரி - என்பதாம்.

## ௬௪ - ஆம் - அதி - அமைச்சு. ௨௯௯

(வி-ரை.) இவைகளுள் அப்பொழுதை வினைக்கு ஏற்ற செயலறிதலும், அதனை அவரறியாமல் அதற்கு ஏற்ற உபாயத்தால் முடிவுறப் பிடித்தலும், அருமையாதல் நோக்கி வல்லதென்றார். பொருத்தலுக்குச் சந்தியென்றும், பிரித்தலுக்கு விக்கிரகமென்றும் பெயர்கள். (௩)

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(ப-ரை.) (ஒருகாரியஞ் செய்கை பலவிதமாகத் தோன்றினால்) தெரிதலும் - (அவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - (அது செய்யும்போது பலிக்கும் விதமும்) சாடிச்செய்தலும் (சிலரைப் பிரித்தல் பொருத்தல் செய்தலிலே), ஒருதலையாச் சொல்லலும் - (அவர்க்கு இதுவே சம்பத் தக்கதென்று) துணிவு பிறக்கும் வகை சொல்லலும், வல்லது - வல்ல

ஊனே, அமைச்சு - மந்திரியாவான், எ-று.

(க-ரை) ஆராய்தலும் ஆராய்ந்து செய்தலும் ஒருதலையாகச் சொல்லலும் வல்லவன் மந்திரி - என்பதாம்

(வி-ரை.) தெரிதல் செயலின்மேலாயிற்று - வருகின்றதனாகலின். (௫)

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

(ப-ரை) அறன் - (அரசனாலே செய்யப்படும்) அறங்களை, அறிந்து - தெரிந்து, ஆன்றமைந்த (தனக்கு ஏற்ற கல்வியாலே) நிறைந்தமைந்த சொல்லான் - சொல்லையுடையவனுகி, எஞ்ஞான்றும் - எக்காலிலும், திறன் - (தொழில்செய்யுந்) திறங்களை, அறிந்தான் - அறிந்தவன், தேர்ச்சி - ஆலோசனைக்குத், துணை - அவனுக்குத் துணையாவான், எ-று.

(க-ரை) தருமங்களை யறிந்து தொழில்செய்யுந் திறங்களைத் தெரிந்தவன் மந்திரி - என்பதாம்.

(வி-ரை) தன்னரசன் சுருங்கிய காலத்திலும் பெருகிய காலத்திலும் சமனான காலத்திலும் என்றற்கு எஞ்ஞான்று மென்றார். [இவ்வைந்து பாட்டாலும் மந்திரிகளது குணத்தன்மை சொல்லப்பட்டது.] (௬)

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(ப-ரை.) மதிநுட்பம் - இயற்கையாகிய புத்திநுட்பத்தை, நூலோடு - செயற்கையாகிய நூலறிவோடு, உடையார்க்கு - உடைய மந்திரிகளுக்கு, அதிநுட்பம் - அதிக நுட்பத்தையுடைய ஆலோசனைகளாய், முன்னிற்பவை - எதிர்நிற்பவை, யாவுள - எவையுள, எ-று.

(க-ரை) புத்தி நுட்பத்தையுடைய மந்திரிகளுக்கு முன்னிற்கு மாலோசனைகளெவையுள - என்பதாம்.

(வி-ரை.) நூல் - அரசனறிவுக்கும், அதிநுட்பம் - அரசனையுடைய ஆலோசனைக்கும், ஆகுதலால் ஆகுபெயர்கள். முன்னிற்றல் - பகைவ ராலோசனையால் தம்மாலோசனை அழியாது நிற்றல் பகைவராலோசனையை தாம் அறிந்து அழித்து அவரறிந்து அழியாதவைகளைத் தாம் ஆலோசிப்பவ ரென்பது கருத்து. [இதனால் அவரது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௬)

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்

(ப-ரை.) செயற்கை - நூல்வழியினால் தொழில் செய்யுந் திறத்தை, அறிந்தக் கடைத்தும் - அறிந்தவிடத்தும், உலகத்து - உலகத்திலே, இயற்கை - அப்போது நடக்கின்ற இயற்கையை, அறிந்து - தெரிந்து, செயல் - அதனோடு பொருந்தச் செய்யக்கடவன், எ-று.

(க-ரை.) தொழில்செய்யுந் திறங்களையறிந்தாலும் உலகநடக்கையறிந்து செய்யக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) நூல்வழியே யாயினும் உலகவழியோடு பொருந்தாதவைகளைச் செய்தால் அவ்வுலகம் பழிக்குமென்று உலகியற்கையினறிவினால் பயன்சொல்லியபடி. (௭)

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

(ப-ரை.) அறிகொன்று - அறிந்து சொல்லினவரது அறிவையும் அழித்து, அறியானெனினும் - தானும் அறியானேயாயினும், அக்குற்றநோக்கிக் கைவிடாமல், உறுதி - அரசனுக்கு உறுதியானவைகளை, கூறல் - சொல்லுதல், உழையிருந்தான் - மந்திரியினது, கடன் - முறையாகும், எ-று.

(க-ரை.) சொன்னவ ரறிவையழித்துத் தானறியானாயினும் அரசனுக்குறுதியானவைகளைச் சொல்லுதல் மந்திரியின் கடமையாம்-என்பதாம்.

(வி-ரை.) அழித்தல் தான்கொள்ளாமல் மேலும் இகழ்ந்துசொல்லல், உறுதி சொல்லாதபோது அவன் முடிவெய்துங் குற்றத்தை உலகர் தன்மேல் ஏற்றுமென்றற்கு உறல் கடனென்றார். [இவை இரண்டு பாட்டானும் அவர் செயல் சொல்லப்பட்டது.] (அ)

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோர்
எழுபது கோடி யுறும்.

(ப-ரை.) பக்கத்துள் - பக்கத்திலிருந்து, பழுதெண்ணும் - தீங்குசெய்ய வெண்ணும், மந்திரியின்-மந்திரியொருவனில், தெவ் - (அரசனுக்கு) எதிர்த்த பவர், ஓரெழுபதுகோடி - ஓரெழுபதுகோடிபகைவர், உறும்-உறுவர், எ-று.

(க-ரை.) அரசனுக்குத் தீங்குசெய்யு மந்திரியொருவனே எழுபதுகோடி பகைவரிலும் கொடியன்-என்பதாம்.



(வி-ரை.) எழுபதுகோடி யென்றது, மிகவும் பலவாகிய என்னிக்கைக்கு ஒன்று காட்டியபடி அவர் வெளிப்பட்டு நிற்கையால் அவருக்குத் தப்பலாம். உட்பகையாய் நிற்றலால் இவனுக்குத் தப்புதல் கூடாதென்பதுபற்றி இப்படிச் சொல்லினர். (க)

முறைபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலா அ தவர்.

(ப-ரை.) (செய்யப்படுந் தொழில்களை) திறப்பாடு - (முடித்தற்கு ஏற்ற) கூறுபாடு, அலாஅதவர் - இல்லாதவர், முறைபடச் சூழ்ந்தும் - (அவைகளை முன்னே) அடைவுபட ஆலோசித்திருந்தும், முடிவிலவே செய்வர் - (செய்யும்போது அவைகள்) முடிவில்லனவாகவே செய்யாநிற்பர், எ-று.

(க-ரை.) செய்தொழிலிலே திறமில்லா மந்திரிகள் முன்பாலோசித்தும் பின்பு முடிவில்லாமற் செய்வார்கள்-என்பதாம்.

(வி-ரை.) அக்கூறுபாடாவன - வந்தவந்த இடையூறுகளுக்கு ஏற்றஏற்ற பரிகாரம் அறிந்து செய்தலும், தாம் திடமுடையவராதலும், ஆம். தப்பாமல் ஆலோசிக்க வல்லவராயிருந்தும் செய்து முடிக்க மாட்டாதவரும் உண்டென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் மந்திரிகளுள் விடப்படுவோரது குற்றம் சொல்லப்பட்டது] (௰)

அறுபத்துநான்காம்-அதிகாரம்-அமைச்சு.
முற்றிற்று.

---

# அறுபத்தைந்தாம்-அதிகாரம்.

# சொல்வன்மை.

அதிகாரமாவது: தான் நினைத்த தொழில் முடியும் வழியால் வார்த்தை சொல்ல வல்லனாகுதல், முன்னதிகாரத்திலே ஒரு தலையாச் சொல்லுமென்றதையே சிறப்புப்பற்றி விரித்துச் சொல்லுதலால் அதன்பின் வைக்கப் பட்டது.

நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(ப-ரை) (மந்திரிகளுக்கு அவசியம் வேண்டிய குணமாவது) நாநல மென்னும் - நாநலமென்று சிறப்பித்துச் சொலப்படும், நலனுடைமை - நலத்தினையுடையராதல், அந்நலம் - அந்நலமானது, (பிறர்க்கும்) யாநலத்து - பிற நலங்களிலெல்லாம், உள்ளதூஉமன்று - அடங்குகின்றதன்று, மிகுந்தது (ஆதலால்), எ-று.

## ௬௪௨. ௬௰௫ - ஆம் - அதி - சொல்வன்மை.

(க-ரை) மந்திரிகளுக்கு நாநலம்போல வேறுநலமில்லை-என்பதாம்.

(வி-ரை.) நாநலம் நாவாலுளதாகிய நலமென விரியும். இந்நலம் - உலகத்தைத் தம்வசமாக்கும் மந்திரிகளுக்கு வேறுயிருக்கவேண்டுமென்னும் நீதியால் வழக்கம்பற்றி நாநலமென்றும், பிறருக்கும் இதுபோற் சிறந்தது வேறில்லாமையால், அந்நலம் யாநலத்துள்ளதூஉ மன்றென்றுஞ், சொல்லினர். பிரித்தல் பொருத்தல் முதலாகிய தொழிலில்லார்க்கும் இது அவசியம் வேண்டுவதானால் அத்தொழிலுடைய மந்திரிகளுக்குச் சொல்லவேண்டுமோ வென்பது கருத்து (க)

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு

(ப-ரை) (மந்திரிகள்) சொல்லின்கண் - சொல்லினிடத்து, சோர்வு - சோர்தலை, காத்தோம்பல் - (தம்மிடத்தே உண்டாகாமல்) காக்கக்கடவர், (தம் அரசனுக்கும் அங்கங்களுக்கும்) ஆக்கமும் - பெருக்கமும், கேடும் - அழிவும் அதனால் - அச்சோர்வினாலே, வருதலால் - வருகையால், எ-று.

(க-ரை) செல்வமுங், கேடும், சொல்லால், வருதலால் மந்திரிகள் சொற் சோர்வு வாராமற் காக்கக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) ஆக்கத்துக்கு ஏதுவாகிய நல்லசொல்லையும், கேட்டுக்கு ஏது

வாகிய தீயசொல்லையும் சொல்லென்கிற ஒப்புமைபற்றி அதனாலென்றார். இனி சொற்சோர்வு மற்றைச் சோர்வுபோலாகாமல் உயிர்களுக் கெல்லாம் ஒரு சோர்வாதலால் காத்தோம்பலென்றார். [இவை இரண்டு பாட்டாலும் சொல் வல்லமை மந்திரிகளுக்கு அவசியம் வேண்டுவ தென்பது சொல்லப் பட்டது.] (௨)

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

(ப-ரை.) கேட்டார் - (நட்பா) வேற்றுக்கொண்டவரை, பிணிக்கும் - (பின் வேறுபடாமற்) கட்டும், தகை-குணங்களை, அவாய் - அவாவி, கேளா ரும் - (மற்றைப் பகையா) வேற்றுக்கொள்ளாதவரும், வேட்ப - (பின் அப் பகைமைவொழிந்து நட்பினை) விரும்பும்வண்ணம், மொழிவது-சொல்லப்படு வதே, சொல் - சொல்லாம், எ-று.

(க-ரை.) கேட்டாரும்-கேளாதவரும் இச்சிக்கச் சொல்வதே சொல்லாம்- என்பதாம்.

(வி-ரை.) அக்குணங்களாவன: வழுவில்லாமை, சொற்சுருங்குதல், பொ ருள்விளங்குதல், இனிதாதல் - மேலான பயனைத்தருதல் இவை முதலான வை, அவைகளை அவாவுதலாவது - அச்சொல் சொல்லுவான் குறித்தபொரு ளையேயன்றி வேறே புத்தி நட்பமுடையவராலே கொள்ளப்பட்டவைகளின் மேலும் நோக்குவிடத்தாதல். [இதனால் சொல்லினது இலக்கணம் சொல்லப் பட்டது.] (௩)

## ௬௰௫ - ஆம் - அதி - சொல்வன்மை. ௬௪௪

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

(ப-ரை.) (மந்திரிகள்) சொல்லை - அப்படிப்பட்டசொல்லை, திறன் - (தம்) முடையவும் கேட்பாருடையவுமான திறங்களை, அறிந்து - தெரிந்து, சொல் லுக - சொல்லக்கடவர், அதனினூஉங்கு - அப்படிசொல்லுதற்கு மேற்பட்ட, அறனும்பொருளும் - தருமமும்பொருளும், இல் - இல்லை (ஆதலால்,) எ-று.

(க-ரை.) மந்திரிகள் சொற்றிறங்களையறிந்து சொல்லக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) அத்திறங்களாவன; குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பவைகளால்வரும் தகுதி வேறுபாடுகள் அவைகளை அறிந்து சொல்லுதலாவது; அவைகளாலே தமக்கும் அவர்க்கும் உண்டாகிய உயர்வு தாழ்வுகளை அறிந்து அவரவர்க்குத் தகுந்த மாதிரியிலே சொல்லுதல். அது உயர்ந்தோர் நடையோடு பொருந்தலையும், இனிமையையும் தருதலால் அறனுமாயிற்று. தமது காரியமுடிதலாலே பொருளாயிற்று. அறனும்பொருளும் எனக் காரணத்தைக் காரியமாக்கிச் சொல்லினர். (௫)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(ப-ரை.) சொல்லை - தாம்சொல்லக்கருதிய சொல்லை, வெல்லுஞ்சொல் - வெல்ல வல்ல - சொல்லாகிய, பிறிதோர்சொல், இன்மை - இல்லாமையை, அறிந்து - தெரிந்து, அச்சொல்லை - அந்தச்சொல்லை, சொல்லுக - சொல்லக்கடவர், எ-று.

(க-ரை.) பிறர்சொல்லுஞ்சொல் வெல்லுஞ்சொல் லில்லாமையைக்கண்டு சொல்லக்கடவர்-என்பதாம்

(வி-ரை.) பிறிதோர்சொல்லாவது - பகைவாது எதிரானசொல் வெல்லுதல். குணங்களாலே மிகுதல் அதுவே வெல்லச்சொல்லுக வென்பதாம். (௬)

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

(ப-ரை.) வேட்ப - (பிறர்பின்னுங்கேட்க) விரும்பும்படி, தான்சொல்லி - தாங்கள் சொல்லி, பிறர்சொல் - (பிறர் தமக்குச்சொல்லுஞ்) சொல்லினது, பயன்கோடல்-பயனைக்கொண்டுவிடுதல், மாட்சியில் - (மந்திரி) லிலக்கணத்திலே, மாசற்றார்-குற்றமற்றவரது, கோள்-துணிவு, எ-று.

(க-ரை.) பிறரிச்சிக்கும்படி சொல்லி பிறர்சொற் பயனைக் கொள்ளுதல் மந்திரிகள் கொள்கை-என்பதாம்.

(வி-ரை.) பிறர்சொற்களிலே குற்றமுள்ளவனாயினும் அவைநோக்கி இகழாரென்பதாம். வல்லமை இல்லாதவரை யிகழ்தல், வல்லவர்க்குத்தகுதியல்லாமையால் இதுவும் உடன் சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் அதனைச்சொல்லும் விதம் சொல்லப்பட்டது.] (௬)

சொலல்வல்லன் சோர்விலா னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது

(ப-ரை.) (தான் எண்ணியகாரியங்களை சொலல்வல்லன் பிறர்க்கு ஏற்கச்) சொல்லுதல் வல்லவனாகி, (அவை மிகவும் பலவானவிடத்தே), சோர்விலன் - (ஒன்றிலுஞ்) சோர்விலாதவனாகி, அஞ்சான் – (சபைக்கு) அஞ்சாதவன், (யாவன்) - அவனை, இகல்-மாறுபாட்டிலே, வெல்லல்-வெல்லுதல், யார்க்கும் எவர்க்கும் அரிது - அருமை, எ-று.

(க-ரை.) சொல்லில் வல்லவனும், சோர்வில்லாதவனும், அஞ்சாதவனு மாகியவனை வெல்லலரிது-என்பதாம்.

(வி-ரை.) ஏற்கச்சொல்லுதல் - அவருக்கு அவை காரிய மல்லாதவையா யிருந்தாலும் ஆமென்று நம்பும்படி சொல்லுதல். சோர்வு சொல்லவேண்டு வதனை மறதியாலொழிதல். இம்மூன்று குணமுடையவனைப் பகைவராய்ப் பிரித்தல் பொருத்தல்செய்து வெல்வார் இல்லை-என்பதாம். (௭)

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்

(ப-ரை.) தொழில்-(சொல்லப்படுங்) காரியங்களை, நிரந்து-ஒழுங்குபடக் கோத்து, இனிது—இனிதாக, சொல்லுதல் - சொல்லுதலில், வல்லார் - வல்லவரை, பெறின் - பெற்றால், ஞாலம் - உலகமானது, விரைந்து - விரைவாகி, கேட்கும் - (அவைகளை) ஏற்றுக்கொள்ளும், எ-று.

(க-ரை.) சொல்காரியங்களை இனிதாகச் சொல்லுதலில்வல்ல மந்திரிகளை பெற்றால் உலகமேற்றுக்கொள்ளும்-என்பதாம்.

(வி-ரை.) ஒழுங்குபடக்கோத்தல் - முன்னே சொல்லவேண்டியவையும் பின்னே சொல்லவேண்டியவையும் அறிந்து அம்முறையே வைத்தல் - இனிதாதல் - கேட்பார்க்கு இன்பந்தருதல். சொல்லுதல்வல்லவன் நாலுபிரசம் பேசி லொருவன் என்னும் வடமொழிபற்றி வல்லார்ப்பெறினென்றார் [இவை இரண்டு பாட்டாலும் அவ்விதங்களாலே, சொல்லுதல் வல்லாரது சிறப்புச் சொல்லப்பட்டது. (௮)

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

(ப-ரை.) மாசற்ற - குற்றமற்றவையாய், சில - சிலவாகிய வார்த்தைகளை சொல்லல் (அப்படி) சொல்லுதலை, தேற்றாதவர்- அறியாதவர், பல-பலவாகிய வார்த்தைகளை, சொல்ல-பேச, காமுறுவர்-விரும்புவார், எ-று.



(க-ரை.) குற்றமற்ற வார்த்தைகளைப்பேச அறியாதவர்கள் பலவார்த்தைகளைப்பேச விரும்புவார்கள், வார்த்தை வசனம் என்பதாம்.

(வி-ரை.) குற்றம் - முன்சொல்லப்பட்ட குணங்களுக்கு எதிரானவை, இடைவிடாமற் பலசொல்லுதலையும் சொல்வன்மையென்று விரும்புவாரும் உண்டு. அவர் அப்படிச் சொல்லமாட்டாதவரே வல்லவர் அது செய்யாரென உறுதிப்படுத்துதற்கு மன்றவென்றார். (௯)

இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(ப-ரை.) கற்ற - கற்றநூல்களை, உணர - (பிறர்) அறியும்விதமாக, விரித்துரையாதார்-விரித்து உரைக்கமாட்டாதவர், இணர்-கொத்தினிடத்தே, ஊழ்த்தும்-மலர்ந்திருந்தும், நாறா-மணக்காத, மலரனையர்-பூப்போல்பவர், எ-று.

(க-ரை.) கற்றநூல்களை, விரித்துச் சொல்லாதவர்கள் வாசனையில்லா மலருக்கொப்பாவார்-என்பதாம்.

(வி-ரை.) எப்படி செவ்வெபற மலர்ந்திருந்தும் வாசனைசெய்யாத மலர் சூடப்படாதோ அப்படியே நூலைக்கற்றிருந்தும் சொல்லமாட்டாதவர் நன்கு மதிக்கப் படாரென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் அதுமாட்டாதது இழிவு சொல்லப்பட்டது. (௧0)

அறுபத்தைந்தாம்-அதிகாரம்-சொல்வன்மை,

முற்றிற்று.

---

## அறுபத்தாறாம்-அதிகாரம்.

# வினைத்தூய்மை.

அஃதாவது; செய்யப்படுந்தொழில்கள் பொருண்மாத்திரமல்லாமல் அறமும் புகழுந்தரத் தக்கவையாதல். சொல்லேயல்லாமல் செயலும் நன்றாக வேண்டுமென்கின்றமையால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்

(ப-ரை.) (ஒருவனுக்கு) துணைநலம் - துணையினது நன்மையானது, ஆக்கம்-செல்வமொன்றையே, தரூஉம் - கொடுக்கும், வினைநலம் - தொழிலினது நன்மையானது, வேண்டியவெல்லாம் அவன்வேண்டியவைகளை எல்லாம், தரும் - கொடுக்கும். எ-று.

(க-ரை.) ஒருவனுக்குத் துணை நன்மை செல்வமொன்றைத்தரும், தொழிலின் நன்மை வேண்டியவற்றைத்தரும் - என்பதாம்.

## [illegible] வினைத்தூய்மை

(வி-ரை.) வேண்டிய வெல்லாமென்றது-இம்மையில் அறம்பொருளின்ப முதலானவைகளையும், மறுமையில் தான் விரும்பிய பதங்களையும். [இக்குறளால் காணப்படுந்துணை நன்மையினும் கருதப்படுந் தொழில்நன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புச் சொல்லப்பட்டது ] (க)

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை

(ப-ரை) (தம்மரசனுக்கு) புகழொடு - இம்மைக்குப் புகழையும் நன்றி (மறுமைக்கு) அறத்தையும் பயவா தாராத, வினை - தொழில்களை, என்றும் எக்காலத்திலும், ஒருவுதல்வேண்டும்-(மந்திரிகளுக்கு) ஒழிதல்வேண்டும், எ-று

(க-ரை.) அரசனுக்குப் புகழையும் தருமத்தையுந் தாராத்தொழில்களை மந்திரிகள் விடவேண்டும்-என்பதாம்

(வி-ரை.) பெருகல் சுருங்கல் நசித்தல் என்கிற இவை வேறுபாடுகள் காரணத்தினால் வருதலால் என்றும் என்றார் (உ)

ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்

(ப-ரை ) ஆஅதும் - மேலாகக்கடவோம், என்னுமவர்-என்று நினைப்பவர் ஒளி - (தம்) ஒளி, மாழ்கும் - கெடுதற்குக்காரணமாகிய, வினை - தொழிலை, செய் - செய்தலை, ஓஒதல்வேண்டும் - ஒழியக்கடவர், எ-று

(க-ரை) மேலாவோமென றெண்ணுவோா கெடுதற்குக் காரணமான தொழிலை விடக்கடவர்-என்பதாம்.

(வி-ரை) ஒளியாவது-தாம் இருக்கின்றகாலத்திலே எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதல். ஒளிகெடவருமாதலால் - ஆக்கமன்றென்பதாம். (௩)

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(ப-ரை.) நடுக்கற்ற-அசைவற்ற, காட்சியவர் - தெளிவையுடையவர், இடுக்கட்படினும் - (தாம்) துன்பத்திலே படவரினும் (அது) தீர்தற்பொருட்டு, இளிவந்த - (முன்செய்தவர்க்கு) இழிவுவந்த தொழில்களைசெய்யார், எ-று.

(க-ரை) அசைவில்லா வறிவினையுடையவர் துன்பம் வரினும் இழி தொழிலைச் செய்யார் - என்பதாம்.

(வி-ரை.) சிறிதுபோதிலே நீங்குவதாகிய துன்பத்தை நோக்கி எப் போதும் நீங்காத இழிவை அடையலாகா தென்பதும் அவ்விழிவை அடைந் தாலும் வருவதாயுள்ள அத்துன்பமானது வருமென்பதும் தெளிவாராதலால்-செய்யாரென்றார். (௪)

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று



(ப-ரை.) எற்றென்று - (நான்செய்தது) எப்படிப்பட்டதென்று, இரங்குவ - பின்தானே இரங்குந் தொழில்களை செய்யற்க, (ஒருகாலும்) செய்யாதிருக்கக்கடவன், செய்வானேல் - ஒருகால் மயங்கி அவைகளைச் செய்வானாயின், மற்று - பின்பு, அன்ன - அவ்விரக்கங்களை, செய்யாமை நன்று - நலது, எ-று.

(க-ரை) தான் வருந்துந் தொழில்களைச் செய்யாதிருக்கக்கடவன் அவற்றைச் செய்வானாகிலும், பின்செய்யாமை நல்லதென்பதாம்

(வி-ரை) தொழில் [illegible] செய்து விட்ட பின்பு இரங்குவானாயின் அது [illegible] [illegible] [illegible] [illegible] பயனில் [illegible] தாமே துற [illegible] பின்பு இரங் காமை நன்றென்றார் [இரங்காமையுந் [illegible] செய்யாத

தன்னிவிடாராகி, செய்காசகு-'பொருளைக்குறித்தச) செய்த மந்திரிகளுக்கு, அவைதாம் - (தூயவையல்லாமையால முடியாவாம்), முடிந்தாலும் - (ஒருவழியால) முடிந்தாலும்-'பின், பீழை-தான்பதசை, தரும - கொடுக்கும், எ-று.

(க-ரை) பெரியோர் தள்ளப்பட்ட தொழில்களைகொள்ளப்பட்ட மந்திரிகளுக்கு அத்தொழில முன் முடியினும் பின துனபந்தரும-என்பதாம்

(வி-ரை.) முடிதல் வினைதத பொருளைத் தருதல் (அ)

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிறபயக்கு நற்பா லவை.

(ப-ரை.) (ஒருவன்) அழக்கொண்டவெல்லாம்) - தீய தொழில்களைச்செய்து) பிறர் இரங்ககொண்ட பொருளெல்லாம், அழப்போம் — இம்மையிலே அவன் இரங்கப் போகாநிற்கும், நற்பாலவை - மற்ற நல்லதொழில்களால் வந்த பொருள்கள், இழப்பினும்— முன்) இழந்தாலும், பிற்பயக்கும்-பின்வந்து பயன் கொடுக்கும், எ-று

(க-ரை) பிறனழக்கொண்ட பொருள்யாவுந் தானழப்போகும் நல்வழியால்வந்த பொருள்கள முன்னிழந்தாலும பின பயன கொடுக்கும் - என பதாம்

(வி-ரை.) பின்னெனவே மறுமையும் அடங்கிற்று பொருள்களால் அவைகளுக்குக் காரணமாகிய தொழில்களாது இயல்பு சொல்லியபடி. (கூ)

சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(ப-ரை.) (மந்திரியானவன்) சலத்தால் - தீயதொழில்களால், பொருள் செய்து-பொருளைச்சம்பாதித்து, ஏமார்த்தல்-(அதனால் அரசனுக்குக்) காப்புச் செய்தல, பசுமட்கலத்துள்-பசிய மண்ணின்பாத்திரத்துள், நீர்பெய்து - நீரை வார்த்து, இரீஇயற்று - (அதற்குக்) காப்புச்செய்ததனோடொக்கும், எ-று.

(க-ரை.) மந்திரியரசனுக்கு வஞ்சிப்பால் பொருளைத் தேடிக்காத்தல் பசிய மண்பாத்திரத்துள்ளே நீரைவாரத்துக் காத்தலபோலாம்-எனபதாம்.

(வி-ரை.) இருத்துதல் நெடுங்காலம் இருப்பாகச் செய்தல், அரசனும் பொருளும் ஒரு சேரப்போமென்பதாம். [இவை நான்கு பாட்டாலும அதற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (க0)

அறுபத்தாறும்-அதிகாரம்-வினைத்தூய்மை
முற்றிற்று.

## அறுபத்தி ஏழாம் - அதிகாரம்.

# வினைத்திட்பம்.

அஃதாவது: இப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்கு வேண்டுவ தாகிய மனவலிமையாம். அதிகாரமுறைமையும் இதனாலேயே விளங்கும்.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற

(ப-ரை.) வினைத்திட்ப மென்பது - தொழில் செய்யுமிடத்து வலிமை யென்று சொல்லப்படுவது, ஒருவன் - (அதனை முடித்தற்குரிய) ஒருவனது, மனதிட்பம்-மனத்தினது வலிமையாம், மற்றைய வெல்லாம் - அது நீங்கலான வல்லமைகளெல்லாம், பிற - (அதற்கு) வலிமையென்று சொல்லப் படுவன அல்ல, எ-று.

(க-ரை.) தொழில் வலிமையென்று சொல்லப்படுவது ஒருவன் மனவலிமையாம். மற்றவலிமை யிதற்கு விசேஷமல்லவாம்-என்பதாம்.

(வி-ரை.) அது நீங்கலானவை - படை அரண் கட்பு முதலானவைகளின் வலிமைகள், அவையும் அதற்கு வேண்டுமவையாய் இனமாகலால், மற்றைய வென்றும் அவை வேண்டியவையாயிருக்காலும் அம்மனவலி இல்லாவிடத்தே பயனில்லாகலாய் பிறவென்றுமே சொல்லினர் [இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்று சொல்லப்பட்டது.] (க)

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(ப-ரை.) ஆய்ந்தவர்-(முன்பு நீதிநூலை) ஆராய்ந்த மந்திரிகளது, கோள்-துணிவு, ஊறு - பழுதுபடுந்தொழிலை, ஒரால் - செய்யாமையும், உற்றபின் - (செய்யுந்) தொழில் வழிஞாலே பழுதுபட்டவிடத்து, ஒல்காமை - அதற்குத் தளராமையும் ஆகிய, இவ்விரண்டின் - இவ்விரண்டினது, ஆறு - வழியாகும், என்பர் என்று - (நூலோர்) சொல்லுவர், எ-று.

(க-ரை.) மந்திரிகள் துணிவானது பழுதுபடுந்தொழிலைச் செய்யாமையு மத்தொழிற் பழுதாகிற் றளராமையுமாம்-என்பதாம்.

(வி-ரை.) தேவர்க்கும் அசுரர்க்கும் மந்திரிகளாகிய பிரகற்பதி சுக்கிரன் இவர்களது துணிவைத்தொகுத்துப் பின்னே நீதிநூலுடையோராலே சொல்லப்பட்டபடியே சொல்லுகின்றமையால் இங்கே நினைதலுப்மையும் உடன்

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

(ப-ரை) வினை - (செய்யத்தொடங்கிய) தொழிலும், பகை - (அழிக்கத் தொடங்கிய) பகையும், என்ற - என்று சொல்லப்பட்ட இரண்டினது, எச்சம் - குறையை, நினையுங்கால் - ஆராயுமிடத்து தீயெச்சம்போல - தீயினது குறைபோல, தெறும் - (பின் வளர்ந்து) கெடுக்கும், எ-று.

(க-ரை.) தொழிலும் பகையும் அக்கினிபோல் வளர்ந்து கெடுக்கும் என்பதாம்.

(வி-ரை.) இனி இக்குறை என்னசெய்யமாட்டுமென்று இகழ்ந்து விட்டு விட்டால் முடிவுபெறச்செய்ய வொண்ணாதாம், பின்வளர்தல் ஒப்புமையாற்றீப் பகை எச்சமாக உடன் சொன்னார் [ஆறு வலியவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது] (௪)

பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(ப-ரை) (தொழில் செய்யுமிடத்து) பொருள் - பொருளும், கருவி - சாதனமும், காலம் - காலமும், வினை - செய்தியும், இடன் - இடமும் ஆகிய, ஐந்தும் - ஐந்தையும், இருள்தீர - மயக்கமற, எண்ணி - நினைத்து, செயல் - செய்யக்கடவன், எ-று.

(க-ரை) பொருளும், சாதனமும், காலமும், தொழிலும், இடமும், இவ்வைந்தும் நினைத்துத் தொழில் செய்யக்கடவனென்பதாம்.

(வி-ரை) பொருள் - அழியும் பொருளும், ஆகும் பொருளும், கருவி - தன் சேனையும், பகைவர் சேனையும், காலம் - தனக்கு ஆகுங்காலமும், அவர்க்கு ஆகாக்காலமும், வினை - தன் வல்லமைத்தொழிலும், அவர் வல்லமைத்தொழிலும், இடன் - தான் வெல்லும் இடமும் அவர் வெல்லும் இடமும், இவைகளைத் தான் வெற்றிபெறுந்திறத்தில் தப்பாமல் எண்ணிச்செய்க வென்பதாம். (௫)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(ப-ரை) (தொழில்செய்யுமிடத்து) முடிவும் - (அது) முடிதற்கு உண்டாகிய முயற்சியையும், இடையூறும் - (அதற்கு வரும்) இடையூற்றையும், முற்றி - (அவ்விடையூறுநீங்கி) முடிந்தால், எய்தும் - (தான்) அடையும், படுபயனும் - பெறும் பயனையும், பார்த்து - சீர்தூக்கி, செயல் - செய்யக் கடவன், எ-று.

(க-ரை) முயற்சியையும், இடையூற்றையும், பயனையும், ஆராய்ந்து

தொழில செய்யக்கடவன்-என்பதாம்.



(வி-ரை.) முடிவு - அதன் முயற்சிக்கு ஆகுதலாய் ஆகுபெயர். முயற்சியளவுக்கும், இடையூறளவுக்கும், பயனளவு பெரிதாயிருந்தால் அத்தொழிலைச் செய்க வென்பதாம். (௬)

செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
உள்ளறிவா னுள்ளங் கொளல்.

(ப-ரை.) செய்வினை (அவ்வழியில்லாமல்) செய்யப்படும் தொழிலை, செய்வான் - செய்யத் தொடங்கினவன், செயன்முறை செய்யுமுறைமையாவது, அவ்வினை - அத்தொழிலினது, உள்-உளப்பாட்டை, அறிவான்-அறிபவனது, உள்ளம் - கருத்தை. கொளல்-(தான்) அறிதல், எ-று.

(க-ரை.) தொழிலைச் செய்யத் தொடங்கினவன் செய்யுமுறையாவது அத்தொழிலி னுளப்பாட்டை யறிதல் - என்பதாம்.

(வி-ரை.) அவ்வாறென்றது பொருள் முதலானவைகளை எண்ணலையும், முடிவு முதலானவைகளை ஆராய்தலையும், உள்ளறிவான் முன் செய்து கைவந்தவன் அவன்கருத்து, அதனைச் செய்தவக்கு உபாயம், அதனை அறிய வேதாலும் அவ்வுபாயத்தினாலே செய்து பயனை அடைவா னென்பதாம். [ இவை மூன்று பாட்டாலும் நப்பவன் செய்யுந் திறம் சொல்லப்பட்டது. ]

வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(ப-ரை.) வினையான்-(செய்யப்படுகின்ற) தொழிலினாலே, வினை-(அப்படிப்பட்ட) வேறொரு தொழிலை, ஆக்கிக்கோடல் - முடித்துக்கொள்ளக் கடவன்-(அது) நனைகவுள்-(மதத்தால்) நனைந்தகபோலத்தையுடைய யானையால்-யானையினால், யானை-(அப்படிப்பட்டவேறொரு) யானையை, யாத்தற்று-கட்டியதோடு ஒக்கும், எ-று.

(க-ரை.) தொழிலாலே தொழிலை முடித்துக்கொள்ளக்கடவன். அது யானையை யானையாற் கட்டிய தொப்பாம் - என்பதாம்.

(வி-ரை.) பிடித்தற் கருமை தோன்ற நனைகவுளென்றார். தொடங்கியதொழிலாலே வேறு மொருதொழிலை முடித்தற்கு உபாயமாகும் விதம் ஆலோசித்துச்செய்தால், எல்லாத்தொழில்களும் எளிதிலேமுடியுமென்பதாம்.

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

(ப-ரை.) (தொழில் செய்பவனும்) நட்டார்க்கு-(தனது) நட்பினருக்கு, நல்ல செயலின்-நல்லவைகளைச் செய்தலினும், ஒட்டாரை-(தன்பகைவராகிய) பகைவரை, ஒட்டிக்கொள்ளல் - (தனக்கு) நட்பாகிக் கொள்ளுதல், விரைந்ததே-விரைந்து செய்யத்தகுவதாகும், எ-று.

௧௦



(க-ரை.) பகைவரைச் சிநேகமாக்கிக் கொள்ளுதல் சிநேகருக்கு நல்லவைகளைச் செய்தலினும் நல்லது - என்பதாம்.

(வி-ரை.) அத்தொழிலைப் பலிக்கச்செய்யும் அவ்விரண்டுகாரியங்களையும் பகைவர்க்குத்தன் மெலிவுதெரிவதன்முன்னே செய்கவென்றற்கு, விரைந்ததென்றார்.

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(ப-ரை.) உறைசிறியார்-ஆற்றலிற் சிறியாராகிய மந்திரிகள் (தம்மிடத்திலிருந்த மெலியவர் அதிர்ந்துவிடுமென்று), உள்-(தமது) சுற்றங்கள், நடுங்கல்-நடுங்குதலுக்கு, அஞ்சி-பயந்து, குறைபெறின்-(அவ்வலியவரால் வேண்டுவதாகிய) சந்திகூடுமாயின், பெரியோர்-அப்பெரியவரை, பணிந்து-வணங்கி, கொள்வர் (அதனை அவர்கள்) கொள்ளுவர், எ-று.

(க-ரை.) ஆற்றலிற் சிறியாராகிய மந்திரிகள் பகைவரெதிர்த்த விடத்துப் பணிந்துகொள்வர் - என்பதாம்.

(வி-ரை.) இடம், காலம், ஆற்றலும், அவைகளின் சிறுமை உடையவர்மேல் ஏற்றப்பட்டது. மெலியாரோடு சந்திக்குவலியா ரிசைதல் அரிதாகலாம்-பெறி னென்றார். அடியிலே மெலியாராயினார்; தம்சுற்றங்களும் அஞ்சி நீங்கின் முதலோடும் கெடுவாராகலின் அதுவராமற் சிறிது கொடுத்தும் சந்தியை யேற்

றுக்கொள்க வென்பதாம். பணிதல் மாற்றிகளுக்குக் கருத்தல்லாமையாற் கொள்வாரென உலகியலாற்சொல்லினர், [இவை மூன்று பாட்டாலும் மெலியவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.] (கஉ)

அறுபத்தெட்டாம்-அதிகாரம்-வினைசெயல்வகை.

முற்றிற்று.

---

## அறுபத்தொன்பதாம்-அதிகாரம்.

# தூது,

அஃதாவது, பொருத்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசரிடத்தே செல்வாரது தன்மை, அவ்விரண்டினையும் முன்வினை செயல்வகை யென்றமையால், இது அதன்பின் வைக்கப்பட்டது, தான் வகுத்துச் சொல்லுவோன் சொல்லியது சொல்லுவோன் எனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னேன் மந்திரியோடு சமானனானாகலாலும், பின்னேன் அவனிலே காற்பங்குகுறைந்தோனாகலாலும், இஃது அமைச்சியலாயிற்று.

அன்புடைமை யான்ற குடிப்பிறந்தல் வேந்தவாம்

சுகூ - ஆம் - அதி - தூது. கூ0எ

(ப-ரை.) அன்புடைமை-(தன் சுற்றத்தாரிடத்து) அன்புடையவனாதலும், ஆன்ற குடிப்பிறத்தல்-(மந்திரித்தொழில் செய்தற்கு) அமைந்தகுடியிலே பிறத்தலும், வேந்தவாம் பண்புடைமை - அரசர் சாதிவிரும்பும் குணமுடையவனாதலும், தூதுரைப்பான் - தூதுவார்த்தையைச்சொல்லுவோனுக்கு,பண்பு, இலக்கணமாம், எ-று.

(க-ரை.) அன்பும் நற்குடியிற் பிறத்தலும் அரசர் விரும்பும் குணமுமுடையனாதல் தூதரிலக்கணம் - என்பதாம்.

(வி-ரை.) முன்னைய விரண்டுறுப்புமுடைய சுற்றத்தார்க்கும் தீங்குவாராமல்தமனை காத்து நடத்தலும், தன்முன்னோர் மதியங்கேட்டு அறிதலும், பெற்றம். வேந்தவாம் பண்புடைமை-பின்பு நன்மையைச் சேர்ந்தொழு

கவிலே அறியப்படும், அதனால் வேந்தரும் அவனுக்கு வாய்ப்பித்தல் சொன் னப்படும்.

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

(ப-ரை.) அன்பு (தம்மரசனிடத்து) அன்புடைமையும். அறிவு-(அவ னுக்கு ஆமவைகளை அறியும்) அறிவுடைமையும், (அவைகளை வேற்று வேந் தனிடத்துச் சொல்லும்போது) ஆராய்ந்த சொல் வன்மை-ஆராய்ந்து சொல் லும் வலியும் என, தூதுரைப்பார்க்கு - தூதுசொல்ல உரியவர்க்கு, இன்றி யமையாத-அவசியமாக வேண்டிய குணங்கள், மூன்று-மூன்றாம், எ-று.

(க-ரை.) அன்பு அறிவு, சொல்வன்மை, இவை தூது சொல்வோர்குண ங்களாம் - என்பதாம்.

(வி-ரை.) ஆராய்தல், அவைகளுக்குச் சம்மதிக்கும் சொற்களைத் தெரி தல், அவசியமாகவேண்டிய குணங்கள் மூன்றெனவே மந்திரிகளுக்குச் சொல் லிய மற்றைக் குணங்களும் வேண்டுமென்பதாயிற்று. இவை இரண்டு பாட் டானும் இருவகைத் தூதர்க்கும் பொதுவிலக்கணம் சொல்லப்பட்டது.

நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(ப-ரை.) வேலாருள்-வேலினையுடைய வேந்தரிடத்து, வென்றி-(தன் னரசனுக்கு) வெற்றியைத் தருகின்ற, வினையுரைப்பான் - தொழிலைச்சொல் வோனுக்கு, பண்பு - இலக்கணமாவது, நூலாருள் - நீதிநூலை அறிந்தமந்திரி களிடத்து, நூல் வல்லனாகுதல்-(தான்) அந்நூலில் வல்லவனாகுதல், எ-று.

(க-ரை.) தூதனுக் கிலக்கண மாவது-மந்திரிகளிடத்து வல்லவனாகுதல் என்பதாம்.

(வி-ரை.) கொலைத்தொழிலோ ரென்பது தோன்ற வேலாரென்றும் சாதத்தொழிலிரண்டு மடங்கவென்றி வினையென்றும் சொல்லினர்-வல்லவ

கூ0அ

## சாகூ - ஆம் - அதி - தூது.

குறுகுதல் - அறிதன்மாத்திர முடையராகிய அவர் முன்வருக்கும் வல்லமையு டையனாகுதல். (கூ)

(ப ரை.) வழி (தன்னரசன் வார்த்தையை) அவன் சொல்லிய வழியே, உரைப்பான் (வேற்றரசர்க்குச்) சொல்லுவானது, பண்பு இலக்கணமாவது, வாய்மை (பொருளாலும் காமத்தாலும்) பரிசுத்தனாதலும், துணைமை (தனக்கு அவர் மந்திரிகள்) துணையாந்தன்மையும், துணிவுடைமை துணி தலையுடைமையும், இம்மூன்றின் இம்மூன்றோடுகூடிய, வாய்மை மெய்ம்மையும் ஆம் எ று.

(க ரை.) சுத்தமும், துணையும், துணிவும், சத்தியமும், இந்நான்கும் அதனிலக்கணமாம் என்பதாம்.

## கூகo எo - ஆம் - அதி - மன்னரைச்சேர்ந்தொழுகல்.

(வி ரை.) பொருள் காமங்கள்பற்றி வேறுபடச் சொல்லாமைப் பொருட்டு தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சி சொல்லிய விடத்தே எம்போல்வார்க்கு அதுஇயல்பென்று அவர் கோபத்தை நீக்கற்பொருட்டுத்துணைமையும், இது சொன்னால் இவர் துன்பம் செய்வரென்று ஒழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவராலும் நம்பப்படுதற்பொருட்டு, மெய்ம்மையும் வேண்டப்பட்டன. (அ)

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(ப ரை.) விடுமாற்றம் (தன்னரசன்சொல்லி) விட்ட வார்த்தையை, வேந்தர்க்கு வேற்றரசர்க்கு, உரைப்பான் சொல்லுதற்கு உரியவன், (தனக்குவரும் துன்பத்திற்கு அஞ்சி) வடுமாற்றம் (அவனுக்குத்) தாழ்வான வார்த்தையை, வாய்சோரா வாய்சோர்ந்தும் சொல்லாத, வன்கணவன் வலிமையையுடையவன் எ று.

(க ரை.) தன்னரசன் வார்த்தையை வேற்றரசர்க்குச் சொல்லுதற்குரியவனே அதனில் வல்லவன் என்பதாம்.

(வி ரை.) தாழ்வு அரசர் சாதிக்குத் தருமமல்லாமையால் அதனைவடு வென்றார். (கூ)

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(ப ரை.) இறுதி பயப்பினும் (அவ்வார்த்தை தனக்கு) முடிவைத்தருமாயினும், எஞ்சாது அஞ்சாது, (தன்னரசன் சொன்னபடியே) இறைவற்கு அவ்வரசனுக்கு, உறுதி மிகுதியைய, பயப்பது வேற்றரசனிடத்துச் சொல்லுவானே (தூதாம்) தூதுவன், எ று.

(க ரை.) தனக்கு முடிவுவரினும் அஞ்சாது வேற்றரசனுக்குத் தன்னரசன் சொல்லைச் சொல்பவனே தூதன் என்பதாம்.

செய்தவையாகக் கொள்வரென்பது கருத்து, (௯)

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.

(ப ரை,) மறை அரசனுக்குப் பிறரோடு ரகசியம் நிகழுமிடத்தும், எப்பொருளும் - யாதொருபொருளையும், ஓரார்-செவிகொடுத்துக் கேளாமலும், தொடரார் அவனை முந்திவினவாமலும், அப்பொருளை அந்தரகசியப்பொருளை விட்டக்கால் அவனே அடக்காமற் சொலவிடுவ, கேட்க கேட்கக்கடவர் எ று,

க ரை, அரசனிரகசியம் பேசுகையிற் கேளாமலு மனதை வினவாமலு மிருந்து அவன்சொன்னால மந்திரிகள கேட்கக்கடவர் என்பதாம்,

வி ரை, முந்தி விளம்புதற்கு உரிய பொருளாயிருந்தாலு மென்றற்கு எப்பொருளு மென்றார், (௰)

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

ப ரை, அரசனுக்குக் காரியஞ்சொலலும்போது குறிப்பறிந்து அப்பொழுது நிகழ்கின்ற அவனது குறிப்பைஅறிந்து, காலங்கருதி சொலலுதற்கு ஏற்ற காலத்தையும்பார்த்து; வெறுப்பில வெறுப்பிலலாதனவும், வேண்டும் வேண்டியனவும் ஆகிய காரியங்களை, வேட்ப அவன் மனம் விரும்பும்வகை, சொலல் சொலலக்கடவர், எ று,

க ரை, குறிப்பறிந்து சமயம்பார்த்து வெறுப்பிலலாதவற்றையும் வேண்டி

# ௭0 - ஆம் - அதி - மன்னரைச்சேர்ந்தொழுகல். ௬௯௯

(வி-ரை.) அரசன்மனம் காரியத்திலன்றிக் காமவெகுளியுள்ளிட்டவைகளிலே நிகழுமிடத்தும். அதற்கு ஏற்காதகாலத்தும், சொல்லுதல் பயன்படாமற்போதலால் - குறிப்பறிந்து காலங் கருதியென்றும், அவனுடன் படாத காரியங்கள் முடிவுபெறுமையால் - வெறுப்பில வென்றும் பயனில்லாதவையும், பயன் சுருங்கியவையும் - ஆகிய காரியங்களைச் செய்யவேண்டாமையால் வேண்டுபவென்றும், அவைகளை இனியவையாய்ச் சுருங்கி விளங்கிய பொருளுடையவையாகிய சொற்களாலே சொல்லுக வென்றற்கு வேட்பச் சொல்லென்றும். சொல்லினர். (௮)

வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

(ப-ரை.) (பெரும்பயனுள்ளவையும்) வேட்பன (அரசன்) விரும்புவனவும்-(ஆகிய காரியங்களை) சொல்லி-(அவன்கேட்டிலனாயினும் சொல்லி) எஞ்ஞான்றும் - எந்நாளும், வினையில - பயனில்லாதவைகளை, கேட்பினும் (தானே) கேட்டாலும், சொல்லாவிடல் - சொல்லாது விடக்கடவன், எ-று.

(க-ரை.) அரசன் விரும்பியவற்றைச் சொல்லிப் பயனில்லாதவற்றை யவன்கேட்டாலு மந்திரிசொல்லாது விடக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) வினையில் கேட்பினும் எனவந்த சொற்களால் அவைகளுக்கு எதிரானசொற்கள் - வருவிக்கப்பட்டன. வினையால் வருதலின் - வினையென்றும், வறுமைக்காலமும் அடங்க எஞ்ஞான்றுமென்றும் சொன்னார். சொல்லத்தக்கவையும் சொல்லத்தகாதவையும் வகுத்துச்சொல்லியபடி. [இவைநான்கு பாட்டாலும் சிறப்புவகையால் சொல்லப்பட்டது.] (௭)

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்.

(ப-ரை.) இளையர்-(இவர் எமக்கு) இளையவர், இனமுறையார்-(எமக்கு) இன்னமுறையினர், என்றிகழார் - என்று-(அரசரை) அவமதியாமல், நின்ற (அவரிடத்து) நிலைபெற்ற, ஒளியோடு - ஒளியோடுபொருந்த, ஒழுகப்படும்- நடக்கத்தகும், எ-று.

(க-ரை.) அரசரிளையவர் எமது சாதியார் என்றிகழாமல் மந்திரிகள் மதிக்கக்கடவர் - என்பதாம்.

(வி-ரை.) ஒளி கீர்த்தி செய்யாவிடத்தும் உலகங்காக்கின்ற அவரது தெய்வத்தன்மை அதனோடுபொருந்த வொழுகுதலாவது - அவர் தேவரும் தாம் மனிதருமாக நடத்தல். அவ்வொளியினாலே நீக்கப்பட்ட இளமையும் முறைமையும்பற்றி இகழ்வாராகில் தாமும்நீக்கப்படுவ ரென்பதாகருத்து.

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

40

௬௯௯ எக - ஆம் - அதி - குறிப்பறிதல்.

(ப-ரை.) துளக்கற்ற - அசைவற்ற, காட்சியவர் - அறிவையுடையவர் கொளப்பட்டேமென்று-(அரசனால்) நன்கு மதிக்கப்பட்டோமென்று, எண்ணி - நினைத்து, கொள்ளாத-(அவன்) விரும்பாதவைகளை, செய்யார் - செய்யார்கள், எ-று.

(க-ரை.) அறிவுடையவர் அரசனாலே மதிக்கப்பட்டோமென்று நினைத்து அவர் விரும்பாதவற்றைச் செய்யார் - என்பதாம்.

(வி-ரை.) விரும்பாதவைகளைச்செய்து அறிவுடையோர் கொள்ளப்பட்ட பின்பு தம்மை வேறொருவராக நினைப்பவராதலால், முன்னையராகவே நினைத்து அஞ்சி நடப்பவரை - துளக்கற்ற காட்சியவரென்றார். (௯)

பழைய மெனக்கருதி பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

(ப-ரை.) பழையமெ‌ன-(அரசனுக்குப்) பழைமையோமென, கருதி - நினைத்து, பண்பல்ல-(தமக்கு) இயல்பல்லாதவைகளை, செய்யும் - செய்கின்ற, கெழுதகைமை - உரிமையானது, கேடுதரும் (மந்திரிகளுக்குக் கேட்டைத்தரும், எ-று.

(க-ரை.) அரசனுக்குப் பழைமையோமென்று நினைத்து இயல்பல்லாதவற்றைச் செய்யுமுரிமையானது மந்திரிகளுக்குக் கேட்டைத்தரும் என்பதாம்.

(வி-ரை.) அவன் பொறுத்து வருந்தும் பொழுதில் அப்பழைமை நோக்கி முகங்கொடாமல் உயிரை வௌவுதலால் அவன் வேண்டாதவை செய்தற்கு ஏதுவாகிச் உரிமைகேடு தருவனென்றார். [இவை மூன்று பாட்டாலும் பொறுப்பரென்று அரசர்க்கு வெறுப்பாயுள்ளவைகளைச் செய்யலாகாதென்பது சொல்லப்பட்டது.] (௧0)

எழுபதாம்-அதிகாரம்-மன்னரைச்சேர்ந்தொழுகல் முற்றிற்று.

---

## எழுபத்தோராம் அதிகாரம்

# குறிப்பறிதல்.

அஃதாவது: அரசர் நினைத்ததை அவர் சொல்லாமல் அறிதல். இவை மன்னரைச்சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால், இது அதன்பின் வைக்கப்பட்டது.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

## எக - ஆம் - அதி - குறிப்பறிதல். கககூ

(ப-ரை.) குறிப்பு-(அரசனால்) குறிக்கப்பட்ட காரியத்தை, கூறாமை (அவன்) சொல்லவேண்டாவகை, நோக்கி-(அவன் முகத்தையாவது கண்ணையாவது) பார்த்து, அறிவான் - அறிகிற மந்திரியானவன், எஞ்ஞான்றும் - எந்நாளும், மாறாநீர் - வற்றாத நீராலே சூழப்பட்ட, வையக்கு - உலகத்துள்ளார்க்கு, அணி - ஆபரணம், எ-று.

(க-ரை) அரசன் குறிப்பை யறிகிற மந்திரி உலகத்தார்க் காபரணமாவான் - என்பதாம்.

(வி-ரை.) அறிவுடையனாகி எல்லார்க்கும் அழகு செய்தலால் வையக் கணி யென்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர்கள் வையத்திற் கென்பது விகாரம். (க)

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்

(ப-ரை.) அகத்தது-(ஒருவனது) மனத்தினிடத்திலே நிகழ்வதை, ஐயப்படாத அது - சந்தேகப்படாமல், உணர்வானை - துணிவாக அறிய வல்லவனை (மனிதனேயாயினும்) தெய்வத்தோடொப்ப - தெய்வத்தோடு சமானமாக, கொளல்-நன்கு மதிக்கக்கடவன், எ-று.

(க-ரை.) மனத்தினிடத்து நடப்பதை அறிபவனைத்தெய்வத்தோடு சமானமாகக் கொள்ளக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) உடம்பு முதலானவைகளால் ஒப்பாகானாயினும் பிறர் நினைத்ததை அறிகிற தெய்வத்தன்மை யுடைமையால் தெய்வத்தோ டொப்ப வென்றார். (உ)

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(ப-ரை.) குறிப்பின்-(தன்) குறிப்பு நிகழும் விதம் அறிந்து, குறிப்புணர்

வாரை-(அதனால்) பிறர்குறிப்பு அறியுந் தன்மையவரை, உறுப்பினுள்-(அரசர் தம்) உறுப்புகளுள் - யாதுகொடுத்தும் (அவர் வேண்டுவது) யாதொன்றைக் கொடுத்தாயினும், கொளல்-(தமக்குத்) துணையாகக்கொள்ளக்கடவர், எ-று,

(க-ரை.) குறிப்பால் குறிப்பவரை வேண்டுவன கொடுத்துக்கொள்ளக் கடவர்-என்பதாம்.

(வி-ரை.) உள்ளே நிகழும்வழி யாவர்க்கும் ஒத்தலால் பிறர் குறிப்பை அறிதற்குத் தங்குறிப்புச் சான்ற மாயிற்று. உறுப்புகள்; பொருள், நாடுமுதலா கிய புறத்துறுப்புகள். [இவை மூன்றுபாட்டாலும் குறிப்பறிவாரது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩).

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

## ௯௧௩ எக - ஆம் - அதி - குறிப்பறிதல்.

(ப-ரை.) குறித்தது-(ஒருவன் மனத்தி) னினைத்ததை, (கூறாமை) அவன் சொல்லாமல் - கொள்வாரோடு, அறியவல்லவரோடு, ஏனை-மற்றை-(அறியமா ட்டாதவர்) உறுப்பு - அவயவத்தால், ஓரனையர் - ஒருதன்மையாக வொப்பி னும் வேறு-(அறிவால்) வேறு, எ-று.

(க-ரை.) மனதில் நினைத்ததைச் சொல்லாமலறிய வல்லவரோடு அறிய மாட்டாதவா வடிவா லொப்பினு மறிவால் வேறுவர் - என்பதாம்.

(வி-ரை.) அறியமாட்டாதவ ரென்பதும், அறிவாலென்பதும், வருவிக் கப்பட்டன. சிறந்த அறிவில்லாமையால் மிருகமென்னுங் கருத்தால் வேறெ ன்றார். (௪)

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பி னு
ளென்ன பயத்தவோ கண்.

(ப-ரை.) குறிப்பின்-(குறித்ததை அறியவல்லதன்) காட்சியால், குறிப் பு-(பிறர்) குறிப்பை, உணராவாயின் - அறியமாட்டாவாயின்-(ஒருவனுக்கு, உறுப்பினுள் - அவயவங்களுள். கண்-(சிறந்த கண்கள், என்னபயத்தவே) (வேறே) என்னபயன் செய்வனவோ, எ-று.

(க-ரை.) குறிப்பால் பிறர்குறிப்பை யறியாவிடில் கண்கள் என்னபய னைத்தருவன - என்பதாம்.

(வி-ரை.) குறிப்பறிய விடத்தே அவ்வுறுப்புச்சிறப்புப் பற்றி உயிரினதியல் கண்மேல் ஏற்றப்பட்டது. அக்கண்களாலே பயனில்லை என்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் குறிப்பறியாமை சொல்லப்பட்டது.] (௬)

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

(ப-ரை.) அடுத்தது-(தன்னை) அடுத்த பொருளினது நிறத்தை, காட்டும் (தான்கொண்டு) காட்டுகிற, பளிங்குபோல் - பளிங்கினைப்போல், நெஞ்சம் (ஒருவனது) நெஞ்சத்தில், கடுத்தது - மிகுந்த குணத்தை, முகம்-(அவன்)முகமானது, காட்டும்-(தான்கொண்டு) காட்டும், எ-று.

(க-ரை.) அடுத்த பொருளைக் காட்டும் கண்ணாடிபோல ஒருவன் மனத்தின் குணத்தை முகங்காட்டும் - என்பதாம்.

(வி-ரை.) அடுத்தனிறத்தை அடுத்ததெனலால் ஆகுபெயர். ஒருபொருள் வேறொரு பொருளின் குணத்தைக்கொண்டு தோற்றுதலாகிய தொழிலுவமை. (௬

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

(ப-ரை.) (உயிரானது) உவப்பினும் - விரும்பினாலும், காயினும்-வெறுத்தாலும், தான் தான்(அறிந்து)முந்துறும்- அவ்விரண்டையும் அவ்வுயிர்க்கு முற்



பட்டுநிற்கும்(ஆதலால்)முகத்தின்-முகம்போல், முதுக்குறைந்தது-அறிவுமிகுந்தது, உண்டோ-வேறுண்டோ, எ-று.

(க-ரை.) முகம்போல அறிவுமிகுந்தது வேறில்லை-என்பதாம்.

(வி-ரை.) அறிவு உயிர்க்கேயல்லாமல் முகத்திற்கு இல்லை என்பாரை நோக்கி உயிரினது கருத்தை அறிந்து அதுவிரும்பினால் தான் மலர்ந்தும், அது வெறுத்தால்தான் கருகியும் வரலால் உண்டென்று மறுப்பவர்போல் குறிப்பறிதலுக்குச் சாதனம் சொல்லியபடி. (௭)

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(ப-ரை.) (குறையுறுவோன்) அகநோக்கி (தன்) மனத்தை குறிப்பால் அறிந்து, உற்றது (தான்) உற்றதனை, உணர்வார்-அறிந்து தீர்ப்பாரைபெறின்-

பெற்றால் (அவர் தன் முகத்தைப்பார்க்கும்படியாக) முகநோக்கி (அவர்)முகத்தைப்பார்த்து, நிற்க (அவ்வளவிலே) நிற்க, அமையும் போதும், எ று.

(க ரை.) மனதைக் குறிப்பாலறிந்து உற்றதை, அறிவாரைப் பெற்றால் அவர், முகம்பார்த்து நிற்கப்போதும் என்பதாம்.

(வி ரை.) அப்படி நில்லாமல் சொல்லுவாராகில் இருவருக்கும் சிறுமையாமாகலால், அறுமே என்பதாம். குறையுடையோரது இயல்பு சொல்லுவார்போல் சாதனம் சொல்லியபடி [இவை மூன்று பாட்டாலும் குறிப்பறிதற்குச் சாதனம் முகமென்பது சொல்லப்பட்டது.] (அ)

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

(ப ரை.) கண்ணின் வகைமை (தமது) பார்வை வேறுபாட்டுத் தன்மையை, உணர்வார் அறியவல்ல மந்திரிகளை, பெறின் (அரசர்) பெற்றால் (அவர்க்கு) பகைமையுங் கேண்மையும் (மனத்திலுள்ள) பகைத்தன்மையும் நட்புத்தன்மையும் (வேற்றரசர் சொல்லாமற் போயினும்) கண் (அவர்) கண்களே, உரைக்கும் சொல்லும், எ று.

(க ரை.) கண்ணின் தன்மையை யறியவல்ல மந்திரிகளை யரசர்பெற்றாலவர்க்குப் பகையையு நட்பையுங் கண்காட்டும் என்பதாம்.

(வி ரை.) பார்வை வேறுபாடாவன, வெறுத்த பார்வையும், விரும்பிய பார்வையும், ஆம் உணர்தல் அவைகளை அந்தந்தக் குறிகளால் அறிதல்.

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

(ப ரை.) நுண்ணியமென்பார் நுட்பவறிவுடையே மென்றிருக்கு மந்திரிகள், அளக்குங்கோல் (அரசரது கருத்தை) அளக்குங்கோலாவது, காணுங்கால்



ஆராயுமிடத்து, கண்ணல்லது (அவரது) கண்களல்லாமல், பிற வேறு, இல்லை இல்லை, எ று.

(க ரை.) அரசர் கருத்தை யளக்குங் கோலாவது அவர்கள் கண்களேயல்லாமல் வேறில்லை என்பதாம்.

(வி ரை.) இங்கிதம், வடிவு, தொழில், சொல்என்பவை முதலான பிறர் கருத்தளக்கிற அளவைகள்பலவும் முன்னறிந்தவிடத்தே அவராலேமறைக்கப்

படும பார்வை மனத்தோடு கலத்தலால் மறைக்கப்படாதென்பதுபற்றி அத னையே பிரித்துச் சொல்லினார்.] இவை இரண்டு பாட்டாலும் நண்ணியகருவி பார்வை என்பது சொல்லப்பட்டது.] (௧0)

எழுபத்தோராம்-அதிகாரம்-குறிப்பறிதல்.
முற்றிற்று.

---

## எழுபத்திரெண்டாம்-அதிகாரம்.

# அவையறிதல்.

——(*)——

அஃதாவது: அரசனோடுசூழ்ந்த சபையியல்பை அறிதல், காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யல்லாமல் இதுவும் வேண்டுதலால் பின்வைக்கப் பட்டது.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொலின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(ப தை.) சொல்லின்றொகை சொல்லின் கூட்டத்தை, அறிந்த தெரிந்த தூய்மையவர் பரிசுத்தகுணமுடையவர் (தாமொன்றுசொல்லும்போது) அவை (அப்பொழுதுள்ள)சபையை, அறிந்து தெரிந்து, ஆராய்ந்து ஆராய்ச்சிசெய்து, சொல்லுக சொல்லக்கடவர், எ று.

(க தை.) சொல்லின தொகையை யறிந்தவர், சபையறிந்து சொல்லக் கடவர் என்பதாம்.

(வி தை.) சொல்லின் தொகையெனவே செஞ்சொல், ஆக்கச்சொல், குறிப்புச்சொல் என மூவகைச்சொல்லும் அடங்கின, தூய்மை. அச்சொற்களில் தமக்கு ஆகாதவை ஒழித்து ஆமவைகொள்ளல, அவையினளவை அவை என் ருர். அவ்வளவு மிகுதி, ஒப்பு, தாழ்வு என மூவகைப்படும். அறிதல தம்மோடு தூக்கி அறிதல. ஆராய்தல இச்சபையிலே சொலலப்படும் காரியம் இதுசொல லும்விதம். இதுசொன்னால் அதன் முடிவு இது என்று இவையுள்ளிட்டவை ஆராய்தல. (௧)

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர்.

(ப ரை.) சொலலினடை சொற்களது நடையை, தெரிந்த ஆராய்ந்து அறிந்த, நன்மையவர் நன்மையுடையவர் (சபையினிடத்து ஒன்றுசொலலும்போது) இடைதெரிந்து (அதன் (சமயத்தை) ஆராய்ந்தறிந்து. நன்குணர்ந்து (வழுப்படாமல) மிகவுந் தெளிந்து, சொலலுக சொலலக்கடவர், எ று.

(க ரை.) சொலலினடையறிந்தவர் சமயமறிந்து சொலலக்கடவர் என்பதாம்.

(வி ரை.) சொற்களி னடையாவது அம் மூவகைச்சொற்களும் செம்பொருள், ஆக்கப்பொருள், குறிப்புப்பொருள் இவைகளை உணர்த்தும் விதம். சமயம் கேட்குதலில ஆசையுடைமை வழு சொலவழுவும் பொருள்வழுவும் [இவைஇரண்டு பாட்டாலும் ஒன்று சொலலும்போது சபையறிந்தே சொலல வேண்டு மென்பது சொலலப்பட்டது.] (உ)

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வலலதூஉ மில்.

(ப ரை) அவை சபையினளவை அறியார் (அறியாதவராகி) சொலல (ஒன்று)சொலலுதலை,மேற்கொள்பவர் தம்மேற்கொள்பவர், சொலலின்வகை, அச்சொலலின் கூறுபாடும், அறியார் அறியாராவர், வலலதூஉம் (மற்றும்) வலலகலையும், இல (அவர்க்கு) இலலை, எ று,

(க ரை,) அவையளவை யறியாராகிப் பேசமேற்கொள்பவர் சொலலின் வகை அறியார் என்பதாம்,

வி ரை, சொலலுதல வகையை கேட்பவரது உணர்வு வகைமைபற்றி வருதலால சொலலின்வகையறியாரென்றும், இஃதறியார், யாது மறியாரென்று எலலாராலும் இகழப் படுதலால வலலதூஉ மிலலென்றும் சொலலினார். [இதனால சபையை அறியாதவிடத்துவரும் குற்றம் சொலலப்பட்டது, கூ

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

ப ரை, ஒளியார் முன் அறிவால ஒளியாரது சபையினிடத்தி, ஒள்ளியராதல தாமும் ஒள்ளியராகக்கடவர், வெளியார்முன் மற்றை வெள்ளைகளது சபையினிடத்து,வான்சுதை வண்ணம் தாமும் வெண் சுண்ணசாந்துநிறத்தை, கொளல கொள்ளக்கடவர், எ று,

க ரை, அறிவாளிகள் சபைமுன்னே அறிவாளிகளாகக்கடவர், அறிவில

லார் சபைமுன்னே அறிவிலலா ராகக்கடவர் என்பதாம்,

வி ரை, ஒளியாரென்றது மிக்காரையும், ஒத்தாரையும், ஒள்ளியராதல தமது நூலறிவும் சொலவலிமையும்தோன்ற விரித்துரைத்தல வைரம் இதன் பகுதிவேரம் வைரமிலலாத மரத்தை வெளிறென்பதுபோல அவ்விரண்டு மறி யாதபுலவரை வெளியாரென்றார், அவர்மதிக்கும்படிக்கு அவரினும்வெண்மை

## ௩௨௭ எ௨ - ஆம் - அதி - அவையறிதல்.

யுடைய ராகவென்றதற்கு வான்சுதை வண்ணங் கொளலென்றார்,சபையளவறி ந்தார் செய்யுந்திறம் இதனுல தொகுத்துச் சொலலப்பட்டது, ௫

நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு.

ப ரை, முதுவருள் தம்மின் மிகுந்தவரது சபையினிடத்து, முந்து அவ ருக்கு முற்பட்டு, கிளவா ஒன்றைச் சொலலாத, செறிவு அடக்கம், நன்றென் றவற்றுள்ளும் ஒருவர்க்கு இது நலலதென்று சிறப்பித்துச் சொலலப்பட்ட குணங்கள் பலவினும், நன்றே நலலதாகும், எ று,

க ரை, அறிவுடையோர் சபையிலவர் முன்ன மொன்றைச்சொலலாத வடக்கமானது நன்மை எலலாவற்றுள்ளும் நலலது என்பதாம்,

வி ரை, தங்குறைவும், அவர் மிகுதியும், அவர் சொலலுதற்கு முன்னே சொன்னால உண்டாகிற இழுக்கும், சொலலா விட்டால வருகிற நன்மையும், அறிந்தே அடங்கலால அவ்வடக்கத்தை நன்றென்றவற்றுள்ளும் நன்றே என் றார், முன் சொலலுதலேயே விலக்கினமையால உடன் சொலலுதலும். பின் சொலலுதலும், ஆமென்பது பெறப்பட்டது, [ இதனுல மிகுந்தவரது சபையி னிடத்துச் செய்யுந்திறம் சொலலப்பட்டது, ௬

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

ப ரை, வியன்புலம் விரிந்த நூற்பொருள்களை, ஏற்று உட்கொண்டு, உணர்வார் முன்னர் அவைகளின் மெய்ம்மையை அறியவலலவர் சபையினில, இழுக்கு வலலவனொருவன் சொலவிழுக்குப்படுதல முத்திபெறற்பொருட்டு நலவழியினின்றவனொருவன் ஆற்றின் அவ்வழியினின்றும், நிலைதளர்ந்தற்றே நிலைதளர்ந்து வீழ்தலொக்கும், எ று,

க ரை, கற்றவர் சபையில கற்றவ னிழுக்குப்படுதல நலவழியி னின்ற

வன் தீவழியில விழுந்தாற்போலும் என்பதாம்,

வி ரை, நிலைதளர்ந்து வீழ்தல அறிவால ஐம்பொறிவென் றொழுகிய வன் பின்னிளகிக் கூடாவொழுக்கத்தா னுருதல பயனிழத்தலே யன்றி இகழ் வும் படுவானென்பதாம், [இதனுல அச்சபையில தவறிய விடத்துப்படும் குற் றம் சொலலப்பட்டது.]

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

ப ரை, கசடற வழுப்படாமல, சொற்றெரிதல சொற்களை ஆராய்தலில் வலலாரகத்து வலலவர் சபையிடத்தே சொலலினுல கற்று பலநூலகளையும் கற்று, அறிந்தார் அவைகளாலாகிய பயனை அறிந்தவரது கலவி கலவியானது, விளங்கும் யாவர்க்கும் விளங்கித் தோன்றும், எ று,

## எஉ - ஆம் - அதி - அவையறிதல். கஉக

(க-ரை.) குற்றமறக் கற்றவர் சபையிற் கற்றவர் கல்வி விளங்கும் என்ப தாம்.

(வி-ரை.) அப்படிப்பட்ட சபையிலேயே சொலலக்கடவ ரென்பதாம்.

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(ப-ரை.) உணர்வது-(பொருள்களைத்தாமே) அறிய வல்ல அறிவை உடையார்முன்-உடையவர் சபையினிடத்து, சொல்லல்-(கற்றவர் ஒன்றைச் சொல்லுதல்,வளர்வதன்)-(தானே) வளர்வதொரு பயிர்நின்ற,பாத்தியுள்-பாத் தியினுள், நீர் சொரிந்தற்று - நீரைச் சொரிந்தற்போலும், எ று,

(க-ரை.) கற்றவர் சபையிற் கற்றவரொன்றைச் சொல்லல் பாத்தியில் நீர்விட்டாற்போலும்-என்பதாம்.

(வி-ரை.) தானேயும் வளர்தற்குரிய கல்வி மிகவாரு மென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் ஒத்தாரது சபையிடத்து எவ்வழியும்சொல்லக்க டவ ரென்பது சொல்லப்பட்டது.] (௪)

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

(ப-ரை.) நல்லவையுள் - நல்லவரிருந்த சபையினிடத்து, நன்கு - நல்ல பொருள்களை, செல-(அவர்) மனங்கொள்ள; சொல்லுவார் - சொல்லுதற்கு உரியவர், புல்லவையுள்-(அவையறியாத) புல்லரிருந்த சபையினிடத்து,பொச்

மந்தும் - மறந்தும், சொல்லற்க (அவைகளைச்) சொல்லா தொழியக்கடவர், எ-று.

(க-ரை.) நல்லோர் சபையிலே நற்பொருளைச் சொல்பவர் புல்லர் சபையிலே மறந்துஞ் சொல்லா திருக்கக்கடவர் - என்பதாம்.

(வி-ரை.) சொல்வாராயின் தமக்குரிய சபையை அறியாத குற்றம்பற்றி நல்லோர்சபையும் சொன்ன பொருளறியாமையால் புல்லர் சபையும் இகழ்த லால் இரண்டு சபைக்கும் ஆகாரென்பது கருதி - மோச்சாந்தும் சொல்லற்க வென்றார். (க)

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(ப-ரை.) நல்லோர்) தங்கணத்த ரல்லார்முன், தமமினத்தவ ரல்லாதவர் சபையிடத்து - கோட்டிகொளல், யாதொன்றையும் - சொல்லாதிருக்கக் கடவர்-(சொன்னால் அது) அங்கணத்துள், (பரிசுத்த மல்லாத) முற்றத்துள் உக்க - வீழ்ந்த. அமிழ்தற்று - அமிர்தமொக்கும், எ-று.

41 .

## கஉஉ எக - ஆம் - அதி - அவையஞ்சாமை.

(க-ரை.) தம்மினத்தவ ரல்லார் சபையில் ஒன்றுஞ் சொல்லா திருக்கக் கடவன், சொல்லுதல் சேற்றன் வீழ்ந்த வமிர்தமொக்கும்-என்பதாம்,

(வி-ரை.) சொல்லின் - அது இவ்விரண்டும் வருவிக்கப்பட்டன.சாவாம ருந்தாகுத லறிந்து உண்போர் கையிலும் படாமல் அம்முற்றத்திற்கும் பொருத்த மிலலாமல் கெட்டவிதம் தோன்றற்கு - உக்க வமிழ்தென்றார். அச்சொல் பயனில்லாத சொல்லா மென்பதாயிற்று. [இவை இரண்டு பாட்டாலும தாழ்ந்தோர் சபையினிடத்து ஒருவழியும் சொல்லலாகா தென்பது சொல்லப் பட்டது.] ச0

எழுபத்திரண்டாம்-அதிகாரம்-அவையறிதல்
முற்றிற்று.

---

## எழுபத்திரன்றும் அதிகாரம்

## அவையஞ்சாமை

அஃதாவது: சொல்லுதற்குரிய சபையை அறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை அதிகார முறைமையும இதனாலே விளங்கும்.

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்..

(ப-ரை.) சொல்லின் றொகையறிந்த-சொற்களது தொகையை அறிந்த, தூய்மையவர் - பரிசுத்த குணமுடையவர், வகையறிந்து-(கற்று வல்லசபை மூடசபை என்கிற சபையின்) வகையை அறிந்து, வல்லவை - கற்று வல்ல சபையில்-(ஒன்று சொல்லும்போது) வாய்சோரார்-(அச்சத்தாற் பிழைபடச்) சொல்லார். எ-று,

(க-ரை.) சொல்லினது தொகையை யறிந்தவர் சபையினது வகையை யறிந்து பிழைபடச் சொல்லார் - என்பதாம்.

(வி-ரை.) இருந்தாரது வல்லமை சபைமேல் ஏற்றப்பட்டது. அச்சத்தாலென்பது அதிகாரத்தால்வந்தது. (௧)

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார் முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(ப-ரை.) கற்றார்முன் - கற்றோர் சபையினிடத்தே, கற்ற-(தாம்) கற்றவைகளை, செல-(அவர்) மனங்கொள்ளும் வகை, சொல்லுவார்-(அஞ்சாமல்) சொல்ல வல்லவர், கற்றாருள்-கற்றவரெல்லாரினும், கற்றார்-(இவர்) நன்றாகக் கற்றவர், எனப்படுவர் - என்று-(உலகத்தோரால்) சொல்லப்படுவர், எ-று.

## எக - ஆம் - அதி - அவையஞ்சாமை. கஉக

(க-ரை.) கற்றவர் சபையிற் கற்றவற்றைச் சொல்ல வல்லவர் கற்றவரெல்லாருள்ளுங் கற்றவரென்று சொல்லப்படுவர் - என்பதாம்.

(வி-ரை.) உலகமறிந்து அவரையே யாகலின் அவ்வுலகத்தினாலே புகழப்படுவாரும் அவரே யென்பதாம். (உ)

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்.

(ப-ரை.) பகையகத்து - பகையினிடத்து, சாவார்- (அஞ்சாதுபோய்) இறக்க வல்லவர், எளியவர்-(உலகத்துப்) பலர், அவையகத்து - சபையினிடத்து, அஞ்சாதவர் - அஞ்சாமற்-(போய்ச் சொல்ல) வல்லவர், அரியர்-சிலர், எ-று.

(க-ரை.) பகையினிடத் தஞ்சா திறக்கவல்லவர் பல சபையினிடத் தஞ்சாது பேசவல்லவர் சிலர் - என்பதாம்.

(வி-ரை.) அஞ்சாமை சாவாமென்பதனோடும் கூட்டி- அதனாலே சொல்ல வல்லவரென்பது வருவிக்கப்பட்டது. [இவை மூன்றுபாட்டாலும் அவை அஞ்சாதது சிறப்புச் சொல்லப்பட்டது.] (ங)

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(ப-ரை.) கற்றார்முன்-(பல நூல்களையும்) கற்றோர் சபையினிடத்து, கற்ற- தாம்) கற்றவைகளை, செல-(அவர்) மனங்கொள்ளும்படி, சொல்லி - சொல்லிக்காட்டி, தாங்கற்ற தாம் கற்றவைகளிலும், மிக்க - அதிகமான பொருள்களை, மிக்காருள் - அதிகமாகக் கற்றவரிடத்து, கொளல்-(அறிந்து) கொள்ளக்கடவர். எ-று.

(க ரை.) கற்றவர் முன்கற்றவற்றைச் சொல்லித் தாங்கற்றவைகளினும் மிக்கவற்றைக் கற்றவரிடத்துக் கொள்ளக்கடவர் - என்பதாம்.

(வி ரை.) எல்லா மொருவருக்குக் கற்றல் கூடாமையால், வேறு வேறு இய கல்வியுடையவர் பலரிருந்த சபையில் தாங் கற்றவைகளைச் சொல்லிக் கற்கப் பெறுதவையும் கேட்டு அறியலா மென்பதாயிற்று.] இதனால் அதனது ஒரு சார்பயன் சொல்லப்பட்டது.] (ச)

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(ப ரை.) அவை-(வேற்றுவேந்தர்) சபையில், அஞ்சா - அஞ்சாமல் மாற்றம் - எதிர்மொழியை, கொடுத்தற்பொருட்டு - கொடுக்குங்காரணமாக, ஆற்றின்-(சொல்லிலக்கண) வழியாலே, அளவு - அளவைநூலை, அறிந்து தெரிந்து, கற்க-(மந்திரிகள்) கற்கக்கடவர், எ-று.

(க ரை.) வேற்றரசர் சபையிலஞ்சா தெதிர்மொழி கொடுத்தற் பொருட்டுச்சொல்வி லக்கண வழியாலளவை நூலறிந்து மந்திரிகள்கற்கக்கடவார்கள் என்பதாம்.

(வி-ரை.) அளவை நூல் சொல்வி லக்கணங்கற்றே கற்கவேண்டுதலால் இதற்கு அதுவழி எனப்பட்டது. அளவை எனப்பட்ட தர்க்கநூலைக்கற்றவர்க்கே அவர்சொல்லை வெல்லக்கூடுமாகலால் அவைகளை பிழைபடாமற் கற்கக்கடவ ரென்பதாம். [இதனால் அதன் காரணம் சொல்லப்பட்டது.] ()

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(ப-ரை.) வன்கண்ண ரல்லார்க்கு-சௌரிய முடையவ ரல்லாதவர்க்கு, வாளொடு-வாளாயுதத்துடன், என் என்ன-(சம்பந்தமுண்டு); அதுபோல் நுண்ணவை-புத்திநுட்பமுடையோரது சபையை, அஞ்சுபவர்க்கு- அஞ்சுவோர்க்கு நூலோடு-நூலுடனே, என்-என்ன-(சம்பந்தமுண்டு.) எ-று.

(க-ரை.) சௌரியமில்லாவர்க்குவாளாயுதத்தோடென்னசம்பந்தமுண்டு அதுபோலக் கற்றவர் சபைக்கஞ்சுவோர்க்கு நூலோடென்ன சம்பந்தமுண்டு என்பதாம்.

(வி ரை.) இருந்தாலது தன்மை அளவுமேல் ஏற்றப்பட்டது, நூலுக்கு உரியவரல்ல ரென்பதாம். (௬)

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

(ப ரை.) அவையகத்து-(சொல்லப்படுகிற) சபையினில், அஞ்சுமவன் (அதனை) யஞ்சுமவன், கற்றநூல் - கற்றிருந்தநூல், பகையகத்து - (எதிர்ப்படும்) பகைவரிடம், பேடி-(அதனை அஞ்சும்) பேடி, கை - கையிற்பிடித்த ஒள்வாள - கூர்வாளை யொக்கும், எ-று.

(க-ரை.) சபைக்கஞ்சுவோன் கற்றநூல் பேடி கைவாளை யொப்பாகும், என்பதாம்.

(வி-ரை.) பேடி பெண்ணியல்பு மிகுந்து ஆணியல்பு முடையவன் இ-மும்-வாய்த்துத் தானும் நன்றாயிருந்தபோதிலும் பிடித்தவனது குற்றத்தால் பொன்சிறவாமைபோல் சபையும் வாய்த்தாலும் நன்றாயிருந்தபோதிலும் கற்றவனது குற்றத்தால் அது சிறவாதாயிற்று. (௭)

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.

(ப ரை.) நல்லவையுள் - நல்லவரிருந்த சபையுள், நன்கு - நல்லசொற் பொருள்களை செல-(அவற்கு) ஏற்க, சொல்லாதார்-(அச்சத்தால்) சொல்ல

## எகூ - ஆம் - அதி - அவையஞ்சாமை. கூ௨௫

மாட்டாதவர் பல்ல வைகற்றும்-பலநூல்களைக் கற்றாராயினும், பயமிலரே (உல கத்துக்குப்) பிரயோசனப் படுதலிலர். எ-று,

(ப-ரை.) நல்லவர் சபையிலே நல்லபொருளைச் சொல்லாதவர் பல நூல களைக் கற்றாராயினும் பயனில்லாதவர்-என்பதாம்.

(வி-ரை.) அறிவார் முன் சொல்லாமையால் கல்வியினுண்மை அறிவார் இல்லை என்பதாம். (அ)

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

(ப-ரை.) கற்று (நூல்களைக்) கற்று, அறிந்தும் (அவைகளாலே பயனை அறிந்திருந்தும், நல்லார்-நல்லவரிருந்த, அவை சபையை, அஞ்சுவார் அஞ்சி (அவ்விடத்திலே) சொல்லாதவரை, கல்லாதவரின் கற்றாரினும், கடை கடை யர், என்ப என்று (உலகத்தோர்) சொல்லுவார் எ-று.

(க-ரை.) கற்றிருந்தும் கற்றவர் சபைக்கஞ்சுபவர் கல்லாதவரினுங் கடை யாவர் என்பதாம்.

(வி ரை.) அக்கல்வி யறிவுசபையிலே பயனைக்காட்டும் அடையர்மல பிறரை யும் அடையிக்காமல பயமித் அஞ்சுபடும் அவைக்கு அஞ்சுகையால கல்லாதவரிற் கடையென உலகம் பழிக்கும் என்பதாம்.

உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்

(ப ரை.) களன் சபைக்கு, அஞ்சி பயந்து, கற்ற (தாம்) கற்றவைகளை, செல (அதற்கு) ஏற்க, சொல்லாதார் சொல்லமாட்டாதவர், உளரெனினும் உயிரோடிருந்தாலும் (உலகத்தோரால எண்ணப்படாமையால) இல்லாரோ டொப்பர் இறந்தவரோடொப்பவார், எ-று.

(க ரை.) சபைக்கஞ்சிக் கற்றவற்றைச் சொல்லாதவர் உயிரோடிருந்து மிறந்தவரோ டொப்பர் என்பதாம்.

(வி ரை.) [இவை ஐந்து பாட்டாலும் சபைக்கு அஞ்சவோரது இழிவு சொல்லப்பட்டது, (௪0)

எழுபத்தி-மூன்றாம்-அதிகாரம்-அவையஞ்சாமை.
அங்கவியலில அமைச்சமுற்றிற்று,
ஆக அதிகாரம் எ௩க்கு திருக்குறள் எ௩0.

இனி அவ்வரசனாலும் மந்திரியாலும் கொண்டு செலுத்தப்படுவதும், மற்றை நாடுமுதலிய அங்கங்களுக்கு அவசியம் வேண்டுவதும், ஆகியநாடு ஓரதிகாரத்தினாலே சொல்லுகின்றார்,

# எழுபத்திநான்காம்-அதிகாரம்.

## நாடு.

---

அஃதாவது: இப்படிப்பட்டதென்பதும் அதிகாரமுறையும்இதனான் விளங்கும்,

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

(ப ரை,) நாடு நாடாவது, தள்ளாவிளையுளும் குன்றாத விளைவுசெய்வோரும், தக்காரும் அறவோரும், தாழ்விலாச் செல்வரும்-கேடில்லாத செல்வமுடையோரும், சேர்வது கூடிவாழ்வதே யாம், எ று.

(க ரை.) உழவரும், அறிவோரும், செல்வரும் கூடிவாழ்வதே நாடாம் என்பதாம்.

(வி ரை,) தக்கார் முதலானவரோடு சேர்தற்றொடிவோடும் பொருத்தாமையால, விளையென்பது உழவரை உணர்த்தி நின்றது. குன்றாமையெல்லா உணவுகளும் நிறைய உண்டாதல, இதனால் வாழ்வோர்க்கு வறுமை யில்லாமை பெறப்பட்டது. அறவோர் துறந்தோரும் அந்தணரு முதலாயினோர் இதனால அழிவில்லாமை பெறப்பட்டது, கேடிலாமை கொடுக்கக் குறையாமை செல்வர் கப்பலினும், பண்டியினும், பொருள்தரும் வணிகர் இதனால் அரசனுக்கும் வாழ்வோருக்கும் பொருள் கிடைத்தல் பெறப்பட்டது.

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

(ப ரை.) நாடு நாடாவது, பெரும் பொருளால் அளவற்ற பொருளுடைமையால், பெட்டக்கதாகி (பிறதேசத்தாராலும் விரும்பத் தக்கதாகி, அருங்

கேட்டால் அறவில்லாமையோடு கூடி, ஆற்றவிளைவது மிக விளைவதேயாம் என்று.

(க ரை.) அளவில்லாப் பொருளுடைமையால் பிறராலிச்சிக்கத்தக்கதாகி அழிவின்மைபொருந்தி மிக விளைவுந்த நாடாகும் என்பதாம்.

(வி ரை.) கேடாவது: அதிகமழை, மழையில்லாமை, எலி, விட்டில் கிளி அரசாண்மை எனப்படுகிற இவைகளால் வருவது. இவைகளை வடநூலார் ஈதி பாவமென்றுசொல்வர். இவைகளுள் அரசாண்மை அரசனறத்தாலும், மற்றவை அவன் மறத்தாலும் இலவாம். இவைஇல்லாமற்போகவே மிகவுவிளையு மென்பதாயிற்று. (உ)

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(ப ரை.) நாடு நாடாவது, பொறை (பிறநாடுகள் சுமந்த) பாரமெல்லாம், ஒருங்கு ஒருசேர, மேல்வருங்கால் (தன்) மேல் வரும்போது, தாங்கி (அவை



களைத்) தாங்கி (அதன்மேலும்) இறைவர்க்கு (தன்) னரசனுக்கு, இறையொருங்கு இறைப்பொருண் முழுவதையும், நேர்வது உடன்பட்டுக்கொடுப்பதுவேயாம்

(க ரை.) பிறநாட்டுப் பாரந்தன்மேல் வரும்போது அவற்றைத் தாங்கித் தன்னரசனுக் கிறைப்பொருண்முற்றுந் தருவதே நாடாம் என்பதாம்.

(வி ரை.) பாரமாவது மனிதர் கூட்டமும் பசு முதலாகிய விலங்கின் கூட்டமும் தாங்குதலாவது: அவைகள் தங்தங் தேசங்களிலே பகைவர் வருதலாலாவது, அரசன்முறை தப்பலாலாவது, உணவில்லாமையாலாவது தன்னிடத்து வந்தால் அவ்வத தேசங்கள்போல் இனி திருப்பச்செய்தல். அதனால தன்னரசனுக்கு வரிப்பணங் குறைப்படுத்தாமல தானே கொடுப்பதென்றற்கு இறையொருங்கு நேர்வதென்றார். (ங)

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(ப ரை.) நாடு நாடாவது, உறுபசியும் அதிகபசியும், ஓவாப்பிணியும் நீங்காதநோயும், செறுபகையும் (புறத்திலிருந்து வந்து) அழிவுசெய்யும் பகையும் சேராது அடையப்பெறாமல, இயலவது இனிது நடப்பதேயாம்.

(க ரை.) பசியும், பிணியும், பகையுஞ் சேராதிருப்பது நாடாகும் என்பதாம்.

(வி ரை.) அதிகபசி உழவருடைமையாலும், மிகவிளைதலாலும், சேராதாயிற்று. நீங்காத நோய் தீக்காற்று மிக்க குளிர்வெப்பங்களும், உண்ணப்படு

மனைகளது தீமையும் இலலாமையால சேராதாயிற்று. செறபகை அரசன் வலிமையும், நிலப்படையும், அடவியும், அரணும், உடமையால சேராதாயிற்று. (௪)

*பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்*
*கொல்குறும்பு மில்லது நாடு.*

(ப ரை.) நாடு நாடாவது, பலகுழுவும் (சங்கேத வசத்தால மாறுபட்டுக் கூடும்) பலகூட்டமும், பாழ்செய்யும் (உடனிருந்து கொண்டே) பாழாகச்செய்யும், உட்பகையும் கள்ளர் முதலிய உட்பகையும் வேந்தலைக்கும் (சமயம்வந்தால) அரசனை அலைக்கின்ற, கொல குறும்பும் கொலைத்தொழிற் குறும்பரும், இலலது இலலாததேயாம், எ று.

(க ரை.) பலகூட்டமும் பகையும் கொலைத்தொழிற் குறும்பரும் இலலாததே நாடாகும் என்பதாம்.

(வி ரை.) சங்கேதம் சாதிபற்றியும், சமயம் பற்றியும், பலர்க்கு உளதாமொருமை, உட்பகை வழியலைத்துப் பறிக்குங்கள்வர் கோள் சொலலுவோர் முதலாகிய மக்களும், பன்றி, புலி, கரடி, முதலிய மிருகங்களும்.இம்மூன்றும் அரசனாலும், வாழ்வோராலும் கடியப்பட்டு நடப்ப தென்பதாம். (௫)

## ௩௨அ எசு - ஆம் - அதி - நாடு.

*கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா*
*நாடென்ப நாட்டிற் றலை.*

(ப ரை.) கேடறியா (பகைவரானே) கெடுதலறியாததும், கெட்டவிடத்தும் (அரிதிற்) கெட்டவிடத்தும், வளங்குன்றா (அப்போதும்)வளங்குறையாததும் ஆன நாடு நாட்டை, நாட்டின் எலலா நாடுகளிலும், தலை முதன்மையதாகும், என்ப என்று நூலோர் சொலலுவார், எ று.

க ரை, கேடில்லாததும், வளங் குன்றாததுமான நாட்டை எலலா நாட்டிலு முதன்மையான நாடென்பர் என்பதாம்,

வி ரை, அறியாத குன்றாத என்பன, இறுதி கெட்டுவந்தன, கேடறியாமை அரசன் வலிமையாலும், கடவுட்பூசை அறங்கள் என்றிவைகளாச்செயலாலும் வ ம், வளம் வளம், *ஆகரங்களிற்படுமவையும்,வயல தண்டலைகளில விளையுமவையும், ஆம், குறையாமை அவை சம்பாதிக்க வேண்டாமல இயலபாகவே உளவாயும் முன் சம்பாதிக்கப்படுவ குறையாதலும் [இவை ஆறுபா

ட்டாலும் நாட்டது இலக்கணம் சொலலப்பட்டது.] ௬

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

ப ரை, இருபுனலும் கீழ்நீர்மேனீர் எனப்படுகிற தன்னிடத்து நீரும், வாய்ந்த மலையும் செப்புடைத்தாகிய மலையும், வருபுனலும் அதிலிருந்து வருவதாகியநீரும், வல்லரணும் அழியாத நகரியும், நாட்டிற்கு நாட்டினுக்கு, உறுப்பு அவயவமாம், எ று,

க ரை, நீருமலையு மலையிலவரு நீரும், நகரும் நாட்டிற் குறிப்பாம் என்பதாம்,

வி ரை, இவ்விடத்துப் புனலென்றது நாவு, கேணிகளும், ஏரிகளும் ஆறுகளும் ஆகிய ஜலதாரங்களை, அவயவமாதற்கு உரியன. அவையே யாகலால, அவைகளால மழைவறப்பிலும் வளமுடைமை பெறப்பட்டது, கவிவதலலையல ஒருபக்கத்ததாகவும், தன்வளர்ந்ததலுக, மாரியிலுண்டநீர் கோடையிலுமிழ்தலு முடைமைபற்றி வாய்ந்த மலையென்றார், [இதனால அதனது அவயவம் சொலலப்பட்டது,] எ

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

ப ரை பிணியின்மை நோயிலலாமையும், செலவம் செலவமும, விளைவு பயிர் விளைவும, இன்பம சுகமும, ஏமம காவலும, இவ்வைந்து இவ்வைந்தினையும, நாட்டிற்கு தேசத்திற்கு, அணி அழகாகும, என்ப எனறு நூலோர் சொலலுவார், எ று,

*ஆகரம மணி, பொன் முதலியவை எடுக்கும் குழிகள்.



(க ரை.) நோயில்லாமையும் செல்வமும் பயிர்விளைவு மின்பமும் காவலு மிவ்வைந்து நாட்டிற் கழகாகு மென்பர்-என்பதாம்.

(வி. ரை.) பிணியில்லாமை நிலநலத்தால் வருவது, செல்வம் முன்சொல்லியது இன்பம் விழவும், வேள்வியும், சான்றோரு முடைமையாலும், அனுபவிப்பவையுடைமையாலும்-நிலநீர்களது, நன்மையாலும் வாழ்வார்க்குஉள்ளே நிகழ்வது-காவலெனவே அரசன் காவலும் வாழ்வோர் காவலும் அரண் காவலும் அடங்கின. [பிறதேசத்தோரும் இச்சித்துப்பின்னே அவைகளை நினையாமைக்கு ஏதுவாகிய அதனழகு இதனாலே சொல்லப்பட்டது.] (அ)

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(ப-ரை.) நாடா-(தம்மிடத்து வாழ்வோர்) தேடி வருந்தாமல்-(அவரிடத்தை தானே அடையும்)வளத்தன-செல்வத்தையுடையவைகளை, நாடு-நாடுகள் என்ப-என்று-(நூலோர் சொல்லுவார்-(ஆதலால்) நாடா-தேடிவருந்த, வளந்தரும்-செல்வத்தை அடைவிப்பவையாகிய, நாடு-நாடுகள், நாடல்ல-நாடுகளாகா வாம், எ-று.

(க-ரை.) தேடாத செல்வத்தை யுடையவற்றை நாடென்று சொல்லுவர் தேடிவருந்த செல்வத்தைத்தரு நாடுகள் நாடுகளல்ல-என்பதாம்.

(வி-ரை.) நூலோர்விதிபற்றி எதிர்மறைமுகத்தாற்குற்றஞ்சொல்லியபடி.

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(ப-ரை.) வேந்து-அரசனோடு, அமைவில்லாத-பொருந்துதலில்லாத, நாடு நாடாவது, ஆங்கு-மேற் சொல்லிய குணங்களா லெல்லாம், அமைவெய்தியக் கண்ணும்-நிறைந்துள்ளதாயினும், பயமின்றே-(அவைகளாலே) பயனுடைத்தன்று, எ-று.

(க-ரை.) இராசனுடன் பொருந்தாத நாடானது எல்லா நிறைவுள்ளதாயினும் பிரயோசனமில்லை-என்பதாம்.

(வி-ரை.) வேந்தமையெனவே குடிகள் அவனிடத்தே அன்புடையராதலும் அவன் குடிகளிடத்தே அருளுடைய னாதலும் அடங்கின அவை யில்லாவிடத்து அந்நாட்டில் வாழ்வோரில்லாமையால் அவைகளாலே பயன் இல்லையாயிற்று. [இவை இரண்டு பாட்டாலும் அவனது குற்றம் சொல்லப்பட்டது.

எழுபத்திநான்காம்-அதிகாரம்-நாடு.

முற்றிற்று.

——.

இனி அந்நாட்டிற்கு உறுப்பாம் அடங்குமாயினும் பகைவரால்தொலைவு வந்த விடத்து அதற்கும் அரசனுக்கும் காப்பாதற் சிறப்புப் பற்றியே வேறோரங்கமாகச் சொல்லப்பட்ட அரண் ஒரதிகாரத்தால் சொல்லுகின்றார்.

42

## எழுபத்தைந்தாம்-அதிகாரம்.

## அரண்.



அஃதாவது: இன்ன தென்பதும் அதிகார முறைமையும், இதனுள் விளங்கும்.

ஆற்றுபவருக்கு மாண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(ப ரை.) அரண்-கோட்டையானது,ஆற்றுபவர்க்கும்-(மூவகைவலிமையு முடையவராய்)பிறர்மேலே செல்வோர்க்கும், பொருள்-சிறந்ததாகும்,அஞ்சி-(அவையில்லாமல் தம்மேல் வருவோர்க்கு) அஞ்சி, தற்போற்றுபவர்க்கும்-தன்னையே அடைவோர்க்கும், பொருள்-சிறந்ததாகும், எ று,

(க ரை.) கோட்டையானது போர்செய்வோர்க்குந் தன்னையடைந்தோர்க்கும் சிறந்த பொருளாகும்-என்பதாம்,

(வி ரை.) பிறர்மேற் செல்லும்போது உரிமைப்பொருள் முதலானவைகளைப் பிறனொருவன் வௌவாமல் வைத்துச் செல்ல வேண்டுதலாலும், பெருமை தொலைந்து முடிவு வந்த விடத்துக் கடலினடுவே உடை கப்பற்காரர் போன்றுகாப்புக்காணாது முடிவராகலாலும், அவ்விருவகையோர்க்கும் அரண் பொருளாயிற்று. வலிமையுடையவ ராயினும் அரணில்லாத விடத்து அழியுந் தன்மையராகலால், அவரை முன் சொல்லினர். [இதனால் அரணினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(ப ரை.) அரண்-கோட்டையானது, மணிநீரும்-மணிபோல் நிறத்தையுடைய நீரும்-மண்ணும்-வெளிநிலமும், மலையும்-மலையும், அணி நிழற்காடும்-குளிர்ந்த நிழலையுடைய காடும், உடையது-உடையதே யாம், எ-று.

(க-ரை.) நீரையும், வெளி நிலத்தையும், மலையையும் காட்டையுமுடையது கோட்டையாம்-என்பதாம்,

(வி ரை) எக்காலும் வற்றாத நீரென்றற்கு மணிநீரென்றும், நீரு நிழலுமில்லாத வெறுநிலமென்றற்குமண்ணென்றும்,செறிந்த காடென்றற்கு அணிநிழற்காடென்றும் சொல்லினர். மதிற்புறத்து வெளி நிலம் பகைவர் அரண் பற்றாமைப் பொருட்டு, நீராண், நிலவாண் மலையரண், காட்டரண், என்கிற இந்நான்கின்-இந்நான்கரணும் சூழப்படுவது அரணென்பதாம்,

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(ப ரை.) உயர்வு - உயர்ச்சியும், அகலம்-அகலமும், திண்மை - வலிமையும், அருமை - அருமையும், (எனப்பட்ட) இந்நான்கின் - இந்நான்கினது

அமைவு-மிகுதியையுடைய மதிலே, அரணென்று-கோட்டையென்று, நூல்லோர், உரைக்கும்-சொல்லுவார் எ று.

(க ரை,) உயர்வு, அகலம், வலிமை, அருமை, இந்நான்கின், மிகுதியையுடைய மதிலைக்கோட்டை யென்று சொல்லுவர் என்பதாம்.

(வி ரை,) அமைவுநூல் இரண்டும் ஆகுபெயர்கள். உயர்வு-எணிக்கு எட்டாதது, அகலம் புறத்தோர்க்குத் தோண்டக்கூடாத அடியகலமும் உள்ளிடத்தோர்க்கு நின்று தொழில் செய்தற் காந்தலைபகலமும். திண்மை-கருங்கல் செங்கல்களாலே செய்தலால் குத்தப்படாமை. அருமை பொறிகளாலே சேர்தற் கருமை. [பொறி-எந்திரப்பாவைகள்.] (௩)

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(ப ரை.) அரண்-கோட்டையானது, சிறுகாப்பின்-காக்கவேண்டுமிடஞ் சிறிதாய், பேரிடத்ததாகி-பரந்தவிடத்தை யுடையதாய்,உறுபகை-(தன்னைச்) சூழ்ந்த பகைவரது, ஊக்கம்-மனவெழுச்சியை, அழிப்பது-கெடுப்பதே யாம். எ று.

(க-ரை.) காக்குமிடஞ் சிறிதாய்ப் பரந்தவிட முடையதாய்ப் பகைவர் வலிமையைக் கெடுப்பதே கோட்டை-என்பதாம்.

(வி-ரை.) வாயிலும் வழியும் ஒழுக்க விடங்கள், மலை, காடு, நீர், நிலை, என்றிவைகளுள் ஏற்பவைகளை உடைத்தாதல்பற்றிசிறுகாப்பினென்றும் உள்ளிடத்தோர் நலிவில்லாமல் இருத்தல்பற்றி பேரிடத்ததாகி யென்றும், தம்வலிமைகண்டு இப்பொழுதே அழிப்போமென்று வரும்பகைவர் வந்து அதுகண்டால் அத்தைரியம் ஒழிதல்பற்றி ஊக்கமழிப்பதென்றும் சொல்லினர். (௪)

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த்தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

(ப ரை.) அரண்-கோட்டையானது, கொளற்கரிதாய் (புரத்தோராலே) கொள்ளுதற்கரிதாய்,கொண்ட-உட்கொண்ட,கூழ்த்தாகி-(பலவகை)யுணவையுடையதாகி, அகத்தார்-உள்ளிடத்தோரது, நிலைக்கு- (போர்) நிலைக்கு, எளிதாம்-எளிதாகின்ற, நீரது-குணத்தையுமுடையதே யாம். எ று,

(க ரை.) பகைவர் கொள்ளுதற்கரிதாய்ப் பலவகையுணவையுடையதாய் உள்ளிட்டோர் போர்நிலைக்கெளியதாகிய குணமுடையதே கோட்டை-என்ப

தாம்.

(வி ரை.) கொள்ளுதற் கருமை காவற்காடு இடங்குகளாலும், பொறிக ளாலும், இடங்கொள்ளுதற்கருமை-உணவு-தலைமைபற்றிச்சொலலின்மையால் மற்றுமுள்ள அனுபவிக்கப்படு மவைகளும் அடங்கின, நிலைக்கெளிதா சீர்மை யாவது உள்ளிடத்தோரால் விடப்பட்ட ஆயுதமுதலானவை புறத்தோர்மேல்



எளிதிலேசெல்லலும், அவரால் விடப்பட்டவை உள்ளிடத்தோர்மேலே செல் லாமையும் பதணப்பரப்பும் முதலானவை. பதணம் மதிலுண்மேடை. (ரு)

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(ப-ரை.) அரண் கோட்டையானது, எல்லாப் பொருளும்-(உள்ளிடத் தோர்வேண்டும்,பொருள்கள்யாவையும், உடைத்தாய்-உடையதாகி,இடத்து-(புறத்தோரால்) அழிவடையு மளவில், உதவும்-(அதுவராமற்படி) உதவிக்கா க்கவல்ல, நல்லாள்-நல்லவீரரையும், உடையது-உடையதேயாம். எ-று,

(க-ரை.) எல்லாப் பொருள்னதாய் வீரரையுடையது கோட்டை - என் பதாம்.

(வி ரை.) அரசனிடத்து அன்பும், மானமும், மறமும், சோர்வில்லாமை யும், முதலாகிய நற்குணங்களை உடைமைபற்றி நல்லாளென்முர். (சு)

முற்றியு முற்று தெரிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(ப-ரை.) அரண்-கோட்டையானது, முற்றியும்-(வரவுபோக்கு) ஒழியும் வகை) நெருங்கிச் சூழ்ந்தும் முற்றுறு-அப்படிச் சூழாமல், எறிந்தும்-(மநகிழ் ந்த விடம்நோக்கி) ஒருமுகமாகப் போர்செய்தும், அறைப்படுத்தும்-(உள்ளி டத்தோரைஅவருக்கு நம்பிக்கையானவரைவிட்டுக்)கீழறுத்துத் திறப்பித்தும், பற்றற்கரியது-(புறத்தோராலே பிடித்துக்) கொள்ளுதற்கரியதே யாம். எ-று.

(க ரை.) சூழ்ந்தும் சூழாமலும் போர் செய்தும், கீழறைபெற்றும் பிற ரால் கொள்ளுதற்கரியது கோட்டையாம் என்பதாம்.

(வி ரை.) இம்மூன்றுபாயங்களுள்ளும், முதலாவது எல்லாப்பொருளு முடைமையாலும், மற்றவைகள் நல்லாளுடைமையாலும் பலிப்பன வல்ல வாயின. (எ)

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(ப-ரை.) அரண் - கோட்டையானது, முற்றாற்றி-(சேனைப்பெருமை

யால்) சூழ்தல் வல்லவராகி, முற்றியவரையும் - வந்து, சூழ்ந்தபுறத்தோரையும், பற்றியார் - (தன்னைப்பற்றிய) உள்ளிடத்தோர், பற்றுற்றி-(தாம்)பற்றியவிடம் விடாதே நின்று, வெல்லது-(போர்செய்து) வெல்லதேயாம். எ று.

(க-ரை.) தன்னைப்பற்றிச் சூழ்ந்தவரையும் தன்னிடத் திருந்தவர் பற்றி, வெல்வதே கோட்டை - என்பதாம.

(வி-ரை.) வெல்வதே அரணுடையார் தொழில் அரண்மேலே நின்று- பெரும்படையாளைச் சிறுபடையாளைப் பொறுத்து நிற்குந் துணையே



யன்றி வெல்லு மியல்பின தென்பதாம், [இவை எழுபாட்டாலும் அதனது இலக்கணம் சொல்லப்பட்டது.] (அ)

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(ப-ரை.) அரண் - கோட்டையானது, முனைமுகத்து - போர்தொடங்கின வளவிலே, மாற்றலர் - பகைவர், சாய - கெட வினைமுகத்து (உள்ளிடத்தோர் செய்யுந்) தொழில் வேறுபாடுகளால், வீறெய்தி - வீறுபெற்று, மாண்டது (மற்றும் வேண்டும்) பெருமையை யுடையதேயாம். எ-று.

(க-ரை.) போரிடத்துப் பகைவர்கெடத் தொழிலிடத்துப் பெருமையுடையது கோட்டை என்பதாம்.

(வி-ரை.) ஆரம்பத்திலே கெட்டவர் பின்னுங் கூடிப் போர்செய்தல் கூடாமையால் முனைமுகத்துச் சாயவென்றார். தொழில் வேறுபாடுகளாவன- பகைவர் தொடங்கிய போரை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல், என்றிவை முதலாகிய தொழில்களேன் அப்போரை அழிப்பவைகளைச் செய்தல், மற்றும் வேண்டும் பெருமையென்றதுபுறத்தோர் அறியாமல்புகுதல் போகுதல் செய்தற்குஉண்டாக்கப்பட்ட சுருங்கைவழிமுதலானவையுடைமை

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

(ப ரை.) அரண் - கோட்டையானது, எனைமாட்சித் தாகியக் கண்ணும் (முன்சொல்லப்பட்ட) பெருமையெல்லாம் உடைத்தாகிய விடத்தும், வினை, தொழில் செய்யுமிடத்து, மாட்சி - பெருமையை, இல்லார்கண் - இல்லாதவரிடத்து, இல்லது (அவை) இலதாம் எ று,

(க-ரை) கோட்டை எவ்வளவு பெருமை யுடைத்தாகிய விடத்தும் தொழிலிற் பெருமை யில்லாதவரிடத்துப் பயனிலதாம் என்பதாம்.

(வி-ரை.) சும்மா விருக்கையும், அளவறியாது செய்தலும், ஏற்காதது செய்தலும். எல்லாமடங்க வினைமாட்சியில் இல்லாரென்றும், ஏற்றதொழிலை அளவறிந்து செய்து காப்பாற்றுமற் போனால், அவ்வரணானது அப்பெருமைகளாலே பயனில்லாமல் அழியுமென்றற்கு அவை யுடைத்தன்றென்றும் சொல்லினர், [இவை இரண்டு பாட்டாலும் காப்பவர் அவசியம் வேண்டுமென்பது சொல்லப்பட்டது,] (௧0)

எழுபத்தைந்தாம்-அதிகாரம்-அரண்.

முற்றிற்று.

---

# எழுபத்தாறும் அதிகாரம்.

# பொருள்செயல்வகை.

——(*)——

இனிப் பெரும்பாலும் நாட்டாலும், அரணாலும், வளர்க்கவும், காக்கவும் படுவதாகிய பொருள் சம்பாதித்தலின் விதம், இவ்வதிகாரத்தாலே சொல்லுகின்றார். அஃதாவ தின்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள்விளங்கும்

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(ப ரை.) பொருளல்லவரை - ஒரு பொருளாக மதிக்கப் படாதவரையும், பொருளாகச் செய்யும் - பொருளாக மதிக்கப்படச் செய்யவல்ல, பொருளல்லது - பொருளையல்லாமல், பொருள் ஒருவருக்குப் பொருள் இல்லை வேறில்லை. எ று,

(க ரை.) மதிக்கப்படாதவரையு மதிக்கப்படச்செய்யும் பொருளல்லாமல் ஒருவர்க்கு வேறு பொருளில்லை-என்பதாம்.

(வி ரை.) மதிக்கப்படாதவர் அறிவில்லாதவரும், இழிகுலத்தாரும், மதிக்கப்படச்செய்தல் அறிவுடையவரும், உயர்குலத்தவரும் அவரிடத்திலேபோய் நிற்பப்பண்ணுதல், அதனாலே சம்பாதிக்க வேண்டுவது அதுவே யென்பதாம்

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(ப ரை.) (எல்லா நன்மையு முடையவரா யிருந்தாலும்) இல்லாரை (பொரு) ளில்லாதவரை, எல்லாரும் யாவரும், எள்ளுவர் இகழ்வர் (எல்லாத் தீமையு முடையவராயிருந்தாலும்) செல்வரை அப்பொருளுடையவரை எல்லாரும் யாவரும், சிறப்புச்செய்வர் உயரச்செய்வர். எ-று.

(க ரை.) வறியவரை யாவருமிகழ்வர், செல்வரை யாவரும் புகழ்வர் என்பதாம்.

(வி ரை.) உயரச்செய்தல் தாம் தாழ்ந்து நிற்றல், இகழ்விலும். தாழ்விலும், பகைவர், நட்பினர், அயலார் என்று மூவகையோரும் ஒத்தலால் எல்லாரு மென்றார். பின்னுஞ் சொல்லியது அதனை உறுதிசெய்தற்கு, (உ)

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

(ப ரை.) பொருளென்னும் பொருளென்ற (எல்லாராலுஞ்) சிறப்பிக்கப் படும், பொய்யாவிளக்கம் நந்தாவிளக்கானது (தன்னைச் சம்பாதித்தவர்க்கு எண்ணிய (அவர்) நினைத்த, தேயத்து தேசத்தில், சென்று போய், இருள் (பகையென்னு) மிருளை, அறுக்கும் கெடுக்கும், எ று.

## எகூ - ஆம் - அதி - பொருள்செயல்வகை. கூகூரு

(க ரை.) பொருளென்னும் விளக்கானது பகையென்னு மிருளைக் கெடுக்கும் என்பதாம்,

(வி ரை.) பொருள் எல்லார்க்கும் எந்நாளும் அவசியம் வேண்டுவதாய் வருதல்பற்றி, பொய்யா விளக்கென்றும், மற்றவிளக்கோடு இதனிடத்து வேற்றுமைதோன்ற, எண்ணியதேயத்துச் சென்றென்றும் சொல்லினார். ஏகதேச வுருவகம். [இவை மூன்று பாட்டாலும் பொருளது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(ப ரை,) திறனறிந்து (சம்பாதிக்குந்) திறத்தை அறிந்து. தீதின்றி (அரசன்) கொடுங் கோன்மையிலனாக. வந்தபொருள் கிடைத்த பொருள் (அவனுக்கு) அறன் அறத்தையும், ஈனும் கொடுக்கும், இன்பமும் இன்பத்தையும், ஈனும் கொடுக்கும். எ று.

(க ரை.) குற்றமில்லாது வந்த பொருளானது தருமத்தையு மின்பத்

தையுந் தரும் என்பதாம்.

(வி ரை.) திறம் சம்பாதித்தற்கு உரியவழி, செங்கோலனென்று புகழப்படுதலாலும், கடவுட்பூசை தானங்களாமலபயன் அடைதலாலும், அறனீனுமென்றும், செங்காலமிருந்து அநுபவிக்கப் படுதலால், இன்பமுமீனுமென்றும் சொல்லினார். ஆதலால் அத்திறத்தாற் சம்பாதிக்க வென்பதாம. (௪)

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

(ப ரை.) அருளொடும் (தாம் குடிகளிடத்துச் செய்யும்) கருணையொடும், அன்பொடும (அவர் தம்மிடத்துச் செய்யும) அன்பொடும, வாரா (கூடி) வாராத, பொருளாக்கம் - பொருட் சம்பாத்தியத்தை, புல்லார் (அரசர்) பொருந்தாராகி, புரளவிடல் நீங்கவிடக்கடவர், எ-று.

(க ரை.) அருளொடு மன்பொடும் வாராத பொருளை யரசர் நீக்கக்கடவர் என்பதாம்.

(வி ரை.) அவைகளோடு கூடிவருதலாவது: ஆகிலொன்றாய் வருதல். அப்படிக்கு வாராதபொருள் பச்சை மண்பாண்டத்து நீர்போல சம்பாதித்தவனையும் கொண்டு இறத்தலால அதனை புலலாரென்ற வளவிலே நிறுத்தாமற் புரளவிட லென்றும் சொலலினார். (௫)

உறுபொருளு முல்கு பொருளுந்தன்னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

(ப ரை.) உறுபொருளும் (உடையவர் இலலாமையால தானே வந்து) கிடைத்த பொருளும், உலகு பொருளும் சுங்கமாகிய பொருளும், தன்னொன்



னார் தன்பகைவரை, தெறுபொருளும் வென்று (திறையாக்கொள்ளும்) பொருளும், வேந்தன்பொருள் அரசனுக்குரிய பொருள்கள், எ று.

(க ரை.) உடையவரிலலாப் பொருளும், சுங்கப் பொருளும், பகைவரை வென்று திறைகொண்ட பொருளு மரசன் பொருள்களாம் என்பதாம்.

(வி ரை.) உறுபொருள் வைத்தாிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின் கீழ்க் கிடந்து பின் கண்டெடுத்ததுமாம. சுங்கம் மரக்கலத்திலும் பண்டியிலும வரும பண்டங்களுக்கு வாங்குமவரி. தெறுபொருள் தெறுதலால வரும பொருளென விரியும. ஆகிலொன் றலலாமலும, உரியவை சொலலியபடி,
[இவை மூன்று பாட்டாலும அது சமபாதிக்கும வழி சொலலப்பட்டது, (௬)

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(ப ரை,) அன்பீன் அன்பினால் ஈன்றிடப்பட்ட, அருளென்னும் அருளென்கின்ற குழவி குழந்தையானது, பொருளென்னும் பொருளென்று உயர்த்திச் சொல்லப்படும், செல்வம் செல்வத்தையுடைய, செவிலியால் செவிலித்தாயால், உண்டு வளரும், எ-று.

(க ரை,) அன்பா லீன்றிடப்பட்ட அருளென்னுங் குழந்தையானது பொருளென்னுஞ் செவிலித்தாயால் வளரும் என்பதாம்.

(வி-ரை.) சம்பந்தம் பற்றாமல் வருத்த மடைந்தவரிடத்துச் செல்வதாகிய அருள் சம்பந்தம் பற்றிச் செல்லும் அன்பு மிருந்தவிடத்து உண்டாவதாகலால், அதனை அன்பீன் குழவியென்றும், அருளாவியவர் மேற்செல்வது அவ்வருமை களைய வல்லபொருளுடையவர்க்கு ஆதலால் பொருளை அதற்குச் செவிலி யென்றும்; அது உலகிற் செவிலிபோலல்லாமல் தானே எல்லாப் பொருளும் உதவி வளர்த்தலால் செல்வச் செவிலியென்றும் சொல்லினார்.

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

(ப ரை,) தன்கைத்து தன்கையதாகிய பொருள், உண்டாக உண்டாகவிருக்க, ஒன்று ஒருதொழிலை செய்வான் செய்பவனது, வினை செய்கையானது, குன்றேறி (ஒருவன்) மலைமேல் ஏறி நின்று, யானைப்போர் யானைகளதுபோரை, கண்டற்று கண்டதனோடொக்கும், எ-று.

(க ரை) தன் பொருளிருக்க வொரு தொழிலைச் செய்பவன் செய்கையானது மலைமேலேறி யானைகள் போரைக் கண்டதொக்கும் என்பதாம்.

(வி ரை,) எப்படிக் குன்றேறினவன் அச்சமும் வருத்தமும் இல்லாமல பூமியில் யானையும் யானையும் செய்கின்ற சண்டையைத் தான் இனிதிருந்து

## எகா - ஆம் - அதி - பொருள்செயல்வகை. ருஉஎ

காண்பேனோ அப்படிக் கைப்பொருளுண்டாக ஒருதொழிலை மேற்கொண்டவனும் அச்சமும் வருத்தமும்இல்லாமல் வல்லவரை ஏவித்தான் இனிதிருந்து

முடிப்பா னென்பதாம். (அ)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(ப ரை.) (தமக்கு ஒன்றுண்டாக நினைப்பவர்) பொருளை-திரவியத்தை செய்க-சம்பாதிக்கக்கடவர்-(அப்பொருள்) செறுநர்-(தம்) பகைவரது, செருக்கு-தருக்கை, அறுக்கும்-கெடுக்கும், எஃகு-ஆயுதமாம்-(அதற்கு) அதனின்-அதுபோல், கூரியது-கூரிய ஆயுதம், இல்-(வேறு) இல்லை, எ று.

(க ரை.) திரவியத்தைச் சம்பாதிக்கக் கடவர் அத் திரவியம் பகைவர் செருக்கைக் கெடுக்கு மாயுதமாம், அதுபோல் கூரிய ஆயுதம் வேறில்லை-என்பதாம்.

(வி ரை.) பொருளைச் சம்பாதித்தவர் பெருமையும் நட்பு முடையவராதலாலே பகைவர் செருக்கு நீங்கித் தாமே அடங்குவா ரென்பதற்கு - செறுநர் செறுக்கறுக்கு மெஃகென்றும், மற்றை யாயுதங்கள் அதுபோல் அருவப்பொருளை அறுக்க மாட்டாமையால், அதனிற் கூரிய தில்லை யென்றும் சொல்லினர். (க)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

(ப ரை.) ஒண்பொருள்-நல்ல வழியால்வரும் பொருளை, காழ்ப்ப-மிக வதிகமாக, இயற்றியார்க்கு-உண்டாக்கினவர்க்கு, ஏனையிரண்டும்-மற்றை அறமும் இன்பமும், ஒருங்கு-ஒருசேர, எண்பொருள், எளிய பொருள்களாம், எ-று.

(க-ரை.) நல்லவழியால் வரும் பொருளை மிகவுண்டாக்கினவர்க்குத் தருமமு மின்பமு மெளியனவாம்-என்பதாம.

(வி ரை.) காழ்த்தல், முதிர்தல், அப்பொருள் பயன் கொடுத்தல்லது
... பொரு ளென்றும், மற்றை யிரண்டும் அதன்வினைவாக
... த்திலே உண்டாகு மென்பதற்கு எண்பொருளென்றும்
... நான்கு பாட்டாலும் அதனபயன் சொல்லப்பட்டது.]
...ும்-அதிகாரம்-பொருள் செயல் வகை
முற்றிற்று.

---

# எழுபத்தேழாம் அதிகாரம்.

# படைமாட்சி.

---

இனிப்பொருளினால் ஆவதாய் வெல்வதாகியபடையை இரண்டதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி முதலிலே படைமாட்சி சொல்லுகிறார்.

அஃதாவது: சேனையினது நன்மையாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை

(ப ரை.) உறுப்பு-(யானை முதலாகிய) நாலுறுப்புகளாலும், அமைந்து நிறைந்து, ஊறு-(போரிலே) காயம்படுதற்கு, அஞ்சா-அஞ்சாது நின்று வெல்-(பகையை) வெல்வதாகிய, படை-சேனையானது, வேந்தன்-அரசனது, வெறுக்கையு ளெல்லாம்-செல்வங்களி லெல்லாம், தலை-முதன்மையாகிய-(செல்வமாம்) எ-று.

(க ரை.) போரிலஞ்சாது நின்று வெல்லும் படையானது அரசன் செல்வம் யாவற்றிலும் தலைமை என்பதாம்.

(வி-ரை.) இவ்விடத்திலே படை யென்றது-அங்கான்கின், கூட்டத்தை, சேனை-ஊறஞ்சியவிடத்தே வெல்லுதல் கூடாமையால் ஊறஞ்சாவென்றும், அச்சேனை ஒழிந்த அங்கங்களுக்கும் அரசனுக்கும் காவலாகலால் வெறுக்கையுளெல்லாந் தலையென்றும் சொலலினார். (க)

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்து
தொல்படைக் கல்லா லரிது

(ப ரை.) தொலைவிடத்து-(தான்) சிறிதாகிய விடத்தும், உலைவிடத்து-(அரசனுக்குப் போரினிடத்து) அழிவுவந்தால், ஊறு-(தன்மேலே) காயம்படுதற்கு, அஞ்சா-அஞ்சாது நின்று தாங்கும், வன்கண்-சௌரியமானது, தொல்படைக்கல்லால்-அவன் முன்னோரைத் தொடங்கிவருஞ் சேனைக்கல்லாமல், அரிது-உண்டாகாது. எ-று,

(க ரை,) அஞ்சாது நின்று தாங்குஞ் சௌரியமானது அரசன் பழைய சேனைக்கல்லது மற்றவர்க்கில்லை என்பதாம்.

(வி ரை.) இழிவு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை கைப்படை எனப் படுகிற அறுவகைப் படைகளுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படை யாதலால்

அரசன் அதற்கு வேண்டுமவைகளைக் கொடுத்து அதைக் காப்பாற்றுக வென்பது கருத்து. (உ)

ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை
நாகமுயிர்ப்பக் கெடும்.

## எஎ - ஆம் - அதி - படைமாட்சி. ௯௧௯

(ப-ரை.) எலிப்பகை-எலிகளாகிய பகைதிரண்டு, உவரி-கடல்போல் ஒலித்தக்கால்-இரைத்தால், என்னும்-(பாம்புக்கு) என்ன துன்பம்வரும், நாகம் அப்பாம்பு, உயிர்ப்ப-மூச்செறிந்த வளவிலே, கெடும்-(அதுதானே) கெடும். எ-று.

(க-ரை.) எலிகள்கூடிச்சந்தித்தால் பாம்புக்கென்ன துன்பம்வரும் பாம்பு மூச்சுவிட்டவளவில் எலிகளழியும் என்பதாம்.

(வி-ரை.) இத்தொழி லுவமத்தால் திரட்சிபெற்றும்-(வீரரல்லாதார்) பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான் அவன் எழும்பின வளவிலே அவர்கெடுவரென்பதுதோன்ற நின்றமையால்-இதுபிறிது மொழிதலணி. வீரரல்லாதார் பலரினும் வீர னொருவனே ஆளுதல் நல்லதென்பதாம். [இவை மூன்று பாட்டாலும் முறையே அரசனுக்குப் படையானது மற்றையங்கங்களுட்சிறந்ததென்பதும், அதனுள்ளும் மூலப்படை சிறந்ததென்பதும், அதனுள்ளும் வீரன் சிறந்தவனென்பதும், சொல்லப்பட்டது.] (ங)

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(ப-ரை) படை-(அரசனுக்குப்) படையாவது, அழிவின்றி-(போரினிடத்துக்) கெடுதலில்லாமல், அறைபோகாதாகி-(பகைவராலே) கீழறுக்கப்படாததாகி, வழிவந்த-பழைமையாக வந்த, வன்கணதுவே - சௌரியமுடையதே.

(க-ரை.) போரிற்கெடுதலில்லாமல் பழமையாகவந்த சௌரியமுடையதே யரசனுக்குப் படையாம் என்பதாம்.

(வி-ரை.) அழிவில்லாமையால் மறமானங்க ளுடைமையும், அறைபோகாமையால் அரசனிடத்து அன்புடைமையும் பெறப்பட்டன. (ச)

கூற்றுடன் று மேல்வரினுங் கூடியெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(ப-ரை.) படை-சேனையானது, கூற்று-கூற்றுவன், உடன்று-கோபித்து,

மேல்வரினும்-தன்மேல்வரினும், கூடி மனமொத்து, எதிர்நிற்கும் எதிர்நின்று தாங்கும், ஆற்றலதுவே-மனவலிமையை யுடையதே. எ-று,

(க-ரை.) இயமன் கோபித்து மேலிட்டுவரினு மெதிர்நின்று தாங்கும் வலிமை யுடையதே படையாம்-என்பதாம்.

(வி ரை) மிகப்பலர் மனமொத்தற்குக் காரணம் அரசன்மேலன்பு. உம்மை சிறப்பும்மை. (இ)

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

கசஉ என - ஆம் - அதி - படைமாட்சி.

(ப-ரை.) மறம்-சௌரியமும், மானம்-மானமும், மாண்ட மாட்சிமைப் பட்ட, வழிச்செலவு-(முன்வீரர்சென்ற நல்வழியிலே செல்லுதலும் தேற்றம்) (அரசனால்) நம்பப்படுதலும், எனநான்கே-என இந்நான்கு குணமுமே, படைக்கு-சேனைக்கு, ஏமம்-அரணும், எ று,

(க-ரை.) சௌரியமும், மானமும், நல்வழிச்செல்கையும் நம்பிக்கையும் ஆகிய விந்நாற்குணமுஞ் சேனைக்கரணும்-என்பதாம்.

(வி-ரை.) இவைகளால் முறையே பகைவரைச் சீக்கிரத்திலே கொன்று நிற்கையும், அரசனுக்குத் தாழ்வு வாராமற் காத்தலும். தோற்பவர்மேற் படையெறியாமை முதலியவும். அறைபோகாமையும், ஆகியசெய்கைகள் பெறப்பட்டன. இச்செய்கை யாற்குப் பகைவர் நெருங்க மாட்டாராகலின் வேறரண் வேண்டா மென்பதாம். (க)

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(ப ரை.) தானை-சேனையாவது, தலை வந்த-(பகைவராலே வகுக்கப் பட்டுத்) தன்மேல்வந்த, போர்-(படையின்) போரை, தாங்குந்தன்மை-விலக்கும் வகுப்பை, அறிந்து-(வகுத்துக்கொண்டு) தார்-(அதாவது) தூசிப் படையை, தாங்கி-(தன்மேல் வாராமல்) தடுத்து, செல்வது- தான் அதன்-(மேலே) செல்வதே. எ-று.

(க-ரை.) தன்மேல்வந்த போரை விலக்கும் வகுப்பை யறிந்து பகைவர் தூசிப்படையைத் தடுத்துச் செல்வதே படையாம்-என்பதாம்.

(வி ரை.) படைவகுப்பாவது வியூகம அதுஎழுவகை உறுப்புகளையுடைய

தாய் வகையால நான்காய் விரியால் முப்பதாம். இவைகளின் பெயரும் இலக்கணங்களும் இங்கேசொன்னவ்விரியும் அவையெல்லாம் வடநூல்களுட்கண்டு கொள்க [இவை நான்கு பாட்டாலும் படையது இலக்கணம் சொல்லப்பட்டது.]

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(ப ரை.) தானை-சேனை, அடற்றகையும்-(பகைமேலே தான் சென்று) போர்செய்யுஞ் சௌரியமும், ஆற்றலும்-(அது தன்மேல் வந்தால்) பொறுக்கும் வலிமையும், இல்லெனினும் இல்லையாயினும், படைத்தகையால்-தனது தோற்றப் பொலிவாலே, பாடு-பெருமையை, பெறும்-அடையும், எ-று.

(க ரை.) சேனையானது சௌரியமும் வலிமையு மில்லையாயினும் பொலிவினாலே பெருமையை யடையும்-என்பதாம்,

(வி-ரை.) இல்லெனினு மெனமே அவசியம் அவைகள் வேண்டுமென்பது பெறப்பட்டது. தோற்றப் பொலிவாவது - அலங்கரிக்கப்பட்ட தேர்,



யானை, குதிரைகளுடனும, படாகை, கொடி, குடை, பலவாத்தியம், காகள முதலானவைகளுடனும் அணிந்து தோன்றும் அழகு பாடு கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை. (அ)

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

(ப ரை.) சிறுமையும்-(தான்தேய்ந்து) சிறிதாகலும், செல்லாத் துனியும்-(மனத்தி லிருந்து) நீங்காத வெறுப்பும், வறுமையும் - தாரித்திரியமும், இல்லாயின்-(தனக்கு இல்லையாயின, படை - சேனையாவது, வெல்லும் (பகையை) வெல்லும், எ று.

(க-ரை.) சிறிதாகலும் வெறுப்பும் வறுமையும் இல்லாவிடின் சேனையானது பகையை வெல்லும்-என்பதாம்.

(வி ரை.) விட்டுப் போதலும் வறுமை யடைதலும், அரசன் பொருள் கொடாமையால் வருவன நீங்கா வெறுப்பு மகளிரை வௌவ இழிவாயின. செய்தல் முதலானவைகளால் வருவது இவை யுள்ளவிடத்து அவனிடத்து

அன்பில்லாமல் உற்றுப்போர் செய்யாமையின் இல்லாயின் வெல்லு மென்றூர். (கூ)

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

(ப-ரை.) நிலைமக்கள்-(போரினிடத்து) நிலைமையுடைய வீரரை, சால வுடைத்தெனினு - மிகவுடைய தாயினும், தலைமக்கள்-(தனக்குத்) தலைவராகிய வீரர், இல்வழி - இல்லாவிடத்து, தானை - சேனை, இல் நில்லாது, எ று.

(க-ரை.) சேனையானது வீரரை மிக வுடைத்தாயினும் படைத்தலைவரில்லா விடத்துப் போரி னில்லாது என்பதாம்.

(வி-ரை.) சேனுபதிகள் நிலைபுடையவ ரல்லாமல் போவாராயின் காரியமே யில்லெனப் போர்செய்யாமல் தானும்போ மென்றற்கு - தலைமக்களில் வழியில்லென்றூர். [இவை மூன்று பாட்டாலும் முறையே படைத்தகைமையாலும், அரசன் கொடைத்தாழ்வுகளாலும், தலைவ ரில்லாமையாலும் தாழ்வு சொல்லப்பட்டது.] (௭௦)

எழுபத்தி ... ... ... மாட்சி

முற்றிற்று.

## எழுபத்தியெட்டாம்-அதிகாரம்.

# படைச்செருக்கு.

——(*)——

அஃதாவது: அச்சேனையினது மறமிகுதியாம். அதிகாரமுறைமையும், இதனாலே விளங்கும்.

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

(ப ரை.) தெவ்விர் பகைவரே, 'என் என்னுடைய, ஐமுன் தலைவனெதிர், நின்று (போரேற்று) நின்று, கன்னின்றவர் (அவன் வேல்பட்டு வீழ்ந்து) கல்லிடத்தே நின்ற வீரர், பலர் பலராவர் (நீர் அதனிடத்து நில்லாமல்) உம்முடலிலே (நிறைகையை வேண்டில்) என் என்னுடைய,ஐமுன் தலைவனெதிர், நில்லன்மின் (போரேற்று) நில்லாதேயுங்கள், எ று.

(க ரை.) பகைவரே யென்றலைவரெதிர் நின்று வெல்லாது இறந்து கல்லாக நாட்டப் பட்டவர் பலராவர் நீங்களுயிரோ டிருக்க விரும்பினல் என் தலைவர் முன்னில்லாதிர்கள் என்பதாம்.

(வி ரை,) கல் போரில் வீரர் இறந்த விடத்து அவருருவஞ்செய்து நடப் படுகல். ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல் வைத்துச் சொல்லியபடி. [இப்பாட்டு* நெடுமொழி வஞ்சி.] (க)

கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(ப ரை,) கானம் காட்டில் ஓடுகிற, முயல் முசலை, எய்த (தப்பாமல்) எய்த, அம்பினில் அம்பை என்று தலைப்பார்க்கிலும், யானை (வெளி நிலத்திலே நின்ற) யானையை (எறிந்து) பிழைத்தவேல் தப்பிய வேலை, ஏந்தல் தாங்குதல் இனிது நன்று, எ று

(க ரை.) முயலையெய்த அம்பை யேந்துதலைப் பார்க்கிலும் யானையை செய்து தப்பிய அம்பை யேய்ந்துதல் நல்லது என்பதாம்.

(வி ரை.) கானமுய லென்றதனல் - வெளிநிலமென்பதும், பிழைத்த வேலென்றதனல் தப்பாம லென்பதும், முயற்குத்தக எய்தவென்றதனல் யானைக்குத்தக எறிதலும், வருவிக்கப்பட்டன, இது பகையரசனது சேனையோடு சண்டைசெய்து அது தோற்றுப் பின்னிடக்கண்டு நாணிப்பின் அவ்வரசன் மேற் செலலலுற்ற ஒரு வீரனது சொலலு. (உ)

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

*நெடுமொழி வஞ்சியாவது பகைவர்முன்னே தன்னுண்மை சொலலுதி

# எஅ - ஆம் - அதி - படைச்செருக்கு கூ௫௩

(ப ரை,) தறுகண் (பகைவரிடத்தே முகங்கொடாமற் செய்கிற) மறம் பேராண்மை மிகுந்த வாண்மையாகும், ஒன்றுற்றக்கால (அவர்க்கு) ஒருதாழ்வு வந்தாயின் (அது தீர்த்துக் கொள்ளுதற் பொருட்டு) ஊராண்மை (முகங் கொடுத்து) உபகாரியாந்தன்மை, அதன் அதற்கு, எஃகு - கூர்மையாகும், என்ப என்று (நூலோர்) சொலலுவார், எ று.

(க ரை.) பகைவரைவெலலு மறமானதுமிருந்த வான்மையயாகு மப்பகைவர்க்குத் தாழ்வு வந்த காலத்துதவுதல கூர்மையாகும் என்பதாம்.

(வி ரை.) மற்று அசை, இவை இரண்டு பாட்டாலும் *தழிஞ்சி. (ரு)

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(ப ரை.) கைவேல (தன்) கைப்படையாகிய வேலை, களிற்றொடு (தன் மேலவந்த) யானையோடு, போக்கி எறிந்துவிட்டு, வருபவன் (வருகின்ற யானைக்கு வேலைதேடித்) திரிபவன், மெய்வேல தன்மார்பிலிருந்த வேலை (கண்டு) பறியா பிடுங்கி, நகும மகிழ்வான், எ று,

(க ரை.) கைவேலை யானைமேலெறிந்து வருபவன் தன் மெய்வேலைப் பிடுங்கி மகிழ்வான் என்பதாம்.

(வி ரை.) களிற்றொடு போக்கல களிற்றி னுயிரைக்கொண்டு போம்படி விடுதல, மகிழ்ச்சி தேடியது அடைதலால, இதனுள் களிற்றையலலது எறியானென்பதும், கோபமிகுதியால வேலமார்பிலே புதைந்ததை அறிந்திலனென்பதும், பின்னும் போர்மேல விரும்பினனென்பதும், பெறப்பட்டன. [இது *தூழிலாட்டு.] (எ)

விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்கணவர்க்கு

(ப ரை.) விழித்தகண் (பகைவரைக்) கோபித்துப் பார்த்தகண், வேலகொண்டு (அவர்) வேலைக்கொண்டு எறிய எறிய, அழித்து (அதற்குப்பொறுமல அப்பார்வையை) அழித்து, இமைப்பின் இமைக்குமாயின் (அவ்விமைத்தல) வன் கணவர்க்கு வீரர்க்கு, ஒட்டன்றோ தோற்பலலவா. எ று.

க ரை, கோபித்துப்பார்த்த கண் வேலகொண்டெறிய இமைக்குமாயின் தோற்பலலவா என்பதாம்.

(வி ரை,) அக்கோபப் பார்வை இமைத்தலும் போரினிடத்து இகழ்ச்சியென்று நினைத்து அதுவும் செய்யா ரென்பதாம். (கு)

* தழிஞ்சியாவது தோற்றவர்மேலே ஆயுதஞ் செலுத்தாத மிகுமறம் சொலவது.

* தூழிலாட்டு பகைவர் ஓட மார்பிற் புதைந்து கிடந்த வாயுதம் பிடுங்கி மகிழ்வது.

## ௧௩௪ எழு - ஆம் - அதி - படைச்செருக்கு.

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து

(ப ரை.) (வீரனானவன்) தன்னாளை தனக்குக்கழித்த தினங்களை, எடுத்து எடுத்த தெண்ணி அத்தினங்களுள் விழுப்புண் பெருங்காயங்கள், படாத நாளெலலாம் படாத தினங்களை யெலலாம், வழுக்கினுள் பயன்படாது கழிந்த தினங்களுள்ளே, வைக்கும் வைப்பான், எ று.

க-ரை. சத்தவீரனானவன் போர்செய்யப்படாதநாளை வீணளென் றெண்ணுவான் என்பதாம்,

(வி ரை.) விழுப்புண் முகத்திலும், மார்பிலும் பட்டபுண் போர் பெற்றிருக்கவும் அது பெறாத நாள்களோடு கூட்டுவ னென்பதாம். [இவை மூன்று பாட்டாலும் ஊதஞ்சாமை சொலலப்பட்டது.] கூ

சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(ப ரை,) சுழலும் பூமியைச் சூழ்ந்திருக்கும், இசை புகழை, வேண்டி விரும்பி, வேண்டாவுயிரார் உயிர்வாழ்தலை வேண்டாத வீரர், கழலவீரக்கழலை யாப்பு கட்டுதல, காரிகை நீர்த்து அலங்காரகுணமுடையதாம, எ று.

க ரை. புகழைவிரும்பி யுயிரை விரும்பாதவர் வீரக்கழலைக் கட்டுதலவர்க் காபரணமாம் என்பதாம்.

(வி-ரை.) பூமியைச் சூழுமெனவே அப்புகழின் பெருமை பெறப்பட்டது, அப்படிப்பட்ட வீரர் வானுலகமும் புகழும் எளிதிலே அடைவராதலால ஆபரணமாவது அக்கழலே யென்பதாம். ௭

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

ப ரை. உறின் போர் பெறின், உயிர் தம் முயிர்ப்பொருட்டு, அஞ்சா அஞ்சாமல அதன்மேற் செலலும் மறவர் வீரர், இறைவன் தம்மரசன், செறினும் அது வேண்டாமென்று கோபிக்கினும், சீர் குன்றல அவ்வீர மிகுதி குறைதல, இலர் இலராவர், எ று.

க ரை. தம்முயிர்க் கஞ்சாது போர்செய்யும் வீரர் தம்மரசன் கோபிக்கினும் வீரக் குறையார் என்பதாம்.

(வி-ரை.) வீரர் போர்பெற்று அறியாமையால அது பெற்றால அரசன் தடுப்பினும் விலலா ரென்பதாம். அ

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

(ப ரை.) இழைத்தது-(தாம்) சொல்லிய சபதம், இகவாமை-தப்பாமற் பொருட்டு, சாவாரை-(போய்ச்) சாகவல்லவீரரை, பிழைத்தது-(அது)தப்பிய விதம்-(சொல்லி) ஒறுக்கிற்பவர்-இகழ்தற்குரியவர், யார்-யாவர். எ று.

(க ரை.) சபதப்படி போரிற் சாகும் வீரரை யிகழ்பவர் யார்-என்பதாம்,

(வி-ரை.) இழைத்தல்- இன்னது செய்வேனாகில் இன்னனாகுக வெனத் தான் வகுத்தல் சொல்லி யென்பது வருவிக்கப்பட்டது. சபதம்முடிக்கபுகுந்து முன்னே இறந்தாலும்தொலைவில்லாமையால் அதுமுடித்தவராவரெனச்சாதற் சிறப்புச் சொல்லியபடி. (௯)

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

(ப ரை.) (தமக்குச் செய்த நன்றிகளை நினைந்து) புரந்தார்-ஆண்டவரசரது, கண்-கண்கள், நீர்மல்க-நீர்பெருகும்படி, சாகிற்பின்-(போரிலே) சாகப் பெறின், சாக்காடு-அச்சாவு, இரந்து-இரந்தாயினும், கோட்டக்கது - கொள்ளுந் தகுதியை, உடைத்து-உடையது. எ று.

(க-ரை.) வீரர்கள் அரசர் கண்கள் நீர்ததும்பப் போரிலிறந்தால் அவ்விறத்தல் கொள்ளத் தக்கது-என்பதாம்.

(வி ரை.) சுத்தத்தார் அழ இல்லினிடத்து நோயினாலே சாவோர் பழ வினைப்பயனை அடைதலால்-அப்போதை வினையால் வானுலகத்தைஅடையும் சாவை இரந்து கோட்டக்க துடைத்தென்றார். [இவை நான்கு பாட்டாலும் உயிர் சாவாமை சொல்லப்பட்டது.] (௧0)

எழுபத்தெட்டாம்-அதிகாரம்-படைச்செருக்கு.

முற்றிற்று.

இனிப்படைபோல அரசனுக்குத் தொழில்பட்டு உதவுவதாகிய நட்பை ஐந்ததிகாரத்தால் விதிமுகத்தாலும், பன்னிரண்டதிகாரத்தால் எதிர்மறை முகத்தாலும், சொல்லத்தொடங்கி விதிமுக வதிகார மைந்தினுள்ளும் முதலிலே நட்புச் சொல்லுகிறார்.

## எழுபத்தொன்பதாம்-அதிகாரம்
## நட்பு.

அஃதாவது: இன்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

*செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்*
*வினைக்கரிய யாவுள காப்பு.*

(ப-ரை.) நட்பின்-நட்புப்போல், செயற்கரிய-சம்பாதித்துக்கொள்ளுதற்கு அரிய பொருள்கள், யா-எவைகள், உள-இருக்கின்றன (சம்பாதித்துக்கொண்டால்) அதுபோல், வினைக்கரிய-(பகைவர் செய்யுந்தொழிலுக்குப்-(புகுதற்கு) அரிய, காப்பு-காவலானவை, யா-எவைகள், உள-இருக்கின்றன.

(க-ரை.) நட்பைப்போலச் சம்பாதித்தற்கரிய பொருளெவை யிருக்கின்றன-என்பதாம்.

(வி-ரை.) நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும் பெற்றால் செய்யும் உபாயமும், செய்தால் வேறுபடாமல் நிற்றலும் முதலானவை அருமையாகலால் நட்புப்போல் செயற்கரியன யில்லையென்றும், செய்தால் பகைவர் அஞ்சிப் போர்தொடங்கா ராதலால், அதுபோல் போர்வராமற் காத்தற்கு அரிய காவலில்லை யென்றும், சொல்லினர். நட்பு-இயற்கை, செயற்கை, என இருவகைப்படும். அவைகளில் இயற்கை, நட்பு, பிறப்பு,முறையாலாகியதும், தேய முறையாலாகியதும், என இருவகைப்படும், அவைகளுள் முன்னையது சுற்றமாகலால்-சுற்றந்தழாலில் அடங்கிற்று. மற்றது பகையிடையிட்டதேயத்ததாகலால் துணைவலியென வலியறிதலுள் அடங்கிற்று. [இனி இவ்வதிகாரத்திலே சொல்லப்படுவது முன்செய்தவுதவிபற்றி வருவதாகிய செயற்கை நட்பேயாகலால்

அதன் சிறப்பு இதனுல் சொல்லப்பட்டது.] (௪)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(ப ரை.) நீரவர்-அறிவுடையவரது, கேண்மை-நட்புகள், பிறை-பிறை போல், நிறைநீர-(நாடோறும்) நிறையுந் தன்மையினவாம, பேதையார்-அறிவில்லாதவரது, நட்பு-நட்புகள், மதி-(நிறைந்த) சந்திரன்போல், பின்னீர பின்னே நாடோறும் குறையுந் தன்மை யனவாம் எ-று,

(க ரை.) அறிவுடையோர் நட்பு இளம்பிறைபோல்வளரும், அறிவில்லார் நட்பு நிறை சந்திரன்போல் குறையும்-என்பதாம்.

(வி-ரை.) இனிமை பற்றி நீரவரென்ருர். அறிவுடையவர் தங்களிலே செய்த நட்பு முன் சுருங்கிப் பின் பெருதற்கும், அறிவிலாதவர் தங்களிலே செய்த நட்பு முன் பெருகிப் பின் சுருங்கற்கும், காரணம் தம்முள முன்னறியாமையும் பின்னறிதலுமாம். (௫)

எகூ - ஆம் - அதி - நட்பு. ௬௩௭

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(ப ரை.) பண்புடையாளர்-நற்குணமுடைய மக்கள், தொடர்பு-(தங்களிலே செய்த) நட்பு, பயிறொறும்-பழகுந்தோறும்-(அவருக்கு இன்பஞ் செய்தல்) நூல்-நூற்பொருள், நவிறொறும்-கற்குந்தோறும், நயம்போலும்-(கற்பவர்க்கு) இன்பஞ் செய்தல் போலும், எ-று,

(க-ரை.) நற்குண முடையவர் நட்புப் படிக்குந்தோறு நூற்பயன் கொடுத்தல் போலாம்-என்பதாம்.

(வி ரை.) இரண்டிடத்தும் ஒருபோதுக்கு ஒருபோது மிகுமென்பதாம்.
[இவை இரண்டு பாட்டாலும் அச்சிறப்புக்கு ஏது சொல்லப்பட்டது.] (௬)

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(ப-ரை.) நட்டல்-(ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல்-(நகைசெய்தற்கு, ஏற்றவைசொல்லி, நகுதற்பொருட்டு-நகைசெய்தற்பொருட்டு, அன்று-அல்ல, மிகுதிக்கண்-(அவர்க்கு) வேண்டாதசெய்கை-(உண்டானவிடத்து) மேற்சென்று, முற்பட்டு-இடித்தற்பொருட்டு-கண்டித்து புத்திசொல்லுதற்பொருட்டு) எ-று.

(க-ரை.) சினேகஞ் செய்தல் நகை செய்தற் பொருட்டல்ல புத்திசொல்லும் பொருட்டே என்பதாம்,

(வி ரை.) பழியுயபாவமும் தருஞ்செய்கை-துன்பமே தருதல்பற்றிவேண் டப்படுவ தல்லாமையால்- அதனை மிகுதியென்றும், அது செய்தற்கு முன்னே திருப்பவேண்டுதலால்-மேற்சென்றென்றும் இனிய சொல்லுக்குத் திரும்பா மையால்-இடித்தற்பொருட்டென்றும் சொல்லினர். [இதனுல் நட்பின்பயன் சொல்லப்பட்டது.] (ச)

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(ப ரை.) (ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு) புணர்ச்சி-ஒரிடத்திலிருத் தலும், பழகுதல்-பலதரங்கண்டு பேசலும், வேண்டா-வேண்டுவதில்லை, உணர் ச்சி தான்- இருவருக்கும்) ஒத்த அறிவு தானே, நட்பாம்-சிநேகமாம், கிழமை- உரிமையை, தரும்-கொடுக்கும், எ று.

(க-ரை.) இருவர்க்கு மொத்தவறிவே சிநேகந்தரும்-என்பதாம்.

(வி·ரை.) இவை யில்லையாயினும் ஒருவரை யொருவர் சம்மாகவறிதலே உடனுயிர்நீங்குதற்குரிய நட்பை உண்டாகு மென்பதாம். நட்பிற்கு-புணர்ச்சி பழகுதல், உணர்ச்சி யொத்தல், என்கிற காரணமூன்றுள்ளும் பின்னது சிறப் புடைய தென்பது. [இதனுல் சொல்லப்பட்டது] (ரு)

## ருசஅ எகூ - ஆம் - அதி - நட்பு.

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக¡நட்பது நட்பு.

(ப ரை,) முகநக (கண்டவிடத்து) முகமாத்திரமே மலரும், வகைநட் பது சிநேகிப்பது, நட்பன்று சிநேகமன்று, நெஞ்சத்தகநக (அன்பால்)உள்ளம் மலர, நட்பது சிநேகிப்பதே, நட்பு-சிநேகமாம், எ று.

க ரை. முகமலர்ந்து சிநேகிப்பது சிநேகமல்ல அகமலர்ந்து சிநேகிப்பதே சிநேகம என்பதாம்.

(வி ரை.) நெஞ்சத்தக முகமென்று மெச்சவுமமை தொக்கு நின்றது. அதனுல் இரண்டும ஒருசேர மலரவேண்டு மென்பது பெற்றும். (க)

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

ப ரை. நட்பு ஒருவனுக்கு நட்ப வது, அழிவின் அழிவைத் தருகிற

அவை தீயவழிகளாலே, நீக்கி விலக்கி, அற நல்வழிகளிலே, உய்த்து நடத்தி அழிவின்கண் (வழியாலே) கேடு வந்த விடத்து, அல்லல் அத்துன்பத்தை, உழப்பதாம உடனிருந்து அனுபவிப்பதே, எ று.

க ரை. நட்பாவது தீயவழியை நீக்கி நல்லவழியை நோக்கித்துன்பத்தை யனுபவிப்பதாம என்பதாம்.

(வி-ரை.) ஆறென வருகின்றமையால அழிவினவை தீயவழியெனப் பட்டது. (அ)

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

ப ரை. நட்பு நட்பாவது, உடுக்கை யிழந்தவன் (சபையினிடத்து)ஆடை குலைந்தவனுக்கு, கைபோல கைசென்று தழுவுதல்போல (சிநேகிக்கப்பட்டவனுக்கு) ஆங்கே அப்பொழுதே, இடுக்கண் துன்பத்தை, களைவதாம நீக்குவதாகும, எ று.

க-ரை. ஆடை குலைந்தவன் கைபோலத்துன்பத்தை நீக்குவதே நட்பாம என்பதாம்.

(வி-ரை.) ஆடை குலைந்தவனுக்குக் கையெப்படியோ அப்படியே ஆபத்தை அடைந்தவனுக்கு நட்பாளன் மனத்திலும முற்பட்டு உதவிசெய்து துன்பம ஒழிப்பா னென்பதாம. நட்பினன் செயல நட்பில ஏற்றப்பட்டது. அ

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

ப ரை. நட்பிற்கு சிநேகத்திற்கு, வீற்றிருக்கை அரசிருக்கை, யாதெனின் யாதென்றால அது கொட்பின்றி எந்நாளும வேறுபடாமல, ஒலலுமவாய் கூடி



மிடத்தெல்லாம, மன்றாகிலே அறமபொருள்களிலே தளராமல தாங்குந்தின்மை, எ று.

க ரை. நட்பிற் கரசிருக்கை யாதேன்றால, எந்நாளுந் தாங்குந் தின்மையாம என்பதாம.

வி ரை, ஒருநாளும வேறுபடாமல கூடுமிடத்தெல்லாம மறுமை யிம்மைகளுக்கு உறுதியாகிய அறம பொருள்களிலே தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சி நீக்கி நிறுத்துதற்குமேல ஒரு செயலும இலலாமையால அதனைநட்பிற்கு முடிந்த எலலை எனறார், ௬

இனைய சிவரெமக் கின்னம்யா மெ ன்று
புனையினும் புல்லென்னு நட்பு

(ப-ரை.) இவர், எமக்கு - எங்களுக்கு, இனையர் - இவ்வள வன்பினர், யாம்-நாங்கள், இன்னம்-(இவர்க்கு)இவ்வளவன்பினேம், என்று-(புனையினும்) (ஒருவரை) ஒருவர் சிறப்பிக்கினும், நட்பு-சிநேகம், புல்லென்னும்-சிறிதாய்த் தோன்றும், எ-று

(க-ரை.) இவரெங்களுக்கிவ்வளவன்பினர் நாங்களிவர்க்கிவ்வளவன்பினர் என்று சிறப்பிக்கிற சிநேகஞ் சிறிதாம், என்பதாம்.

(வி ரை,) தாம் அவர் என்கிற பேதமில்லாதிருக்கும் சிறப்பித்துச் சொல்லில் பேதம் உண்டாகலால், புல்லென்னுமென்றார். [இவை ஐந்துபாட்டாலும் நட்பினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௭0)

எழுபத்தொன்பதாம் அதிகாரம்-நட்பு.
முற்றிற்று.

---

## எண்பதாம் அதிகாரம்

# நட்பாராய்தல்.

அஃதாவது: முன் சொல்லப்பட்ட இலக்கண முடையவரை ஆராய்ந்தறிந்தே சிநேகிக்க வேண்டுதலால், அவரை ஆராயுந்திறமும், அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(ப ரை) நட்பாள் பவர்க்கு - நட்பை விரும்பி-(அதனிடத்தே நிற்பவர்க்கு) நட்பின்-(ஒருவரோடு) நட்புச் செய்தபின், வீடு-(அதனை) விடுதல்,இல்லை. உண்டாகாது-(ஆதலால்) நாடாது ஆராயாமல், நட்டலின் - சிநேகித்தல்போல், கேடு - கேடுதருவது, இல்லை-(வேறே) இல்லை. எ று.

**௭௯0 அ0 - ஆம் - அதி - நட்பாராய்தல்.**

(க ரை.) சிநேகிப்பவர்களுக்குச் சிநேகித்தபின் சிநேகத்தை விடுதலில்லைஆராயாமல் சிநேகித்தல்போற் கேட்டைத் தருவ தொன்றில்லை - என்ப

தாம்.

(வி ரை.) ஆராய்தல், குணநன்மை, செய்கை நன்மைகளை ஆராய்தல் கேடு தருவதைத் தேடுதலால் - ஆகுபெயர், சிநேகித்தால்-தாம், அவரொன் றும்வேற்றுமை யில்லாமையால், விடில்லையென்றும், அவ்வொற்றுமையால் அவனிடத்தும் பழிபாவங்கள் தம்மவையாகலால் இருமையும் கெடுமென்பது நோக்கி, நாடாது நட்டலிற் கேடில்லை யென்றும் சொல்லினர். (க)

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

(ப-ரை.) குணமுஞ் செய்கையும் நல்லனென்பது-(அல்லனென்பதும்) ஆய்ந்து-(பலகால்) ஆராய்ந்தும், ஆய்ந்து-(பலவழியால்) ஆராய்ந்தும், கேண்மை-(ஒருவனோடு நட்பை. கொள்ளாதான் - கொள்ளாதவன், கடைமுறை-முடிவில், தா.ன் - தான், சாம் - சாவதற்கு ஏதுவாகிய, துயரம்-துன்பத்தை, தரும்-(தானே நினைத்துக் கொள்ளுவான், எ-று.

(க ரை.) ஆராய்ந்து கொள்ளாதவன் சிநேகஞ் சாவதற கேதுவான துன்பந்தரும்-என்பதாம்.

(வி ரை, தீயகுணமுந் தீயசெயலு முடையவனோடு நட்புக் கொள்ளின் அவனுக்குவரும் பகைமையெல்லாம் தனக்கும்வந்துபின் அவைகளால் இறந்து விடுவனென்பதாம். (இவை இரண்டு பாட்டாலும் ஆராயாதவிடத்துப்படும் இழுக்குச் சொல்லப்பட்டது.) (உ)

குணமுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு.

(ப ரை.) குணமும்-(ஒருவனது) குணத்தையும், குடிமையும்-குடிப்பிறப்பையும், குற்றமும் - குற்றத்தையும், குன்றாவினனும் - குறைவற்றசுற்றத்தையும், அறிந்து-(ஆராய்ந்) தறிந்து, நட்பு சிநேகம், யாக்க-(அவனோடு) செய்யக் கடவன். எ-று.

(க ரை.) குணத்தையுங் குடிப்பிறப்பையுங் குற்றத்தையுஞ் சுற்றத்தையு மறிந்து நட்புசெய்யக் கடவன்-என்பதாம்.

(வி ரை। குற்றமில்லாதவர் உலகத்திலே இல்லாமையால் பொறுக்கத் தக்க குற்றமுடையராயிருந்தால் அதற்கட்புவிடக் கூடாதென்பதற்கு குற்றமு மென்றும், சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பாளரோடு கட்டுண்டு வருதலால், குன்றாவினனுமென்றும், விடப்பட்டால், தங்குறையாமென்பதற்கு, அறிந்தியாக்கவென்றும், சொல்லினர். (ந)

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(ப ரை.) குடிப்பிறந்து - உயர்ந்த குடியிற்பிறந்து, தன்கண் - தன்னிடத்து, பழி (உலகர் சொல்லும் பழிக்கு) நாணுவானை - அஞ்சுபவனை, கொடுத்தும் - (விலை) கொடுத்தாயினும், நட்புக்கொளல் வேண்டும் - சிநேகங்கொள்ளவேண்டும், எ - று.

(க ரை.) உயர்குலத்திற் பிறந்து பழிக்கஞ்சுபவனைப் பொருள் கொடுத்துஞ் சிநேகங் கொள்ளக்கடவன் - என்பதாம்.

(வி ரை.) குடிப்பிறப்பால் தான் பிழைசெய்யானாயும், பழிக்கு அஞ்சலாம் பிழைபொறுத்தலும்பெற்றும் இல்லை இராஜ்ய முதலியவற்றைப் பெறுதல் அருமையாதலால் அவனுடைய விலைகொடுத்தும் கொள்கவென்பதாம். (௪)

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(ப ரை.) அல்லது-(தாம்) உலகநடையல்லாததை - (செய்யுமிடத்தின்) அழச்சொல்லி - அழும்வகைச்சொல்லி-(விலக்கியும் (செய்தக்கால்) இடித்து (பின்னும் செய்யாவகை) நெருக்கியும், வழக்கு - அவ்வுலகநடையைச்-(செய்யாவிடத்து) அறியவல்லார் - செய்விக்கவும் வல்லவரை ஆய்ந்து - ஆராய்ந்து நட்பு சிநேகம், கொளல் கொள்ளக்கடவர், எ - று,

(க ரை.) ஒருவன் பாவங்களைச் செய்ய நினைத்தால் அழும்படிசொல்லி விலக்கியும் பாவங்களைச்செய்தால் செய்யாதிருக்க நெருக்கியும் உலகநடை செய்விக்க வல்லவரைச் சிநேகிக்கக்கடவர் என்பதாம்.

(வி ரை.) அழச்சொல்லி இடித்து என வந்த பரிகாரத் தொழில்களுக்கு ஏற்ற குற்றத் தொழில்கள் வருவிக்கப்பட்டன வழக்கு உலகத்தார் ஆல்தொடங்கிச் செய்துவந்த செயல. நட்போடு சிநேகித்தவரும் அறியும்வகை அறிதல் அரிதாகலால் அறியவல்லாரென்றார் (௫)

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(ப ரை.) (ஒருவனுக்குக் கேடென்பது) கிளைஞரை சுற்றத்தாரை, நட்பாகிய (நிலங்களை) நீட்டி யளப்பது குறைபாடில்லாமல் அளப்பதாகிய, ஓர் கோல் ஓர்கோலாம் (ஆதலால்) கேட்டினும் அக்கேட்டினிடத்தும், ஒருறுதி (அவரால் பெறப்படும்) ஒரு நல்லறிவு, உண்டு உண்டாகும், எ - று.

(க ரை.) கேட்டினிடத்துஞ் சிநேகராற் பெறப்படு நல்லறிவுண்டாமென்பதாம்.

(வி ரை.) தமது சிநேகத்தி னெல்லை சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்திலே புறத்து வெளிப்படாமல் வந்தவர் பின்பு கைவிட்டு விடத்துச் செயல்வேறுபடுதலால் அக்கேட்டால் சினேகத்தை அளவு செய்யலாமென்பதுபற்றி கேட்டினைக் கோலாக்கியும், அதனால் அளந்தறிந்தாய் ஆகாரையேகொள்ளுதலால், அவ்வறிவை உறுதி யென்றும் சொல்லினர். இஃது ஏகதேச வுருவகம்.]

## அதி உ அ0 - ஆம் - அதி - நட்பாராய்தல்.

[இவை நான்கு பாட்டாலும் ஆராயும் விதமும், ஆராய்ந்தால் சிநேகிக்கப்படுவார் இவரென்பதும் சொல்லப்பட்டன.] (க

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(ப ரை.) ஒருவற்கு-ஒருவனுக்கு ஊதியமென்பது பேறென்று சொல்லப்படுவது, பேதையார் அறிவில்லாதவரது, கேண்மை நட்பை, ஒரீஇ ஒழிந்து விடல் (அவரை விடுதல், எ று.

(க ரை.) ஒருவனுக் கிலாபமென்று சொல்லப்படுவது அறிவில்லார் சிநேகத்தை விடுதல் என்பதாம்.

(வி ரை.) நட்பொழிந்தாலும் விட்டு நீங்காதவிடத்துத் தீங்கு வருதலால் விடலென்றும் நீங்குபவிடத்துத் தீங்கொழிதலே யல்லாமல் இருமை யின்பங்களுக்கும், உரிமை பெறுதலால், அதனை ஊதியமென்றும் சொல்லினர். (உ

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(ப ரை.) உள்ளம் (தம்) மனவெழுச்சி, சிறுகுவ சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை. உள்ளற்க (செய்ய) நினையாதிருக்கக்கடவர்(அதுபோல் அல்லற்கண் (தமக்கொரு) துன்பம் வந்தவிடத்து, ஆற்றறுப்பார் கைவிடுவோரது. நட்பு சிநேகத்தை, கொள்ளற்க கொள்ளா திருக்கக் கடவர், எ று.

(க ரை.) மனந்தளருந் தொழிலைச்செய்ய நினையாதிருக்கக் கடவர் ஆபத்திற் கைவிடுவோர் நட்பைக் கொள்ளாதிருக்கக் கடவர் என்பதாம்.

(வி ரை.) அத்தொழில்களாவன: தம்மின் வலியவரோடு தொடங்கியவையும்பயனில்லாதவையும் ஆம் முன்னெல்லாம்வலியார்போலநடத்தலால்

ஆற்றுப்பா ரென்றார். ஆற்றுத்தல் வலியறுத்தல் (எடுத்துக் காட்டுவமை) கொண்டால் அழிந்தே விடுவ னென்பதாம். (அ)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(ப ரை.) கெடுங்காலை (ஒருவன்) கெடுங்காலத்து, கைவிடுவார் (அவனை விட்டு) நீங்குவார், கேண்மை (முன் அவனோடுசெய்த) நட்பானது, அடுங்காலை (கூற்றுவன்) கொல்லுங்காலத்து, உள்ளினும் (ஒருவன்) நினைக்கினும்; உள்ளம் (அந்நினைத்த) உள்ளத்தை, சுடும் சுட்டு விடும், எ று.

(சு ரை.) கெடுங்காலத்துக் கைவிடுவோர் நட்பானது இயமன்கொல்லுங் காலத்து நினைக்கினும் முள்ளத்தைச் சுடும் என்பதாம்.

## அக - ஆம் - அதி - பழைமை. ருறுரு

(வி-ரை.) நினைத்த வளவிலே சம்பந்தமில்லாத பிறனுக்குங்கூற்றுவனினும் கொடியதா மென்று கைவிட எண்ணிச்செய்தநட்பின் கொடுமைசொல்லியபடி. [இவை மூன்று பாட்டாலும் ஆராய்ந்தால் சிநேகிக்கப்படாதவர் இவரென்பது சொல்லப்பட்டது.] (க)

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

(ப ரை.) மாசற்றார்-(உலகோடொத்துக்)குற்றமற்றவரது, கேண்மை-நட்பையே, மருவுக-பழகக்கடவன், ஒப்பிலார்-(உலகத்தோடு) ஒத்தலில்லாதவாது, நட்பு-நட்பை-(ஆராயாது கொண்டால்,) ஒன்று-(அவருக்கு வேண்டிய) ஒன்றை, ஈத்தும்-கொடுத்தாயினும், ஒருவுக-விடக்கடவன்-எ று.

(சு ரை.) குற்றமற்றவர் சிநேகத்தைக்கொள்ளக்கடவன். ஒப்பிலார் சிநேகத்தைப் பொருள்கொடுத்தாகினும் விடக்கடவன் என்பதாம்.

(வி-ரை) உலகோடொத்தவர் நட்புஇருமையின்பமும் தருதலால் மருவுகவென்றும் அதனோடொவ்வாதவர் நட்புஅன்பமே தருதலால், அதை விலைகொடுத்தாயினும் விடுகவென்றும்சொல்லினர் [இதனால்சிநேகிக்கப்படுவாரும் படாரும் ஆகிய அவ்விருமையுந் தொகுத்துச்சொல்லப்பட்டது.](ம)

---

## எண்பத்தொண்ணும் அதிகாரம்

# பழைமை.

அதாவது: நட்பினரது பழையராந் தன்மைபற்றி அமர்செய்தபிழை களைப் பொறுத்தல் ஆராய்ந்து சிநேகிக்கப்பட்டாராயினும் பொறுக்கப்படும் குற்றமுடைய ராகலாலும், ஏழ் வகையாலும் நட்புக் கொள்ளப் பட்டவரி டத்துப் பிழைப்புளதா மென்பது அறிவித்தற்கு இது நட்பாராய்தலின் பின் வைக்கப்பட்டது.

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(ப-ரை.) பழைமையெனப்படுவது-பழைமை யென்று சொல்லப் படுவது, யாதெனின்-யாதென்றால், (அது) கிழமையை-(பழைமையோர்) உரிமையா லேசெய்தவைகளை, யாதும்-சிறிதாயினும், கீழ்ந்திடா-சிதைக்காமல் (அவை களுக்கு உடன்படுவதாகிய,) நட்பு-சிநேகம்-எ-று.





(க் ரை.) பழைமை யென்றுசொல்லப்படுவது யாதென்றால், பழமையோ ர்செய்தவற்றைச் சிதையாமற் கொள்ளு நட்பாம்-என்பதாம்.

(வி-ரை.) கிழமை ஆகுபெயர் பின் கெழுதகைமையெனவருவதுமது உரி மையாற் செய்தவையாவன. கருமஞ்செய்யும்போது கேளாது செய்தல்செ ம்மவை செய்தல். தமக்குவேண்டு மவைகளைத் தாமே கொள்ளுதல், பணி வச்சங் களில்லாமை, இவைமுதலானவை [இதனாலே பழமையாவது கால ஞ்சென்றதன்று இப்படிப்பட்ட நட்பென்று சொல்லப்பட்டது.]

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்

குப்பாதல் சான்றோர் கடன்.

(பரை.) நட்பிற்கு-சிநேகத்திற்கு, உறுப்பு-அவயமான, கெழுதகைமை-(நட்பினர்) உரிமையாற் செய்பவை யாம், (ஆதலால்) அதற்கு அவ்வுரிமைக்கு, உப்பாதல்-இனிமைய ராதல், சான்றோர்-நிறைந்தோர்க்கு, கடன்-முறைமை-எ-று.

க-ரை. சிநேகத்திற் கவயவமானசிநேகருரிமையாற் செய்தவையாம்-என்பதாம்.

(வி-ரை.) மற்று-அசை வேறல்லா தோன்ற உறுப்பென்றார். அவயவமாகுத லறிந்தே இனிப்பாரவ ரென்பது தோன்ற சான்றோர்மேல் வைத்தார்.

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(ப-ரை.) கெழுத கைமை- நட்பினர்) உரிமையினாலே செய்தவைகளுக்கு, செயதாங்கு-(தாம்) செய்தவைபோல், அமையாக்கடை-உடன்படாராயின், பழகிய-(அவரோடு பழையதாய் வந்த, நட்பு-சிநேகமானது, எவன்-என்ன பயனை செய்யும், எ-று.

(க-ரை.) நட்பினர் செய்தவைகளுக்குத் தாஞ்செய்யாவிடத்து நட்பென்ன பயன் செய்யும் என்பதாம்.

(வி-ரை.) அப்படி உடன்படுதலாவது-தாமும் அவரித்து உரிமையால் உடன்படுதல் [இவை இரண்டுபாட்டாலும் பழமையால் வரும் உரிமையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

(ப-ரை.) நட்டார் நட்பினர், கெழுதகையால்-உரிமையால், கேளாது-தம்மைக்கேளாது, செயின்-(தன் கருமத்தைச்)செய்தாராயின், விழைதகையான் (அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி (அறிவுடையோர்,) வேண்டியிருப்பர்-(அதனை) விரும்புபவர்-எ-று.



(க-ரை) நட்பாளர் உரிமையாற் கேளாது செய்தா லறிவுடையோர

தனை விரும்புவர்-என்பதாம்.

(வி-ரை.) ஒருவர்க்குத் தங்கருமம் தாம் அறியாமல் முடிந்திருக்கையை க்காட்டிலும்நன்மை இல்லாமையால் அச்செயல் விரும்பத்தக்கதாயிற்று. அதனை அப்படி யறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்லது இல்லாமையால் அவர்மேல் வைத்துச்சொல்லப்பட்டது [இதனால் கேளாதுசெய்தவிடத்து அதனை விரும்புக வென்பது சொல்லப்பட்டது.] (அ)

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார்செயின்.

(ப-ரை) நோதக்க-,தாம்) வெறுக்கத்தக்கவைகளை, நட்டார்-சிநேகித்த வர், செயின்-செய்தால் (அதற்குக் காரணம்) பேதைமையொன்றோ அறியா மையொன்றோ, பெருங்கிழமை-மிகுந்த உரிமையுமாம்,என்று-என்று, உண ர்க-அறியக்கடவர்-எ-று.

(க-ரை.) வெறுக்கத்தக்கவைகளைச் சிநேகர்செய்தாலது மிகுந்த உரி மையாம்-என்பதாம்.

(வி-ரை.) செயினெனவே தம்மியல்பிலே செய்யாமை பெற்றும்.இது வருகின்றவைக்குள்ளும் ஒக்கும். இழவூழால்வரும் பேதைமையார்க்கும்உண் டாதலால் தமக்கு எதங்கொண்டாரென்றுவது ஈழ்வகையால் எம்மால் வரக்கடவது ஒற்றுமை மிகுதிபற்றி அவரால் வந்ததென்றுவது கொள்வத ல்லது அன்பிலாமையென்று கொள்ளப்படா தென்பதாம் [கெடும் வகை செய்யின் அதற்குக் காரணம் இதனால் சொல்லப்பட்டது. (ரு)

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(ப-ரை.) எல்லைக்கணின்றார் (நட்பின்) வரம்பிலேநின்றவர், தொல்லை க்கணின்றார-(தம்மோடு) பழமையில் வேறுபடாது நின்றவரது, தொடர்பு-நட்பை, தொலைவிடத்தும்-,அவராலே) தொலைவு வந்தவிட்டதும், துற வார்-விடார். எ-று.

(க ரை) நட்பிலேயின்றவர்பழமையோர சிநேகத்தைவிடார்-என்பதாம்

(வி-ரை) பழமையில் வேறுபடாமையாவது-உரிமையொழியாமையாம் தொலைவு-பொருட்கேடு போர்கேடு. (க)

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(ப-ரை.) அன்பின்-அன்புடனே, வழிவந்த-பழையதாய்வந்த கேண்மையவர்-நட்பினை யுடையவர்-(நட்பினர்) அழிவந்த-அழிவு வந்தவைகளை, செய்யினும்-செய்தாலும், அன்பர்-(அவரிடத்தே) அன்பு நீங்கார், எ-று.

## ருளுக அக - ஆம் - அதி - பழைமை.

(க-ரை.) பழமையான நட்பினை யுடையவர் பிறர் அழிவானவற்றைச் செய்தாலு மன்பை விட்டகலார்-என்பதாம்.

(வி-ரை.) அழிவு-முன்சொல்லிய கேடுகள் [இவை இரண்டு பாட்டாலும் கேடுசெய்த விடத்தும் விடுதன்மைய தன்றென்பது சொல்லப்பட்டது.] (எ)

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

(ப-ரை.) கேள்-நட்பினாது, இழுக்கும்-பிழையை கேளா-(பிறர் சொல்லினும்) கேளாத-கெழுதகைமை, வல்லார்க்கு-உரிமையறிய வல்லவர்க்கு, நட்டார்-அந்நட்பினர்,இழுக்கம்-பிழையை, செயின்-செய்தால்-(அது)நாள்-(பயன்பட்ட நாளாம்-எ-று.

(க-ரை.) நட்பாளர் பிழையைக் கேளாதவற்கு நட்பாளர் பிழையைச் செய்தலது பயன்பட்ட நாளாம்-என்பதாம்.

(வி-ரை.) பிழையாவன: முன்சொல்லிய பணியாமை, அஞ்சாமை, நற்பொருள்வெளவல், முதலானவை. கேட்டல் உட்கொள்ளுதல், செய்தவிடத்தல்லாமல், அவ்வல்லமை வெளிப்படாமையால் செய்யாதவை நாளல்லவாயின [இதனுல் பிழைபொறுத்தற் சிறப்புச் சொல்லப்பட்டது] (அ)

கெடாஅ வழிவந்த கேண்மையார்கேண்மை

விடாஅர் விழையு முலகு.

(ப-ரை.) கெடாஅ-(உரிமை) கெடாமல், வழிவந்த-பழையதாய் வந்த கேண்மையார்-நட்பையுடையவரது, கேண்மை-நட்பை, விடாஅர்-(அவர்பிழைநோக்கி) விடாதவரை, உலகு-உலகமானது, விழையும்-(நட்புக்குறித்து) விரும்பும், எ-று.

(க-ரை.) பழைய சிநேகர் நட்பை விடாதவரை உலகமிச்சிக்கும்-என்பதாம்.

(வி-ரை.) விடாதாரையெனவே விழைதற்குக்காரணம் சொல்லப்பட்டது. நம்மிடத்தும் இவர் இப்படிப்பட்டவ ராவரென்று யாவரும் தாமே வந்து நட்பாவ ரென்பதாம். (௯)

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

(ப-ரை.) பழையார்கண்-பழையநட்பினரிடத்து-(அவர் பிழைசெய்தாராயினும்) பண்பிற்றலைப் பிரியாதார்-(தம்) பண்பு நீங்காதவர், விழையார்-பகைவராலும், விழையப்படுப-விரும்பப்படுவர், எ-று.

(க-ரை.) பழைய சிநேகரிடத்துச் சிநேகம் நீங்காதவர்பகைவராலுமிச்சிக்கப்படுவர்-என்பதாம்.

அ௨ - ஆம் - அதி - தீநட்பு. ௧௫௪

(வி-ரை.) தம்பண்பாவது செய்யாத முன்போல அன்புடையராதல் அக்குணநோக்கிப் பகைவரும் நட்பினராவ ரென்பதாம் [இவை இரண்டு பாட்டானும் பழைமையறிவார் அடையும்பயன் சொல்லப்பட்டது.] (௧0)

எண்பத்தோராம்-அதிகாரம் பழைமை
முற்றிற்று.

---

## எண்பத்திரண்டாம் அதிகாரம்.

# தீ நட்பு.

இனிபொறுக்கப்படாத குற்றமுடைமையால் விடத்தக்கதாகிய நட்பு நட்பாராய்த லதிகாரத்தில்சுருங்கச்சொல்லிஅவ்வளவில் அடங்காமையால்

அதனை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கிமு ன்னே தீநட்பு சொல்லுகிறார்

அஃதாவது: தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பாம். அதிகாரமு றைமை சொல்லாமலே விளங்கும்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(ப-ரை.) பருகுவார்போலினும்-(ஆசைமிகுதியால்) உண்பவர்போன் றாராயினும், பண்பிலார்-குணமிலராது-(தீக்குணமுடையவராது என்றபடி) கேண்மை - நட்பானது, பெருகலின்-வளர்தலினும், குன்றல் - குறைதல், இனிது-இனிதாம், எ-று.

(த-ரை.) நற்குணமில்லார் நட்பானது பெருகுதலினும் சிறுகுத லினி தாம்-என்பதாம்.

(வி-ரை.) பெருகினல் வரும்கேடு குன்றினல் வாராமையால் குன்ற லினிதென்றார். (இதனல் தீ நட்பினதாகாமை பொதுவகையாற் சொல்லப் பட்டது.) (இனிச் சிறப்புவகையாற் கூறுவர்.)

உறினட் டறிலொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

(ப-ரை.) உறின்-(தமக்குப்பயன்) உள்ளவிடத்து, நட்டு - சிநேகித்து அறின்-(அது) இல்லாவிடத்து, ஒரூஉம் - ஒழியும், ஒப்பிலார் - ஒப்பில்லாத வரது, கேண்மை - சிநேகத்தை, பெறினும் - பெற்றாலும்-(என்ன) (ஆக்கம்) யாது, இழப்பினும்-இழந்தாலும், என்-(செல்வம்) யாது, எ-று.

(க-ரை.) செல்வம் வந்தவிடத்து சிநேகித்து அது இல்லாவிடத்துக் கைவிடுவோர்கள் சிநேகத்தைப் பெற்றாலென்ன, அற்றாலென்ன - என்பு தாம்.

## ௩௱அ அ௨-ஆம்-அதி-தீநட்பு.

(வி-ரை.) தமக்கு உற்றவை பார்ப்பவர் பிறரோடு பொருத்தமிலாத

லால் அவரை ஒப்பிலா ரென்றார் அவரிடத்து அயலார் தன்மையே பொரு த்து மென்பதாம். (உ)

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரு நேர்.

(ப-ரை.) உறுவது சீர்தூக்கு நட்பும்-(நட்பளவு பாராமல் அதனால் வரும் பிரயோசனத் தளவுபார்க்கும்) நட்பினரும், பெறுவது கொள்வாரும் (கொடுப்பாரைக் கொள்ளாமல், விலையைக்கொள்ளும்வேசையரும், கள்வரும்-(பிறர் கேடுநோக்காது அவர் சோர்புபார்க்கும்) கள்வரும், நேர்-(தம்முள் ஒப்பார்)எ-று.

(க-ரை.) நட்பின் பயனை யெண்ணுவாரும் வேசைரும் கள்ளரும்தம்மி லொப்பாவர்-என்பதாம்.

(வி-ரை.) நட்பு-ஆகுபெயர். பொருள்களைக்குறித்து வஞ்சித்து நடத்தலால், அவ்விருவரோடும் ஒப்பாரென்பதாயிற்று. இவை இரண்டு பாட்டானும் தமக்குப் பிரயோசனம் பார்ப்பவரது நட்பினது தீமை சொல்லப்பட்டது. (ங)

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

(ப-ரை.) (முன்னெல்லாந் தாங்குவதுபோலிருந்து) அமகரத்து-போர் வந்தவிடத்து, ஆற்றறுக்கும்-போர்க்களத்திலே தள்ளிவிட்டுப் போகின்ற கல்லா-கல்வியில்லாத, மாவன்னார்-குதிரைபோல்பவரது, தமரின்-தமராந் தன்மையினும், தனிமை-தனிமையாதலே, தலை-சிறப்புடைத்து, எ-று.

(க-ரை.) போர்க்களத்தில் விட்டோடிப்போவோர் நட்பினுந் தனிமையாக வித்தனல்லது-என்பதாம்.

(வி-ரை.) கல்லாமை-கதியைந்தும், சாரியைபதினெட்டும், போர்செய் திறமும், அறியாமை, துன்பம் வாராதமுன்னெல்லாம் துணையாவார் போன்று வந்த விடத்துவிட்டு நீங்குவாரென்பது உவமையாற் பெற்றும். அவர் தமரானல் வரும் அழிவு தனியானல் வாராமையால் தனிமை தலையென்றார். எனவே அதுவும் தீதாலறிக (ச)

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

(ப-ரை.) செய்து-செய்துவைத்தாலும், ஏமஞ்சாரா-காப்பாகாத சிறியவர்-கீழ்மக்களது, புன்கேண்மை-தீநட்பு, எய்தலின்-(ஒருவனுக்கு) உண்டாதலின், எய்தாமை-இல்லாதிருத்தல், நன்று-நல்லது, எ-று.

(க-ரை.) சிறியவர்களுடைய நட்பானது ஒருவனுக்கு உண்டாதலினு மில்லாதிருக்கை நல்லது-என்பதாம்.



(வி-ரை.) சிறப்பும்மை வருவிக்கப் பட்டது, காவலர்காமை தொலைவி னிடத்து விட்டு, நீங்கல் எய்தலி னெய்தாமை நன்றென்பதற்குமுன் உரைத்தபடி உரைக்க (இவை இரண்டு பாட்டாலும் தொலைவிலேதுணை யாகாதவர் நட்பினது தீமை சொல்லப்பட்டது.) (ரு)

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

(ப-ரை.) பேதை-அறிவில்லாதவனது, பெருங்கெழீஇ நட்பின் - மிக நெருங்கிய நட்பைப்பார்க்கிலும், அறிவுடையார்-அறிவுடையாவரது, ஏதின்மை -பகைமை, கோடியுறும் கோடிபங்கு நல்லது, எ-று.

(க-ரை.) அறிவிலவார் நட்பைப் பார்க்கிலும் அறிவுடையார் பகைநல்லது என்பதாம்.

(வி-ரை.) அறிவுடையவனது பகைமை ஒருதீங்கு செய்யாமையாலும், பேதையினது நட்பு, பலதீங்கும் செய்தலாலும், கோடியுறுமென்றார். (சா)

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

(ப-ரை.) நகை வகையராகிய (தாம் அறிதல் வகையராதற் கல்லாமல்) நகுதல் வகையராதற்கு ஏதுவாகிய, நட்பின் நட்பால் - (வருமவைகளின்) பகைவரால்-பகைவரால்-(வருபவை) பத்தடுத்தகோடி-பத்துக்கோடி மடங்கு, உறும்-நல்லவையாம், எ-று.

(க-ரை.) நகைக் கேதுவாகிய நட்பைவிட பகைக்கேதுவாகிய நட்பு நல்லவையாம்-என்பதாம்

(வி-ரை.) அந்நட்பாவது-விடரும், தூர்த்தரும், கழைக்கூத்தரும்,போன்ற பலவகையால் நகுவித்துத் தாம் பயன்கொண் டொழிவாரோடு உண்டாகியது பத்தடுத்தகோடி பத்தாகத் தொகுத்தகோடி அந்நட்பில் வருமின்பங்களில் அப்பகைவரால் வருந்துன்பங்கள் மிக நல்ல தென்பதாம். (எ)

ஒல்லுங் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்'

(ப-ரை.) ஒல்லுங் கருமம்-(தம்மாலே) முடியுந்தொழிலை, உடற்றுபவர் முடியாதாகச் செய்பவரோடு கொண்ட, கேண்மை-நட்பை, (அது கண்டால்) சொல்லாடார் (அதை அவரறியச்) சொல்லாமல், சோரவிடல்-தளரவிடக்கடவர். எ-று.

(க-ரை.) தம்மாலே முடியுந் தொழிலை முடியாதாகச் செய்பவருடன் கொண்ட நட்பை விடக்கடவர்-என்பதாம்,

(வி-ரை.) சோரவிடல்-விடுகின்றவிதம் தோன்றாமல் ஒருகாலைக் கொருகால் ஒயவிடுதல், அறியச் சொல்லினாலும், விடுக்கின்ற விதம்தெரிந்தாலும்

## ௮௨௰ அஉ-ஆம்-அதி-நிநட்பு.

(அப்போது பரிகரித்துப் பின்னும் நட்பாயிருக்க) நினைப்பாராகலால் சொல்லாடாரென்றும்-சோரவிடலென்றும், சொல்லினர், [இவை மூன்று பாட்டாலும் முறையே பேதையர்-கருவிப்பவர் - இயல்வது செய்யாதவர், இவர் நட்புத்தீமைகள் சொல்லப்பட்டன.]

கனவிலு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

(ப-ரை.) வினைவேறு-தொழில்வேறு, சொல்வேறு-சொல்வேறு, பட்டார் பட்டவரது, தொடர்பு-நட்பு, கனவினும்-(நனவிலே மாத்திரமேயல்லாமல் (கனவிலும், இன்னாது துன்பஞ்செய்வதாகும், எ-று.

(க-ரை,) தொழில்வேறு, சொல்வேறு, பட்டவர் சிநேகமானது கனவிலுந் துன்பந்தரும்-என்பதாம்.

(வி-ரை.) தொழிலுஞ் சொல்லும் ஒவ்வாமல் வேறுவேறாயிருத்தல்-தொழிலிலே பகைவராயும், சொல்லிலே நட்பினராயும், இக்குணை நிகழ்ச்சியிலே உண்டாயிருத்தலாலே, கனவினு மின்னாதென்றார், மன் - ஓ - அசைநிலை, (க)

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

(ப-ரை.) மனை வீட்டிலே-(தனிமையிருந்தபோது) கெழீஇ-நட்பாடிமன்றில்-சபையிலே-பலருட னிருந்தபோது பழிப்பார் - பழிசொல்லுவோரது, தொடர்பு-நட்பும், எனைத்தும்-எவ்வளவு சிறிதாயினும், குறுகுதல்-தம்மைச் சேர்தலை, ஓம்பல்-பரிகரிக்கப்பட்டவர், எ-று.

(க ரை. வீட்டிலே தனித்திருக்கையிற் சினேகித்துச் சபையிற் பழிப்பவர் நட்புக்கொள்ளா திருக்கக்கடவர்-என்பதாம்.

வி-ரை. அவ்விரு செயலும் தீதாகலின் அவர் ஒருபோதும் தம்மைச் சேராதவிதம் குறிக்கொண்டு காக்கவேண்டு மென்பதற்கு அவர் நட்பின்மேல் வைத்துச் சொல்லினர், இவை இரண்டு பாட்டாலும் வஞ்சர் நட்பின் தீமை சொல்லப்பட்டது, (௧0)

எண்பத்திரண்டாம்-அதிகாரம் தீநட்பு

முற்றிற்று.

## எண்பத்திமூன்றும் அதிகாரம்.

## கூடா நட்பு.



இனிமற்றைக் கூடாநட்புச்சொல்லுகின்றார்,

அஃதாவது: பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமயம் கிடைக்குமளவும் புறத்திலே கூடி நடப்பவர் நட்பு.

சீரிடங்காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிறந்தவர் நட்பு.

(ப-ரை.) நேரா - கூடாதிருந்தே, நிரந்தவர் - (வாய்க்குமிடம் காணுமளவும்) புறத்திற் கூடிநடப்பவரது, நட்பு - சிநேகம், சீரிடம் - வாய்க்குமிட

த்தை, காணின் - கண்டால், எறிதற்கு-(அற) வெறிதற்குத் - துணையாகிய) பட்டடை - பட்டடையாகும், எ-று.

(கரை.) வாய்க்குமிடங் கூடாதிருந்தவர் நட்பானது அந்த இடத்தை க்கண்டா லெறிதற்குப் பட்டடையாம் - என்பதாம்.

(வி-ரை.) எறியுங்காலம் வாராமுன் னெல்லாந் தாங்குவதுபோ லிரு ந்தவர்தவிடத்து அறவெறுவிப்பதாகியபட்டடைக்கும் அப்படிப்பட்டதாகிய நட்பிற்கும் தொழிலொப்புமை யிருத்தலால் அதுபற்றி அந் நட்பைப் பட் டடையாக உபசரித்தார். க

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(ப-ரை.) இனம்போன்று-(தமக்கு) உற்றவர்போன்று, இனமல்லார்- -றுதவரோடு உண்டாகிய, கேண்மை -நட்பானது-(இடம்பெற்றால்) மகளிர் பெண்பாலார், மனம்போல நெஞ்சம்போல, வேறுபடும் - வேறுபடும், எ-று

(க-ரை.) உறவினர்போன்று உறவின ராகாதவர் நட்பானது பெண்க ளிதயம்போல வேறுபடும் - என்பதாம்.

(வி-ரை.) நட்பு வேறுபடுதலாவது - இடம்பெற்றால் பழைய பகையே யாகுதல். [இவை இரண்டு பாட்டாலும் கூடாநட்பினது குற்றம் சொல்லப் பட்டது.] உ

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

(ப-ரை) நல்ல - நல்லவையாகிய, பல - பலநூல்களை, கற்றக்கடைத் தும் - கற்றவிடத்தும்-(அதனால்) மனநல்லராகுதல் -மனத்திருந்தி நட்பின ராகுதல், மாணார்க்கு - பகைவர்க்கு, அரிது - இல்லை, எ-று.

(க-ரை.) பலநூலைக் கற்றவிடத்து மனநலத்தராகுதல்பகைவர்க்கில்லை என்பதாம்,

40

## ௩௮௨ அ௩ - ஆம் - அதி - கூடாநட்பு.

(வி-ரை.) நல்ல நூல் - மனக்குற்றங் கெடுப்பன. நல்லராகுதல் சலம் விடுதல், உட்சல முடையாரைக் கல்விபுடைமைபற்றி நட்பென்று கொள்

எலாகா தென்பதாம். 

முகத்தி னினிய நகா அவத்தின்னு
வஞ்சரை யஞ்சப் படும்.

(ப-ரை.) (கண்டபோது) முகத்தின்-முகத்தால், இனிய-இனிமையுள்ளனவாக, நகாஅ - சிரித்து, அகத்து -மனத்தால், இன்னு-(எப்பொழுதும்) இனியராகாத, வஞ்சரை-வஞ்சகரை, அஞ்சப்படும்-அஞ்சல்வேண்டும்,எ-று

(க-ரை.) முகமலர்ந்து நகைத்து அகமலராத வஞ்சகருக்குப் பயப்படவேண்டும் - என்பதாம்.

(வி-ரை.) நகையது வகைபற்றி - இனியவென்றும், மனத்திலே சலம் தோன்று நிற்கவும்அதற்குவிரோதமாகிய நகையைப்புறத்திலே காட்டலால் வஞ்சரென்றும் அச்சலம் குறிப்பதற்குச் சாதனமாகிய முகத்தாலும்தோன்றுமையால் - அஞ்சப்படுமென்றும், சொல்லினர். [இவை இரண்டு பாட்டாலும் குற்றத்திற்கு ஏதுவாகிய அவர்கொடுமை சொல்லப்பட்டது, ச

மனத்தி னமையா தவரை யெனைத்தொன் றுஞ்
சொல்லினுற் றேறற்பாற் றன்று.

. (ப-ரை') மனத்தின் மனத்தால், அமையாதவரை-(தம்மோடு)பொருந்தாதவரை, எனைத்தொன்றும்-யாதொரு கருமத்திலும்,சொல்லினல்-சொல்லினல், தேறற்பாற்று - தெளிதன் முறைமையது, அன்று-அல்ல-(என்று நீதிநூல்) சொல்லும், எ-று.

(க-ரை.) மனமொவ்வாதவரை யாதொரு சொல்லாலும், தெளிதல் கூடாது - என்பதாம்.

(வி-ரை.) பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லை நல்ல சொல்லென நினைத்து அவரைக் கருமங்களிலே தெளிதல் நீதி நூலின் முறைமை அன்றென்பதாம். கி

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

(ப-ரை.) நட்டார்போல் - நட்பினர்போல், நல்லவை - நன்மையைத்தருஞ் சொற்களை-சொல்லினும் - சொன்னாலும், ஒட்டார்சொல் - பகைவர் சொற்கள் (அது தாராமை) ஒல்லை - விரைவிலே-(சொல்லிய பொழுதே யென்றபடி உணரப்படும் - அறியப்படும், எ-று.

(க-ரை.) நட்பாளர்போல நல்ல சொற்களைச் சொன்னாலும் பகைவர் சொற்கள் நலந்தாராமை யறியப்படும் - என்பதாம்.

(வி-ரை.) சொல்லினெனெனவே அவர் அவை சொல்லாமையே பெற்று பகைவராதலால், தீமை தருதற்கு ஐயமில்லை யென்பதற்கு ஒல்லையுணரப்படுமென்றார்.

௬ சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்க
தீங்கு குறித்தமை யான்.

(ப-ரை.) வில்வணக்கம் - வில்லினது வணக்கம், தீங்கு-(எற்றவர்குத்) தீமைசெய்தலை, குறித்தமையான் -குறித்தனால், ஒன்னார்கண்-பகைவரிடத்தே-(பிறக்கும்) சொல்வணக்கம் - சொல்லினது வணக்கத்தையும், கொள்ளற்க (நமக்கு நன்மைசெய்தலைக் குறித்தென்று) நினையாதிருக்கக்கடவர், எ-று.

(க-ரை.) வில்வணக்கம் தீங்கைத்தருதலால் பகைவரிடத்துச்சொல்வணக்கம் கொள்ளாதிருக்கக் கடவர்-என்பதாம்.

(வி-ரை.) தம் வணக்கம் அன்றென்பது தோன்ற சொல்வணக்கமென்றும். வில்வணக்கம் வேறுபினும். வணங்குத லொப்புவமையற்று அதன்குறிப்பையே எதுவாக்கியம் சொல்லினர் வில்வினன்குறிப்பு அவனினுகிய வில்வணக்கத்தின் மேல் நிற்றலால் பகைவரது குறிப்பும் அவரினுகிய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. இதுவும் தீங்கு குறித்த வணக்கமென்றே, கொண்டு அஞ்சிக்காக்க வேண்டுமென்பதாம் [இவை மூன்று பாட்டாலும் அவரைச் சொல்லாலே தெளிய லாகாதென்பது சொல்லப்பட்டது ] ௭

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து.

(ப-ரை.) (பகைவர் குறிப்பை அறியவல்லார்க்கு) ஒன்னார் - பகைவர் தொழுதகையுள்ளும - கும்பிட்ட கையுள்ளும, படை - ஆயுதமானது, ஒடுங்கும - மறைந்திருக்கும, அழுதகண்ணீரும (அவர்) அழுதகண்ணீரும், அனைத்து - அப்படியே, அது மறைந்திருத்தற்கு இடமாம, எ-று.

(க-ரை.) பகைவர் கும்பிட்டகையோடு மாயுத மறைந்திருக்கும், அப்பகைவ ரழுதகண்ணீரு மப்படியே - என்பதாம்,

(வி-ரை.) தாம் நட்பென்பதனைத் தங்கையாலும். கண்ணாலும், நம்புவித்துப் பின் கொலலுதற்கு எண்ணகவல்லனற ஆயுதமதுவாளதறியும்பாது நம்புவிக்கின்றவ்பாழுத அவைகளுள்ளே தோன்றுமென்பதற்கு ஒடுங்குமென்றார. பகைவாதமது தளாசசிகாட்டித் தொழுதாலும, அழுதாலும,

அவர் குறிப்பையறிய மாட்டாரைக் காத்துக்கொள்க வென்பதாம். [இதனால் அவரைச் செயலால் தெளியலாகா தென்பது சொல்லப்பட்டது.]

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

## ௮௨௯ அசு - ஆம் அதிபேதைமை.

(ப•ரை.) (அரச நீதியானது) மிகச்செய்து-(புறத்திலே நட்பை)மிகச் செய்து, தம்மெள்ளுவாரை-(உள்ளே) தம்மை இகழும் பகைவரை, நட்பினுள்-(தாமும்) அந்நட்பினிடத்தே நின்று நகச்செய்து -புறத்திலே-(அவர்) மகிழும்படிசெய்து, சாப்புல்லற்பாற்று-(உள்ளே அது) சாம்படிக்குப்பொருந்துந் தன்மையுடைத்து, எ-று.

(க•ரை.) இராசநீதியானது புறத்து நட்பைமிகச்செய்து இகழ்பவரை நட்பில் மகிழும்படிசெய்து பொருந்துந் தன்மை யுடையது என்பதாம்.

(வி•ரை.) நின்றென்பதும், அரசநீதி யென்பதும் விருக்கப்பட்டன உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவருக்குத் தகாதாயினும் பகைவரிடத்தானால், தகுமென்பது நீதிநூலது துணிவென்பதற்கு அதன்மேல்வைத்துச் சொல்லினர். எள்ளுவாரைப் புல்லெனக் கூட்டுக.

பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல்

(ப•ரை.) பகை-(தம்) பகைவர், நட்பாங்காலம் - நட்பினராய் நடக்குங் காலம், வருங்கால் - வந்தால், முகப்-(தாமும்)முகத்தால், நட்டு(அவரோடு) நட்புச்செய்து, அகம் - மனத்தால், நட்பு - நட்பை, ஒரீஇ-நீங்கிவிடல்-(பின் அதுவும்) விடக்கவர் எ-று,

(வி•ரை.) அக்காலமாவது, தம்மாலும் பகையென்று வெளிப்பட நீக்கக்கூடாதவளவு இதனாலே கூடுமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றும். [இவை இரண்டு பாட்டாலும் அந்நட்பிடத்து நடக்கும் விதம்சொல்லப்பட்டது.] ௮௰

### எண்பத்திமூன்றும்-அதிகாரம்-கூடாநட்பு
### முற்றிற்று.

# எண்பத்திநான்காம் அதிகாரம்.

# பேதைமை.

இனி அக்கட்பை எதிர்மறுத்துப் பகைமுகத்தாலேசொல்லத்தொடங்கினார், அப்பகைதான் முழுவதும் விடலாகாத குற்றமாகிய குரோதத்தாலும், காமத்தாலும் வருவதாம் அவைகளுக்கு, குரோதத்தால்வருபவைஐந்திகாரத்தாலும் காமத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும் சொல்லுதற்கு அவ்விரண்டிக்கும் அடியாகிய மயக்கத்தை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலே பேதைமை சொல்லுகின்றார்.

## அசு-ஆம்-அதி-பேதைமை. கூஅரு

அஃதாவது யாதொன்றும் அறியாமை.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

(ப-ரை.) பேதைமை யென்பது - அறியாமையென்று சொல்லப்படுவது ஒன்று-(மற்றைக் குற்றங்களெல்லாம் மிகுந்த) தொன்று. யாதெனின் (அது) யாதென்று வினவினால், ஏதங்கொண்டு-(தனக்குக்) கேடுதருமவைகளைக் கைக்கொண்டு, ஊதியம்-ஆக்கந்தருமவைகளை, போகவிடல்-கை விடுதல்-எ-று.

(க-ரை.) அறியாமை யென்பது யாதென்றால் குற்றங்களைக்கொண்டு இலாபத்தை விடுதல்-என்பதாம்.

(வி-ரை) கேடு-வறுமை, பழிபாவங்கள், ஆக்கம், செல்வம், புகழறங்கள், பேதைமை-தானே தன் னிருமைப்பயனும் கெடுத்துக்கொள்ளுதலென்பதாம்.

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(ப-ரை.) ஒருவனுக்கு பேதைமையுளெல்லாம்-பேதைமை யெல்லாவ ற்றுள்ளும், பேதைமை-மிகுந்த பேதமையாவது, கையல்ல தன்கண்-(தனக்கு ஆகாத செய்கையில், காதன்மை-ஆசையை, செயல்-செய்தல் எ-று.

(க-ரை.) அறிவில்லாமை-எல்லாவற்றுள்ளுமறிவில்லாமையாவது ஆகாதசெய்கையைச் செய்தல்-என்பதாம்.

(வி-ரை.) இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்த லென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் பேதைமைய திலக்கணம் சொல்லப்பட்டது, (உ)

காணாமை காடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(ப ரை.) நாணாமை-(நாணவேண்டுமவைகளுக்கு) நாணாமையும் நாடாமை (நாடவேண்டு மவைகளை) நாடாமையும், நாரின்மை-(யாவரிடத்தும்) முறிந்த சொற்செயலுடைமையும், யாதொன்றும்-(பேணவேண்டுமவைகளுள்) யாதொன்றையும், பேணாமை-பேணாமையும், பேதைதொழில்-மூடனது தொழில்களாம் எ-று.

(க-ரை.) நாணாமையும் நாடாமையும் ஆசையின்மையும் யாதொன்றை யும் பேணாமையும் அறிவீனனுடைய தொழில்களாம்-என்பதாம்

## அங்க் அச்-ஆம்-அதி-பேதைஸம்.

(வி-ரை.) நாணவேண்டுமவை-பழி பாவங்கள், நாடவேண்டுமவை,கருமங்களிலே விதிவிலக்குகள், முறிதல், கண்ணறுதல், பேணவேண்டுமவை, குடிப்பிறப்புக் கல்வி யொழுக்க முதலாயின, இவை பேதைக்கு எக்காளும் இயல்பாய் வருதலாலே தொழி லென்றார். (௩)

ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(ப-ரை.) ஓதி-(மனமொழி மெய்கள் அடங்குதற்கு ஏதுவாகிய நூல்களை, ஓதியும், உணர்ந்தும்-(அவ்வடக்கத்தால்வரும் பயனை அறிந்தும், பிறர்

க்கு-பிறருக்கு, உரைத்தும்-(அதனை அறியும்படி) சொல்லியும், தான்-தான், அடங்கா-(அவை) அடங்கி நடவாத, பேதையின்-மூடன்போல், பேதையார்-மூடர், இல்-(உலகில்) இல்லை எ-று.

(க-ரை.) கற்றறிந்தும் பிறர்க்குக் கற்பித்துந் தானடங்காத அறிவீனன் போலறிவீன னில்லை-என்பதாம்.

(வி-ரை.) இப்பேதைமை தனக்கு மருந்தாகிய இவைகளாலே தீராமையாலும், வேற்று மருந்தில்லாமையாலும், பேதையிற் பேதையாரில்லென்றார் [இவை இரண்டு பாட்டாலும்பேதையது தொழில் பொதுவகையால்சொல்லப்பட்டது.] இனிச் சிறப்புவகையாற் கூறுவர். (ச)

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

(ப-ரை.) பேதை-மூடனானவன், எழுமையும்-வரும் பிறவிகளி லெல்லாம், தான்-தான், புக்கு-புகுந்து, அழுந்தும்-அழுந்துதற்கிடமாகிய, அளறு-நரகத்தை, ஒருமை-இவ்வொரு பிறப்பின்கண், செயலாற்றும்-செய்துகொள்ளவல்லவனாவான் எ-று.

(க-ரை.) அறிவீனன் வரும் பிறவிகளிற் புகுந்து நரகத்தை யேறுக் கொள்வான்-என்பதாம்.

(வி-ரை.) எல்லாப் பிறப்பும் எழாய் அடங்குதல் அறியப்பட்டமையின் எழுமையு மென-மூற்றுமமை கொடுத்தார், இவ்விடத்துப் பிறப்புக்களிலும் கொடுவினை வசத்தால அந்நரகத்துன்பமே அனுபவித்து வருதலால் - எழுமையுந்தான் புக்கழுந்து மளறென்றார். நெடுங்காலம் தான் நரகத்துன்பம அனுபவித்தற்கு ஏதுவாம். கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்துள்ளே செய்து கொள்ளுதல் பிறர்க்கு அரிதாதலின் ஆற்றுமென்றார். [இதனால் அவன் மறுமைச்செயல் சொல்லப்பட்டது.] (ரு)

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.



(ப-ரை.) கையறியா-செய்யுமுறைமை யறியாத, பேதை-மூடனானவன் வினை-ஒருதொழிலை, மேற்கொளின்-மேற்கொள்ளுவானாயின், பொய்படும்-(அதுவும் புரைபடும், ஒன்றோ (அது)ஒன்றுதானோ, புனை பூணும்-(தானும்) தளை பூணும், எ-று.

(க-ரை.) மூடனொரு தொழிலை மேற்கொள்ளுவானாயி னத்தொழில் குற்றப்படுமன்றியு மவன் தளை பூணுவான்-என்பதாம்.

(வி-ரை.) புரை படுதல்-பின் ஆகாதபடி புள்ளழிதல், அதனையும்கெடுத் துத் தானுங் கெடுமென்பதாம் [இதனால் அவன் செல்வம் படைக்குமாறு சொல்லப்பட்டது.] (௮)

ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ் செல்வ முற்றக் கடை.

(ப-ரை.) பேதை-மூடனானவன், பெருஞ்செல்வம்-பெரியசெல்வத்தை உற்றக்கடை-(ஊழால்) அடைந்த விடத்து, ஏதிலார்-(தன்னோடு) ஒருசம்பந் தமு மில்லாதவர், ஆர-நிறைய, தமர்-(எல்லாச்சம்பந்தமுமுடைய)தம்மவர் பசிப்பர்-பசித்திருப்பர், எ-று.

(க-ரை.) அறிவீனன்-செல்வ மடைந்த விடத்து அயலா ரநுபவிக்கச் சுற்றத்தார் பசித்திருப்பர்-என்பதாம்.

(வி-ரை.) எல்லா நன்மைகளும் செய்து கொள்ளற்குச் சாதன மென் பதுதோன்ற பெருஞ் செல்வமென்றும், அதனைப்படைக்கும் வலிமை இல் லாமை தோன்ற, உற்றைக்கடை யென்றும், எல்லாம் பெறுதல் தோன்ற, ஆரவென்றும், உணவும் பெறுமைதோன்றப் பசிப்பரென்றும்சொல்லினர்,

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கைபொன் றுடைமை பெறின்.

(ப-ரை.) பேதை-மூடனானவன்,தன்கை-தன்கையில். ஒன்று-ஒருபொ ருளை, உடைமைபெறின்-உடைமையாகப்பெற்றானாயின், மையலொருவன்- பித்தினையுடைய ஒருவன்-களித்தற்று-(அம்மயக்கத்தின்மேலே)மதுவுண்டு- மயங்கியது போலும், எ-று.

(க-ரை.) அறிவில்லான் பொருளைப் பெற்றானாகில் வெறியினையுடைய வொருவன் மதுவுண்டு மகிழ்ந்தாற்போலும்-என்பதாம்.

(வி-ரை.) ஆல்-அசை. பெறினெனவே-அவன் ஊழாலல்லது தன்னா லே பெறுமை பெற்றும். பேதைமையும், செல்வக்களிப்பும், ஒருசேரஉடை

மையால் அவன் செய் காரியங்கள் மையலும் மதுகளிப்பும் ஒருசேர உடை யவன் செய்காரியங்கள்போலே நலைதமோறுமென்பதாம். (இவை இரண்டு பாட்டாலும் அவன் செல்வமடைந்த விடத்துப் பயன் கொள்ளும் விதம் சொல்லப்பட்டது.) (அ)

## ௮௩௮ அடி-ஆம்-அதி-புல்லறிவாண்மை.

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்,

(ப-ரை.) பிரிவின்கண்-(பின்) பிரிவுவந்தவிடத்து-(அப்பிரிவு)தருவது-(இருவருக்கும்) தருவதாகிய, பீழையொன் று-துன்பமொன்று, இல்-இல்லை (ஆதலால்) பேதையார் மூடரது, கேண்மை-(தம்முட்கொண்ட) நட்பு, பெரிதினிது-மிகவு மினிது, எ-று.

(க-ரை.) பிரிவினிடத்துத் துன்பமில்லை அறிவில்லார்நட்பு மிகவுமினிது-என்பதாம்.

(வி-ரை.) தினந்தோறும் தேய்ந்து வருதலால்துன்பந் தாராதாயிற்று புகழ்வார் போன்று பழித்தபடி [இதனால் அவனது நட்பின் குற்றம் சொல்லப்பட்டது. (கூ)

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

(ப-ரை.) சான்றோர்-பெரியோரது, குழாஅத்து சபையினிடத்து,பேதை மூடனானவன், புகல்-புகுதல், கழாஅக்கால்-கழுவாதகாலை, (அசுத்த மிதித்த காலையென்றபடி) பள்ளியுள் (இன்பந்தருஞ்)சயனத்தின்மேல், வைத்தற்று வைத்தல்போலும், எ-று.

(க-ரை.) பெரியோர் சபையி லறிவில்லான், புகுதல்கழுவாகாலைசயனத்தில்வைத்தல்போலும் - என்பதாம்.

(வி-ரை.) ஆல்-அசை. அதனால் அச்சயனமும் இழிவு செய்யப்படும் விதம்போல் இவனால் இச்சபையும் இழிவுசெய்யப்படு-மென்பதாம். (இதனால் அவன் சபையிடத்து இருக்கும் விரம் சொல்லப்பட்டது) (௰)

எண்பத்தினான்காம்-அதிகாரம்-பேதைமை.

முற்றிற்று.

எண்பத்திஐந்தாம் அதிகாரம்

# புல்லறிவாண்மை.

இனி மற்றைப் புல்லறிவாண்மை சொல்லுகின்றார். அது புல்லிய அறிவை ஆளுதற் றன்மையென விரியும்.

அஃதாவது தான் சிற்றறிவினனா யிருந்தே தன்னைப் பேரறிவனாகமதித்து உயர்ந்தோராலே சொல்லப்படும். உறுதிச்சொல்லைக்கொள்ளாமை.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு,

## அறு-ஆம்-அதி-புல்லறிவாண்மை. ௯௪௧

(ப-ரை.) இன்மையுள்-(ஒருவனுக்கு) இல்லாமை பலவுள்ளும்,இன்மை யிருந்த இல்லாமையாவது, அறிவின்மை-அறிவில்லாமை, பிறிதின்மை-மற்றைப் பொருளில்லாமையோ வெனின்,(அதனை) உலகு - உலகத்தார், இன்மையா-(அப்படிப்பட்ட) இல்லாமையாக, வையாது-கொள்ளார், எ-று.

(க-ரை.) இல்லாமையுள்ளே யில்லாமையாவது அறிவில்லாமையாய் பொருளில்லாமையை யுலகத்தா ரில்லாமையாக வெண்ணார்-என்பதாம்.

(வி-ரை.) புல்லறிவாளர் செல்வமடைந்த விடத்தும் இம்மைமறுமைப் பயனடையாமல், அதனை இன்மையுளின்மையென்றும், நல்லறிவாளர் வறுமையடைந்தவிடத்தும் அப்பயனை யிழவாமையால். அதனை இன்மையாவையாதென்றும் சொல்லினர், [அதனாற்புல்லறிவின்குற்றஞ்சொல்லப்பட்டது]

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியா து
மில்லை பெறுவான் றவம்.

(ப-ரை.) அறிவிலான்-புல்லறிவுடையவன்,நெஞ்சுவந்து-மனமகிழ்ந்து ஈதல்-(ஒருவனுக்கு ஒன்று) கொடுத்தல், கூடியதாயின் அதற்குக் காரணம் பெறுவான்-பெறுகின்றவனது. தவம்-நல்வினையே, பிறிதியாதும் வேறொன்றும், இல்லை-இல்லை, எ று.

(க-ரை ) அறிவில்லா னொருவனுக் கொன்றைக் கொடுத்தல்பெற்றுக் கொள்பவனது தவமாம்-என்பதா ம்

(வி-ரை.) புல்லறிவாளரும் ஒரோவிடத்தே மனமகிழ்ந்து கொடுத்தலால் அவரும், நல்வினை செய்வாரென்பார்க்குப்பெறுவான். வீழ்பொருள் அடைந்தவன் போல்வதல்லது, இம்மைநோக்கியாவது, மறுமைநோக்கியாவது ஈகின்று நல்லரெனச் சொல்லியபடி, இதனால் புல்லறிவாளர் தம்மிடத்து நல்லவைசெய்த லறியாமை சொல்லப்பட்டது.] (உ)

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்தலரிது.

(ப-ரை.) அறிவிலார்-புல்லறிவுடையவர், தாம்-தாமே, தங்களை, பீழிக்கும்-வருத்தும், பீழை-வருத்தமானது, செறுவார்க்கும்-வருத்துதற்கு உரிய பகைவர்க்கும், செய்தல் செய்தல், அரிது-அரிதாம், எ-று,

(க-ரை.) அறிவில்லார் தங்களை வருத்தும் வருத்தமானதுவருத்தப்படுத்தும்-பகைவர்க்குஞ் செய்தலரிது என்பதாம்

(வி-ரை.) பகைவர் தாம் அறிந்த ஒருதீங்கைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை பழிபாவ முதலான பலவும் எக்காலமும்செய்யமாட்டாமையால், அவர்க்கும் செய்த லரிதென்றார். [இதனால் அவர் தம்மிடத்துத்தீயவைசெய்தலே அறிவரென்பது சொல்லப்பட்டது,] (ங)

47

## கூஎ0 . அதி-ஆம்-அதி-புல்லறிவாண்மை.

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

(ப-ரை.) வெண்மையெனப்படுவது-புல்லறிவுடைமை யெனப்படுவது, யாதெனில்-யாதென்றால்(அது)ஒண்மையுடையம்யாம், நல்லறிவுடையோம் யாம் - என்னும் - என்று (தம்மைத்தாமே நன்கு மதிக்கும்)செருக்கு - மயக்கம், எ-று.

(க-ரை.) அறிவில்லாமையென்று சொல்லப்படுவதியாதென்றால், நல்லறிவுடையோமென்னு மயக்கமாம்-என்பதாம்.

(வி-ரை.) வெண்மை, இளமை, அது அறிவு முதிராமை, உலகத்தார் இகழ்தல் அறிந்திருந்தும் அப்படி மதித்தலால் மயக்கமென்றார். (க)

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

(ப-ரை.) (புல்லறிவாளர்) கல்லாத (தாம்)கல்லாத நூல்களையும்,மேற்

கொண்டு-(கற்றவராக) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல்-நடக்குதல், கசடறக் குற்றமற, வல்லதூஉம்-கற்றதொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும், ஐயம்-ஐயத்தை தரும் (பிறருக்கு) விளைக்கும், எ-று.

(க-ரை.) கல்லாத நூல்களைக் கற்றேமென்று சொல்லுதல் கற்றநூற்களையுஞ் சந்தேகப்படுத்தும்-என்பதாம்,

(வி-ரை.) உண்டாயினென்பது வருவிக்கப்பட்டது, ஐயம்-இவர் அந்த நூலிலே வல்லவரென்பதும், இப்படித்தா னிருக்குமோ வென்பது. (ரு)

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

(ப-ரை.) (புல்லறிவாளர்)தம்வயின்-தம்மிடத்து உண்டாகும், குற்றம்-குற்றங்களை, மறையாவழி (அறிந்து) கடியாராயின், அற்றம்-மறைக்கத்தக்க அவயவத்தை, மறைத்தலோ (ஆடையால்) மறைத்தவராகத் தம்மை நினைத்தலும், புல்லறிவு-அற்பவறிவாகும், எ-று.

(க-ரை.) அறிவில்லார் குற்றங்களைக்கடியாராயின் அதுவேயறிவில்லாமை-என்பதாம்.

(வி-ரை.) குற்றமறைத்தலாவது - அவைகளை - இல்லாமற் - போகச்செய்தல். மறைக்கப்படுமவை,பலவுள்ளும் உயர்ந்தவைகளையெல்லாம்மறையாது தாழ்ந்த வொன்றையே மறைத்து அவ்வளவிலே தம்மையும் உடைகளுடையுள்ளவராக மதித்தலும் புல்லறிவென்பதாம். [இவை மூன்றுபாட்டிலும் அவர் தம்மை வியத்தற்குற்றம் சொல்லப்பட்டது,] (சா)

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

அறு-ஆம்-அதி-புல்லறிவாண்மை. ௩௪௭

(ப-ரை) அருமறை-பெறுதற்கரிய உபதேசப்பொருளை, சோரும் (பெற்றாலும்) உட்கொள்ளாது போக்கும், அறிவிலான்-புல்லறிவாளன் (அவ்வுறுதி அறியாமையால்) தானே - தானே, தனக்கு - தனக்கு, பெருமிறை - மிகுந்தவருத்தத்தை, செய்யும்-செய்வான், எ-று.

(கரை.) இரகசியப் பொருளைப்போக்கு மறிவில்லான் தனக்குத்தானே வருத்தத்தைச் செய்வான்-என்பதாம்.

(வி-ரை.) மிகுந்த வருத்தம்-பொருத்தற் கரிய துன்பம் (எ)

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

(ப-ரை.) (புல்லறிவாளன்) ஏவவும் (தனக்கு) உறுதியானவைகளை (அறிவுடையார்) சொல்லவும், செய்கலான் செய்யான் (அதுவல்லாமல்) தான்-தானாகவும், தேறான் (இவை செய்பவையென்று) அறியான், அவ்வுயிர்-அந்த வுயிர், போமளவும் (உடம்பைவிட்டுப்) போமளவும், ஓர்நோய் (பூமிக்குப் பொறுத்தற்கரிய) ஒருநோயாம், எ-று

(க-ரை.) அறிவில்லான் பிறரேவவுந் தனக்குறுதிகளைச்செய்யான்தானாகவுந் தெளியான்-என்பதாம்.

(வி-ரை.) உயிர்தான் அறியுந்தன்மையதாயிருந்தும் வினை தேகவசத்தால் மயங்குந் தன்மையாய் வேறுபடுதலால் அவ்வுயிரென்றும் அதனினீங்கிய பொழுதே அதற்கு இரண்டின் ஒன்றுகூடுதலால், போமளவுமென்றும் மலமலை முதலானவைகளைச் சுமக்கின்றபூமிக்குப்பாவ வுடம்புபெருஞ்சுமையாய்த் துன்பஞ்செய்தலால் ஓர்நோயென்றும் சொல்லினர். (அ)

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

(ப-ரை.) (தன்னை எல்லா மறிந்தவனாக மதித்தலால்) காணாதான் (பிறரால் ஒன்றை) அறியுந்தன்மையில்லாதவனை, காட்டுவான் - அறிவிக்கப்புகுவோன், தான்காணான் (அவனாலே பழிக்கப்பட்டுத்) தான் அறியாதவனாய் முடியும், காணாதான் (இனி) அவ்வறியுந்தன்மையில்லாதவன் (தான்கொண்டது விடாமையால்) தான் கண்டவாறு தான் அறிந்தவிதத்தால், கண்டானாம் (அதனை) அறிந்தவனாய் முடியும், எ-று

(க-ரை.) ஒன்று மறியாதவனைக் காட்டுவான் தானறிவில்லாதவனாவான்-என்பதாம்.

(வி-ரை.) புல்லறிவாளனுக்கு நல்லறிவை வருவித்தல் ஒருவழியாலும் பொருந்துவதன் றென்பதாம். (கூ)

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப்படும்.

க௰௨. அகூ - ஆம் - அதி இகல்.

(ப-ரை.) உலகத்தார்-உயர்ந்தோர் பலராலும், உண்டென்பது - உண்

டெனப்படுகிற பொருளை, இல்லென்பான்-(தன் புல்லறிவால்) இல்லையெ ன்று சொல்லுவோன், (மனிதனென் றுநினைக்கப்பட்டான்) வையத்து-பூமி யிலே, அலகையா-(காணப்படுகிற) ஒரு பேயென்று. வைக்கப்படும்-நினை க்கப்படுவான், எ-று.

(க-ரை ) பெரியோருண்டென்பதையில்லையென்பவன்பேயென்றெண் ணப்படுவான்-என்பதாம்.

(வி ரை.) கடவுளும், மறுபிறப்பும்-இருவினைப்பயனும், முதலாக அவர் உண் டெனப்படுமவை பலவாயினும்சாதி யொருமைபற்றிஉண்டென்பதெ ன்றும், பேயுக் இல்லை யென்பவனும் தானேவேண்டியவை சொல்லால்ஒத் தலும், வடிவால் ஒவ்வாமையும் உடைமையால் தன்னுடம்பைமறைத்துமக்க ளுடம்பிலே தோன்றுதல் வல்லவகையென்றும்சொல்லினர் [இவைநான்கு பாட்டாலும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமையினதுகுற்றம் சொல்லப்பட் டது.]

எண்பத்தைந்தாம்-அதிகாரம்-புல்லறிவாண்மை,

முற்றிற்று.

---

## எண்பத்தாறும் அதிகாரம்.

# இகல்.

இனி அவைகளால் வரும் குரோத நாமங்களுள் அரசர்க்குக்குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அவனுல் வருமவைகளைச்சொல்லத்தொடங்கிமுத லிலே இகல் சொல்லுகின்றார்,

அஃதாவது: இருவர் தம்முள்ளே போர்செய்து வலிமை தொலைதற்கு ஏதுவாகிய மாறுபாடாம்,

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(வி-ரை ) எல்லாவுயிர்க்கும் சகலவுயிர்களுக்கும், பகலென்னும்(பிறவு யிரோடு), கூடாமையென்னும், பண்பின்மைதீயகுணத்தை, பாரிக்கும்-வள ர்க்கும், நோய்-குற்றமாவது, இகல்-மாறுபாடாம். என்ப-என்று நூலோர் சொல்லுவர். எ று.

(க-ரை ) எல்லாவுயிர்க்குந் தீயகுணத்தை வளர்க்குங்குற்றமாவதுமாறு பாடாம்-என்பதாம்.

(வி-ரை.) மக்களையும் விலங்குகளோடு ஒப்பாக்குவதென்பது தோன்றி எல்லாவுயிர்க்குமென்றும்,கூடாத தீக்குணத்தைதருகின்றதுவினைத்தலால்,பக வென்றும் பண்பின்மை யென்றும் சொல்லினர். [இதனால் மாறுபாட்டத குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

## அசு-ஆம்-அதி-இகல். கூஎகூ

பகல்கருதிப் பற்ற செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை

(ப-ரை.) பகல்-(தம்மோடு)கூடாமையை,கருதி-நினைத்து, பற்ற-வெறுப்பனவைகளை, செயினும்-(ஒருவன்)செய்தானாயினும்,இகல் கருதி-(அவனோடு) மாறுபடுதலைக் குறித்து. இன்னா துன்பந்தருமவைகளை, செய்யாமை - (தாம் அவனுக்குச்) செய்யாமை, தலை உயர்ந்தது, எ-று.

(க-ரை.) ஒருவன் வெறுப்பானவற்றைச் செய்தானாயினும்துன்பந்தருமவைகளைச் செய்யாமை தலைமை-என்பதாம்.

(வி-ரை.) துன்பந் தருமவைகளைச் செய்யில் பகைமைவளரத்தாம்தாழ்ந்து வருதலாலும் ஒழியில் அவ்வெறுப்பனவைகள் நய்ந்துபோகத் தாம் ஓங்கி வருதலாலும், செய்யாமை தலை யென்றார். (௰)

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்

(ப-ரை.) (ஒருவன்) இகலென்னும்-மாறுபாடெனப் படுகின்ற,எவ்வம்-துன்பத்தைச் செய்யும், நோய்-நோயை, நீக்கின்-(தன்மனத்திலிருந்து நீக்குவானாயின் (அந்நீக்குதல், தவலில்லா-(எக்காலும்)அழிவில்லாமைக்குஏதுவாகிய,தாவில்-கெடாதவிளக்கம்-புகழை,தரும்(அவனுக்குக்)கொடுக்கும் எ-று,

(க-ரை.) ஒருவன் மாறுபாட்டை நீக்குவானாயினது புகழைத்தரும்என்பதாம்.

(வி-ரை.) யாவரும் நட்பாதலால் எல்லாச் செல்வமும்பெற்றுக்கொடை முதலான காரணங்களால் புகழ்பெறு மென்பதாம். (௨)

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்,

(ப-ரை) இகலென்னும்-மாறுபாடெனப்படுகின்ற, துன்பத்துள்-துன்பங்கள் பலவினும், துன்பம்-மிகுந்த துன்பம், கெடின்(ஒருவனுக்கு)இல்லையாயின், (அவ்வில்லாமை)இன்பத்துள்-இன்பங்கள்-பலவினும்,இன்பம்-மிகுந்த வின்பத்தை, பயக்கும்-(அவனுக்குக்)கொடுக்கும், எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு மாறுபாடாகிய துன்பம் நீங்குமாயினது மிகுந்த வின்பத்தைத்தரும்-என்பதாம்.

(வி-ரை.) துன்பத்துட்டுன்பம்-மாறுபாடுடையோன் பலரோடும்போர் செய்து வலிமை தொலைதலால் யாவர்க்கும் மெளியனா யிருப்பது அதனை

விரைவிலே தருதலால், இகலென்னு மெய்யமென்றார், இன்பத் துளின்பம் மாறுபாடில்லோன் யாவரு நட்பாகலால் எல்லாப்பயனும் பெற்றிருப்பது.

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

௮௫௫ ௮௬-ஆம்-அதி-இகல்.

(ப-ரை.) இகல் மாறுபாடு. (தம்மனத்துத்தோன்றியவிடத்து) எதிர்சாய்ந்தொழுகவல்லாரை - அதனை ஏற்றுக் கொள்ளாமல் சாய்ந்து-நடக்கவல்லவரை, மிகலூக்கும்-வெல்ல நினைக்கும், தன்மையவர் தன்மையையுடையவர், யாரே-யாவர், எ-று.

(க-ரை.) மாறுபாட்டை நீக்கும் வல்லவரை வெல்ல நினைப்பவர்யார்-என்பதாம்.

(வி-ரை.) மாறுபாட்டை நீக்கி நடத்தல் வேந்தருக்கு எவ்விதத்தாலும் அரிதாகலால் வல்லாரை யென்றும் அவர் யாவர்க்கும் நட்பாகலால், அ

மைவெல்ல கினைப்பவர் யாவருமில்லை யென்றுஞ் சொல்லினார். [இவையிரண்டு பாட்டாலும் மாறுபாடு தவர்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது] (ரு)

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(ப-ரை.) இகலின் - பிறரோடு மாறுபடுதலிலே, மிகல்-மிகுதல், இனிதென்பவன் - எனக்கு இனிதென்று செய்பவனது, வாழ்க்கை-உயிர்வாழ்க்கை, தவலும் - பிழைப்படுதலு நணித்துசிறிது பொழுதிலுண்டாம், கெடலும்-முழுதுங் கெடுதலும், நணித்து-சிறிது பொழுதிலுண்டாம், கெடலும் முழுதுங்கெடுதலும் நணித்து-சிறிது பொழுதிலுண்டாம் எ-று.

(க-ரை.) மாறுபடுதலை யினிதென்பவன் வாழ்க்கையானது வழுவுதலுங்கெடுதலு முண்டாம் என்பதாம்.

(வி-ரை.) மிகுதல்-மேலுமேலு மெழும்பல் இனிதென்பது தான்வெல்லுதல், குறித்தல், பிழைப்படுதல், வறுமையாலே துன்பப்படுதல், முழுதுங் கெடுதல், இறத்தல், பொருட்கேடும், உயிர்க்கேடும் அப்பொழுதே உண்டாகு-மென்பதாம். (சு)

மிகன்மேவன் மெய்ப்பொருள் காணாரிகன்மேவ
லின்னா வறிவி னவர்.

(ப-ரை.) இகன்மேவல்-மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய, இன்னா-துன்பஞ்செய்கின்ற, அறிவினவர்-அறிவையுடையவர், மிகன்மேவ-வெற்றிபொருந்துதலையுடைய, மெய்ப்பொருள் நீதிநூற்பொருளை, காணார் - அறியமாட்டார். எ-று.

(க-ரை.) மாறுபாட்டாற் றுன்பஞ்செய்யு மறிவினையுடையவர் நீதிநூற்பொருளை யறியார்-என்பதாம்.

(வி-ரை.) இன்னாவறிவு தமக்கும் பிறர்க்குந்தீங்கை உண்டாக்கும் அறிவு வெற்றிவழி நின்றார்க்கு உண்டாவது காணப்படும் பிரயோசனத்தையுடையதாதலால் மெய்ந்நூலெனப்பட்டது மாறுபாட்டினாலே அறிவுகலங்குதலால் காணாரென்றார் [இவை இரண்டு பாட்டாலும் மாறுபட்டவர்க்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.) (எ)

அசு - ஆம் - அதி - இகல். கூஎரு

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை

மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(ப-ரை.) இகலிற்கு - தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றிய விடத்து, எதிர்சாய்தல் - அதற்கு உதிரிதலை யொழிதல், ஆக்கம் - ஒருவனுக்கு ஆக்கமாம், அதனை - அம்மாறுபாட்டினை, மிகல் - மிகுதலை, ஊக்கின் - மேற்கொள்ளுவானாயின், கேடு - கேடும், ஊக்குமாம் - தன்னிடத்து வருதலைமேற்கொள்ளும்,

(க-ரை.) மாறுபாட்டிற் கெதிர்சாய்தலே செல்வம் அதைமேற்கொள்ளிற் கேடாம்-என்பதாம்.

(வி-ரை.) எதிர்தல் ஏற்றுக்கொள்ளுதல் சாய்ந்தபொழுதே வருதலால் சாய்தலாக்கமென்றார்.

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(ப-ரை.) ஒருவன் ஆக்கம் - வருங்கால் - தன்னிடத்து ஆக்கம்வரும் போது காரணம் உண்டாயினும் இகல்-மாறுபாட்டை, காணான்-நினையான் கேடுதரற்கு - தனக்குக் கேடுசெய்துகொள்ளுமிடத்து - காரணமில்லாதிருந்தும் அதனை-அதனிடத்தே, மிகல்-மிகுதலை காணும் நினைப்பான் என்று

(க-ரை.) ஒருவன் செல்வம்வரும்போது மாறுபாட்டைக் காணான், கேடுவரும்போ ததனை நினைப்பான்-என்பதாம்.

(வி-ரை.) மாறுபாட்டால் வருங்கேடு பிறரால் அன்றென்பது தோன்ற ற்கென்றார், ஆக்கக் கேடுகட்கு முன் மாறுபடாமையும் படுதலும் உண்டாமென்பதாம், (௯)

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

(ப-ரை.) இகலான்-மாறுபாடொன்றினாலே, இன்னாதவெல்லாம்-துன்பஞ் செய்பவையெல்லாம், ஆம்-உண்டாகும், நகலான்-நட்பொன்றினாலே நன்னயமென்னும்-நல்லநீதியென்னும், செருக்கு-பெருஞ்செல்வம், ஆம்-உண்டாகும், என்று

(க-ரை.) மாறுபாட்டாற்றுன்பமெல்லாமுண்டாம், நட்பால் செல்வமுண்டாம்-என்பதாம்.

(வி-ரை.) இன்னாதன-வறுமைபழிபாவங்கள் முதலானவை நகல், மகிழ்தல் அதுவும் செருக்கென்பது தன்றன் காரணங்களுக்காயின, நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாகவுபசரித்தார். [இவைமூன்று பாட்டாலும் அவ்விருமையும் சொல்லப்பட்டன. (௰)

எண்பத்தாறும்-அதிகாரம்-இகல்.
முற்றிற்று

---

# எண்பத்தேழாம் அதிகாரம்.
# பகைமாட்சி.



அஃதாவது: அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையால் பகையை மாட்சிமைப்படுத்தல். அரசர்க்கு எவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால், மேலே பொதுவகையால் விலக்கப்பட்ட இல்லை இவ்விடத்தே சிறப்புவகையால் விதிக்கின்றாராகலால், இது அதன்பின் வைக்கப்பட்டது

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார் மேன் மேக பகை.

(ப-ரை.) வலியார்க்கு - தம்மின் வலியவர்க்கு, மாறேற்றல் - பகையாயெதிர்தலை, ஓம்புக-ஒழியக்கடவர், மெலியார்மேல் - மற்றை மெலியவர்க்கு பகை-பகையாகுதலை, ஓம்பா-ஒழியாமல்-மேக-விரும்பக்கடவர், எ-று.

(க-ரை) வலியவர்க்கெதிர்தலை நீங்கக்கடவர் மெலியவர்க்குப் பகையாதலை விரும்பக்கடவர்-என்பதாம்,

(வி-ரை.) வலியாரென்ற விடத்துத் துணைவலியும் அடங்கலால், மெலியாரென்ற விடத்துத் துணைவலி யில்லாமையுங் கொள்ளப்படும். அத்துணைதான் படைபொருள் முதலாகிய வேற்றுமைத்துணையும், கல்வறிவுடைமை நீதிவழியொழுகல் முதலாகிய ஒற்றுமைத் துணையுமென விரண்டாம், அவ்விரண்டு மில்லாரை வெல்லார்க்கு வலிமை தொலையாமையான் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. [சிங்கநோக்காகிய இதனுள் பகைமாட்சி பொதுவகையாலே சொல்லப்பட்டது. (க)

அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(ப-ரை.) ஒருவன் அன்பிலன் - தன் சுற்றத்தார்மேல் அன்பிலன், ஆன்ற துணையிலன் - அதுவேயன்றி வலிய துணையிலன்; தான் றுவ்வான். அதன்மேல் தான் வலியிலன் அப்படிப் பட்டவன், ஏதிலான் - தன்மேல் வந்த பகைவனது, துப்பு - வலிமையை, என்பரியும் - எப்படி தொலைப்பான் எ-று.

(க-ரை.) அன்பும் துணையும் வலிமையு மில்லாதவன் - உகவன துவலி மையை யெப்படி நீக்குவான்-என்பதாம்.

(வி-ரை.) சுற்றமும் முன் சொல்லப்ப ட்ட இருவகைத் துணையும் தன் வலியும் இலனாகலால் தகன்மேலே செல்வார்க்கு வலிவள்ர்வ தல்லாமற் றொலையா தென்பதாம் (௬.)

அஞ்ச மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

## அஎ-ஆம்-அதி-பகைமாட்சி. ௩எஎ

(ப-ரை.) (ஒருவன்) அஞ்சும்-(அஞ்ச வேண்டாதவைகளுக்கு) அஞ்சுவான், அறியான் - (அறியவேண்டு மவைகளை அறியான், அமைவிலன்-(பிறரோடு) நீ பொருத்தமிலன், ஈகலான்-(இவைகளின்மேலும் யாவரிடத்தும்) உலோபகுண.முடையவன்-(இப்படிப்பட்டவன்)கைக்கு பகைவர்க்கு,தஞ்சமெளியன் - மிகவெளியனாவான், எ-று.

(க-ரை) அஞ்சுபவனு மறியாதவனு நட்பில்லாதவனு முலோபனுமானவன் பகைவர்க் கெளியவனாவான்-என்பதாம்.

(வி-ரை.) தஞ்சமெளிய னென்பவை-ஒருபொருளைக் குறிக்குவந்த பலசொல் இந்நான்கு குற்றமுடையான் பகையில்லாமலும் அழிவு மாகலால் தஞ்சமெளிய னென்றார். ௩

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(ப-ரை.) (ஒருவன்) வெகுளிகோபத்தி னின்றும், நீங்கான் - நீங்காதவன், நிறையிலன்-(அதுவேயன்றிதா) னிறையுடையனல்லன்-(அவன்மேலேசெல்லுதல்) எஞ்ஞான்றும் -எக்காளும், யாங்கணும்-எவ்விடத்தும்,யார்க்கும் - யாவருக்கும், எளிது - எளிமை, எ-று.

(க-ரை.) கோபத்தையு நிறையில்லாமையு முடையவன் பகைவர்க் கெளியவனாவான் - என்பதாம்.

(வி-ரை.) நிறை மறைபிற ரறியாமை இவன்கோபகுண முடையவனாகலாலும், இரகசியத்தை வெளிப்படுத்தலாலும் இவன்மேலே போக்குச்

செல்வார்க்குக் காலமும் இடமும் வலியும் அறிந்து சொல்லுதல் வேண்டுவ தில்லை யாயிற்று. அ

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(ப-ரை.) (ஒருவன்) வழிநோக்கான் - நீதிநூலைக் கல்லான், வாய்ப்பன செய்யான்-(அது) விதித்த தொழில்களைச் செய்யான், பழிநோக்கான்-(தனக்கு வரும்) பழியைப்பாரான், பண்பிலன் - குண முடைய னல்லன்-(அவன் பகைமை) பற்றார்க்கு - பகைவர்க்கு, இனிது-இன்பம், எ-று.

(க-ரை.) நீதிநூல் கல்லாதவன் விதித்தன செய்யாதவன் பழிநோக்காதவன், குணமில்லாதவன், பகைவர்க் கெளியனாவான்-என்பதாம்.

(வி-ரை.) பழையோ ராதியாக வழங்கி வருதலால் வழியென்றும் தப்பாது, பிரயோசனப் படுதலால் வாய்ப்பனவென்றும், இக்குற்றங்க ளுடையவன்தானே அழிதலால் பற்றார்க்கினி தென்றும் சொல்லினார். இ

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

48

௩௭அ அஎ-ஆம்-அதி-பகைமாட்சி.

(ப-ரை.) காணாச்சினத்தான் - (தன்னையும் பிறரையும் அறியாமைக்கு ஏதுவாகிய கோபத்தை யுடையவன் (யாவன்) கழிபெருங் காமத்தான் - மேன்மேலும் வளராநின்ற மிகுந்த காமத்தை யுடையவன்-(யாவன்)பேணாமை-(அவரது) பகைமை, பேணப்படும் - விரும்பிக் கொள்ளப்படும், எ-று.

(க-ரை.) கோபத்தையும் காமத்தையு முடையவன் பகைவர்க் கெளியவன் - என்பதாம்.

(ப-ரை.) முன் சொல்லப் பட்டவனுக்கு யாவரும் பகையாகலாலும், பின் சொல்லப் பட்டவனுக்குக் காரியம் தோன்றாமையாலும்தாமே அழிவரென்பதுபற்றி பேணாமை பேணப்படு மென்றார். ௬

கொடுத்தும் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

(ப-ரை.) அடுத்திருந்து - தொழிலைத் தொடங்கியிருந்து, மாணாத-(அத

ற்கு) எற்காதவைகளை, செய்வான் - செய்பவனது, பகை - பகைமையை, கொடுத்தும் - பொருள்-(அழியக்) கொடுத்தாயினும், மன்ற - நிச்சயமாக, கொளல்வேண்டும் - கொள்ளுதல்வேண்டும், எ-று.

(க-ரை.) எலாதவற்றைச் செய்பவன் பகைமையைப் பொருள் கொடுத் தல் கொள்ளல் வேண்டும் - என்பதாம்.

(வி-ரை.) எற்காதவை மெலியவனு யிருந்து தணிதலும், வலியவனுயி ருந்து தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனுலே சிலபொருள் அழி யினும் பின்னே பல பொருள்களைப் பெறுதற்குச் சந்தேகம்இல்லாமையால் கொடுத்தல் கொளல் வேண்டுமென்றவென்றூர். [இவை ஆறு பாட்டாலும் அது சிறப்புவகையாலே சொல்லப்பட்டது] எ

குணனிலனுய்க் குற்றம் பலவாயின் மாற்ருர்க்
கினனிலனு மேமாப் புடைத்து.

(ப-ரை.) (ஒருவன்) குணனிலனுய் - குணமொன்று மிலனுய், குற்றம் பலவாயின் (உடைய குற்றம் பலவாகிய விடத்து, இன்னிலனும் (அவன்) துணையில்லாதவனுகும் (அவ்விலனுகுகையே) மாற்ருர்க்கு (அவன்) பகைவர் க்கு, எமாப்புடைத்து - துணையாகுகையை புடைத்து, எ-று.

(க-ரை.) குணமில்லாதவனுய்ப் பலகுற்ற முடைடவனுயில், துணையில் லாதவனுவான் அவன் பகைவர்க் கெளியன்-என்பதாம்.

(வி-ரை.) குணம்-இறைமாட்சியுள்ளே சொல்லப்பட்டவை. குற்றம்- இவ் வதிகாரத்துள்ளே சொல்லப் பட்டவையும், மற்றும் இப்படி பட்டவை யும் ஆம். துணை - சுற்ற நட்புப்பொருள் படை முதலானவை பகைவர்க் கும் இவ்வழியால் உண்டாகும் பயன் தானே உண்டாமாகலால், எமாப் புடைத் தென்ருர். அ

## அஅ-ஆம்-அதி-பகைத்திறந் தெரிதல். ௬எ௬

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(ப-ரை.) அறிவிலா (நீதியை) அறிதலில்லாத, அச்சும் - அஞ்சுகுன்ற, பகைவர்-பகைவரை, பெறின்-பெற்றல், செறுவார்க்கு(அவரை)வெல்வார் க்கு, சேண்-உயர்வுள்ள, இன்பம் - இன்பங்கள், இகவா - நீங்கா, எ-று.

(க-ரை) நீதியை யறியாத பகைவரைப் பெற்றால் வெல்பவர்க் கின்பம்-என்பதாம்.

(வி-ரை.) உபாயமறிதலும் அறிந்தால் செய்துமுடிக்குந் திடமும், இல்லாதவரே பகைவராதல் கூடாமையால், பெறினென்றும் அவரை அறிந்து மேற்சென்ற பொழுதே, பகையில்லாமையும்செல்வமும் ஒருசேர அடைதலாலே, சேணுடையின்ப மிகவாவென்றும் சொல்லினர். க

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மெல்லானை யெல்லா தொளி,

(ப-ரை.) கல்லான்-(நீதிநூல்களைக்)கல்லாதவனோடு,வெகுளும்-பகைத்தலால்வரும், சிறுபொருள் - எளியபொருளை, ஒல்லானை-அடையாதவனை, எஞ்ஞான்றும் - எந்நாளும்; ஒளி - புகழ் ஒல்லாது - அடையாது, எ று

(க-ரை.) கல்லாதவனுடன் பகைத்தலால் வரும்பொருளை யடையாதவனைப் புகழடையாது - என்பதாம்.

(வி-ரை. சிறுபொருள் முயற்சி சிறிதாகிய பொருள், நீதியறியாதவனை வெல்லுதல் எளிதா யிருக்கவும் அது மாட்டாதவனை வெற்றியால் வரும்புகழ் கூடாதென்பதாம். ஆகவே இச்சிறிய முயற்சியாலே பெரியபய னடைகவென்றபடியாயிற்று [இவை மூன்றுபாட்டாலும் அதனாலாகிய பயன்சொல்லப்பட்டது.] ௧0

எண்பத்தேழாம்-அதிகாரம்-பகைமாட்சி,
மு ற் றி ற் று.

---

## எண்பத்தெட்டாம் அதிகாரம்.

# பகைத்திறந் தெரிதல்.

அஃதாவது, மாட்சிமைப்படாத பகையை ஆக்குதற் குற்றமும், முன்னாய் நின்ற பகையுள் கட்பார்க்குந் தன்மையதும், அயலாக்குந் தன்மையதும் அவைகளிலே செய்வதும், மற்றைக் களையுந் தன்மையதும், அதனிடத்தே செய்வனவும், களையும் பருவமும், களை யாமற்போனால் படிமுக்கமும் என்று இவ்விதங்களை ஆராய்தல். இவையெல்லாம் மாட்சிமைப்படாத பகையின வாகலால். இது பகைமாட்சியின் பின்வைக்கப் பட்டது.

 அ௧-ஆம்-பகைத்திறந் தெரிதல்.

பகையென்னும் பண்பி லதனை யொ
னகையேயும் வேண்டற்பாற் றவருன்று.

(ப-ரை.) ஒருவன்-ஒருவன், பகையென்னும்-பகை யென்று சொல்லப் படும். பண்பிலதனை -தீமை புண்டாக்குவதனை, நகையெயும்-விளையாட்டிட த்தே யாயினும் வேண்டாற் பாற்றன்று - விரும்புதற் றன்மையை புடைய தன்று-(நீதிநூல்) எ-று.

(க-ரை.) ஒருவன் பகையாகிய தீமைக் குணங்களை விளையாட்டிலும் விரும்பாதிருக்கக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) மாட்சிமைப்படாத பகையை ஆக்கிக்கொள்ளுதல் எவ்விதத் தாலும் தீமையே தருதலால் பண்பிலதென்றும், அதனை விளையாட்டிடத்து வேண்டினும் கோபமே விளைத்து மெய்யாமாகலால் நகையேயு மென்றும், வேண்டாமை பழமையோர் துணிவென்றற்கு நீதிநூல் மேல்வைத்தும் சொல்லினர். [நீதிநூல் வருவிக்கப்பட்டது] க

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(ப-ரை.) (ஒருவன்) வில்லோர்-வில்லே ராகவுடைய, உழவர் - உழவ ரோடு, பகைகொளினும் -பகைகொண்டாலும், சொல்லேர்-சொல்லே ரா கவுடைய, உழவர் - உழவரோடு, பகை-பகையை, கொள்ளற்க-கொள்ளா தொழியக் கடவன், எ-று.

(க-ரை.) வீரர் பகையைக் கொண்டாலு மந்திரிகள் பகையைக் கொள் ளாதிருக்கக் கடவன், சொல்லேருழவர் மந்திரிகள - என்பதாம்.

(வி-ரை.) சொல் ஆகுபெயராய் நீதிநூலின்மேல் நின்றது. வீரம் ஆ லோசனை என்கிற ஆற்றல்களுள் வீரமேயுடையவரோடு பகைகொண்டால் கேவேருவது நிச்சயமென்று வந்தாலும் தனக்கேயாம். மற்றைஆலோசனை புடையவரோடானல் தன் வமிசத்தோர்க்கும் தப்பாது வருதலால், அது

கொன்னினும் இது கொள்ளற்க வென்றார். கொளினும் என்கிற உம்மையா ல் வில்லேருழவர் பகையும் ஆகாமை பெறப்படும். இரண்டு முடையவரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டா வாயிற்று. ௨

எழுத்தவரினு மேழை தமியனுய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(ப-ரை.) தமியனும்-(தான்) தனியனு யிருந்துகொண்டு, பல்லார்- பல ரோடும், பகைகொள்பவன் - பகையைக்கொள்வோன், எழுத்த வரினும்- பித்தங் கொண்டவரினும், எழை - அறிவிலன், எ-று,

(க-ரை.) தனித்திருந்து பலர் பகையைக் கொள்பவன் பித்தரினு மறி வில்லான் - என்பதாம்.

## அ௭-ஆம்-அதி-பகைத்திறந்தெரிதல். ௯அக

(வி-ரை.) தனிமை சுற்ற நட்புப்படை முதலானவை இல்லாமை மயக் கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும் பித்தங்கொண்டவர். அதனுலேதீங் கடையாமையால், தீங்கடைதலு முடைய இவனை அவரினு மேழையென் றார். தீங்காவது-துணையுள்ள விடத்தும் வெல்லுதல் சந்தேகமா யிருக்க,அத் துனை யில்லாமலும் பலரோடும்பகைகொண்டு அவரால் வேவேறுபோர்செ ய்யிடத்தும் அழிந்தே விடுதல் [இவை மூன்று பாட்டாலும் பகை கொள்ளு தற் குற்றம் பொதுவினும் சிறப்பினும் சொல்லப்பட்டது ] ௩

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு

(ப-ரை.) பகை-பகையை,நட்பாக்கொண்டொழுகும் வேண்டியபோது வேறுபடுத்தித் தனக்கு) நட்பாகச செய்துகொண்டு நடக்கும்,பண்புடையா ளன்-இயல்பை யுடைய அரசனது, தகைமைக்கண்-பெருமையுள்ளே, உல கு-உலகம், தங்கிற்று-தங்கியது, எ-று

(க-ரை.) பகையை நட்பாகக்கொண்டு நடக்கு மரசன் பெருமைக்குள் ளே புலகந் தங்கியது-என்பதாம்

(வி-ரை.) வேறு படுத்தல்-பகை மிலமி னிக்குதல், ஒழுகல்-நிதிவழிநட த்தல். பெருமை-பொருள்படைஎன்கிற விருவகை ஆற்றல்,அதன்வழியதா

தற்கு என்றும் வேறுபாடில்லாமையால் அத்துணிவு பற்றித் தங்கிற்றென்றார்.

> தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
> னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(ப-ரை.) தன்றுணை-தனக்குடதவுந்துணையோவெனில், இன்று-இல்லை பகை (கலிவுசெய்யும்) பகையோவெனில், இரண்டு-இரண்டு, இப்படி இருக்கின்றபோது) தானொருவன்-ஒருவனாகிய தான், அவற்றின் அப்பகைஇரண்டனுள்-ஒன்று (பொருந்தியதாகிய) ஒன்றை, இன்றுணையா (அப்போதைக்கு) இனிய துணையாக, கொள்க (செய்து) கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) தனக்குதவுந் துணையில்லை வருத்தும் பகை யிரண்டு-இவ்விரண்டிற் பொருந்திய தொன்றைக் கொள்ளக்கடவன்-என்பதாம்.

(ப-ரை.) பொருந்தியதாவதுமற்றதை வெல்லுதற்கு ஏற்றது. அப்பொழுது-அவ்வெல்லும்பொழுது, வேறுபாடில்லாமல் செய்துகொள்கவென்றற்கு இன்றுணையாக வென்றார். ஆயிரண்டும்-அசை, [இவை இரண்டு பாட்டாலும் நட்பாக்கற் றன்மையது சொல்லபட்டது.]

> தேறினுந் தேறா விடினு மழிவின்கண்
> டேறான் பகாஅன் விடல்.

## கூ அசு அஅ-ஆம்-அதி பகைத்திறந் தெரிதல்.

(ப-ரை.) (பகைவன்) தேறினும் (முன்) தெளிந்தானாயினும், தேறாவிடினும்-தெளிந்திலனாயினும், அழிவின்கண் (தனக்குப் புறத்தொரு தொழிலால்-தாழ்வுவந்த விடத்து, தேறான்-கூடானாகியும், பகாஅன்-நீங்கானாகியும், விடல் (அவ்வே) விட்டுவைக்கக்கடவன், எ-று,

(க-ரை.) பகைவன் தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினுந் தாழ்விடத்துக் கூடானாகியு நீங்கானாகியு மிருக்கக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) முன் தெளிந்தானாயினும் அப்போது கூடாதொழிக வென்றது உள்ளாய் நின்று கெடுத்தலை நோக்கி, தெளிந்திலனாயினும் அப்போது நீங்

கா தொழிக வென்றது அவ்வழுவிற்குத் துணையாத ஞெக்கி. [இதனால்அய லார்க்குந் தன்மையது சொல்லப்பட்டது,]

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(ப-ரை) நொந்தது-நொந்ததனை அறியார்க்கு (தாமாக) அறியாதநட்பி னர்க்கு நோவற்க (தன்) ஞோவுசொல்லாதிருக்கக்கடவன், மென்மை-வலி யில்லாமையை, பகைவரகத்து அதைப் பார்த்திருக்கும்) பகைவரிடத்து மேவற்க-மேலிட்டுக் கொள்ளாதிருக்கக்கடவன், எ-று,

(கரை.) நொந்ததை யறியார்க்குத் தன்ஞோவைச் சொல்லாதிருக் கக்க டவன், வலியில்லாமையைப் பகைவரிடத்து மேலிட்டுக்கொள்ளாதிருக்கக் கடவன் என்பதாம்,

(வி-ரை.) பகைவரிடத்தே செய்யலாகாதுசொல்ல வந்தவர் நட்பின ரிடத்தே செய்ய லாகாததும் உடன் சொல்லினர் (இதனால் அவ்விருவகை யிடத்தும் செய்வது சொல்லப்பட்டது.)

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு,

(ப-ரை.) வகையறிந்து (தான் தொழில் செய்யும்) வகையை அறிந், தற்செய்து (அது முடித்தற்கு ஏற்பத்) தன்னைப் பெருக்கி தற்காப்ப (மறதி அடையாமல்) தன்னைக்காக்கவே,பகைவர்கண்(தன்)பகைவரிடத்து,பட்ட- உண்டாகிய, செருக்கு-களிப்பு, மாயும்-கெடும், எ-று.

(க-ரை.) தொழில் வகையறிந்து தன்னைக்காக்கப் பகைவர் செருக்கும் கெடும்-என்பதாம்.

(வி-ரை.) வகை வலியவனும் தான் நேரே போர் செய்விதமும் மெலிய வனும் வனவிலே போர்விலக்கும் விதமும் முதலானவை பெருக்கல்-பொரு ள் படைகளாலே பெருகச்செய்தல், களிப்பு இவ்வழியால்வெல்வோமென் றெண்ணி மகிழ்ந்திருத்தல். இவ்வுறுகுதல் அறிந்து தாமே அடங்குவ ரென் பதாம்,

[இதனால் களைபுந் தன்மை யதனிடத்துச் செய்வன சொல்லப்பட்டன)

## அசு-ஆம்-அதி உட்பகை. உ அரு.

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(ப-ரை.) முண் மரம் (களையவேண்டுவதாகிய) முள்ளுமரத்தை, இளை தாக-இளையதாகிய நிலையிலே, கொல்க-களையக்கடவர் (அல்லாமல்) காழ்த் தவிடத்து-முதிர்ந்த நிலையில் களையத்தொடங்கினல்களையுநர்-களைபவரது, கை-கையை, கொல்லும் (அதுதானே) களையும், எ-று,

(க-ரை.) முள்ளாகிய மரத்தை விளைமையிற் களையக்கடவர். அது முதிர்ந்தாற் களைபவர் கையைக் களையும்-என்பதாம்.

(வி-ரை.) களையப் படுவதாகிய தம்பகையை அதுமெலிதாகிய காலத் தேகளைக. அப்படி செய்யாமல் வலிதாகிய காலத்திலே களையத் தொடங்கினல், தம்மை அப்பகை தானே களையுமென்பதுதோன்ற நின்றமையால் இது பிறிது மொழிதலணி. (இதனுற் களையும் பருவம் சொல்லப்பட்டது.)

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(ப-ரை.) செயிர்ப்பவர் (தம்மோடு) பகைப்பவரது, செம்மல்-தருக்கை (கெடுக்கலாயிருக்க) சிதைக்கலாதார் (இகழ்ச்சியால்) கெடுக்காத வரசர், உயிர்ப்ப (பின்) மூச்சுவிடு மாத்திரத்திற்கும், மன்ற-நிச்சயமாக, உளரல்லர் இருக்கின்றவ ரல்லர், எ-று .

(க-ரை.) பகைப்பவர் செருக்கைக் கெடுக்காதவ ரிறப்பர்-என்பதாம்.

(வி-ரை.) அவர் வலியவராய்த் தம்மைக் களைதல் நிச்சயமாகலால், இறந்தாரே யாவரென்பதாம். (இதனுல் களையா வழிப்படும் இழுக்குஞ்சொல்லப்பட்டது.) க0

எண்பத்தேட்டாம்-அதிகாரம்-பகைத்திறந் தேரிதல்
முற்றிற்று

---

எண்பத்தொன்பதாம் அதிகாரம்.

# உட்பகை.

அஃதாவது, புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்து, அது வெல்லுமளவும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும் களையப்படுவதிலே சேர்ந்ததாகலால், பகைத்திறம் தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

நிழனீரு மின்னாத வின்னாதமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

(ப-ரை.) (ஒருவனுக்கு) நிழனீரும் (அனுபவிக்கப் படுவனவாகிய) நிழல் நீரும், இன்னாத-முன் இன்பஞ் (செய்வனவாயினும் பின்) னோய்செய்பு

## ௫௱௩ அக-ஆம்-அதி-உட்பகை.

மவை, இன்னா-இனியன வல்லவாம் (அதுபோல்) தமர் நீரும்(தழுவவேண்டுவனவாகிய) தம்மவ ரியல்புகளும், இன்னாசெயின் முன் இன்பஞ் செய்வனவாயினும்பின் றுன்பஞ் செய்புமவை,இன்னாவாம்-இனியனவல்லவாம் எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு நிழலு நீரு நோய்செய்பு மதுபோலத் தம்மினத்தா ரியல்புகளுந் துன்பஞ்செய்யும்-என்பதாம்.

(வி-ரை.) நோய்-பெருங்கால்பெருவயிறுமுதலானவை தமரென்றதனால், உட்பகை யாதற்குரிய ஞாதிகளெனவறிக, இன்னாசெயல் முன் வெளிப்படாதிருந்து துணைபெற்றவழி கெடுத்தல். க

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(க-ரை.) வாள்போல்-வாள்போல (வெட்டுவோமென்று வெளிப்பட்டு நிற்கும்) பகைவரை-சத்துருக்களை, அஞ்சற்க-அஞ்சாதிருக்கக் கடவர்(அப்படியல்லாமல் (கேள்போல் உறவினர்போல (மறைந்துநிற்கும்) பகைவர்-பகைவரது, தொடர்பு-நட்பை, அஞ்சுக-அஞ்சக்கடவர், எ-று.

(க-ரை.) வெட்டுவோ மென்னும் பகைவர்க் கஞ்சாதிருக்கக் கடவர் உறவர் போலிருக்கும் பகைவர்க் கஞ்சக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) முன்னே அறிந்து காக்கப் படுதலால், அஞ்சற்க வென்றும் அப்படி அறியவும் காக்கவும் கூடாமையால்கெடுதல் நிச்சயமென்பதுபற்றி அஞ்சுக வென்றும் சொல்லினர் பின்செய்யும் பகையனும் கொடிதாகலாலும், காக்குங்காலம் அதுவாகவாலும், அஞ்சப்படுவது முன்செய்த அவர் கட்பாயிற்று (இவை இரண்டு பாட்டாலும் உட்பகை யாகாதென்பது சொல்லப்பட்டது.) உ

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(ப-ரை.) உட்பகை-உட்பகை யாயினோரை, அஞ்சி-பயந்து, தற்காக்க தன்னைக் காத்துக்கொண்டு, கடக்கக்கடவர் அப்படிகடவாதபோது உலைவிடத்து தனக்கு ஓர் தளர்ச்சி வந்தவிடத்து மட்பகையின் குயவன் மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல்,மாணதப்பாமல், தெறும்அவர்கெடுப்பர் எ-று

(க-ரை) உட்பகைக் கஞ்சித்தன்னைக் காக்கக்கடவர்காவாவிடிற்பகைவர் கெடுப்பார்-என்பதாம்.

(வி-ரை.) காத்தல் அவரணியாமலும் அவருக்குடம்படாமலும், பரிசரித்தல் பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலால் கெடுதல்சிப்பா தென்பதாம். ௩

மனமாறு வுட்பகை தோன்றி னினமாறு
வேதம் பலவுந் தரும்.

## அ௯-ஆம் அதி உட்பகை. ௧அ௫

(ப-ரை.) மனமாறு-(புறத்திருந்தியது போன்று) அகத்திருந்தாத, உட்பகை - உள்ளுட்பகை, தோன்றின்-(அரசனுக்கு) உண்டாமாயின், குற்றம் பலவும், தரும்-(அவனுக்குத்) தரும், எ-று.

(க-ரை.)அரசனுக்குட்பகையுண்டாயின்பலகுற்றமுந்தரும்-என்பதாம்

(வி-ரை.) அவை சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும் அதனால் அவர் வேறுபட்ட விடத்தே தான் சேருமையும், பின் அவைகளால் வினைவனவும் ஆம். ௪

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா

னேதம் பலவுந் தரும்.

(ப-ரை.) உறன்முறையான் - (புறத்தில்) உறவுமுறைத்தன்மையோடு கூடிய, உட்படை-உட்பகையானது, தோன்றின் (அரசனுக்கு) உண்டாயின் (அது) இறன்முறையான்-இறத்தல் முறைமையோடு கூடிய, ஏதம் பலவும் - குற்றம் பலவற்றையும், தரும்-(அரசனுக்குக்) கொடுக்கும், எ-று.

(க-ரை.) உறவின் முறை யுட்பகை யரசனுக்குத் தோன்றில் அது பலகு ற்றத்தையுந் தரும் - என்பதாம்.

(வி-ரை.) அவை புறப்பகைக்குத் துணையாய் நின்றே அது தோன்றாமல், கொல்லுகைமுதலாகிய வஞ்சனை செய்தலும், மந்திரிகள் முதலாகிய அங்கங்களைத் தேய்த்தலும், முதலானவை. ௫

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

(ப-ரை.) ஒன்றாமை-பகைமை, ஒன்றியார்கண்-(தனக்கு) உள்ளாயினாரிடத்து, படின்-உண்டாகுமாயின், பொன்றாமை-இறவாமை, ஒன்றல்-(அரசனுக்குக்) கூடுதல், எஞ்ஞான்றும் - எக்காலும், அரிது-அருமை, எ-று.

(க-ரை.) தனக் குள்ளாயினாரிடத் துப் பகையுண்டாயி னரசனுக் கிறத்தலைத்தரும் என்பதாம்.

(வி-ரை.) பொருள் படைமுதலாகிய உறுப்புக்களாலே பெரியனாகிய காலத்து மென்றற்கு-எஞ்ஞான்று மென்றார். [இவை நான்குபாட்டாலும் அதனால் தனக்குவரும்-தீங்கு சொல்லப்பட்டது.] ௬

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

(ப-ரை.) செப்பின் - செப்பினது, புணர்ச்சிபோல் - புணர்ச்சிபோல, கூடினும்-(புறத்தே வேற்றுமை தெரியாமற்) கூடினாராயினும், உட்பகை - உள்ளிடத்துப்பகை, உற்ற - உண்டாகிய, குடி - குடியிலுள்ளார், கூடாரே (அகத்தே தம்முட்) கூடார், எ-று

49

௯.௮௭ அகக-ஆம்-அதி-உட்பகை.

(க-ரை.) உள்ளிற் பகைபொருந்திய குடியிலுள்ளார் செப்பின் மூடி போற் கூடினாராயினு மனவொற்றுமையிற் கூடார்-என்பதாம்.

(வி-ரை.) செப்பின் புணர்ச்சி செப்புமேன் மூடியோடு புணர்ந்த புண ர்ச்சி, அவர் உட்பகையால் மனம் வேறுபட்டமையால், புறப்பகை பெற்ற விடத்தே வேறுவேறுவ ரென்பதாம். எ,

அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

(ப-ரை.) (முன்வளர்ந்து வந்ததாயினும்) உட்பகையுற்றகுடி-உட்பகை யுண்டாகிய குடியானது, அரம்பொருத - அரத்தினலே தேய்க்கப்பட்ட பொன்போல-இரும்புபோல, பொருது-(அதனலே) தேய்க்கப்பட்டு,உரம்-வலிமை, தேயும்-தேய்ந்துபோம், எ-று.

(க-ரை) உட்பகை பொருந்திய குடியானது அரத்தினலே தேய்க்கப் பட்ட விரும்புபோலக் கெடும்-என்பதாம்.

(வி-ரை.) காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்லமெல்லப் பரி சயித்தலால், வலிமை தேய்ந்துவிடு மென்பதாம். [இவை இரண்டு பாட்டா லும் அவன்குடிக்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.] அ

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(ப-ரை.) உட்பகை-(அரசானது) உட்பகை-(அவன்பெருமையைநோ க்க) எட்பகதன்ன-எள்ளின் பிளவை யொத்த, சிறுமைத்தேயாயினும்-சிறு மையுடையதே யாயினும், கேடு-(அப்பெருமை யெல்லாம்அழியவருர்)கேடு உள்ளதாம்-(அது) ளகத்தாம், எ-று.

(க-ரை,) உட்பகை யெட்பிளப்பிற் கொப்பான சிறிதாயினுங் கேடுண் டாம்-என்பதாம்.

(வி-ரை.) மிகவும் பெரிய கேட்டுக்கு எல்லை வருமளவும் மிகவுஞ்சிறிய உட்பகை உள்ளே அடங்கியிருந்து வந்தால் வெளிப்பட்டு நிற்கு மென்ப தாம். [இதனலது சிறிதென்று இகழப்படா தென்பது சொல்லப்பட்டது]

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

(ப-ரை.) உடம்பா டிலாதவர்-மனம்பொருத்த மில்லாதவரோடு, வாழ் க்கை-(ஒருவன்) கூடிவாழும் வாழ்வு, குடங்கருள்-ஒரு குடிசையி னுள்ளே, பாம்போடு - நாகப்பாம்போடு உடனுறைந்தற்று - கூடி வாழ்ந்தாற்போலா ம், எ-று.

(க-ரை.) மனவொற்றுமை யில்லாருடன் கூடிவாழும் வாழ்க்கையான து ஒரு குடிசையுள்ளே பாம்புடன் கூடிவாழ்தல் போலாம்-என்பதாம்.

(வி-ரை.) இடச்சிறுமையாலும் பழக்கத்தாலும் பாம்பினாலே கடிக்கப் படுதல் நிச்சயமாம். ஆகவே அவ்வுவமையால் அவனுயிர்க்குமுடிவு வருதல் நிசசயமென்பது பெற்றும். (இதனாலே கண்ணோட்டஞ் செய்யாதவரைக் கடியக்கடவனென்பது சொல்லப்பட்டது.) ௩0

எண்பத்தோன்பதாம்-அதிகாரம்-உட்பகை
முற்றிற்று

---

# தொண்ணூறாம் அதிகாரம்.
# பெரியாரைப் பிழையாமை.

அஃதாவது பெரியாரயினாரை அவமதித்து நடவாமை இரட்டுறமொழிதலாலே பெரியாரென்பது வலிமையினாலே பெரியராகிய வேந்தர்மேலும் தவத்தினாலே பெரியராகி முனிவர்மேலும் நின்றது. மேற்சொல்லாமல் குறைந்து நின்றதாகலால் இது குரோதத்தால் வருமவைகளது முடிவில் வைக்கப்பட்டது.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை

(ப-ரை.) ஆற்றுவார்-எடுத்துக்கொள்ளப்பட்டவை யாவும் - (முடிக்க வல்லாருடைய) ஆற்றல்-வல்லமைகளை, இகழாமை-அவமதியாமை, போற்றுவார்-(தம்மிடத்துத் தீங்குவாராமற்) காப்பவனுடைய, போற்றலுளெல்லாம்-காவல்களுக்குளெல்லாம், தலை-மிகுந்தது, எ-று.

(க-ரை.) வல்லவருடைய வல்லமைகளை யிகழாமையே காவல்களெல்லாவற்றுள்ளுந் தலை-என்பதாம்.

(வி-ரை.) ஆற்றலென்பது-பெருமை அறிவு மூயற்சிஎன்கிற மூன்றின் மேலும் நின்றது. இகழ்ந்தவிடத்தே தம்மைக், களைய வல்லாரென்பதுதோன்ற ஆற்றுவாரென்றும், அரண்படை, பொருணட்பு முதலாகிய மற்றைக்

காவல்கள் அவரால் அழிபுமாகலால் அவ்விடிழாமையை தலைமையான காவலென்றும் சொல்லினர். (இதனுலேபொதுவகையாலன்றிவ்விருவகைப்பெரியோர்க்கும் பிழைசெய்யாமையது சிறப்புச் சொல்லப்பட்டது) க

பெரியாரைப் பேணுது தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

(ப-ரை.) (வேந்தர்) பெரியாரை-(வலிமைகளாலே) பெரியாயினரை, பேணுது-நன்குமதியாமல்-(அவமதித்து) ஒழுகின்-நடப்பாராயின்-(அந்நடக்கையானது) பெரியாரால்-அப்பெரியரால், பேராவிடும்பை-எக்காலும்) நீங்காத துன்பங்களை, தரும்-(அவருக்குக் கொடுக்கும்) எ-று.

# ௬அஅ௯ம்-ஆம்-அதி-பெரியாரைப்பிழையாமை.

(க-ரை) பெரியோரை யவமதித்து நடந்தா லக்கடத்தைத்தீங்கைத்தரும் என்பதாம்.

(வி-ரை.) அத்துன்பங்களாவன இருமையிலும் ஓயாமல் வருகிற மூலகைத் துன்பங்களுமாம். அவையெல்லாம் தாமேசெய்துகொள்ளுகின்றவையென்பது தோன்ற ஒழுக்கத்தை வினைமுதலாகியும், பெரியாரைக் கருவியாக்கியும் சொல்லினர். (பொதுவகையால் அவர்க்குப் பிழைசெயற்குற்றம் இதனுற் சொல்லப்பட்டது.) இனிச் சிறிப்புவகையாற் சொல்லுவர், உ

கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னுற்று பவர்க ணிழுக்கு.

(ப-ரை.) அடல்வேண்டின் (வேன்றுவேந்தரைக் கொல்லுதல்வேண்டியவிடத்து, ஆற்றுபவர்கண்-(அதனை அப்பொழுதே) செய்யவல்ல வேந்தரிடத்து, இழுக்கு-பிழையை, கெடல்வேண்டின்-(தான்) கெடுதல் வேண்டினுயின், கேளாது-(நீதிநூலிலே சொல்லப்பட்டதைக்) கேளாமல், செய்க-(ஒருவன்) செய்யக்கடவன், எ-று.

(க-ரை) தான்கெட விரும்பினுல் வேற்றரசரை வெல்லும் வேந்தரிடத்துப் பிழைசெய்யக்கடவன்-என்பதாம்,

(வி-ரை.) நீதிநூல் அச்செயலாகாதென்று சொல்லுதலாலே - கேளா

கூற்றத்தைக் கையால் விளித்தற்று லாற்றுவார்க்
காற்றுதா ரின்னு செயல்.

(பஃரை.) ஆற்றுவார்க்கு-மூவகையாற்றலு முடையவர்க்கு, ஆற்றுதார்-அவ்வாற்றலில்லாதவர், இன்னு-இன்னுதவைகளே, செயல்-(முற்பட்டுச்)செய்தல், கூற்றத்தை-(தானேயும்வருந் தன்மையனுகிய) கூற்றுவனே,கையால் (அதற்குமுன்னே) கைகாட்டி, விளித்தற்று-அழைத்தாலொக்கும், எ-று.

(க-ரை.) வல்லமை புடையவர்க்கு வல்லமையில்லாதார் துன்பஞ்செய்தல் இயமனைக் கையாலழைத்தல்போலாம் என்பதாம்.

(வி-ரை.) ஆல்-அசை. கையாலழைத்தல் இகழ்ச்சிக்குறிப்பு,தாமேயும் உயிர்முதலானவைகளைக் கொள்ளுதற் குரியவரை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக் கொள்வாருக்கு மரணம் திடமாகவும் சமீபமாகவும் வருமென்பது சொல்லியபடி. (இவை இரண்டு பாட்டாலும் வேந்தர்க்குப் பிழைசெய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.) ச

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

(பஃரை.) வெந்துப்பின்-வெவ்விதாகிய வலிமையையுடைய,வேந்து-வேந்தனுல், செறப்பட்டவர்-கோபிக்கப்பட்ட அரசர், யாண்டுச்சென்று-(அவனைத்தப்பி) எங்கேபோய்-(உளராவார்) யாண்டும்-எவ்விடத்தும், உளராகார்-உயிர் வாழ்வாராகார்,



(க-ரை.) வல்லவரசனுற் கோபிக்கப்பட்டவரசர் எவ்விடத்துச்சென்று முயிர்வாழார்-என்பதாம்

(வி-ரை.) வெவ்விய வலியுடைய அரசனுதலாலே அவனது நிலம்விட்டுப்போனவர்க்கு இடம் கொடுப்பாரில்லை,உளரானுல் இவர் இனி ஆகாரென்பதுநோக்கி அவனேடு கட்புக்கொள்ளுதற்பொருட்டும் தாமேவந்து அடைந்த அவருடைமையை அபகரித்தற் பொருட்டும் கொல்லுவர் அன்றெனின் உடனே அழிவரென்பன நோக்கி-யாண்டுச் சென்றியாண்டு முளராகாரென்றூர். [இதனுல் குற்றமுடையார் அருமையுடைய அரண்சேர்ந்து முய்யாரென்பது சொல்லப்பட்டது.] ரு

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(ப-ரை) காட்டிடைச் சென்றொருவன்) எரியால்-(அவ்விடத்துத் தீயால், சுடப்படினும்-சுடப்பட்டாலும், உய்வு-(ஒருவழியால், உயிர்பிழைத்தல் உண்டாம்-கூடும், பெரியார்-(தவத்தாற்) பெரியார்க்கு பிழைத்தொழுகுவார்-பிழைசெய்து நடப்பவர்,உய்யார்-எவ்வழியாலும்)உயிர்பிழையார், எ-று

(க-ரை.) தீயினுற் சுடப்படினும் மொருவழியிற் பிழைப்புண்டாம்,பெரியோர்க்குப் பிழைசெய்து நடப்பவர் பிழையார்-என்பதாம்.

(வி-ரை.) தீமுன் உடம்பைப்பற்றி அதுவழியாக உயிர்மேலே செல்லுதலால் நடுவிலே உய்யவுங் கூடும். அருந்தவர் கோபம் அப்படிப்பட்டதல்லாமல் தான் நிற்பது கணமாய் அதற்குள் யாவர்க்கும் காத்தல் அரிதாகலின் அதுகூடாதாகலால் அதற்கு ஏதுவாகிய பிழைசெய்யற்கவென்பதாம்.

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னும்
தகைமாண்டதக்கார் செறின்.

(ப-ரை.) தகை-(சாபானுக்கிரகங்களுக்கு ஏதுவாகிய) பெருமையால் மாண்ட-மாட்சிமைப்பட்ட, தக்கார்-அருந்தவர், செறின்-(அரசனைக் கோபிப்பாராயின், வகை-அங்கங்களால், மாண்ட-அழகுபெற்ற,வாழ்க்கையும்-(அவ) னரசாட்சியும், வான்பொருளும்-(சம்பாதித்துவைத்த) பெரும்பொருளும், என்னும்-என்பட்டுவிடும். எ-று.

(க-ரை.) பெரியோர் கோபிப்பாராகி லரச னரசாட்சியு மவன்பொருளுமென்ன பயன்படும்-என்பதாம்.

(வி-ரை) அங்கம், அமைச்சு, நாடு, அரண், படை எனவிவை செறினென்பது அவர் கோபியாமை தோன்ற நின்றது. பின்வரு மவைகளுக்கும் இது ஒக்கும் அரசன் தன் செல்வக் களிப்பால் அருந்தவரிடத்துப்பிழை செய்வானுயின் அச்செல்வம் அவர் கோபத் தியால் ஒருகணத் துள்ளேவெந்துவிடு மென்பதாம். எ

## கூ௰ கூம்-ஆம்-அதி-பெரியாரைப் பிழையாமை.

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியோடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(ப-ரை.) குன்றன்னார் மலையையொக்கு மருந்தவர், குன்ற-கெட, மதிப்பின்-நினைப்பாராயின், நிலத்து-இந்நிலத்து, நின்றன்னார்-நிலை பெற்றார் போலுள்ளசெல்வர், குடியொடு-(தம்)குடியோடு, மாய்வர்-(அப்பொழுதே) மாய்வர், எ-று.

(க-ரை.) பெரியோர் கெடும்படி நினைப்பாராகிற் செல்வர் குடியொடு கெடுவர்-என்பதாம்.

(வி-ரை.) வெயில் மழை முதலானவைகளைப் பொறுத்தலும் அசையாமையும், உள்ளிட்ட குணங்களுடைமையால் குன்றன்னாரென்றார், நிலைபெற்றார் போலுதலாவது மிகவும் பெருஞ்செல்வ முடையோராதலால், இவர்க்கு எக்காலும் அழிவில்லை யென்று கண்டவரால் நினைக்கப்படுதல். அ

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்துகெடும்.

(ப-ரை.) ஏந்தியகொள்கையார்-(காத்தற்கருமையால்) உயர்ந்த விரதங்களை யுடையார், சீறின்-(அவர்வலிமையால்) கோபிப்பாராயின் வேந்தனும்-இந்திரனும், இடைமுரிந்து-நடுவே-(தன்பத) மிழந்து, வேந்து-அழிந்து கெடும்-கெடுவான், எ-று.

(க-ரை.) தவத்திற் பெரியோர் கோபிக்கி லிந்திரனுங் கெடுவான்-என்பதாம்.

(வி-ரை.) இந்திரபதம் பெற்ற நகுடன் பிழைசெய்து அகத்தியமுனி சாபத்தால் அதனை இழந்தானென்பதறிக. (இவை நான்கு பாட்டாலும் முனிவர்க்குப் பிழைசெய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.) கூ

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(ப-ரை.) சிறந்தமைந்த-மிகவும் அதிகமான, சீரார்-தவத்தை யுடையவர், செறின்-கோபிப்பாராயின்-(அக்கோபிக்கப்பட்டவர்) இறந்தமைந்த-மிகவும்பெரிய, சார்புடையாராயினும்-சார்பை யுடையவ ராயினும், உய்யார்-(அதுபற்றி) உய்யமாட்டார், எ-று.

(க-ரை.) தவமுடையோர் கோபிக்கிற் சார்புடையவரும் பிழையார்-என்பதாம்.

(வி-ரை.) சார்பு, அரண், படை, பொருள், நட்பு ஆம். அவையெல்லாம் கோபிப்பவரது வலிமையால் திரிபுரம்போல் அழிந்து விடுமாதலால், உய்யாரென்றார். [இதனால் அக்குற்ற முடையவர் சார்புபற்றியும், உய்யாரென்பது சொல்லப்பட்டது.] ௰

## தொண்ணூத்தொன்றும் அதிகாரம்.

# பெண்வழிச்சேறல்.



இனிக்காமத்தால் வருபவை நேரே பகையல்லவாயினும் பெருக்கஞ் சிறைத்தல் அழிவைத்தருதல் என்கிற தொழில்களாலே பகையோடு ஒத்த லால், அவைகளைப் பகைப்பகுதியின் முடிவிலே சொல்லத்தொடங்கி முத லிலே பெண்வழிச்சேறல் சொல்லுகிறார்.

அக்தாவது. தன்வழி நடத்தற்கு உரியவளாகிய மனையவள் வழியேதா ன் நடத்தல்.

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

(ப-ரை.) மனைவிழைவார்-(இன்பங் காரணமாகத்) தம்மனையாளை விரு ம்பி அவள்வழி நடப்பவர், மாண்பயன்-(தமக்கு) இனிய துணையாகிய, அற த்தை, எய்தார் அடையார், வினைவிழைவார்-பொருள் சம்பாதித்தலிலே மு யல்பவர், வேண்டாப் பொருளும் (அதற்கு விரோதமென்று) இகழும் பொ ருளும். அது-அவ்வின்பம், எ-று.

(க-ரை.) மனையவள் வழியிலே நடப்பவர் தருமத்தை யடையார்-என் பதாம்.

(வி-ரை.) அவ்வின்பம்-அகலாத தன்மையாதற்கு ஏதுவான வின்பம் அது அவளாலே பயனுகிய அறத்திலும், அவ்வறத்திற்கும் தனனதிகாரத் திற்கும் ஏதுவாகிய பொருளிலும் அவரைச்செல்ல விடாமையால், விடப்ப ர்தன்மை யென்பதாம். க

பேணுது பெண்விழைவா னுக்கம் பெரியதோர்
நாணுக நாணுத் தரும்

(ப-ரை.) பேணுது-(கன்னுண்மையை விரும்பாமல், பெண்விழைவா ன்-(மனையானது) பெண்மையை விரும்புவோனது, ஆக்கம்-செல்வம்-(இவ் வுலகத்து ஆண்பாலார்க் கெல்லாம்) பெரியதோர் நாண்-பெரிய வொருகா

ணம், ஆக உண்டாக, நாணு-நாணுதலே, தரும்-(தனக்கும்) கொடுக்கும்.

(க-ரை.) மனையவள் பெண்டன்மையை விரும்புவோன் செல்வம் வெட்கத்தைக் கொடுக்கும்-என்பதாம்.

(வி-ரை.) படைக்கும் வலிமை யிலனாகலின் அச்செல்வத்தால்கொடுத்தலும், அனுபவித்தலும் முதலாகிய பயன் கொள்வான் அவர்களால் அவ்வாண்மைச் செய்கை அவளிடத் தாயிற்றென்று ஆண்பாலர் யாவரும் நாண

அதனாலே தன்னாண்மை யில்லாமை அறிந்த பின்னே தானும் நாணுவனென்பது நோக்கி பெரியதோர் நாணாக நாணுத்தருமென்றார். [இவை இரண்டு பாட்டாலும் அவனை விழைத்தற் குற்றம் சொல்லப்பட்டது.] உ

## ௯௦௨ ௯௧-ஆம்-அதி-பெண்வழிச்சேறல்.

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

(ப-ரை.) (ஒருவன்) இல்லாள்கண்-இல்லாளிடத்து, தாழ்ந்த வியல்பின்மை தாழ்தற்கு ஏதுவாகிய அச்சம், நல்லாருள்-(அவ்வச்சமில்லாத) நல்லாரிடத்துச்-(சொல்லுங்கால்) நாணு-நாணுதலே, எஞ்ஞான்றும்-எக்காலும், தரும் (அவனுக்குக் கொடுக்கும், எ-று.

(க-ரை.) மனையவளுக்கஞ்ச மச்சமானது நாணைத்தரும்-என்பதாம்.

(வி-ரை) அவன் தனக்கு அஞ்சி நடத்தல் இயல்பாகலால் அவளுக்கு அஞ்சுதல் இயல்பில்லாமை யாயிற்று. அப்படி அஞ்சி நடத்தலால் அவனை மதிப்பார் இல்லையாம். ஆகவே எல்லாக் குற்றங்களும் விளையு மென்பது நோக்கி எஞ்ஞான்று நாணுத்தருமென்றார். ங

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(ப-ரை.) மனையாளை-(தன்) மனையாளை, அஞ்சும் - அஞ்சிநடக்கின்ற மறுமையிலாளன்-மறுமைப்பய னில்லாதவனுக்கு, வினையாண்மை-தொழிலையாளுந்தன்மை-(உண்டாகிய வழியும்) வீறெய்தலின்று (நல்லோராலே) கொண்டாடப்படாது, எ-று.

(கரை.) மனையாளுக் கஞ்சவோனது தொழில் பெருமை யடையாது

உன்பதாம்.

(வி-ரை.) இல்லறஞ் செய்தற்குரிய தன்மை இல்லாமையால், மறுமையிலானென்றும், தொழிலையாளுந் தன்மை தனது புருஷத்தன்மையில்லாத அவனால் முடிவுபோகாமையால், வீறெய்தலின் றென்று சொல்லினர்.

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

(ப-ரை.) இல்லாளை யஞ்சுவான்-(தன்)மனையாளை யஞ்சுவோன்-(தான் தேடிய பொருளேயாயினும் நல்லார்க்கு-நல்லோர்களுக்கு, நல்லசெயல் அப்பொருளாலே நல்லவைகள் செய்தற்கு, எஞ்ஞான்றும்-எக்காலும், அஞ்சும்-அஞ்சாநிற்பன், எ-று.

க-ரை. மனைவிக் கஞ்சுவோ னல்லோர்க் குதவிசெய்ய வஞ்சுவான் - என்பதாம்.

வி-ரை. மற்று-அசைநிலை. நல்லார், அருந்தவர், சான்றோர், தாய்தந்தைகள் முதலாயினோரும் விருந்தினரும் ஆம். நல்லனசெய்தல்-அவருக்கு வேண்டுமவைகளைக் கொடுத்தல். அது செய்யவேண்டு காலெல்லா மென்றற்கு எஞ்ஞான்று மென்றார். ௬

## ௬௧-ஆம்-அதி-பெண்வழிச்சேறல். ௯௰௬

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(ப-ரை.) இல்லாள் (தம்) மில்லாளுடைய,அமையார்தோள்-வேய்போலுர்தோளுக்கு, அஞ்சுபவர்-பயப்படுவோர். இமையாரின் - வீரத்தாலே சுவர்க்கமடைந்த தேவர்போல், வாழினும்-(இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும், பாடிலரே ஆண்மையிலர், எ-று.

(க-ரை.) மனையாளுக்குப்பயப்படுவோர்பெருமையடையார்-என்பதாம்.

(வி-ரை. தேவர்போல் வாழ்தலாவது, பகைத்தவீரர் தோள்களையெல்லாம் வெல்லுதலால், நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல் அதுகூடாமையால்வாழினுமென்றார். அமையார் தோளென் அஞ்சுதற் காரணத்தது எளிமைசொல்லியபடி வீரரது தோள்களை வென்றுயினும், இல்லாளதுதோள்களை அஞ்

சுவோர் அண்மையிலரென்பதாம். [இவை நான்குபாட்டாலும் அவனை அஞ்சுதற் குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

(ப-ரை.) பெண் - இல்லாளது, ஏவல்-ஏவற்றொழிலை, செய்தொழுகும் (நாணமில்லாமல்) செய்து திரிகின்றவனது, ஆண்மையின் - ஆண்டன்மையைக்காட்டிலும், நாணுடை-நாணத்தையுடைய பெண்ணே - அவள் பெண்டன்மையே, பெருமை-மேம்பாட்டை, உடைத்து உடையது எ-று.

(க-ரை.) பெண்ணேவல்செய்து நடக்கு மாண்டன்மையிலு மப்பெண்ணே பெருமையுடையது-என்பதாம்.

(வி-ரை.) நாணுடைப்பெண்ணென அதிகமாகச் சொல்லியது. அவளேவல்செய்வோனது நாணில்லாமை முடித்தற்காதலால் அது வருவிக்கப்பட்டது. ஏவல் செய்வித்துக் கொள்ளுதற் சிறப்புத்தோன்ற பெண்ணேயெனப் பிரித்தார். (௭)

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்

(ப-ரை.) (தாம் வேண்டியபடி யன்றி) நன்னுதலாள் (தம்) மனையாள் பெட்டாங்கு வேண்டியபடி, ஒழுகுபவர் - நடப்பவர், நட்டார் - (தம்மோடு) நட்புச்செய்தவரது, குறை-குறையை, முடியார் - முடிக்கமாட்டார் (அதுவல்லாமலும்) நன்று (மறுமைக்குத் துணையாகிய) அறத்தையும், ஆற்றார்-செய்யமாட்டார், எ-று.

(க-ரை.) மனைவி மனப்படி நடப்பவர் சிநேகருக் குதவார்தருமஞ்செய்யார்-என்பதாம்.

50

௯௪ ௬௨-ஆம்-அதி-வரைவின்மகளிர்.

(வி-ரை. நன்னுதலா ளென்பதனை அமையாதோ ளென்றது போற் கொள்க. அவள்தானே அறிந்து ஏவுதலும் பொருள் கொடுத்தலும் கூடாமையால் இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம். (அ)

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்

(ப-ரை.) அறவினையும்-அறச்செயலும், ஆன்றபொருளும்-அது முடித்தற்கு ஏதுவாகிய பொருட்செயலும், பிறவினையும்-அவ்விரண்டின் வேறாகிய இன்பச்செயல்களும், பெண்ஏவல் (தம்) மனையாளேவலை, செய்வார்கண்-செய்யாரிடத்து, இல்-உண்டாகா, எ-று.

(க-ரை.) மனைவிக்கேவல் செய்பவரிடத்துத் தருமச்செய்கை பொருட்செய்கை இன்பச்செய்கை யிம்மூன்றுமில்லை என்பதாம்.

(வி-ரை.) இன்பச்செயல்களுக்கு அறச்செயல் பொருட்செயல்களை முன்னே ஒழிந்தார்க்கு தலைமை அவளிடத்திருத்தலால் பின் அச்செயல்களும் இல்லையென்பது-தோன்ற-அவைகளைப் பிரித்துச்சொல்லினர். [இவை மூன்றுபாட்டாலும் அவளேவல் செய்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௬

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

(ப-ரை.) எண்சேர்ந்த (கருமம்) வாலோசனையிலே சென்ற, நெஞ்சத்து-மனத்தையும், இடன்-அதனாலாகிய செல்வத்தையும், உடையார்க்கு-உடையவர்க்கு, பெண்சேர்ந்தாம்-மனையாளைச் சேர்தலால் வினையும், பேதைமை-அறியாமை, எஞ்ஞான்றும்-எக்காலத்தும், இல்-உண்டாகாது, எ-று.

(க-ரை.) நல்ல மனமும் நல்ல செல்வமுமுடையவர்க்கு மனைவியால் வருமறியாமையில்லை-என்பதாம்.

(வி-ரை.) இல்லாமைக்காலத்து மென்றதற்கு எஞ்ஞான்று மென்றார் அப்பேதைமையாவது மேற்சொல்லிய-விழைதல். அஞ்சல், எவல்செய்தல்-

என்டற மூன்றற்குங் காரணமாகியது. [எதிர்மறை முகத்தால் அம்மூன்றும் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டது.] (௰)

தொண்ணூற்றோராம் - அதிகாரம்(- பெண்வழிச்சேறல்.
முற்றிற்று

---

## தொண்ணூற்றிரண்டாம் அதிகாரம்.

# வரைவின்மகளிர்.

அஃதாவது, தர்கலம்விஞகொலைப்பவர் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்கிறவரை யில்லாத மகளிரது இயல்பு ஆகவால்தமக்குரிய மகளிரால் வருங்குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

## கூ௨-ஆம் அதிகாரம் வரைவின்மகளிர். ௯.கூ௫

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்.

(ப-ரை.) அன்பின் விழையார் (ஒருவன்) அன்புபற்றி விரும்பாராகி பொருள்விழையும் - பொருள்பற்றி விரும்பும், ஆய்தொடியார்-மகளிர், இன்சொல் (அது கைவருமளவும் அன்புபற்றி விரும்பினராகச் சொல்லும்)இனியசொல், இழுக்கு - இன்னாமையை, தரும் (அவனுக்குத்) தரும், எ-று.

(க-ரை.) அன்பால் விரும்பாது பொருளால் விரும்பும், வேசையர்களின் சொல்லானது துன்பத்தரும் - என்பதாம்.

(வி-ரை.) ஆய்தொடி-ஆராய்ந்த வளையல். ஆய்தொடி-இன்சொல் என்றதனால் அவர்மயக்குஞ் சாதனஞ் சொல்லப்பட்டது. அச்சொல் அப்பொழுது இனிதுபோன்று பின் வறுமையை உண்டாக்கலால் அது கொள்ளலாகாதென்பதாம். (௧)

பயன் றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

(ப-ரை.) பயன்றூக்கி-(ஒருவனுக்குள்ள) பொருளை அளந்தறிந்து, பண்புரைக்கும் - (அதுகிடைக்கு மளவும்) தமதுகுணமுடைமைசொல்லும்,பண்பின் மகளிர் - குணமில்லாத மகளிரது, நயன்றூக்கி-நடக்கைவழியைஆராய்ந்தறிந்து, நள்ளா (அவரைப்) பொருந்தாமல். விடல்-விடல்-விடக்கடவர்

(க-ரை.) பொருட்பயனைக் குறித்து நயம்பேசும் வேசையர் நடக்கையறிந்து அவரை விடக்கடவர் - என்பதாம்.

(வி-ரை.) பண்புசொல்லி லல்லது அவரிடத் தில்லாமை தோன்றபண்பின் மகளிரென்றும், அதுசாதித்தரு மாதலால், நூலாலே யல்லாமல்அவர் செயலாலும் அறிந்தென்றற்கு நயன்றூக்கி யென்றும், அவ்வாறு அவரை

விடுதற்கு உபாயமென்பது தோன்ற - நன்னாவிட லென்றும், சொல்லினர்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீ இயற்று.

(ப-ரை.) பொருட்பெண்டிர் (கொப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்) பொதுமகளிரது, பொய்ம்மை - பொய்ம்மையையுடைய, முயக்கம்-தழுவுதல் (பிணமெடுப்பவர்) இருட்டறையில்-இருள்வீட்டில், ஏதில்பிணம்-முன்னறியாத பிணத்தை, தழீஇயற்று-தழுவினாற்போலும். எ-று.

(க-ரை.) வேசையர்கள் பொய்யான புணர்ச்சியானது இருள்வீட்டில யலான் பிணத்தைத் தழுவினாற்போலும்-என்பதாம்,

(வி-ரை.) பொருளுக்குத் தழுவும் பரத்தையர் கருத்தும்செயலும்ஆராயாமல் சாதியும் பருவமும் ஒவ்வாதானைக் கூடும்போது அவர்குறிப்புஉவிக்

கஉ-ஆம்-அதி-வரைவின்மகளிர்.

குப் பிணமெடுப்பவர் காணப்படாத ஓரிடத்திலே சம்பந்தமில்லாத ஒருபிணத்தை எடுக்கும்போது இவர் குறிப்போடொக்கும் எனவே அகத்தால் அருவராநின்ற பொருளை நோக்கிப் புறத்தால் தழுவுவர் அதனை ஒழியக்கடவ ரென்பதாம். [இவை மூன்று பாட்டாலும் அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது சொல்லப்பட்டது.

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்

(ப-ரை.) பொருட்பொருளார் (இன்பமாகியபொருளை இகழ்ந்து)பொருளாகிய-பொருளையே விரும்புமகளிரது, புன்னலம்-புல்லிய நலத்தை, அருட்பொருள்-அருளோடு கூடியபொருளை, ஆயும்-ஆராய்ந்து சம்பாதிக்கும் அறிவினவர் அறிவை புடையவர், தோயார்-தீண்டார், எ-று.

(க-ரை.) அருளையாராயு மறிவுடையார்வேசையரைச்சேரார் - என்பதாம்.

(வி-ரை.) அறமுதலாகிய நான்கும் பொருளெனப்படுதலால் பொருட்பொருள் அருட்பொருள் எனவிசேடித்தார். புன்மை இழிந்தார்க்கே உரித்தாதல், தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்நலம்விரோதமாகலால் தோயாரென்பதாம், (ச)

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

(ப-ரை.) மதிநலத்தின்(இயற்கையாகிய)மதிநன்மையால், மாண்டமாட்சிமைப்பட்ட, அறிவினர் (செயற்கை) யறிவையுடையவர், பொதுநலத்தார் (பொருள்) கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையையுடைய மகளிரது, புன்னலம்-புல்லியநலத்தை, தோயார்-தீண்டார், எ-று.

(க-ரை.) புத்திநலமுடைய பெரியோர் பரத்தையரைச் சேரார் - என்பதாம்.

(வி-ரை.) மதிநன்மை முற்பிறப்பிலேசெய்த நல்வினைகளால் மனத்தெளிவுடைத்தாதல், அத்தெளிவி லல்லாமல் அக்கல்வியறிவு மாட்சிமைப்படாமையால், மதிநலத்தின் மாண்டவறிவி னவரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொய்மையும், மெய்ந்நலம் பலருக்கும் பொதுவாயிருக்கையும் விளங்கித்தோன்றலால் தோயாரென்றும் சொல்லினர். (௬)

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

(ப-ரை.) தகை-ஆடல்பாடல் அழகென்பவைகளாலே, செருக்கி-களித்து, புன்னலம் (தம்) புல்லியநலத்தை, பாரிப்பார்(விலைகொடுப்பவர்க்கெல்லாம்) பரப்பு மகளிரது, தோள் தோளை. தந்நலம் (அறிவொழுக்கங்களாலெய்) தமது புகழை, பாரிப்பார்-உலகத்தே (பரப்புதற்குரிய) உயர்ந்தோர் தோயார்-தீண்டார். எ-று.



(க-ரை.) தமதுபுகழை விளக்கும் பெரியோர் வேசையர் தோளைச் சேரார்-என்பதாம்.

(வி-ரை.) ஆடல் முதலியமூன்று முடைமை அவர்க்கு மேன்பாடாகலால், தகையென்றும் தோய்ந்தால் அறிவொழுக்கங்கள் அழியுமாகலால் அவ்வறி வொழுக்கங்களாலே புகழ்பரப்புவோர் தோயாரென்றும் சொல்லினர். [இவைமூன்று பாட்டாலும் அவர் உயர்ந்தோர் தீண்டாரென்பது சொல்லப்பட்டது.] (எ)

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

(ப-ரை.) நெஞ்சின் - நெஞ்சினால், பிற - வேறுபொருள்களை, பேணி

ஆசைப்பட்டு-(அவை கொடுப்பவரை) புணர்பவர்-(அவை காரணமாகமெய் யினாலே) புணருமகளிரது, தோள் - தோள்களை, நிறைநெஞ்சமில்லவர்-நிற் கச்செய்தலினாலே-(திருந்திய நெஞ்சமில்லாதவர், தோய்வர்-சேர்வர், எ-று.

(க-ரை.) நன்மனமில்லாதவர் வேசையர் தோள்களைச் சேர்வார்-என் பதாம்.

(வி-ரை.) பொருளும் அதனால் படைக்கப் படுவனவும், விரும்புகிற நெஞ்சு அவைமேலிருத்தலால் புணர்வது அவருடம்பு மாத்திரமென்பதறிந் து அதன்வழி நடவாது நிற்குநெஞ்சை யுடையார் தோயாமையால், அதுஇல் லாதார் தோய்வரென்றார் (எ)

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(ப-ரை.) மாயமகளிர்-(உருவுசொற் செய்களால்) வஞ்சித்தலில் வல்ல மகளிரது, முயக்கு புணர்ச்சியை, ஆயும்-(அவ்வஞ்சனையை) ஆராய்ந்தறியும், அறிவினரல்லார்க்கு - அறிவுடையவ ரல்லாதவர்க்கு, அணங்கு-அணங்கு தாக்கு, என்ப-என்று (நூலோர்) சொல்வர், எ-று.

(க-ரை.) அறிவில்லார்க்கு வேசையர் புணர்ச்சியைநூலோரணங்கென் பவர்-என்பதாம்.

(வி-ரை.) அணங்கு காமவழியால் உயிர்கொள்ளுந் தெய்வமகளிர். தா க்கு, தீண்டல், இவ்வுருவகத்தால் அப்புணர்ச்சி முன்னே இனிதுபோலே தோன்றிப் பின்பு உயிர் கொள்ளுதல் பெற்றும் இது நூலோர் துணிவென் பது தோன்ற அவர்மேல்வைத்துச் சொல்லினர். (அ)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு,

(ப-ரை.) வரைவிலா-(உயர்ந்தோர் இழிந்தோ ரென்னாது விலைகொ டுப்பவர் யாவரையும்) கூடும், மாணிழையார் - மாட்சிமைப்பட்ட ஆபரணத்



தை யுடையவரது, மென்றோள் - மெல்லிய தோள்கள், புரையிலா-(அக்குற் றத்தையறியும் அறிவில்லாத, பூரியர்கள்-கீழ்மக்கள், ஆழும்-(புகுந்து) அழுந் தும், அளறு - நரகமாம். எ-று.

(க-ரை.) வேசையர் தோள்கள் கீழ்மக்களழுந்து நரகமாம்-என்பதாம்.

(வி-ரை.) சாதியாலிழிந்தாரை நீக்குதற்கு-புரையிலராப் பூரியர்களென்றும் அவராழ்தற்கேது உருவுமுதலாகிய மூன்றும்மையென்பதுந்தோன்ற - மாணிழையார் மென்றோளென்றும், அவர்க்குநரகத்தைத் தடையில்லாமல்தருமென்பது தோன்ற உருவகமாக்கியும், சொல்லினர், (௯)

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு,

(ப-ரை.) இருமனப் பெண்டிரும் - கவர்மனத்தையுடைய மகளிரும், கள்ளும் - கள்ளும், கவரும் - சூதும், திரு - திருமகளால், நீக்கப்பட்டார். விடப்பட்டவர்க்கு, தொடர்பு - நட்புக்களாம், எ-று.

(க-ரை.) வேசையரும், கள்ளும், சூதும், இலக்குமியால் விடப்பட்டவர்க்கு நட்பாம் என்பதாம.

(வி-ரை.) இருமனம் - (ஒருவனோடு) கூடுதலும், கூடாமையும், ஒருகாலத்திலே யுடையமனம், கள்ளும். சூதும், பரத்தையர்க்குச சமானமான குற்ற முடையவைகளாலே உடன் சொலலப்பட்டன. வருகின்ற அதிகார முறைமையும் இதனுலே அறிக. திருக்கப்பட்டமை நுவவடையாளங்களால அடியப்படுமென்பதாம். [இவை நான்குபாட்டாலும் அது செய்பவர் இழிஞரென்பது சொல்லப்பட்டது ] (௧0)

தொண்ணூற்றிரண்டாம் அதிகாரம் வரைவின்மகளிர்
முற்றிற்று.

---

## தொண்ணூற்றிமூன்றும் அதிகாரம்
# கள்ளுண்ணாமை.

---

அஃதாவது. இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்தலில் பரத்தையரோடு ஒப்பதாகிய கள்ளினை உண்ணாமையது சிறப்பு, எதிர்மறை முகத்தாலே சொல்லுகிறார்,

உட்கப்படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

(ப-ரை.) கட்காதல்கொண்டு - கள்ளின்மேலே ஆசைகொண்டு, ஒழுகுவார் - நடக்குமரசர், எஞ்ஞான்றும் - எக்காலும், உட்கப்படாஅர் - (பகை

வரால்) அஞ்சப்படார் (அதுவேயல்லாமல்' ஒளி (முன்பெற்றுநின்ற) ஒளியையும், இழப்பர்-இழந்துவிடுவர். எ-று.

(க-ரை.) கள்ளிலிச்சைவைக்கு மரசர் அஞ்சார் புகழையிழப்பார் என்பதாம்.

(வி-ரை.) அறிவில்லாமையால் பொருள்படை முதலியவைகளால்பெரியராகிய காலத்தும் பகைவர் அஞ்சார் தம்முன்னோராலே அடைந்தஒளியும் இகழப்படுவதால் இழப்பரென்பதாம் [இவை இரண்டு பாட்டாலும் அரசநீதி இனிது சொல்லாதென்பது இகனுல் சொல்லப்பட்டது.] (க)

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்.

(ப-ரை.) (அறிவுடையாயினோர்) கள்ளை (அவ்வறிவு கெடுதற்கு ஏதுவாகிய) கள்ளினை, உண்ணற்க - உண்ணுதிருக்கக்கடவர், உணில் - உண்ணவேண்டுவோருண்டாயின், சான்றோரான்-நல்லோரால், எண்ணப்படவேண்டாதார்-மதிக்கப்படவிரும்பாதார், உண்க-உண்ணக்கடவர். எ-று

(க-ரை) கள்ளையுண்ணுதிருக்கக்கடவர், மதிக்கத்தகாதவருண்ணக்கடவர்-என்பதாம்.

(வி-ரை.) பெறுதற்கரிய அறிவைப்பெற்றிருந்தும் கள்ளால் அழித்துக்கொள்ளுவாரை இயல்பாகவே அறிவில்லாத மிருகங்களுடனேயும், என்னோரலால் சான்றோரா லெண்ணப்பட வேண்டாதா ருண்கவென்றார். (்)

ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி

(ப-ரை.) ஈன்றாண் முகத்தேயும் (எதுசெய்தாலும்மகிழும்) தாய்முன்பாயினும், களி (கள்ளுண்டு) களித்தல், இன்னாது - துன்பஞ் செய்வதாம் (ஆதலால்) மற்றுச்சான்றோர் முகத்து - பின் (குற்றம் யாதும்பொறாத)பெரியோர் முன்பு அக்களித்தல், என் (அவர்க்கு) யாதாகும். எ று.

(க-ரை.) தாய் முன்னங் கள்ளுண்டு களித்தல் துன்பமாம், பெரியோர் முன் கள்ளுண்டு களித்த லென்ன பயனும், என்பதாம்.

(வி-ரை.) ஆல் - அசை மனமொழிமெய்கள் தம்வசப்படாமையால், காணம் அழியும் அழியவேதாய்க்கும் இன்னாதான கள் இருமையும் கெடுத்தலறிந்து அரத்தேகடியும் பெரியோர்க்கு இன்னாதாகல் சொல்லவேண்டுமோவென்பதாம்

காணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளானும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு.

(ப-ரை) கள்ளென்னும் மதுவென்று சொல்லப்படுகின்ற, பேணு (யாவரும்) இகழும், பெருங் குற்றத்தார்க்கு - மிகுந்த குற்றத்தையுடையவர்க்கு

## ௬00 கஅ-ஆம்- அதி-கள்ளுண்ணாமை.

நாணென்னு நல்லாள்-நாணமாகியநல்லவள் (அவரைப்பார்ப்பதற்கு அஞ்சி புறங்கொடுக்கும்-எதிர்முகமாகாள். எ-று.

(க-ரை.) கள்ளுண்பவர்களுக்கு நாணமில்லை-என்பதாம்.

(வி-ரை.) காணுதற்கும்அஞ்சி உலகத்தார் தூரத்தே நீங்குவார், ஆதலால் பேணுவென்றும் பின்னொருவழியிலும் நீக்கப்படாமையால், பெருங் குற்றமென்றும் இழிந்தோரிடத்து நில்லாமையால், நல்லாளென்றும் மிசால்லினர் (இவை மூன்றுபாட்டாலும் ஒளியிழத்தற் காரணம் சொல்லப்பட்டது.) (௪)

கையறி யாமை யுடைத்தே பொருள் கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

(ப-ரை.) (ஒருவன்) பொருள்கொடுத்து-விலைப்பொருளைக் கொடுத்து மெய்யறியாமை (கள்ளாலே தனக்கு) மெய்மறதியைகொளல்-கொள்ளுதல் கையறியாமை (அவன் பழவினைப்பயனாகிய) செய்வதரியாமையை, உடைத்து (தனக்குக்காரணமாக) உடைத்து, எ-று.

(க-ரை.) கட்குடித்து மெய்மறதியைக் கொள்ளுதலறிவின்மை புடையது-என்பதாம்.

(வி-ரை,) தன்னையறியாமை சொல்லவே மற்றவையாவையும் அறியாமைசொல்லவேண்டா வாயிற்று அறிவார் விலைகொடுத்து ஒன்றைக்கொள்ளுங்கால் தீயதைக் கொள்ளாமையால், மெய்யறியாமை கொளல் முன்னையறியாமையால் வந்ததென்பதாம், (௫)

துஞ்சினர் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(க-ரை.) துஞ்சினர்-உறங்கினவர், செத்தாரின்-இறந்தவரின், வேறல்லர் (வேறுயினும் அக்காலத்தே அறிவில்லாமையால்) வேறெனப்படார் (அப்படியே) கள்ளுண்பவர்-கள்ளைக் குடிப்பவர், எஞ்ஞான்றும்-எக்காலத்

தும், நஞ்சுண்பார் - (அறிவில்லாமையால்) நஞ்சுண்பவரேயாவர் (அவரின் வேறாயினும்) வேறெனப்படார், எ-று.

க-ரை, கள்ளைக் குடித்தவர் நஞ்சைக்குடித்தவர்க்கொப்பாவார் - என்பதாம்,

வி-ரை, உறங்கினவர்க்கும், கள்ளுண்பவர்க்கும், வேற்றுமை மூச்சு நிற்றல், இவை இரண்டுபாட்டாலும் அவர் அறிவிழத்தலின் குற்றம் சொல்லப்பட்டது

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

ப-ரை, கள்ளொற்றி - கள்ளைமறைந்து குடித்து கண்சாய்பவர் - அக்களிப்பால் அறிவுசோர்பவர், உள்ளூர் வாழ்பவரால் - உள்ளொற்றி



(உள்ளே நடக்கிற காரியத்தை) ஆலோசித்து - அறிந்து, எஞ்ஞான்றும் - என்றைக்கும், நகப்படுவர் - சிரிக்கப்படுவார். எ - று.

(க-ரை.) கள்ளைகுடித்தறிவுமயங்குவோர் சிரிக்கப்படுவர் என்பதாம்.

(வி-ரை.) உய்த்துணர்தல், சோர்வினாலே களிப்பினை அறிந்து அதனால் கள்ளுண்டதை அறிதல். (௭)

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(ப-ரை.) களித்தறியேனென்பது-(மறைந்துண்டு) கள்ளுண்டறியேனென்று - (உண்டபொழுது தமது ஆசாரஞ்) சொல்லுதலை, கைவிடுக - விடக்கடவர், (அவ்வுண்டபொழுதே) நெஞ்சத் தொளித்ததூஉம் - (முன் பிறர் அறிந்தால் இழுக்காமென்று) மனதில் ஒளித்த குற்றமும், ஆங்கே மிகும் - முன்னை யளவின்மிகுந்து வெளிப்படும் (ஆதலால்) எ-று.

(க-ரை.) கட்குடிக்கி னுட்பொருள் வெளிப்படு மாகையால், ஆசாரஞ் சொல்லுதலைக் கைவிடக்கடவர் என்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் அது மறைக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.] (௮)

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(ப-ரை.) களித்தானை-(கள்ளுண்டு) களித்த ஒருவனை, காரணங்காட்

த்தல் (இது ஆகாதென்று மற்றொருவன்) காரணங்காட்டித் தெளிவித்தல், நீர்க்கீழ்க் குளித்தானை - நீருள்ளே மூழ்கிய ஒருவனை, தீ-விளக்கினால், துரீஇ யற்று-(மற்றொருவன்) தேடுதலை யொக்கும். எ-று.

(க-ரை.) கட்குடித்தவனைத் தெளிவித்த தெதுபோலெனில் நீருள்ளே மூழ்கினவனை விளக்கினால் தேடுதலொக்கும் என்பதாம்.

(வி-ரை.) நீருள் விளக்குச் செல்லாமைபோல அவன் மனத்துள் காரணம் செல்லாதென்பதாம். [இதனாலவனைத் தெளிவித்தல் முடியாமை சொல்லப்பட்டது.] (க)

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(ப-ரை.) (கள்ளுண்பவனொருவன்) கள்ளுண்ணாப்போழ்தில், கள்ளை புண்ணாமற் றெளிந்திருந்தபொழுதில், களித்தானை-(கள்ளுண்டு) களித்த பிறனை, காணுங்கால்-காணும்போது, உண்டதன்சோர்வு-(தான்) உண்ட பொழுது உண்டாந்தன்சோர்வை, உள்ளான்கொல்-(அவன் சோர்வால் அதுவும் இப்படிப்பட்டதென்று) நினையான்போலும். எ-று.

(க-ரை.) கள்ளுண்பவன் தான் குடியாதபோது குடித்தவனைக்கண்டு தன் சோர்வை நினையான்போலும் - என்பதாம்.

51

**௯௩௰. கூசு ம் ஆம் - அதி - சூது.**

(வி-ரை.) சோர்வு மன மொழி மெய்கள் தன்வசப்படாமை. [கருத்தளவையால் - அதனிழுக்கத்தை ஆலோசித்து அறிந்தால் - ஒழியுமென இதனால் அது ஒழிதற்காரணம் சொல்லப்பட்டது.] (க0)

தொண்ணூற்றிமூன்றும்-அதிகாரம்-கள்ளுண்ணாமை
முற்றிற்று.

---

## தொண்ணூற்றிநான்காம் அதிகாரம்

## சூது.

அஃதாவது, இனி அக்கள்ளுண்டல்போல் அறம் பொருளின்பங்களுக்குத் தடையாகிய சூதாடலும், பிணி யனுபவித்தலும் சொல்லத் தொ

டங்கி முதலிலே சூதினது இயல்பு சொல்லுகின்றார்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(ப-ரை.) வென்றிடினும்-(தான்) வெல்லும் வலிமை யுடையனாயினும், சூதினை-சூதாடுதலை, வேண்டற்க-விரும்பாதிருக்கக்கடவன், வென்று-பொருள் பெறுவார்-(உண்டென்றால்) வென்றதூஉம் - அவ்வென்றபொருளும், தூண்டிற்பொன் - (இரையால் மறைந்த) தூண்டிலிரும்பை, மீன் விழுங்கியற்று-மீன்விழுங்கியதுபோலாம். எ-று.

(க-ரை.) வெல்ல வல்லவனாயினுஞ் சூதை விரும்பாதிருக்கக் கடவன் வென்றபொருளுந் தூண்டிலிரும்பை மீன்விழுங்கியதுபோலும் என்பதாம்.

(வி-ரை.) வெல்லுதல் நிச்சயமல்லாமையால் வென்றினுமென்றும், கருமங்கள் பலவுங் கெடுதலால்-வேண்டற்கவென்றும், சொல்லினர். வய்திய பொருள் சூதாடுவார் நீங்காமைக் கிட்டதனை யென்பதும், அதனாலே பின்துயருழத்தலும், உவமையாற் பெற்றாம். (௧)

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(ப-ரை.) ஒன்றெய்தி (அத்தூண்டி விரும்புபோன்ற) ஒன்றனை முன் பெற்று (இன்னும் பெறுவோமென்னுங்கருத்தால்) நூறிழக்கும்-நூற்றினை இழந்து வறியராகும், சூதர்க்கு - சூதாட்ட முடையவர்க்கும், நன்றெய்தி (அப்பொருளால்) அறமு மின்பமும் பெற்று, வாழ்வதோராறு - வாழ்வதொருவழி, உண்டாங்கொல்-உண்டாமோ, எ-று.

(க-ரை.) ஒருபொருள்பெற்று நூறுபொரு ளிழக்குஞ் சூதாடுவோர்க்கு நன்மைபெற்று வாழும் வழியுண்டாமோ - என்பதாம்.



(வி-ரை.) அவ்வழியால் பொருளிழந்தேவருதலால் அதனாலேபெரும் பயனும் அவர்க்கு இல்லையென்பதாம். (௨)

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(ப-ரை.) உருளாயம் - உருளுங் (கவற்றில் அகப்பட்ட) ஆகாயத்தை

ஓவாது-இடைவிடாமல், கூறின் - சொல்லிச் (சூதாடு) மாயின், பொருள்-(அரசன் சம்பாதித்த) பொருளும், ஆயம் - (அவன்) பொருள்வரும் வழியும், போஒய்-(அவனை விட்டுப்) போய், புறமே படும்-பகைவரிடத்தே தங்கும், எ - று.

(க-ரை.) அரசன் சூதாடுவானாயின் அவன் பொருளும் அப்பொருள்வரும் வழியும் பகைவரிடத்தாம்போம் - என்பதாம்.

(வி-ரை.) கவற்றினுருட்சியை அரசனுடைய முயற்சியின்மேல் ஏற்றி யும் சூதாடுதலை அது சொல்லாலாகிய காரணத்தின் மேலிட்டும் சொல்லி னார். காத்தலினும், செய்தலினும், கருத்திலனாகலால், அவை இரண்டும் பகைவரிடத்தே செல்லுமென்பதாம். (௩)

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(ப-ரை.) சிறுமைபல - (முன்சொல்லிய) துன்பங்கள் பலவும்செய்து, (தன்னை விரும்பினவர்க்குச்) செய்து, சீர் - (அவர்) புகழையும், அழிக்கும்-கெடுக்கும், சூதின்-சூதுபோல, வறுமை-வறுமையை, தருவது-கொடுக்க வல்லது, ஒன்று-வேறொன்று, இல்-இல்லை, எ - று.

(க-ரை.) துன்பங்களை யுண்டாக்கிப் புகழையுங் கெடுக்குஞ் சூதைப் போல வறுமையைக் கொடுப்பது வேறொன்று மில்லை - என்பதாம்.

(வி-ரை.) அத்துன்பங்கள் பின்னே சொல்லப்படும். நல்வினைகளை யும் நல்வினைத்திறையும் நீக்கித் தீவினைகளையும், தீவினைத்திறையும் கூட்டுதலால் சீரழிக்குமென்றார் சூதாடுவோர் வறுமைக்கு எல்லையில்லை. என்பதாம். (௪)

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

(ப-ரை.) இல்லாகியார்-(முற்காலத்திலே தாம் இருந்தும்) இல்லாதவ ராயொழிந்தவர், கவறும்-சூதினையும், கழகமும் - அதையாடுமிடத்தினை யும், கையும்-(அவ்வாடுதற்கு வேண்டிய) கைத்தொழிலினையும், தருக்கியிவ றியார்-மேற்கொண்டு கைவிடாத வேந்தர், எ - று.

(க-ரை.) சூதையுஞ் சூதாடிடத்தையுஞ் சூதாடு தொழிலையுங் கைவி டாத வெல்லும்பொருளிருந்து மில்லாதவரே என்பதாம்.

(வி-ரை.) கைத்தொழில் வெல்லும்படி பிடித்தெறிதல். மேற்கொள் ளுதலாலே பாண்டவர்தம்மரசிழந்து காட்டிலேபோய் அங்கே மறைதொழு



கினரென அனுபவங் காட்டியபடி. [இவை ஐந்துபாட்டாலும் அதனது

வறுமை யுண்டாக்கற் குற்றம் சொல்லப்பட்டது.] (௫)

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

(ப-ரை.) சூதென்னும் தனது பெயர்சொல்லல் மங்கலமல்லாமையால் சூதென்று வேறுபெயர் சொல்லப்படுகிற, முகடியால்-மூதேவியால், மூடப்பட்டார்-விழுங்கப்பட்டவர், அகடாரார்-(இம்மையிலே) வயிறு நிறையப் பெறார், அல்லலுழப்பர்-(மறுமையிலே) நரகத்துன்ப மநுபவிப்பர், எ-று.

(க-ரை-) சூதென்னு மூதேவியால் விழுங்கப்பட்டவ ரிம்மையில் வறுமையு மறுமையில் நரகமு மநுபவிப்பர் - என்பதாம்.

(வி-ரை.) செல்வங்கெடுத்து வறுமை கொடுத்தற்றொழில் வேறுபடாமையால், சூதென்னு முகடியென்றும், பற்றி நோற்புநோக்கி ஒருபொழுதும் விடாராதலால், இங்கே அகடாராரென்றும், பொய் களவு முதலாகிய பாவங்கள் சம்பாதித்தலால், அங்கே அல்ல லுழப்பரென்றும் சொல்லினர். வயிறாரமை சொல்லவே மற்றை யுடை யணி முதலாகிய புலன்களை அனுபவிக்கப் பெறாமை சொல்லவேண்டாவாயின. (௬)

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

(ப-ரை.) காலை-(அறம்பொருளின்ப முதலியவற்றைச் செய்தற்குரிய) காலம், கழகத்து-சூதாடுமிடத்து, புகின் - (அரசனுக்குக்) கழியுமாயின், (அக்கழிவு) பழகிய-தொன்றுதொட்டு வந்த, செல்வமும்-(அவன்) செல்வத்தையும், பண்பும்-நற்குணங்களையும், கெடுக்கும்-அழிக்கும், எ-று.

(க-ரை.) அரசன் சூதாடலில் காலங் கழிப்பானாயின் அவன் செல்வத்தையும் குணத்தையு மழிக்கும் என்பதாம்.

(வி-ரை.) தான் செய்துகொள்ளும் அறமுதலானவை மாத்திரமல்லாமல், முன்னோரைத் தொடங்கிவருகின்ற செல்வமும், முன்செய்த நல்வினையினாலாகிய நற்குணங்களும் இல்லாமற்போமென்பதாம். (௭)

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(ப-ரை.) சூது-சூதாட்டமானது, பொருள்கெடுத்து-(தன்னைப் பழகினவனது) பொருளைக்கெடுத்து, பொய்-பொய்யை, மேற்கொளீஇ-மேற்கொளப்பண்ணி, அருள்கெடுத்து-(மனதில் எழுகிற) அருளைக்கெடுத்து, (இவ்வழியால்) அல்லலுழப்பிக்கும் - அவனை-(இருமையினும்) துன்பமுழவிக்கும், எ-று.

(க-ரை.) சூதாட்டமானது பொருளைக் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச்செய்து இருபையைக் கெடுத்துத் துன்பத்தை விளைவிக்கும் என்பதாம்.

(வி-ரை.) பொருள் கெடுத்தல் முதலாகிய மூன்றும் சூதினுடைய தொழில்களாகவும், அவைகளுக்கு - தோற்பு வெற்றி கோபம் என்பன முறையே சாதனங்களாகவும் கொள்க. முன்னையதால் இம்மையிலும், பின்னவைகளால் மறுமையிலும் ஆம். (௮)

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(ப-ரை.) (அரசன்) ஆயம்-சூதினை, கொளின் - (தனக்கு விளையாட்டுத்தொழிலாக) விரும்புவானாயின், ஒளி-ஒளியும்; கல்வி-கல்வியும், செல்வம்-செல்வமும், ஊண்-ஊணும், உடை-உடையும், என்றைந்தும்-என்றிவ்வைந்தும், அடையாவாம்-(அவனை) சேராவாம், எ-று.

(க-ரை.) அரசன் சூதாட்டத்தை விரும்புவானெனில், கீர்த்தியுங் கல்வியுஞ் செல்வமும் ஊணுமுடையுமவனைச் சேராவாம் என்பதாம்.

(வி-ரை.) ஆயம் சூதுக்கு வருபெயர். இம்மைசெய்யுளுக்கியையப் பிறழ்ந்தது. செல்வம் அறுவகை உறுப்புக்கள். ஊணுடை யென்பனவைகளால், அனுபவிக்கப்படுவனவெல்லாம் கொள்ளப்படும். காலமுங் கருத்தும் பொருமையால் இவை உண்டாகாவென்பதாம். இவை நான்குபாட்டாலும் சிறுமை பலசெய்து அவைகளால் இருமையுங்கெடுத்தல் சொல்லப்பட்டது. (௯)

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(ப-ரை.) இழத்தொறூஉம் - (சூதாடலால் இருமைப்பயன்களையும்) இழக்குந்தோறும், காதலிக்கும்-(அதன்மேலே) ஆசைவைக்கும், சூதேபோல் அதனைப்போல், உயிர்-உயிரானது, துன்பமுழத்தொறூஉம் - (உடம்பால்) மூவகைத்துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும், காதற்று-(அதன்மேலே) ஆசையையுடைத்து, எ-று.

(க-ரை.) இருமைப்பயன்களை யிழக்குந்தோறுஞ் சூதினை யிச்சிக்குஞ் சூதன்போல் உயிரானது துன்பங்களை யனுபவிக்குந்தோறு மதன்மேலாசையுடையது என்பதாம்.

(வி-ரை.) சூது ஆகுபெயர். உயிரினது அறியாமை சொல்லுதல் கருத்தாகலின் அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு உவமானமாக்கினார். இதனெதிர்முறை முகத்தால் சூதை வெறுத்து நடப்பவனை யொக்கும் உடம்பினை வெறுத்து நடக்கின்ற உயிரெனவுங்கொள்க. இதனால் அதை விடுதற்கருமையும் விட்டவரது பெருமையும் சொல்லப்பட்டன. (௧௦)

தொண்ணூற்றுநான்காம் அதிகாரம் சூது.

முற்றிற்று.

## தொண்ணூற்றைந்தாம் அதிகாரம்

# மருந்து.

பழையவினையாலும் காரணங்களாலும் மனிதர்க்கு வாதமுதலாகிய பிணிகள்வரும். அவைகளுள் பழவினையால் வருவன அவ்வினை கழியும், போதல்லாமல், தீராமையால் அவையொழித்து மற்றைக் காரணங்களால் வருமவைகளைத் தீர்க்கும் மருந்தின் திறம் சொல்லுகின்றார். காரணங்களாவன, உணவுதொழில்களது ஒவ்வாமையாதலால், பிணிகளும் காரணங்களால் வருவனவாயின.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

(ப-ரை.) (உணவும் செயல்களும் ஒருவன் சரீர சுபாவத்துக்கு ஒத்தவளவினவன்றி) மிகினும்-(அளவின்) மிகுமாயினும், குறையினும்-குறையுமாயினும், நூலோர்-ஆயுள்வேதமுடையோரால், வளிமுதலா - வாதமுதலாக, எண்ணிய-எண்ணப்பட்ட, மூன்று-மூன்றுநோயும், நோய்-துன்பத்தை, செய்யும்-(அவனுக்குச்) செய்யும், எ-று.

(க-ரை.) உணவுந் தொழிலு மிகுந்தாலுங் குறைந்தாலும் பிணிமூன்றுந் துன்பஞ்செய்யும் என்பதாம்.

(வி-ரை.) நூலோரெண்ணியவெனவே அவர் அவைகளால் வகுத்த வாதப்பகுதி, பித்தப்பகுதி, சிலேஷ்மப்பகுதி, என்கிற பகுதிப்பாடும் பெறும். அவைகளுக்கு உணவு ஒத்தலாவது-சுவை வீரியங்களாலும், அளவாலும், பொருந்துதல், செயல்கள் ஒத்தலாவது - மனமொழிமெய்களாலே செய்யுந்தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே யொழிதல். இஃவ்

ரண்டும் இப்படியல்லாமல் மிகினும் குறையினும் அவை தன்றன்னிலை வேறில்லாமல் வருத்துமென்பதாம். [இதனால் உடம்புகளுக்கு இயல்பாகிய நோய் மூவகையென்பதும் சொல்லப்பட்டன.]

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

(ப-ரை.) (ஒருவன்) அருந்தியது (முன்)னுணப்பட்டது, அற்றது-சீரணித்தபடியை, போற்றி-(குறிகளாலே) தெரியவறிந்து, உணின்-(பின்னே) உண்பானாயின், யாக்கைக்கு-(அவ)னுடம்புக்கு, மருந்தென-அவிழ்தமென்று, வேண்டாவாம்-வேறு வேண்டுவதில்லை, எ-று.

(க-ரை.) உண்ணப்பட்டது சீரணித்ததையறிந் துண்பானாயினவனுக்கு மருந்து வேண்டாவாம் என்பதாம்.

(வி-ரை.) குறிகளாவன-உடம்பு சிறுகியிருத்தல், நோக்கம் பரிசுத்தமாயிருத்தல், கரசரணாதி கரணங்கள் தொழிற்குரியவாதல், பசிமிகுதல்,



எனவிவைமுதலாயின. பிணிகள் உடலுக்கே ஆகுதலால் - யாக்கைக்கென்றார். உணினென்பது அதனருமை தோன்ற நின்றது. (௨)

அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

(ப-ரை.) அற்றால்-(முன்னுணப்பட்டது) அற்றால், பின்னுணப்படுவதனை) அளவறிந்து-(அறு)மளவறிந்து, உண்க-(அவ்வளவினதாக) உண்ணக்கடவன், உடம்பு-(பெறுதற்கரிய விம்மனித)உடம்பை. பெற்றான்-பெற்றவன், நெடிது-நெடுங்காலம், உய்க்குமாறு (அதனைக்) கொண்டு செலுத்தும் வழி, அஃது-அதுவாம் (ஆதலால்) எ-று.

(க-ரை.) உடலைக்கொண்டவ னவனுட லிருக்கும்படி சீரணித்தவளவறிந் துண்ணக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) இம்மை மறுமை வீடுபேறுகளை அடைதற்குரியது இம்மனிதவுடம்பொன்றுமே யாதலால் உடம்புபெற்றானென்றும், அது நெடுங்காலம் நின்றவிடத்து அவை பெறுகச்செய்து கொள்ளலா மாகலால் நெடிதுய்க்குமாமென்றும் சொல்லினார். (௩)

அற்ற தறிந்து கடைபிடித்து மாறல்ல

துய்க்க துவரப் பசித்து.

(ப-ரை.) அற்றதறிந்து (முன்னுண்ணப்பட்டது) அற்றபடியே அறிந்து, துவரப்பசித்து-பின்னே மிகப்பசித்து, (உண்ணும்போது) மாறல்ல - மாறு கொள்ளாத வுணவுகளை, கடைப்பிடித்து-குறிக்கொண்டு, துய்க்க-உண்ணக்கடவன், எ-று.

(க-ரை.) சீரணித்த வளவறிந்து மாறில்லா வுணவுகளை யுண்ணக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) அற்றதறிந்தெனப் பின்னுஞ்சொல்லியது அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு, உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதம் ஆராதாகலால், அதுவும் அறல்வேண்டு மென்றற்கு-மிகப்பசித்தென்றார். மாறுகொள்ளாமையாவது - உண்பவன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும் சுவைவீரியங்களால் தம்முள்ளே மாறுகொள்ளாமையும் ஆம். அவையாவன: முறையே உணவு வாத பித்த சிலேஷ்மங்களாகிய சரீரசுபாவங்களுக்கு அடைபடாதவைகளைச் செய்வனவாலும்; * பெரும்பொழுது * சிறுபொழுது என்கிற காலவேறுபாடுகளுள் ஒன்றற்கு ஆவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல் போல்வனவும் ஆம். அவைகளைக் குறிக்

---

* பெரும்பொழுது-கார், கூதிர், முன்பனி, இளம்வேனில், முதுவேனில்.
* சிறுபொழுது-மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் எற்பாடு.



கொள்ளாது. மனம்பட்ட வழியால் உண்டால் அதனால் நோயும் மரணமும் வருதலால் கடைப்பிடித்தென்றார். (௪)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு.

(ப-ரை.) மாறுபாடில்லாத - அம்மூவகை மாறுகோளும் இல்லாத, உண்டி-உணவை, மறுத்து (தன்னுள்ளம்வேண்டியவளவே) மறுத்து(பிணிவாராதவளவில்) உண்ணின் (ஒருவன்) உண்டால், உயிர்க்கு - (அவனுயிர்க்கு, ஊறுபாடு-(பிணிகளாலே) துன்பம் விளைதல், இல்லை-(உண்டாகாது, எ-று.

(க-ரை.) நல்லுணவையுண்டாற் பிணிகளாற்றுன்பமில்லை என்பதாம்.

(வி-ரை.) துன்பமுறுவது உயிரேயாதலால் அதன்மேல் வைத்துச சொல்லினர். மாறுபாடில்லாத விடத்தும் குறைதல் நன்றென்பதாம். [இவை நான்குபாட்டாலும் உணப்படுவனவும், அவைகளினளவும், காலமும் பயனும் சொல்லப்பட்டன.] (௫)

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்.

(ப-ரை.) இழிவறிந்து-அக்குறைதலை (நல்லதென்று) அறிந்து, உண்பான்கண் (அவ்வாறே) உண்பவனிடத்து, இன்பம்போல் - இன்பத்தைப் போல், கழிபேரிரையான்கண் - மிகப்பெரிய இரையைவிழுங்குவோனிடத்து; நோய்-நோயானது, நிற்கும்-நீங்காதிருக்கும், எ-று.

(க-ரை.) குறைவாக வுண்பவனிடத் தின்பம்போல் நிறைவாக வுண்பவனிடத்துந் துன்பமிருக்கும் என்பதாம்.

(வி-ரை.) அவ்வாறேயுண்டல் - உண்ணுவாமளவிற் சிறிது குறைய வுண்டல். இன்பமாவது-வாதமுதலாகிய மூன்றும் தன்றன்னிலையில் வேறுபடாமையால் மனமொழி மெய்கள் அவன் வசப்படலும், அதனால் அறமுதலாகிய நான்கும் அடைதலுமாம். இரையை அருந்துமளவன்றி எடுத்து அதனால் வருந்தும் மிருகத்தோடொத்தலால் இரையானென்றார். (௬)

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

(ப-ரை.) தெரியான் தன் சரீரசுபாவமும் அதற்கேற்றவுணவும் காலமும்-ஆராயானாகி (வேண்டிய வுணவை வேண்டிய காலத்து) தீயளவன்றி (வயிற்றுத்) தீயளவல்லாமல், பெரிதுண்ணின் (ஒருவன்) மிகவுண்ணுவானாயின், நோய்-நோயானது, அளவின்றி-அளவில்லாமல், படும்-(அவனிடத்தே) வளரும், எ-று.

(க-ரை.) சோதித்தறியாதவனாய் மிகவுண்பானாகில் நோயவனிடத் துண்டாம் என்பதாம்.

## கூறு - ஆம் - அதி - மருந்து. ௯0௫

(வி-ரை.) இவை இரண்பொட்டாலும் அப்படி உண்ணாதவிடத்தேபடும் இழுக்குச் சொல்லப்பட்டது.

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(ப-ரை.) (மருத்துவன்) நோய்-நோயாளியிடத்து (நிகழ்கின்ற) நோயைநாடி (அதன்குறிகளால் இன்னதென்று) துணிந்து, நோய்முதல் (பின்பு) அந்நோய்வருதற் காரணத்தை, நாடி-ஆராய்ந்து, அது தணிக்கும்வாய் (பின்) அதுதீர்க்கும் உபாயத்தினை நாடிஅறிந்து வாய்ப்பசெயல் (அதனைப்) பிழைபடாமற் செய்யக்கடவன், எ-று.

(க-ரை.) வைத்தியன் வியாதியையு மதன் காரணத்தையு மதுநீங்குமுபாயத்தையு மாராய்ந்து மருத்துவஞ் செய்யக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) காரணம்-உணவு செயலென முன் சொல்லப்பட்டவை. அவ்விரண்டையும் நாடுதற்குப்பயன் நோயையும், உபாயத்தையும், ஐயமறத்துணிதல், மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலாகிய செயல்களெல்லாம் அடங்குதற்கு அது தணிக்கும் வாயென்றார். பிழைபடாமை பழையமருத்துவர் செய்துவருகின்ற முறையிலே தப்பாமை (அ)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(ப-ரை.) கற்றான் (ஆயுள்வேதத்தை) கற்றமருத்துவன் (அவ்வுபாயத்தைச் செய்யுங்கால்) உற்றானளவும்-நோயாளி யளவையும், பிணியளவும் (அவனிடத்து நிகழ்கின்ற) நோயினளவையும், காலமும், (தன்செயற்கேற்ற) காலத்தினையும், கருதி (அந்நூல்வழியால்) நோக்கி, செயல் (அவைகளோடு பொருந்தச்) செய்யக்கடவன். எ-று.

(க-ரை.) மருத்துவன் பிணியாளி யளவையும் பிணியளவையுங் காலத்தினளவையுமறிந்து பொருந்தச செய்யக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) நோயாளியளவு-சரீரசுபாவம் வேதனைகளினளவு, பிணியளவு * சாத்தியம், அசாத்தியம், யாப்பியம் என்கிற சாதிவேறுபாடும், தொடக்கநடுவீறென்னும் அதன் பருவவேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம் முன்சொல்லியது. இம்மூன்றும் தப்பாமல் நூல் வழியாலும், அறிவு மிகுதியாலும், ஆராய்ந்து செய்கவென்பதற்கு கற்றான் கருதிச செயலென்றார். [இவை இரண்டுபாட்டாலும் அவ்விழுக்கம் வந்தவிடத்து தீர்க்கும்வழி சொல்லப்பட்டது.] (கூ)

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

* சாத்தியம்-தீர்க்கத்தக்கது, அசாத்தியம்-தீர்க்கத்தகாதது. யாப்பியம்-ஒட்டத்தக்கது.

52

**௯௪௦** **கக = ஆம் = அதி = குடிமை.**

(ப-ரை.) மருந்து (பிணிக்கு) மருந்தாவது, உற்றவன் (அதனை) யுற்றவன் தீர்ப்பான் (அதனைத்) தீர்க்குமருத்துவன், மருத்து (அவனுக்குச்சாதனமாகியமருந்து) உழைசசெல்வான் (அதனைத்தப்பாமல்) செய்பவன், என்று-என்று சொல்லப்பட்ட, அப்பால்-அந்நான்கு பகுதியையுடைய, நாற்கூற்றே-நான்கி திறத்தது, எ-று.

(க-ரை.) பிணிக்கு மருந்தாவது நோயாளி வைத்தியன் மருந்துசெய்பவன் இந்நான்குமாம்-என்பதாம்.

(வி-ரை.) அவைகளுள் உற்றவன் வகை நான்காவன, பொருளுடைமை மருத்துவன் வழிநிற்றல், நோய் நிலையுரைத்தல், வன்மை-மருந்துத்துன்பம் பொறுத்தல், எனவிவை தீர்ப்பான்வகை நான்காவன நோய்பார்த்தற்கஞ்சாமை-ஆசிரியனை வழிபட்டு அடைந்த கல்வி நுண்ணறிவுடைமை, பலகாலுந்தீர்த்துவருதல் மனமொழி மெய்கள் பரிசுத்தமாதல்-எனவிவை, மருந்தின்வகை நான்காவன, பலபிணிகளும் ஏற்ற சுவைவீரியம் விளைவாற்றல்களால் மேம்படுதல் - எளிதில் பெறப்படுதல், சரீரசுபாவத்தோடு பொருந்தல் எனவிவை. இயற்றுவான்வகை நான்காவன: நோயாளியிடத்தே அன்புடைமை, மனமொழி மெய்கள் பரிசுத்தமாதல், சொல்லியபடியே செய்தற் வல்லமை, அறிவுடைமை, எனவிவை. இவையெல்லாம் கூடியவிடத்தல்லது பிணிதீராமைபால் இக்கூட்டத்தை மருந்தென்றார். [இதனுல் அவன் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாம் தொகுத்துச் சொல்லப்பட்டது.] (கo)

தொண்ணூற்றைந்தாம்-அதிகாரம்-மருந்து

முற்றிற்று.

ஆ அதிகாரம் கூரு-க்கு திருக்குறள்-கூருo

## ஒ ழி பி ய ல்.

இனி அவ்வரசியன் முதலானவைகளிலே அடங்கா தொழிந்தவை
ளினியல்பைப் பதிமூன்றதிகாரத்தினாலே சொல்லத்தொடங்கி முதலிலே
குடிமை சொல்லுகிறார்.

## தொண்ணூற்றாறும் அதிகாரம்.

# குடிமை.

அஃதாவது: உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது தன்மை, உயர்
டிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் அவசியம் வேண்டுவதாகலால் அ
சிறப்புப் பற்றி முன் வைக்கப்பட்டது.

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

௯௱௫௰௧ - ஆம் - அதி - குடிமை ௪௧௧

(ப-ரை.) செப்பமும்-செம்மையும், நாணும் - நாணமும். ஒருங்கு -ஒன்றுசேர, இற்பிறந்தார் கண்ணலது - உயர்ந்த குடியிலே பிறந்தவரிடத்தல்லாமல் (பிறரிடத்தே இயல்பாக) சுபாவமாக, இல்லை - உண்டாகா, எ-று.

(க-ரை.) செம்மையும், நாணமும், நற்குடியிற் பிறந்தவர்க்கல்லது மற்றவர்கில்லை-என்பதாம்.

(வி-ரை.) செம்மை, கருத்தும், சொல்லும், செயலும்; தம்முன்னேமாறுபடாமை, நாண்பழி பாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்கானால் ஒருவர் கற்பிக்கவேண்டாமல் தாமே உண்டாகும். பிறர்க்கானால் கற்பித்தவிடத்தும் கூடுதலில்லாவென்பதாம். (௧)

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(ப-ரை.) குடிப்பிறந்தார் உயர்ந்த குடியிலே பிறந்தவர் (தமக்குரிய) ஒழுக்கமும் - நன்னடக்கையும்; வாய்மையும் - மெய்ம்மையும், நாணும்-நாணமும் ஆகிய இம்மூன்றும் - இம்மூன்றிடத்தும், இழுக்கார் - தவறிவிழாமல் தாமாகவே வழுவார். எ-று.

(க-ரை.) உயர் குடியிற் பிறந்தவர் நன்னடக்கை, சத்தியம், வெட்கம், இம்மூன்றுந் தவறார் - என்பதாம்.

(வி-ரை.) ஒழுக்கமுதலாகிய மூன்றும் மெய்மொழி மனங்களுக்குஉரியவையாதலால், அம்முறை வைக்கப்பட்டன. இழுக்கல்-தாமறியாது வரு

தலால் இழுக்காரென்றார். (௨)

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(ப-ரை.) வாய்மை (எக்காலத்தும்) வேறுபடாத, குடிக்கு-குடியிற்பிறந்தவர்க்கு (வறியவர் சென்றவிடத்து) நகை - முகமலர்ச்சியும், ஈகை (உள்ளவை கொடுத்தலும், இன்சொல்-இன்சொற் (சொல்லுதலும்) இகழாமை இகழாமையும் - ஆகிய, நான்கும்-இந்நான்கும், வகை (உரிய) வகையாகும் என்ப - என்று (நூலோர்) சொல்லுவர், எ-று.

(க-ரை.) நற்குடியிற் பிறந்தவர்க்கு முகமலர்ச்சி கொடுத்தல் இன்சொல் இகழாமை இந்நான்கு முரித்தாம் - என்பதாம்

(வி-ரை) பொய்மை வேறுபடுதலுடைமையால், வேறுபடாமையை வாய்மையென்றும் இல்லாரை எல்லாருமிகழ்வாராதலால், இகழாமையை அவர் கூறுக்கியும் சொல்லினார். குடி ஆகுபெயர். இவை மூன்று பாட்டானும் குடிப்பிறந்தாரியல்பு சொல்லப்பட்டது. (௩)

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

சகஉ கூகூ - ஆம் - அதி - குடிமை.

(ப-ரை) அடுக்கிய (பலவாக) அடுக்கிய, கோடி-கோடியளவினதாகிய பொருளை, பெறினும் - பெற்றாலும், குடிப்பிறந்தார் - உயர்ந்த குடியிலே பிறந்தவர், குன்றுவ (தம்மொழுக்கங்) குன்றுந்தொழில்களை, செய்தலிலர் செய்யார், எ-று.

(க-ரை) உயர்குடியிற் பிறந்தவர் கோடிபொருளைப் பெற்றாலுங் குன்றுந் தொழிலைச் செய்யார்கள்-என்பதாம்.

(வி-ரை) கோடியென்பது இங்கே எண்ணப்படும் பொருண்மே நின்றது, குன்றுந்தொழில்கள் குன்றுதற்கு எதுவாகிய தொழில்கள். (௪)

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(ப-ரை.) பழங்குடி - பழைமைதொட்டு வருகிற குடியிலே பிறந்தவர், வழங்குவது (தாம்) கொடுக்கும் பொருள், உள்வீழ்ந்தக் கண்ணும் - முன்னையளவிலே சுருங்கிய விடத்தும், பண்பின் (தமது) குணமுடைமையின் தலைப்பிரிதலின்று - நீங்கார், எ-று.

(க-ரை.) நற்குடியிற் பிறந்தவர் கொடுக்கும் பொருள் சுருங்கிய விடத்

தங் குணமுடைமையிற் குறையார் - என்பதாம்.

(வி-ரை.) பழமை தொட்டுவருதல்சேர, சோழ பாண்டிய ரென்பது போல், ஆதிகாலந்தொடங்கி மேம்பட்டுவருதல் அவர்க்கு வறுமையாவது தாம்கொடுக்கும் பொருள் முன்னளவிலே சுருங்குவதாகலால் அதனையே சொல்லினர். (ரு)

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(ப-ரை.) மாசற்ற - வசையற்று வருகின்ற, குலம்பற்றி (தமது) குடிமரபினேடொத்து, வாழ்துமென்பார் - வாழக்கடவோமென்று, நினைத்து - அப்படியே, வாழ்வோர் - வறுமையுற்றவிடத்தும், சலம்பற்றி - வஞ்சனையைப்பொருந்தி, சால்பில - அமைவில்லாத தொழில்களைச செய்யார்-செய்யார், எ-று.

(க-ரை.) நற்குடிப்பிறப்பில் - வாழ்பவர் வஞ்சனைப்பொருந்தி யமைவில்லாத தொழில்களைச் செய்யார் - என்பதாம்.

(வி-ரை.) அமைவில்லாமை - தங்குடிமரபினுக்குத்தகாமையாம். [இவைமூன்று பாட்டாலும் அவர் வறுமையுற்றவிடத்தும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது சொல்லப்பட்டது.] (சு)

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(ப-ரை.) குடிப்பிறந்தார்கண் - உயர்ந்தகுடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற) குற்றம் - குற்றமானது (தான்சிறிதேயாயினும்) விசும்பின் - ஆ



காயத்தில், மதிக்கண் - சந்திரனிடத்து, மறுப்போல் - களங்கம்போல், உயர்ந்து - ஓங்கி, விளங்கும் - தோன்றும், எ-று.

(க-ரை.) உயர்குடியிற் பிறந்தவரிடத் துண்டாங்குற்றஞ் சிறிதாயினும் சந்திரனிற் களங்கம்போலோங்கி விளங்கும் - என்பதாம்.

(வி-ரை.) உயர்ந்தகுடிக்கு விசும்பும், அதிற் பிறந்தோருக்கு மதியும் அவர் குற்றத்துக்கு களங்கமும் உவமானங்கள். குடியினது உயர்ச்சியினாலும், சந்திரன்போன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலாலும், அக்குற்றமா

னது உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம். (எ)

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(ப-ரை.) நலத்தின்கண் (குல) நலமுடையனாய் வருகின்றவனிடத்தே நாரின்மை - அன்பில்லாமை, தோன்றின் - உண்டாமாயின் (உலகம்) அவனை - அம்மனிதனை, குலத்தின்கண் - அக்குலப்பிறப்பிடத்தே, ஐயப்படும் - சந்தேகப்படும், எ-று.

(க-ரை.) நலமுடையவனிடத்து அன்பில்லாமை யுண்டாயினவனைக் குலமுடையனல்லனென் றையப்பாட்டில் வைக்கப்படும் - என்பதாம்

(வி-ரை.) நலமும் நலமும் ஆகுபெயர். அன்பில்லாமையால், கொடாமை கடுஞ்சொல் முதலானவை சொல்லப்பட்டன. தோன்றினென்பது - தோன்றுமை விளக்கின்றது. நலனுடையனாய் வருதலினுடேவே இவை தோன்றலால் உள்ளது ஐயமாயிற்று இவை இரண்டுபாட்டாலும் வேறுபட்ட வழிப்படும் இழுக்கும் சொல்லப்பட்டது. (அ)

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(ப-ரை.) நிலத்திற்கிடந்தமை - நிலத்தினியல்பை, கால் (அதனிடத்தேமுளைத்த) முளையானது, காட்டும் - காண்பிக்கும் (அதுபோல) குலத்திற்பிறந்தார் வாய்ச்சொல் - நற்குலத்திற் பிறந்தவர் வாய்ச்சொல், காட்டும் (அக்குலத்தினியல்பைக் காட்டும், எ-று.

(க-ரை.) நிலத்தியல்பை முளை காட்டும், குலத்தியல்பை வாய்மொழி காட்டும் - என்பதாம்.

(வி-ரை.) கிடந்தமை - உள்ளகுணம் முளைமாத்திரத்தால் நன்மையுந் தீமையும் தெரிதலால், இலைமுதலானவை காட்டுமெனச்சொல்லாராயினர் ஆகவே குலத்திற் பிறந்தார்க்கும் செயல்முதலானவை வேண்டாவாயின, குலத்தியல் பறிதற்குச் சாதனம் சொல்லுவார்போன்று இன்சொல்சொல்ல வேண்டுமென்றபடி யாயிற்று. (க)

ருகச கூஎ - ஆம் - அதி - மானம்.

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

(ப-ரை.) (ஒருவன்) நலம்வேண்டின் (தனக்கு) நலமுடைமை வேண்டுவானாகில், நாணுடைமை - நாணமுடையவனாதல், வேண்டும் - வேண்டக்கடவன், குலம் வேண்டின் - குலமுடைமையை வேண்டுவானாயின், யார்க்கும் (வணங்கத்தக்க) யாவரிடத்தும், பணிவு - வணங்குதலை, வேண்டுக வேண்டக்கடவன், எ-று.

(க-ரை) நலத்தை விரும்பினால் நாணத்தைக் கொள்ளக்கடவன், குலத்தை விரும்பினால், வணக்கத்தைக் கொள்ளக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) நலம், புகழ், புண்ணியங்கள், அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தன்முன்னோர், தந்தை, தாய் இவரெல்லாம் அடங்கயார்க்குமென்றார் பணிவு, இருக்கையெழல். எதிர்செல்ல முதலாயின, [இவையிரண்டு பாட்டாலும் குடிமைக்கு வேண்டுவன சொல்லப்பட்டது. (௧0)

தொண்ணூற்றாறும்-அதிகாரம்-குடிமை
முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாம் அதிகாரம்.

# மானம்.

இனிக் குடிப்பிறந்தவர்க்கு உரியகுணங்கள் சொல்லத்தொடங்கி முதலில் மானம் சொல்லுகின்றார்.

அஃதாவது எக்காலும் தன்னிலையிலே தாழாமையும், ஊழால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். இது அக்குடிப்பிறப்பை அழியாமல் நிறுத்துதலாலே அச்சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(ப-ரை.) இன்றியமையா - செய்யாதவிடத்தே தாம் (அமையாத) சிறப்பினவாயினும் - சிறப்புடையவை யாயினும், குன்ற (தங்குடிப்பிறப்பானது) தாழ, வருப - வருஞ்செயல்களை, விடல் - விடக்கடவன், எ-று.

(க-ரை) மிகவுஞ் சிறப்புடையவையாயினும் தங்குடி தாழவருஞ்செயல்களை விடக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) அமையாமை - இறத்தல் குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையால் வந்தது, தாம் இறக்கவருமிடத்தே இழிதொழில்களைச் செய்தாயினும் பிழையென்னும் வடநூலின் முறைமையை மறுத்து உடம்பினது நிலையில்லாமையும், மானத்தினது நிலையுடைமையும், ஆராய்ந்து அவை செய்யலாகாதென்றபடி. (௯)

## ௬௰ - ஆம் - அதி - மானம். ௯௬௨

*சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு*
*பேராண்மை வேண்டு பவர்*

(ப-ரை.) சீரொடு - புகழுடனே, பேராண்மை - மானத்தை நிறுத்துதலை வேண்டுபவர் - விரும்புபவர், சீரினும் - புகழ்சம்பாதிக்குமிடத்தும், சீரல்ல - தங்குடிக்கு ஒவ்வாத இழிதொழில்களை, செய்யார்-செய்யார் எ-று

(க-ரை.) மானத்தை விரும்புவோர் தங்குடிக்கொவ்வாத தொழில்களைச் செய்யார் - என்பதாம்.

(வி-ரை.) எவ்விடத்தும் நிலைகுலையாத திடத்தால் உண்டாதல் பற்றி, பேராண்மை யெனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவும் செய்யாரென்பதாம் ஏ-அசைநிலை.

*பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய*
*சுருக்கத்து வேண்டு முயர்வு.*

(ப-ரை.) (குடிப்பிறந்தவர்க்கு) பெருக்கத்து - நிறைந்தசெல்வம்உண்டானவிடத்து, பணிதல் (யாதரிடத்தும்) பணிவு,வேண்டும்-வேண்டும், சிறிய - குறைந்த, சுருக்கத்து - வறுமையுண்டான விடத்து, உயர்வு - பணியாமை, வேண்டும் - வேண்டும், எ-று.

(க-ரை.) நற்குடியிற் பிறந்தவர்க்குச் செல்வத்தில் வணக்கமும், வறுமையில் வணங்காமையும் வேண்டும் - என்பதாம்.

(வி-ரை.) பணியாமை - தாழ்வுவாராமல் பழையவுயிர்ச்சியிலே நிற்றல் செல்வமுடையபோது அது உயர்ச்சிசெய்தலினாலே தாம்தாழ்தலும், வறுமையுடையபோது அதுதாழ்வு செய்தலினாலே தாம் உயர்தலும், வேண்டுமென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் தாம் தாழ்தற்கு ஏதுவானவை

களை செய்யாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௯)

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(ப-ரை.) மாந்தர் (குடிப்பிறந்த) மனிதர், நிலையின் (தம்முயர்ந்த) நிலையிலிருந்து, இழிந்தக்கடை - தாழ்ந்தவிடத்து, தலையினிழந்த - தலையிலிருந்து வீழ்ந்த, மயிரனையர் - மயிர்போல்வர், எ-று.

(க-ரை.) நற்குடியிற் பிறந்தவர் நிலைகெட்டவிடத்துத் தலையிலிருந்து நீங்கிய மயிர்க்கொப்பாவர் - என்பதாம்.

(வி-ரை.) அந்நிலையைவிடாது நின்றவிடத்தே விரும்பி மரியாதைசெய்யப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவிடத்தே இழிவு செய்யப்படுதலும்உவமானத்தாற் பெற்றும். (௪)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

## ௬௪௬ ௬௭ - ஆம் - அதி - மானம்.

(ப-ரை.)குன்றினனையாரும் (குடிப்பிறப்பால்) மலைபோலுயர்ந்தவரும் குன்றுவ - தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களை, குன்றியனைய - ஒருகுன்றிய ளவாயினும்: செயின் - செய்தலால், குன்றுவர் - தாழ்வர், எ-று.

(க-ரை.) மலையை நிகர்த்த குடிப்பிறப்பாளரும் தாழ்தற் கேதுவான செயல்களைச் செய்தால் தாழ்வார்கள் - என்பதாம்.

(வி-ரை.) குன்றியனையவும் என்கிற இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது, தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களாவன - பழிக்கப்படுஞ்செயல்கள்.

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(ப-ரை.) இகழ்வார்பின் (தம்மை) அவமதிப்பவர் பின்னே, சென்று நிலை - ஒருவன்மானம் விட்டுச்சென்று நிற்கின்றநிலை, புகழின்று (இவ்வுலகத்துப் புகழுண்டாக்காது. புத்தேணாட்டு - மற்றைத்தெய்வ லோகத்திலே உய்யாது - செலுத்தாது, மற்று - இனி, என் (அவனுக்குச்செய்வது)யாது.

(க-ரை.) இகழ்பவர் பின்செல்லுவோர் நிலை புகழை யுண்டாக்காது

தேவருலகத்துச் செலுத்தாது - என்பதாம்.

(வி-ரை.) ஆவிரண்டும் அசைகள். புகழுண்டாக்குவ புகழென்றார். பயனுகிய இவ்விரண்மெ இல்லாமல், யீஞுகமானங் கெடுக்கின்றது என்ன வென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் அவைசெய்த குற்றம் சொல்லப் பட்டது.]

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

(ப-ரை.) ஒட்டார்பின் (தன்னை) இகழ்வார்பின்னே, சென்றுபோய் -பொருள் பெற்று -ஒருவன் வாழ்தலின் (அதனால்) ஒருவன் உயிர்வாழ்தலை க்காட்டிலும், அந்நிலையே - முன்னே நிலையிலேநின்று, கெட்டானெனப் படுதல் - இறந்தானென்று சொல்லப்படுதல், நன்று (அவனுக்கு) நன்று.

(க-ரை.) ஒருவனிகழ்பவர் பின்சென்று வாழ்தலினு முன்னிலையிலி ருந்திறந்தானென்று சொல்லப்படுதலே நல்லது - என்பதாம்.

(வி-ரை.) புகழும் வானுலகமும் உண்டாக்காதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வ மென்பாரை நோக்கிச்சொல்லியது. (எ)

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

(ப-ரை.) பெருந்தகைமை-உயர்குடிப்பிறப்பானது, பீடு (தன்)வலியா கியமானம், அழியவந்தவிடத்து - கெடவந்தபோது, ஊனோம்பும் இறந்து

**கள - ஆம் - அதி - மானம். ௪கள**

போகாமல் பயனில்லாத) உடம்பைக் காப்பாற்றும், வாழ்க்கை - வாழ்வா னது, மற்று மருந்தோ (பின்னுமிறவாமைக்கு) மருந்தாமோ, எ-று.

(க-ரை.) மானமழியவந்தபோது உடலைக் காப்பாற்றும் வாழ்வானது இறவாமைக்கு மருந்தாமே - என்பதாம்.

(வி-ரை.) அக்குடிப்பிறப்பு - நற்குணங்களுக்கெல்லாம் இடனாதற் சிற ப்புப்பற்றி - பெருந்தகைமை யென்றும், அக்குணம் பலவினுமானமானது அக்குடிப்பிறப்புக்கு வலியாதற் சிறப்புபற்றி பீடென்றும், அம்மானம் அழி ந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலால், அதனை ஊனென்றும்;பின் னுமிறத்தல் நிச்சயமென்றற்கு மருந்தோவென்றும் சொல்லினர். (அ)

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(ப-ரை.) மயிர்நீப்பின் (தன்மயிர்த்திரளில்) ஒருமயிர் நீங்கினும், வாழா

உயிர்வாழாத, கவரிமாவன்னார் - கவரிமாவையொப்பவர், மானம்வரின் - (உயிர்நீங்குதற்கான) மானம் பெருமளவுவரின், உயிர் - அவ்வுயிரை, நீப்பர் - விடுவர், எ-று.

(க-ரை.) கவரிமானுக்கொப்பானவர் மானங்கெடவரி னுயிரைவிட்டு விடுவர் - எனபதாம்.

(வி-ரை.) நீப்பினுமென்னு மும்மை தொக்குநின்றது. உயிருமானமும் உடனில்லாவிடத்துப் பின்னும் போலதாகிய வுயிரைநீக்கி எந்நாளு நிற்பதாகிய மானமடைவரென்பதாம். உவமானம் அவர்க்கு அது இயல்பென்பது விளக்கியது.

இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(ப-ரை.) இளிவரின் (தமக்கு) ஓரவமானம் வந்தவிடத்து, வாழாத - (பொறுமல்) உயிர்வாழாத, மானமுடையார் - மானமுடையவரது, ஒளி - புகழ்வடிவை, உலகு - உலகத்தார், தொழுதேத்தும் (எந்நாளுந்) தொழுது துதியாநிற்பர், எ-று.

(க-ரை.) அவமானம் வந்தபோது உயிர்பெற்று வாழாத மானமுடையவர் புகழ்வடிவை யுலகத்தார் துதிப்பர் - என்பதாம்.

(வி-ரை.) புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வல்வனே வான ஊர்தி யெய்துவராதலால், சுவர்க்கம் பெறுதல் சொல்லவேண்டாவாயிற்று. இவைநான்கு பாட்டாலும் மானப்பொருட்டாகிய இறப்பின்சிறப்புச் [சொல்லப்பட்டது. (௬0)

தொண்ணூற்றேழாம்-அதிகாரம்-மானம்.
முற்றிற்று.

---

58

## தொண்ணூற்றெட்டாம்அதிகாரம்

# பெருமை.

அஃதாவது: செய்தற்கரிய செய்தல் - செருக்கில்லாமை பிறர்குற்றஞ்சொல்லாமை. என்றிவை முதலாகிய நற்குணங்களாலே பெரியராயினேரது தன்மையாம். நிலையிலிருந்து மேலுமேலும் உயர்த்துவதாகிய இக்கு

ணங்கள் உண்டாவது நிலையிலிருந்து தாழாமை உள்ளவிடத்தே யாகலால் இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

(ப-ரை.) ஒருவற்கு - ஒருவனுக்கு, ஒளி-ஒள்ளியாவது, உள்ளவெறுக்கை (பிறராலே செய்தற்கரியவைகளை செய்வோமென்று நினைக்கிற) மனவெழுச்சியின்மிகுதி, ஒருவற்கு - ஒருவனுக்கு; இளி - மாசாவது, அஃதிறந்து அச்செயலையொழிந்து, வாழ்துமெனல் - உயிர்வாழ்க்கடவோமென்றுநினைத்தல், எ-று.

(க-ரை.) ஒருவனுக் கொள்ளியாவது மனவெழுச்சியாம், இளியாவது மனவெழுச்சி யில்லாமையாம் - என்பதாம்.

(வி-ரை.) ஒளி - தான் உளனாயகாலத்து மிகுந்து தோன்றுதலுடைமை, முன்னும் செய்தற்கரிய செய்வார் பெரிய ரென்றாராயினும், இங்கே அவை அளவிறந்த உபகாரம் ஈகை முதலானவையாம். அவைகளினாலாகிய பெருமையை அதன் காரணத்தின் மேலிட்டு உள்ளவெறுக்கை யென்றும் அதனையே அதன்காரியமாகிய ஒள்ளியாக்கியும் சொல்லினர். [இதனாற்பெருமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.]

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

(ப-ரை.) எல்லாவுயிர்க்கும் - எல்லாமக்களுயிர்க்கும், பிறப்பு (பொதுவாகிய) பிறப்பியல்பு, ஒக்கும் - ஒத்திருக்கும் (ஆயினும்) சிறப்பு (பெருமை சிறுமை எனப்பட்ட) சிறப்பியல்புகள், ஒவ்வா - ஒத்திடாவாம், செய்தொழில் - செய்யுந்தொழில்களது, வேற்றுமையான் - வேறுபாட்டால், எ-று

(க-ரை.) மக்களுக்குப் பிறப்பியல் பொத்திருக்கும், தொழில் வேற்றுமையாற் சிறப்பியல் பொவ்வாவாம் - என்பதாம்.

(வி-ரை.) வேறுபாடு - நல்லவையும், தீயவையும், இரண்டு மானவையும் இரண்டு மல்லாதவையும் ஆகிய பலபிரிவுகள். வினைவசத்தால் பஞ்சபூதகாரியமாகிய உடம்பைப் பொருந்திநின்று அதன் பயனனுபவித்தல் எல்லாருக்கும் ஒத்திருத்தலால், பிறப்பொக்கு மென்றும் பெருமை சிறுமைகளுக்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பிரிவுகள் உடம்புதோறும் வேறுபடுதலால், சிறப்பொவ்வாவென்றும் சொல்லினர். (உ

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(ப-ரை.) மேலல்லார் (செய்தற்கரியவைகளைச் செய்யமாட்டாமல்) சிறியராயினோர், மேலிருந்தும் - உயர்ந்த ஆசனங்களில் இருந்தாராயினும், மேலல்லர் - பெரியராகார், கீழல்லவர் (அவைசெய்து) பெரியராயினோர், கீழிருந்தும் - தாழ்ந்தவெளியிலத்தில் இருந்தாராயினும், கீழல்லார் - சிறியராகார், எ-று.

(க-ரை.) சிறியவர் மேலிருந்தாலும் பெரியவராகார், பெரியவர் கீழிருந்தாலுஞ் சிறியவராகார் - என்பதாம்.

(வி-ரை.) மேலிருத்தல் கீழிருத்தல்களாலே செல்வவறுமைகளும், மேல்கீழ்களாலே பெருமை சிறுமைகளும், கருதப்பட்டன. [இவை இரண்டொட்டாலும் முறையே குடிப்பிறப்பு மாத்திரத்தாலும், செல்வ மாத்திரத்தாலும், பெருமை உண்டாகாமை சொல்லப்பட்டது.] (௩)

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(ப-ரை.) ஒருமை - பிளவுபடாதமனத்தையுடைய, மகளிரேபோல கற்புள்ள மாதரைப்போல, பெருமையும் - பெருமைக்குணமும், தன்னைத்தான் தன்னைத்தானே, கொண்டொழுகின் (ஒருவன் நிறையின்வழுவாமல்) காத்துக்கொண்டு நடக்கவல்லவனாயின், உண்டு - அவனுடைத்து உண்டாம்.

(க-ரை.) பெருமைக்குணமுங் கற்புள்ளமாதரைப் போலத்தன்னைக் காத்துக் கொண்டால் உண்டு - என்பதாம்.

(வி-ரை.) ஒழுகுதல் - மனமொழி மெய்களை அடக்கி உபகாரமுதலானவைசெய்து வருதல். [இதனால்பெருமையுண்டாமாறுசொல்லப்பட்டது.]

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

(ப-ரை.) பெருமையுடையவர் (அவ்வழியாலே) பெருமையுடையராயினோர் தாம்வறியராகிய வழியும் அருமையுடைய - பிறராலேசெய்தற்கு அருமையுடையவையாகிய, செயல் தஞ்செயல்களை, ஆற்றின் - அவைசெய்யும் வழியால், ஆற்றுவார் - முடியப்பெறச் செய்யவல்லவராவார், எ-று.

(க-ரை.) பெருமை யுடையோர் அருமையுடைய செயல்களைச்செய்வார் - என்பதாம்.

(வி-ரை.) அரியசெயல்களை முன்செய்து பந்தமைமேதான்ற பெருமை யுடையவரென்றதனாலும், ஏற்றுவாரென்றதனாலும், மறியாராகிய வழியு மென்பது பெற்றும். [இதனால் அதனையுடையார்செய்திசொல்லப்பட்டது]

## ௬௨௦ கூறு - ஆம் - அதி - பெருமை.

சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்று நோக்கு.

(ப-ரை.) பெரியாரை (அப்படிப்பட்ட) பெரியாரை, பேணி - வழிபட்டு, கொள்வேமென்னும் (அவரியல்பைக்) கொள்வே மென்னும், நோக்கு- கருத்து, சிறியார் - மற்றச்சிறியராயினோரது, உணர்ச்சியுள் - மனத்தினிடத்து: இல்லை - உண்டாகாது, எ-று.

(க-ரை.) பெரியோரை வழிப்பட்டு கொள்வோமென்னும் கருத்துச்சிறியோர் - மனதிடத்தில்லை - என்பதாம்.

(வி-ரை.) குடிமைசெல்வம் கல்வியென்றிவை யுடையவராயிருக்கை மாத்திரத்தால், தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அடங்கியிருப்பாரை வழிப்பட்டு அவ்வியல்புடையராதல் கூடாதென்பதாம்.

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(ப-ரை) சிறப்பும் (தனக்குத் தரும்பெரியோரிடத்து அடங்கிருத்தலைச செய்வதாகிய) சிறப்பும், தான் - தான், சீரல்லவர் கட்படில் (தனக்குத்தகாத) சிறியவரிடத்து உண்டாமாயின், இறப்பே புரிந்த அடங்கியிருத்தலொழிந்து செருக்கினிடத்திலே மிகுந்த, தொழிற்றும் - செயலையுடைத்தான்

(க-ரை.) சிறப்புஞ் சிறியவரிடத் துண்டாயின் செருக்கிலே மிகுந்த தொழிலையுடையதாம் - என்பதாம்.

(வி-ரை) செருக்கினை மிகச்செய்யு மென்பதாயிற்று சிறப்பு - குடிமை செல்வங் கல்விகளினுலாகிய மிகுதி. [இவை இரண்டுபாட்டாலும் அஃதில்லாதார் செய்தி சொல்லப்பட்டது.] (எ)

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(ப-ரை.) பெருமை - பெருமை யுடையவர், என்றும் - சிறப்புண்டாகி யகாலிலும், பணியும் - அடங்கிநடப்பார், சிறுமை - மற்றைச்சிறுமையுடையவர் (என்றும்) அது இல்லாதகாலிலும் - தன்னை வியந்து, தம்மைமெச்சி, அணியும், சிறப்பிப்பார், எ-று.

(க-ரை.) பெருமையுடையவர் சிறப்புண்டாகிய காலத்து மடங்கிநடப்பர் சிறுமையுடையவர் சிறப்பில்லா காலத்துந் தம்மைசிறப்பித்து நடப்பர் என்பதாம்.

(வி-ரை.) [பல்லோர் படக்கை முன்னிலை தம்மையிற் செல்லதாகுஞ் செய்யுமென் முற்றே,] என்றவிலக்கணத்திற்கு மாறுயினுமதற்குக்காரணம் *பண்புடையவர் தொழில்கள் பண்பின்மேல் எற்றப்பட்டன இது பின்அர்,

* நன்னூல் சூத்திரம்.



றமறைக்கு மென்னுமிடத்தும் ஒக்கும் ஆமிரண்டும் - அதை சிறப்பித்தல்-பிறரினுர் தமக்கு ஒருயர்வை எற்றிக கொள்ளல். (அ)

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(ப-ரை.) பெருமை - பெருமைக்குண மாவது, பெருமிதமின்மை(காரணம் உண்டாகிய விடத்தும் அது இயல்பாகநோக்கிச்)செருக்கில்லாதிருத்தல், சிறுமை - சிறுமைக் குணமாவது, பெருமித மூர்ந்துவிடல் (காரணம் இல்லாதவிடத்தும்) அதனை எற்றிக்கொண்டு செருக்கின் முடிவிலே நின்று விடுதல். எ-று.

(க-ரை.) பெருமைக் குணமாவது செருக்கில்லா திருத்தல், சிறுமைக்குணமாவது செருக்குடைத்தா யிருத்தல் - என்பதாம்.

(வி-ரை.) அளவறச்செருக்க லென்பதாயிற்று. (கூ)

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(ப-ரை.) பெருமை பெருமையுடையவர், அற்றமறைக்கும் (பிறர்மான த்தையே சொல்லி) அவமானத்தை மறையாநிற்பர், சிறுமை-மற்றைச்சிறு மையுடையவர், குற்றமே கூறிவிடும் (பிறர்குணத்தைமறைத்துக்) குற்றத் தையே சொல்லிவிடுவர், எ-று.

(க-ரை.) பெரியோர் பிறரவமானத்தை மறைப்பர். சிறியோர் பிறர் குற்றத்தைச் சொல்லுவர்-என்பதாம்.

(வி-ரை.) மறைத்தலும் சொல்லலும் மற்றையிடத்தும் கூட்டப்பட் டன தான்-அசை. [இவை மூன்று பாட்டாலும் இருவர் செயலும் சேர்த் துச் சொல்லப்பட்டன.] (௯0)

தொண்ணூற்றெட்டாம்-அதிகாரம்-பெருமை

முற்றிற்று.

---

## தொண்ணூற்றொன்பதாம் அதிகாரம்

## சான்றாண்மை.

அஃதாவது. பலகுணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளுந்தன்மை, பெருமையுள் அடங்காத பலகுணங்களையும் தொகுத்துக்கொண்டு நின்றமையால் இது அதன்பின் வைக்கப்பட்டது.

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

**௬00 - ஆம் - அதி - பண்புடைமை. ௬௫௫**

(க-ரை) சான்றோர் - சான்றாண்மை குன்றுவாராகில் பூமிபாரந்தாங் காது - என்பதாம்.

(வி-ரை) தானுமென்னும் எச்சவும்மை விகாரத்தால் தொக்கது, அவ ர்க்கு அதுகுன்றாமையும் அதற்கு அது தாங்கலும் இயல்பாகலால், அவை எக்காலும் உண்டாகாநின்றன வென்பதுதோன்ற நின்றமையால், மன்னெ ன்பது * ஒழியிசையில் வந்தது ஏகாரம் - அசை, [இவை மூன்றுபாட்டா லும் பலகுணங்களாலும் நிறைந்தவாறு சிறப்புச்சொல்லப்பட்டது.] ௯0

தொண்ணூற்றொன்பதாம்-அதிகாரம்-சான்றாண்மை.

## நூறாம் அதிகாரம்.

# பண்புடைமை.

அஃதாவது: பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாதுநின்றே எல்லாரியல்புகளும் அறிந்து நடத்தலுடையராதல் அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(ப-ரை.) யார்மாட்டும் - யாரிடத்தும், எண்பதத்தால் - எளிய சமயத்தராயிருந்தால், பண்புடைமையென்னும் - பண்புடைமை யெனப்படுகின்ற வழக்கு-(அரிதாகிய) நல்வழியை, எய்தல் - அடைதல், எளிது - எளிது, என்ப - என்று-(நூலோர்சொல்லுவர்) எ-று.

(க-ரை) யாவரிடத்துமெளிய சமயத்தாராக விருக்கிற பண்புடைமை யென்னு நல்வழியடைதலெளிது - என்பதாம்.

(வி-ரை.) குணங்களால் நிறைந்து எளிய சமயத்தருமாகியபோதுபண்புடைமைதானே உண்டாமாகலால், எண்பதத்தாலெய்த லெளிதென்றும் அதுஉலகத்தை யெல்லாம் வசியமாக்கலால், அதனை பழையோர்சென்ற நல்வழியாக்கியும், அதனை எளிதிற்பெற இது நூலோரோதியஉபாயமென்றற்கு அவர்மேல்வைத்துஞ் சொல்லினர்.

பண்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(ப-ரை.) அன்புடைமை (பிறர்மேல்) அன்புடையதனும், ஆன்ற-குடிப்பிறத்தல் (உலகத்தோடு) அமைந்த குடியிற்பிறத்தலும், இவ்விரண்டுமாகிய இவ்விரண்டும், பண்புடைமையென்னும்-(ஒருவனுக்குப்) பண்புடைமையென்று-(உலகத்தார்) சொல்லும், வழக்கு - நல்வழி. எ-று.

*ஒழியிசை - ஒழிந்தசொற் பொருளைத்தருவது.

(க-ரை.) ஒருவனுக்கு அன்புடைமையு நற்குடியிற் பிறத்தலுமே நல்வ ழியாம் - என்பதாம்.

(வி-ரை.) அமைதல் - ஒதுவருதல், குடிப்பிறத்தலென்பது. குடிப்பிறந் தவர் செயலே இரண்டு கூடியவழியே பண்புடைமை யாவதென்பது தோன் ற முற்றும்மைகொடுத்தார். [இவை இரண்டுமாட்டாலும் பண்புடைமையா தற்குக் காரணம் சொல்லப்பட்டது. ௨

உறுப்பொத்தன் மக்களொப் பன்ருல் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(ப-ரை.) உறுப்பொத்தல்-(நெருங்கத்தகாத) உடம்பாலொத்தல், மக் களொப்பன்று-(ஒருவனுக்கு) நல்ல மனிதரோடு-(ஒப்பாகாமல்) பொருந் துவதன்று ஒப்பதாம்-(இனிப்) பொருந்துவதாகிய, ஒப்பு - ஒப்பாவது, பெ ருத்தக்க-நெருங்கத்தக்க; பண்பொத்தல் - பண்பாலொத்தல் எ-று.

(க-ரை.) அவயவத்தாலொப்பாத லொப்பல்ல, குணத்தா லொப்பாத லே யொப்பாம்-என்பதாம்.

(வி-ரை.) ஒருவனுக்கு நன்மக்களோடு பிறப்பொத்தலாவது உயிரின் வேறுய் நிலைபெருத உடம்பொத்தலாகாது, வேறல்லாமல் நிலைபெறுதலு டைய பண்பொத்தலாகலால், அப்படிப்பட்ட அவர்பண்பினை புடையனுக வென்பதாம். ஆல்-அசை. ௩

நயனெடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்பு பாராட்டு முலகு.

(ப-ரை.) நயன்-நீதியையும், ஒடு - அதனுடன், நன்று - அறத்தையும், புரிந்த - விருப்பிய, பயனுடையார்-(பிறர்க்குந்தமக்கும்) பயன்படுதலுடை யவரது, பண்பு - பண்பை, உலகு-உலகத்தார், பாராட்டும் - கொண்டாடா நிற்பர் எ-று.

(க-ரை.) நீதியையுந் தருமத்தையும் விரும்பிய பயனுடையவர் குணத் தைபுலகத்தார் புகழ்வர்-என்பதாம்.

(வி-ரை.) நயனெடு நன்றிபுரிதலும், பயனுடைமையும், பண்பு காரண மாகவந்தமையால், அதனைப் பாராட்டுமென்ருர்.

நகையுள்ளு மின்ன திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறி வார் மாட்டு.

(ப-ரை.) இகழ்ச்சி-(தன்னை) யிகழ்தல், நகையுள்ளும் - ஒருவனுக்கு விளையாட்டி னிடத்தும், இன்னாது - துன்பந்தருவதாம், (ஆதலால்) பாடறிவார்மாட்டு-(பிற) ரியல்பறிந்து நடப்பவரிடத்து, பகையுள்ளும் - பகையுள்ளவிடத்தும், பண்பு-(அப்பகை உண்டாகாமல் இனிமையாகிய) பண்புகளே உள - உண்டனவாம். எ-று.

## கOO - ஆம் - அதி - பண்புடைமை. சஉள

(க-ரை.) விளையாட்டிலு மிகழ்தலானது துன்பந்தரும், நல்லவரிடத்துப் பகையிலு நற்குணமுண்டாம் - என்பதாம்.

(வி-ரை.) பாடறிவாரெனவே 'அவ்வின்னாமை யறிதலும் பெற்றும்' அதனை அறிந்தவர்பின் அதுசெய்யார் இனியவேசெய்வாரென்பதுகருத்து

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன்.

(ப-ரை.) பண்புடையார் - பண்புடையவரிடத்தே, பட்டு படுதலால் - உலகம், உலகியல் உண்டு-(எந்நாளும்) உளதாய் வாராநின்றது, இன்றேல் அங்கேபடுதல் இல்லையாயின், அது-அவ்வுலகியல், மண்புக்கு - மண்ணிலே புகுந்து, மாய்வது-மாய்ந்து போவதாம் எ-று.

(க-ரை.) பெரியவரிடத்து நற்குண முண்டாதலால் உலகியலெந்நாளு முண்டாகின்றது, அதுஇல்லாவிடி னுலகியல்கெடும் - என்பதாம்.

(வி-ரை.) மற்றைப் பண்பில்லார் சார்பல்லாமையால் ஒரு சார்புமில்லாமல் மண்ணிற் புகுந்து மாயுமது வேண்டாவாயிற்றென்பதுபடநின்றமையால். மன்னென்பது ஒழியிசையில் வந்தது. [இவை நான்கு பாட்டாலும் அதனை புடையவரது உயர்ச்சி சொல்லப்பட்டது.] க

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(ப-ரை.) மக்கள் - நன்மக்களுக்கேயுரிய, பண்பில்லாதவர் - நன்குணமில்லாதவர், அரம்போலும் - அரத்தைப்போலும், கூர்மையரேனும் - கூர்மையை யுடையரேயாயினும், மரம்போல்வர்-ஓரறிவினதாகிய மரம்போல்வர், எ-று.

(க-ரை) நன்மக்களுக்குரிய குணமில்லாதவர் கூரிய புத்தியுடையராயினு மரத்தை நிகர்த்தவர்-என்பதாம்.

(வி-ரை) ஓரறிவு பரிசத்தை அறிதல், தான் மடிவில்லாமல் தன்னைபு ற்ற பொருள்களை மடித்தலாகிய தொழில்பற்றி வந்தது. அவ்விசேடவறி விற்குப் பயனாகிய மக்கட் பண்பில்லாமையால், அவ்வறிவுதானு மில்லையெ ன்பதாயிற்று. என

நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை.

(ப-ரை.) நண்பு - நட்பினை, ஆற்றாராகி-(தம்மோடு) செய்யாதவராகி நயமில் - பகைமையை, செய்வார்க்கும் - செய்து நடப்பவரிடத்தும், பண் பாற்றாதல்-(தாம்) பண்புடையவராய் நடவாமை, கடை - அறிவுடையவரி க்கு இழுக்காம், எ-று.

## ௯௯௯ - ஆம் - அதி - பண்புடைமை.

(க-ரை.) நட்பைக் கொள்ளாராகிப் பகையைக் கொள்ளுவார்க்கும் குணமுடையவரா நடவாமையே கடை-என்பதாம்.

(வி-ரை.) நயம், ஈரம், சிறப்புமை அவர் பண்பாற்றமைக்கு இடனு தல்தோன்ற நின்றது அதனைச்செய்யின் தாமும் அவர் தன்மைய ராவரென் றற்கு கடையென்றார்.

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(ப-ரை.) நகல்வல்ல ரல்லார்க்கு - பண்பில்லாமையால் ஒருவரோடு கலந்து உண்மகிழ்தல் மாட்டாதவர்க்கு, மாயிருஞாலம் - மிகவும்பெரியபூ மியானது, பகலும்-(இருளில்லாத) பகற்பொழுதிலும், இருள் - இருளினி டத்தே, பாற்பட்டன்று - கிடந்ததாம், எ-று.

(க-ரை.) நட்புச்செய்து மகிழாதார்க்குப் பூமியானது இருளுடையதா கும்-என்பதாம்.

(வி-ரை.) எல்லாரோடும் கலந்து அறியப்பெறுமையால், பண்பில்லாத வர்க்கு உலகியல் தெரியாதென்றற்கு உலகம் இருளினிடத்துப் பட்டதெ ன்றார்.

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

(ப-ரை.) பண்பிலான் - பண்பில்லாதவன், பெற்ற-(முன்னை நல்வினையினால்) அடைந்த, பெருஞ்செல்வம் - பெரியசெலவம் அக்குற்றத்தால்ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல் நன்பால் - நல்ல பசுவின்பால் கலம்-ஏற்ற கலத்தினது, தீமையால் - குற்றத்தால், திரிந்தற்று - கெட்டாற்போலும்.

(க-ரை.) குணமில்லாதவன் முன்னல் வினையாலடைந்த செல்வமானது பயன்படாது கொடுதல் பசுவின்பால் பாத்திரக்குற்றத்தால் கெட்டாற் போலும்-என்பதாம்.

(வி-ரை.) கலத்தீமையென்பது - கலந்திமையென விகாரப்பட்டது. தொழிலுவம மாகலால், உவமேயத்தில் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது படைக்கும் வலிமையிலனுதல் தோன்ற பெற்றவென்று, எல்லாப்பயனுங் கொள்ளற்கு ஏற்ற இடமுமைதோன்ற பெருஞ்செல்வ மென்றும் சொல்லினார். அச்செல்வமும் பயன்படா தென்ற இதனல்வருகிற அதிகாரப்பொருளுண்மையும் தோற்றுவாய் சொல்லப்பட்டது. [இவை நான்குபாட்டாலும் அஃதில்லாரது இழிவு சொல்லப்பட்டது. க0

நூறும்-அதிகாரம்-பண்புடைமை.
முற்றிற்று

—

# நூற்றொராம் - அதிகாரம்.

# நன்றியில் செல்வம்.



அஃதாவது: சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாதசெல்வத்தினியல்பு செல்வமுடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமை முன்முன் தோற்றுவாய் செய்ததனுற் பெற்றும்.

வைத்தான் வாய்சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

(ப-ரை.) வாய் சான்ற-(தன்) மனையிடமெல்லாம் நிறைதற்கு ஏதுவா

கிய, பெரும்பொருள் - பெரியபொருளை, வைத்தான் (சம்பாதித்து)வைத்தவனாகிய, அஃது - அதனை, உண்ணான் - (உலோபத்தால்) அனுபவியாதவன், (உளனாயினும்) செத்தான்-செத்தானும், செயக்கிடந்தது-(அதனிடத்து அவனாலே) செயக்கிடந்ததோ ருரிமையானது, இல் - இல்லை (ஆதலால்) எ று.

(க-ரை.) பெரும் பொருளைத்தேடி வைத்தவனாகி யப்பொருளை யனுபவியாதவ னிருந்தாலு மிறந்தவனுக் கொப்பாவன்-என்பதாம்.

(வி-ரை.) [இதனாலே சம்பாதித்தவனுக்கு அச்செல்வம் பயன்படலில்லாமை சொல்லப்பட்டது.] க

பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

(ப-ரை.) பொருளான் - பொருளொன்றினால், எல்லாம்-யாவும், ஆம்-உண்டாகும், என்று-என்று, அறிந்து (அதனைச சம்பாதித்து) ஈயாது(பின் பிறர்க்கு) கொடாது, இவறும்-உலோபத்துவஞ் செய்யும், மருளான்-மயக்கத்தினாலே, மாணா-நிறைதலில்லாத, பிறப்பு (பேய்ப்) பிறப்பு, ஆம் (ஒருவனுக்கு) உண்டாம், எ-று.

(க-ரை.) பொருளைச் சம்பாதித்துக் கொடாமையாற் பிறப்புண்டாம்-என்பதாம்.

(வி-ரை.) இருமையிலும் அடையும் இன்பங்கள் பலவும் அடங்க எல்லாமென்றும் சம்பாதித்தற்கு முன்னே உண்டாகிய,அறிவானது பின்னே மயங்குதலால், மருளென்றும் பொருள் உண்டாயிருக்கப் பிறருடைய பசி கண்டிருந்த பாவத்தால் உணவுகள் உண்டாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்பு உண்டாமென்றும் சொல்லினர். உ

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

## ௲௩ கoக - ஆம் - அதி - நன்றியில்செல்வம்.

(ப-ரை.) ஈட்டம (பிறரின்மிகச்)சம்பாதிப்போமென்று, இவறி (பொருள் சம்பாதிக்கை மாத்திரத்தையே) விரும்பி, இசை (அதன் பயனாகிய) புகழை, வேண்டாவாடவர் - விரும்பாத மக்களது, தோற்றம்-பிறப்பு, நில

க்கு-பூமிக்கு, பொறை-பாரமாம் (அவ்வளவே) எ-று.

(க-ரை.) பொருளை விரும்பிப் புகழை விரும்பாதவர் பிறப்புப் பூமிக்குப் பாரம் என்பதாம்.

(வி-ரை.) புகழ்-இருமைக்கும் உறுதியாகிய அறமாகலால், நகையால் அதனை வேண்டாமல் சம்பாதிக்கத் துன்பத்தையும், காப்பாற்றல் துன்பத்தையும் வேண்டிய அறிவில்லாமை பற்றி நிலக்குப் பொறையென்றார். பிறப்பென்றது அதற்குரிய உடம்பினை. ௩

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படா தவன்.

(ப-ரை.) ஒருவரான (ஒருபொருளுங்கொடுத்து அறியாமையால்)ஒருவராலும், நச்சப்படாதவன் - இச்சிக்கப்படாதவன் (தான் இறந்தவிடத்து) எச்சமென்று (இங்கே) ஒழிந்து நிற்பதாக, என் - எதை, எண்ணுங்கொல்-நினைப்பானோ, எ-று.

(க-ரை.) ஒருவராலு மிச்சிக்கப்படாதவ னிறந்தபின் னெதைநினைப்பானோ-என்பதாம்.

(வி-ரை.) இங்கே ஒழிந்து நிற்கும் புகழ்-ஈவார்மேலல்லாமல் நில்லாமையால் இவனுக்கு அதனோடெவ்வளவும் சம்பந்தம் இல்லையென்றற்குஎன்றற்கு என்னெண்ணுங் கொல்லென்றார். ஓ-அசை. [இவை மூன்றுபாட்டாலும் அச்செல்வம் பிறர்க்குப்பயன்படவில்லாமை சொல்லப்பட்டது.] ௪

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(ப-ரை.) கொடுப்பதூஉம் (பிறர்க்கு) ஈவதும், துய்ப்பதூஉம் (தான்) அனுபவிப்பதுமாகிய (இரண்டு செய்கையும்) இல்லார்க்கு-உடையரல்லாதவர்க்கு, அடுக்கிய (பலவாக) அடுக்கிய, கோடியுண்டாயினும்-கோடிப் பொருள் உண்டாயினும், இல் (ஒன்றும்) இல்லை, எ-று.

(க-ரை.) கொடுத்தலு முண்ணுதலு மில்லாதவர்க்குக் கோடிபொருளிருந்தும், பயனில்லை-என்பதாம்.

(வி-ரை.) இன்பத்திலும் அறம் சிறந்தமையால், கொடுத்தல் முன்சொல்லப்பட்டது. ஒன்றுமில்லார்போற் பயனிரண்டும் இழத்தலால்இல்லென்றார்

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.



(ப-ரை.) தான்றுவ்வான் - தான் அநுபவியாதவனுகி (அதன்மேலும்) தக்கார்க்கு-தகுதியை யுடையவர்க்கு, ஒன்று (அவர்வேண்டிய)தொன்றை, ஈதலியல்பிலாதான்-கொடுத்தம் றன்மையில் லாதவன், பெருஞ் செல்வம் (அவ்விரண்டுஞ் செய்தற்கு இடமுடையதாகிய) செல்வத்திற்கு, ஏதம் ஒரு நோய். எ-று.

(க-ரை.) தானுண்ணுமலும் கொடாமலு மிருப்பவன் செல்வம்வியாதி க்கொப்பாம்-என்பதாம்.

(வி-ரை.) தக்கார்-தானம் வாங்குதற்கு ஏற்றவர், அநுபவிக்கப் படுத லும் ஈயப்படுதலுமாகிய தொழில்களுக்கு உரியதை அல்லா தாக்கினமை யால் நோயென்றார், [இவை இரண்டு பாட்டாலும் அவ்விருமையும் உடன் சொல்லப்பட்டது.] ௬

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகுநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

(ப-ரை.) அற்றார்க்கு (ஒருபொருளு) மிலராயினார்க்கு, ஒன்று (அவர் வேண்டிய) தொன்றனை, ஆற்றாதான் - கொடாதவனது, செல்வம்-செல்வ மானது வீணாகக்கழிதல், மிகுநலம் (பெண்டீரின்) மிகுந்த நலத்தினை,பெற் றாள்-பெற்றவொருத்தி (கொடுப்பா ரில்லாமையினாலே) தமியள்(கணவனி ல்லாமல்) தனியளாய், மூத்தன்மைத்து. எ-று.

(க-ரை.) கொடாதவன் செல்வமானது அழகுள்ளவொருத்தி தன்னை க்கொடுப்பாரில்லாமையாற் கணவனில்லாது கிழவியானாற்போலும் - என் பதாம்.

(வி-ரை.) நலம் வடிவி னன்மையும், குணத்தினன்மையும், இவ்விரண் டும் ஒருசேரப்பெறுதல் அரிதாகலால் பெற்றாளென்றார் கொடுப்பாரும் கணவனுமே யல்லாமல் தானும் ஏற்பானுமே யல்லாமல் செல்வமும் பய னிழந்து கழியுமென்பதாம். ௭

நச்சப்படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(ப-ரை.) (வறியவர்க்குச் சமீபனாயிருந்தும் ஒன்றுங் கொடாமையால்) நச்சப்படாதவன் (அவரால்) இச்சிக்கப்படாதவன், செல்வம் - செல்வம் (பொருந்தல்) நடுவூருள்-ஊர்நடுவுள்ள, நச்சுமரம்-எட்டிமரம், பழுத்தற்று-பழுத்தல்போலும், எ-று.

(க-ரை.) பிறரா லிச்சிக்கப்படாதவன் செல்வமானது ஊர்நடுவேஎட்டிமரம் பழுத்தல்போலாம்-என்பதாம்.

(வி-ரை.) சமீபத்திருக்கைகளாற் பயனில்லையென்பதாம்.

## சஉ0 கOக - ஆம் - அதி - நன்றியில்செல்வம்.

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

(ப-ரை.) (ஒருவன்) அன்பொரீஇ (கொடாதிருத்தற்பொருட்டுச்சுற்றத்தாரிடத்தும் நட்பினரிடத்தும்) அன்புசெய்தலை ஒழித்து, தற்செற்று (வேண்டுவன அனுபவியாமல்) தன்னை வருத்தி, அறன்-வறியவர்க்குக்(கொடுத்தலாகியாகிய) அறத்தை, நோக்காது-நினையாமல், ஈட்டிய-சம்பாதித்த, ஒண்பொருள் ஒள்ளியபொருளை கொள்வார் (கொண்டுபோய்ப்பயன்) கொள்ளுவார், பிறர்-பிறர், எ-று.

(க-ரை.) அன்பற்றுத் தன்னை வருந்திச் சம்பாதித்த பொருளைப் பிறர் கொள்ளுவர்-என்பதாம்.

(வி-ரை.) பயனாகிய அறமும் இன்பமும்செய்து கொள்ளாதவனுக்குப் பொருளால் உள்ளது சம்பாதித்தற் றுன்பமே யென்பதுதோன்ற ஈட்டிய வென்றும், அவன் சந்ததி வழியிலுள்ளவர்க்கும் உதவாதென்பது தோன்றபிறரென்றும் சொல்லினர். க

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(ப-ரை.) சீருடைய-புகழுடைத்தாகிய, செல்வர்-செல்வத்தினையுடையவரது, சிறுதுனி (சிற்சுக்காலம்) சிறியவறுமை, மாரி (உலகத்தை யெல்லாவிலை நிறுத்துகிற) மேகம், வறங்கூர்ந்தனையது-வறுமைமிகுந்ததுபோல்வ

தோரியல்பினை, உடைத்து-உடையது. எ-று.

(க-ரை.) மிகுந்த செல்வமுடையவர் வறுமையானது மழை வறுமை கொண்ட தன்மையுடையது-என்பதாம்.

(வி-ரை.) துனி-வெறுப்பு, அதனைச்செய்தலால் வறுமை துனியெனப் பட்டது. யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறியராகிய விடத்தும் அவ் வறுமை கடிது நீங்குதலால், பின்னும் செல்வராய்ப் பயன்படுவரென்பது உவமானத்தாற் பெறப்பட்டது. படவே நன்றியில்லாதசெல்வம் எந்நாளும் பயன்படா தென்பதாயிற்று. [இவை நான்குபாட்டாலும் அச்செல்வத்தின் குற்றம் சொல்லப்பட்டது.]

நூற்றிவோராம்-அதிகாரம் - நன்றியில்செல்வம்.*

முற்றிற்று.

---

## நூற்றிரண்டாம் அதிகாரம்.

## நாணுடைமை.

அஃதாவது முன்சொல்லப்பட்ட சால்பு பண்பு முதலாகிய குணங்க ளால் உயர்ந்தோர் தமக்குத்தகாத கருமங்களில் நாணுதலுடையராந் தன்மை *அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்

கருமத்தா னாணுத னாணுந் திருநுத
னல்லவர் நாணுப் பிற

(ப-ரை) நாணு (நன்மக்களது) நாணுவது கருமத்தால் (இழிந்த) கரும ங்காரணத்தாக, நாணுதல்-நாணுதலாம் பிற-அதல்லாமல்மனமொழிமெய்களை ஒடுக்கத்தல் வருகிற நாணங்கள், திருநுதல்-அழகிய நெற்றியையுடைய,நல் லவர் - குலமகளிரது, நாணு - நாணங்கள் போலும், எ-று

(க-ரை) நாணமானது கருமங் காரணமாக நாணுவதாம் பிறநாணங்கள் பெண்களுடைய நாணங்கள் போலாம் - என்பதாம்

(வி-ரை) பிறகுல மகளிரது நாணென்றதனால் மற்றது நன்மக்களது நா ணென்பதும் நாணுதலென்பதனால் கருமத்தினிழிவும் பெற்றாம் திருநுதன ல்லவரென்பது புகழ்ச்சிக்குறிப்பு [ இதனால் நாணினது இலக்கணம்சொல்ல ப்பட்டது.]

படட்து]

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு

(ப-ரை) ஊண் -உண்டியும், உடையும் - ஆடையும், எச்சம் ஒழிந்தவை களும், உயிர்க்கெல்லாம் (மக்க) ளுயிர்க்கெல்லாம். வேறல்ல - பொதுவாம் மாந்தர்சிறப்பு (நன்மக்களுக்குச்சிறப்பாவது) நாணுடைமை-நாணமுடைமை யாம் (அவையல்ல) எ-று

(க-ரை) உணவு, ஆடை மற்றவை யாவருக்கும் பொதுவாம்நன்மக்களு க்குச் சிறப்பாவது நாணமுடையாம் என்பதாம்.

(வி-ரை) ஒழிந்தவை, உறக்கமும், காமமும், அச்சமும்,- சிறப்பு, அவ்வு யிர்களின் வேறுபாடு.

ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணொன்று
நன்மை குறித்தது சால்பு.

(ப-ரை) உயிரெல்லாம்-உயிர்களனைத்தும், ஊனை உடம்பை, குறித்த-தம க்கு இருப்பிடமாகக்கொண்டு அதனைவிடாத (அதுபோல்) சால்பு-(நற்குண ங்களி) னிறைவானது நாணென்னு நன்மை-நாணென்கிற நற்குணத்தை, கு றித்தது-தனக்கு இருப்பிடமாகக்கொண்டு அதனைவிடாது, எ-று

(க-ரை) உயிர்களெல்லா முடம்பைவிடாவாம் நற்குண - நாணத்தைவி டாது - என்பதாம்

# 434 102 - ஆம் - அதி - நாணுடைமை

(விரை) உயிர்உடம்போடு கூடியல்லது பயனடையாதவிதம்போல்சால் பு, நாணொடு கூடியல்லது பயனடையாதென்பதாம்

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை

(ப-ரை,) சான்றோர்க்கு-பெரியோர்க்கு, நாணுடைமை-நாணமுடைமை அணியன்றோ-ஆபரணமல்லவோ, அஃதின்றேல்-அவ் வாபரணம் இல்லையாயி ன் பீடுநடை-(அவர்) பெருமிதநடை, பிணியன்றோ (கண்டவர்க்கு நோயன் றோ) எ-று.

(க-ரை) பெரியோர்க்கு நாணமுடைமை யாபரணமாம், அதில்லாவிடி வ வர் நடைபிணியாம் என்பதாம்.

(வி-ரை) அழகுசெய்தலால் அணியென்றும், பொருத்தற்கு நமையால்பி ணியென்றும், சொல்லினர், (இவை மூன்றுபாட்டாலும் அதன்சிறப்புச் சொல்லப்பட்டது)

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதியென் னுமுலகு

(ப-ரை) பிறர்பழியும்-பிறர்க்குவரும்பழியையும், தம்பழியும்-தமக்குவரும் பழியையும், நாணுவார்-(ஒப்பாகமதித்து)நாணுவாரை,உலகு-உலகத்தார்,நாணு க்கு-நாணத்திற்கு, உறைபதியென்னும்-இருப்பிடமென்றுசொல்லுவர் எ-று

(க-ரை) பிறர்பழியையுந் தம்பழியையுமதித்து நாணுவாரை வுலகத்தார் நாணத்திற்கிருப்பிடமென்பர் என்பதாம்.

(வி-ரை) ஒப்பாகமதித்தல்-பிறர்க்குவந்தபழியையும் தனக்குவந்ததாகவே நினைத்தல். அக்கருத்துடையவர் பெரியராகலால், அவரை உயர்ந்தோர் யாவ ரும் புகழ்வரென்பதாம் (இதனால் அதனையுடையது சிறப்புச் சொல்லப்பட டது.)

நாண்வேலிகொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலாயவர்

(ப-ரை) மேலவர்-உயர்ந்தவர், வேலி (தமக்குக்) காப்பாக, நாண்-நாண, தை, கொள்ளாது-கொள்வதல்லாமல், வியன்ஞாலம்-பரப்பான பூமியை, பே ணலர்-கொள்ளவிரும்பார். எ-று

(க-ரை) உயர்ந்தோர் நாணத்தைகொள்ளாமலுலகத்தை விரும்பார் என பதாம்

(வி-ரை) பழிபாவங்கள் அடையாமற் காத்தலால் வேலியென்றார் நாண மும்பூமியும்தன்னைவிட்டு ஒன்றைக்கொள்ளும்படி நேரிட்டவிடத்து நாண,



மைக்கொள்வதல்லது அப்பழிபாவங்கள் புகும்வழியாகிய பூமியைக்கொள்ள விரும்புவாரென்பதாம் மன்னும்-ஓவும் அசைகள்

(ப-ரை) அகத்து-தம் மனத்தில், நாண்-நாணத்தை இல்லார்-இல்லாதமக்கள், இயக்கம் (உயிருடையவர்போன்று சஞ்சரிக்கின்ற) சஞ்சரிப்பு, மரப்பாவை-மரத்தாற்செய்யப்பட்ட பாவை, நாணால்-எந்திரக்கயிற்றினாலாகிய (சஞ்சரிப்பால்) உயிர்-உயிருடையதாக, மருட்டியற்று-மயக்குதல் போலும்.

(க-ரை) நாணமில்லாதவர்கள் சஞ்சரிப்பு மரத்தாற்செய்யப்பட்ட பாவை கயிற்றாலுயிருடையதாக மருட்டியது போலாம் என்பதாம்.

(வி-ரை) நாணில்லாத மக்களசைவு நாணுடையபாவை யசைவுபோல் எதல்லது உயிரில்லை யென்பதாம், இவை மூன்றுபாட்டாலும் நாணில்லாரிழிவுசொல்லப்பட்டது.

நூற்றிரண்டாம்-அதிகாரம்-நாணுடைமை

முற்றிற்று.

---

## நூற்றிமூன்றும் அதிகாரம்

## குடிசெயல்வகை.

அஃதாவது ஒருவன்தான் பிறந்தகுடியை உயரச்செய்தலின்விதம் இது தாழ்வினிடத்து நாணுடைவர்க்கு உண்டாவதாகலால் அதன் பின் வைக்கப்பட்டது.

கருமஞ்செயவொருவன் கைதூவேனென்னும்
பெருமையிற் பீடுடையதில்,

(ப-ரை) ஒருவன் தன்குடிசெய்தற்பொருட்டுத் தொடங்கிய கரும முடியாமையால், கருமஞ்செய-அக்கருமஞ்செய்தற்கு. கைதூவேனென்னும் கையொழியேனென்கிற. பெருமையின்-முயற்சிப்பெருமைபோல், பீடுடையது-மேம்பாடுடைய பெருமை, இல் அவனுக்குஇல்லை எ-று.

(க-ரை) ஒருவன் கருமஞ்செய்வதற்குக் கை விடேனென்னும் பெருமைபோல் மேன்மையுடையதில்லை-என்பதாம

(வி-ரை) குடிசெய்தற்கென்பது அதிகாரத்தால் வந்தது பல்வகைக்கருமஞ்செய்தலாலே செல்வமும் புகழுமடைந்து குடி உயருமாகலால் பீடுடையதில்

மென்றார்

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங்குடி.

(ப-ரை) ஆள்வினையும் - முயற்சியும், ஆன்றவறிவும் - நிறைந்தவறிவும் என்விரண்டின் - என்றுசொல்லப்பட்ட இரண்டினையுடைய, நீள்வினையான் ஒப்பில்லாத கருமச்செயலால், குடி - (ஒருவனது) குடி, நீளும் - உயரும் எ-று



(க-ரை) முயற்சியும் அறிவுமாகிய விரண்டின்தொழிலாலொருவன்குடி யுயரும் என்பதாம்.

(வி-ரை) நிறைதல் இயற்கையறிவு-செயற்கையறிவோடுகூடி நிரம்புதல். ஆள்வினை-சோம்பல் அடையாமற்பொருட்டு, ஆன்றவறிவு-உயர்தற்குயேற்ற செயல்களும் அவைமுடிக்கும்விதமும் காடிப்பிழைபடாமல்எண்ணுதற்பொருட்டு [இவை இரண்டுமாட்டாலும் அச்செயற்குகோரணஞ் சொல்லப்பட்டது.]

குடிசெய்வ லென்னு மொருவற்குத்தெய்வ
மடிதற்றுத் தான்முந்துறும்

(ப-ரை) குடிசெய்வலென்னும் என் குடியினை உயரச் செய்யக்கடவே னென்றுகொண்டு(அதற்குயேற்றகருமங்களின் முயலுகிற), ஒருவற்கு-ஒருவனுக்கு, தெய்வம்-தெய்வமானது, மடி-உடைய, தற்று இறுக, வுத்திக்கொண்டு, தான்-தான், முந்துறும் முன்னேயுற்று நிற்தும் எ-று

(க-ரை) குடியையுயரச்செய்வேனென்னு மொருவனுக்குத் தெய்வமுன்னிற்கும் என்பதாம்

(வி-ரை) முன்னடப்பேர்செயல் ஊழ்மேல் யேற்றப்பட்டது

சூழாமற்றானே முடிவெத்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(ப-ரை) தங்குடியை - தங்குடிக்காந்தொழிலை, தாழாது - விரைந்து, உஞற்றுபவர்க்கு முயல்பவர்க்கு-அத்தொழில முடிக்கும்விதம் சூழாமல் ஆலோசிக்கவேண்டாமல், தானேமுடிவெய்தும- தானேமுடிவுபெறும்

(க-ரை) தங்குடிக்கானதொழிலைச்செய்வோர்க்கு அதுதானேமுடிவுபெறும் என்பதாம்

(வி-ரை) குடி அதற்காக்தொழிலுக்கு ஆகலால் ஆகுபெயர் மேழ்முந்து றதலால்பயன் சொல்லியபடி [இவை இரண்டுபாட்டாலும் அதற்கு மேழ்ந்து ணையாதல் சொல்லப்பட்டது.]

குற்றமிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றுமுலகு,

(ப-ரை) குற்றமிலனாய்-டிற்றமானவை செய்திலனாகி, குடிசெய்து-தன் குடியை உயரச்செய்து, வாழ்வானை-வாழ்பவனை, சுற்றமா-(அவனுக்குச்)சுற் றமாகவேண்டி, உலகு-உலகத்தார், சுற்றும்-(தாமேசென்று) சூழ்வர் எ-று

(க-ரை) குற்றமற்றவனாய் குடியையுயரச்செய்து வாழ்பவனை உலகத்தா ர்சூழ்வர் என்பதாம்

(வி-ரை) குற்றமாயின-அறநிதிகளுக்கு விரோதமான செயல்கள்தாமும் பயனடைதலினால் யாவரும்சென்றுசார்வரென்பதாம்

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்,



(ப-ரை) ஒருவற்கு-ஒருவனுக்கு, நல்லாண்மையென்பது - நல்லஆண்மை யென்று உயர்த்திச்சொல்லப்படுவது, தான்பிறந்த-தானுற்பவித்த, இல்லாண் மை-குடியை ஆளுந்தன்மையை, ஆக்கிக்கொளல்-தனக்கு உண்டாக்கிக் கொள்ளுதல் எ-று

(க-ரை) ஒருவனுக்குநாண்மையென்று சொல்லப்படுவது தன்குடியையு யர்த்திக்கொள்ளுதல என்பதாம்

(வி-ரை) போர்த்தொழிலினிக்குதற்கு நல்லாண்மையென விசேடித்தா குடியையாளுதற்றன்மை குடியிலுள்ளவரை உயரச்செய்துதன் வழிப்படுத்த ல்அதனைச்செய்துகொள்ளுதல் நல்லாண்மையாம் விதம் வருகிறபாட்டாற்பெ றப்படும்

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(ப-ரை) அமரகத்து-களத்தினிடத்து,(சென்றவர்பலராயினும்போர்தாங் குதல்) வன்கண்ணர்போல-சூரர்-(மேலாகுதல்)போல, தமரகத்தும் குடியினி டத்தும்-(பிறந்தவர் பலராயினும்) பொறை- (அதன்பாரம்) பொறுத்தல், ஆற்

றுவார்மேற்றே-வல்லவர்மேலதேயாம் எ-று

(க-ரை) போர்க்களத்தில் வீரர்மேலாகுதல்போலக் குடியடத்துப் பாரம் பொருத்தல் வல்லவர்மேலதாம்-என்பதாம்

(வி-ரை) நன்மைமதிக்கப்படுவோர் அவரேயென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் அவை செய்வாரடையும் சிறப்புச்சொல்லப்பட்டது.

குடிசெய்வார்க்கில்லைப் பருவமடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(ப-ரை) மடிசெய்து-குடியுயரச் செய்தலை நோக்காது காலத்தை நோக்கிசோம்பல்செய்துகொண்டு, மானம் - மானத்தையும், கருத- நினைப்பாராகில் கெடும்- (குடி) கெடும் ஆதலால், குடிசெய்வார்க்கு-தன்குடும்பத்தைபுயரச்செய்வார்க்கு, பருவம்-காலநியதி, இல்லை- இல்லை, எ-று

(க-ரை) குடும்பத்தையுயரச் செய்பவர்க்குக் காலநியதியில்லை - என்பதாம்

(வி-ரை) காலநோக்கி மடிசெய்தல் வெயில் மழை பனியுடைமைநோக்கிப்பின்னேசெய்வோமென்று ஒழிந்திருத்தல், மானங்கருதல்-இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற நான் இக்காலத்துத்துன்பமுறல்வேணுமென்று உட்கொள்ளுதல முன் இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது என்றது கொண்டு இவர்க்கும் வேண்டுமோமென்று நினைக்கினும் அது நினைக்கலாகாதெனமறுத்தப்படி.

# 103 - ஆம் - அதி - குடிசெயல்வகை, 439

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

(ப-ரை) குடும்பத்தை - தன்குடியை, குற்றமறைப்பான்-மூவகைத்துன்பங்களும் அடையாமற் காக்க முயல்வனது, உடம்பு - உடலம்,இடும்பைக்கே (முயற்சித்) துன்பத்திற்கே, கொள்கலங்கொல் -கொள்கலமா மவ்வனவோ [இன்பத்திற் காகுதலில்லையோ] எ-று.

(க-ரை) தன்குடியைக் காக்க முயற்சிசெய்பவனுடலந் துன்பத்திற்குக் கொள்வலாம்-என்பதாம்

(வி-ரை) என்குடிமுழுதும் இன்பமுற்று உயரவே நான் இருமையுபெறுதலால் இம்மெய் வருத்தமாத்திரம் எனக்குநல்லதென்றுமுயலும் அறிவுடையவன் அதனை எக்காலும் விடாமை நோக்கி இடும்பைக்கேகொள்கலங்கொல் லென்றார். இது குறிப்புமொழி-ஓ-அசை [இவை இரண்டுபாட்டாலும் அவர் அது செய்யுமியல்பு சொல்லப்பட்டது]

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளில்லாத குடி

(ப-ரை) அடுத்து-(தான் வீழும்போது) முட்டுக்கொடுத்து, ஊன்றும்-தாங்கவல்ல நல்லாள்-நல்லவாண்மகன், இலாத-பிறவாத, குடியாகிய (மரம்) இடுக்கண் - துன்பமாகிய (கோடாரியானது) கால்-(தன்) முதலை, கொன்றிட - வெட்டிசச்ாய்க்க, வீழும்- (ஒருபற்றில்லாமல்) வீழ்ந்திற்கும் எ-று

(க-ரை) தாங்குவாரில்லாத குடியாகியமரம்துன்பக்கோடரியானது வெட்டக்கெடும் என்பதாம்

(வி-ரை) முதல் அதன் வழிக்கு உரியார் - வளர்ப்பாரைப் பெற்றவழி வளர்ந்து பயன் படுதலும் அல்லாவழி கெடுதலும் உடைமையால் மரமாக்கினார் (இது குறிப்புருவகம்) [இதனால் அவரில்லாத குடிக்கு உளதாம் குற்றம்சொல்லப்பட்டது]

நூற்றிமூன்றும் - அதிகாரம்-குடிசெயல்வகை

முற்றிற்று.

## நூத்திநான்காம் அதிகாரம்

# உழவு.

அஃதாவது: சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாகிய உழுதற்றொழில் இது செய்விக்கும்போது மற்றவர்க்கும் உரித்தாகும் இது முன்னே குடியுயர்தற்கு ஏதுவென்ற முயற்சியாதலால் குடி செயல் வகையின்பின் வைக்கப்பட்டது

சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை

(ப-ரை) உலகம்-உலகமானது, சுழன்றும்-(உழுதலால் வருமெய் வருத்த நோக்கிப் பிறதொழில்களைச்செய்து) திரிந்தும், ஏர்ப்பின்னது-(முடிவிலே) ஏருடையார் வழியதாயிற்று, அதனால் - ஆகலால், உழந்தும் - எல்லாவருத்த முற்றும், தலை - தலைமையாகியதொழில், உழவே - உழுதலேயாம், - எ - று.

(க-ரை) உலகமேருடையார் வழியதாயிற்றுத் தலைமையான தொழிலுழவேயாம் என்பதாம்

(வி-ரை) ஏருடையார்க்கு ஆதலால், ஏர்-ஆகுபெயர். பிறதொழில்களாலே பொருள்பெற்றவிடத்தும் உணவின் பொருட்டு உழுவாரிடத்துச்சொல்லல் வேண்டுதலால் சுழன்றுமேர்ப்பின்ன துலகமென்றும், வருத்தம்இல்லையாயினும்பிறதொழில்கள் கடையென்பதுதோன்ற உழந்து முழவே தலையென்றுஞ்சொல்லினர் [இதனால்உழவினதுசிறப்புச்சொல்லப்பட்டது]

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து

(ப-ரை) உழவார் - உழுதல்வல்லவர், அஃதாற்றாது - அவ்வுழுதலைச் செய்யமாட்டாமல், எழுவாரையெல்லாம்-(பிறர் தொழில்களிலே) மேற்செல்வோர் யாவரையும், பொறுத்து - தாங்குதலால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய தேவர்க்கு ஆணி - அச்சாணியாவர் - எ-று

(க-ரை) உழுபவ ருலகத்தாராகிய தேர்க்கச்சாணியாவர் என்பதாம்.

(வி-ரை) உழுவாரென்பது உழுவிப்பாருக்கும் ஆம். உலகத்தாரென்றது-இங்கே அவ்வுழவர் நீங்கலானவரை கலங்காமல்நிறுத்தலின் உழுவார்ஆணி போலுதலால் ஆணியென்றார். (ஏகதேசஉருவகம்)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்

(ப-ரை) உழுது-(எல்லாரும் உண்ணும்படி) உழுதலைச்செய்து, உண்டு-(அதனால் தாமும்) உண்டு,வாழ்வாரே - வாழ்கின்றவரே, வாழ்வர் - (தமக்குரியராய்) வாழ்கின்றவர், மற்றெல்லாம்-மற்றவரெல்லாரும்,தொழுது - பிறரைத்தொழுது. உண்டு - (அதனால் தாமும்) உண்டு, பின்செல்பவர் - (அவரைப்) பின் செல்லுகின்றவர் — எ-று

(க-ரை) உழுதுண்டு வாழ்பவரே வாழ்பவர் மற்றவர் தொழுதுண்டு வாழ்பவர் என்பதாம்



(வி-ரை) தாமும் மனிதராய்ப் பிறந்திருந்தும் பிறரைத்தொழுது அவர் கொடுக்கத் தம்முயிர்காத்து அவர்பின் செல்வார் தமக்கு உரியரல்லரென்பது கருத்து.

பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்

(ப-ரை) அலகுடை (உழுதற்றொழிலால்) நெல்லையுடையராகிய, நீழலவர்-தண்ணளியுடையோர், பலகுடை நீழலும்-பலவேந்தர்க்குடை நிழலதாகிய (பூமிமுழுவதையும்) தங்குடைக்கீழ்-தம் (வேந்தர்) குடைக்கீழே, காண்பர்-பார்ப்பார்கள்-எ-று

(க-ரை) உழவு முயற்சிசெய்வோர் பலவேந்தர் பூமியையுந் தம்வேந்தர் குடைநிழலிற் காண்பர்-என்பதாம்

(வி-ரை) அலகு-கதிர்-அது இங்கே நெல்லுக்காயிற்று நீழல்போலுதலால் நீழலெனப்பட்டது. நீழலவரென்றது-இரப்போர்க்கெல்லாம் ஈதனோக்கி ஒற்றுமைபற்றி-தங்குடையென்றார். குடைநீழலென்பதும் ஆகுபெயர். தம் மரசனுக்கு வெற்றிபெருக்கி மண்முழுதும் அவனதாகக் கண்டிருப்பரென்பதாம்.

இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்

(ப-ரை) கை-(தம்)கையால், செய்து-(உழுதல்) செய்து, ஊண் மாலை

யவர்-உண்ணுதலை இயல்பாகவுடையவர், இரவார்-(பிறரைத்தாம்) இறவார், இரப்பார்க்கு-(தம்மை) இரப்பவர்க்கு, ஒன்று-அவர் (வேண்டிய) தொன்றை, கரவாது-ஒளிக்காமல், ஈவர்-கொடுப்பார்-எ-று

(க-ரை) உழுதுண்பவர் யாசியார் இரப்பவர்க்கு கொடுப்பர் என்பதாம்

(வி-ரை) கைசெய்தூண் மாலையவரென்பது எக்காலும் அழிவில்லாத செல்வமுடையாரென்னும் எதுவை உள்ளேகொண்டு நின்றது.

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை

(ப-ரை) உழவினர்-உழுதலையுடையவர், கைம்மடங்கின்-கை (அதனைச் செய்யாது) மடங்குமாயின், விழைவதூஉம் (யாவரும்) விரும்புமுணவும், விட்டேமென்பார்க்கு-துறந்தோமென்பார்க்கு, நிலை-(அவ்வறத்திலே) நிற்றலும், இல்லை-உளவாகா-எ-று

(க-ரை) உழவர் கைம்மடங்குமாகில், யாவரும் விரும்பு முணவுந் துறந்தவர்க்கு நிலையுமில்லை என்பதாம்





(வி-ரை) உம்மை இறுதியிலும்வந்து கூடியது. உணவில்லாமையால் தாமுண்டலும், இல்லறஞ்செய்தலும் யாவர்க்கு மில்லையாயின, அவருறுப்பு, மாதிரமாகிய கக அம்மாவிருக்கின் உலகத்தில் இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் கிடையா வென்பதாம் [இவ்விரண்டு பாட்டாலும் அதனைச்செய்வாரது சிறப்புச் சொல்லப்பட்டது]

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்

(ப-ரை) (ஒருநிலத்தினை யுழுதவன்) தொடிப்புழுதி - ஒரு பலப்புழுதி, கஃசா-காற்பலமாம்படி, உணக்கின் (அதனைக்) காயவிடுவானாயின் (அதனிடத்துச் செய்தபயிர்) பிடித்தெருவும்-ஒருபிடியில் அடங்கிய எருவும், வேண்டாது (இட) வேண்டாமல், சாலப்படும்-பருத்துவிளையும்-எ-று

(க-ரை) ஒருபலப்புழுதி காற்பலமாகக் காயவிடுவானாகில் பிடியெருப் பில்லாமலப்பயிர் விளையும் என்பதாம்

(வி-ரை) பிடித்த பிடியிலுள்ளது சான்று-சாலவென்றாயது

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு

(ப-ரை) (அப்பயிர்க்கு) ஏரினும் - அவ்வுழுதலினும், எருவிடுதல் - எருவு பெய்தல், நன்றா-நன்றாகும், கட்டபின் (இவ்விரண்டுஞ்செய்து) களைபிடுங் கியபின், அதன்காப்பு- அதனைக்காத்தல், நீரினும்-நீர்ப்பாய்ச்சலினும், நன்றா- நன்றாகும்-எ-று

(க-ரை) உழுதலினு மெருப்போடுகிறது நல்லது களைபிடுங்கிய பின் காத்தல் நீர்விடுதலினு நல்லது என்பதாம்

(வி-ரை) ஏர் உழுதலுக்கு ஆகுபெயர். ஆல்-அசை. காத்தல்-பட்டி மாடு முதலானவைகளால் அழிவடையாமற் காத்தல், உழுதல், எருப்பெய்தல். களைபிடுங்கல், நீர்ப்பாய்ச்சல், காத்தல் என்று இம்முறையினவாகிய ஐந்தும் வேண்டு மென்பதாம்

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்

(ப-ரை) கிழவன் (அந்நிலத்துக்கு) உரியவன், செல்லான் (அதனிடத்து நாள்தோறும்) போய்ப் பார்த்து வேண்டியவை செய்யானாகி, இருப்பின் (சோம்பி) யிருந்தால், நிலம்-அந்நிலம், இல்லாளின்-மனைவிபோல், புலந்து (தன்னுள்) வெறுத்து, ஊடிவிடும்-(அவனோடு) பிணங்கிவிடும்-எ-று

(க-ரை) உழுபவன் விளை நிலத்திற் போகாதிருந்தால் வந்நில மவனுடன் பிணங்கிவிடும்-என்பதாம்

(வி-ரை) செல்லுதல்-ஆகுபெயர் பிறரை ஏவியிராமல் தான் செல்லவே ண்டுமென்பது தோன்ற கிழவனென்றார். தன்னிடத்துவந்து வேண்டியவை



செய்யாது வேறிடத்திருந்தவழி மனையாள்போல் பிணங்குமென்றது அவன் போக மிழத்தனோக்கி [இவைமூன்றுபாட்டாலும் அது செய்யும்விதம் சொல்லப்பட்டது]

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்

(ப-ரை) இலமென்று-வறியேமென்றுசொல்லி, அசைஇ யிருப்பாரை-சோம்பி யிருப்பவரை, காணின்-கண்டால, நிலமென்னு நல்லாள்-நிலமகளென்று உயர்த்திச்சொல்லப்படுகிற நல்லாள், நகும்-(தன்னுள்ளே) சிறியாநிற்பள்-எ-று

(க-ரை) வறியோமென்று சோம்பலாயிருப்பவனை நிலமகள் கண்டால் சிரிப்பாள் என்பதாம்

(வி-ரை) உழுதல்முதலானவை செய்வோர் யாவர்க்கும் செல்வங்கொடுத்துவருகின்ற விசயபற்றி நல்லாளென்றும் அதுகண்டிருந்தும் அதுசெய்யாது வறுமையுறுகின்ற அறிவில்லாமைபற்றி நகுமென்றும் சொல்லினர். [இசனல் அது செய்யாதவிடத்து உண்டாம் இழுக்குச் சொல்லப்பட்டது] வருகின்ற அதிகாரமுறைக்குக் காரணமுமிது.

நூற்றிநான்காம்-அதிகாரம்-உழவு
முற்றிற்று.

---

## நூற்றி ஐந்தாம் அதிகாரம்

# நல்குரவு.

அஃதாவது: அனுபவிக்கப்படுவன யாவும் இல்லாமை.

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது

(ப-ரை.) இன்மையின் (ஒருவனுக்கு) வறுமைபோல், இன்னாதது-துன்பஞ்செய்வது, யாதெனின்-யாதென்றவினுவின், இன்மையின் - வறுமைபோல், இன்னாதது-துன்பஞ்செய்வது, இன்மையே-வறுமையே-எ-று.

(க-ரை) தரித்திரம்போலத் துன்பஞ்செய்வ தெதுவெனி லதுவே-என்பதாம்.

(வி-ரை) ஒப்பதில்லையெனவே மிகுந்த இல்லாமை சொல்லவேண்டாதாயிற்று.

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்

(வி-ரை) [illegible]

[illegible] வெளிவந்திருக்கின்றனவாம்.



இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலு நிரப்பு

(ப-ரை) நெருநலும்-நேற்றும், கொன்றதுபோலும்-கொன்றதுபோன்று (எனக்குத் துன்பங்களைச்செய்த) நிரப்பு - வறுமையானது, இன்றும்-இனறைக்கும், வருவதுகொல் (என்னிடத்து) வரக்கடவதோ (வந்தால்) இனியாதுசெய்வேன்-எ-று

(க-ரை) ஓ-அசைநிலை. நேற்றுக்கொன்ற வறுமையானது இன்றும் வருமோ எனபதாம

(வி-ரை) அத்துன்பங்கள் முன்சொல்லப்பட்டன. நேற்று மிகவும்வருந்தி வயிறுநிறைந்த ஒருவன்சொலலு.

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்று மகண்பா டரிது

(ப-ரை) நெருப்பினுள்-தீயிற்கிடந்து, துஞ்சலும் - தூங்கலும், ஆகும்-(மந்திரமருந்துகளால் ஒருவனுக்குக்) கூடும், நிரப்பினுள்-வறுமைவந்தவிடத்து, யாதொன்றும்-யாதொன்றிலும், கண்பாடு தூங்குதல், அரிது-இல்லை.

(க-ரை) தீயிலும் நித்திரை செய்யலாம் வறுமையிலே நித்திரைசெய்யக்கூடாது எனபதாம

(வி-ரை) நெருப்பினும் வறுமை கொடிதென்றபடியாயிற்று இதுவும் அவன்சொலலு [இவை நான்குபாட்டாலும் வறுமைப்பட்டவர்க்கு உண்டாம் குறறஞ் சொலலபபட்டது]

துப்புர விலலார் துவரத் துறவாமை
யுபபிற்குங் காடிக்குங் கூறறு

(ப-ரை) துப்புரவில்லார்-அனுபவிக்கப்படும் பொருளில்லாதவர், (தமமாலே செய்யத்தகுவது முழுதும் அறத்திலேயாகவும்) துறவத்துறவாமை-முழுதுந் துறவாதொழிதல், உப்பிற்குங் காடிக்கும் (பிறர் வீட்டிலுள்ள) உப்பிற்குங் காடிக்கும், கூற்று-யமனாவர்-எ-று

(க-ரை) வறியவர்கள் துறவாதிருத்தல் அயல்வீட்டு உப்புக்கும் காடி

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு

(ப-ரை) கரத்தல் (தமக்குள்ளதை) மறைத்தலை, கனவிலும் - சொப்பனத்திலும், தேற்றாதார்மாட்டு - அறியாதவரிடத்து இரத்தலும் - யாசித்தலும், ஈதலேபோலும் (வறியவர்க்கு) கொடுத்தலைப்போலும் எ-று.

(க-ரை) சொப்பனத்திலும் உளத்தைமறைத்தலில்லாதவரிடத்து யாசித்தலும் கொடுத்தலைப்போலாம் எனபதாம்.

(வி-ரை) தான் புகழ்தாராதாயினும் முன்னுண்டாகிய புகழ்கெடவாராமையால் ஈதலைப்போலு மென்றார். ... அசை

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது

(ப-ரை) கண்ணின்று (சொல்லமாட்டாமல்) முன்னின்ற மாத்திரத்தால், இரப்பவர் யாசிப்பவர் (உயிர்காத்தற்பொருட்டு) மேற் கொள்வது (இரத்தலை) மேற்கொள்வது கரப்பிலார் (அவர்க்குள்ளதை) ஒளிக்காமற் கொடுப்பவர், வையகத்து-உலகத்து, உண்மையால் (இருக்கின்றபடியினாலே யிறிவேதன்றிலன்று) எ-று.

(க-ரை) உள்ளபொருளை யொளியாது கொடுப்பவர் உலகி லிருக்கையால் யாசிப்பவர் யாசகத்தை மேற்கொள்வது-என்பதாம்.

## கOசு - ஆம் - அதி - இரவு. சாசகூ

வி-ரை. அவரில்லையாயின் மானம் விடமாட்டாமையால் உயிரை விடுவ ரென்பதாம்.

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

ப-ரை. கரப்பிடும்பை (உள்ளதை) ஒளித்தலாகிய நோயை, இல்லாரை-உடையரல்லாரை, காணின் - கண்டால் (மானம்விடாமலிரப்பவர்க்கு) நிரப்பிடும்பையெல்லாம் - வறுமையால்வருந் துன்பங்களெல்லாம், ஒருங்கு கெடும்-ஒருசேரக்கெடும். எ-று.

க-ரை. ஒளியாது கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவர்களுக்குத்துன்பங்கெடும்-என்பதாம்.

வி-ரை. ஒளித்தல் ஒருவருக்கு வேண்டுவதொன் றல்லாமையால், அதனை நோயென்றும், அந்நோயில்லாத இரக்கத்தக்கவரைக் கண்டபொழுதே

அவ்விரப்பவர் மிகுமகிழ்ச்சியின் ஞானாசலால், எல்லாமொருங்கு கெடுமென் றப்சொல்லினர். இன்மை-துன்பம் ஆகுபோமக்கு ஆகுபெயர். (6)

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

ப - ரை இகழ்ந்து (அவமதித்து) அவமதித்து, எள்ளாது - இழிவுசொல்லா மல், ஈவாரை (பொருள்) கொடுப்பவரை, காணின்-கண்டால், உள்ளம் (அவ் விரப்பவரது) மனம், மகிழ்ந்து-மகிழ்தல்செய்து, உள்ளுள்-உள்ளுள்ளே, உவப் பது-மலருந்தன்மையை, உடைத்து-உடையது. எ-று.

க - ரை. பொருள் கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவர் மனமகிழ்ச்சி யை யுடையது-என்பதாம்.

வி - ரை. இகழ்ந்தெள்ளா தெனவே - கன்குமதித்தலும், இனியவை சொல்லலும் கொள்ளப்படும். அவ்விரப்பவர்க்கு வறுமைத்துன்பம் கெடுவது மாத்திரமேயன்றி தம்மை அவர் ஐம்புலன்களாலும் பேரின்பமடைந்தவராக நினைத்தாலும், உள்ளுளுவப்ப துடைத்தென்றார், இவை. மூன்றுபாட்டாலும் இரக்கத்தக்கவ ரியல்பு சொல்லப்பட்டது. (7)

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று.

ப - ரை. இரப்பார் (வறுமையுற்) றிரப்பவர், இல்லாயின் - இல்லையா யின், ஈர்ங்கண்மாஞாலம்-குளிர்ந்த இடமுடைய பெரிய பூமியிலுள்ளவரது) செலவுவரவுகள், மரப்பாவை (உயிரில்லாத) மரப்பாவை, சென்றுவந்தற்று (சூத்திரக்கயிற்றால்) சென்று வருதல்கள்போலும். எ-று.

57



## ௧0௬ - ஆம் - அதி - இரவு.

க - ரை. யாசகரில்லாவிடில் பூமியிலுள்ளோர் செலவு வரவுகள் மரப்பா வை சூத்திரத்தா லாடுதல்போலுமாம்-என்பதாம்.

வி - ரை. ஐ-அசை. ஞாலம்-ஆகுபெயர். உவமேயத்துக்கு உவமானத் தோல் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. பூமியிலுள்ளாரென்றது இரப்பவ ரொழிந்தவரை அவர்க்கு ஈந்து புகழும் புகழும் புண்ணியமும் அடையாமை யால் உயிருடையரல்லரென்பதாம்.

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை.

ப - ரை இரந்துகோள் (அவரிடத்துச்சென்று ஒன்றனை) இரந்து கொள்ளுதலை, மேவாரிலா அக்கடை-விரும்புவா ரில்லாதவழி, ஈவார்கண் - கொடுப்பவரிடத்து, என்-என்ன, தோற்றப்-புகழ் உண்டாம் (யாதுமில்லை.) எ-று.

த - ரை. யாசிப்பவரில்லாவிடத் கொடுப்பவர்க்கென்ன புகழுண்டாம்-என்பதாம்.

வி - ரை. தோற்றம் - ஆகுபெயர் மேவுவாரென்பது - விகாரமாயிற்று கொடுத்தல் வல்லமை வெளிப்படாமையால், அதனாலே புகழுடையாரென்பதாம். (இவை இரண்டு பாட்டாலும் உலகிற்கு இரப்பார்வேண்டுமென்பது சொல்லப்பட்டது) 9

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

ப - ரை. (ஈவானுக்குப் பொருள் உதவாதவிடத்தே) இரப்பான்-இரப்பவன், வெகுளாமைவேண்டும் (இவன்) எனக்குக் கொடுக்கின்றிலனென்று அவனைக் கோபியாதொழிதல் வேண்டும் (அது வேண்டியபொழுது உதவாதென்பதற்கு வேறுசாட்சிவேண்டா) நிரப்பிடும்பை தானேயும்-வறுமையாகிய தன்னோய்தானேயும், கரி-சாட்சியாதல், சாலும்-அமையும். எ-று.

த - ரை. யாசிப்பவன் கோபியாம லிருக்கவேண்டும்-என்பதாம்

வி - ரை. யாவர்க்குந் தேடவேண்டுதலும், நிலையில்லாமையும், முதலாகிய பிறசாட்சிகளும் உண்டென்பது படுகின்றமையால், உம்மை எச்சவும்மை தனக்கே யல்லாமல் தன்னை யிரந்தவர்க்கும் அன்றைக்கன்று பொருள் சம்பாதித்தற்கு அவன்படுந் துன்பத்தைத் தனக்கேயாகவைத்துத் தான்படுகிற துன்பம் தானறிந்து கோபியாதிருக்கக் கடவனென்பதாம். (இதனால் அவர்க்கு அவசியமான துணிவு சொல்லப்பட்டது) 10

௱௬-ஆம்-அதிகாரம்-இரவு.
முற்றிற்று.

---

# ௱எ-ஆம்-அதி-இரவச்சம்.



அஃதாவது: மானங்கெடவரும் இரத்தலுக்கு அஞ்சுதல் அதிகாரமுறைமையும் இதனுலே விளங்கும்.

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.

ப-ரை. (ஒருவன்) கரவாது (தமக்குள்ளதை) ஒளிக்காமல், உவந்து (இவர் வரப்பெற்றேமென்று) உள்ளமகிழ்ந்து, ஈயும் கொடுக்கும், கண்ணன்னார்கண்ணும் - கண்போற் சிறந்தவரிடத்தும், இரவாமை - இரவாமல் வறுமைப்படுதல். கோடியும் (இரந்து செல்வமடைதலிற்) கோடி மடங்கு நன்றாம் எ-று.

க-ரை. ஒளியாது கொடுக்குங் கண்ணிற் சிறப்பானவரிடத்தும் யாசியாதிருத்தல் கோடி மடங்கு நன்மையாம் என்பதாம்.

வி-ரை. வறுமைமறைக்கப்படாத நட்பினரிடத்தும் இரக்கலாகாதென்பது படநின்றமையால், உம்மை உயர்வு சிறப்பு. அவ்விரவால் மானங்கெடாதென்ப தொன்றேயல்லாமல் அதற்கு மிகுதியுடைமையால் செய்வதல்லதோர் முயற்சி செய்யாது [illegible] செய்தலே நல்லதென்பது கருத்து.

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

ப-ரை. உலகியற்றியான் - இவ்வுலகத்தைப் படைத்தவன் (இதனிடத்து வாழ்வார்க்கு முயன்று வினைஞ்செய்தல் அல்லாமல், இரந்தும் - யாசித்தும், உயிர்வாழ்தல்வேண்டின் - வினைஞ் செய்தலை வேண்டி விதித்தானாயின் (அக்கொடியோன்) பரந்து (தானும் அவர்போல்) எங்குந்திரிந்து, கெடுக - கெடக்கடவன். எ-று.

க-ரை. பிரமன் உலகத்தோரை யாசகஞ்செய்யப் படைத்தானாகில் அவன் கெடக்கடவன்-என்பதாம்.

வி-ரை. மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாகிய உண்டியும், அதற்கு ஏதுவாகிய செய்தொழிலும், பழவினைவசத்தாற் கருவோடு கலந்த அப்போதே அவன் கற்பிப்பானென்றே அவ்வாறன்றி சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒருசெய்தொழிலாகக் கற்பித்தானாயின் அத்தீவினையால் தானும் அத்துன்ப மடையவேண்டு மென்பதாம். [இவ்விரண்டு பாட்டானும் அவ்விரவின் கொடுமை சொல்லப்பட்டது.] 2

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

ப - ரை. இன்மை - வறுமையால்வரும், இடும்பை-துன்பத்தை (முயற்சி செய்து நீக்கக்கடவோமென்று நினையாமல்), இரந்து தீர்வாமென்னும்-இரந்து நீக்கக்கடவோமென்று நினைக்கும், வன்மையின் - வல்லமைபோல் வன்பாட்டது-வலிமைப்பாடுடையது, இல்-இல்லை. எ-று.

க - ரை. வறுமைத்துன்பத்தை நீக்குவோமென்னும் வலிமைபோல வலிமையுடையதில்லை-என்பதாம்.

வி - ரை. அது நீக்கற்கு வழியாகிய முயற்சி இருக்க, வழியல்லாத இரவால் நீக்கநினைத்தலால் வன்மையாயிற்று. வலிமைப்பாடு முறட்டுத்தன்மை அது ஆவதை யாலோசியாதசெய்து நிற்றல். (இதனால் இரவுவறுமை-தீர்தற்கு வழியன்றென்பது சொல்லப்பட்டது. 3

இடமெலாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

ப - ரை. இடமில்லாக்காலும்-அனுபவிக்க வேண்டுவதில்லாமல் வறுமைப்பட்டவிடத்தும், இரவு - (பிறரிடத்துச்சென்று) இரத்தலுக்கு, ஒல்லா-உடன்படாத, சால்பு-நிறைவு, இடமெல்லாம்—உலகமெல்லாம் ஒருசேர இயைந்தாலும் கொள்ளாத் தகைத்தே-கொள்ளாத பெருமையுடைத்தே. எ-று.

க - ரை. தரித்திரனிடத்தும் யாசியாமையே பெருமை-என்பதாம்.

வி - ரை. அவ்விரத்தலைச் சால்பு விலக்கலால் இரவொல்லாமை அதன் மேல் ஏற்றப்பட்டது. (இதனால் அவ்வழி யல்லாததைச் சால்புடையார் செய்யாரென்பது சொல்லப்பட்டது.) 4

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

ப - ரை. தாள் (வழியாகிய) முயற்சி, தந்து (கொண்டுவந்து) தந்தது, தெண்ணீர் - தெளிந்தநீர்போலும், அடுபுற்கையாயினும்-சமைத்த கூழேயாயினும், உண்ணலினூங்கு (அதனை) உண்ணுதற்குமேல், இனியது—இன்பந்தருவது, இல்-இல்லை. எ-று.

க - ரை. முயற்சியால்வந்தது கூழாயினும் அதை யுண்ணுதல்போலின்பமுடையதில்லை-என்பதாம்.

வி - ரை. முயற்சிதந்தகூழ் அழுத்தமில்லாமல்தெளிந்த நீர்போன்றதாயி

னும் அவமானமாகிய இரவால்வந்ததல்லாமல் தம்முடைய தாகலால், அமிழ்தத்தோடு ஒக்குமென்பதாம்- (இதனால் வழியாலாகியது சிறிதெனினும் அதுசெய்யுமின்பம் பெரிதென்பது சொல்லப்பட்டது.) 5

ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

## கOஎ - ஆம் - அதி - இரவச்சம். ௬௫௩

ப - ரை. ஆவிற்கு (தண்ணீர்பெருதிறக்கு நிலைமையதாகிய (பசுவுக்கு, நீயென்று (தருமகோக்கி) 'இதற்குத் தண்ணீர்தரல்வேண்டுமென்று, இரப்பினும்-இரந்துசொல்லும்போதும், இரவின்-அவ்விரவுபோல், நாவிற்கு(ஒருவ)னுவிற்கு, இளிவந்தது-அவமானம்வந்தது, இல்-வேறில்லை. எ-று

க - ரை. பசுவிற்கு நீர்விடென்னும் யாசகம்போல நாவிற்கிழிவில்லை-என்பதாம்.

வி - ரை. ஆவைக் காப்பாற்றல் பெரிய வறமாகலால், ஆவிற்கென்றும், பொருள்கொடுத்துக் கொள்ளவேண்டாத எளிமைய தாகலால், நீரென்றும், இரக்கின்றோனுக்கு அவமானமாவது அச்சொல்லவே யாகலால், நாவிற்கென்றும், அது தான் எல்லா வவமானங்களிலும் மேற்படுதலால் இளிவந்ததில்லென்றும் சொல்லினர் (இதனால் அறத்தையும்முயன்று செய்வதல்லது இரந்து செய்யலாகாதென்பது சொல்லப்பட்டது.) 6

இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று

ப — ரை. இரப்பாரை யெல்லாம் — யாசிப்பவரை யெல்லாம், இரப்பன் (நான்) இரவாநின்றேன், இரப்பின் (உமக்கு) இரக்கவேண்டுமோகில், கரப்பார் (தமக்கு உள்ளதை) ஒளிப்பவரை, யிரவன்மின்-இரவாதிருங்கள். எ-று.

க - ரை. யாசிப்பாரை யெல்லாம்யாசித்தேன். நீங்கள் ஒளிப்பவரிடத்தில் யாசியாதிருங்கள்-என்பதாம்.

வி - ரை. இவ்வவமானச்செயலால் ஊட்டிவளர்த்த விடத்தும் உடம்பு நில்லாதாகலின் இது வேண்டாமென்பது தோன்ற இரப்பினென்றார். (இதனால் மானங்கெடவரு மிரவுவிலக்கப்பட்டது.) என்று இடைச்சொல் 7

இரவென்னு மேமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

ப - ரை. (இவ்வறுமையென்னுங் கடலை இதனாற்கடப்போமென்று நினைத்து ஒருவனேறிய) இரவென்னும்-யாசகமென்னும், ஏமாப்பில்-காவலற்ற, தோணி-மரக்கலம் (அதனிடத்தே ஒடுங்கால்) கரவென்னும் - ஒளித்தலென்னும்,

பார்-வன்னிலத்தோடு, தாக்க-தாக்குமாயின், பக்குவிடும்-பிளக்துபோம். எ-று.

க - ரை. யாகமென்னுந் தோணி ஒளித்தலென்னும் வலிய நிலந்தாக்கக் கெடும்-என்பதாம்.

வி - ரை. முயற்சியாற் கடப்பதனை இரவால் கடக்கலுற்றவன் அதன்கரை காணுமையால் ஏமாப்பிலேணி யென்றார் ஏமாப்பின்மை தோணிமேல் ஏற்றப் பட்டது. அது கடத்தற்கு ஏற்றதல்லாமையாலும், நிலமறியாது செலுத்தியவழி உடைதலாலும், அதனிடத்தே ஏறலாகாதென்பதாம். (இது உருவகம்) 8

## சடுசு கOஅ - ஆம் - அதி - கயமை.

*இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள*
*வுள்ள தூஉ மின்றிக் கெடும்.*

ப - ரை. இரவு (உடையார்முன் இல்லார்சென்று) இரந்து நிற்றலின் கொடுமையை, உள்ள-நினைத்தால், உள்ளம் (எம்) உள்ளம், உருகும்-கரைந்து ருகாநிற்கும், கரவு (இது அந்நிலையைக் கண்டிருந்தவர்) இல்லையென்றலின் கொடுமையை, உள்ள - நினைத்தால், உள்ளதூஉம் - அவ்வுருகு மளவுதானும், இன்றி-இல்லாமல், கெடும்-அழிந்துபோம் எ-று.

க - ரை. யாசிப்பவர் கொடுமையை நினைத்தால் மனமுருகுகின்றது. இல் லையென்னுங்கொடுமை நினைத்தால், உருகுமளவு மில்லாமற்கெடும்-என்பதாம்.

வி - ரை. இரவினும் கரவுமிகக்கொடிதென்றபடி. 9

*கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்*
*சொல்லாடப் போஒ முயிர்.*

ப - ரை. சொல்லாட (ஒளிப்பவர் இல்லையென்று) சொல்லிய மாத்திரத் தே, இரப்பவர்-இரப்பவர்க்கு, உயிர்-உயிரானது, போம்-போகாநின்றது, கரப் பவர்க்கு (இனிச்சொல்லுகின்ற) அவ்வொளிப்பவர்க்கு (உயிர்பின்னிருத்தலால்) யாங்கு-எப்புரையுள், ஒளிக்குங்கொல் (அப்பொழுது) புகுந்தொளித்து நிற்கு மோ. எ-று. ஓ-அசை.

க - ரை. யாசிப்பவர்க் கில்லையென்றால், உயிர்போகும் ஒளிப்பவர்க்குயி ரெங்கேயொளிக்கும்-என்பதாம்.

வி - ரை. உயிர்போதலாவது, இனியாமென் செய்வோமென்று எங்கிச் செயலற்றுநிற்றல். கேட்டாரைக் கொல்லவல்லதாகிய சொல் சொல்வாரைக் கொல்லுதல் சொல்லவேண்டாவாயினும் அது காண்கின்றிலம் இதுவென்றே வென்பதாம். (இவை மூன்றுபாட்டிலும் அவ்விரவின் குற்றமும் கரவின்குற்ற மும் சேர்த்துச்சொல்லப்பட்டன) 10



# ௱அ-ஆம்-அதி-கயமை.

அஃதாவது. முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்புவகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளைக் குறிப்பினுல் யாவர்க்கும் பொருந்த வைத்தமையால், அங்கே குறிப்பாற் சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச் சொல்லியவையும், ஆகிய குணங்களுள் யாதுமிலாராகிய கீழோரது தன்மை, அதனுல் இது எல்லாவற்றிற்கும் பின்வைக்கப் பட்டது.

## க0அ-ஆம்-அதி-கயமை. ௪௫௫

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

ப - ரை. கயவர் - கீழோர், மக்களேபோல்வர்-(வடிவால்முழுதும்) மக்களேபோ லிருப்பவர், அவரென்ன வொப்பாரி - அவர் அம்மக்களை யொத்தல் போன்றவொப்பு, யாம்-நாம், கண்டதில் (வேறிரண்டு சாதிகளிடத்துங்) கண்டதில்லை, எ-று.

க - ரை. கீழ்மக்கள் வடிவாலே மக்களை யொப்பாவார், அவர்களையொப்பானவரை யான் கண்டதில்லை-என்பதாம்.

வி - ரை. முழுதுமொத்தல் தேற்றேகாரத்தாற் பெற்றும். அவரென்றது அவரிடத்தேயுள்ள வொப்புமையை மக்கட்சாதிக்கும் கயவச் சாதிக்கும் வடிவொத்தலால் குணங்களினிருப்பினுலும், இல்லாமையாலும், அல்லது வேற்றுமை அறியப்படாதென்பதாம் (இதனுற் கயவரது குற்றமிகுதிசொல்லப்பட்டது.) 1

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

ப — ரை. நன்று-(தமக்கு) உறுதியாயினவைகளை, அறிவாரின்-அறிபவரின், கயவர்-(அவையறியாத) கீழ்மக்கள், திருவுடையர்-நன்மை யுடையரார்,

(அவர்போல்) நெஞ்சத்து-(தமது) நெஞ்சினிடத்து, அகலமிலர்-(அவை காரணமாக) கவலையிலர், (ஆகலால்) எ-று.

க - ரை. நன்மைகளை யறிபவரினும் நெஞ்சிற் கவலையில்லாதவ ராகிய கீழ்மக்கள் நன்மையுடையவர்-என்பதாம்.

வி - ரை. நன்றென்பது - சாதி யொருமை உறுதிகளாவன. இம்மை மறுமை வீடுகளுக்கு உரியவராகிய புகழ் புண்ணிய ஞானங்கள் இவைகளை யறிவார். இவை செய்யானின்றே அதிகமாகச் செய்யப் பெறுகின்றிலேமென்றும், செய்கின்ற இவைகளுக்கு இடையூறு வாமோவென்றும், இவைகளுக்கு மாறாகிய பழிபாவ மறியாமை யென்பவைகளில் யாதவினையுமோவென்று, இவ்வழியாலே கவலையுடையவர் கயவர் அப்புகழ் முதலானவைகளை விட்டு பழிமுதலானவைகளைச் செய்யானின்றும், ஒருகவலையு மில்லாதிருப்பராதலால், திருவுடையரெனக் குறிப்பாவிகழ்ந்தபடி. [இதனுல் பழிபாவ முதலானவைகளுக்கு அஞ்சாரென்பது சொல்லப்பட்டது] 2

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்

ப - ரை. தேவரனையர் கயவர் — தேவரும் கயவரும் ஒருதன்மையர், (அது எதனுலெனில்) அவரும் - (அக்கயவரும்) தேவர்போலே தம்மை நியமிப்பா ரில்லாமல், தாமேவன-தாம் விரும்புமவைகளை, செய் தொழுகலான்-செய்து-நடத்தலால் எ-று.

## ரு௱க௯ கO௭ - ஆம் - அதி - கயமை.

**க - ரை. தேவருங் கயவரு மொப்பாவார்-என்பதாம்.**

**வி - ரை. உயர்ச்சியும். இழிவுமாகிய தங்காரணவேறுபாடு குறிப்பால் தோன்ற நின்றமையால் இது புகழ்வார்போன்று பழித்தபடியாயிற்று. (இதனுல் விலக்கப் படுதலில்லாமல் வேண்டியது செய்வா ரென்பது சொல்லப்பட்டது.)** 3

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச்செம்மாக்குங் கீழ்

ப - ரை. கீழ் - கீழாயினோன், **அகப்பட்டியாவரை (தன்னிற்) குறைந்த பட்டியாய் நடப்பவரை, காணின்-கண்டானாயின் (அவன் அந்நடக்கையிலே) அவரின்-அவரைக்காட்டினும், மிகப்பட்டு-தான்மேம்பட்டு செம்மாக்கும் (அத**

ஞல் தன்மிகுதிகாட்டி) இறுமாப்பான் எ-று.

௧ - ரை. கீழ்மகன் பட்டியாய் நடப்பவரைக்கண்டா லதனினு மேலாக நடப்பான்-என்பதாம்.

வி - ரை. அகமாகிய மனம்பட்டிபோன்று வேண்டியபடி நடத்தலால் அகப்பட்டியென்றார். (இதனால் அவர் மேம்படும்விதம் சொல்லப்பட்டது.)

அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது

ப - ரை. கீழ்மக்களாசாரம்-கீழோரது ஆசாரம் (கண்டது உண்டாயின் அதற்குக்காரணம்) அச்சமே - அரசனாலே துன்பம் வருமென்று (அஞ்சும்) அச்சமே, எச்சம் (அது) ஒழிந்தால், அவா-அவாவப்படும் பொருள், உண்டேல் (அதனால்) உண்டாமாகில், சிறிது-சிறிது, உண்டாம்-உண்டாகும் எ-று.

௧ - ரை. கீழ்மக்கட் காசார மியல்பாக வில்லை-என்பதாம்.

வி - ரை. ஆசாரத்தின் காரணத்தை ஆசாரமென்றும், அவாவப்படுமதனை அவாவென்றும் சொல்லினார். கீழ்மக்களுக்கு-ஆசாரபெரும் பான்மை அச்சத்தாலும், சிறுபான்மை பொருட்பேற்றாலு மல்லாமல், இயல்பாக உண்டாகாதென்பதாம், (வேண்டியபடிசெய்தலே இயல்பு. ஆசாரஞ்செய்த லியல்பென்றென்பது இதனாற் சொல்லப்பட்டது) 5

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

ப - ரை. தாங்கேட்ட-தாங்கள் கேள்விப்பட்ட, மறை - இரகசியங்களை) உய்த்து (இடங்தோறும்) தாங்கிக்கொண்டுபோய், பிறர்க்கு - அன்னியருக்கு, உரைக்கலான்-சொல்லுதலால், கயவர்-கீழ்மக்கள், அறைபறையன்னர்-அறை, யப்படும் பறைபோல்வர் எ-று.

௧ - ரை. கீழ்மக்கள் பறைக்கொப்பாவார்-என்பதாம்.

## ௧0அ - ஆம் - அதி - கயமை. ௬௫௭

வி - ரை. மறையாவது வெளிப்பட்டால், குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லியசொல் பிறர் எவருக்கு மறைக்கவேண்டுமோ-அவர் உய்த்தென்றார். அவர்க்கு அது பெரும்பாரமாதல் நோக்கிப்பறை ஒருவன் கையால் தன்னை யறிவித்ததொன்றனை இடங்தோறுங் கொண்டுசென்று

அறியாதவர் யாவரையும் அறிவிக்குமாதலால் இது தொழிலுவமம். (இதனுல் அவரது செறிவில்லாமை சொல்லப்பட்டது.)

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

ப - ரை. கயவர்-கீழ்மக்கள், கொடிறுடைக்கும் (தம்) கதுப்பினை நெரிப்பதாக, கூன்-வளைந்த, கையரல்லாதவர்க்கு - கையினையுடையவரல்லாதவர்க்கு, ஈர்ங்கை (தாம்) உண்டு பூசியகையை (தெறிக்கவேண்டுமென்று) இரந்தாலும் விதிரார்-தெறியார், எ-று.

க - ரை. கீழ்மக்க ளிரப்பவர்க்குக்கொடார். வருத்துவோர்க்குக் கொடுப்பர்-என்பதாம்.

வி - ரை. வளைந்தகை-முறுக்கியகை, கீழோர்-இரப்பவர்க்கு ஒன்றுங் கொடார் தம்மை வருத்தப்படுத்துவோருக்கு எல்லாங் கொடுப்பரென்பதாம்.

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

ப - ரை. சான்றோர் - மேலாயினோர், சொல்ல (மெலியவர்போய்த் தங்குறையைச் சொல்லியவளவிலே (பயன்படுவர்) இரங்கி பிரயோசனப்படுவர், கீழ் மற்றைக் கீழாயினோர், கரும்புபோல்-கரும்பைப்போல், கொல்ல (வலியவரை யநருக்கியவிடத்தே) பயன்படும்-பிரயோசனப் படுவர், எ-று.

க - ரை. மேலோர் வருத்தஞ்சொன்னவுடன் பயன்படுவர் கீழோர் வருத்தத்தினுற் பயன்படுவர்-என்பதாம்.

வி - ரை. பயன்படுதல் - உள்ளது கொடுத்தல். கீழாயினோரது இழிவு தோன்ற-மேலாயினோரையும் உடன்சொல்லினர். (இவை இரண்டுபாட்டாலும் அவர் கொடுக்கும் விதம் சொல்லப்பட்டது.) 8

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

ப - ரை. கீழ்-கீழாயினோன், உடுப்பதூஉம் (பட்டுந் துகிலும்) உடுத் [illegible] யும், உண்பதூஉம் (பாலுஞ்சோறும்) உண்ணுதலையு [illegible] (அவைபொறுமல்) பிறர்மேல்-அச்சியர்மேல் (குற்றமில்லையாகவும்) வடுக்காண-குற்றமுண்டாக்க, வற்றுகும்-வல்லவனுவன், எ-று.

க - ரை. கீழ்மகன் பிறருண்டாலும் உடுத்தாலும் கண்டாற் பொறுமை கொள்வான்-என்பதாம்.

வி - ரை. உடுப்பது-உண்பது என்பன அவ்வத்தொழிலின்மேல் நின்றன. அவைகளால், பூணுதல் வாகனமேறல் முதலாகிய பிறதொழில்களும் கொள்ளப்படும். அவைகளைக் கண்டமாத்திரத்தே பொறாமைப்படுதலாலே காணின் என்றும், கேட்டவர் இக்குற்றம் அவரிடத்திலிருக்கலாமென்று உடன்படச் செய்தல் அரிதாகலால் வற்றாகு வென்றும் சொல்லினர். (இதனால் பிறர்செல்வம் பொறாமை சொல்லபபட்டது.) 9

எற்றிற் குறியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

ப - ரை. கயவர்-கீழோர், ஒன்று—ஒருதன்பம். உற்றக்கால் (தம்மை) அடைந்தவிடத்து (அதுவே சார்பாக) விரைந்து - விரைவுற்று, விற்றற்குரியர் (தம்மை பிறர்க்கு) விலைசெய்தற்கு உரியவராவர் (அதுவல்லாமல்) எற்றிற்குரியவர்-வேறே எத்தொழிலுக்கு உரியராவர், எ-று.

க - ரை. கீழோர் துன்பம் வந்தவிடத்துத் தங்களை விற்க வுரியராவர்-என்பதாம்.

வி - ரை. உணவில்லாமையாகவாவது வேறொன்றாகவாவது ஒருதுன்பம் வந்து உற்றமாத்திரத்தென்பது தோன்ற, ஒன்றுற்றக்காலென்றும் கொள்ளின் ஞர் எக்கீழ்மையை அறிந்து வேண்டாவென்றற்கு முன்னேவிற்று நிற்றலால், விரைந்தென்றும் சொல்லினர். இருதொழிலுக்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சம். (இதனால் தாமும் பிறர்க்கு அடிமையாய் நிற்பரென்பது சொல்லப்பட்டது. 10

நூற்றி எட்டாம்—அதிகாரம்—கயமை.
முற்றிற்று.
இரண்டாவது,
## பொருட்பால்-முற்றிற்று.

---

ஆக அதிகாரம் ௱அ-க்கு திருக்குறள் ௲அ௰.

இனி அப்பொருளைத் துணைக்காரணமாக வுடைத்தாய் இம்மையே பயப்பதாகிய இன்பத்தைச் சொல்லும்படி எடுத்துக்கொண்டார்.

மூன்றாவது,

# காமத்துப்பால்.

இவ்விடத்தே காமமென்றது ஒரேகாலத்திலே ஒரு பொருளால் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கிற ஐம்புலன்களையும் அநுபவித்தற் சிறப்புடைத்தாகிய காமவின்பத்தினை, இது புணர்ச்சி பிரிவு என இருவகைப்படும். * மற்றை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோவென்றால், இவர்பொருட்பாகு பாட்டினை அறம்பொருளின்பமென வடநூல் வழக்குப்பற்றிச்சொல்லுதலால், அப்படியே அவைகளைப் பிரிவினிடத்து அடக்கினாரென்றறிக. இனி அவைகளையே தமிழ்நூல்களோடும் பொருந்த புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும், பெரும்பான்மை பற்றிவகுத்து அவைகளைச் சுவைமிகுதி உண்டாக்க உலகநடையோடு ஒத்தலும் ஒவ்வாமையு முடையனவாக்கிச் சொல்லுகின்றார். அக்கைக்கோளிரண்டினுள்ளும், களவாவது பிணிமூப்பிறப்புகளில்லாமல் எக்காலும் ஒருதன்மையராய் உருவும், திருவும், பருவமும், குலமும், குணமும் அன்பும் முதலானவைகளாலே தம்முள் ஒப்புமை யுடையராகிய தலைவனும் தலைவியும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்துவருவது † அதனை எழுதிகாரத்திலே சொல்லத்தொடங்கி முதலில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.

---

## களவியல்.

### ௱௯-ஆம்-அதி-தகையணங்குறுத்தல்.

அஃதாவது; பொழில்விளையாட்டில் விருப்பால் மகளிர் கூட்டம் நீங்க அந்நிடத்துத் தனித்து நின்றவளை வேட்டைவிருப்பால் இளையர்நீங்கத்தனித்து வந்துகண்டதலைவன் அவளழகு தனக்கு வருத்தமுண்டாக்குதலைச்சொல்லுதல், இது கண்டபொழுதே தோன்றுவதாகலால், முதலிலே சொல்லப்பட்டது

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.

---

* (தொல்காப்பியம்) இன்பமும்பொருளு மறனுமென்றாங் - கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்-காமக்கூட்டங் காணுங்காலை-மறையோர் தேஎத்து மன்றலெட்டனுட்-றுறையமைநல்யாழ்த் துணைமையோரியல்பே.

† இறையனாரகப்பொருள் ஒப்புமுருவும் வெறுப்புமென்றாக் கற்புமேரு மெழிலுமென்றாச் - சாயலுநாணு மடனுமென்றா - நோயும்வேட்கையு நுகர்வு மென்றாங்-காவயின்வரூஉங் கிளவியெல்லா நாட்டிய மரபி னெஞ்சுகொளினல்லது காட்டலாகாப் பொருளவென்ப.

## ௪௧0 ௧0௯ ஆம் - அதி - தகையணங்குறுத்தல்.

இது தலைவியுருவு முதலானவை முன்கண்டறிந்தவை யல்லாமல்,
சிறந்திருக்கையால் அவளைத் தலைவன் ஐயுற்றது.

ப-ரை. கனங்குழை - இக்கனம்பொருந்திய குழையையுடையவிவள், அணங்குகொல் (இச்சோலையில் விருப்பனாகிய) ஒரு தெய்வப்பெண்ணோ (அல்லாமல்) ஆய்மயில் கொல்-ஒருமயில் விசேஷமோ (அல்லாமல்) மாதர் கொல்-ஒரு மானுடமாதரோ, என்னெஞ்சு-மாலும் (இவளை இன்னளென்று துணியமாட்டாமல்) மயங்காநின்றது, எ-று.

க-ரை. இவள் தெய்வப்பெண்ணோ மயிலோ மானிடப்பெண்ணோ, இன்னதென்றறியாதென் மனமயங்குகின்றது-என்பதாம்.

வி-ரை. ஓ-அசை. ஆய்மயில்-கடவுள் விசேஷமாக ஆராய்ந்து படைத்த மயில்-கனங்குழை ஆகுபெயர் * தெய்வப்பெண்போல் எழுதலாகாத வுருவம் தன்னை வருத்தலும்பற்றி-அணங்குகொலென்றும், மயில்போல் சாயலும்பொழிலிடத்து நிற்றலும்பற்றி, ஆய்மயில்கொலென்றும், தன்னெஞ்சு சென்றமையும் அவள் எதிர்நோக்கிய விதமும்பற்றி, மாதர்கொலென்றும் சொல்லினான்.

நோக்கினா ணோக்கெதிர் நோக்குதற் றாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

இது மானுடமாதரால் தெளிந்த தலைவன் அவள் பார்வையாலாகிய

வருத்தஞ் சொல்லியது.

ப - ரை. நோக்கினாள் (இப்படிப்பட்ட) அழகையுடையவள், நோக்கெதிர் (என்) பார்வைக்கெதிரே நோக்குதல், தாக்கணங்கு (தானே) தாக்கிவருத்துகிற ஒரு தெய்வப்பெண்தானைக் கொண்டன்னது (தாக்குதற்குச்) சேனையைக் கொண்டுவந்ததுபோலுந் தன்மையை, உடைத்து-உடையது. 1

க - ரை. இவளென்பார்வைக்கெதிரே பார்க்குதல் ஒரு தெய்வப்பெண் போர்செய்யச் சேனையைக் கொண்டுவந்ததுபோலும் தன்மையை யுடையது என்பதாம்.

வி - ரை. முன்பாட்டில் அணங்குகொலாய் மயில்கொலென்றமையால் இகாச்சுட்டு வருவிக்கப்பட்டது. எதிர்நோக்குத லென்றமையால் இது குறிப்பு நோக்காயிற்று. தன்னை அழகால் வருத்துதலோடு பின்னும் குறிப்புப்பார்வையால் வருத்துதல் சொல்லியபடி. 2

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

---

* (அகப்பொருள் விளக்கம்) மடமானோக்கி வடிவுங்கண்டே - விடமுன் சிறந்தழி வெய்துவதையம்.

## ௬0௯ - ஆம் - அதி - தகையணங்குறுத்தல். ௪௬௯

இதுவுமது.

ப - ரை. கூற்றென்பதனை-கூற்றுவனென்று (நூலோர்) சொல்லுவதை, பண்டறியேன் - முன் (கேட்டறிந்ததல்லது) கண்டறிந்திலேன், இனியறிந்தேன்-இப்பொழுது கண்டறிந்தேன் (அது) பெண்டகையால் - பெண்குணங்களுடனே, பேரமர் - பெரியவையாய்ப் போர்செய்கிற, கட்டு - கண்களையுடைத்து, எ-று.

க - ரை. தலைவன் தலைவியினுடைய கண்களையே யமனென்று கூறினான் என்பதாம்.

வி- ரை. பெண்டகை—நாணம், மடம், அச்சம், பயிர்ப்புஎன்கிற குணங்கள். அவை அந்தந்தக் குறிகளால் அறியப்பட்டன. அப்பெண்மைகுணங்களால் இன்பந்தருதலும் உண்டாயினும் அதிக துன்பந்தருதல் பற்றிக் கூற்றுவனுக்கிச் சொல்லினர்.

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்

பேதைக் கமர்த்தன கண்.

இதுவுமது.

ப - ரை. பெண்டகை-பெண்குணங்களுடைய, பேதைக்கு-இப்பேதைக்கு கண்—கண்கள், கண்டார் (தம்மைக்) கண்டவாது, உயிருண்ணுங் தோற்றத்தால் உயிரையுண்ணுந் தோற்றத்துடனேகூடி, அமர்த்தன-மாறுபட்டிருந்தன, எ-று.

க - ரை. இப்பெண்ணின் கண்கள் கண்டவர்களுயிரை யுண்ணுங்காட்சி யாக மாறுகொண்டிருந்தன-என்பதாம்.

வி - ரை. கண்கள் குணங்களுக்கு பேதமைக்கும் தகாமற் கொடியவாயி ருந்த வென்பதாம். 4

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
ஞேக்கமிம் மூன்று முடைத்து.

இதுவுமது.

ப - ரை. கூற்றமோ-என்னை (வருத்துதலாலே) கூற்றமோ, கண்ணோ (என்மேலோடுதலாலே) கண்ணோ, பிணையோ - இயல்பாக (அஞ்சுதலாலே) பெண்மானோ (அறிகின்றிலேன்) மடவாளுேக்கம் இம்மாது (கண்ணின்) பார்வையானது, இம்மூன்றும்—இம்மூன்றினுடைய, தன்மை-தன்மைகளையும், உடைத்து—உடைத்தாயிருக்கின்றது, எ-று.

க - ரை. இவள்பார்வை யமனோ கண்ணோ மானோ அறியேன்-என்பதாம்.

வி - ரை. இன்பமும் துன்பமும் ஒருசேரச் செய்யாகின்றதென்பதாம். (வருத்தலாகித் தொழில்பற்றிவந்த ஐயநிலை யுவமம்.) 5

## அசாஉ கOகூ - ஆம் - அதி - தகையணங்குறுத்தல்.

கொடும்புருவங் கோடா மறைப்பினடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

இதுவுமது.

ப - ரை. கொடும்புருவம் (பிரியாகட்பாகிய) கொடிய புருவங்கள், கோடாமறைப்பின் (தாம்) செவ்வையாயிருந்து விலக்கினல் (அவைகளைக் கட்டு) இவள்கண்-இவளதுகண்கள், நடுங்கஞர்-நடுங்குதற்கு ஏதுவாகிய துயரை, செயல் (எனக்குச்) செய்யமாட்டா, எ-று.

க - ரை. இவளுடைய கண்கள் புருவங்களால் மறைக்கப்பட்டா லெனக் குத் துன்பத்தைச் செய்யாவாம்-என்பதாம்.

வி - ரை. நட்பினரைக் கண்டித்துப் புத்திசொல்வோர் தாம் செம்மை யுடையரா யிருக்கவேண்டுதலால் - கோடாவென்றும், துயர்செய்கின்ற அவைக

ளூர்கும் உறுகின்ற தனக்கும் நடுநின்று விலக்கும்போதும், சிறிது சந்துகிடைக்கப்பெற்றால், அதுவழியாகவந்து துன்பஞ்செய்யுமாகலால், மறைப்பினென்றும் சொல்லினர். தாம இயல்பாகக் கோணுதலுடைமையால் அவை நேரே மிகு திக்கண்மேல் சென்றிடிக்க மாட்டாவாயினவென்பது படநின்றமையால் மண்ணென்றது ஒழியிசையில் வந்தது. 6

கடாக் களிற்றின்மேற் கட்படா மாதர்

படாஅ முலைமேற் றுகில.

இது அவளது முலைகளினாலாகிய வருத்தஞ் சொல்லியது.

ப - ரை. மாதர் - இம்மாதருடைய, படா முலைமேற்றுகில் - சாய்தலில்லாத முலைகளின்மேலிட்ட ஆடையானது (அவை கொல்லாமற்காத்தலால்) கடாஅக்களிற்றின்மேல் (கொல்லுவதாகிய) மதயானையின் மேலிட்ட கட்படாம்-முகபடாத்தினையொக்கும், எ-று.

க - ரை. இவள் முலைகளின்மேலே தரித்த வஸ்திரமானது யானைமுகத்தின்மேலே தரித்த வஸ்திரத்தையொக்கும்-என்பதாம்.

வி - ரை. கண்ணை மறைத்தல்பற்றி கட்படாமென்றார் ஆடையால் மறைத்தல் நாணுடைய மகளிர்க்கு இயல்பாகலால் அவ்வாடையோடே அவைகளின் வெம்மையும் பெருமையுங்கண்டு இவவளவு வலிமையுடையவை இனி என்னூஞ் சாயாவென்று நினைத்துப்படாஅ முலையென்றார். உவமானம் சிறிது மறைபாவழியும் சொல்லுமென்பது தோன்ற நின்றது. 7

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு

ணண்ணாரு முட்குமென் பீடு.

இது அவளது நெற்றியாலாகிய வருத்தஞ்சொல்லியது.

ப - ரை. ஞாட்பினுள் - போர்க்களத்து, நண்ணாரும்-எதிர்த்தில்லாத பகைவரும், உட்கும் (எதிர்த்தவர் வாய்ச்சொற்கேட்டு) அஞ்சுதற்கு ஏதுவாகிய, என்



பீடு-என்வலி, ஒண்ணுதற்கு (இம்மாதருடைய) ஒளிபொருந்திய நெற்றியென்றற்குமே, உடைந்ததே-அழிந்துவிட்டது, எ-று.

க - ரை. என்னுடைய வலிமையானது இவளுடைய நெற்றிக்கழிந்தது என்பதாம்.

வி - ரை. மாதரென்பது அதிகாரத்தால் வந்தது. ஞாட்பினுளென்பத

ளுல்-பகைவராதல்பெற்றும். பீடென்ற பொதுமையால் மனவலியும் காயவலி யும்கொள்க. ஒ ஒவென்னும் வியப்பினிடத்துக் குறிப்பு அவ்வலிகளின் பெருமையும், நெற்றியின் சிறுமையும் தோன்றநின்றன. கழிந்ததற்கிரங்களால் - தற்புகழ்ச்சி அன்றுபிற்று. 8

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

இது அணிகலத்தினாலாகிய வருத்தஞ்சொல்லியது.

ப - ரை. பிணையேர்மடநோக்கு (புறத்திலே) பெண்மான்போன்ற அஞ்சுதலுடைய பார்வையையும், நாணும் (அகத்தில்) நாணினையும், உடையாட்கு - உடைய இவளுக்கு (ஒத்தமையுடைய இப்பார்வையும் நாணமும் ஆகிய அணிகளே போதுமானவையாயிருக்க) ஏதிலதந்து-வேற்றுமையையுடைய அணிகளையுண்டாக்கி, அணி-அணிதல், எவன்-என்னபயனுடைத்தது, எ-று.

க - ரை. இவட்குப் பார்வையு நாணமு மாபரணங்களாயிருக்க, வேறுபரணங்களை யணிதலென்பயன்-என்பதாம்.

வி - ரை. ஒ அசை. இவ்வேற்றுமையையுடைய அணிகள் இவளுக்குப் பாரமும் எனக்கு வருத்தமும் ஆமென்று எண்ணாமையால், அணிந்தார் அறிவிலா ரென்பதாம். 9

உண்டார் கணலல தடுநறாக் காமம்போற்
கண்டாற் மகிழ்செய்த லின்று.

இது தலைவிகுறிப்பறியலுற்ற தலைவன் சொல்லியது.

ப - ரை. அடுநறா - காய்ச்சப்பட்ட மதுவானது, உண்டார்கணல்லது (தன்னை) உண்டவரிடத்தே யல்லாமல், காமம்போல் கண்டார் - கண்டவரிடத்தே, மகிழ்செய்தல்-மகிழ்ச்சிசெய்தலை, இன்று-உடைத்தன்று, எ-று.

க - ரை. மதுவுண்டால்மகிழ்ச்சி காமங்கண்டால்மகிழ்ச்சிதரும் என்பதாம்.

வி - ரை. காமமென்றது-அதை அனுபவிப்பதற்கு இடமாகிய மகளிரை, மகிழ்ச்சிசெய்தலிலே காமமானது மதுவினும் சிறந்ததேயெனினும் இவள்குறிப்பை ஆராய்ந்தறியாமையால், யான் அது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க. 10

நூற்றி யொன்பதாம்-அதிகாரம்-தகையணங்குறுத்தல்.

முற்றிற்று.

# ௱௰-ஆம்-அதி-குறிப்பறிதல்.

அஃதாவது; தலைவன் தலைவிகுறிப்பை அறிதலும், தோழி குறிப்பை அறிதலும், அத்தோழி அவ்விருவர் குறிப்பையும் அறிதலும் ஆம். தலைவி யழகைக்கண்டு வருந்தியதலைவன் தலைவியைக் கூடும்போது, இது வேண்டுமாதலால், தகையணங்குறுத்தலின் பின்வைக்கப்பட்டது, உ-ம்.*

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

இது தலைவன் தலைவியுள்ளத்துக் குறிப்பை
அவள் பார்வையால் அறிந்தது.

ப - ரை. இவளுண்கண்-இவளுடைய (மை) யுண்ட கண்களில், உள்ளது-இருக்கின்ற பார்வையானது, இருநோக்கு (இப்பொழுது என்மேல்) இரண்டு பார்வையாயிற்று (அவற்றுள்) ஒருநோக்கு-ஒரு பார்வையானது, நோய்நோக்கு (என்னிடத்து) நோய்செய்யும் பார்வையாம், ஒன்று-மற்றொரு பார்வையானது, அந்நோய்மருந்து-அந்நோய்க்கு மருந்தான பார்வையாம், எ-று.

க - ரை. இவள் பார்வையானது இரண்டு, ஒன்று நோய்செய்யும் பார்வை, மற்றொன்று அந்நோய்க்கு மருந்தானபார்வை-என்பதாம்.

வி - ரை. நோய்செய்யு நோக்கு அவளது மனத்தில் உண்டாகிய காமக் குறிப்பினை வெளிப்படுத்துகின்ற பார்வை மருந்தாய நோக்கு-தன்னிடத்து உண்டாகின்ற அன்பினுலாகிய பார்வை எனக்கு இவ்வருத்தம் தீரும்வழியும் உண்டாயிற்றென்பதாம். 1

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

இதுவுமது.

ப - ரை. கண் (இவளது) கண்கள், களவுகொள்ளுஞ் சிறுநோக்கம்-யானறியாமல் என்னைப் பார்க்கின்ற சிறியபார்வை, காமத்தில் !! மெய்யுறுபுணர்ச்சியில், செம்பாகமன்று - ஒத்தபாதியளவன்று, பெரிது (அதனிலும்) மிகும், எ-று.

க - ரை. இவள் குறும் பார்வை காமத்தினு மதிகம்-என்பதாம்.

* (தொல்காப்பியம்) நாட்டமிரண்டு மறிவுடம்படுத்தற்குக் கூட்டியுரைக்

ருங் குறிப்புரையாகும்-குறிப்பே குறித்துக்கொள்ளுமாயின்-ஞங்கைை கிசழுமென் மனூர் புலவர்.

!! மெய்யுறுபுணர்ச்சி-மெய்தொட்டுப் புணரும் புணர்ச்சி, உள்ளப்புணர்ச்சி யொன்று வேறேயிருக்கையால் இப்படி சொல்லப்பட்டது.

## கக0 - ஆம் - அதி - குறிப்பறிதல். சகரு

வி - ரை. நான் பார்த்தபோது நாணித் தலைகுனிந்தும் பாராவிடத்தே உற்றுப்பார்த்தும் வருதலாலே, கண்களவு கொள்ளுமென்றும், அது உண்டாங்காலம் சிறிதாகலால் சிறுநோக்கமென்றும் அப்பார்வை உட்கருத்து உள்ளவிடத்தே உண்டாவதாகலால், இனி இவளைக்கூடுதல் நிச்சயமென்றற்கு செம்பாகமென்று பெரிதென்றும் சொல்லினன். 2

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்

இது தலைவன் தலைவியது குறிப்பைப் பார்வையாலும்,
நாணினாலும் அறிந்தது.

ப - ரை. அவள்-அம்மாது, நோக்கினாள் (நான்பாராதவளவிலே தான் என்னை அன்போடு) பார்த்தாள், நோக்கிப்-பார்த்து, இறைஞ்சினாள்-ஒன்றை (உட்கொண்டு நாணித்) தலை குனிந்தாள், அஃது-அச்செய்கைக்கு ஏதுவாகிய குறிப்பானது, யாப்பினுள் - (எம்மிருவரிடத்தும் தோன்றிய) அன்பாகிய பயிருள், அட்டிய நீர் (அதுவளரும்படி) வார்த்த நீராயிற்று, எ-று.

க - ரை. அவள் பார்த்தாள் பார்த்துத் தலைகுனிந்தாள் அவள் குறிப்பு இருவரன்பும் வளருந் தண்ணீராம்-என்பதாம்.

வி - ரை. யாப்பு-கட்டு யாங்கினுளாகிய அன்பை யாப்பென்றார். (ஏகதேச உருவகவணி.) 3

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்

இது தலைவன் தலைவிகுறிப்பை நாணினாலும்,
மகிழ்ச்சியாலும், அறிந்தது.

ப - ரை. யானோக்குங்காலை (தன்னை) நான் பார்க்கும்போது, நிலனோக்கும் (எதிர்பாராமல் நாணித் தலைகுனிந்து) நிலத்தைப்பாரா நிற்கின்றாள், நோக்காக்கால் (அதையறிந்து நான்) பாராதபோது, தானோக்கி - தான் (என்னைப்)

பார்த்து, மெல்லநகும் (தன்னுள்ளே) மகிழாநிற்பள், எ-று.

க - ரை. யான் பார்க்கும்போது பூமியைப்பார்க்கிறாள், யான் பாராத போது தான்பார்த்து நகைக்கிறாள்-என்பதாம்.

வி - ரை. மெல்ல நகுதல் வெளிப்படாமல் மகிழ்தல் அதனாலே புணர்தற் குறிப்பு இனிது விளங்குத லறிந்தது. 4

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போலநகும்.

59.

## ௬௯௫ ௧௧0 - ஆம் - அதி - குறிப்பறிதல்.

இதுவுமது.

ப - ரை. குறிக்கொண்டு (நேரே) குறிக்கொண்டு, நோக்காமையல்லால் பாராமை மாத்திரமேயல்லது, ஒருகண்-ஒருகண்ணை, சிறக்கணித்தாள்போல-சுருக்கினவள்போல, நகும் (என்னைப் பார்த்துத் தன்னுள்ளே) மகிழாநின்றாள், எ-று.

க - ரை. நேரேபாராமல் ஒருகண்ணைச் சுருக்கினவள்போல நகைக்கின்றாள்-என்பதாம்.

வி - ரை. சிறங்கணித்தல் சிறக்கணித்தாளெனச் செய்யுள் விகாரமாயிற்று, சிறங்கணித்தல் சுருக்குதல் அதுவும் வெளிபடத் தோன்றாமையால் போல வென்றார். பார்த்தென்பது வருவிக்கப்படுதலால் சொல்லெச்சம், இவள் இவனை அடைவது நிச்சயமென்பது குறிப்பெச்சம். 5

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

இது தோழிதூரப்படுத்திய விடத்தே அவளது குறிப்பை
அறிந்த தலைவன் தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை. உறாஅ தவர்போல் (புறத்திலே அயலார்போல், சொல்லினும் கடுஞ்சொல்) சொல்லினும், செறாஅர்சொல் (உள்ளே) பகையாதவர்சொல் (பின் பிரயோசனப்படுதல்) ஒல்லையுணரப்படும் (குறையிரந்தவராலே) கடிதில் அறியப்படும், எ-று.

க - ரை. புறம்பாகக் கடுஞ்சொல் சொல்லினும் உள்ளே பகையாதவர் சொல் சீக்கிரமறியப்படும்-என்பதாம்.

வி - ரை. கடுஞ்சொல் இவ்விடம் மிகுந்த காவலுடையது வாராதேயு மென்று சொல்லுகை முதலானவை செறாரெனவே அருளுடைமை பெறப்பட்டது தன் குறைமுடிக்க நினைத்தே தூரப்படுத்தலைக் குறிப்பாலறிந்து உவகைய

வின்மேல்வைத்துச் சொல்லியபடி இது வருகிறபாட்டிற்கும் ஒக்கும். 6

செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறுஅர்போன் றார்றார் குறிப்பு.

இதுவுமது.

ப - ரை. செறுஅச் சிறுசொல்லும்-பின் இனிதாவதாய் முன்னே இன்னாதாகிய சொல்லும், செற்றார் போனோக்கும் (உள்ளே பகையாதிருந்தே புறத்தே) பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும், உறுஅர்போன்றுற்றார் - அயலோர் போலிருந்து கட்பாயினவர்க்கு, குறிப்பு - ஒரு குறிப்புப்பற்றிவருவனவாம், எ-று.

க - ரை. உள்ளன்பாகச் சொல்லுங் கடுஞ்சொல்லும் பகையாது. பார்க்குங் கோபப்பார்வையும், ஆசைக்குறிப்பால் வரும்-என்பதாம்.

## ககO - ஆம் - அதி - குறிப்பறிதல். சகூஎ

வி - ரை. குறிப்பு ஆகுபெயர் இவை உள்ளே ஒருபயன் குறித்துச்செய்கின்றவை இயல்பல்ல வாகலால். இவைகளுக்கு அஞ்சவேண்டாமென்பதாம்.

அசையியற் குண்டாண்டோ ரேஎர் யானோக்கப்
பசையினள் பையநகும்-

இதுவுமது.

ப - ரை. யானோக்க (என்னை நீக்குகின்ற சொல்லுக்குப் பொறுமல்) நான் இரந்து நோக்கியவிடத்து, பசையினள் (அதுதெரிந்து) இரக்கினவளாகி, பையநகும்-உள்ளே நகாநின்றாள் (அதனால்) அசையியற்கு-அசைந்த சாயலுடையவளுக்கு, ஆண்டு - அன்னவையினிடத்து, ஒரேஎர்-ஒருநன்மைக்குறிப்பு, உண்டு-உண்டு, எ-று.

க - ரை நான்பார்த்தவிடத்தி லிரங்கிப்பார்த்து, நகைக்கிறு வதனாலே நலமுண்டு-என்பதாம்.

வி - ரை. ஏர்-ஆகுபெயர். அக்குறிப்பு-இனி பழுதாகா தென்பதாம். 8

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

இது தோழிமதி யுடன்பட எண்ணித் தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை ஏதிலார்போல-முன்னறியாதவர்போல. பொதுநோக்கு-நோக்குதல் (ஒருவரையொருவர்) பொதுப்பார்வையாகப்பார்த்தல், காதலார் கண்ணே-

ஆசையையுடைய இவ்விருவரிடத்தும், உள்-உண்டாகின்றன, எ-று.

க - ரை. அயலாரபோலப் பொதுப்பார்வை பார்த்த லாசையுள்ளவரிடத் துண்டு-என்பதாம்.

வி - ரை. பொதுநோக்கு-யாவரிடத்தும் ஒருதன்மையாகிய பார்வை. பார்த் தற் றொழிலொன்றே யாயினும் இருவரிடத்தும் உண்டாதலாலும், ஒருவரிடத் திலேயும் குறிப்பு வேறுபட்டால் பலவாமாகலாலும், உளவெனப் பன்மையா லே சொல்லப்பட்டது. இருவரும் மறைமறைத் தண்டோர் மகிழ்ச்சிபோல் உள் ளத்துள்ள மகிழ்தலால்—அதுபற்றிக் காதலாரென்றும், அதுபுறத்து வெளிப்ப டாமையால், ஏதிலாரென்றும் சொல்லினர். 9

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில

இதுவுமது.

ப - ரை. (காமத்திற்குரிய விருவருள்) கண்ணொடு (ஒருவரது) கண்க ளோடு, கண்ணிணை (ஒருவர், கண்கள், நோக்கொக்கின்-பார்வையால் ஒக்குமா யின், வாய்ச்சொற்கள், (உண்மைதோன்றச் சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள், என்ன பயனும்-ஒருபயனும், இல-உடையனவல்ல, எ-று.

## ௲௱அ ௧௧௧ - ஆம் - அதி - புணர்ச்சிமகிழ்தல்.

க - ரை. இருவர் பார்வையு மொக்குமாயின் வாய்ச்சொற்கள் பயனில் லன-என்பதாம்.

வி - ரை. பார்வையொத்தல் ஆசைப்பார்வை யுடையனவாதல், வாய்ச் சொற்கள் - மனதில்லாமல் வாயளவிலே தோன்றுகின்ற சொற்கள் இருவர் சொல்லும்கேட்டு உலகியலின்மேல் வைத்துச் சொல்லியபடி. இருவர்சொல் லுமலிதமாவன, அவன் புணர்காவலின்மேலும், அவன் கேட்டதின்மேலும் சொல்லுவன, பயனில் சொற்க ளாகையால், இச்சொற்கள் கொள்ளப்படா வென்பதாம். 10

நூற்றிப்பத்தாம் அதிகாரம்-குறிப்பறிதல்.
முற்றிற்று.

---

# ௧௧௧-ஆம்-அதி-புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது: அப்படிக்குறிப்பறிந்து புணர்ந்ததலைவன் அப்புணர்ச்சியை மகிழ்ந்து சொல்லுதல் அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும். உ-ம் *

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள

இது தலைவன் † இயற்கைப் புணர்ச்சி முடிவிலே சொல்லியது.

ப - ரை. கண்டு (கண்ணாலே) கண்டும், கேட்டு (செவியாலே) கேட்டும் உண்டு (நாவாலே) உண்டும், உயிர்த்து (மூக்காலே) மோந்தும், உற்றும் (மெய்யாலே) தீண்டியும், அறியும்-அனுபவிக்கப்படுகிற, ஐம் புலனும்-ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே - இவ்வொளிபொருந்திய வளையையுடையவளிடத்தே, உள-உண்டாயின, எ-று.

க - ரை. கண்ணாற்கண்டும், காதாற்கேட்டும், நாவானுண்டும், மூக்கால் மோந்தும், மெய்யாற் றீண்டியும், அனுபவிக்கப்படும் ஐம்புலன்களும் ஒள்ளிய வளையல்களையுடைய விவளிடத்தே உள்ளன-என்பதாம்.

---

* (அகப்பொருள் விளக்கம்) இரந்து பின்னிற்றல் சேண்படு கிளத்தல், பின்னிலைநிற்றலு முன்னிலையாக்கலு, மெய்தொட்டுப் பயிறலும் பொய்பாராட்டலு, மிடம்பெற்றுத் தழாஅலும்வழிபாடு மறுத்தலு, மிடையூறுகிளத்தலு நீடு நினைந்திரங்கலு, மறுத்தெதிர் கோடலும்வறிதுநகைதோற்றலு, முறுவற்குறிப் புணர்தலு முயங்குதலுறத்தலும், புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவு, முணர்த்தியதலைவிற் புணர்ச்சியின் விரியே

† இயற்கைப் புணர்ச்சி-ஒரு ராஜகுமாரன் வேட்டைக்குப்போய் மலைச் சோலையிலே விளையாடவந்து தனித்துநின்ற-குறக்கன்னியைக்கண்டு கூடியது.

## ௧௧௧ - ஆம் - அதி - புணர்ச்சிமகிழ்தல். ௪௯௧

வி - ரை. உம்மை முற்றும்மை தேற்றேகாரம் வேறோரிடத்தில்லாமை விளக்குகின்றது. வேறுவேறு காலங்களிலே வேறுவேறு பொருள்களாலே அனுபவிக்கப்படுகிற புலங்களெல்லாம் ஒரேகாலத்தே இவளிடத்தே என்னால் அனுபவிக்கப்பட்டன-வென்பதாம்.

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

இது தலைவன் * இடந்தலைப்பாட்டிலே சொல்லியது.

ப - ரை. பிணிக்கு (வாதமுதலாகிய) பிணிகளுக்கு, மருந்து-மருந்தாவன, பிற (அவைகளுக்கு நிதானமானவையல்லாமல்) விரோதமாகிய குணத்தையுடையவையாம் (அப்படியல்லாமல்) அணியிழை—இவ்வணியினையுடையவள், தன் நோய்க்கு-தன்னாலாகிய பிணிக்கு, தானேமருந்துமாயினள்.

க - ரை. முப்பிணிகளுக்கு மருந்துகள் வேறேயுள்ளன ஆபரணத்தையுடையவள் தன்காமநோய்க்குத் தானேமருந்தானாள்—எனபதாம்.

வி - ரை. இயற்கைப் புணர்ச்சியை நினைத்து முன் வாராநின்றானாகலால் தன்னோவொன்றும், அவ்வருத்தம் தணித்துவந்து நின்ற அவளை முன்கூடியவிடத்தே சென்று எதிர்ப்பட்டுத் தீர்த்தானாதலால் தானே மருந்தென்றும் சொல்லினான், இப்பிணியும் எளியவைகளால நீரப்பெற்றில மென்பது படநின்றமையால் மன் ஒழியிசையிலே வந்தது. உ-ம். !! 2

தாம்வீழ்வார் மென்றோள் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

பேரின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இப்படிப்பட்டவனாகுதல் தகாதென்ற பாங்கனுக்குத் தலைவன் சொல்லியது.

ப - ரை. (ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கு தாம் வீழ்வார்-தாம்விரும்ப மகளிரது, மென்றோள்-மெல்லிய தோள்களிடத்துத் துயிலும், துயிலின்—துயில்போல், தாமரைக்கண்ணானுலகு (அவைகளைத் துறந்தயோகிகளால் அடையப்படுவதாகிய) கமலக்கண்ணனது உலகம், இனிதுகொல்-வருத்தமில்லடையக்கூடுமதோ, எ-று.

க - ரை. தாம்விரும்பிய பெண்களின் மெல்லிய தோள்களிடத்துத் துயில் போல விஷ்ணுவினுலகம் இன்பமாகுமோ என்பதாம்.

---

* இடந்தலைப்பாடு இரண்டாந்தடவை முன்கூடிய விடத்தே தலைவன் தலைவியைக்குறித்துச்சென்று கூடியது.

!! (அகப்பொருள் விளக்கம்) இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தினெய்துமி முயற்சியின்றி முடிவதாகும்.

## ௬௭0 கதக - ஆம் - அதி - புணர்ச்சிமகிழ்தல்.

வி - ரை. அநுபவிப்பவர்க் கென்பது-வருவிக்கப்பட்டது இப்படிப்பட்ட துயிலேவிட்டுத் தவயோகங்களால் வருந்தவேண்டுதலாலே எம்போல்வார்க்கு ஆகாதென்னுங் கருத்தாம் இனிதுகொ லென்றான். 3

நீங்கிற் றெருஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்

தலைவன் * பாங்காற் கூட்டமுடிவிலே சொல்லியது.

ப - ரை. நீங்கின் (தன்னை) நீங்கியபோது, தெறூஉம்-சுடாநிற்கும், குறுகுங்கால்-நெருங்கும்போது, தண்ணென்னும் - குளிராநிற்கும், தீ (இப்படிப்பட்ட) தீயை (எனக்குத் தருவதற்கு யாண்டு) (எவ்வுலகத்திலே) இவள், பெற்றாள்-அடைந்தாள், எ-று.

க - ரை. தன்னையகன்றவிடத்துச் சுடாநிற்கும் தன்னைநெருங்கு மிடத்துக் குளிராநிற்கும் இப்படிப்பட்ட தீயை இவள் எவ்வுலகத்திற்பெற்றாளோ என்பதாம்.

வி - ரை. கூடாமுன் துன்பமடைதலால்-நீங்கிற்றெறூஉ மென்றும் கூடியபின் இன்பமடைதலால குறுகுங்காற் றண்ணென்னு மென்றும், இப்படிப்பட்டதீ உலகிலில்லாமையால் யாண்டுப்பெற்றாளென்றும் சொல்லினான் தன் காமத்தீயையே அவள் தந்ததாகச்சொல்லினான் அவளால் அது வெளிப்படுதலாம். 4

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

இது தலைவன் !! பாங்கியிற் கூட்டமுடிவிலே சொல்லியது.

ப - ரை (எப்பொழுது பெற்றுக்கூடினும்) தோட்டார் கதுப்பினாள்-மலரானிறைந்த கூந்தலையுடையவளது, தோள்-தோள்கள், வேட்டபொழுதில் (மிகவும் இனிய பொருள்களைப்பெற) விரும்பியபொழுது அவையவைபோலுமே அவ்வப்பொருள்கள் போலு மின்பஞ்செய்யும், எ-று.

க - ரை. பூவையணிந்த கூந்தலையுடையாளது தோள்கள் இச்சித்தபொழுது அவ்வவப்பொருள்கள் போலு மின்பஞ்செய்வனவாம்-என்பதாம்.

வி - ரை. தோடு-இதழ்-அது பூவுக்கு ஆகுதலால் ஆகுபெயர். இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு பாங்கறகூட்டம், இவைகளிலே முன்னமே அத்தோள்கள் அனுபவிக்கப்பட்டிருந்தும பின்னும் புதியவைபோலிருந்து நெஞ்சம் பிணித்தலால் அவ்வாறாமைப்பற்றி இப்படி சொல்லினான்.

---

* பாங்கற்கூட்டம்-மூன்றாந்தடவை தலைவன் தனது தோழனை துணையாகக்கொண்டு தலைவியைக்கூடியது.

!! பாங்கியிற்கூட்டம், காலாந்தடைவை தோழியைத் துணையாகக் கொண்டு கூடியது.

## ககக - ஆம் - அதி - புணர்ச்சிமகிழ்தல். சஎக

உறுதோ றுயிர்தளிப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்

**இதுவுமது.**

ப - ரை. உயிர் (தன்னைப்பெறாது வாடிய) என்னுயிர், உறுதோறு (பெற்று) உறுந்தோறும், தளிர்ப்ப-தளிர்க்கும்படி, தீண்டலால்-தீண்டுதலாலே, பேதைக்கு-இம்மங்கைக்கு, தோள்கள், அமிழ்தினியன்றன (தீண்டப்பட்ட) அமிழ்தினாலே செய்யப்பட்டன, எ-று.

க - ரை. என்னுயிர் தளிர்க்கும்படி தீண்டுதலால் இப்பெண்ணிற்குத் தோள்கள் அமிழ்தாற்சமைக்கப்பட்டன-என்பதாம்.

வி - ரை. எதுவாகலால் தீண்டல் அமிழ்திற்கும் பொருந்தியது வாடிய உயிரைத்தளிர்ப்பித்தல்பற்றி அத்தோள்களை அமிழ்தினியன்றனவென்றான். தளிர்த்தல்-இன்பத்தாலே தழைத்தல். 6

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு

இது நீ இவளைக் கல்யாணஞ் செய்துகொண்டு உலகோர் தம்மில்லிலிருந்து தமது பங்கை உண்கிற இல்லறத்தோடு பொருந்தல்வேண்டு மென்று தோழிக்குத் தலைவன் சொல்லியது.

ப - ரை. அம்மாரிவைமுயக்கு - அழகிய மாமைநிறத்தையுடைய மாதின் புணர்ச்சியானது (இன்பந்தருதலில்) தம்மிலிருந்து-தமக்குரிய மனையிலிருந்து, தமது (உலகோர்) தம்முயற்சியால் வந்தபொருளை, பாத்து (தென்புலத்தார் முதலாகிய ஐவர்க்கு) பகுத்துகொடுத்து, உண்டற்று (தமதுபங்கை) உண்பது போல் இன்பஞ்செய்கின்றது, எ-று. அம்-அசை.

க - ரை. இப்பெண்ணின் புணர்ச்சியானது தம்முயற்சியால் வந்தபொருளைத் தென்புலத்தோர்முதலைவர்க்கும் பகுந்து கொடுத்துத் தன்பங்கையுண்டது போலு மின்பஞ்செய்கின்றது-என்பதாம்.

வி - ரை. தொழிலுவமம் இல்லறஞ் செய்தாரடையும் சுவர்க்க வின்பத்தை எனக்கு இப்புணர்ச்சியே தருமென்று கல்யாணத்திற்கு உடன்படாதவன் சொல்லியபடி யாயிற்று. மாமை-பொன்னிறம். 7

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

இது ஒத்த அன்புடைய உமக்கு ஒருபோதும் விடாத புணர்ச்சியே இனிதாகலால் விவாகஞ் செய்துகொள்ளென்ற தோழிக்குச்சொல்லியது.

ப - ரை. (நீ சொல்லுகின்றது ஒக்கும்) வளியிடைபோழப்படா (ஒருபொழுதும் நெகிழாமையால்) காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு-புணர்ச்சியா

## ருஅ௨ கக௩ - ஆம் - அதி - புணர்ச்சிமகிழ்தல்.

னது, வீழுமிருவர்க்கு ஒருவரை ஒருவர் விரும்புகிற இருவர்க்கும், இனிதே இனிதேயாகும், எ-று.

க - ரை. காற்று விடையறுக்கப்படாத புணர்ச்சியானது இருவருக்கு மின்பமாகும்-என்பதாம்.

வி - ரை. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஏகாரம்-தேற்றம். இங்கே இருவரில்லாமையால் அது ஒவ்வாதென்பது கருத்து. களவுப்புணர்ச்சியை மகிழ்ந்து விவாகத்துக்கு உடன்படாதவன் சொல்லியபடி 8

ஊட லுணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்

இது மறைக்கவேண்டாமையால் நெருக்கமில்லாத புணர்ச்சியே இன்பப் பயனுடைய தாகலால் விவாகஞ் செய்து கொள்ளென்ற தோழிக்குச் சொல்லியது.

ப - ரை. ஊடல் (புணர்ச்சி இனிதாதற் பொருட்டுவேண்டி) ஊடலும், உணர்தல் (அதனை அளவறிந்து நீங்குதலும், புணர்தல் (அதன்பின் உண்டாகின்ற) அப்புணர்ச்சியும் என்கிற இவை-இவையல்லவா, காமங்கூடியார் (விவாகஞ் செய்துகொண்டு) காமத்தை இடைவிடா தயடைந்தவர், பெற்றபயன்-பெற்றபயன்கள், எ-று.

க - ரை. ஊடலும் அதனைநீக்கலும் புணர்ச்சியும்,விவாகஞ்செய்துகொண்டவர் பெற்றபலன்-என்பதாம்.

வி - ரை. ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று உண்டாவதல்லாமல் அது தான் பரத்தையரிடத்தாதலும், அதனை அறிந்து மகளிர் ஊடிநிற்றலும் அவ்வூடலைத் தவறுசெய்த அவர்தாமேதந்தவறில்லாமைசொல்லி நீக்கலும், பின்னும்

அவ்விருவரும் ஒத்த வன்பினராய்க் கூடலும், அல்லவா. முன்விவாகஞ்செய்து கொண்டு அடைந்தவர் பெற்றபயன். அப்பயன் இருதலைப்புள்ளினோருயிரா மிப் மாறுவன்படைய எமக்கு வேண்டாவென அவ்விவாகஞ்செய்து அதை நிலை இகழ்ந்து சொல்லியபடி. 9

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

இது தலைவியைப்புணர்ந்து உடன்கொண்டுபோகின்ற
தலைவன் தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை. செறிதோறும்-புணரப்புணர, சேயிழைமாட்டு-செய்ய ஆபரணத்தையுடையவளிடத்து, காமம்-காதல், அறிதோறு - நூல்களாலும், நுட்பவறிவாலும் (பொருள்களை) அறியவறிய, அறியாமை (முன்னை) யறியாமை, கண்டற்று-காணப்படுதல்போலே காணப்படுகின்றது, எ-று.

ககஉ - ஆம் - அதி - நலம்புனைந்துரைத்தல். சுஎக

க - ரை. இவளிடத்துப் புணரப்புணர வுண்டாமாசையானது நூலாலு மறிவாலும் பொருள்களை யறிய வறிய முன்னறியாமை கண்டாற்போலக் காணப்படா நின்றது-என்பதாம்.

வி - ரை. களவிலே பலவிடையீடுகளால் தன் கருத்தின்படி அனுபவிக்கப் பெறாமல் வருந்த முற்றவன் உடன் கொண்டு போகும்போது அது தீர்தலால், செறிதோறு மென்றான். அறிவிற்கு எல்லையில்லாமையால் மேலுமேலும் அறிவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுதல்போல் புணர்தற்கு எல்லையில்லாமல் மேலும்மேலும் புணரப்புணர முன்னைப் புணர்வு புணராமையாய முடிகின்றதெனத் தன்னுள்ளே சொல்லியபடி. இப்புணர்ச்சி மகிழ்தல் தலைவியிடத்துக் குறிப்பாலல்லது சொல்லால் நிகழாது.

நூற்றுப்பதினொன்றாம்-அதிகாரம்-புணர்ச்சிமகிழ்தல்
முற்றிற்று.

---

# ககஉ ஆம்-அதி-நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது: தலைவன் தலைவி நலத்தினை யுருவளித்துச்சொல்லியது. இது புணர்ச்சியின் மகிழ்ந்த விடத்து நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது. (உ-ம்) *

நன்னீரை வாழி யனிச்சமே நின்னிலு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

இது தலைவன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலே சொல்லியது.

ப - ரை. அனிச்சமே-அனிச்சப்பூவே, வாழி - வாழ்வாயாக, நன்னீரை-(மென்மையாலே நீ எல்லாப்பூவினும்) நல்ல குணமுடையை (அப்படியிருந்தாலும்) யாம்வீழ்பவள்-எம்மால் விரும்பப்பட்டவள், நின்னிலு மென்னீரள்-உன்னிலு மெல்லியகுணத்தை யுடையள், எ-று.

க - ரை அனிச்சப்பூவே வாழ்வாயாக நீ எல்லாபூவிலும் நற்குணமுடையை எம்மால் விரும்பப்பட்டவள் உன்னிலு மெல்லியகுணத்தையுடையவள் என்பதாம்.

வி - ரை. அனிச்சம்-ஆகுபெயர், வாழியென்பது - உடன்பாட்டுக்குறிப்பு-இனி நானே மெல்லிய குணமுடையே யென்னுஞ் செருக்கை ஒழிவாயாக என்பதாம். அப்பொழுது பரிசித்து அறிந்தானாதலால்-பரிசத்தினினிமையையே பாராட்டினான். (1)

---

* (அகப்பொருள் விளக்கம்) களந்தழி மகிழ்தலு நலம்பாராட்டலு மெற்புற வணிதலு மென்னுமிம்மூன்றும், போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே.

## 60

## ௧௧௧௨ - ஆம் - அதி - நலம்புனைந்துரைத்தல்.

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
மலர்காணும் பூவொக்கு மென்று.

இது தலைவன் இடந்தலைப்பாட்டிலே சொல்லியது

ப - ரை. நெஞ்சமே-மனமே, இவள்கண் (யானேகாணப்பெற்ற) இவள் கண்களை, பலர்காணும்-பலராலும் காணப்படுகிற, பூவொக்குமென்று-மலர்கள் ஒக்குமென்று நினைத்து, மலர்காணின் (தாமரை குவளை நீலமுதலாகிய) மலர்களைக் கண்டால், மையாத்தி-மயங்காநின்றாய் (உனக்கு அறிவிருந்த விதம் என்ன) எ-று.

க - ரை. மனமே இவள் கண்களைப் பலராற் காணப்படும் பூவொக்குமென்னுதல் நினைத்துத் தாமரை குவளை நீலமுதலிய மலர்களைக் கண்டால் மயங்காநின்றாய் நின்னறி விருந்தவாறென்-என்பதாம்.

வி - ரை. மையாத்தல் - இங்கே ஒப்பாகாதவைகளை ஒக்குமென்று கொண்டு இயற்கைப் புணர்ச்சி நீங்கியது முதலாகத் தலைவிகண்களைக் கா

ணப் பெருமையால் அவைகளோடு சிறிதொத்திருக்கின்ற மலர்களைக் கண்ட விடத்தெல்லாம் அவைகளிடத்து ஆசை செய்யாத தலைவன் அப்பொழுது அக் கண்களி னழுழுதும் தானே இவனே இடத்தெதிர்ப்பட்டு அநுபவித்தானாத வால் அம்மலர்கள் ஒம்பாகாமை கண்டு ஒப்புமை கருதிய நெஞ்சை இகழ்ந்து சொல்லியபடி. (2)

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

இது கூட்டுதலுற்ற பாங்கனுக்குத் தலைவன் தலைவியினியல்பு சொல்லியது.

ப - ரை. வேய்த்தோளவட்கு - மூங்கில்போலும் தோள்களையுடையவளு க்கு, மேனி-நிறம், முறி-தளிர் நிறமாயிருக்கும், முறுவல் - பல்லானது, முத் தம்—முத்தாயிருக்கும், நாற்றம்-இயற்கை வாசனையானது, வெறி-நல்லவாசனை யாயிருக்கும், உண்கண் (மை) யுண்டகண்கள், வேல்-வேல்களாயிருக்கும்.

க - ரை. மூங்கில் போலுந் தோள்களை யுடையவளுக்கு, மேனி - தளிர், பல்-முத்தம், கண்கள்-வேல்கள் போலும்-என்பதாம்.

வி - ரை. முறி-முறுவல் - ஆகுபெயர். உருவகவகையாலே சொல்லின மையால், புணர்துணையாயிற்று. உன்னாலே நினைக்கப்பட்டவளை அறியே னென்று தாரப்படுத்திய தோழிக்குத் தலைவன் சொல்லியதுமாம் (3)

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

இது பாங்கற் கூட்டத்திலே சென்று சார்தலுறாத்தலைவன் சொல்லியது.

ப - ரை. குவளை - குவளைமலர்கள், காணின்-பார்க்கிறதொழிலை உடைய வையா யிருந்தால், மாணிழைகண்-மாட்சிமைப்பட்ட ஆபரணங்களையுடைய

## கக௨ - ஆம் - அதி - நலம்புனைந்துரைத்தல் சுவடு

வளது கண்களை, ஒவ்வேமென்று - நிகரேமென்று நினைத்து, கவிழ்ந்து (அக் காரணத்தினாலே) தலைகுனிந்து, நிலன்-நிலத்தை, நோக்கும்-பார்க்கும்.

க - ரை. குவளை மலர்கள் பார்க்கில் இவள் கண்ணிற் றொப்பாவேமென் று கவிழ்ந்து நிலத்தைப்பார்க்கும்-என்பதாம்.

வி - ரை. பிறந்தாலேயன்று தொழிலாலும் ஒவ்வாதென்றற்கு காணி னென்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடையவா மென்பதுதோ ன்ற கவிழ்ந்தென்றும், சொல்லினன். காணலும், நாணலும், இல்லாமையால் இறுமாந்து ஆகாயத்தை நோக்கின வென்பதாம். (4)

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

இது தலைவன் * பகற் குறியிலே பூவணிகண்டு சொல்லியது.

ப - ரை. இவள் (தன் மென்மை நினையாமல்) அனிச்சப்பூ-அனிச்சமலரை, கால்களையாள்-தாள்களையாளாகி, பெய்தாள்-சூடினாள், நுசுப்பிற்கு (இனிய) விடைக்கு, நல்ல-நல்லவையாகிய, பறை-பறைகள். படாஅ-ஒலியா.

க - ரை. இவள் தனமென்மை நினையாமல் அனிச்சமலரைக் காம்புகளை யாளாகிச் சூடினா ளாகையா லிடை முரியும்-என்பதாம்.

வி - ரை. இம்மலர்த்தாளின் பாரம் பொறாமையால் இடைமுரியும் முரி ந்தால், அதற்குச் செத்தவர்க்கு உரிய நெய்தற்பறையே ஒலிக்கும் என்பதாம் மனிதர்க்கு உரிய சாவும், பறையொலித்தலும், குறிப்பால் இடையின்மேல் ஏற்றப்பட்டன. ஒலியா-ஒலிக்கும். (5)

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

இது † இரவுக் குறியிலே தலைவன் சந்திரனைக்கண்டு சொல்லியது.

ப - ரை. மீன் தாரகைகள் (வேறுபாடு பெரிதாயிருக்கவும்) மதியும் (தமது) சந்திரனையும், மடந்தைமுகனும் (எமது) மாது முகத்தையும், அறியா (இது சந்திரன் இதுமுகமென்று) அறியமாட்டாமல், பதியின் (தம்) நிலையினின்றும், கலங்கிய-கலங்கித் திரியாநின்றன, எ-று.

க - ரை. வானத்து மீன்கள் வேறுபாடு பெரிதாகவும் தம்மதியினையு மெம்மடந்தை முகத்தினையுமிது மதி யிது முகமென் றறியமாட்டாது தன் னிலையினின்று கலங்கித் திரியா நின்றன-என்பதாம்.

வி - ரை. ஓரிடத்து நில்லாமல் எப்போதும் உலாவுதல் பற்றிபதியிற்கலங் கிய வென்றான் வேறுபாடு பின் பாட்டிற்சொல்லப்படும். (6)

---

* பகற்குறி-பகலிலே ஓரிடம் குறிவைத்து வந்து கூடல்.

† இரவுக்குறி, இரவிலே தலைவி மனையருகுவந்து கூடல்.

## சஎசா கக௨ - ஆம் - அதி - நலம்புனைந்துரைத்தல்.

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் மகத்து.

இதுவுமது.

ப - ரை. (அத்தாசகைகள்) அப்படி கலங்குதற்க்காரணம் யாது) அறு வாய் நிறைந்த — முன்குறைந்தவிடம் வந்து நிறைந்து அவிர் — விளங்குகிற, மதிக்குப்போல - சந்திரனிடத்துபோல, மாதர்முகத்து - இம்மாதர் முகத்தி னிடத்து, மறு-களங்கமானது, உண்டோ-உண்டோ, எ-று.

க - ரை. அம்மீன்க ளிங்ஙனங் கலங்குதற்குக் காரணம் யாது முன்கு றைந்தவிடம் வந்து நிறம்பியே விளங்கு மதிக்கண்போல இம்மாதர் முகத்து மறுவுண்டோ-என்பதாம்.

வி - ரை. தேய்ந்துவளர்தலும், களங்கமும், இல்லாமைபற்றி வேறுபாடு அறியலாயிருக்க அறிந்திலவென்று இகழ்ந்து சொல்லியபடி. (7)

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

இதுவுமது.

ப - ரை. மதி - சந்திரனே, வாழி - வாழ்வாயாக, மாதர் முகம்போல்-பெ ண்கள் முகம்போல், ஒளிவிட வல்லையேல் (நான் மகிழும்படி) ஒளிவீச வல்லா யாகில், காதலை (நீயும் என்னால்) இச்சிக்கப்படுதலையுடையையாவாய்.

க - ரை. சந்திரனே வாழ்வாயாக பெண்கள் முகம்போல் ஒளிவீச வல் லாயாகில் நீயு மென்னு லிச்சிக்கப் படுதலை யுடையையாவாய்-என்பதாம்.

வி - ரை. மறு-உன்னிடத்திருத்தலால் அதுமாட்டாய மாட்டாமையால் என்னால் இச்சிக்கவும்படா தென்பதாம்: வாழி-இகழ்ச்சிக்குறிப்பு. (8)

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

இதுவுமது.

ப - ரை. மதி-சந்திரனே, மலரன்ன கண்ணாள்—இம்மலர்போலுங் கண்க ளையுடையவளது, முகம் - முகத்தை, ஒத்தியாயின் — ஒக்கவேண்டுவையாகில் (இதுபோல் யான்காணத்தோன்று) மலர் காணத் தோன்றல்*- பலர்காணத்

தோன்றுதே, எ-று.

க - ரை. சந்திரனே மலர்போலுங் கண்களையுடையவள் முகத்தையொக்க வேண்டுமையாகில் இதுபோல யான்காணத்தோன்று பலர் காணத்தோன்று தொழி-என்பதாம்.

வி - ரை. தானே முகத்தி னலமுழுதுங்கண்டு அனுபவித்தா னாகலாவி ங்கேயும் பலர்காணத் தோன்றலை இழிவுபடுத்திச் சொல்லினன். பலர் காணத்தோன்றில் உனக்கு அம்முகத்தோடு ஒப்புண்டாகாதென்றதாம். (9)

## கககூ - ஆம் - அதி - காதற்சிறப்புரைத்தல். சஎஎ

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர்
டிக்கு நெருஞ்சிப் பழம்.

இது * உடன்போக்குச்சொன்ன தோழிக்குத் தலைவன்
அதனருமையைச் சொல்லி மறுத்தது.

ப - ரை (உலகத்தாரால் மெய்ம்மைக்கு எடுக்கப்பட்ட) அனிச்சமும்- அனிச்சமலரும், அன்னத்தின் றூவியும் - அன்னப்பறவையி னிறகும், மாதர்க ளடிக்கு - பெண்களினடிக்கு, நெருஞ்சிப்பழம்-நெருஞ்சிப் பழம்போல் வருத்தஞ் செய்யும, எ-று.

க - ரை. அனிச்சமலரும் - அன்னப்பறவையி னிறகும் மாதர்களடிக்கு நெருஞ்சிப் பழம்போல் வருத்தஞ்செய்யும்-என்பதாம்.

வி - ரை. முள் வலிதாதலால் பழமென்றார். இப்படிப்பட்ட அடிகள் கூர்ங்கல்லும் வெப்பமுள்ள பாலைவழியை எப்படி கடப்பனவென்பது குறிப் பாலே பெறப்பட்டது. செம்பொருளையன்றிக் குறிப்புப் பொருளும் அடி நலனழியாமையாகலின் இதுவும் இவ்வதிகாரத்ததாயது. (10)

நூற்றி பனிரெண்டாம் அதிகாரம்-நலம்புனைந் துரைத்தல்.
முற்றிற்று.

---

# ககங - ஆம் - அதி - காதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது: தலைவன் தன்னாசை மிகுதியைச் சொல்லலும், தலைவி தன்னாசை மிகுதியைச் சொல்லலும் ஆம். இது புணர்ச்சியும் நலனும்பற்றி நிகழ்கின்றதாகலால், அவற்றி னதிகாரங்களின்பின் வைக்கப்பட்டது.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

இது தலைவன் இயற்கைப்புணர்ச்சிமுடிவிலே தன்னயப்பை அறிவித்தது.

ப - ரை. பணிமொழி-இம்மெல்லிய சொல்லை யுடையாளது, வாலெயிறூறியநீர் - வெண்பல்லி லூறிய நீரானது, பாலொடு தேன்கலந்தற்றே - பாலுடனே தேனைகலந்த கலவைப்போலும், எ-று.

க - ரை. இம் மெல்லிய மொழியினையுடையாளது வாலிய பற்களிலூறிய நீரானது பாலுடனே தேனைக் கலந்த கலவைபோலும்-என்பதாம்.

வி - ரை. பாலொடு தேனென்றதனால் - அதன் சுவைபோலுஞ் சுவையுடைத் தென்பதாயிற்று. வேறுவேறறியப்பட்ட சுவையையுடைய பாலும் தே

* உடன்போக்கு - தலைவி தன்வீட்டாரறியாமல் தலைவனுடன் செல்லுதல்



னும் கலந்த விடத்து அக்கலவை இன்னதென்று அறியக்கூடாத இனியசுவையை யுடையதாமாகலால் அச்சுவைநீர்க்கும் அடைவிக்க. (1)

உடம்பொ டுயிரிடை யென்ன மற்றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

இது தலைவன் பிரிவிலுண்டாகிய அச்சத்தைச் சொல்லியது.

ப - ரை. மடந்தையொடெம்மிடை-இம்மாதோடு எம்மிடத்து உண்டாகிய, நட்பு-நட்புகள், உடம்போடுயிரிடை - உடம்போடு உயிரிடத்து, என்ன-எப்படிப் பட்டவை, அப்படிப்பட்டவையாகும், எ-று.

க - ரை. உடம்போடு உயிரிடை யுளவாகிய நட்புக ளெத்தன்மையோ அத்தன்மையே இம்மடந்தை யோடு எம்மிடை யுளவாகியநட்புக்கள் - என்பதாம்.

வி - ரை. எப்படிப் பட்டவையெனப் பன்மையாற் சொல்லியது. இருவகை நட்புகளும் ஆதிதொடங்கி வேறுபாடில்லாமல் கலந்து வருதல் இன்பத்துன்பங்களை ஒக்க அனுபவித்தல் அவசியம் வேண்டுதல் என்றிவைகளை நோக்கி ஊழினாலே கூட்டப்பட்ட புணர்ச்சியாகலால், அப்பொழுது உணர்ச்சியில்லாதிருந்தவள் பின்னே உடையளாமென்றே ஆகியவிடத்தே இவன்

எவனோவென்றும், என்னிடத்தே அன்புடையனோவென்றும். பின்னும் இவ ளைக் கலத்தல் கூடுமோவென்றும் அவளுள்ளத்தே தோன்றும், அவைகுறிப் பால் அறிந்து அவைதீரச் சொல்லியபடி. மற்று—அசை. (2)

கருமணியிற் பாவாயாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

இது இடந்தலைப்பாட்டிலே தலைவி நீங்கும்போது தலைவன் சொல்லியது

ப - ரை. கருமணியிற்பாவாய் (என்கண்ணிற்) கருமணியி லிருக்கின்ற பாவையே நீ - நீ, போதாய் (அவ்விடம் விட்டுப்) போவாயாக (போகாதிருப் பாயாகில்) யாம்வீழும்—எம்மால் விரும்பப்படுகின்ற, திருநுதற்கு - அழகியெ ற்றியையுடையவளுக்கு, இடம்-இடம், இல்லை-இல்லை, எ-று.

க - ரை. என்கண்ணிற் கருமணியினிடத்துறையும் பாவையே-நீ அவ்வி டம்விட்டுப் போவாயாக போகாதிருப்பாயாகில் எம்மால் விரும்பப்பட்ட தி ருநுதலையுடையாட்கு இருக்க விடமில்லையாம்-என்பதாம்.

வி - ரை. நான்காணுமல் இருக்க மாட்டாமையால் இவள் புறத்துப் போந்தன்மைய ளல்லாமல் என் கண்ணுள் இருக்குந் தன்மையள் இருக்கும் போது உன்னோடு கூடியிருக்க இடம்போதாமையால், உன்னிலும் சிறந்த இவளுக்கு அவ்விடத்தை கொடுத்து நீபோய் விடுவாயாக வென்பதாம். (3)

வாழ்தல் லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

## கககஉ - ஆம் - அதி - காதற்சிறப்புரைத்தல். சஎகூ

இது பகற்குறியிலே புணர்ந்து நீங்குந்தலைவன் சொல்லியது.

ப - ரை. (எனக்கு) ஆயிழை-ஆராய்ந்து கொள்ளப்பட்ட ஆபரணத்தை யுடையவள் புணருமிடத்து, உயிர்க்கு-உயிருக்கு. வாழ்தலன்னள் (உடம்போடு கூடி) வாழ்தல்போலாகின்றாள், நீங்குமிடத்து - பிரியுமிடத்து, அதற்கு - அவ்வுயிர்க்கு, சாதலன்னள் - அவ்வுடம்பி னீங்கிப் போதல்போ லாகின் றாள். எ-று.

க - ரை. தெரிந்த வாபரணத்தையுடையாள் எனக்குப் புணருமிடத் துயிர்க்குடம்போடு கூடிவாழ்தல்போலும் பிரியுமிடத்து அவ்வுடம்பினின்று யிர்பிரிதல்போலும்-என்பதாம்.

வி - ரை. எனக்கென்பதும், புணருமிடத்தென்பதும். அவாய் நிலையால் வந்தன - வாழுங்காலத்து வேறுபாடில்லாமல் வழிசிற்றலாலும் சாயங்காலத்து வருத்தஞ் செய்தலாலும் அவைகளை அவள் புணர்வு பிரிவுகளுக்கு உவமை யாக்கினன். (4)

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

இது * ஒருவழித்தணந்து வந்தபோது எம்மைநினைத்து மறிவீரோவென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.

ப - ரை. யான்-நான், ஒள்ளமர்க் கண்ணாள் குணம்-ஒளியின்வாசிப் போர்செய்கின்ற கண்களையுடையவளது குணங்களை, மறப்பின்-மறந்தேனாயின், உள்ளுவன்-நினைப்பேன், மறப்பறியேன் (ஒருபோதும்) மறத்தலறியேன் ஆகலால் நினைத்தலு மறியேன், எ-று.

க - ரை. ஒள்ளியவாய் போர்செய்யுங் கண்ணினை யுடையாள் குணங்களை நான்மறந்தேனாயின் நினைப்பேன், ஒருபொழுது மறத்தலையறியேனாதலால் நினைத்தலையு மறியேன்-என்பதாம்.

வி - ரை. நினைத்தலு மறியேனென்னும் பொருள்கொள்ள நிற்கையால் மன் ஒழிபிசையில்வந்தது. குணங்கள்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலானவை. இதுவரைக்கும் தலைவன் சொல்லியது, பின் தலைவிசொல்லுவது. ()

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

இது ஒருவழித்தணத்தலில் தலைவனைத் தோழி இயற்பழிப்பாளென்று அஞ்சி அவள்கேட்கத் தலைவி தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை. (தாம்காணுமைபற்றித் தூரத்திலே போயினரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர்) எங்காதலவர் - எம்முடையதலைவர், கண்ணுள்ளில் (எமது) கணணுள்ளேநின்றும், போகார் - போகார், இமைப்பின் (அறியாமல்) இமைத்தேமாயின், பருவரார் (அதனால் வருந்துவதஞ்செய்யார் (ஆகலாலே) நுண்ணியர் (காணப்படாத) நுண்ணியர், எ-று

க - ரை. தாங்காணுமைபற்றித் தூரத்திற் போயினரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர். எமமுடைய நாயகர் எங்கணுள்ளேனின்றும் போகார்

* ஒருவழித்தணத்தல் - தலைவன் யாதேனுமொரு காரியங்குறித்துப் பிரிதல்.

காமப்பட்டவளைத் தோளாயிரில் அதனால் வருந்தவுஞ் செய்யார் ஆதலாற் எனை பாடலர், நுண்ணியர் - என்பதாம்.

வி - ரை இடைவிடாத நினைவின் முயற்சியால் எப்போது முன்னே தோன்றலால், கண்ணுள்ளிற் போகாரென்றும் இமைத்தபோதும் அதுநிற்றலால். இமைப்பிற் பருவராரென்றும் சொல்லினன். (6)

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

இதுவுமது.

ப - ரை. காதலவர் - எம்மேலாசையுள்ள தலைவர், கண்ணுள்ளாராக (எங்) கண்ணுள் இருக்கின்றாராகலால், கண்ணுமெழுதேம்-கண்ணினை (மையினால்) எழுதுவதுஞ்செய்யேம், கரப்பாக்கறிந்து (அவ்வளவுகாலமும் அவர்) மறைதலை அறிந்து, எ-று.

க - ரை. எம்முடைய நாயகர் எங்கண்ணுள் ளிருக்கின்ற ராகலால், கண்ணின்மை யெழுதேம்-அவர் மறைதலையறிந்து-என்பதாம்.

வி - ரை. எம்மால் இடைவிடாமற் காணப்படுகின்றவரைப் பிரிந்தாரென்று நினைக்கும்விதம் என்னை யென்பது குறிப்பெச்சம்.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

இதுவுமது.

ப - ரை. காதலவர் - எமது தலைவர், நெஞ்சத்தாராக-நெஞ்சு ளிருக்கின்றாராதலால் (உண்ணும்போது) வெய்துண்டல்-சூடுள்ளதாக உண்ணுதற்கு, அஞ்சுதும்-அஞ்சாநின்றேம். வேபாக்கறிந்து - (அவர் அதனாலே) சூடுறுதலை அறிந்து, எ-று.

க - ரை. எம்முடைய நாயகர் நெஞ்சுள் ளிருக்கின்றாரானமையால் உண்ணும்போது வெய்தாக உண்டலை யஞ்சுவோம் அவர் அதனால் வெய்துறுதலை யறிந்து-என்பதாம்.

வி- ரை எப்பொழுதும் என்னெஞ்சி லிருக்கிறவரைப் பிரிந்தாரென்றுநினைக்கும்விதம் என்னென்பது குறிப்பெச்சம். (8)

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

## ககஉ - ஆம் - அதி - காதற்சிறப்புரைத்தல்.ௐ அக

இது - வரைவிடைவைத்துப் பொருள்வயிற்கப் பிரிந்தவிடத்தாற்றலி பொருத்திருத்தற் பொருட்டுத்தோழி தலைவனை இயற்பழித்தவிடத்தே அவன் இயற்படச் சொல்லியது.

(ப-ரை.) இம்மைப்பின் (என்கண்) இமைக்குமாயின், கரப்பாக்கறிவல் (உள்ளிருக்கிற காதலர்) மறைதலறிந்து இமையேன், அனைத்திற்கே-அவ்வளவுக்கே, இவ்வூர்-இவ்வூர், ஏதிலரென்னும் (தூங்காதநோய்செய்தார்) அன்பிலரென்னும், எ-று.

(க-ரை.) என் கண்ணிமைக்குமாதல் உள்ளிருக்கின்ற காதலர்மறைதலையறிந்து இமையேன் அவ்வளவிற் கவரைத் துயிலாநோய் செய்தாரன்பிலரென்று சொல்லாநிற்கு மிவ்வூர் - என்பதாம்.

(வி-ரை) தன் கருத்தறியாமைபற்றிக் கோபித்துச் சொல்லலால், தோழியை வேறுபடுத்தி யூரென்றான், ஒருபோதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்குந்தன்மையை யல்லவென்பதாம்.

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

இதுவுமது.

(ப-ரை.) (காதலர்) உள்ளத்துள்-மனதுள், என்றும்-எப்பொழுதும், உவந்து-மகிழ்ந்து. உறைவர்-வாசஞ்செய்யாநிற்பர், (அதனையறியாமல்) இவ்வூர்-இவ்வூர், இகந்துறைவர்-பிரிந்துநிராநின்றார், ஏதிலரென்னும்-அன்பிலாரென்று (அவரைச்) சொல்லுகின்றது, எ-று.

(க-ரை.) காதலர் எப்பொழுதும் என்னுள்ளத்துள்ளே மகிழ்ந்து வாசஞ்செய்யாநிற்பர். அதனை அறியாதவரைப்பிரிந்து வாசஞ்செய்யா நின்றார், அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர் - என்பதாம்.

(வி-ரை.) உவந்துறைவ ரென்றதனால் அன்புடைமை கூறினாள். பிரியாமையும் அன்பும் உடையவரை இலரென்று பழிக்குந் தன்மையை யல்லவென்பதாம்.

நூற்றிபதின்மூன்றும்-அதிகாரம்-காதற்சிறப்புரைத்தல்

முற்றிற்று.

---

* வரைவிடைவைத்துப் பொருள் வயிற்பிரிதல் கல்யாணத்திற்குப் பொருள் சம்பாதிக்கப் பிரிதல்.

௱

# ககச-ஆம்-அதி-நாணுத்துறவுரைத்தல்

அஃதாவது: அறப்படுத்தப்பட்டுப் பொருதவனாகிய தலைவனும் * அறத்தொடு நிற்பிக்கத்தொடங்கிய தலைவியும், தமது நாணமிழந்தலைச் சொல்லுதலாம். இது காதல் மிகுந்தவிடத்து நிகழ்வதாகலால், காதற்சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

அறப்படுத்தப்பட்டுப் பொருதவனாகிய தலைவன் சொல்லியது.

(ப-ரை.) காமமுழந்து (அரியமகளிரோடு) காமத்தை அனுபவித்து (பின் அதுபெறாமல்) வருந்தினார்க்கு-துன்பமடைந்த ஆடவர்க்கு, ஏமம் மடலல்லது (முன்னும்) காப்பாய்வருகின்ற 0 மடன்மாவல்லது, வலி-வலியது, இல்லை-(இனியெனக்கு) இல்லை, எ-று.

(க-ரை.) அரியமகளிரோடு காமத்தை யநுபவித்தும் பின்னது பெறாது துன்பமடைந்த ஆடவர்க்கு, முன்னுங்காப்பாய் வருகின்ற மடலல்லது இனிவலியதில்லை - என்பதாம்.

(வி-ரை.) ஏமமாதல், அத்துன்ப நீங்கும்வகை அவ்வனுபவத்தைக்கொடுத்தல். வலி-ஆகுபெயர், முன்னும் ஆடவருயினர், இன்பமடைந்து வருகிறவழியிருக்கவும் உன்னை அதற்குத்துணையென்று நினைத்து விளைக முயன்றசான் இப்போது துணையல்லாமை அறிந்தேனாகலால் இனியாயினும் அவ்வழியால் அதனை அடைவேனென்பது கருத்து.

நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

இது நாணமுடைய உமக்கு மடன்மா வேறுகை முடியாதென்று அதனை விலக்கலுற்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.

(ப-ரை.) நோனு (அவ்வருத்தத்தைப்) பொருத. உடம்பு முயிரும்உடனும் உயிரும், மடலேறும் (அதற்குக் காப்பாகிய மடன்மாவை)எறலினையா நின்றன, நாணினை (அதனைவிலக்குவதாகிய) நாணத்தை, நீக்கிநிறுத்து ஒழித்துவிட்டு, -எ-று.

(க-ரை.) அவ்வருத்தத்தினைப் பொருத உடம்பு முயிரும் அதற்குக் காவலாகிய மடன்மாவினையூரக் கருதாநின்றன. அதனை விலக்குவதாய் நாணினையகற்றி - என்பதாம்.

---

* அறத்தாடு நிற்பித்தல்-இங்கே தலைவி தன்காமத்தைப்பாங்கி முதலானவரால் வெளிப்படுத்தல்.

() மடன்மா - பனைமடலாலே செய்யப்பட்ட குதிரை.

## ககச - ஆம் - அதி-நாணுத்துறவுரைத்தல்ச ஆக

(வி-ரை.) அறிவு முதலானவை முன்னே நீங்கவும், நாண் நீங்காது நின்றது. அதுவும் இப்பொழுது நீங்கிற்றென்றற்கு உடம்பு முயிருமென்றான். அவைதாம் தம்முள் நீங்காமை பொருட்டு மடலேறு மென்றது அவன் தன் பொறுமையறிந்து கடிதிலே உடன்படுதல் குறித்து உ

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்று ரேறு மடல்.

இது நாணமேயன்றி நல்லாண்மையும் உடைமையால் மடலேறுகை முடியாதென்ற தோழிக்குச் சொல்லியது.

(ப-ரை) நாணொடு நல்லாண்மை நாணத்தையும் மிகுந்த ஆண்மையையும், பண்டு-முன்னே, உடையேன்-உடையேன் (அவைகாமத்தால் நீங்குதலால்) காமுற்று ரேறுமடல்-காமமிகுந்தவரேறுமடலை, இன்று-இப்போது உடையேன்-உடையேன், எ-று.

(க-ரை.) நாணத்தையு மாண்மையையு முன்னமே யுடையேன் அவை காமத்தால் நீங்குதலால் காமமிக்காரேறு மடலினையுடையே - என்பதாம்.

(வி-ரை) நாண் இழிவானவை செய்யுமிடத்து விலக்குவது ஆண்மை ஒன்றுக்குந் தளராதுநிற்றல், அவை முன்னுள்ளன, இன்றுள்ளது இதுவே யாகலால், கடிதிலே முடியுமென்றபடி. ங

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

இது நாணமும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாதலால் அதனால் அவை நீங்குவன வல்லவென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது

(ப-ரை.) (நாண் தன்னைக்கடத்தற்குக் கொண்ட) நாணொடு நல்லாண்மை யென்னும்புணை - நாணமும் நல்லாண்மையும் ஆகிய புணைகளை, காமக்கடும்புனல் - காமமாகிய கடியவெள்ளமானது, உய்க்குமே (என்னிற்பிரித்துக்) கொண்டு போகின்றது, எ-று.

(க-ரை.) நாணமும் ஆண்மையுமாகிய புணைகளைக் காமவெள்ளமானது கொண்டுபோகின்றது-என்பதாம்,

(வி-ரை) அவை செய்யமாட்டாத மற்றை நீரினீக்குதற்கு கடும்புன லென்றான். இந்நீர்க்கு அவைபுணையாகா அதனால் அவை நீங்குமென்பதாம்

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

இது இப்பொருக்கமாட்டாமையும், மடலும், உமக்கு எப்படி வந்தனவென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.

(ப-ரை.) மாலை யுழக்குந்துயர் - மாலைக்காலத்து அனுபவிக்குந் துன்பத்தையும், மடலொடு (அதற்கு மருந்தாகிய) மடன்மாவையும் (முன் அறி

ககசு - ஆம் - அதி - நாணுத்துறவுரைத்தல். ச அரு

(வி-ரை.) பிறப்பு விசேடத்தால் அவ்வடக்கம் எனக்கு இல்லையாகின்றது. நீ அதை அறிகின்றிலை யென்பதாம். இதுவரைக்குந் தலைவன்சொல்லியது பின்னே தலைவிசொல்லுவது.

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

இதுகாப்புச்சிறைஅதிகப்பட்டுக்காமம் பெருகியபோது தலைவிசொல்லியது

(ப-ரை.) (இவர்) நிறையரிய (ரென்னாது) நிறையால் (காம மேற்கொள்ளுதற்கு) அரியரென்று அஞ்சாமலும், மன்னளிய ரென்னாது - மிகவும்

அளிக்கத் தக்கவரென்று இரங்காமலும், காமம் (மகளிரது) காமமும், மறை யிறந்து (அவர்) மறைத்தலேக்கடந்து, மன்றபடும் சபையிடத்து வெளிப் படுவதாயிருந்தது, எ-று.

(க-ரை.) இவர் நிறையால் நாமேற்கொள்ளுதற்கு அரியரென் றிரங்க தல் செய்யாது. மிகவு மளிக்கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது. மகளிர் காமமும் அவர் மறைத்தலைக்கடந்து சபையிடத்து வெளிப்படுமாயிருந்தது என்பதாம்.

(வி-ரை.) என்றுதென்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக் கப்பட்டது. இங்கே மன்றென்றது - நந்தைமுதலாகிய தன் குடும்பத்தார் கூட்டத்தை உலகத்துப்பெண்களது காமத்தியல்பு சொல்லுவாள்போல் தன்காமம் பெருகிறபடிசொல்லி இனி அறத்தொடு நிற்றல் வேண்டுமென் பது குறிப்பித்தபடியாயிற்று.

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

இதுவுமது.

(ப-ரை.) (நான்முன் அடங்கி யிருக்கையால்) எல்லாரும் அறிகிலா ரென்று (என்னை) அறிந்திலர் (இனி அப்படி அடங்கியிராமல் நாமே வெ ளிப்பட்டு அறிவிப்பேனென்று) நினைத்து, என்காமம்-எனது காமமானது மறுகில் (இவ்வூர்) வீதியில், மருண்டு-மயங்கி, மறுகும்-சுழல்கின்றது எ-று.

(க-ரை.) யான் முன்னடங்கி நிற்றலால் எல்லாரும் என்னையறிதலி லர்-இனியவ்வாறு நில்லாது நானே வெளிப்பட்டு அறிவிப்பேனென்று நினைத்து என்காமம் இவ்வூர் வீதியில் மயங்கிச்சுழல்கின்றது-என்பதாம்.

(வி-ரை.) மயங்குதல் * அம்பலாதல்-மறுகுதல். அலராதல் இ-வீர ண்டுமாயிற்று. இனி [] அறத்தொடு நிற்றல்வேண்டு மென்பதாம்

* அம்பல்-சிலரறிந்து தம்மிற்பேசல்.

o அலர் பலரறிந்து தூற்றல்.

[] அறத்தொடுநிற்றல்-காமத்தைவெளிப்படுத்தல்.

## சூஅசு ககசு - ஆம் - அதி - நாணுத்துறவுரைத்தல்.

யேன் தொடலைக் குறுந்தொடி - மாலைபோல் தொடர்ந்த சிறிய வளையலை யுடையவள், தந்தாள் (இப்பொழுது எனக்குத்) தந்தாள், எ-று.

(ப-ரை.) மாலைப்பொழுதினிடத்து அநுபவிக்குந் துன்பத்தையும் அதற்கு மருந்தாகிய மடலினையும் முன்னறியேன் இப்பொழுது எனக்கு வளையலையுடையவள் தந்தாள்-என்பதாம்.

(வி-ரை.) காமம் மற்றைப்பொழுதுகளிலும் உண்டாயினு மாலையிலே மலர்தலால் மாலையழக்குக் துயரென்றும், மடலும் அதுபற்றிவந்த தாகலால் அவ்விரிவும் அவளாலே தரப்பட்டவென்றம், அவள்தான் நீ சொல்லியதேசொல்லுகிற இளமையளென்பதுதோன்ற தொடலைக்குறுந்தொடி யென்றும் சொன்னான். இவை அவள் தந்தவையாகலால் உன்னால் நீங்குமென்பது கருத்து.

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

இது மடலூரும்பொழுது நின்றைக்கும் கழிந்ததென்ற தோழிக்குத்
தலைவன் சொல்லியது

(ப-ரை.) பேயதக்கு (உன்) மாதுகாரணமாக, என்கண்-எனது கண்கள், படலொல்லா (ஒருபோதும்) தூங்குதல் பொருந்தாவாம் (அதனால்) யாமத்தும் (எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும், மன்ற மடலூர்தல்-படன்மாவேறலையே, உள்ளுவேன்-நினைப்பேன், எ-று.

(க-ரை.) உன்மாதுகாரணமாக என்கண்கள் ஒருபோது நித்திரைசெய்யாவாம், அதனால் யாவரும் நித்திரைசெய்யும் பாதிராத்திரியில் மடன்மாவேறுதலை நினைப்பேன் - என்பதாம்.

(வி-ரை.) பேதையென்றது-மடமைபற்றி, இனிக்குறை முடிப்பதாலையெனல் வேண்டா வென்பதாம்.

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்.

இது முன்பாட்டிலே பேதையென்றதுபற்றி அறிவில்லாத மகளிரினும்

அறிவுடைய ஆடவரன்றே பொறுக்கத் தக்கவரென்றே தோழிக்குத் தலைவன் சொல்லியது.

(ப-ரை.) கடலன்ன காமமுழந்து-கடல்போற் கரையற்றகாமநோயை அனுபவித்தும், மடலேறா-மடன்மாவேறாமல் (பொறுத்திருக்கிற) பெண்ணின்-பெண் (பிறப்புப்) போல், பெருந்தக்கது-மிகுந்த தகுதியுடையபிறப்பு, இல் - உலகத்தில் இல்லை, எ-று

(க-ரை.) கடல்போலக் கரையற்ற காமநோயினை அனுபவித்துமடலேறுதலைச் செய்யாதிருக்கிற பெண் பிறப்புப்போலத்தக்க பிறப்பு உலகத்தில்லை - என்பதாம்.

## ஒ.ழுச ககச - ஆம் = அதி - நாணுத்துறவுரைத்தல்.

யேன் தொடலைக் குறுந்தொடி - மாலைபோல் தொடர்ந்த சிறிய வளையலையுடையவள், தந்தாள் (இப்பொழுது எனக்குத்) தந்தாள், எ-று.

(ப-ரை.) மாலைப்பொழுதினிடத்து அனுபவிக்குந் துன்பத்தையும்அதற்கு மருந்தாகிய மடலினையும் முன்னறியேன் இப்பொழுது எனக்கு வளையலையுடையவள் தந்தாள்-என்பதாம்.

(வி-ரை.) காமம் மற்றைப்பொழுதுகளிலும் உண்டாயினு மாலையிலே மலர்தலால் மாலையுழக்குந் துயரென்றும், மடலும் அதுபற்றிவந்ததாகலால் அவ்விளிவும் அவனாலே தரப்பட்டவென்றும், அவன்தான் நீ சொல்லியதேசொல்லுகிற இளமையளென்பதுதோன்ற தொடலைக்குறுந்தொடியென்றும் சொன்னான். இவை அவன் தந்தவையாகலால் உன்னால் நீக்குமென்பது கருத்து.

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

இது மடலூரும்பொழுது இன்றைக்கும் கழிந்ததென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது

(ப-ரை.) பேதைக்கு (உன்) மாதுகாரணமாக, என்கண்-எனது கண்கள், படலொல்லா (ஒருபோதும்) தூங்குதல் பொருந்தாவாம் (அதனால்) யாமத்தும் (எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும், மன்ற மடலூர்தல்-படன்மாவேறலையே, உள்ளுவேன்-நினைப்பேன், எ-று.

(க-ரை.) உன்மாதுகாரணமாக என்கண்கள் ஒருபோது நித்திரைசெய்யாவாம், அதனால் யாவரும் நித்திரைசெய்யும் பாதிராத்திரியில் மடன்மா வேறுதலை நினைப்பேன் - என்பதாம்.

(வி-ரை.) பேதையென்றது-மடமைபற்றி, இனிக்குறை முடிப்பதாரானையெனல் வேண்டா வென்பதாம்.

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்.

இது முன்பாட்டிலே பேதையென்றதுபற்றி அறிவில்லாத மகளிரினும் அறிவுடைய ஆடவரன்றே பொறுக்கத் தக்கவரென்றே தோழிக்குத் தலைவன் சொல்லியது.

(ப-ரை.) கடலன்ன காமமுழந்து-கடல்போற் கரையற்றகாமநோயை அனுபவித்தும், மடலேறா-மடன்மாவேறாமல் (பொறுத்திருக்கிற) பெண்ணின்-பெண் (பிறப்புப்) போல், பெருந்தக்கது-மிகுந்த தகுதியுடையபிறப்பு, இல் - உலகத்தில் இல்லை, எ-று

(க-ரை.) கடல்போலக் கரையற்ற காமநோயினை அனுபவித்துமடலேறுதலைச் செய்யாதிருக்கிற பெண் பிறப்புப்போலத்தக்க பிறப்பு உலகத்தில்லை - என்பதாம்.

## கக௫: - ஆம் - அதி - அலரறிவுறுத்தல். ச அலு

யவுயிரானது, நிற்கும் (அவளைப்பெற்றதுபோல்) நிலைபெறும், அதனை-அந்நிலைபேற்றை, பாக்கியத்தால் நல்லூழால் (நானே) அறிவதல்லது, பலர் (தூற்றுகின்ற) பலரும், அறியார்-தெரியார். எ-று.

(க-ரை.) உன்மாதுக்கும் எமக்கு முண்டாகிய நட்பு அலரா யெழுதலால் என்னரிய வுயிரானது அவளைப்பெற்றதுபோல் நிலைபெறும் அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் நானே யறிவதல்லது பலருமறியார்-என்பதாம்.

(வி-ரை) இரவுக்குறி தப்பித் தலைவியை அடையப்பெறாத வருத்தமெல்லாம் தோன்ற அருயிரென்றும் அப்படி அரியவளை எளியவளாக்கி வெக்கின்றமையால் அது அவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாய் நிற்கின்றதென்றற்கு-அலரெழவாருயிர் நிற்குமென்றும், பற்றுகோடாதலை, அவ்வ

யலார் அறிந்தார் ஆற்றுதொழிவர் ஒழியவே ஆருயிர்போமாகலால் அவர றியாதிருக்கிறது பாக்கியத்தாலென்றும் சொல்லினன். பலருமென்கிற முற்றும்மை விகாரத்தால் தொக்கது. க

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

இதுவுமது.

(ப-ரை.) மலரன்ன கண்ணாள்-மலர்போலும் கண்களையுடையவளது, அருமை (அடைதற்) கருமையை, அறியாது-அறியாமல், இவ்வூர்-இவ்வூரி லுள்ளவர்கள் (அவளை யெளியவளாக்கி) அலர் (அவளோடு) அலர் கூறலை எமக்கு-எனக்கு, ஈந்தது-உபகரித்தது, எ-று.

(க-ரை.) மலர்போலும் கண்களையுடையவளது அருமையறியாது இவ்வூர் அவளை யெளியவளாக்கி அவளோடலர் கூறுதலை யெமக்குபகரித் தது என்பதாம்.

(வி-ரை.) அருமை-குறிபிழைத்தலாலும், இடையீடுகளாலும், ஆகியது ஈந்ததென்றான். அதற்குச் சார்பாகலால் அலர் தூற்றுவாரை அவர் செய்த உதவிபற்றி இவ்வூரென்றான். உ

உறுமோ வூரறிந்த கௌவை யதனைப்
பற்றுஅது பெற்றன்ன நீர்த்து.

இதுவுமது.

(ப-ரை.) வூரறிந்த கௌவை (எங்களுக்குப் புணர்ச்சி உண்டாயிருக் கையை) இவ்வூர் அறிதலால் விளைந்த (அலரானது) உறுமோ (எனக்கு)

உறுவதொன்றன்றே (அதுகேட்ட) என்மனமானது, பெறுஅது (புணர்ச் சியைப்) பெறுதிருந்தே. பெற்றன்ன நீர்த்து - பெற்றதுபோலுங் குண முடைத்து (ஆதலால்) எ-று.

அதிகாரம் கசுரு - ஆம் - அதி - அலரறிவுறுத்தல்.

(க-ரை.) எங்களுக்குப் புணர்ச்சி புண்டாயிருக்கையை இவ்வூரிந் லான் விளைத்தவலரெனக் கூறுவதொன்றோ அதுகேட்ட என்மனம் அப் புணர்ச்சியைப்பெறு திருந்தேபெற்றதுபோலுங் குணமுடைத்தென்பதாம்.

(வி-ரை.) பெற்றன்ன நீர்மை-பெற்றவழி உண்டாகிற இன்பம்போலு மின்பமுடைமை நீர்த்தென்பதற்கு ஏற்கமனம் வரிவிக்கப்பட்டது. ௩

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

இதுவுமது.

(ப-ரை.) காமம் (என்) காமம், கவ்வையால் (இவ்வூர்) எடுக்கின்ற அலரால், கௌவிது-அவர்தலைபுடைத்தாயிற்று, அதுவின்றேல் - அவ்வலர் இல்லையாயின், தன்மையிழந்து-தவ்வென்னும் சுருங்கிப்போகும். எ-று.

(க-ரை.) என்காமம் இவ்வூரெடுக்கின்றவலரால் அலர்தலைபுடைத்தாயிற்று, அவ்வல ரில்லையாயில் தன்னியல்பிழந்து சுருங்கும்-என்பதாம்.

(வி-ரை.) அலர்தல். மேலுமேலுமிருதல். தன்மை - இன்பர்தருதல். தவ்வென்னுமென்றது-குறிப்புமொழி. ௪

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

இதுவுமது.

(ப-ரை.) (கள்ளுண்பார்க்கு) களித்தொறும்-களிக்குந்தோறும், கள்ளுண்டல்-கள்ளுண்ணுதல், வேட்டற்று - இனிதாம் விதம்போல் (எனக்கு) காமம்-காமமானது, வெளிப்படுந்தோறும்-அலராந்தோறும், இனிது-இனிதாகா நின்றது, எ-று.

(க-ரை.) கள்ளுண்பார்க்குக் களிக்குந்தோறுங் கள்ளுண்ட லினிதா மாறுபோல எனக்குக் காமம் அலராந்தோறு மினிதாகின்றது-என்பதாம்.

(வி-ரை.) வேட்கப்பட்டதற்று வென்பது - வேட்டற்றுவென நின்றது. வேட்கையிருதியால் அலரும் இன்பஞ்செய்கிற தென்பதாம். ௫

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

இது இடையீடுகளாலும் இரவுக்குறிதப்பலாலும் தலைவனைக்கூடப்பெறுத தலைவி அவன் உ சிறப்புத்தாளுகத் தோழிக்குச்சொல்லுவாளாய் அலரை அறிவித்து மணஞ்செயல் விரும்பியது.

(ப-ரை.) கண்டது (தலைவனை நான்) காணப்பெற்றது, ஒருநாள்-ஒரு நாளேயாகும், அலர் (அதனாலுண்டாகிய)அலரானது(அவ்வளவினதன்றி)

* சிறப்புறம் - தலைவியைக் காவல்செய்த விடத்தின் புறம்,

கசுடு ...ஆம் - அதி - அலரறிவுறுத்தல். கூஅ

திங்களைப் பாம்புகொண்டற்று-சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல் உலகமெங்கும் பறந்தது, எ-று.

(க-ரை.) தலைவனை நான் காணப்பெற்றது ஒருநாளேயாம் - அதனாலுண்டான அலரானது அவ்வளவின தல்லாமல் சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போலெங்கும் பரந்தது-என்பதாம்.

(வி-ரை.) அலராகிய காரியத்தைக் காரணமாக உபசரித்துபாம்புகொண்டற்றென்றாள், பூமிநிழல் பாம்பெனப்பட்டது. இராகுவென்னும் வடநூல்வழக்குப்பற்றி அது சந்திரனை மறைத்தல் கணித சித்தாந்தங்களிலேகாண்க. இருவழியும் மன்னும்-உம்மும்-அசைநிலைகள். காட்சியின்றியும் அலர் பறக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது மணஞ்செய்து கொள்ளுதல் வேண்டுமென்பதாம். க

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல்
னீராக நீளுமிந் நோய்.

இது மணஞ்செயல் நீளப்பொருத தலைவியைத் தலைவன் சிறைப்புரைத்தாளுத லறிந்ததோழி ஊரவரலரையும் தாய்சொல்லையுங்கோச்சிநீபொறுத்தல் வேண்டுமெனச் சொல்லெழுப்பியவிடத்து அவன் சொல்லியது.

(ப-ரை.) இந்நோய்-இக்காமநோயாகிய (பயிர்) ஊரவர்கௌவை-இவ்வூரிலுள்ள மகளிர் எடுக்கின்றஅலரானது, எருவாக-எருவாக, அன்னைசொல்-(அதுகேட்டுக்கோபித்து) தாய்சொல்லுகின்ற கடுஞ்சொல்லானது, நீராக - தண்ணீரானது, நீளும்-வளராநின்றது, எ-று.

(க-ரை.) இக்காமநோயாகிய பயிர் இவ்வூரின் மகளிரெடுக்கின்ற அலரானது எருவாக தாய்சொல்லானது நீராக்வளர்க்கின்றது-என்பதாம்

(வி-ரை.) ஊரவரென்பது-தொழிலால் ஆகுபெயர்த்துநின்றது [ஏகதேசவுருவகம்] சுருங்குதற்கு ஏதுவாகின்றவை தாமேவிரிதற்கு ஏதுவாகின்றனவென்பதாம். மணஞ்செய்வோனுதல் பயன். எ

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

இதுவுமது.

(ப-ரை) கௌவையால் (அயலவர் எடுக்கின்ற) அலராலுண்டாகின்ற காமம்-காமத்தை, நுதுப்பேமெனல்-அவிப்பேமென்று நினைத்தல், நெய்யால்-நெய்யினாலே, எரி-நெருப்பை, நுதுப்பேமென்றற்று-அவிப்பேமென்று நினைத்தலோ டொக்கும், எ-று.

(க-ரை.) அயலாரெடுக்கின்ற அலராலுண்டாங் காமத்தை அவிப்பேமென்று நினைத்தல் நெய்யால் நெருப்பை அவிப்பேமென்று நினைத்தலோ டொக்கும் - என்பதாம்.

62

## [illegible] கரு - ஆம் - அதி - அலரறிவுறுத்தல்.

(வி-ரை) காமம்வளர்தற்குக் காரணமாகிய அலரால் அதை அவித்தல் கூடாதென்பதாம். அ

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

இது மணஞ்செய்தற்குப்பொருள் சம்பாதிக்கத்தலைவன் பிரிந்தபோது பொறாதவளாகிய தலைவி அவன்வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சிப்பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குச்சொல்லியது

(ப-ரை) தம்மைக்கண்டநாளில்) அஞ்சலோம் பென்றார் (உன்னைவிட்டுநீங்கேன்) அஞ்சுதலொழி யென்றவரே, பலர்நாண (இன்றுகண்டவர்) பலரும் நாணும்வகை, நீத்தக்கடை (நம்மைவிட்டு) நீங்கியபின் அதற் (அயலவர் தூற்றுகிற) அலருக்கு, நாணவொல்வதோ (நாம்) நாணக்கூடுமோ.

(க-ரை.) தம்மைக்கண்டநாளில் உன்னைவிட்டுநீங்கேன் அஞ்சுதலொழியென்றவரே இன்றுகண்டார் பலரும் நாணும்வகை நம்மைத்துறந்தபின் நாமேதிலார்கூறும் அலருக்கு நாணக்கூடுமோ கூடாது-என்பதாம்.

(வி-ரை) கண்டார் நாணுகிற நிலைமையேமாகிய நாம் நாணுதல் எவ்வி

டத்தெனபதாம்.

*தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.

இது தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச் சொல்வாளாய் அலரறிவித்து அவனுடன்போதற்கு ஆசைகொள்ளச் சொல்லியது

(ப-ரை.) யாம்-நாம், வேண்டுங்கௌவை (உடன்போதற்குக் காரணமாதல்பற்றி முன்னமே) இச்சிப்பதாகிய அலரை, இவ்வூர்-இந்தவூர், எடுக்கும் (தானே) எடுக்கின்றது, காதலர் (இனித்) தலைவர், வேண்டின் (நாம் வேண்டினால், தாம்-தாமும், நல்குவர்-அதற்கு உடன்படுவர் (ஆதலால் இவ் வலர்நமக்கு நன்றாய்வந்தது,) எ-று.

(க-ரை.) உடன்செல்லுதற்குக் காரணமாக நோக்கி நாம்முன்விரும்பு வதாகிய அலரை யிவ்வூர்தானே யெடாநின்றது இனிக்காதலர் தாமும் யாம் வேண்டியக்காலதனை இனிது நேர்வராதலின் இவ்வலர் நமக்கு நன்றாய்வந்தது - என்பதாம்,

(வி-ரை.) உம்மைவருவிக்கப்பட்டது. நம்மிடத்துஆசையுடைமையால் மருளென்பதுதோன்ற காதலரென்றாள். ...

நூற்றுப்பதினைந்தாம்-அதிகாரம்-அலரறிவுறுத்தல்.

முற்றிற்று.



# கற்பியல்.

இனிக்கற்புப் பதினெட்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலே பிரிவாற்றாமை சொல்லுகின்றார். உ-ம்.

## கககூ-ஆம்-அதி-பிரிவாற்றாமை.

அஃதாவது: மணம்செய்து கொண்டபின் தலைவன் அறம்பொருளின் பகளின் பொருட்டுத் தலைவியைப்பிரிந்து தூரத்திலும், அவ்விடத்திலும் செல்லுநாளில், அப்பிரிவை அவள்பொறுக்க மாட்டாதவளாந்தன்மையாம் அது இங்கே பிரிவை அறிவித்த தலைவனுக்குத் தோழிசொல்லலும், தோழிக்குத்தலைவி அவன் குறிப்பால் அறிந்துசொல்லலும், பிரிவை அறிவித்தவிடத்துச்சொல்லலும், பிரிந்தவிடத்து ஆற்றுவிக்குமிடத்துத் தோழிக்குச் சொல்லலும், எனநால்வகையாலே சொல்லப்பட்டது.

செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

இது பிரிந்து கடிதில்வருவேனென்ற தலைவனுக்குத்
தோழிசொல்லியது. *

(ப-ரை.) செல்லாமையுண்டேல் (நீ எம்மைப்) பிரியாமை உண்டாயின் எனக்கு-எனக்கு, உரை (அதனைச) சொல்லு, மற்று-அதுநீங்க, நின்வல்வரவு (பிரிந்துபோய்) நின்விரைந்து வருதலை, வாழ்வார்க்கு (அப்பொழுது) உயிர்வாழ்வார்க்கு, உரை-சொல்லு, எ-று.

(க-ரை.) நீ யெம்மைப் பிரியாமை யுண்டாயினதனை யெனக்குச்சொல்லஃதொழியப் பிரிந்துபோய் விரைந்துவருதல் சொல்லுவையாயினதனை யப்பொழுதுயிர் வாழ்வார்க்குச் சொல்லென்பதாம்.

(வி-ரை) தலைவியை யொழித்து எனக்கென்றான் தான் அவள்என்கிற வேற்றுமையில்லாமையால், நீ பிரிந்திருக்குங் காலமெல்லாம் பொறுத்திருந்து அவ்வரவுகாணும் வலிமையுடைய ளல்லள் பிரிந்தபொழுதே இறந்துபடுவளென்பதாம். அழுங்குவித்தல்-பயன் க

---

* (இறையனாரகப்பொருள்) கற்பினுட்பிறவே கடிவரையின்றே, ஓதல் காவல் பகைதணிவினையே, வேந்தர்க்குற்றுழிப் பொருட்பிணிபரத்தையென் றாங்கவ்வாறே யவ்வயிற்பிரிவே. (தொல்காப்பியம்) கற்பெனப்படுவது காரணமொடுபுணரக், கொளற்குரிமரபிற் கிழவன்கிழத்தியை, கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்வதுவே. (அகப்பொருள்விளக்கம்) பொற்பமை சிறப்பிற் கற்பெனப்படுவது, மகிழ்வுமூடலு மூடலுணர்த்தலும், பிரிவும்பிறவு மருவியதாகும்.

## ககருக ககசு - ஆம் - அதி-பிரிவாற்றாமை.

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

இது தலைவனது பிரிவைக்குறிப்பால் அறிந்ததலைவி
தோழிக்குச் சொல்லியது.

(ப-ரை.) (தழைபுமாலையுங்கொண்டு பின்னின்றநாளில்) அவர்பார்வல் அவரது பார்வைமாத்திரமும் (புணர்ச்சி குறித்தமையால்) இன்கணுடைத்து(நமக்கு) இன்பமுடைத்தா யிருந்தது (இன்று அப்புணர்ச்சிதான் நடந்துகொண்டிருக்கவும் (புணர்வு-அப்புணர்ச்சி, பிரிவஞ்சும்-பிரிவரென்றஞ்சுகிற, புன்கண்-அச்சத்தினை, உடைத்து-உடைத்தாயிற்று(அவரன்பினிலைமை இது) எ-று.

(க-ரை.) தழையுங் கண்ணியுங்கொண்டு பின்னின்ற ஞான்றவர் நோக்குமாத்திரமும் புணர்ச்சி குறித்தமையா னமக்கின்ப முடைத்தாயிருக்க இன்றப் புணர்ச்சிதானிகழா நிற்கவு மது பிரிவரென்றஞ்சு மச்சத்தினையுடைத்தாயிற் றவரன்பினிலைமை யிதுவென்றவா றென்பதாம்.

(வி-ரை.) ஆல். அசை. பார்வலென்றவதனாலே-புணர்ச்சிபெறாமல்தலைவன் பின்னின்ற காலம்பெறப்பட்டது. புன்கண்-துன்பம். அது காரணத்தின்மேலாயிற்று, அவ்வச்சத்தினை யுடைத்தாலாவது புணரும்போதுதன்னை மிகப்புகழ்தலாலும், அணிதிருத்தலாலும், தலைவன் பிரிதற் குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை அழுக்குவித்தல் பயன் ௬

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

இதுவுமது.

(ப-ரை.) அறிவுடையார்கண்ணும் (பிரியேனென்றதஞ்சொல்லையும் நம்பிரிவு (பொறுமையையும்) அறிதலுடையவராகிய காதலரிடத்தும், ஓரிடத்து-ஒரோவழி, பிரிவு-பிரிவுதலை, உண்மையான்-உண்டாதலால், தேற்றம் (அவர்சொல்லும் தலை யளியும்பற்றி நம்மேல் அன்புடையரென்று தெளியுந்) தெளிவு, அரிது-அரிதாயிருந்தது, எ-று.

(க-ரை.) பிரியேனென்ற தஞ்சொல்லு நம் பிரிவாற்றாமையு மறிதலுடையராய காதலர்கண்ணு மொரோவழிப்பிரிவு நிகழ்தலானவர் சொல்லு தலையளியும்பற்றி நம்மாட்டன்புடையரெனத் தெறிந்தற்ற மரிதாயிருக்

தென்பதாம்.

(வி-ரை.) அரோ-அசைநிலை, உம்மை-உயர்வு சிறப்பு.

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

## ககஅ - ஆம் - அதி - பிரிவாற்றாமை. ௬௪௨

இதுவுமது.

(ப-ரை.) அளித்து (எதிர்ப்பட்டகாலே) தலையளிசெய்து, அஞ்சலென்றவர் (உன்னைவிட்டுப் பிரியேன்) அஞ்சா திருவென்றவர் தாமே, நீப்பின் பின்னே) பிரிவாராயின் (அவர்க்கல்லாமல்) தெளித்தசொல் (அவரால்) தெளிவிக்கப்பட்ட சொல்லை, தேறியார்க்கு (மெய்யென்று) தெளிந்தவர்க்கு, தவறு-குற்றம், உண்டோ-உளவோ. எ-று.

(க-ரை.) எதிர்ப்பட்டஞான்றே தலையளிசெய்து நின்னிற் பிரியேனஞ்சலென்றவர் தாமே பின்பிரிவாராயினவர்க் கன்றியவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத்தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ-என்பதாம்.

(வி-ரை.) தேறியாரென்றது தன்னைப்பிறர்போற் சொல்லியது. சொல்லும் செயலும் ஒத்திராமைக்குற்றம் அவர்க்கு உண்டாம் அது உண்டாகாதபடி அழுங்கச் செய்யென்பது கருத்து.

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

இதுவுமது.

(ப-ரை.) ஓம்பி-என்னுயிரைச் செல்லாமற் காப்பாற்றுவையாயின், அமைந்தார் (அதனை ஆளுதற்கு) அமைந்தவரது, பிரிவு-செலவை, ஓம்பல்-அழுங்குவிப்பாயாக, மற்று-அழுங்குவிப்பா தில்லாமல் அவர்-அவர், நீங்கின்-செல்வாராயின் (அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லுமாதலால் புணர்வு (பின்பு அவரைக்) கூடுதல், அரிது (எனக்கு) அரிதாம், எ-று.

(க-ரை.) என்றுயிரைச் செல்லாமற்காத்தியாயி னதனையாளுதற்கமைந்தாருடைய செலவினை யழுங்குவிப்பாயாக வழுங்குவிப்பாயன்றி யவர் செல்வராயினவரா லாளப்பட்ட வுயிருஞ் செல்லுஞ்சென்றாற் பின்னவரைக் கூடுதலெனக் கரிதாம் - என்பதாம்.

(வி-ரை.) ஆல்-அசை. ஆளுதற் கமைதல்-தலைவராதற்கு ஊழால் எற்புடையராதல். ௯

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

இது தலைவன்பிரிவை அறிவித்தவாறுவந்து சொல்லியதோழிக்குத் தலைவிசொல்லியது.

(ப-ரை.) அவர் (நமதுபிரிவு பொறுமையறிந்த) அத்தலைவர்தாமே (நம் முன்னின்றும்) பிரிவுரைக்கும் (தம்) பிரிவை அறிவிக்கும் வன்கண்ணராயின்-அருளில்லாமையை யுடையராயின் (அத்தன்மையரான பின்பு) நல்குவரென்னு நசை (நம்பொறுமையை அறிந்துவந்து) தலையளி செய்வாரென்னுமாசை அரிது-விடப்படும், எ-று.

# ௬௩௪ ௧௧௬ - ஆம் - அதி - பிரிவாற்றாமை

(க-ரை.) நங்கவ்வுக்கபொறுமை யறிந்ததலைவர் தாமே நம்முன்னின்றுதம் பிரிவினை புணர்த்தும் வன்கண்மை யுடையராயினாராயி னத்தன்மையராய் பின்புநம்மாற்றாமை யறிந்துவந்து தலையளிசெய்வ ரென்றிருக்குமாசை விடப்படும் - என்பதாம்.

(வி-ரை) அருமை பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பில்லாமற் பிரிவெண்ணுதலும்அறிவித்தலும், வல்லவராயினர், பிரிந்துபோய்அன்புடையராகி நம்மை நி, அதுவந்து அளித்தல் எவ்விடத்ததென்பதாம்.

அழுங்குவித்தல்பயன்.

துறைவன் றுறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறைஇறவா நின்ற வளை.

இதுவுமது.

(ப-ரை.) துறைவன்-செய்தல்நிலத்தலைவன், துறந்தமை (என்னைப்)பிரியலுற்றமையை (அவன் அறிவிக்காமல் தாமே அறிந்து) முன்கையிறை (என்) முன்கையிறையினின்றும், இறவாநின்றவளை-கழலாநின்ற வளையல்கள், தூற்றுகொல் (எனக்கு) அறிவியாவோ (அவன்) அறிவிக்க அறிந்துவந்து நீ அறிந்து வந்து நீ அறிவித்தல் வேண்டுமோ, எ-று.

(க-ரை.) துறைவனென்னைப்பிரியலுற்றமையையவனுணர்த்தாமற்றாமே புணர்ந்தேன் முன்கையினிறையினின்றுங் கழலாநின்ற வளைகளெனக்கறிவியாவோ வவனுணர்த்த வுணர்ந்துவந்து நீயறிவித்தல் வேண்டுமோ - என்பதாம்.

(வி-ரை.)முன்னே நிகழ்ந்தமையால் துறந்தமையென்றும்,கேட்டவளவில் மெலிந்த பொறுமையால் இறவா நின்றவென்றும், சொல்லினள்,அழுங்குவித்து அதுவந்து சொல்லுந் தன்மையையல்லாத நீயும் இவ்வளைசெய்தனவே செய்தாயென்று பிணங்கிச் சொல்லியபடி.

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

இதுவுமது.

(ப-ரை.) இனநில்லூர் (மகளிர்க்குத் தங்குறிப்பறிகிற) தோழியரில்லாத வேற்றூரினிடத்து, வாழ்தல்-வாழுதல்,இன்னாது-துன்பஞ்செய்வதாகும் (அதன்மேலும்) இனியார்ப்பிரிவு(தங்) காதலரைப்பிரிதல்,அதனினும்-அவ்வாழ்தலைக்காட்டிலும், இன்னாது-துன்பஞ்செய்வதாகும், எ-று.

(க-ரை.) மகளிர்க்குத் தங்குடிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தலின்னாத தினின்மேலுந் தங்காதலரைப்பிரித லதனினு மின்னாதென்பதாம்.

௧௫௬ - ஆம் - அதி - பிரிவாற்றாமை. ௧௬௦

(வி-ரை.) தலைவன் செல்லுதலை அழுங்குவித்து வாராது உடன்பட்டு வர்தமைபற்றிப் பிணங்குகின்றாளாகலால் - இன்னில்லூரென்றாள். உலக நடை சொல்லுகின்றாள்போல் தனக்கு அவ்வாழ்வும் பிரிவும் உண்டாயிருக்கை சொல்லியபடி.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

இது காமம் தீயேபோல் நின்றவிடத்தைச் சுடுமாதலால் நீபொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

(ப-ரை.) தீ-நெருப்பானது, தொடின் (தன்னைத்) தொட்டால், சுடிற் (சுட) வல்லது-சுட்டாற் சுடவல்லது, காமநோய்போல - காமமாகிய நோயைப்போல, விடின் (தன்னை) விட்டுநீங்கினால், சுடலாற்றுமோ (தப்பாது) சுடல்வல்லதோ, எ-று.

(க-ரை.) தீதன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுகேலல்லது காமமாகிய நோய்போலத் தன்னை யகன்றாற்றப்பாது சுடுதலை வற்றோமாட்டாது- என்பதாம்.

(வி-ரை.) சுடினென்றது-மந்திர மருந்துகளாலே தப்பிக்கப்படாதாயினென்றபடி காமத்திற்கு அதுவும் இல்லையென்றற்கு-சும்மாசுடலென்றாள் நீங்கில் அனுபவியாமை சுடல் முன்னும் கூட்டப்பட்டது. தீயினும் கொடியதனை நான் பொறுக்குவிதம் என்னையென்பதாம். ௧

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

இது தலைவியர் பலரும் பிரிவைப் பொறுத்திருப்பர் நீ இது செய்கின்றிலை யென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.

(ப-ரை.) (நீசொல்லுகின்றது ஒக்கும்) அரிதாற்றி-பிரிவை அறிவித்தவிடத்து அதற்கு உடன்பட்டு, அல்லனோய் (பிரியும்போது உண்டாகிற) துன்பநோயையும், நீக்கி-ஒழித்து, பிரிவாற்றி (பிரிந்தால்) அப்பிரிவையும் பொறுத்து, பின்னிருந்து-பின்னும் இருந்து, வாழ்வார்-உயிர்வாழுமகளிர். பலர் (உலகத்திற்) பலர். எ-று,

(க-ரை.) நீ சொல்லுகின்ற தொக்கும் பிரிவுணர்த்திய வழியதற்குடன்பட்டுப் பிரியங்கா ணிகழுமல்ல னோயினையு நீக்கிப்பிரிந்தார் பிரிவு தன்னையுமாற்றிப் பின்னுமிருந்துயிர் வாழுமகளி ருலகத்துப் பலரென்பதாம்.

(வி-ரை.) முன்னிலுஞ் சிறக்கத் தலையளிபெற்று இன்பத்தை அனுப விக்கிற சமயத்தில் அதனையிழந்து துன்பத்தை அனுபவித்தற்கு உடன் ப டுதல் அரியதொன்ருகலால் அரிதாற்றியன்றும் செல்லுந் தேசத்திலே அ வருக்கு யாது சம்பவிக்குமோவென்றும், அவர்வருமளவும் நாம் பொறுத் திருக்கும் விதம் என்னென்றும், அவர்வரவுதான் மறுபடி என்றைக்குவந்து



கிடைக்குமோவென்றும், இவ்விதங்களாலே தோன்றுகிற கவலைமனத்தை விட்டு நீங்காதாதலால் அல்லனேய் நீக்கியென்றும், பிரிந்தால் வருமளவும் உள்ளே தோன்றுகிற காமவேதனையும் புறத்தில், வீணை, யிசை, சந்திரன், தென்றல், இவைமுதலாய் வந்து அதனை வளர்ப்பையும் பொறுத்தல் அரு மையாகலால் பிரிவாற்றியென்றும், தாம் காதலரை விட்டிருக்கமாட்டாத மகளிருள் இவையெல்லாம் பொறுத்துப் பின்னும் இருந்து உயிர்வாழவல் லவர் ஒருவரும் இல்லையென்பது குறிப்பினலே தோன்ற பின்னிருந்து வாழ்வார் பலரென்றும், சொல்லினுள். பிரிவிலே நிகழ்ப்பவைகளைப் பிரி வென்ருள்: ஆற்றிநீக்கி ஆற்றி யென்பவை ஓசை வகையால் அவைகளின ருமை புணர நின்றன. பிரிவையுமென்னு மும்மை விகாரத்தாற்ருெக்கது யாஹும் இறந்து படுவேவென்பது கருத்து. கய

நூற்றிப்பதினூரம்-அதிகாரம்-பிரிவாற்ருமை
முற்றிற்று.

---

# ககஎ-ஆம்-அதி-படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது. பிரிவு பொறுக்கமாட்டாதவளாகிய தலைவி தான் உறுத் துகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலின் அந்நினைவால் மெலிந்து இரங்கலாம் அதிகாரமுறைமையும் இதனலே விளங்கும்.

மறைப்பேன் மன்யானிஃதோ நோயை யிறைப்பவர்க்

கூற்றுநீர் போல மிகும்.

இது காமநோயை வெளிப்படுத்துதல் உன் நாணத்திற்குத் தகாதென்ற தோழிக்குச் சொல்லியது.

(ப-ரை.) யான்-நான், நோயை-இந்நோயை, மறைப்பேன் (பிறரறிதற்கு நாணி) மறையாநின்றேன் (நிற்கவும்) இஃதோ-இந்நோயோ, இறைப்பவர்க்கு (நீர் வேண்டுமென்று) இறைப்போர்க்கு, ஊற்றுநீர்போல - ஊற்று நீரைப்போல, எ-று.

(க-ரை.) இந்நோயைப் பிறரறிதலுணி யான் மறையா நின்றே னிற்கவுமிஃதக்காணவரை நில்லாதிரைப்பவர்க் கூற்றுநீர் மிகுமாறுபோல் மிகாநின்றதென்பதாம்.

(வி-ரை.) அம்மறைத்தலாலே பயன்யாதென்பது படநிற்கையால்,மன் ஒழியிசை, இனி அதற்கு அடுத்தது செயல்வேண்டு மென்பதாம். க

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். ௨

# ககசு-ஆம்-அதி-பசப்புறுபருவரல்.

அஃதாவது: பசப்புறுதலாலாகிய வருத்தம் பசப்பாவது, பிரிவு பொறுமையால் வருவதோர் நிறவேறுபாடு. இது தலைவனைக் காணப்பெறாதவிடத்து நிகழ்வதாகலால் கனவுநிலையுரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

இது முன்பிரிவிற்கு உடன்பட்டதலைவி அதுபொறாமல் பசப்புநிறமடைந்தவிடத்துத் தன்னுள்ளே சொல்லியது.

ப-ரை. நயந்தவர்க்கு-(என்னை) விரும்பியதலைவர்க்கு, நல்காமை-பிரிவை, நேர்ந்தேன் (அப்போது) உடன்பட்டாள், பசந்த (அதனைப்பொறாமல் இப்பொழுது) பசப்புநிறமடைந்த, என்பண்பு - எந்நியல்பை, யார்க்கு-எவர்க்கு உரைக்கோ-சொல்வேன் எ-று.

க-ரை என்னை நயந்தவர்க்கது பொழுதுபிரிவை யுடம்பட்ட யானதனை யாற்றுநிதுபொழுது பசந்தவென் னியல்பினை யார்க்குச்சொல்லுவே னென் பதாம்.

வி-ரை. பிறவென்றது-அசைநிலை. தான் உடன்படாதவிடத்துப் பிரி வொழிதல்குறித்துப் பிரிவைத் தனக்கு அறிவித்தாராகலால் அவரன்புடைய ரென்னுங்கருத்தால் நல்காமையென்றும், முன்னே உடன்படுதலும் பின்னே பொறுமல்பசத்தலும் பிறர்செய்ததை யல்லவென்றற்கு பசந்தவென் பண்பெ ன்றும், யான் செய்துக்கொண்ட துன்பத்தை இனி ஒருவர்க்குச் சொல்லுத லும் பழியாமென்னுங் கருத்தால், யார்க்குரைக் கோவென்றும் சொல்லினன்,

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

இது பொறுவென்று கவலையுற்ற தோழிக்குத்
தலைவி பொறுப்பேனென்பது தோன்றச்சொல்லியது.

ப-ரை. (நான்பொறுத்திருக்கவும்) பசப்பு - இப்பசப்பு நிறம், அவர் அவர் தந்தாரென்னுந் தகையால் என்னை) உண்டாக்கினரென்னுங் களிப்புமிகுதி யால் என்மேனிமேல்-என்னுடம்பின்மேல் இவர்தந்து-ஏறி ஊரும செலுத் தாநின்றது, எ-று.

க-ரை. யானுற்றிபுனேனுகவு மிப்பசப்புத்தா னென்னை யுண்டாக்கினரவ ரென்றும் பெருமிதத்தா னென்மேனியை மேல்கொண்டு செலுத்தா நின்ற தென்பதாம்.

வி-ரை. இது-உரிமைப்பற்றி வார்கின்றது. இதற்கு நீ கவலைப்படாதே என்பதாம், (உ)

64

## ௬0௪ ௧௧௯ - ஆம் - அதி - பசப்புறுபருவரல்.

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து.

இது அழகு நாணமுங்கெடாமல் நீ பொறுத்தல்வேண்டுமென்ற தோழிக்குத்
தலைவி சொல்லியது.

ப-ரை. (பிரிகின்ற பொழுதே) கைம்மாறு (அவ்விரண்டுக்கும்) தலைமாறு க, நோயும் பசலையும்-இக்காமநோயையும் பசலையையும், தந்து (எனக்குத்) தந்து, சாயலும்நாணும் (என்மேனி) யழகையும் நாணத்தையும், அவர்-அவர் கொண்டார்-கொண்டுபோனார், எ-று.

க-ரை- பிரிகின்றஞான்றே யவ்விரண்டிற்குந் தலைமாறாக விக்காமநோயினையும் பசலையையு மெனக்குத்தந்தேன் மேனியழகினையும் நாணினையுமவர் கொண்டு நீங்கினாரென்பதாம்.

வி-ரை. நோய்க்கு-நாணும் பசலைக்கு-சாயலும், ஆதலால் எதிர் நிறனிறை அடக்குந்தோறு மிகுதலால் நோய்நாணுக்குத் தலைமாறாயிற்று. இனி அவர் தந்தாலல்லது அவைஉண்டாதலும், இவைஇலவாதலும் கூடாவென்பதாம்.

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு

இது பிரிகின்றவர் தெளிவித்தசொற்களையும், அவர் நற்குணங்களையும்
அறியாவாகையால் அவர் விரைந்துவருவா ரென்ற தோழிக்குத்
தலைவி சொல்லியது.

ப-ரை. யான்-நான், உள்ளுவன் (அவர் சொற்களை மனத்தால்) நினைக்கின்றேன், உரைப்பது (வாயால்)சொல்லப்படுவதுஃ, அவர்திறம்-அவமே (அப்படிச்செய்யாதிருக்கவும்) பசப்பு-பசலைநிறம் (வந்துநின்றது (இது) வஞ்சனையாயிருந்தது, எ-று.

க-ரை. அவர்சொற்களை யான் மனத்தால் நினையாநிற்பேன் வாக்காலுரைப்பது மவர் நற்றிறங்களையே யவ்வனஞ்செய்யாநிற்கவும் பசப்புவந்துநின்ற திதுவஞ்சனையா யிருந்த தென்பதாம்.

வி-ரை. பிறவும்-ஓவும்-அசைநிலைகள். மெய் மற்றை மனவாக்குகளின் வழியுள்ளதாகலால். அதனிடத்தும் வருந்தன்மையதான்றாயிருக்க வந்தபடியால் இதன்செயல் கள்ளமாயிருந்ததென்று தான் பொறுக்கின்றமை சொல்லியபடியாயிற்று.

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

இது தலைவர்பிரிந்து சமீபமாயிருக்கவும் நீ பொறுக்கின்றிலையென்ற
தோழிக்குத் தலைவி முன்னே நிகழ்ந்தது சொல்லியது.

ப-ரை. உலக்காண்-அக்காலத்து, எக்காதலர்-எமதுத் தலைவர், செல்வார் (பிரிந்து) செல்வாராக, என்மேனி-எனது வடிவம், பசப்பூர்வது, பசலைநிற மடைவது, இவக்காண்-இங்கேயன்றோ (அப்படிப்பட்டது) இன்று வேறொன்றுமோ, எ-று.

க-ரை. பண்டு எங்காதலருஞ் செல்வாராக வென்மேனிப் பசப்பூர்வதிங்கேயன்றோ வப்பெற்றியதின்று பிறிதொன்றுமோ வென்பதாம்.

வி-ரை. உலக்காண் இவக்காணென்பன ஓட்டிநின்ற விடைச்சொற்கள் அவர்செலவும் பசப்பினது வரவும்பகலிரவுகளின் செலவு வரவுகள்போல்வதை அறிந்திருந்தும், அறியா தால்போல் நீ சொல்லுகின்றது என்னை யென்பதாம்.

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண் கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

இதுவுமது.

ப-ரை. விளக்கு-விளக்கினது, அற்றம்பார்க்கும்-சோர்வுபார்த்து நெருங்கி வருகிற, இருளேபோல் இருளைப்போலவே, பசப்பு-இப்பசலை நிறம், கொண்கன்-தலைவனது, முயக்கு-புணர்ச்சியானது, அற்றம் பார்க்கு-சோர்வு பார்த்து நெருங்கிவரும், எ-று.

க-ரை. விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவருமிருள்போலக்கொண்கனது முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவருமிப்பசப்பென்பதாம்.

வி-ரை. முன் பிரியாதிருக்கவும் தனக்குச் சமயம் பார்த்துவருகிற பசப்புப் பிரிவுபெற்றால் என்னசெய்யாதென்பதாம். (௬)

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

இதுவுமது.

ப-ரை. புல்லிக்கிடந்தேன் (முன்னொருநாளிலே காதலனைத்) தழுவிக்கிடந்தான், புடைபெயர்ந்தேன் (அறியாது) சற்றுவிலங்கிலேன், அவ்வளவில்-அவ் விலங்கிய வளவிலே, பசப்பு-பசலைநிறமானது, அள்ளிக்கொள்வற்றே-அள்ளிக்

கொன்னப்பமும் பொருள்போல்வந்து நிறைந்தது, எ-று.

சு-ரை. முன்னொருஞான்று காதலனைப் புல்லிக்கிடந்த யானறியாது புடைபெயர்ந்தேனைப் புடைபெயர்ந்த வன்விலே பசப்பள்ளிக் கொள்வதுபோல வந்து செறிந்த தென்பதாம்.

## ௱அ ககக - ஆம் - அதி - பசப்புறுபருவரல்.

வி-ரை. கொன்னவென்பது குறைந்தநின்றது அப்புடைபெயர்ச்சிமாத் திரத்திற்கு அப்படியாயெது இப்பிரிவிடத்து ஆகும் விதம் சொல்லவேண்டு மோ வென்பதாம். (எ)

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

இது 8 இப்படிப் பசப்புநிற மடைவது தகாதென்ற
தோழியோடு பிணங்கிச் சொல்லியது.

ப-ரை. இவள்-இவள், பசந்தா ளென்பதல்லால் (பொறுத்திராமல்) பசலை நிறமடைந்தாளென்று (என்னைப்) பழிசொல்லுவ தல்லது, இவளை-இம்மாதை அவர்-அவர், துறந்தாரென்பார் துறந்துபோயினு ரென்று சொல்லுவார், இல்-இல்லை, எ-று.

க-ரை. இவளாற்றியிராது பசந்தாளென் றென்னைப் பழிகூறுத வல்லதி வளையவர் துறந்துபோயினுரொன் றவரைக் கூறுவா ரொருவரு மில்லையென் பதாம்.

வி-ரை. தன்னையே செருக்குதல் பற்றிப் பிணக்குகின்றமையால் எவ் பாரென வேறுபடுத்தி சொல்லினள்.

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

இதுவுமது.

ப-ரை. நயப்பித்தார் (இப்பிரிவையானே) உடன்படும் வகைசொல்லிய வர், நன்னிலையராவரெனின் (இன்று உன்கருத்தால்) நல்ல நிலையினராவரா யின், என்மேனி-என்னுடம்பு, பட்டாங் (காக) பட்டுதபட, பசப்பதாக வெ

ன்பதாம்.

க-ரை. இப்பிரிவையானே யுடன்படும்வகை சொல்லி யவரின்று கின்கரு த்தானல்ல கிலையினாரவராயி னென்மேனிப் பட்டதுபடப் பசப்பதாக வென் பதாம்.

வி-ரை. கன்னிலையாதல்-தன்மைக் கண்ணே கிற்றலையுடையாதல் பட் டாங்காகவென ஆக்கம் வருவித்துச் சொல்லப்பட்டது முன் இப்பிரிவின் கொ டுமையறியாதன்னை இதற்கு உடன்படுத்தி பிரிந்தவர் தவறிலாராகவே வே ண்டுவது என்மேனியும் பசப்பும் யாதுசெய்யில் என்னவென்பது படகிற்கை யால், மன்-ஒழியிசையில் வந்தது. (க)

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்

# கடுO - ஆம் - அதி - தனிப்படர்மிகுதி. இ0க

இது தலைவிபொறுத்தற் பொருட்டுத்தோழி தலைவனை இயற்பழித்தவிடத்து அவள் இயற்படச் சொல்லியது,

ப-ரை- நயப்பித்தார் (அன்று) குறைநயப்பித்துக்கூடினவர்க்கு, நல்காமை (இன்று) அருளாமையை, தூற்றாரெனின் (நட்புற்றோர்) தூற்றாராயின், பசப்பென-பசப்புத்தானுயினுளென்று (ஒற்றுமையால்தாம்) சொல்ல, பேர்ப்பெறுதல்-பேரைப்பெறுதல். நன்றே (எனக்கு) நன்றாய் எ-று.

க-ரை. அன்றுதாங்குறை நயப்பித்துக் கூடினவர்க்கின்று நல்காமையை நட்டோர் தூற்றாராயிற் பசப்புனாயினுளென வேற்றுமையானன்றிப் பசப்புத் தானாயினுளென வொற்றுமையாற்றுஞ் சொல்ல வப்பெயரைப் பெறுதலென க்கு நன்றென்பதாம்.

வி-ரை. நட்புற்றாரென்பது வருவிக்கப்பட்டது. பாங்கிப்பழித்தற்குப் பொறுமற் பிணங்குகின்று ளாதலால் இகழ்ச்சிக்குறிப்பால் சொல்லினுள். அவ ரை அருளிலரென்றது இன்னும் பசலை அடைந்தான் இவளென்பதே நான் பொறுக்கும் வழியென்பதாம். (௧O)

நூற்றுப்பத்தொன்பதாம்-அதிகாரம்-பசப்புறுபருவரல்.
முற்றிற்று.

———

# ௧௨௰-ஆம்-அதி-தனிப்படர்மிகுதி.

அஃதாவது: தனியாகிய துன்பமிகுதியாம். அது பசப்புற்று வருந்தினவளுக்கு உரியதாகலால் பசப்புறு பருவரலின் வைக்கப்பட்டது.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி,

இது காதலர் உன்னினும் பொருதலுய்க் கடிதிலேவருவார்
நீ அவரோடு பேரின்பத்தை அநுபவிப்பாயென்ற
தோழிக்குச் சொல்லியது.

ப-ரை. தாம்வீழ்வார் தம்மாலே விரும்பப்பட்ட கணவர், தம்வீழ-தம்மை விரும்ப, பெற்றவர்-பெற்றமகளிர், காமத்து-காமாநுபவத்தினது, காழில்-வித்தில்லாத, கனி-பழத்தை, பெற்றாரே-பெற்றாரன்றே, எ-று.

க-ரை. தம்மாற் காதலிக்கப்படுங் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர் பெற்றாரன்றே காமநுகர்ச்சி யென்னும் பரலில்லாத பழத்தினையென்பதாம்.



வி-ரை. காமம் ஆகுபெயர் காமத்தினது கனியென்றதில் எனதுயிரென்பதுபோல் ஆறுவது ஒற்றுமைப்பொருளில் வந்தது முன்னை நல்வினையில்லாத விடத்துப் பெறக்கூடாமையால் பெற்றாரென்றும், அவராலே தடையில்லாமல் அநுபவிக்கப்படுதலால் காழில் கனியென்றும் சொல்லினள். நற்காதலர் பிரிதலேயல்லாமல் பின்னாசையுமுடைமையால் அக்கனி நாம் பெற்றிலேமென்பதாயிற்று.

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

இதுவுமது.

ப-ரை. (அறமும் பொருளும், இன்பமும், நோக்கிப் பிரிந்தால்) வீழ்வார்க்கு (தம்மை) விட்டிருக்க மாட்டாத மகளிர்க்கு வீழ்வார் (அவரை) விட்டிருக்க

மாட்டாத கணவர், அளிக்கும் - அளவறிந்தவர்து செய்கிற, அளி - தலையளி, வாழ்வார்க்கு (தன்னையேநோக்கி) உயிர்வாழ்வார்க்கு, வானம்-மழை, பயந்தற்று அளவறிந்தவர்து பெய்வதுபோலும், எ-று.

க-ரை. அறமும் பொருளு மின்பமு நோக்கிப் பிரிந்தாற் றம்மையின்றிய மையா மகளிர்க்கவரை யின்றியமையாக் கணவரளவறிந்தவர்து செய்யுந் தலை யளி தன்னையே நோக்கி யுயிர்வாழ்வார்க்கு வானமளமறிந்து பெய்தாற்போலு மென்பதாம்.

வி-ரை. நங்காதலர் நம்மைவிரும்பாமையால் அத்தலையளியில்லையாதலால் மழைவறந்தவிடத்து அதனால் வாழாதார்போல் இறந்தவேகைக்கு உள்ளதென் பதாம். (உ)

*வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே*
*வாழுந மென்னுஞ் செருக்கு.*

இதுவுமது.

ப-ரை. வீழுநர் (தம்மால்) விரும்பப்படுகிற கணவரால், வீழப்படுவார்க்கு விரும்பப்படுகிறமகளிர்க்கு (காதலர் பிரிந்தாலும் நம்மை நினைந்து கடிதில்வரு வார், வருமளவும் (வந்தால் நாம் இன்புற்று) வாழ்வோமென் றிருக்கிற, செருக்கு-தருக்கு, அமையுமே-ஏற்புடைத்தாம், எ-று.

க-ரை. தாம்விழையுங் கணவரால் விழையப்படு மகளிர்க் கேற்புடைத்துக் காதலர் பிரிந்தாராயினு நம்மை நினைத்துக் கடிதின் வருவர் வந்தாலுமின்புற்று வாழ்துமென் றிருக்குந் தருக்கென்பதாம்.

வி-ரை. நாம் அவரால் விரும்பப்படாமையால் நமக்கு அமைவு இறந்து படுதலே யென்பதாம்,

*வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்*
*வீழப் படாஅ ரெனின்.*

## ௧௨௦ - ஆம் - அதி - தனிப்படர்மிகுதி. ௬௧௧

இது காதலரை இயற்பழித்தலுக்கு அஞ்சி அவரது அருளில்லாமையை மறைத்தால் நீ தெய்வத்தன்மை பொருந்திய கற்புடையையாகலால் கற்புடை மகளிரால் நன்குமதிக்கப்படுவாயென்ற தோழிக்குத்

தலைவி சொல்லியது.

ப-ரை. வீழப்படுவார் (கற்புடைய மகளிராலே) நன்குமதிக்கப்படுவோரும் தாம்வீழ்வார்-தம்மால் விரும்பப்படுகிற கணவரால், வீழப்படாஅரெனின்-விரும்பப்படாராயின். கெழீஇயிலர்-தீவினையுடையரோ யாவர், எ-று.

க-ரை. கற்புடைய மகளிரா னன்குமதிக்கப் படுவாருந் தாம் விரும்புங் கணவரான் விரும்பப்படாராயிற் றீவினையாட்டிய ரென்பதாம்.

வி-ரை. உம்மைவிகாரத்தால்தொக்கது கெழீஇயின்மை நல்வினையில்லாமை தீவினை யுடையேனுக்கு அந்நன்குமதிப்பால்பயனில்லை யென்பதாம்-(௪)

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

இது அவர்மேலே காதலுடைமையால்
அவர் கருத்தறிந்து பொறுத்தாயென்ற தோழிக்குச் சொல்லியது.

ப-ரை. நாங்காதலால் கொண்டார்-நம்மாலே காதல் கொள்ளப்பட்டவர் நமக்கு.நமக்கு எவன் என்னவின்பத்தை செய்பசெய்வார் (அப்படியே) தாங்காதல் கொள்ளாக்கடை தாமும் (எம்மிடத்துக்) காதல்செய்யாதவிடத்து எ-று.

க.ரை. நம்மாற் காதல்செய்யப்பட்டவர் நமக்கென்ன வின்பத்தைச்செய்வரவ்வாறே தாமுநங்கட் காதல் செய்யாவழி,என்பதாம்.

வி-ரை. அக்காதலுடைமையால் நாம் பெற்றது துன்பமே என்பதாம் ஓ-அசைநிலை. (௫)

ஒரு தலையா னின்னாது காமங்காப்போல
விருதலை யானு மினிது.

இதுவுமது.

ப-ரை. (மகளிர்) ஆடவர் எனப்படுகிற இரண்டிடங்களினும்) காமம் ஆசையானது ஒரு தலையான்-ஓரிடத்தில் (உடாண்மின்) இன்னாது துன்பஞ்செய்வதாம், காப்போல-காவடிப்பாரம்போல, இருதலையானும் - இரண்டிடங்களினும் (ஒத்திருக்குமாயுன்) அது இனிது-இன்பஞ்செய்வதாம், எ-று.

க-ரை. மகளிராடவரென்னு மிருதலையினும் வேட்கை யொருதலைக்கண்ணேயாயி னஃதின்னாது காவினது பாரம்போல விருதலைக் கண்ணுமொப்பி னஃதினிதென்பதாம்.

வி-ரை. அனுருபுகள் கண்ணிருபின் பொருளில்வந்தன. கா - அதன்பாரத்துக்கு ஆகுபெயர். என்னிடத்து உண்டாகியவாசை அவரிடத்தும் உண்டாயின் கான் இப்படி துன்பமனுபவித்தல் உடுமோ வென்பதாம். (௬)

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

இதுவுமது.

ப-ரை. காமத்தை அனுபவித்தற்குரிய இருவரிடத்தும் ஒத்து நில்லாமல், ஒருவர்கணின்று-ஒருவரிடத்தே நின்று, ஒழுகுவான்-போர்செல்கின்றவனாகிய, காமன் (அன்விடத்துப் பசுப்பாலாகிய) பருவரலும், நோயையும், பைதலும்-துன்பமிகுதியையும், காணான்கொல்-அறியானோ, எ-று.

* க-ரை. காமநுகர்தற்குரிய விருவரிடத்துமொப்ப நிற்றலையொழிந்தொருவரிடத்தேநின்று போர்செய்கின்ற காமக்கடவு ளவ்விடத்துப்பசப்பானும் பருவரலும் படர்மிகுதியு மறியான் கொல்லோ வென்பதாம்.

வி-ரை. விருப்பு வெறுப்பில்லாமல் எல்லாரிடத்தும்நிகழ்ந்தவை அறிதற்குரிய காமக்கடவுளும் என்னிடத்து வேறுபட்டான் இனி பிழைக்கும் வழியாதென்பதாம். (எ)

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

இது தலைவனது தூதுவாக்காணாத தலைவி சொல்லியது.

ப-ரை. வீழ்வாரின் - தம்மால் விரும்பப்படுங் காதலரிடத்திருந்து இன்சொல்-இனிசொல்லனவும், பெறாஅது-பெறாது, வாழ்வாரின் (பிரிவுபொறுத்து) உயிர் வாழ்கின்ற மகளிர்போல், வன்கணார்-தைரியமுடையவர், உலகத்து உலகில், இல்-இல்லை, எ-று

க-ரை. தம்மால் விரும்பப்படுங் காதல் நிறத்துநின்று மோரின் சொல்லனவும் பெறுதே பிரிவாற்றி யுயர்வாழ்கின்ற மகளிரைப்போல வன்கண்மையுடையா ரிவ்வுலகத்திலில்லை-என்பதாம்.

வி-ரை. காதலரிடத்துச் சொல் எதுவாயினும் எனக்கு இனிதாமென்னும் கருத்தால் இன்சொல்லென்றான். உம்மை-விகாரத்தால் தொக்கது நான்கவன் ,னே ணாதலால் அதுவும் பெறாது உயிர்வாழ்கின்றே னென்பதாம். (அ)

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

இதுவுமது.

ப-ரை. நசை இயார் (என்னால்) விரும்பப்பட்ட தலைவர், நல்காரெனினும் (எனக்கு) அருள்செய்யாராயினும், அவர்மாட்டு - அவரிடத்து, இசை



யும்-எச்சொற்களும், செவிக்கு-என் காதுகளுக்கு, இனிய-இன்பஞ்செய்வனவாம், எ-று.

க-ரை. என்னு னச்சப்பட்ட காதலரென்கண் ணன்பிலரேயாயினு மவர் திறத்தி யாதானுமோர் சொல்லுமென் செவிக்கினிய வென்பதாம்.

வி-ரை. இழிவு-சிறப்பும்மை. அவர் வாராரென்னுஞ் சொல்லாயினும் இனிதாய் அமையு மென்பது படுகின்றது. அச்சொல்லும் பெற்றிலே னென்பதாம். (க)

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

இது தலைவனது தூதுவரப்பெறாமல்
தான் தூதுவிட நினைத்தவள் நெஞ்சொடு சொல்லியது.

ப-ரை உறாஅர்க்கு (உன்னொடு) உறாதவர்க்கு, உறுநோய் (உனது) மிகுந்தநோயை, உரைப்பாய்-சொல்லலுற்ற, நெஞ்சு-நெஞ்சே (நீ பொறுமையிலும்) அரிதாகிய அதனைவிட்டு கடலை (உனக்குத் துயரஞ்செய்கின்ற) கடலை செறாஅஅய்-தூர்க்க முயற்சிசெய். (அது எளிது, எ-று.

க-ரை. நின்னோ டுறாதார்க்கு நின் னுறுநோ யுரைக்கலுற்ற நெஞ்சேநீ முயாயினு மரிதாய் வதனையொழித்து நினக்குத் துயரஞ்செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக வஃதெளி தென்பதாம்.

வி-ரை. சொல்லலுற்றது அளவிறந்த நோயாகலாலும் கேட்போர் உறவிலராகலாலும் அதுமுடியாத முடிந்தாலும் பயன் இல்லை யென்பது கருதாமல்

முயல்வின்றாய் என்கிற குறிப்பால் வாழியவென்றார். (௬௫)

நூற்றி இருபதாம் அதிகாரம்-தனிப்படர்மிகுதி முற்றிற்று.

# கஉக-ஆம்-அதி-நினைந்தவர் புலம்பல்

அஃதாவது முன் கூடியகாலத்தி னின்பத்தை நினைந்து * பாசறையிடத்துத் தலைவன் தனிமையடைதலும் தலைவி தனிமையடைதலும் ஆம் இது படர்மிகுதி தன்னிடத்ததாக நினைக்க தலைவிக்கும் உரித்தாகலால் இசசம்பந்தம்பற்றித் தனிப்படர் மிகுதியின்பின் வைகக்கப்பட்டது.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.

* பாசறை-பகைமேற் சென்றிருக்கு முறையிடம்.

௮௪

## (இதன்) கஉக-ஆம்-அதி-நினைந்தவர்புலம்பல்.

இது தாரய்சொல்லும் பாங்கனுக்குத் தலைவன் சொல்லியது.

ப-ரை. (முன் அனுபவித்த காமவின்பத்தை) உள்ளினும் (பிரிந்தவிடத்து) நினைத்தாலும் அப்பொழுது பெற்றதுபோல் தீராப்பெருமகிழ்செய்தலால் நீங்காப் பெருமகிழ்ச்சியைத் தருதலால், கள்ளினும் (உண்டபோதல்லது மகிழ்ச்சிசெய்யாத) கள்ளைப்பார்க்கிலும், காமம்-காமமானது, இனிது-இன்பந் தருதலையுடைத்து, எ-று.

க-ரை. முடியக் கூடியவுறன்மை யின்பத்தினைப்பிரிந்துழி நினைந்தாலும் அவ்வப்பொழுது பெற்றாற்போல நீங்காத மிக்க மகிழ்ச்சியைத் தருதலாலுண்ணுழியல்லது மகிழ்செய்யாக் கள்ளினுங் காமயின்பம் பயத்தலுடைத்தென்பதாம்.

வி-ரை. தனது தனிமையும் தலைவியை மறவாமையும் சொல்லியபடி. (க)

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்.

இதுவுமது.

ப-ரை. தாம்வீழ்வார்-தம்மால் விரும்பப்படுவோரை, நினைப்ப (பிரிவினிடத்து) நினைத்தால் (அந்நினைத்தவர்க்கு) வருவதொன்று (அப்பிரிவால்) வருவதோர் துன்பம், இல்-இல்லையாம் (அதனால்) காமம்-காமம், எனைத்து எவ்வளவாயினும், ஒன்றினிதேகாண்-இன்பந்தருவ தொன்றேகாண், எ-று.

க-ரை. தம்மால் விரும்பப்படுவோரைப் பிரிவின்க ணினைத்த லக்கிலேவார்க்குப் பிரிவான் வருவதோர் துன்பமுமில்லையா மதனாற் காமமெத்துணையேனு மினியதொன்றே காணென்பதாம்.

வி-ரை. புணர்ந்தவிடத்தும், பிரிந்தவிடத்தும், சமமாக இனிதென்றற்கு-எனைத்து மினிதென்றான். உம்மை தொக்கது தான் பொறுத்திருந்தவகை சொல்லியபடி. (உ)

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும்

இது தலைவனை நினைந்து வருந்துகின்றதலைவி தோழிக்குச் சொல்லியது.

ப-ரை. எனக்கு தும்மல்-தும்மல், சினைப்பதுபோன்று-அரும்புதல்போலே தோன்றி, கெடும்-கெடுகின்றது (அதனால்) நினைப்பவர்போன்று (தலைவர்) நன்னை நினைப்பவர்போன்று, நினையார்கொல்-நினையாராகல் வேண்டும் என்றவாறு.

க-ரை. எனக்குத் தும்மலெழுவது போன்று தோன்றிக் கெடாநின்றதா லற் காதல ரென்னை நினைப்பார் போன்று நினையாராக வேண்டுமென் பதாம்.

## ௧௨௩ - ஆம் - அதி - நினைந்தவர்புலம்பல் [illegible]

வி-ரை. தூரத்துள்ளாராகிய உறவினர் நினைத்தவிடத்து நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றுமென்கிற உலகவழக்கைபற்றித் தலைவன் எடுத்துக் கொண்ட தொழில் முடிவதுபோன்ற முடியாமையறிந்தவள் சொல்லியதாயிற்று. (௩)

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரோ வவர்.

இதுவுமது.

ப-ரை எந்நெஞ்சத்து-எமது நெஞ்சத்தில், அவர் அவர், ஓவுளரே (எப்

பொழுதும்) உள்ளவராயே யிருக்கின்றார் (அப்படியே) அவர் நெஞ்சத்து-அவரது நெஞ்சிலும், யாமும்-நாமும், உளேங்கொல்-உள்ளோமாயிருக்கின்றேமோ (ஆகேமோ) எ-று.

க-ரை எம்முடைய நெஞ்சத்தவ ரெப்பொழுது முளரேயாயிராநின்றாரவ்வகையே யாவருடைய நெஞ்சத்தியாமு முளதுமாதுமோ வாகாமோ வென்பதாம்.

வி-ரை. ஒகாரம் இங்கே இடைவிடாமையை உணர்த்துகின்றது. யாம் இருந்தும், தொழில்முடியாமையால் வரவில்லையோ அது முடிந்தும் யாம் இல்லாமையால் வரவில்லையோ வென்பதுகருத்து. (௪)

> தன்னெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
> லெந்நெஞ்சத் தோவா வரல்.

இதுவுமது.

ப-ரை. தந்நெஞ்சத்து தமது நெஞ்சிடத்து (யாம் சொல்லாமல்) எம்மை எம்மை, கடிகொண்டார்-காவல்கொண்டதலைவர், எந்நெஞ்சத்து-எமது நெஞ்சினிடத்து, ஓவாவரல்-ஒழியாமல் (தாம்) வருதலுக்கு-நாணார்கொல்-நாணாரோ, எ-று.

க-ரை. தம்முடைய நெஞ்சின்கண் யாஞ்செல்லாமைக் காவல்கொண்ட காதலர் தாமெம்முடைய நெஞ்சின் கண்ணொழியாவது வருதலை நாணார்கோல்லோ வென்பதாம.

வி-ரை. ஒருவரைத் தம்மிடத்துவர ஒருகாலும் உடன்படாமல் தாம் அவரிடத்துப் பலகாலும் செல்லுதல் நாணுடையார் செயலல்லாமையால் நாணார்கோ வென்றாள். (௫)

> மற்றியா னென்னுள்ளேன் மன்னோ வவரோடியா
> னுற்றநா ளுள்ள வுளேன்.

இது அவரோடு கூடியகாலை யின்பத்தை நினைந்து வருந்துகின்றாய் அதுமறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.

## கஉக-ஆம் - அதி - நினைந்தவர்புலம்பல்.

ப-ரை. யான்-நான், அவரோடு-அவரோடு, உற்றநாள் - புணர்ந்தநாளை இன்பத்தை, உள்ள-நினைத்தலால், உளேன் (இத்துன்ப வெள்ளத்தில்) உயிர் வாழ்கின்றேன், மற்று-அது இல்லையாயின், யான்-நான், என்னுளேன்-வேறு எதனால் உயிர்வாழ்வேன், எ-று.

க-ரை. யானவரோடு புணர்ந்த நாளின்பத்தை நினைதலா னித்துன்ப வெள்ளத்து முயிர்வாழ்கின்றே னதுவின்றாயின் வேறெற்றா லுயிர்வாழ்வே னென்பதாம்.

வி-ரை. நான்-ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு வேறுமுண்டு அவை பேற்றி லேனென்பது படநின்றமையால் மன்-ஒழியிசை. அவை அவனது வரவு தல் தனது அவரு செல்லுதல் முதலானவை. அவையாவும் இல்லாமையால் அதுவல்லாமல் எனக்குப் பற்றுக்கோடு இல்லையென்பது கருத்து. (௬)

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும்.

இதுவுமது.

ப-ரை. மறப்பறியேன் (அவ்வின்பத்தை மறந்தறியேனாகி, உள்ளினும் இன்றாகிலையாகிற்கவும் பிரிவானது உள்ளம் என்) உள்ளத்தை, சுடும் சுடுகிறது (அப்படி பிரிவுபொறுத நான்) மறப்பின்மறந்தால், எவனாவன்-எதனால் இறவாதிருப்பேன், எ-று.

க-ரை. அவ்வின்பத்தை மறத்தலறியேனாயின் நினைக்கிற்கவும் பிரிவென் னுள்ளத்தைச் சுடாநின்ற தன்னவம் பிரிவாற்றுத யான் மறந்தா லிறந்து படாதிருவ தெற்றானென்பதாம்.

வி-ரை. மன்னென்பது இங்கேயும் அவ்வொழியிசை. கொல்-அசை.

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு

இது இத்துன்ப மறிந்துவந்து தலைவர் உனக்கு இன்பஞ்செய்வாரென்ற தோழிக்குச் சொல்லியது.

ப-ரை. காதலர்-தலைவரானவர் எனைத்து நினைப்பினும் (நான் தம்மை எவ்வளவு மிகநினைத்தாலும், காயார் (அதற்குக்) கோபியார், செய்யுஞ் சிறப்பு (அவர் எனக்குச்) செய்யுமின்பமானது, அனைத்தன்றோ-அவ்வளவன்றோ, எ-று.

க-ரை. தம்மையா னெத்துணையுமிக நினைத்தாலு மதற்கு வெகுளார் காதல ரெனக்குச் செய்யுமின்பமவ் வளவன்றோ வென்பதாம்.

வி-ரை. கோபியாமை அன்னினைத்தற்கு உடம்பட்டு சென்று நிற்றல் தனக்கு அவ்வின்பத்திலும் சிறந்தது இல்லாமையால் அதனைச் சிறப்பென்றும் தோழிசொல்லிய வுரைக் குறிப்பால் இகழ்ந்து சொல்லியபடி. (அ)

## கஉக - ஆம் - அதி - நினைந்தவர்புலம்பல். கூ

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

இது தலைவன் அருளாக்காணாது வருந்துகின்றவள்
இடஞ்சொல்லுகிற தோழிக்குச் சொல்லியது.

ப-ரை, வேறல்லமென்பார் (முன்னெல்லா நாமிருவரும்) வேறல்லே மென்று சொல்லுவாரது, அளியின்மை-அருளில்லாமையை, ஆற்றநினைந்து-மிகவும் நினைந்து, என்னின்னுயிர்-எனது இனிதாகியவுயிர், விளியும்-கழிகின்றது, எ-று.

க-ரை. முன்பெல்லா நாமிருவரும் வேறல்லமென்றுசொல்லுவார். தனி யின்மையை மிகவு நினைத் தெனதினியவுயிர் கழியாநின்ற தென்பதாம்

வி-ரை. அளியின்மை-பின்வருவாராதலுமாய்ப் பிரிதலும், பிரிந்து வாரா மையும், அங்கே நின்றவிடத்துத் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவுபொறுத்தல் வேண்டுமென்று இடஞ்சொன்னவளுக்கு என்னுயிர் பிரிவைக் குறித் தல்ல, அவரன்பில்லாமையைக் குறித்துக் கழிகின்றதென்று எதிரழிந்துசொல்லியபடி. (க)

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி

இது அந்நிடஞ்சொல்லி யவளுக்கு எதிரழிந்தவள் காமமிக்க
அதிக துக்கத்தினாலே சொல்லியது.

ப-ரை. மதி-சந்திரனே, விடாஅது (என்னெஞ்சை) விடாதிருந்தேசென்றாரை (விட்டுப்) போயினாரை, கண்ணினால்-என்னளவா லாயினும, காண எதிர்ப்படும்வகை, படாஅதி (நீ) மறையாதிருப்பாயாக (அப்படிச்செய்தால்) வாழி-நீவாழ்வாயாக, எ-று.

க-ரை. மதியே யென்னெஞ்சி னிடைவிடா திருக்கே விட்டுப்போயினு ரை யானென் கண்ணைவாயிலு மெதிர்ப்படும்வகை நீபடா தொழிவாயாக, அப்படிச் செய்தால் நீ வாழ்வாயாக வென்பதாம்.

வி-ரை. கண்ணைவா யெதிர்ப்படுவது மதியிருவாராலும் படுதலால், இருவர்-கண்களும் அதனிடத்தே சேர்தல் குறையுறுமின்று காதலின் வாழி யென்றுன். (௰)

நூற்றி இருபத்திவோரும்-அதிகாரம்-நினைந்தவர்புலம்பல்.
முற்றிற்று.

---

# ௱௨௰௨-ஆம் அதி கனவுநிலை யுரைத்தல்.

---

அஃதாவது, தலைவி தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லியது. அக்கனவு * சனவினிடத்து நினைவு மிகுதியாலே கண்டதாகலால், இது நினைந்தவர் புலம்பலின் பின் வைக்கப்பட்டது.

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து

இது தலைவன் தூதுவரக்கண்ட தலைவிசொல்லியது.

ப-ரை (யான் வருந்துகிறதை அறிந்து அது தீரவிடுத்த) காதலர்-தலைவரது; தூதொடு-தூதைக்கொண்டுவந்த (என்னிடத்து)வந்த, கனவினுக்குகனவினுக்கு, விருந்து-விருந்தாக, யாதுசெய்வேன்-யாதுசெய்வேன், எ-று.

க-ரை. யான்வருந்துகின்ற தறிந்தது தீரக்காதலர்விடுத்த தூதினைக்கொண்டென் மாட்டுவந்தகனவினுக் கியான் விருந்தாக யாதினைச் செய்வேனென்பதாம்.

வி-ரை. கொல்-அசை விருந்தென்றது-விருந்திற்குச் செய்யும் உபசாரத்தை அது சனவிலே காணுமையால் யாதுசெய்வே னென்றுன். (க)

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்

இது தூதுவிட்டிளைத்த தலைவி சொல்லியது.

ப-ரை. கயலுண்கண் (தூங்காதழிகின்ற) என்கயல்போலும் மையுண்கண்கள், யான்-நான், இரப்ப-இரக்தால், துஞ்சின்-தூங்குமாயின், கலந்தார்க்கு (கனவிலே காணப்பட்ட தலைவர்க்கு), உயலுண்மை-பொறுத்திருக்கிற தன்மையை, சாற்றுவேன் (யானே, விரியச்சொல்லுவேன், எ-று.

க-ரை. துஞ்சாது வருந்துகின்ற வென்கயலேபோலு முண்கண்கள்யானி ரந்தாற் றுஞ்சுமாயிற் கனவிடைக் காதலரைக் காண்பேன். கண்டாலவர்க்கியா னாற்றியுள்ள வுயதன்மையானே விரியச்சொல்லுவே னென்பதாம்.

வி-ரை. கயலுண்கணென்றான்-அழிந்த கலத்திற்கிரங்கித் தூதர்க்கு யாம் சொல்லாமல் அடக்கப்படுவனவும், சொலலு மவைகளுள்ளும் சுருக்கப்படுவன வும், ஆகிய இவைகளின் பரப்பெல்லாம் தோன்றச் சொல்லுவேனென்னுங் கருத்தால் சாற்றுவே னென்றான். இனி அவையுந் துஞ்சவனல்ல சாற்றவு தும் கூடாதென்பது படநின்றமையால், மன்-ஒழியிசை முன்னுங் கண்டவள் சொல்லியதாகலால் கனவுநிலையுரைத்தலாயிற்று. (௨)

---

* நனவு-சாக்கிரம்-அது விழித்திருக்கும் காலம்.

## ௧௨௨-ஆம் - அதி - கனவுநிலையுரைத்தல். ௧௨௧௩

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர்.

இது பொறுக்கமாட்டாளென்று கவலையுற்ற தோழிக்குப் பொறுப்பேனென் பது தோன்றத் தலைவி சொல்லியது.

ப-ரை. நனவினான்-நனவில்வந்து, நல்காதவரை-அருள்செய்யாத தலை வரை, கனவினால்-கனவிடத்து, காண்டலின்-காணுதலால், என்னுயிர்-என்னு யிரானது, உண்டு-நீங்காதிருக்கின்றது, எ-று.

க-ரை. நனவின்கண்வந்து தலையளிசெய்யாதவரை யான் கனவின்கட் காண்டலானே யென்னுயிருண்டாகாநின்ற தென்பதாம்.

வி-ரை. ஆனுருபுகள் கண்ணுருப்புப் பொருளில் வந்தன. அக்காணுத

லாலே பொறுத்திருக்கின்றேனாகிறேன்-நீ கவலவேண்டா வென்பதாம். ( )

கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு

இதுவுமது.

ப-ரை. கனவினான் கனவில்வந்து, நல்காரை- அருள்செய்யாதவரை, நாடித்தரற்கு (அவர்போனவிடந்) தேடிக்கொண்டுவந்து தருதலால், கனவினான் அக்கனவில், காமம்-இன்பமானது உண்டாகும் (எனக்கு) உண்டாகின்றது எ-று.

க-ரை- கனவின்கண்வந்து தலையளிசெய்யாதாரை யவர்சென்றுழி நாடிக்கொண்டுவந்து கனவுதருதலா லக்கனவின்கண்ணே யெனக் கின்பமுண்டாகாகின்ற தென்பதாம்.

வி-ரை. காமம்-ஆகுபெயர். இயல்பாக அருள்செய்யாரை அவர்போனதேயாம். அறிந்துபோய்க்கொண்டுவந்து அருள்செய்வித்த கனவால் பொறுப்பனென்பதாம். .(ச)

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

இதுவுமது.

ப-ரை. கனவினான் (முன்னே) நனவினிடத்து, கண்டதுவும் (தலைவரைக்) கண்டு அனுபவித்த வின்பமும், ஆங்கே-அக்கண்டபொழுதே (இனிது) இனிதாயிற்று, கனவுந்தான் (இன்று) கனவினிடத்துக் (கண்டு அனுபவித்த வின்பமும்) கண்டபொழுதே-இக்கண்டபொழுதே, இனிது இனிதாயிற்று (அதனால் எனக்கு இரண்டு ஒத்தன,) எ-று.

க-ரை. முன் நனவின் கணவரைக்கண்டு கேழ்த்த வின்பந் தானு மினிதாயிற் றப்பொழுதே யின்று கனவின்கட்கண்டு நுகர்ந்தவின்பமு மதுகண்டபொழுதே யினிதாயிற்றதனாலெனக் கிரண்டு மொத்தன வென்பதாம்.

இனி கஉஉ - ஆம் - அதி - கனவுநிலையுரைத்தல்.

வி-ரை, இனிதென்பது மூன்றும் கூட்டப்பட்டது. கனவு ஆகுபெயர் மூன்றும் பயன்பெற்றது இவ்வளவே இன்னும் அதுகொண்டு பொறுப்பே னென்பதாம். (௫)

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்,

இதுவுமது.

ப-ரை. நனவெனவென்று-நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி, இல்லையாயின்-இல்லாவிட்டால், கனவினன்-கனவினிடத்துவந்து கூடியகாதலர்-தலைவர், நீங்கலர் (என்னைப்) பிரியார், எ-று.

க-ரை. நனவென்று சொல்லப்படுகின்ற வொருபாவியில்லையாயிற் கனவின் கண்வந்து கூடியகாதலரென்னைப்) பிரியாரென்பதாம்.

வி-ரை. ஒன்றென்பது அதன்கொடுமை விளக்கி நின்றது அதுவேவே புகுந்து கனவைப்போக்கி அவரைப்பிரிவித்ததென்பது படகின்றமையால் மன். ஒழி இசை. கனவிலேபெற்றுப் பொறுக்கின்றமை சொல்லியபடி. (௬)

நனவினானல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப்பது.

இது விழித்தத் தலைவனைக்காணாத தலைவி
கனவிற் புணர்ச்சி நினைந்து பொறாமற் சொல்லியது.

ப-ரை. நனவினன் (ஒருதினமாயினும் நனவில்வந்து. நல்கா - அருள் செய்யாத, கொடியர்-பாதகர், கனவினன்-(தினந்தோறும்) கனவில் வந்து எம்மை-எம்மை பீழிப்பது-வருத்துவது, என்-எந்த சம்பந்தம்பற்றி, எ-று.

க-ரை. ஒருநான்று நனவின்கண்வந்து தலையளி செய்யாத கொடியவர் நாடோறுங் கனவின்கண்வந்து நம்மை வருத்துவ தெவ்விடைப்பற்றி-என்பதாம்.

வி-ரை. தன்னைத் தனியேவிட்டுப் பிரிதலும், பின்னினைந்து வாராமையும் நோக்கி, கொடியாரென்றும், கனவிலே தோன்றிமேனாய் விழித்தபோது மறைதலால், அதனாலும் துன்பமாகின்ற தோன்றற்கு பீழிப்பதென்றும் சொல்லினாள் உலகத்தார் நனவிலே இல்லாதது கனவிலும் இல்லையென்பார் யாம் அது கண்டில மென்பதாம். (௭)

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து

இதுதான் பொருத்தற்பொருட்டே

தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்படச் சொல்லியது.

ப-ரை. (என்னெஞ்சைவிடாமல் உறைகின்ற காதலர்) துஞ்சுங்கால் (யான் தூங்கும்போது, தோள்மேலராகி - தோளின்மேல் உள்ளவராகி, விழிக்



குங்கால் (பின்) விழிக்கும்போது, விரைந்து - விரைவுற்று, நெஞ்சத்தராவர் (பழைய) நெஞ்சிலுள்ளவ ராவர், எ-று.

க - ரை. என்னெஞ்சைவிடா துறைகின்ற காதலர் யான் றுஞ்சும்பொழுது என்றோண்மேலராய்ப் பின்விழிக்கும் பொழுது விரைந்து பழைய நெஞ்சின் கண்ணராவ ரென்பதாம்.

வி - ரை. புணர்ச்சிவிட்டு மறைகிற கொடுமையற்றி விரைந் தென்றாள் எஞ்ஞான்றும் என்னைவிட்டு நீங்கியறியாதவரை நீநோவது தகாதென்பதாம் (அ)

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர் காணா தவர்.

இதுவுமது.

ப - ரை. (தமக்கு ஒருகாதலர் இல்லாமையாலே) கனவினான்-கனவிலே, காதலர்காணாதவர்-அக்காதலரைக் காணவறியாத மகளிர், நனவினால் (தாமறிய) நனவில்வந்து, நல்காரை - அருள் செய்யாத (எனது) காதலரை, நோவர் (அன்பிலரென்று) நோவாநிற்பர், எ-று

க - ரை. தமக்கொரு காதலர் இல்லாமையி னவரைக் கனவிற்கண்டறியாத மகளிர் தாமறிய நனவின்கண்வந்து நல்காதலரை யன்பில ரென்று நோவாநிற்ப ரென்பதாம்.

வி - ரை. இயற்பழித்தது பொறுது பிணங்குகின்றா ளாகலால், பன்மை தோன்றச்சொல்லினான். தமக்கும் தலைவராக அவரைக் கனவிலேகண்டு அறிவாராயின் நமது தலைவர் கனவினிடத்து நாம் அறியவந்து அருள்செய்தலறிந்து நோவா ரென்பதாம். (௯)

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

இதுவுமது.

ப - ரை. இவ்வூரவர்-இவ்வூரின்மகளிர், கனவினால் - கனவினிடத்து, நம் நீத்தாரென்பர்-நம்மைவிட்டு நீங்கினாரென்று (தலைவர்மேலே கொடுமை) சொல்லாநிற்பர், நனவினான்-நனவினிடத்து, காணார்கொல் (அவர் நீங்காதுவருத லைக்) கண்டறியாரோ, எ-று.

க - ரை. இவ்வூர் மகளிர் கனவின்கணம்மை நீத்தாரென்று நங்காதலரைக் கொடுமை கூறுகிற்பர் அவர் நனவின்க ணீங்காது வருதல் கண்டறியாரோ வென்பதாம்.

வி - ரை. எனக்குந் தனக்கும் வேற்றுமை யில்லையாயின் யான்கண்டது தானும்கண்டு அமைவள் அது காணாது அவர்மேலே கொடுமைசொல்லுகின்ற மையால், அயலாளே யாமென்னுங்கருத்தால் இவ்வூரவரென்றாள். (௰)

நூற்றி இருபத்திரண்டாம்-அதிகாரம்-கனவுநிலையுரைத்தல் முற்றிற்று.

---

66

# கஉ௩.-ஆம்-அதி-பொழுதுகண்டிரங்கல்,

---

அஃதாவது: மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக்கண்டு தலைவி இரங்குதல், கனவுமுந்துறுத வினையில்லையென்பது பற்றிப் பகற்போது பொறுத்திருந்த தலைவிக்கு உரியதாகலால், இது கனவுநிலை யுரைத்தலின் பின்வைக்கப்பட்டது.

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.

இது பொழுதோடு பிணங்கிச் சொல்லியது.

ப - ரை பொழுது-பொழுதே, நீ-நீ மாலையோவல்லை (முன்னாள்களின் வந்த) மாலையோவல்லை, மணந்தார் (அந்நாள்களிலே காதலரைக்கூடிய) மகளிரது, உயிருண்ணும் உயிரையுண்ணுகிற, வேலை-முடிவுகாலமாயிருந்தாய், எ-று.

க - ரை. பொழுதே நீ முன்னாட்களின் வந்த மாலையோவெனி னல்லையாயிருந்த வாற்றுங்காட் காதலரை மணந்த மகளி ருயிரையுண்ணு மிறுதிக் காலமா யிருந்தா யென்பதாம்.

வி - ரை. முன்னாள் கூடியிருந்த காள், அந்நாள் மணந்தா ரெனவே பின் பிரிந்தாராதல் பெறப்பட்டது. வாழியென்பது குறிப்புச்சொல். (க)

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை.

இது தலைவி தன்று எனுபவத்தை
மாலைப்பொழுதின் மேலிட்டுச் சொல்லியது.

ப - ரை. மருண்மாலை-மயங்கியமாலையே (நீயும்) புன்கண்ணை (எம்போல்) ஒளியிழம்பை யுடையையா யிருந்தாய், வாழி-வாழ்வாயாக, நின்றுணை-உனதுதுணையும், எங்கேள்போல்-எமதுதுணைபோல, வன் கண்ணதோ-இரக்கமில்லாமை யுடையதோ சொல்லு) எ-று.

க - ரை. மயங்கின மாலாய் நீயு மெம்மைப்போலப் புன்கணுடைய யாயிருந்தாய் நின்றுணையு மென்றுணைபோல வன்கண்மை யுடையதோ கூறுவாயாகவென்பதாம்.

வி - ரை. மயக்குதல்-பகலும்-இரவும் - தம்முள்ளே கலத்தல் ஒளியிழத்தல்பற்றித் துணையும் உண்டாக்கிச் சொல்லினள். துணையுமென்னு மும்மை விகாரத்தால் தொக்கது எமக்குத் துன்பஞ் செய்தால் நீயும் இன்பமுற்றிலை யென்னும் குறிப்பால் வாழியென்றன். (உ)

பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

# கஉஙு - ஆம் - அதி-பொழுதுகண்டிரங்கல். ருஉ௩

இது பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத்
தலைவி சொல்லியது.

ப .ரை. (தலைவர் கூடிய காளெல்லாம்) (பனியரும்பி) (என் முன்னே) நடுக்கமடைந்து, பைதல்கொண்மாலை-பசந்துவந்தமாலையானது, துனியரும்பி (எனக்கு) உயிர்வாழ்தலில் வெறுப்புண்டாகி, துன்பம் அதற் குண்டாகிற) துன்பம், வளர (ஒருகாலைக்கொருகால்) மிக, வரும்-வருகின்றது, எ-று.

க - ரை. காதலர்கூடிய காளெல்லா மென்முன் னடுக்கவெய்திப் பசந்துவந்த மாலை இக்காளெனக் கிறந்துபாடு தோன்றி யதற்குள் தான், துன்பமொருகாலைக் கொருகான்மிக வளராகின்ற தென்பதாம்.

வி - ரை. குளிர்ச்சி தோன்ற மயங்கிவரு மாலையென்றுஞ் செம்பொ

ருன் குறிப்பால் அரிய நின்றது யான் பொறுக்கும் வழி என்னென்பது குறிப்பெச்சம்.

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.

இதுவுமது.

ப - ரை. மாலை தலைவர் உள்ளபொழுதெல்லாம் என்னுயிர் தளிர்க்கவர்த மாலை) காதலரில்வழி - தலைவரில்லாத இப்பொழுது, கொலைக்களத்து-கொலை செய்கிற களத்து, ஏதிலர்போல - கொலைஞர்போல, வரும் (அவ்வுயிரைக் கொள்ளுதற்கு) வருகின்றது, எ-று.

க - ரை. காதல ருள்ளபொழுதெல்லா மென்னுயிர் தளிர்ப்பவர்த மாலைய வரில்லாத விப்பொழு தொழிந்து நிற்றலேயன்றிக் கொல்லுங் களரியிற் கொலைஞர் வருமாறுபோல வவ்வுயிரைக் கோடற்குவாரா நின்ற தென்பதாம்

வி - ரை. ஏதிலர் அருள் யாதுமிலார். முன்னெல்லாம் எனக்கு நட்பாயின்பஞ்செய்துவந்த பொழுதும் இன்று பென்மேல் பகையாய்த் துன்பஞ்செய்துவருகின்றது யான் பொறுக்கும்வழி என்னென்பதாம். (ச)

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

இதுவுமது.

ப - ரை. (காலையும், மாலையும், அவர் கூடிய நாள்போ லல்லாமல் இன்று வேறுபட்டு வருகின்றன அவைகளுள்) காலைக்கு-காலைப் பொழுதிற்கு, செய்த (என்னாலே, செய்யப்பட்ட, நன்று-உபகாரம், என்-யாது, யான்-நான், மாலைக்கு-மாலைப்பொழுதிற்கு, செய்த - செய்யப்பட்ட, பகை - அபகாரம், எவன்-யாது, எ-று.

# ௧௨௨௬ - ஆம் - அதி - பொழுதுகண்டிரங்கல்.

க - ரை. காலையு மாலையு மவர்கூடிய ஞான்றுபோலா நின்றன்று வேறுபட்டு வாராநின்றன, அவற்றுள் யான் காலைக்குசெய்த வுபகாரம்யாது, மாலைக்குச் செய்த வபகாரம் யாதென்பதாம்.

வி - ரை கொல்லிரண்டும் - அசைகள் கூடியகாளிலே பிரிவா சென்று அஞ்சப்பண்ணிய காலை அதுநீங்கி இக்காளிலே கன்றுல் வெள்ளத்திற்கு கரை

யாய்வருகின்றதென்னுங் கருத்தால் கன்றென் கொலென்றும், கூடியகாலிலே இன்பஞ் செய்தமாலை அதுநீங்கி இக்காலிலே அளவில்லாத துன்பஞ்செய்யாநின்றதென்னுங் கருத்தால் பகையென் கொலென்றும் சொல்லினுள். பகை-ஆகுபெயர். தன்னோடு ஒத்த காலைபோலிராமல், மாலை-தன்கொடுமையால் துன்பஞ்செய்கின்றதென்பதாம். (6)

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

இது இன்று இப்படிப்பட்டவளாகின்ற நீ அன்று அவர் பிரிவிற்கு
எப்படி உடம்பட்டாயென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.

ப - ரை. மாலை-முன்னெல்லாம், எனக்கு நட்பாய் (இன்பஞ் செய்து வந்த) மாலை, நோய்செல்தல் (இன்று பகையாய்த்) துன்பஞ்செய்தலை, மணந்தார்-தலைவர், அகலாதகாலை பிரிதற்குமுன்னே, அறிந்திலேன் - அறியப்பெற்றிலேன், எ-று.

க - ரை. முன்னெல்லா,மெனக்கு நட்பால் யின்பஞ்செய்து போந்தமாலை யின்றுபகையாய்த் துன்பஞ்செய்தலைக் காதலர் பிரிவதற்கு முன்னே யறியப்பெற்றிலே னென்பதாம்.

வி - ரை. இப்படிவேறுபடுதல் அறிந்திலேன் அறிந்தேனுயின் அவர்பிரிவிற்கு உடன்படே னென்பதாம்.

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந்நோய்

இது மாலைப்பொழுதில் இப்படிப்பட்டவளாகுதற்குக் காரணம் யாதென்ற
தோழிக்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. இந்நோய்-இக்காமநோயாகிய (பூ) காலையரும்பி-காலைப்பொழுதில் அரும்பி, பகலெல்லாம் போதாகி-பகற்பொழுதெல்லாம் பெரிய அரும்பாய்முதிர்ந்து, மாலை மலரும்-மாலைப்பொழுதில் மலர்கின்றது.

க - ரை. இக்காமநோயாகிய பூக் காலைப்பொழுதின்க ணரும்பிப் பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்தும் மாலைப்பொழுதின்கண் மலராநிற்குமென்பதாம்.

வி - ரை. தூங்கியெழுந்த பொழுதாகலால், கனவிலே புணர்ந்தமை நினைந்து பொறுத்தல்பற்றி-காலையரும்பி யென்றும், பின்பொழுது செல்லச்

செல்ல அதுமறந்து பிரிவுநினைந்து பொருளாதல்பற்றி - பகலெல்லாம் போ ராமென்றும், தந்நாதுணைகளை நினைந்துவந்து சேரும் விலங்குகளையும், மக் களையும், கண்டு தான் அக்காலத்து அனுபவித்த இன்பத்தை நினைந்து பொருமை மிகுதல்பற்றி-மாலைமலருமென்றும் சொல்லினள். (ஏ)

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை

இதுவுமது.

ப - ரை. ஆயன்குழல் (முன்னெல்லாம் இன்பஞ்செய்த) இடையனது வேணுநாதம், அழல்போலும் (இப்போது) செருப்புப்போலே சுடுவதாகி மா லைக்குத் தூதாகி-மாலைக்குத் தூதுமாகி (அம்மாலைவந்து என்னைக்கொல்லுமி டத்து) கொல்லும்படை-கொலை செய்யும்படையுமாயிற்று, எ-று.

க - ரை. முன்னெல்லா மினிதாய்ப் போந்தவாயன்குழல் இன்றழல் போலச் சுடுவதாய் மாலைக்குத் தூதுமாயதுவந்தென்னைக் கொல்வழிக்கொல் லும் படையுமாயிற் றென்பதாம்.

வி - ரை. பின்வந்தபோது மென்பது-உரையசை முன்னேவரவை அறி வித்தலால் தூதாயிற்று. கொல்லுதற்கருவியாதலால் படையாயிற்று. தானே சுடவல்லமாலை இத்தத் துணையையும்பெற்றால் என்னசெய்பா தென்பதாம்.()

பதிமருண்டு பைதல் உழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.

இதுவுமது.

ப - ரை. (இதற்குமுன்னெல்லாம் யானே மதிமயங்கி நோயிழந்தேன்) மதிமருண்டு (இனிக்கண்டாரும்) மதிமருளும்வகை, மாலை - மாலைக்காலம், படர்தரும்போழ்து-வரும்பொழுது, பதி - இவ்வூரெல்லாம், மருண்டு-மயங்கி, பைதலுழக்கும்-நோயை அனுபவிக்கும், எ-று.

க - ரை. இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழந்தே னினிக் கண்டாரு மதிமருளும்வகை மாலைவரும் பொழு திப்பதியெல்லாமயங்கி நோ யுழக்கு மென்பதாம்

வி - ரை. பின் மருண்டென்பது - மருளவென்பதன்பொருளில்வந்தது. கூற்றமாக நினைத்துச் சொல்லினளாகலால், மாலைபடர்தரும் போழ்தென்றுன் யான் இறந்துபடுவேனென்பதாம். (க)

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.

## ௧௨௩௰ - ஆம் - அதி - உறுப்புநலனழிதல்.

இதுவுமது.

ப - ரை. என்மாயாவுயிர் (பிரிவைப்பொறுத்து) இறவாதிருந்த என்னுயிரானது, பொருண்மாலையாளரை - பொருளியல்பேதமக் கியல்பாக வுடையவரை, உள்ளி-நினைந்து, மருண்மாலை-இம்மயங்குமாலையிலே, மாயும்-மாய்கின்றது, எ-று.

க - ரை. காதலர் பிரிவைப்பொறுத் திறந்துபடா திருந்தவென்னுயிரின்றும் பொருளியல்பே தமக்கியல்பாக வுடையவரை நினைந்திம்மயங்குமாலைக் கண்ணே யிறந்துபடாநின்ற-தென்பதாம்.

வி - ரை. வருதற்குக் குறித்த-ருவம் கழியவும், பொருண்முடிவுநோக்கி வாராமை-யால் சொல் வேறுபடாமையாகிய தம்மியல் பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல்பாயினர். காலம் இறவாயிற்று. இனிச் சொல்லுகின்ற விதத்தால் பயன் இல்லை-என்பதாம்.

நூற்றிஇருபத்திமூன்றும்-அதிகாரம்-பொழுதுகண்டிரங்கல்
முற்றிற்று.

---

# கஉச-ஆம்-அதி-உறுப்புநலனழிதல்.

---

அஃதாவது தலைவியினுடைய கண்ணும், தோளும், நெற்றியும் முதலாகிய அவயவங்கள் தம்மழகழிதல். இஃது இரக்கமுகுந்தவிடத்து நிகழ்வதாகலால் பொழுதுகண்டிரங்கலின் பின் வைக்கப்பட்டது.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.

இது பொருளை மிகுதியால் வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது.

ப - ரை. சிறுமை-இப்பொருமை, நமக்கொழிய-நம்மிடத்துநிற்க, சேட்சென்றார்-நெறிந்தூரத்திலேசென்ற தலைவரை, உள்ளி நினைத்தழுதலால்(கண்) உன் கண்கள் (ஒளியிழந்து) நறுமலர் (முன்னே நமக்கு நாணின) நல்ல மலர்களுக்கு, நாணின (இன்று) நாணவிட்டன, எ-று.

க - ரை. இவ்வாற்றுமை நம்கண்ணே நிற்பத் தாஞ்சேணிடைச்சென்ற காதலரைச் சினைந்தழுதலாலின் கண்களொளியிழந்து முன் நமக்கு நாணிய நறுமலர்கட்கின்று தாணவிட்டன-வென்பதாம்.

வி - ரை. உள்ளுதலென்பது, காரியத்தக்கு ஆகுதலால் = ஆகுபெயர். இவைகண்டார் அவரைக் கொடியரென்று சொல்லுவர். நீ பொறுத்தல் வேண்டுமென்பது கருத்து. (௪)

## கஉ௪ - ஆம் - அதி - உறுப்புநலனழிதல். ௱௨௰

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.

இதுவுமது.

ப - ரை. பசந்து-நிறம்வேறுபட்டு, பனிவாருங்கண்-நீர்வார்கின்றகண்கள், நயந்தவர் (நம்மால்) விரும்பப் பட்டவரது, நல்காமை-அருள் செய்யாமையை, சொல்லுவதுபோலும் (பிறர்க்குச் சொல்லுவ) போல்கின்றன (இனிநீ பொறுத்தல் வேண்டும்,) எ-று.

க - ரை. பசப்பெய்தன்மேல் நீர்வார்கின்ற நின்கண் கணம்மா னயக்கப் பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலா நின்றன. வினிநீயாற்றல் வேண்டுமென்பதாம்.

வி - ரை. சொல்லுவபோலல் அதனை அவர் அறிதற்கு அனுமான மாக்குதல். (உ)

தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.

இதுவுமது.

ப - ரை. மணந்தநாள் (தலைவர் கூடியநாளில் வீங்கிய (இன்பமிகுதியால்) பூரித்த, தோள் (நினது) தோள்கள், தணந்தமை (இன்று அவர்) பிரிந்தமையை, சாலவறிவிப்பபோலும்-விளங்க உறிவிப்பவைபோல் வாடுகின்றன (இதுதகாது,) எ-று.

க - ரை. காதலர் மணந்தஞான்றின் மிகுதியாற் பூரித்த கின்றோளின் றவர் பிரிந்தமை விளங்க வுணர்த்துவபோல் மெலியாகின்றன விதுதகாதென் பதாம்.

வி - ரை. அன்றும் அப்படி பூரித்து- இன்றும் இப்படி மெலிந்தால் இரண்டுங் கண்டவர் கடிதில் அறிந்து அவரை அயோக்கியரென்பதாம்.

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

ப - ரை துணைநீங்கி (அன்றும்) துணைவர் நீங்குதலால் (அவராலேயெற்ற செயற்கை யழகுமாத்திர மல்லாமல்) தொல்கவின்-பழைய இயற்கையழகும், வாடியதோள்-இழந்த இத்தோள்கள் (இன்று அதற்குமேலே) பணைநீங்கி (தம்) பெருமையிழந்து, பைந்தொடி-பசும்பொன்வளைகள், சோரும்-கழலுகின்றன (இவை இப்படி செய்யுந் தன்மையனவல்ல,) எ-று.

க - ரை. அன்றுதந் துணைவர் நீங்குதலா லவராற்பெற்ற செயற்கையழகோயன்றிப் பழையவியற்கை யழகு மிழந்த வித்தோள்களின் றதற்குமேலே



தம் பெருமையிழந்து வளைகழலா நின்றன. இவையிங்ஙனஞ் செயற்பாலவாகா வென்பதாம்.

வி - ரை. அன்று பிரிந்தாரென்று அவ ரன்பில்லாமை யுணர்த்தி இன்றும் குறித்த பருவத்தில் வந்திலரென்று அவர் பொய்மை யுணர்த்துகின்றன. இனி அவைகளைச் சொல்லுகிறவர்மேல் குறையுண்டோ வென்பதாம். (ரு)

கொடியார்கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.

இதுவுமது.

ப - ரை. கொடியார் (தழுவுங்கை விலகினும்பொறு தவளுக்கு இப்படி காலநீட்டிப்பில் என்னுமென்று நினையாத) கொடியவரது, கொடுமை-பொல்லாங்கை, உரைக்கும்-சொல்லுகின்றன, தொடியோடு-வளைகளுங்கழன்று, தொல்கவின் வாடியதோள் பழைய இயற்கையழகு மிழந்த இத்தோள்கள் (இனி அதனை மறைக்கும் வழியாது,) எ-று.

க - ரை. கல்வுக்கை நெகிழினு மாற்றுநாட் இங்ஙனக் காலநீட்டித்தநெ ன்றுமென்று நினையாத கொடியாரது கொடுமையைத் தான் சொல்லி நின்ற ன. வளைகளுங் கழன்று பழைய வியற்கை யழகுமிழந்த விந்தோள்களினியத னை யாமறைக்குமாறென்னை யென்பதாம்.

வி - ரை. அவரோடு கலந்ததோள்களே சொன்னால் அயலார் சொல்லுத ல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௯)

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற ஞெந்து.

இது தான் பொறுத்தற்பொருட்டுத் தலைவனை யியற்பழித்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. யான் பொறுக்கவும் என்வசப்படாமல் தொடியொடு - வளைகள் கழலும்படி, தோணெகிழ-தோள்கள்வாட, (அவற்றைக்கண்டு) அவரை - அவ ரை, கொடியரெனக்கூறல் (நீ) கொடியவரென்று சொல்லலை,நொந்து-பொ றுமல், நோவால் (என்னுள்ளே) நோகின்றேன், எ-று.

. - ரை. யானொற்றவு மென்வயத்தவன்றித் கொடிகழலுமாறு தோள்கண் மெலிய வதுறறைக்கண்டு நீ யவரைக் கொடியரெனக் கூறுதலைப்பொறு தியா னென்னுள்ளே நோவாநின்றே னென்பதாம்.

வி - ரை. யான் பொறுத்வளாகின்றது அவர் வாராதிருத்தற்கல்ல, நீ சொல்லுகின்றதற் கென்பதாம். (௧0)

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.

கஉ௬ - ஆம் - அதி - உறுப்புநலனழிதல். ௱௨௧0

இது அவ்வியற்பழித்தல் பொறாது தலைவி தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

ப - ரை. நெஞ்சே-மனமே, கொடியார்க்கு (இவ்வாறே) கொடியாரென்றசொல்லப்பட்டவர்க்கு என்வாடுதோள்-என்வாடுகின்ற தோளினுடைய, பூசல்-ஆரவாரத்தை, உரைத்து-சொல்லி, பாடு-ஒருமேம்பாட்டை, பெறுதியோ-அடையவல்லையோ (வல்லையாயின் அதனையொப்பது இல்லை,) எ-று.

க - ரை. நெஞ்சே யிவள் கொடியாரென்கிற வவர்க்கு நீ சென்றன்மெலிகின்ற தோளினுடைய விளைகின்ற வாரவாரத்தைச்சொல்லி யொரு மேம்பாடெய்த வல்லையோ, வல்லையாயினதனை யொப்பதில்லை யென்பதாம்.

வி - ரை. கொடியார்க்கென்பது-கொடியரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல். வாடுதோளென்பது - அவை தாமே வாடாநின்ற வென்பது தோன்றநின்றது, உன்சொல்லைக் கேட்டவுடன் அவர்வருவர் வந்தால் இவையெல்லாம் நீங்கும் நீங்கவால் அது எனக்குக் காலத்தினாற் செய்த நன்றியாம். ஆதலால், அதன் பயனெல்லாம் அடைவாயென்னுங் கருத்தால் பாடுபெறுதியோ வென்றாள். (௭)

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.

இது தொழிலை முடித்துத் திரும்பிவருதலுற்ற தலைவன் முன்னடந்ததை நினைத்துத் தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை. முயங்கிய கைகளை (தன்னை இறுகத்) தழுவியகைகளை (இவளுக்கு நோமென்று நினைத்து) ஊக்க (ஒருவினம்) தளர்த்தினேனாக (அம்மாத்திரமும்பொறாமல்) பைந்தொடிப் பேதை நுதல் - பசியவளைகளை யணிந்த பேதையது நெற்றியானது, பசந்தது-நிறம் வேறுபட்டது (அப்படிப்பட்டநெற்றி இப்பிரிவிற்கு யாதுசெய்யுமோ.) எ-று.

க - ரை தன்னை முயங்கிய கைகளை யிவட்கு நோமென்று கருதியொருஞான்றியா னெகிழ்த்தேனாக வத்துணையும் பொறாது பைந்தொடியணிந்த பேதையது நுதல்பசந்தது அப்பெற்றித்தாயாகிய நுதலிப்பிரிவாது செய்யுமோ என்பதாம்.

வி - ரை. இனிக் கடிதிலே சொல்லவேண்டு மென்பது கருத்து. (௮)

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

இதுவுமது.

ப - ரை. (அப்படி தழுவிய கைகளைத் தளர்த்தலால்) மூயக்கிடை-அப் புணர்ச்சிக்குநடுவே, தண்வளிபோழ-சிறுகாற்று நுழைத்ததாக (அவ்வளவிடை விடும்பொறுமல்) பேதை பெருமழைக்கண் - பேதையினது பெரிய குளிர்ந்த கண்

# ருகூ0 கஉகு - ஆம் - அதி-நெஞ்சொடுகிளத்தல்.

கண்கள், பசப்புற்ற-பசலைநிறமடைந்தன (அப்படிப்பட்ட கண்கள் மலர்களும் காகேளும், நாகேளும் ஆகிய இவ்விடை யினேயெல்லாம் எப்படி பொருத்தன,) எ-று.

க - ரை. அங்ஙனம் கைகளை நூக்குதலான் முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக வத்துணையிடை யிடுபொறாது பேதையது பெரியமழைக் கண்கள் பசப்பற்றன. வத்தன்மையவானகண் கண்மலர்களுங் காகேளுமாய் வவ்விடை யினேயெல்லாம் யாங்ஙனம் பொறுத்தனவென்பதாம்.

வி - ரை. தண்மை இங்கே மென்மைமேல் நின்றது. போழவென்றது உடம்பிரண்டும் ஒன்றுனது தோன்ற நின்றது. (க)

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு.

இதுவுமது.

ப - ரை. கண்ணின்பசப்போ (சிறுகாற்று நுழையவந்த) கண்களின் பசப்போ பருவரலெய்தின்று-துன்ப மடைந்து, ஒண்ணுதல் (தனக்கு வயலாகிய ஒளிபொருந்திய நெற்றியால், செய்தது - விளைக்கப்பட்ட பசப்பை, கண்டு - பார்த்து, எ-று.

க - ரை. தண்வளிபோழவந்த கண்ணின் பசப்புத்துன்பமுற்றது தனக் கயலாய வொண்ணுதல் விளைத்த பசப்பைக் கண்டென்பதாம்.

வி - ரை. அது கைகளைத் தளர்த்திய வளவிலே பசந்தது யான் கைகளை யும் தளர்த்தி மெய்களும் நீக்கி அக்காற்று உள்ளே நுழையுமட்டும் பசந்திலே னென்று தன் வன்மையும் அதன் மென்மையும் கருதி வெள்கிற்றென்பதாம். (ஆகவே அவளுருப்புகள் ஒன்றிலொன்று முற்பட்டு கனைழியும் யாம் கடிதி லே சொல்லுவோமென்பது கருத்தாயிற்று. (உ)

# கஉரு-ஆம்-அதி-நெஞ்சொடு கிளத்தல்.

அஃதாவது: பிரிவுபொறாமை மேற்படத்தனக்கு ஓர் பற்றுக்கோடொன்றுமின்றித் தலைவி தன்னெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல் இஃது உறுப்புக்கள் தமது நலனழிந்தவழி நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது.



நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

இது தன்பொறாமை தீருந்திறநாடியது.

ப - ரை. நெஞ்சே மனமே, எவ்வநோய்-ஒன்றாலுந் தீராதநோயை, தீர்க்குமருந்து-தீர்க்குமருந்தாவது, ஒன்று-ஒன்றை (நான் அறியும்படியாக) எனைத்தொன்றும்-எப்படிப்பட்டதொன்றாயினும், நினைத்து-அறிந்து, சொல்லாயோ (எனக்குச்) சொல்லாயோ, எ-று.

க - ரை. நெஞ்சே யிவ்வெவ்வநோய் தீர்க்கு மருந்தாவ தொன்றினையான றிவுமாற்றலி னெத்தன்மைத்தி யாதொன்றாயினு நீயறிந் தெனக்குச் சொல்லென்பதாம்

வி - ரை உயிரினுஞ் சிறந்த நாணினைவிட்டுச் செய்வது யாதொன்றாயினு மென்றற்கு எனைத்தொன்று மென்றாள். (க)

காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

இது தலைவி தலைவனைக் காணுதலிலே ஆசைமிகுதியால் சொல்லியது.

ப - ரை. என்னெஞ்சு-எனது நெஞ்சே, வாழி-வாழ்வாயாக, அவர்-அந்த

லவர், காதலிலராக(நம்மேல், ஆசையிலராகவும், நீ நோவது-நீ (அவர்வரவுபா ர்த்து) வருந்துதற்குக்காரணம், பேதைமை (உன்) னறியாமையேயாம் (வே றொன்று இல்லை,) எ-று.

க - ரை. என்னெஞ்சே வாழ்வாயாக வவர்நம்மிட் காதலிலராகவு நீ யவர் வரவுநோக்கி வருந்துதற்கேது நின் பேதைமையே பிறிதில்லை யென்பதாம்.

வி - ரை. நம்மை நினையாமையால் நம்மிடத்து ஆசையில ரென் பதறிய லாம் அதை யறியாமை மேலும் அவரிடத்துப்போக நினையாது அவர்வரவுபா ர்த்து வருந்தநின்றாய். இது நீ செய்துகொள்ளுகின்ற தென்னுங் கருத்தால் பேதைமை யென்றான். வாழி இகழ்ச்சிக் குறிப்பு. யாம் அவரிடத்துச் சொல் லுதலே அறிவாவ தென்பதாம். (உ)

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில்.

இதுவமது.

ப - ரை. நெஞ்சே-மனமே, இருந்து-அவரிடத்துக்குப் போகாமல் (இவ் விடத்தும் இறந்திடாமல்) இருந்து, உள்ளி (அவர்வரவை) நினைந்து, பரிதல் (நீ) வருந்துகின்றது, என்-என்னை, பைதனோய் செய்தார்கண் - இத்துன்பநோய் செய்தவரிடத்து, பரிந்து (நமக்கு) இரங்கி உள்ளல் (வர) நினைத்தல், இல் - உண்டாகாது, எ-று.

## ருகஉ கஉ௫ - ஆம் - அதி - நெஞ்சொடுகிளத்தல்.

க - ரை. நெஞ்சே யவர்பாற் செல்வதுஞ் செய்யாநின்றிருந்து பரிவதுஞ் செய்யா திருந்தவர் வரவுநினைந்து நீ வருந்துகின்ற தென்னை யிப்பைத னோய் செய்தார்மாட்டு நமக்கிரங்கிவரக் கருதலுண்டாகா தென்பதாம்.

வி - ரை. நம்மிடத்து அருளுடையவ ரல்லாமையால் தாமாகவாரார் நாம் அவரிடத்துச் சொல்லுதலே இனித் தகுவ தென்பதாம். (௩)

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று.

இதுவுமது.

ப - ரை. நெஞ்சே-மனமே (நீ அவரிடத்துச்சொல்லலுற்றாயின்) கண் ணுங்கொளச்சேறி-இக்கண்களையும் உடன்கொண்டுசொல்லு (அல்லாமல்நீமா த்திரம் செல்வாயானால்) இவை-இக்கண்கள், அவர் காணலுற்று - அவரைக்கா

ணல்வேண்டி, என்னை-என்னை, இன்னும் (நீகாட்டென்று) இன்பவைபோல் வருத்தும், எ-று.

க - ரை. நெஞ்சே நீ யவர்பாற் செல்லலுற்றுபா யினிக்கண்களையு முட ன்கொண்டு செல்வாயாகவன்றி நீயே செறியாயி னிவைதாங் காட்சிவிருப்பினு லவரைக் காண்டல்வேண்டி நீகாட்டென் றென்னைத் தின்பனபோன்று கவி யாநிற்கு மென்பதாம்.

வி - ரை. கொளவென்பது கொண்டென்பொருளில் வந்தது-அக்கலிவுநீ ர்க்கவேண்டு மென்பதாம் என்றது தான்சொல்லல் குறித்து. (௪)

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர்.

இதுவுமது.

ப-ரை. நெஞ்சே-மனமே, யாம்-நாம், உற்றால் (தம்மை)விரும்ப, உறாஅ தவர்(நம்மை) விரும்பாத தலைவரை, செற்றாரென-வெறுத்தாரென்று நினை த்து, கைவிடல் (பிணங்கிக்) கைவிட்டிருக்கும் வழி, உண்டோ (நமக்கு) உண்டோ (இல்லை) எ-று.

க - ரை. நெஞ்சேயாந்தம்மையுறத் தாமுறாத கன்காதலரை வெறுத்தா ரென்றுகருதிப் புலந்து கைவிட்டிருக்கும் பவி நமக்குண்டோ வில்லை யென் பதாம்.

வி - ரை. அவ்வவி யில்லாமையால் அவரிடத்துக்குச் செய்வதே நமக்குத் தகுவதென்பதாம். (௫)

கலந்துணர்த்தும் காதலர்க் கண்டாற் புலந்துணராய்ப்
பொய்க்காய்வு காய்திபென் னெஞ்சு.

## ௧௨௯ - ஆம் - அதி - நெஞ்சொடுகிளத்தல். ருகக

இது தலைவன் கொடுமைநினைத்து செல்லுதற்கு உடன்படாத
நெஞ்சினைக் கோபித்துச் சொல்லியது.

ப - ரை. என்னெஞ்சு-எனதுநெஞ்சே (யான் தம்மோடு பிணங்கினுல்) கலந்து-புணர்தலால், உணர்த்தும் காதலர் (அப்பிணக்கை) நீக்கவல்ல தலைவ

லை, கண்டால்-பார்த்தால், புலந்து (பொய்யாகவாயினும் ஒருதரம்) பிணங்கி, உணராய் (பின்) அதனை நீக்கமாட்டாய் (அதுவுமாட்டாத நீ இப்போது)பொய்க்காய்வு காய்தி (அவரைக் கொடியரென்று) பொய்க்காய்வாகக் காய்கின்றாய் (இனி அதனையொழித்து அவரிடத்துச் செல்லத்துணி,) எ-று.

க - ரை. என்னெஞ்சே யான்றம்மோடு புலந்தா லப்புலவியைக் கலவிதன்னானே நீக்கவல்ல காதலரைக் கண்டாற் பொய்யேயாயினு மொருகாற் புலந்து பின்னதனை நீக்கமாட்டாயதுவு மாட்டாத நீயிப்பொழுதவர் கொடியரெனப் பொய்க்காய்வு காயாநின்றா யினியிதனை யொழித்தவர்பாற் செல்லத்துணிவாயாக வென்பதாம்.

வி - ரை. புணர்தலால் உணர்த்தலாவது கலவியின்பத்தைக்காட்டி அதனால் மயக்கிப் புலவிக்குறிப்பை யொழித்தல். கண்டால் வெறுக்கமாட்டாத நீ காணாதவழி வெறுக்கின்றதனால் பயன் இல்லையென்பதாம். (௬)

> காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
> யானோ பொறேனிவ் விரண்டு.

இது நாணம் தடுத்தலாலே அச்செல்லுதலொழியுந் தலைவி சொல்லியது.

ப - ரை. நன்னெஞ்சே-நல்லமனமே, காமம்விடுவொன்று-ஒன்று (நாணம்விடமாட்டாயாகில்) காமவிருப்பத்தை, விடுகாணவி (டொன்று) ஒன்று (காமவிருப்பத்தை விடமாட்டயாகில்) நாணத்தை, விடு (இரண்டு விடாமை உன் கருத்தாகில்) இவ்விரண்டு (ஒன்றற்கொன்று பகையாகிய( இவ்விரண்டையும், யானோ-நானோ, பொறேன் (ஒருசேரத்) தாங்கவல்லே னல்லே ன், எ-று.

க - ரை. நல்லநெஞ்சே காமவேட்கையைவிடு ஒன்றின து விடமாட்டாயாயி னாணினைவிடு அன்றியே யிரண்டும் விடாமை நின்கருத்தாயி னொன்றற்கொன்று மறுதலையா யவ்விரண்டினையு முடன்றாங்கும் வகையானில்லே னென்பதாம்.

வி - ரை. யானோவென்னும் பிரிநிலை யோகாரம் - நீ பொறுப்பினுமென்பது படுகின்றது. நன்னெஞ்சேயென்றது-இரண்டையும் விடாமல் பெண்மையை நிலைபெறச்செய்தலால் நல்லையென்னுங் குறிப்பாயிற்று. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதல் போதாமையால் அதற்கு ஆகின்றிலே னென்பதாம். இரண்டுமென்பதன் முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (௭)

> பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
> பின்செல்வாய் பேதை யென் னெஞ்சு.

# ௲௨௱௪௰ ௧௨௫-ஆம் - அதி - நெஞ்சொடுகிளத்தல்.

இதுவுமது.

ப - ரை. என்னெஞ்சு-எனதுநெஞ்சே, அவர்-அவர், இப்பொறாமை (அறியாமையால்) பரிந்து-நொந்துவந்து, நல்காரென்று அருள்செய்யாராயினாரென்று, நினைந்து (அதை) அறிவித்தற்பொருட்டு, பிரிந்தவர்பின் (நம்மைப்) பிரிந்துபோகிய தலைவர்பின்னே, ஏங்கி-அன்புமுற்று, செல்வாய் - போகலுற்றநீ, பேதை-ஒன்றுமறியாய், எ-று.

க - ரை. என்னெஞ்சே யிவ்வாற்றாமை யறியாமையி னொந்துவந்து தலையளி செய்யாராயினாரென்று கருதி யஃதறிவித்தற் பொருட்டு நம்மைப் பிரிந்துபோ யவர்பின்னேங்கிச் செல்லலுற்ற நீயாதுமறியா யென்பதாம்.

வி - ரை. பொறாமைபரிந்திருந்தும் அருள்செய்யாமல் போயினாரைக்காணாதவிடத்தே நாம்போய் அறிவித்தமாத்திரத்தில்-அருள்செய வருவாரென்று நினைத்தமையால் பேதையெனருள். (அ)

உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.

இதுவுமது.

ப - ரை. என்னெஞ்சு-எனதுநெஞ்சே, காதலர்-அன்பர், உள்ளத்தாராக (உன்) னுள்ளிருப்பவராக (முன்னெல்லாங் கண்டிருந்தும்) நீ-நீ, உள்ளி (இப்பொழுதுபுறத்தே) தேடி, யாருழை-யாரிடத்து, சேறி-செல்லுகிறாய், எ-று.

க - ரை. என்னெஞ்சே காதலர் நின்னகத்தாராக முன்பெல்லாங் கண்டுவைத்திப்பொழுது நீபுறத்துத் தேடிச்செல்கின்றதியாரிடத் தென்பதாம்.

வி - ரை. உன்னு ளிருக்கிறவரைப் புறத்துத் தேடிச்செல்லல். நகையுடைத்து அதையொழி யென்பதாம். (௯)

துன்னத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின்.

இது அவரைமறந்து பொறுத்தல் வேண்டுமென்பது தோன்றச் சொல்லியது.

ப - ரை. துன்னு (நம்மைக்) கூடாதவண்ணம். துறந்தாரை - துறந்து போயினாரை, நெஞ்சத்துடையேமா (நாம்) உள்ளுடையேமாக, முன்னிழந்த (புறத்தழகேயன்றி) இன்னும்-இன்னதும், கவின் (அகத்) தழகையும் இழத்தும்-இழப்போம், எ-று.

க - ரை. மேன்மைக் கூடாவண்ணம் துறந்து போயினாரை நாநமக்கது டையேமாக முன்னிழந்த புறக்கவினேயன்றி நின்றவக்கக்கவினையு மிழப்பே மென்பதாம்.

வி - ரை. அவர் நம்மைக் கூடாமல் துறந்தாராகவும் நாம் அவரை மறக்க மாட்டேமாகவும், போனமெய்யழகேயன்று நின்றநிறையும் இழப்போ மென் பதாம்.

**நூற்றி யிருபத்தைந்தாம்-அதிகாரம்-நெஞ்சொடு கிளத்தல் முற்றிற்று.**

---

# ௧௨௬-ஆம்-அதி-நிறையழிதல்.

அஃதாவது: தலைவி மனதிலே அடக்கப்படுமவைகளை ஆசைமிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விடுதல், அது அழிதற்குக் காரணம் நெஞ்சொடு சொல்லுதலால் இது நெஞ்சொடு கிளத்தலின்பின் வைக்கப்பட்டது.

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

இது நாணும் நிறையும் அழியாமல் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. நாணுத்தாழ்வீழ்த்த-நாணாகிய தாழ்ப்பாளைக் கோத்த, நிறையென்னுங்கதவு-நிறையென்று சொல்லப்படுகிற கதவை, காமக்கணிச்சி - காமவேட்கையாகிய குந்தாலி, உடைக்கும்-முறிக்கின்றது (இனி அதை வகிற்றலும் இல்லையான் பொறுத்தலும் இல்லை, எ-று.

க - ரை. நாணாகிய தாழ்வினைக்கோத்த நிறையென்னுங் கதவினைக்காம வேட்கையாகிய கணிச்சிமுறியாநின்ற நிலையினை நிற்றலு மில்லையா னாற்றலு மில்லை யென்பதாம்.

வி - ரை நாணுள்ளவரைக்கும் நிறை அழியாதாதலால், அதனைத் தாழ

க்கியும், உள்ளிருட்டவைகளைப் பிறர்கொள்ளாமற் காத்தலால், நிறையைக் கத வாக்கியும் வலியவையாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டினையும் ஒருசேர நீக்க லால் தன் காம வேட்கையைக் கணிச்சியாகச் சொல்லினள். (௧)

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்.

இது நெஞ்சினிடத்துத் தோன்றிய காமம் நெஞ்சத்தால் அடக்கப்படு மென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. யாமத்தும், (எல்லோருந் தொழிலொழிகிற) நடுராத்திரியிலும், என்னெஞ்சத்தை-என் மனதை, தொழில்-தொழிலிலே, ஆளும் (தண்டித்து) ஆளுகின்றது (ஆதலால்) காமமெனவொன்று - காமமென்று சொல்லப்பட்ட தொன்று, ஓ-ஐயோ, கண்ணின்று-கண்ணோட்டமில்லதாயிருந்தது, எ-று.

க - ரை. எல்லாருந் தொழிலொழியு மிடையாமத்து மென்னெஞ்சத்தை யொறுத்துத் தொழில் கொள்ளாநின்றதாதலாற் காமமென்று சொல்லப்பட்ட வொன்று கண்ணோட்டமின்று யிருந்த தென்பதாம்.

வி - ரை. தொழிலிலே ஆளுதல், தலைவனிடத்துச் செல்லவிடுதல் தா மையத் தொழில்கொள்ளுதல், உலகநடையல்லாமையால், காமமென வொன் றென்றும் அதுதன்னைக் கொள்ளுகின்றது. அளவறியாதுகொள்ளுதலால், கண் ணின்றென்றும் சொல்லினள். காமம் தன்னாலே அடக்கப்படாமை சொல் லியபடி.

## ருஉ௲ சஉ௲ - ஆம் - அதி - நிறையழிதல்.

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும்

இது மகளிர்காமம் மறைக்கப்படுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.

ப - ரை. காமத்தை-இக்காமத்தை, யான்-நான், ஓ-ஐயோ, மறைப்பேன் (என்றுள்ளே) மறைக்க நினைப்பேன் (அதனுல்) குறிப்பின்றி (இது) என் கருத்தின் வழிவாராமல், தும்மல்போல-தும்மலைப்போல், தோன்றிவிடும்-வெ ளிப்பட்டே விடுகின்றது, எ-று.

க - ரை. இக்காமத்தை யானென்னுள்ளே மறைக்கக் கருதவேனுதனு னிஃதென் கருத்தில் வாராது தும்மல்போல் வெளிப்பட்டே விடாநின்றதெ

ன்பதாம்.

வி - ரை. மன்-ஒழியிசையில் வந்தது எப்படித் தும்மல் அடங்குகின்ற தில்லையோ அப்படியே காமம் அடங்குகின்ற தில்லையென்பதாம். (கூ)

நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந் தமன்று படும்.

இதுவுமது.

ப - ரை. யான்-நான், ஓ-ஐயோ, நிறையுடையேனென்பேன் (இதுவரை யும் என்னை) நிறையுடையேனென்று நினைத்திருப்பேன் (அதனால்) என்காமம்-என்துகாமம், மறையிறந்து-மறைத்தலைக்கடந்து, மன்றுபடும்-பலருமறியப் படுகின்றது, எ-று.

க - ரை. இன்றினுக்கெல்லாம் யானென்னை நிறையுடையேனென்று கருதியிருந்தே னதனாலின்றேன் காம மறைத்தலைக்கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்ற தென்பதாம்.

வி - ரை. மன் ஒழியிசையில்வந்தது. இனி இக்காமமானது என்னளவின தல்ல வென்பதாம் (௰)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று.

இது நம்மை மறந்தவரை நாமும் மறந்துவிடுவோமென்ற
தோழிக்குத் தலைவிசொல்லியது.

ப - ரை. செற்றார்பின்-தம்மைநீக்கிப்போனவர் பின், செல்லா-செல்லாது (தாமும் நீங்கிநிற்கிற) பெருந்தகைமை - நிறையுடைமையானது, காமநோயுற்றார், காமநோயடைந்தவரால், அறிவதொன்றன்று - அறியப்படுவதொன்றன்று, எ - று.

க - ரை. தம்மையகன்று சென்றார்பின் செல்லாது தாமுமகன்று நின்ற நிறையுடைமை காமநோயினையுறுதா ரறிவதொன்றன்றி யுற்றா ரறிவதொன்றன்றவென்பதாம்.

## கஉ அ ஆம்-அதி குறிப்பறிவுறுத்தல். ௬௯௱௫௰௫

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

இதுவுமது.

ப - ரை. முகைமொக்குள்-அரும்பினது முகிழ்ப்பினுள், உள்ளது உளதாய்ப் (புறந்தோன்றாத) நாற்றம்போல்-வாசனைபோல், பேதை (உன்) காதினது, நகைமொக்குள் (என்னோடு நகைக்க எண்ணுகிற) நகையது முகிழ்ப்பினுள் உள்ளது, உள்ளதாய்ப் (புறந்தோன்றாத) ஒன்று-ஒருகுறிப்பு, உண்டு-உண்டு, எ-று.

* க - ரை. முகையது முகிழ்ப்பி னுளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல் நின்பேதை யென்னோடு நகக்கருதி நகையது முகிழ்ப்பி னுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டென்பதாம்.

வி - ரை. முகிழ்ப்பு முதிர்ச்சியாற் புடைபடுதல், நகை-புணர்ச்சி யின்பத்தால் நிகழ்வது. (4)

செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

இதுவுமது.

ப - ரை. செறிதொடி-நெருங்கிய வளைகளை யுடையவள், செய்து (என்னிடத்து இல்லாத பிரிவை) நினைத்து, இறந்தகள்ளம் (அது காரணமாக என்னை மறைத்துப்) போன குறிப்பு, உறுதுயர் (என்) மிகுந்த துயரை, தீர்க்குமருந்தொன்று- தீர்க்காநின்ற மருந்தொன்று, உடைத்து-உடையதுஎ-று.

க - ரை. நெருங்கிய வளைகளையுடையா ளென்க ணில்லாத தொன்றினையுட்கொண்டது காரணமாக வென்னை மறைத்துப்போன குறிப்பேன், மிக்க துயரைத்தீர்க்கு மருந்தாவ தொன்றினையுடைத் தென்பதாம்.

வி - ரை. மறைத்தற்குறிப்பு தானும் உடன்போக உட்கொண்டது உறுதுயர்-வன்றிசெய்யத் தீங்கு விளைதலாலும், அதுதான் தீர்க்குந் திறம்பெறுமையாலும் உளதாயது மருந்து பிரியாமைத் தோழியால் தெளிவித்தல். நீ அது செய்தல் வேண்டு மென்பதாம். (5)

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

உது தலைவன் குறிப்பறிந்த தலைவி அதனை அது தெளிவிக்கச்
சென்ற தோழிக்கு அறிவித்தது.

ப - ரை. தெரிதாற்றி (தலைவர்வந்து தம்பிரிவினாலாகிய துன்பத்தை) மிகவு மாற்றி, பெட்பக்கலத்தில் (நாம்) மகிழும் வண்ணம் கூடுகினை புணர்ச்சியெனது, அரிதாற்றி-பின்னும் (அத்துன்பத்தை) அரிதாகப் பொறுத்திருந்த அன்பின்மை (அவாது) அன்பில்லாமையை, சூழ்வது-நினையுந்தன்மையை, உடைத்து-உடையது, எ-று.

௭௯

## நிசக கூ-அ-ஆம்-அதி-குறிப்பறிவுறுத்தல்.

க - ரை. காதலர்வந்து தம்பிரிவினாலுறைய துன்பத்தை மிகவுமாற்றி நாம் மகிழும்வண்ணங் கலக்கின்ற கல்வியிருந்தவற்றான் மேலு மத்துன்பத்தினை யரிதாக வாற்றியிருந்தவ ரன்பின்மையை நினையுந் தன்மையுடைத்தென்பதாம்.

வி - ரை. பிரிதற் குறிப்பினாலே செய்கின்றதாகலால், முடிவிலே துன்பஞ் செய்வதாகின்ற தென்பதாம். (6)

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

இதுவுமது.

ப - ரை. தண்ணந்துறைவன்-குளிர்ந்த துறையையுடையவன், தணந்தமை (நம்மை மெய்யினாலே கூடியிருந்தே மனத்தினாலே) பிரிந்தமையை, நம்மினும் (அவன் குறிப்பால் அறிதற்குரிய) நம்மினும், வளை-இவ்வளையல்கள், முன்னம்-முன்னமே, உணர்ந்த-அறிந்தன, எ-று.

க - ரை. குளிர்ந்த துறையையுடையவ னம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை யவன் குறிப்பா லறிதற்குரிய நம்மினுமிவ்வளைகண் முன்னே யறிந்தன வென்பதாம்.

வி - ரை. கருத்து நிகழ்ந்ததனால், தணந்தமையென்றும் யான்தெளிய அறிவதற்கு முன்னே தோள்கள் மெலிந்தன வென்றதற்கு-அதனை வளைமேலேற்றி அதையும் உணர்வுடைத்தாக்கிச் சொல்லினன். (7)

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

இதுவுமது.

ப - ரை. எங்காதலர்-எமதுதலைவர், நெருநற்று-நேற்றே, சென்றார்-பி

நீர்ந்துபோயினர், யாமும்-நாமும்-மேனிபசந்து (அப்பிரிவுக்கு) உடம்பு வேற்றுநிறமடைந்து, எழுநாளேம்-எழுநாளுடையேமாயினேம், எ-று.

க - ரை. எங்காதலர் பிரிந்து போயினர், நெருநற்றைப் பிரிவிற்கியாமு மேனிபசந் தேழுநா ளுடையே மாயினே மென்பதாம்.

வி - ரை. நேற்றுச்செய்த அருளினால் பிரிவு நிச்சயிக்கப்பட்ட தென்பதற்கு நெருநற்றுச் சென்றா ரென்றும், அதனைச் சந்தேகித்துச் செல்கின்றது எழுநாள் உண்டாகலால், அன்றே மேனிபசந்த தென்றதற்கு மேனிபசந் தெழுநாளே மென்றும் சொல்லினள். இவை தலைவனது பிரிதற்குறிப்பை அறிவித்து நின்றது. (8)

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

## க௨அ-ஆம் அதி-குறிப்பறிவுறுத்தல். [illegible]

இது தலைவி குறிப்பறிந்த தோழி அதனைத் தலைவனுக்கு அறிவித்தது.

ப - ரை. (யான் அதுதெளிவித்த விடத்தே தெளியாதவர் பிரிய நான் இங்கேயிருந்தால் தொடிநோக்கி (இவை நில்லாவென்று தன்) வளையல்களைப்பார்த்து, மென் றோளுநோக்கி (அதற்கு ஏதுவாக இவை மெலியுமென்று) மெல்லியத் தோள்களையும்பார்த்து, அடிநோக்கி (பின் இவ்விரண்டும் உண்டாகாமல் நீர் கடந்து காத்தல்வேண்டுமென்று தன்) அடிகளையும் பார்த்து, ஆண்டு-அவ்விடத்து, அவள் செய்தது-அவள்செய்தகுறிப்பு, அஃது-உடன்போக்கா யிருந்தது, எ-று.

க - ரை. யானது தெளிவித்தவழித் தெளியாதவர் பிரிய யானீண்டிருப்பினிவை நில்லாதெனத் தன் றொடியை நோக்கி யதற் கேதுவாகவிவைமெலியுமெனத் தன் மென்றோள்களையு நோக்கி பின்ன ரவ்விரண்டு நிகழாமனீர்கடந்து காத்தல் வேண்டுமெனத் தன்னடியை நோக்கி யன்ன மவள் செய்த குறிப்புடன் போக்காயிருந்த தென்பதாம்.

வி - ரை. செய்தகுறிப்பு செய்தற் கேதுவான குறிப்பு அஃதென்றால், செறிதொடி செய்திறந்த கள்ளமென்று ஞகலின் பிரிதற் குறிப்புண்டாயின் அது அழுங்குதல் பயன்.

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

இது தன்பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்குத் தலைவன் அறிவித்தது.

ப - ரை. (மகளிர்) காமநோய் (தங்) காமநோயை, கண்ணினாற் சொல்லி (தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணினாற் சொல்லி, இரவு (அது நீயினை) இரத்தல், பெண்ணினுள் (தமக்கு இயல்பாகிய) பெண்மையேனும், பெண்மை யுடைத்தென்ப-ஒரு பெண்மையை யுடைத்தென்று (அறிந்தோர் சொல்லுவர், எ-று.

க - ரை. மகளிர் தங்காமநோயினைத் தோழியர்க்கு வாயாற் சொல்லாது கண்ணாற்சொல்லியது நீர்க்கவேண்டுமென்றவரை யிரவாதுடன்போகக் குறித்துத் தம்மடியி னை யிரத்தற் றமக்கியல்பாகிய பெண்மை மேலுமொரு பெண்மையுடைத் தென்று சொல்லுவ ரறிந்தோ ரென்பதாம்.

வி - ரை. தலைமகளது உடன்போதற்றுணிவு தோழியாலே தெளிதலால் தான் பிரியாதிருக்குங் குறிப்பினை அறிவித்தற்கு அவள் பெண்மையைப் பிறர்மேலிட்டு வியந்து சொல்லினான். 10

நூற்றி இருபத்தெட்டாம் அதிகாரம்-குறிப்பறிவுறுத்தல் முற்றிற்று.

---

# ௧௨௯-ஆம் அதி புணர்ச்சி விதும்பல்.



அஃதாவது தலைவனும் தலைவியும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேலே புணர்ச்சி மிகுபற்றித் தலைவன் பிரிதற் குறிப்பை அறிவுறுத்த தலைவி அவனிடத்தே நிகழாது ஆசைமிகுதியினாலே பின்னும் தன்னிடத்தே நிகழ்தலால், இது குறிப்பறிவுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

இது பிரிதற்குறிப்பினனாகிய தலைவனோடு நீ பிணங்காமைக்குக் காரணம் யாதென்ற கையாடிய தோழிக்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. உள்ளக்களித்தலும்-நினைத்தவளவிலே களிப்படைதலும், காண மகிழ்தலும்-கண்டவளவிலே மகிழ்ச்சி யடைதலும், கள்ளுக்கு-கள்ளுண்டார்க்கு, இல்-இல்லை, காமத்திற்கு-காமமுடையார்க்கு, உண்டு-உண்டு, எ-று

க - ரை. நினையுந் துணையனே களிப்பெய்தலுங் கண்ட துணையானே

மகிழ்ச்சி யெய்தலும், கள்ளுண்டார்க்கில்லை காம முடையார்க்குண் டென்பதாம்.

வி - ரை. களித்தல்-உணர்வழியாதது. மகிழ்தல் அவ்வுணர்வழிந்தது. இவ்விரண்டும் உண்டவிடத்திலே யல்லாமல் இல்லாமையினாலே கள்ளுக்கில் லென்றான். அப்படிப்பட்ட காமமுடைய நான்பிணங்கல் எவ்விடத்த தென்பதாம். 1

தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின்.

இதுவுமது.

ப - ரை. காமம்-காமமானது, பனைத்துணையு நிறைய-பனையளவினு மிக வரின் (மகளிர்க்கு) உண்டாமாயின், தினைத்துணையும்-தினையளவும், ஊடாமை (தந்தலைவரோடு) பிணக்காமை, வேண்டும் (அவரால்) விரும்பப்படும்.

க - ரை. மகளிர்க்குக் காமம் பனையளவினு மிகவுண்டா மாயினவரா ற்றங் காதலரோடு தினையளவு மூடுதல் செய்யாமை வேண்டப்படு மென்பதாம்.

வி - ரை. ஊடினால் வருத்தமிருமென்று பிறர்க்கு உறுதி சொல்வான் போன்று தன்விரைவு சொல்லியபடி. 2

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண்.

இதுவுமது.

ப - ரை. பேணாது (எம்மை) அவமதித்து, பெட்பவே-(தான்) வேண்டு மவைகளையே, செய்யினும்-செய்தாலும், கொண்கனை-கணவனை, கண்(என்) கண்கள், காணாது-பாராமல், அமையல-அமைகின்றனவில்லை, எ-து.

## ௧௨௯-ஆம்-அதி-புணர்ச்சி விதும்பல். ருசுக

க - ரை. எம்மை யவமதித்துத் தான்வேண்டியனவே செய்யுமாயினுங் கொண்கனை யென்கண்கள் காணாதமைகின்றன வில்லை யென்பதாம்.

வி - ரை. தன் விரைவு கண்களின்மேல் ஏற்றப்பட்டது. அத்தன்மை யேன் அவனொடு பிணக்கும்வழி யாதென்பதாம். 3

ஊடற்கட் சென்றேன்மற் றேழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

இதுவுமது.

ப - ரை. தோழி-தோழியே (அன்பரைக் காணுதற்குமுன் அவர்செய்த குற்றத்தைத் தன்னோடு எண்ணி) ஊடற்கட்சென்றேன் (அவரோடு) பிணங்குதலிலேசென்றேன், என்னெஞ்சு-என்மனது கண்டபின் அது மறந்து-அதைமறந்து, கூடற்கட்சென்றது-புணர்தலிலே சென்றது, எ-று.

க - ரை. தோழி காதலரைக் காணுமுன்னவர்செய்ததவற்றைத்தன்னோடு நினைந்தியானவரோ டூடுதற்கண்ணே சென்றேன் கண்டபின்னெஞ்சதனை மறந்து கூடுதற் கண்ணே சென்றதாம்.

வி - ரை. செல்லுதற் றொழிலினிது நிகழ்ச்சி நினைத்த நெஞ்சிற்கும் ஒத்தலால், அது மறந்தென்றாள். அச்செல்லுதலால் பயன் ஒன்றும் இல்லையென்பது படநின்றமையால், மன்-ஒழியிசை. அச்சமயத்திலே நெஞ்சு கிழறந்துக்கொண்டு போகலால் அது முடிந்ததில்லை யென்பதாம். 4

எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

இதுவுமது.

ப - ரை. முன்னெல்லாம் கண்டிருந்தும் எழுதுங்கால்-எழுதும்போது கோல்-அஞ்சனக்கோலி னியல்பை, காணு-காணமாட்டாத, கண்ணேபோல்-நேத்திரம்போல், கொண்கன்பழி-கணவனது, குற்றத்தை அவனைக்காணுதவிடத்தெல்லாம் கண்டிருந்தும் கண்டவிடத்து அவனைக் கண்டவிடத்து காணேன்-காணமாட்டேன், எ-று.

க - ரை. முன்னெல்லாம் கண்டிருந் தெழுதுங்காலத் தஞ்சனக்கோலினியல்பு காணமாட்டாத கண்ணேபோலக் கொண்கனது தவற்றைக் காணுதவிடத்தெல்லாங் கண்டிருந்தவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேனென்பதாம்.

வி - ரை. கோல்-அதனியல்புக்கு ஆகுதலால்-ஆகுபெயர். இயல்பு-கருமை-என்னியல்பு-இதுவாகலால், மேலும் அது முடியாதென்பதாம். 5

காணுங்காற் காணேன் றவறாய காணுக்கால்
காணேன் றவறல் லவை.

இதுவுமது.

ப - ரை. நான் காணுங்கால் கணவனைக் காணும்பொழுது, தவறு அவன் குற்றங்களானவைகளை, காணேன்-காண்கின்றிலேன், காணுக்கால்-அவனைக் காணாதபொழுது, தவறல்லவை-குற்றங்களல்லாதவைகளை, காணேன்-காண்கின்றிலேன், எ-று.

க - ரை. கொண்கனை யான் காணும்பொழுதவன் றவறாயவற்றைக் காண்கின்றிலேன் காணாதபொழுதவை யல்ல, பிறவற்றைக்காண்கின்றிலேனென்பதாம்.

வி - ரை. கணவனென்பது-அதிகாரத்தால் வந்தது. முன்பு நான் உன்னோடு சொல்லிய தவறுகள் இப்போது காணாமையாலே, பிணங்கிலேனென்பதாம். 6

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

இதுவுமது.

ப - ரை. உய்த்தலறிந்து தம்மை யீர்த்துக்கொண்டு போத லறிந்திருந்து, புனல்பாய்பவரேபோல், ஓடுகின்ற நீரிலேபோய் ஓர் செயல்போல், பொய்த்தலறிந்து பிணக்கு முடிவு போகாமையறிந்திருந்து, புலந்து கணவனோடு பிணங்கி, என் பெறுவது யாது, எ-று.

க - ரை. தம்மை யீர்த்துக்கொண்டு போதலறிந்தவைத் தொழுகின்ற புனலுட்பாய்வர் செயற்போலப் புலவி முடிபோகாமை யறிந்தவைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவதென் னென்பதாம்.

வி - ரை, பாய்வரென்பது-ஆகுபெயர். பொய்த்தல்-புரைபடுதல் பிணங்கினும் பயன் இல்லை யென்பதாம். 7

இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

இது தலைவி புணர்ச்சி விரைவறிந்து தோழி தலைவனுக்கு சொல்லியது.

ப - ரை. கள்வ-கள்வனே, நின்மார்பு எங்களுக்கு உனது மார்பு, களித்தார்க்கு தன்னையுண்டு களித்தவர்க்கு, இளித்தக்க-அவமானமடையத்தக்க இன்னாசெயினும்-இனிமையில்லவைகளைச் செய்தாலும், கள்ளற்றே அவராலே மேலும்மேலும் விரும்பப்படுவதாகிய கள்ளைப்போலும், ஏ-று.

க - ரை. தன்னையுண்டு களித்தார்க் கிளிவரத்தக்க வின்னாதவற்றைச் செய்யினு மவரான் மேன்மேலும் விரும்பப்படுவதாய் கள்ளைப்போலு மெங்

கட்கு நின்மார் பென்பதாம்.

வி - ரை. அவ்வினிமையில்லமை, நாணில்லாமை, ஒழுக்கமில்லாமை, உணர்வில்லாமை, நிறையில்லாமை இவை முதலாயின எங்களுக்கு நாணில்லாமை முதலியவைகளைச் செய்யினும் எங்களாலே மேன்மேலும் விரும்பப் படுகின்றதென்பதாம். கவ்வையென்றதும், அதுநோக்கி. ௮

## ௧உ௯-ஆம்-அதி-புணர்ச்சி விதும்பல் ௫௩௧

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செல்வி தலைப்படு வார்.

இது நீராப் பிணக்கிலே தலைவன் சொல்லியது.

ப - ரை. காமம்-காமவின்பம், மலரினும்-பூவினும், மெல்லியது-மெல்லிதா யிருக்கும் அப்படி மெல்லிதா யிருக்கையை அறிந்து அதன்செவ்வி-அதன் பக்குவத்தை, தலைப்படுவார்-பெறுவோர், சிலர்உலகத்திலேசிலர் எ-று.

க - ரை காமவின்ப மலரினு மெல்லியதா யிருக்கு மஃதன மெல்லியதாதலையறிந்த தன் செவ்வியைப் பொருவா ருலகத்துச் சிலரென்பதாம்.

வி - ரை. தொட்டவளவிலே வாசனைப்பக்குவம் அழிவதாகிய மலர் எல்லாவற்றினும் மெல்லியதென்பதை விளக்கலால், உம்மை சிறப்பின்கண்வந்து. குறிப்பும், வேட்கையும், அனுபவிப்பும், இன்பமும், ஒருகாலத்திலே ஒத்து அனுபவித்தற்குரியவ ரிருவர் அதற்கு ஏற்றகாலமும், இடமும், உபகரணங்களும் பெற்றுக்கூடி அனுபவிக்க வேண்டுதலால், அதன் செவ்விதலைப் படுவோர் சிலரென்றும் அவைகளுள் யாதானும் ஒன்றாலே சிறிது வேறுபடினும் வாடுதலால், மலரினுமெல்லிதென்றும் சொல்லினான். குறிப்பு ஒவ்வாமையால், யான் அது பெறுகின்றிலே னென்பதாம். தலைமகள் ஊடலொழிவது பயன்.

கண்ணிற் றுனித்தே கலங்கினள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

இதுவுமது.

ப - ரை. (என்காதலி முன்னொரு நாள் புணரச்சென்ற என்னோடு) கண்ணிற் றுனித்தே தன் கண்மாத்திரத்தாலே பிணங்கி, புல்லுதல்-புணர்தலிலே, என்னினும்-என்னைப் பார்க்கிலும், தான் விதிப்புற்று-தான் விரைவு

ற்று, கலங்கினாள் அதனையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள் அதனால் நான் இப்படிவருந்தவும்-விரையாமல் பிணங்கிநிற்கின்றஇவள் அவளல்லள்.

க - ரை. காதலி-முன்னொரு ஞான்று புல்லல் விருப்பினாற் சென்றவென்னொடு தன் கண் மாத்திரத்தா லூடிப்புல்லுதலை யெனின்லுந் தா ன்விதும்பலாவது தன்னையுமப்பொழுதே மறந்து கூடிவிட்டா ளதனால் யானித்தன்மையேனாக விருப்பின்றி யூடிநிற்கின்ற விவளவளல்லவென்பதாம்.

வி - ரை. கண்மாத்திரத்தாலே பிணங்கல் சொன்னிதழ்ச்சியில்லாமல் அது சிவந்தவளவே யாதல் அவளாயின் இப்படி யூடற்கண்டே கீடாளென்பயன். 10

நூற்றி இருபத்தொன்பதாம் அதிகாரம்-புணர்ச்சி விதும்பல் முற்றிற்று.

# ௧௩௰ ஆம் அதி நெஞ்சொடு புலத்தல்.



அஃதாவது: காரணம் உண்டாகிய விடத்தும் பிணங்க நினையாமல் புணர்ச்சியை விரும்புகின்ற நெஞ்சுடனே தலைவி பிணங்குதலுமாம். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

இது தலைவனிடத்துத் தவறுஉண்டாகிய விடத்தும் பிணங்கநினையாத நெஞ்சிற்குத் தலைவி சொல்லியது.

ப - ரை. நெஞ்சே எனது மனமே, அவர்நெஞ்சு-அவரதுமனம், அவர்க்காதல்கண்டும் நம்மை நினையாமல் அவர்க்காய் நிற்றல் கண்டிருந்தும், நீ யெமக்காகாதது, நீ அவரையே நினைத்து எமக்காய் நில்லாமைக்குக் காரணம், எவன்-யாது, எ-று.

க - ரை. நெஞ்சே யவருடைய நெஞ்சு நம்மை நினையாதவர்க்காய் நிற்றல் கண்டிருந்தும் நீ யெமக்காய் நில்லாதவரை நினைத்தற் காரணம் யாதென்பதாம்.

வி - ரை. அவர்க்காதல்-அவர் நினைத்ததற்கு உடன்படுதல் எமக்காகாததென்றது. பிணங்கற்கு உடன்படாமையை ஒருகாரியம் தாமாக அறிந்து செய்ய மாட்டாதவர் செய்வாரைக் கண்டாயினும் செயவர் நீ அதுவும் செ

ய்கின்றிலை பெண்பதாம். 1

உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாரெனச் சேறிபென் னெஞ்சு.

ப - ரை. என்னெஞ்சு-எனதுமனமே, உறாஅ தவர்க்கண்ட கண்ணும் நம்மிடத்து அன்பில்லாத தலைவரை உள்ளபடி அறிந்தவிடத்தும், செறாரென காம்போனால் கோபியாரென்பதுபற்றி, அவரை-அவரிடத்து, சேறி-செல்கின்றாய் உனக்கு இப்படிப்பட்டதும் ஓரறியாமையுண்டோ, எ-று.

க - ரை. என்னெஞ்சே மேலுநம்மாட் டன்புடையா ராகாதவரை யுள்ளவா றறிந் தவ்விடத்து நாம் சென்றால் வெகுளாரென்பதுபற்றி நீ யவர்மாட்டுச் செல்லாநின்றாயிப் பெற்றியது மேலுமோ ரறியாமை யுண்டோ வென்பதாம்.

வி - ரை. அவரையென்பது-வேற்றுமை மயக்கம். பழமையின தாட்சிணியம்பற்றிக் கோபியாரென்பது கருத்தாகச் சென்றால், நீ நினைத்தது முடியுமோ வென்பதாம்.

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

ப - ரை. நெஞ்சேநீ-மனமேநீ என்னிடத்து நில்லாமல் பெட்டாங்குவிரும்பியபடியே, அவர்பின்செல்ல-அவரிடத்தே செல்லுதற்குக் காரணம் கெட்டார்க்கு நட்டாரில்லென்பதோ-கெட்டவர்க்கு நட்புற்றவர் உலகத்திலே இல்லையென்கிற நினைவோ உன்னியல்போ சொல்லு, எ-று.

# கருo-ஆம்-அதி-நெஞ்சொடுபுலத்தல். ருருஙு

க - ரை. நெஞ்சே நீ யென்மாட்டு நில்லாது விரும்பியவா றெவர்மாட்டுச்செல்லுதற்கே காரணங் கேட்டார்க்கு நட்டாருலகத் தில்லை யென்னு நினைவோ நின்னியல்போ கூறுவாயாக வென்பதாம்.

வி - ரை, என்னைக்கைவிட்டவரிடத்தே செல்லுதல் நீமுன்னமேபழகியதென்றற்கு-பெட்டாங்கென்றும்தான் இப்பொழுது மானமில்லாதவராலே கெட்டார்க்கென்றும் சொல்லினன். செலல்-ஆகுபெயர், தளர்விடத்து உடன்வருந்துறுத மூடாது தொடர்பாயிற்று. உனது தொடர்பென்பதாம். 3

இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

இதுவுமது.

ப - ரை. நெஞ்சே-மனமே நீ அவரைக்கண்டபொழுதே இன்பமனுப விக்க நினைப்பதாலது (தனிசெய்து அவர் தவறுநோக்கிப்) பிணக்கையுண் டாக்கி, மற்றத்தவ்வாய் (அதனை அளவறிந்து) பின் அனுபவிக்க நினையாய் (ஆதலால்) இனி-இனி, அன்ன அப்படிப்பட்டவைகளை, நின்னொடு-உன்னு டனே, சூழ்வார்-எண்ணுவோர், யார்-யாவர், நான் அதுசெய்யேன், எ-று.

க - ரை. நெஞ்சே நீயவரைக்கண்டபொழுதே யின்ப நுகரக்கருதுவதல் லதவர் தவறுநோக்கி முன் புலவியை யுண்டாக்கிய தனையளவறிந்து பின்னு காக் கருதாயாக வினினியப்பெற்றிப் பட்டவற்றை நின்னோ டெண்ணுவார் யாவர் யானது செய்யேனென்பதாம்.

வி - ரை. அப்படிப்பட்டவை பிணக்குந் திறங்கள், நான் உரையசை முன்னெல்லாம் பிணங்க எண்ணியிருந்துபின் புணர்ச்சிக்கு விரைதலால் இ ப்படிச் சொல்லினள். 4

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

இது அதாகச்சென்ற தோழிகேட்கத் தலைவி சொல்லியது.

ப - ரை. (தலைவரைப் பெறாத நாளிலும்) பெறா அமையஞ்சும்-அப்பெறா மைக்கு அஞ்சாநிற்கும், பெறின்-பெற்றநாளிலும், பிரிவஞ்சும், (அவரது) பிரிவைநினைந்து அஞ்சாநிற்கும் (ஆதலால்) என்னெஞ்சு-என் மனமானது, அறுவிடும்பைத்து (எந்நாளும்) நீங்காததுன்ப முடைத்தாயிற்று, எ-று.

க - ரை. காதலரைப் பெறாதஞான்று மப்பெறாமைக் கஞ்சாநிற்கும்பெ ற்றஞான்று மவர்பிரிவினையுட் கொண்டதற் கஞ்சாநிற்கு மாகலானென்னெ ஞ்செஞ்ஞான்று நீங்காவிடும் பையை யுடைத்தாயிற் றென்றதாம்.

வி - ரை. காதலரைப்பெற்றிருந்து புணர்ச்சியை இழத்தல் உறுதியன் று என்கிறகருத்தால் அதுக்கு உடன்படுகின்றனளாகையால், பெறாமையஞ்சு மென்றும், புணர்ச்சியாறுமையினால் இன்னும் இவர்பிரிவாராயின் யாதுசெ ய்வேமென்பது நிகழ்தலால்பெறிற்பிரிவஞ்சுமென்றும் இவ்விரண்டு மல்லாம ல் வேறேயில்லாமையால், அறுவிடும்பைத்தென்றும் சொல்லினள். 5

இதுவுமது.

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

ப - ரை. என்னெஞ்சு-என்மனமானது, இருந்தது (இங்கே) இருந்த து, தனியேஇருந்து-அன்பரைப் பிரிந்திருந்து, நினைத்தக்கால் (அவர் கொடு

மைகளை யான்றன்னோடு)நினைத்தக்கால் (அச்சமயமறிந்து) என்னை-என்னை, இனிய-தின்பதுபோல் துன்பஞ்செய்தற்பொருட்டே, எ-று.

க - ரை. என்னெஞ்சிண்டிருந்து காதலரைபிரிந்தவர் கொடுமைகளை யான் றன்னோடு நினைத்தக்கா லவ்வவ வறிந்தென்னைத் தின்பதுபோன் றுன்பஞ் செய்தற்கே-என்பதாம்.

வி - ரை. என்னிடத்திருந்து அப்போது அவர்கொடுமைகளை உட்கொண்டு எனக்குப் பொறுக்கமாட்டாமையைச் செய்தற்கே இடபோது அவை நோக்கி அவரோடு பிணங்குதற்கன்றென்பதாம். 6

காணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு.

இதுவுமது.

ப - ரை. அவர் மறக்கல்லா !(தன்னைமறந்த) அவரை மறக்கமாட்டாத, மாணு-மாட்சியில்லாத, என் மடநெஞ்சிற்பட்டு-எனது அறிவில்லாதமனத்தோடுகூடி, நாணும் (என்னுயிரினுஞ் சிறந்த) நாணத்தையும், மறந்தேன்-மறந்துவிட்டேன், எ-று.

க - ரை. தன்னைமறந்த காதலரைத்தான் மறக்கவுமாட்டாதெவன் மாட்சியில்லாத மடநெஞ்சுடனே கூடி யென்னுயிரினுஞ் சிறந்தநா ணன்னையும மறந்துவிட்டே னென்பதாம்.

வி - ரை. மடமைகண்டவிடத்து நினைந்து காணாதவிடத்து மறக்கத்தக்க தவறுகளைக் காணாதவிடத்துநினைந்து கண்டவிடத்துமறத்தல் நான் எக்காலும் கூடியொழுகினும் அக்காள்கண்டார்போல் ஒடுங்குதல் கண்டபொழுதே புணர்ச்சிக்கு விரைதலால், அதனை மறந்தேனென்றாள். 7

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத நெஞ்சு.

இதுவுமது.

ப - ரை. உயிர்க்காத னெஞ்சு-உயிர்மேல் ஆசையுடைய (என்) னெஞ்சு (நம்மை இகழ்ந்துசென்றாரென்று-எள்ளின் (நாமும்) இகழ்வோமாயின் இளிவாமென்றெண்ணி பின்பு நமக்கு) அவமானமாமென்று நினைத்து, அவர் திறம்-அவர் திறத்தையே, உள்ளும்-நினைக்கின்றது, எ-று.

க - ரை. உயிர்மேற் காதலையுடையவென் னெஞ்ச கம்மையெள்ளிச்செ ன்றுசென்று காமுறுமுன்னுளேமாயிற் பின்னமக்கினியவரென்று கருதியவர் திறத்தினையே நினையாநின்றதென்பதாம்.

வி - ரை. என்னுதல்-அருமறத்தல், இனிவு வழிபடாமையாலும், பிரிவு பெருமையாலும், நாணிறைமுதலியவை இழத்தலாலும் உண்டாவது இரம் அதக்குடன்படலும் வருதலும், கூடலும் முதலானவை இனிவிற்கு அஞ்ச லாலும் இறந்துபடமாட்டாமையாலும் கூட நினைக்கின்றதென்பதாம். 8

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

இது ஒழித்தற்குவாராத பிணக்கிலே தலைவன் சொல்லியது.

ப - ரை. துன்பத்திற்கு (ஒருவர்க்குத்) துன்பம்வந்தவிடத்து [(அதைநீ க்குதற்கு) தாமுடைய-தாம் உரித்தாகப்பெற்ற, நெஞ்சம் (தமது) மனமான



து துணையாகாதவிடத்து, துணையாவார்-துணையாகின்றவர்கள், யாரே-யார் (ஒருவரும் இல்லை,) எ-று.

க - ரை. நீக்குதற்குத் தாமுரித்தாகப்பெற்ற தம்முடைய நெஞ்சந் துணையாகாவழி வேறுதுணையாவ ரொருவரு மில்லை யென்பதாம்.

வி - ரை. இங்கே துன்பமாவது ஒழித்தற்கு வாராதபிணக்கு, நெஞ்சந் துணையாகாமையாவது அவளை அன்பிலளென்ன றெழியாது கூடற்கண்ணே விரைதல். ஒரு துணையில்லாமையால் இத்துன்பமுற்று விடுதலே உள்ளதெ ன்பதாம். 9

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

இதுவுமது.

ப - ரை. தாமுடைய-தாம் உரித்தாகவுடைய, நெஞ்சம்-மனம், தமரல் வழி (ஒருவர்க்குத்) தம்மவராகாதவிடத்து, ஏதிலார்-அயலார், தமரல்லர், த ம்மவரல்லராகுதல், தஞ்சம்-எளிதன்றே, எ-று.

க - ரை. தாமுரித்தாகவுடைய நெஞ்சமொருவர்க்குத் தமரல்லாவழி ய யலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ என்பதாம.

வி - ரை. வேறொருத்தியைக் காதலியென்று நினைத்து என்னெஞ்சமே என்னை வருத்துகின்றபின்பு வேறொருத்தி பிணங்குகின்றதுஎளிதென்பதாம்

நூற்றிமுப்பதாம் அதிகாரம்-நெஞ்சொடு புலத்தல்
முற்றிற்று.

## ௧௩௧ ஆம் அதி. புலவி.

அஃதாவது: இருவர்நெஞ்சும் புணர்ச்சிவிரும்பாது பிணங்கநினைத்தவிடத்து ஒருவரோடொருவர்பிணங்கல். அதிகார முறைமையும் இதனால் விளங்கும்.

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.

இது வாயிலாகச் சென்றதோழி தலைவி அதற்கு உடன்படுதற் பொருட்டு அவனோடு நகைத்துச் சொல்லியது.

ப - ரை. அவருறும்-அக்காதலரடையும், அல்லனோய்-துன்பநோயினை, சிறிது-சிறிது, காண்கம்-காணக்கடவோம், புல்லாது (நீ அவரை விரைந்து போய்த்) தழுவாமல், இராஅ (இத்தொழிலை மேலிட்டுக்கொண்டு) இருந்து, புலத்தை-பிணங்கு, எ-று.

க - ரை. அங்ஙனம் புலந்தாற் காதலரெய்தும் அல்லனோயினை யாஞ்சிறிது காணக்கடவேமியவரை விரைந்துசென்று புல்லாதேயித்தொழிலைமேலிட்டுக்கொண்டிருந்து புலப்பாயாக வென்பதாம்.

வி - ரை. அல்லனோய் துன்பஞ்செய்யுங் காமநோய் சிறிதென்றான். பிணக்கை நீளவிடலாகாதென்பதுபற்றி புலவிக்குறிப்புக் கண்டு அவர் வழிய



வாய் நின்று நாம் உற்றவருத்தம் சிறிது உறலறிதல் வேண்டுமென நகைசெய்து நேர்வித்தபடி. 1

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்.

இது பிணக்குத்தீர்ந்து அதற்கு உடம்படும்வகை சொல்லியது.

ப - ரை. புலவி-பிணக்கு (புணர்ச்சி யின்பஞ் செய்தற்கு வேண்டுமளவினதாகுதல்) உப்பமைந்தற்று-உப்பானது (உணவுகளை இன்சுவை யாக்குதற்கு) வேண்டுமளவினதாகுதல்போலும், நீளவிடல் (இனி அதனை அவ்வளவிற்சிறிது) மிகவிடுதல், அதுசிறிது மிக்கற்று-அவ்வுப்பளவு சிறிது மிகுந்தது போலும்.

க - ரை. புலவி கலவியின்பஞ் செய்தற்கு வேண்டுமளவித்தாதலுப்புத் துய்ப்பனவற்றை யின்சுவையாக்கற்கு வேண்டுமளவிற்றாதல்போலு மினியதனையவ்வளவிற்சிறிது மிகவிடுதலவ்வுப்பளவின் மிக்காற்போலுமென்பதாம்.

வி - ரை. நீளவிடுதல் அளவறிந்து ஒழியாமல் புணர்ச்சி மேலெழுந்த குறிப்பு அழுங்குமளவுஞ் செலுத்தல், சிறிதும் நீளவிடலாகாதென்றான். நேர்விக்கின்றானாகலால், உப்புமிகுந்தவிடத்து உணவுசுவை யில்லாமற்போதல்போல பிணக்கு மிகுந்தவிடத்துப் புணர்ச்சி இன்பமில்லாமற் போமென்றமையால் இது பண்புவமை. 2

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

இது பரத்தையிடத்திருந்துவந்த தலைவனோடு தலைவிபிணங்கிச்சொல்லியது.

ப - ரை. ஆடவர்-தம்மைப் புலந்தாரை, தம்மைப்பெறாது பிணங்கியமகளிரை (அப்பிணக்குநீக்கி) புல்லாவிடல், புணராமல் விடுதல்-அலந்தாரை (முன்னமே துன்பமுற்று அழிந்தவர்க்கு, அல்லனோய் செய்தற்று (அதன் மேலும் மிகுந்த துன்பநோய் செய்ததுபோலுமாம், எ-று.

க - ரை. தம்மைப்பெறாது புலந்தமகளிரைப் புலவிநீக்கிக் கலவாதாடவர்சேறல்பண்டே துன்பமுற் றுழந்தாரை யதன்மேலு மிகத் துன்பத்தினைச் செய்தாற்போலு மென்பதாம்.

வி - ரை. பிறரிடத்துச் செல்லுதலால், உம்மைப்பெறாது பிணங்கி யிருக்கின்ற பரத்தையரைப்போய்ப் பிணக்குநீக்கிப் புணரீராயின் அவர்பொறாரென்பதாம். 3

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

இதுவுமது.

ப - ரை. ஊடியவரை (உம்மோடு) பிணங்கிய பரத்தையரை, உணராமை-பிணக்குத்தீர்த்துக் கூடாமை, வாடிய-முன்னமே நீர்பெறாமல் வாடிய, வள்ளி-கொடியை, முதலரிந்தற்று-அடியிலே அறுத்தல்போலும், எ-று.

க - ரை. நம்மோடேிய பரத்தையரை யூடலுணர்த்திக் கூடாதொழிதல் பண்டேநீர் பெருதவாடியகொடியையடியிலேயறுத்தாற்போலுமென்பதாம்

வி - ரை. நீர் பரத்தையரிடத் திருக்கும்போது எம்புதல்வரைக் கண்டு பொறுத்திருக்க வல்லயாம், உம்மோடு பிணங்குதற்கு உரியமல்லேம், ஆகை



யால் எமக்குப் பிணக்குத் தீர்த்தலும்வேண்டாம். உரியராய்ப் பிணங்கிய பர த்தையருக்கே பிணக்குத் தீர்க்கவேண்டுவது அதனால் அங்கே செல்லு மென் பதாம். 4

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணு ரகத்து.

இது தலைவியைப்பிணக்குத் தீர்த்துக்கூடியதலைவன் தன்னுள்ளே சொல்லியது.

ப - ரை. நலத்தகை-நற்குணங்களாலே தகுதியுடைய, நல்லவர்க்கு-தலை வர்க்கும், ஏர்-அழகாவது, பூவன்ன கண்ணாரகத்து-மலர்போலும் கண்ணிய ர் நெஞ்சிலுண்டாகின்ற, புலத்தகை-பிணக்கின் மிகுதியன்றோ, எ-று.

க - ரை நற்குணங்களாற் றகுதியுடையாராய் தலைவர்க்கு மழகாவது த ம்பூவன்ன கண்ணார்நெஞ்சி னிகழும்புலவி மிகுதியன்றே யென்பதாம்.

வி - ரை. தலைவர்க்குமென்கிற சிறப்பும்மை விகாரத்தால தொக்கது. தவறில்லாதார்க்கும் அப்பிணக்கு இனி தென்றற்கு நலத்தகை நல்லவர்க்கு மென்றான். அழகு இன்பப்பயனைப்பெறுதல். தான் அனுபவித்த இன்பத்தி ற்கு ஏதுவாகிய பிணக்கை வியந்து சொல்லியபடி. 5

துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

இதுவுமது

ப - ரை. துனியும்-பெரும்பிணக்கும், புலவியும்-சிறுபிணக்கும், இல்லா யின்-இல்லையாயின், காமம்-காமமானது, கனியும்-பக்குவ முதிர்ந்த பழமும், கருக்காயுமற்று இளங்காயும்போலும், எ-று.

க - ரை. முதிர்ந்த காலமாகிய துனியு மிளைய காலமாகிய புலவியு மில் லையாயிற் காமஞ்சொல்லி முதிர்ந்தபழமுங் காயும்போலு மென்பதாம்.

வி - ரை. மிகமுதிர்ந்து இறுமளவினதாகிய பழம் அனுபவிப்பார்க்குமி கவும் இன்பஞ் செய்தலால், பெரும்பிணக்கு இல்லையாயிற் கனியற்றென்று ம் கட்டிளமைத்தாகிய காய்த்தின்னப்படுகிற பக்குவத்தன்றாகலால், சிறுபி க்கு இல்லையாயின் கருங்காயற்றென்றும் சொல்லினான். இரண்டும் வேண்டு மென்று வியர்த்து சொல்லியபடி. 6

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

இதுவுமது

ப - ரை. புணர்வது-புணர்ச்சியானது, நீடுவதுகொல்-நீட்டிக்குமோ, அன்றுகொல்-நீட்டியாதோ, என்று-என்று நினைத்தால், ஊடலின் (இன்பத் திற்கு அவசியம்வேண்டும்) பிணக்கிலேயும், ஓர் துன்பம் ஒருதுன்பம், உண் டு-உண்டாம், எ-று.

க - ரை. இப்புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோவென்று கருதலாலி ன்பத்திற்கின்றியமையாத ஊடலின்கண்ணேயுந் துன்பநிகழுமென்பதாம்.

வி - ரை. ஊடலினுமென்கிற சிறப்பும்மை விகாரத்தாலே தொக்கது. கொல்லென்பதனை நீடுவ தென்பதனுடனுங் கூட்டப்பட்டது. ஆங்கென் 7 து அசைநிலை. ஊடலானது கூட்டிலே விரைவித்தல் சொல்லியபடி.

## ௱௩௰அ ௧௩-அ-ஆம்-அதி-புலவி.

நோதலெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

இது ஒழித்தற்கு வாராத பிணக்கிலே தலைவன் தலைவியோடு
பிணங்கிச் சொல்லியது.

ப - ரை. நொந்தாரென்று (இவர் நம்பொருட்டு) நொந்தாரென்று, அஃதறியும்-அந்நோவை அறிகிற, காதலர்-அன்புடையவரை, இல்லாவழி-பெறு தவிடத்து, நோதல் (ஒருவர் நோகின்ற)தலுதல், எவன்மற்று (பயன்)யாது,

க - ரை. இவர் நம்பொருட்டா நொந்தாரென் றன்னோவையறியு மன் புடையாரைப் பெறாவழி யொருவர் நோகின்றதனாற் பயனென்ன வென்ப தாம்.

வி - ரை. இவள் நமது தலைவியல்லள் அல்லாமையால், இந்நோவறியா ள் அறியாமையாய் நாம் பிணங்குதலாலே பயன் இல்லையென்று தன் பொரு மை அறிவித்தபடி. 8

நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

இதுவுமது

ப - ரை. நீரும் (உயிர்க்கு அவசியமவேண்டும்) நீரும்-நிழலதே-நிழலிலுள்ளதே இனிது-இனிதாகும் (அதுபோல்) புலவியும் (புணர்ச்சிக்கு அவசியமவேண்டும்) பிணக்கும், வீழுநர்கண்ணேயினிது-அன்புடையவரிடத்தே இனிதாகும் (மற்றையன்பிலாரிடத்து) ஆகாது, எ-று.

க - ரை. உயிர்க்கின்றியமையாத நீருநிழலின் கண்ணதே யினிதாவதேனை வெயிலின்கண்ண தாகாததுபோலக் கலவிக்கின்றியமையாத புலவியுமன்புடையார்கண்ணே யினிதாவதேனை யன்பிலலார் கண்ணகாதென்பதாம்.

வி - ரை. நிழலிடத்துள்ள நீர்மிகுந்த குளிர்ச்சியுடையதாய்த் தாகந்தணித்தலால் இனிதாயிற்று, அன்புடையவர் பொறுமைக்கு நோகுதலும், கூடுதலிலே ஆசையும், உடையாராவார் இவரிடத்து அவ்விரண்டும் இல்லாமையால் இப்பிணக்குதலும் துன்பஞ்செய்கின்றதென்பதாம். 9

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

இதுவுமது.

ப - ரை. ஊடலுணங்க (தான்) பிணக்கலிலே வருந்தாநிற்கவும், விடுவாரோடு (தன்னை) விட்டிருக்க வல்லாரோடு, என்னெஞ்சம்-என்மனம், கூடுவேமென்பது-கூடக்கடவேமென்று முயற்சிசெய்தற்குக் காரணம், அவா (தன்னாசையே வேறில்லை, எ-று.

க - ரை. தானூடற்கண்ணே மெலியாநிற்கவும் விட்டிருக்க வல்லரோடு கூடக் கடவேமென்றென்னெஞ்ச முயறற்கது தன்னவாவே பிறிதில்லையென்பதாம்.

வி - ரை. அன்பும், அருளும், இல்லாரை உடையரென்றும், அவரோடுயாம் பொருந்துவேமென்றும், நினைந்து அதற்கு முயலுதல் அவாவுற்றார் செயலாகலால் கூடுவேமென்பது அவாவென்றான், இக்கூட்டம் முடியாதென்பதாம். 10

நூற்றி முப்பத்தோராம் அதிகாரம்-புலவி.

முற்றிற்று.

## கஙஉ - ஆம் அதி புலவி நுணுக்கம்.



அஃதாவது தலைவனும், தலைவியும், ஒருபடுக்கையிலே கூடியிருந்தவிடத்து அவனிடத்துப் பிணங்குதற்குக்காரணம் இல்லாதிருக்கவும் ஆசை அதிகப்படுதலால், நுட்பமாகிய ஒருகாரணம் இருக்கிறதாக உட்கொண்டு அதனை அவன்மேலேற்றி அவன் பிணங்குதலால் காரணத்தினுணுக்கம், காரியத்தின்மேல் நின்றது. அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.

இது உலாப்போய்வந்த தலைவன் படுக்கையிடத்து வந்தபோது
தலைவி சொல்லியது.

ப - ரை. பரத்த-பரத்தையரிடத்துச் செல்லுதலுடையாய், பெண்ணியலாரெல்லாரும்-பெண்ணியல்பினையுடையாரெல்லாரும் கண்ணின், (தமது) கண்களால், பொதுவுண்பர்-பொதுவாக உன்னை அநுபவிப்பர் அதனால் நின்மார்பு அவரெச்சிலாகிய நின்மார்பை, நண்ணேன்-பொருந்தேன், எ-று.

க - ரை. பரத்தமையை யுடையாய் நின்னைப் பெண்ணியல்பினை யுடையார் யாவருந் தங்கண்ணாற் பொதுவாகவுண்ப ரதனாலவர் எச்சிலாய நின் மார்பினைப் பொருந்தே னென்பதாம்.

வி - ரை கற்புநாண்முதலாகிய நற்குணங்கள் இல்லாமையால் பரத்தையர்க்கு உளது பெண்ணுருவிருக்கை மாத்திரமே என்கிற கருத்தால் பெண்ணியலாரென்றாள், பொதுவாகவுண்டல் தமது சேரியிலே செல்லுகையில்முறையாலன்றி ஒருகாலத்து ஒருசேர நோக்குதல் அஃதும் ஓர் குற்றம், தான் நோக்கி இன்புற்றபடியே அவரும்நோக்கி இன்புறுவரென்று ஆசங்கித்து அவள் அவரிடத்துப் பொறாமை யடைதலால் நுணுக்கமாயிற்று. 1

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

இது தலைவன் நீங்கியபோது சென்றதோழிக்குத் தலைவி படுக்கை யிடத்து நடந்தது சொல்லியது.

ப - ரை. ஊடி யாம் தம்மோடு பிணங்கி, இருந்தேமா பேசாதிருந்தேமாக, தும்மினார் காதலர் தும்மினார் அப்பிணக்குநீக்கி யாம்-நாம், தம்மை,நீடுவாழ்கென்பாக்கறிந்து-நெடுங்காலம் வாழ்கவென்று சொல்லுவேமாக நினைத்து, எ-று.

க - ரை. யார்தம்மோ டூடியுரையாடாதிருந்தேமாகக் காதலர் தும்மினார தங்கித்தம்மை நீடுவாழ்கென் றுரையாடுவேமாகக் கருதியிருந்தென்பதாம்.

வி - ரை. தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலால, பேசவேண்டிய தாயிற்றென்பதாம. இயல்பாக உண்டாகிய தும்மலைக் குறிப்பால் உண்டாகிய

தாகக்கொள்ளுதலால் றுணுக்கமாயிற்று. 2

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்திமைக்
காட்டிய சூடினி ரென்று.

இது தலைவியது பிணக்குக்குறிப்பைக்கண்டு நீர்கூடியொழுகாநிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.

ப - ரை, கோட்டுப்பூ-வளைவாகிய பூமாலையை, சூடினும்-சூடினே னாயினும், ஒருத்திமை உம்மால் இச்சிக்கப்பட்ட ஒருதிக்கு காட்டிய இப்பூவலங்

# ருகூo கக௨-ஆம்-அதி-புலவி நுணுக்கம்.

கரிப்பைக் காட்டுதல்வேண்டி, சூடினீரென்று-அணிந்தீரென்று, காயும்-கோபியாநிற்பள் இப்படிப்பட்டவளுக்கு ஒரு காரணம்வேண்டுமோ, எ-று.

க - ரை. யான்கோடுதலை செய்பு மாலையைச் சூடினேனாயினு நும்மாற் காதலிக்கப்பட்டா ளொருத்திக்குப் பூவணிக் காட்டல் வேண்டிச் சூடினீரென்று வெகுளாநிற்கு மித்தன்மையாட் கொருகாரணம்-வேண்டுமோ வென்பதாம்.

வி - ரை. பூ-ஆகுபெயர்.. வளையமாக வெனினுமாம். 3

யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

இதுவுமது

ப - ரை. காமம் அனுபவித்தற்கு உரிய இருவராயுள்ளவர் எவரினும் காம மிகுந்த காதலையுடையேமென்பது நினைத்து யாரினுங் காதல மென்றேனா யாரினும் மிகுந்த காதலையுடையேமென்று சொன்னேனாக உனதுதோழி அது நினையாமல் உன்னால் விரும்பப்பட்ட மகளிர் பலருள்ளும் உன்னிடத்துமிகுந்த காதலையுடையே மென்றேனாக நினைத்து யாரினும் யாரினுமென்று-யாரினும்-யாரினும் என்னிடத்துக் காதலையுடையீர் என்றுசொல்லி வூடினாள்-வணங்கினாள், எ-று.

க - காமநுகர்தற்குரிய விருவராயினுர் யாவரினு மிக்க காதலை யுடையேமென்பது கருதி யாரினுங் காதலமென்றேனாக நின்றோழியது கருதாதென்னாற் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளு நின்கட் காதலையுடையே னென்றேனாகக் கருதிய மகளிர் யாரினும் மென்கட் காதலையுடையீராயினீ ரென்றுசொல்லப் புலந்தா ளென்பதாம்.

வி - ரை. தலைவி-கருத்துக்குக் காதலன் என்ற தம்மைப் பன்மை தலைவன் தன்னை உயர்த்திச் சொல்லியதாக வந்தது. யான் அன்பு மிகுதியினாலே சொல்லியதைக் கருத்துவேறுபடக் கொண்டதல்லது வேறொருகாரணம்இல்லையென்பதாம். 4

இம்மைப் பிறப்பிற் பிரியல னென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

இதுவுமது

ப - ரை. காதன்மிகுதியால் இம்மைப்பிறப்பில்-இப்பிறப்பிலே, பிரியலனென்றேனா-பிரியேனென்று சொன்னேனாக அதனால் என்னை மறுபிறப்பிலே பிரிவேன் என்கிற கருத்துடையேனாக நினைத்து கண்ணிறை நீர்கொண்டனள் அவள் கண்ணிறைந்த நீரைக்கொண்டாள், எ-று.

ச - ரை. காதன்மிகுதியா லிம்மையாகிய பிறப்பின்கண் யான் பிரியேனென்று சொன்னேனாக வதனாலென்னை மறுமையாகிய பிறப்பினகட் பிரிவலென்னுங் குறிப்பினேனாகக் கருதியவடன் கண்ணிறைந்த நீரைக் கொண்டாளென்பதாம்.

வி - ரை. வெளிப்படுசொல்லைக் குறிப்புச் சொல்லாகக் கொள்கின்றதல்லது என்னிடத்துத் தவறில்லை யென்பதாம்.

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

இதுவுமது.

ப - ரை. உள்ளினேனென்றேன் பிரிவில் இடைவிடாமல் உன்னை நினைந்தேன் என்கிறகருததால் நினைந்தேனென்றேன் அவள் அதனை ஒருக

## ௱௩௰௨ - ஆம் - அதி - புலவிநுணுக்கம். [illegible]

ல் மறந்துபின் நினைந்தேனென்று சொல்லியதாக எண்ணி) மற்று - அதற்கு விரோதமாக, என் மறந்தீரென்று - என்னை மறந்தீரென்று சொல்லி முன்னே தழுவுதற்கு - அமைந்தவள், என்னை - என்னை, புல்லாள் - தழுவாளாகி புலத்தக்கனள் - பிணங்குதற்கு அமைந்தாள், எ-று,

(ச-ரை) பிரிந்தகாலத் துன்னை மறவாமையின் நினைந்தேனென்னுங்கருத்தால் யானுள்ளினேனென்றேனென வதனை யொருகால் மறந்து பின்னை நினைந்தேனாகக் கருதி யென்னைமறந்தீரென்றுசொல்லிமுன்புல்லுதற்கமைந்தவளஃதொழிந்து புலத்தற்கமைந்தா ளென்பதாம்

(விசை) மற்றுவினைமாற்று அருத்தாபத்தி வகையால் மறத்தலை உட்கொண்டு பிணங்கினு ளென்பதாம்

வழுத்தினு டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று

இதுவுமது

(ப-ரை) (கூடியிருக்கின்றவள்) தும்மினேனாக (யான்) தும்மினேனாக வழுத்தினுன்(தன்னியற்பகைபற்றி)வாழ்த்தினள்-(அப்படிவாழ்த்தியதானே அழித்து-(அக்கருத்தைமறித்து)-(உம்மைநினைந்து வருந்துகின்றமகளிருள்) யாருள்ளி-யார் நினைத்தலால், தும்மினீரென்று - தும்மினேனென்று அழுதாள்-(பிணங்கி) அழுதாள், எ-று

(க-ரை) கூடியிருக்கின்றவள் யான் றும்மினேனாகத் தன்னியற்கை பற்றி வாழ்த்தினு ளங்ஙனம் வாழ்த்தியதானேமறித்து நும்மைநினைந்துவருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலற் றும்மினீரென்றுசொல்லிப்புலர்ந்தழுதா ளென்பதாம்

(வி-ரை) வாழ்த்தகிலாடு பிணங்கல் பொருந்தாமையால் அழித்தென்றுள் அன்புடையார் நினைத்தவழி நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல்தோன்று, மென்பது மகளிர் வழக்கு இவ்வழக்கையும் உள்ளதாக நினைத்துப் பிணங்கி னென்பதாம்

தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை . மறைத்திரோ வென்று

இதுவுமது.

(ப-ரை) (எனக்குத் தும்மல் தோன்றியவிடத்தே யார்நினைத்தால் தும்மினீரென்று பிணங்குதற்கு அஞ்சி) தும்முச்செறுப்ப- அத் தும்மலையடக்கவும், நுமருள்ளல்-உம்மவர்-(உம்மை) நினைத்தலை, எம்மை மறைத்திரோவென்று-(உம்மோடு ஒரு சம்பந்தமும் இல்லாத) எமக்குமறைக்கலுற்றீரோ வென்று சொல்லி, அழுதாள்-(பிணங்கி) அழுதாள், எ-று.

(க-ரை) எனக்குத் தம்மைறேன்றிய வருயாருள்ளீர் தம்மின்றென்று புலத்தலையஞ்சி யதனையாளடைக்கினே னென்னை மடக்கிய நகர்நும்மை நினைத்தலை யெம்மைமறைக்க லுற்றீரோவென்று சொல்லிப் புலர்தழுவு மென்பதாம்

(வி-ரை) சேறப்பவும் என்பதினும்மை விகாரத்தால் தொக்கது. ஆம் மினுங்குற்றம் ஒழியினுங்குற்றம்ஆகியக்கால்இனியான்செய்தற்றன்மையயு யாதென்பதாம்

தன்னை யுணர்த்தினுங் காயு . பிறர்க்குநீர்
நின்னீர ராகுதி ரென்று

இதுவுமது.

(ப-ரை) தன்னை (இவ்விதத்தாலே பிணங்கிய) தன்னை உணர்த்தினும் (காண்வணங்கிப்) பிணக்குத் தீர்க்கும்போது காயும் கோபியாநிற்பவள், பிறர்க்கும் - பிறமகளிர்க்கும், நீர் - நீர் இன்னீராகுதி ரென்று (அவர் பிணங்கிப் போது) இப்படியே வணங்கிப் பிணக்குத்தீர்க்குந் தன்மையிராகின்றீ ரென்று சொல்லி எறு

(க-ரை) இவ்வாற்று னூடியதன்னையான் பணிந்துணர்த்தல் காலும் வெகுளாநிற்த புறமகளிர்க்கு மவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்த நீர்மையை யுடையிராதிரென்று சொல்லி யென்பதாம்

(வி-ரை) இவள் தெளிவித்த வழியுந்தெளியாளென்பதுபற்றிஎன்மேல் ஏற்றிக்கொண்டு அக்குற்றங்களுக்கு உடன்பட்டு வணங்கினேன் வணங்கி அதுவும் பிணங்குதற்கு ஏதுவாய் முடிந்து இனி இவளிடத்துச்செய்யத்தகு வது யாதென்பதாம்

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று

இதுவுமது.

(ப-ரை) என்சொற்களும் செயல்களும்பற்றித் தான்கோபித்தலா

இருந்து (அவைகளை யொழிந்து) இருந்து நினைத்து (தன்னவயவங்களின் ஒப்பில்லாமையை நினைத்து நோக்கினும் (அவைகளையே பார்த்துக்கொண்டிருந்தாலும், காயும் (என்னைக்) கோபியாநிற்பள், அனைத்தும்(என்னவயவ மெல்லாம், நீர்-நீர், யாருள்ளி நோக்கினீரென்று (அவைகளினுறுப்புணர்வால்) யாவரை நினைத்துப்பார்த்தீரென்று சொல்லி, எ-று.

(க-ரை) என் சொற்களுஞ், செயல்களும் பற்றித்தான் -வெகுளலாவற்றை யொழித்திருந்து தன்னவயவங்கள் தொப்பின்மையை நினைத்தவற்றையேநோக்கினுமென்னைவெகுளாநிற்கு மென்னவயவமனைத்துநோக்கி நீர் ஒற்ற தொப்புமையா லெம்மகளிரை நினைத்ததென்று சொல்லியென்பது.



(வி-ரை.) யான் எல்லாவவயவங்களாலும் ஒருத்தியே டு ஒத்தல் கூடாமையால் ஒன்றால் ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும் அவரெல்லாரையும் யான் அறியச்சொல்லுமென்கிறகருத்தால் அனைத்து நோக்கினீர்யாருள்ளியென்றான். சும்மாவிருத்தலும் குற்றமாயிற்றென்பதாம். (ய)

நூற்றி முப்பத்திரண்டாம் அதிகாரம் புலவிநுணுக்கம் முற்றிற்று.

# நூற்றிமுப்பத்திமூன்றும் அதிகாரம்.
# ஊடலுவகை.

அஃதாவது அப்படிப்பட்ட வூடலால் தமக்குக் கூடலின்பம் சிறந்தவிடத்து அச்சிறப்புக்கு ஏதுவாகிய அவ்வூடலைத் தலைவி மகிழ்தலும் தலைவன் மகிழ்தலும் ஆம் அதிகாரமுறைமையும் இதனுலே விளங்கும்.

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

இது தலைவி காரணம் இல்லாமற் பிணங்குகின்றமை கேட்டு அப்படிப் பிணங்குகின்றது என்னவென்ற தோழிக்கு அவள் சொல்லியது,

(ப-ரை.) அவர்க்கு-அவரிடத்து, தவறு-பிழைகள், இல்லையாயினும்-இல்லாதிருந்தாலும், அவரளிக்குமாறு-(நமக்கு) அவர் அருள்செய்கின்ற விதம், ஊடுதல்வல்லது-பிணங்கலை-(விளைக்க) வல்லதாகின்றது- எ-று.

(க-ரை.) அவர்மாட்டுத் தவறில்லையாயினும் நமக்கவர்தலையளி செய்கின்றவா றூடுதலை விளைக்கவல்லதாகின்ற தென்பதாம்.

(வி-ரை.) அவர்க்கென்பது வேற்றுமை மயக்கம் அளவிறந்த இன்பத்தாகலால், யான் அடைதற்றன்மையதாகிய இத்தலையளி மற்றவரும் அடைவரென்று நினைத்து அது பொறாமையால் ஊடல் நிகழ்கின்றதென்பதாம்,

ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும

இது பிணக்காதிருக்கின்றபோதும் அத்தலையளி பெறலாயிருக்க அதையிழந்து பிணக்கினால் வருந்துவது என்னென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது,

(ப-ரை.) ஊடலிற்றோன்றும-(பிணக்கு நிலைமையினிடத்துத்) தோன்றுகின்ற சிறுதுனி சிறியதுன்பமானால், நல்லளி-(தலைவர்செய்கிற நல்லருள் வாடினும் - வாடுமாயினும், பாடு-பெருமையை, பெறும்-பெறும் எ-று.

(க-ரை.) ஊடலேதுவாக நமக்குட்டோன்றுகின்ற சிறியதுனி தன்னுற் செய்யு நல்லதலையளி வாடுமாயினும் பெருமைசெய்யுமென்பதாம்.

ருகசு கஙக - ஆம் - அதி - ஊடலுவகை,

(வி-ரை.) தவறில்லாமல் நிகழ்கின்றவூடல் கடிது நீங்கலால் அத்துன்பமும் நில்லாதென்றற்கு சிறிதுனியென்றும் அருமைபற்றி நிகழ்தலாற் அதனால் நல்லளி வாடாதென்றற்கு வாடினுமென்று பின்பேரின்பந் தருமென்றற்குபாடுபெறுமென்றும் சொல்லினள் அது வருத்தமெனப்படாதென்பதாம்.

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.

இதுவுமது,

(ப-ரை.) நிலத்தொடு - நிலத்தினோடு நீர்-நீரானது இயைந்தன்னாரகத்து

கலந்ததுபோல் ஒற்றுமையுடைய காதலரிடத்து புலத்தலின்-பிணங்குதல் போல்-(நமக்கு இன்பஞ் செயவது) புத்தேளுநாடு ஒரு தெய்வலோகம் உண்டோ-(இல்லை) எ-று.

(க-ரை.) நிலத்தோடு நீர்கலந்தாற்போல வேற்றுமை யுடைய காதலர் மாட்டுப்புலத்தல்போல நமக்கின்பந் தருவதொரு புத்தேளுலகமுண்டோவில்லை யென்பதாம்.

(வி-ரை.) எப்படி நீரானது தானின்ற நிலத்தியல்பினதாமோ அப்படியே காதலரும் தாம கூடியமகளிரியல்பினராதலால், அதுபற்றி அவரோடு பிணங்குதல் நிகழுமென்றற்கு நிலத்தொடுநீரியைந் தன்னாரகத்தென்றும் அவர் நமக்கும் அப்படிப்பட்டவராதலால், அப்பிணக்குப்பின்னே பேரின்பம் தருகின்றதென்றற்கு புலத்தலிற் புத்தேளுநாடுண்டோவென்றும் சொல்லினான். உவமம்-பயன் பற்றிவந்தது.

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை,

இது அப்பிணக்கு இனி எதனால் நீங்குமென்ற தோழிக்குச் சொல்லியது.

(ப-ரை,) புல்லி-(அன்பரைத்) தழுவிக்கொண்டு விடாஅ-(பின்) விடாமைக்கு ஏதுவாகிய, புலவியுள்-அப்பிணக்கினுள்ளே என்னுள்ளமுடைக்கும் (தன்மேற்சென்ற) என்னுள்ளத்தைச் சிதைக்கிற, படை-ஆயுதம், தோன்றும் உளதாகும், எ-று.

(க-ரை.) காதலரைப் புல்லிக்கொண்டு பின்விடாமைக்கேதுவாகியவப் புலவிக்கண்ணே யுளதாம்; தன்மேற்சென்ற வென்னுள்ளத்தைக்கெடுக்கும் படைக்கல மென்பதாம்.

(வி-ரை.) கணக்கத்தையும், பணிமொழியையும், உள்ளமுடைக்கும் படையென்றான். அவற்றால் அப்பிணக்குள்ளம் அழிதலால் பிணக்கு நீங்கும் விதம் சொல்லியபடி.

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து.

இது தலைவியைப் பிணக்கு நீக்கிக்கூடியதலைவன் அதிக மகிழ்ச்சியடைந்தவனுய்த் தன்னுள்ளே சொல்லியது

(ப-ரை.) தவறிலராயினும்-(ஆடவர்) தம்மிடத்துப் பிழையில்லாதவரா யுருந்தாலும்-(உடையோர்போல்பிணங்கப்பட்டு) தாம் வீழ்வார்-தம்மால் விரும்பப்படு மகளிரது, மென்றோள-மெல்லிய தோள்களை அகறலின்-கூடப்பெருத சமயத்தில், ஆங்கொன்று-(அவர்க்கு) அப்படிப்பட்ட தோரின்பம், உடைத்து (பயந்த) லுடைத்து, எ-று.

(க-ரை.) ஆடவர் தங்கட்டவறிலராயினு முடையார்போல வூடப்பட்டுத்தாம் விரும்பும் மகளிருடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெருதவெல்லைக்கண்ணவர்க்கப் பெற்றிய தோரின்பம் பயத்தலுடைத் தென்பதாம்.

(வி-ரை.) தவறுடையார்க்கு ஊடியக்கால் இறந்த வின்பத்தோடு வருமின்பமும் அடைவாராகலால் அதுமிகவும் நன்று மற்றைத் தவறிலார்க்கும் ஊடியின்பத்தை இகழ்ந்த நிலையென்னுங் கருத்தால தவறிலாராயினும் ஆங்கொன்றுடைத்தென்றான். ஊடலினலாகிய இன்பம் அளவிறத்தலால, சொல்லுதற்கு அரிதென்றற்கு அப்படிப்பட்ட தொன்றென்றான் தவறில்லாமல் ஊடியதுவும் எனக்கு இன்பமாயிற் றென்பதாம். (௭)

உணலினு முண்ட றலினு காமம்
புணர்தலி னூட லினிது.

இதுவுமது.

(ப-ரை.) (உயிர்களுக்கு) உணலினும்-(மேலே) உண்ணுதலினும், உண்டதறல்—முன்னுண்ணப்பட்டது சேரணித்தல், இனிது-இன்பந்தரும் (அது போல்) காமம் - காமத்துக்கு, புணர்தலின் (மேலே) புணர்தலினும், ஊடல்-முன்னைத்தவறுபற்றிப் பிணங்கல். இனிது - இன்பந்தரும்,

(க-ரை.) உயிர்க்குமே லுண்பதினு முன்னுண்டதறலின்பந் தருமது போலக் காமத்திற்கு மேற் புணர்தலினு முன்னைத் தவறுபற்றி யூடுதலின்பந் தருமென்பதாம்,

(வி-ரை.) காமத்திற்கு என்பதிலே சாரியையும், நான்காம்வேற்றுமையுரும்,விகாரத்தால தொக்கன பசித்துண்ணும்வழி மிகவுண்ணலுமாய் இன்சுவையதுமாம். அதுபோல் அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத் ததுமாமென்று தன்னனுபவம் பற்றிச் சொல்லியபடி. (௮)

[illegible] ர் [illegible] ற்று தமன் னுக்

இதுவுமது.

(ப-ரை.) (காமம அனுபவித்தற்குரிய இருவருள்) ஊடலிற் றோற்றவர் பிணக்கிலேதோற்றவர், வென்றார் = வென்றோராவர், அது (அப்பொழுது)

## நிகழ கஉகூ - ஆம் அதி - ஊடலுவகை.

அறியப்படாதாயினும் கூடலிற் காணப்படும் (பின்னே) புணர்ச்சியிலே (அவ ரால்) அறியப்படும், எ-று.

(க-ரை.) காமநுகர்தற்குரிய விருவருளூடலின் கட்டோற்றவர் வென்று ஏவ ரஃதப்பொழுது அறியப்படாதாயினும் பின்னர் புணர்ச்சியின் கணவரா லறியப்படுமென்பதாம்.

(வி-ரை.) தோற்றவர் எதிரிடமாட்டாமல் சாய்ந்தவர், அவர் புணர்ச்சி யிடத்தே பேரின்பத்தை அடைதலால் வென்றாராயினர், மன் - உம் - அசை நிலைகள். யான் அதுபொழுது சாய்தயால் இதுபொழுது பேரின்பம்பெற் றேனென்பதாம்.

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.

இதுவுமது.

(ப-ரை,) நுதல்வெயர்ப்ப (இப்போது இவளது) நெற்றிவெயர் வரும் படிவகை, கூடலிற்றோன்றிப்-புணர்ச்சியிடத்து உளதாகிய உப்பு-இனிமை யை (இன்னுமொருகால்) ஊடி (இவள்) பிணங்கி - பெறுதுவங்கொல் யாம் பெறவல்லமோ, எ-று.

(க-ரை.) இது பொழுதிவணுதல் வெயர்க்கும்வகை கலவியின் கணுள தாய் வினிமையை யின்னுமொருகாலவளூடியாம் பெறவல்லேமோ வென்ப தாம்,

(வி-ரை.) புணர்ச்சியினது விசேடம்பற்றி நுதல் வெயர்ப்பவென்றான் இனிமை கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறனுவ் ஆகிய இன்பம் இனி அப்பேறு கிடைப்பது அரிதென்று பெற்ற தன்சிறப்பு சொல்லியபடி.

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா.

இதுவுமது.

(ப-ரை.) ஒளியிழை-விளங்குகின்ற ஆபரணத்தையுடையவள் ஊடுக மன் (இன்னும்) எம்மோடு பிணங்குவாளாக, அப்படி பிணங்கி நிற்றற்கும் அதனைத் தீர்த்தற்பொருட்டும்) யாம்-நாம், இரப்ப-இரந்துநிற்றற்குக் (காலம் பெறும்வகை) இரா-இவ்விரவு, நீடுக மன் (விடியாது) நீட்டித்தல் வேண்டுக எ-று.

(க-ரை) ஒளியிழையிலை யுடையாளின்னு மெம்மோ டூடுவாளாக வந்தை மலனூடியதனை யுணர்த்துதற்பொருட் டியானுமிரந்து நிற்றற்குக்காலம் பெறும்வகை யிவ்விரவுவிடியாது நீட்டித்தல் வேண்டுக வென்பதாம்.

(வி-ரை) ஊடுக நீடுகவென்பன வேண்டிக்கொள்ளுதற் பொருளில்வாரன மன்னிரண்டும் ஆக்கத்தில்வந்தன ஓகாரங்கள்-அசைநிலைகள் கூட்காடியும் ஊடலே அமையுமென்பதாம்.

## கூகூ - ஆம் - அதி - ஊடலுவகை, ருகூஎ

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்

இதுவுமது

(ப-ரை) காமத்திற்கு-காமவனுபவத்திற்கு இன்பம் இன்பமாவது ஊடுதல் (அதனை அனுபவித்தற்குரியோர் ஆராமைபற்றித் தம்முள் )ஊடுதலாம் அதற்கு-அவ்வூடற்கு, இன்பம்-இன்பமாவது, கூடி (அதனை அளவறிந்து நீக்கித்தம்முள் ) கூடி, முயங்கப்பெறின்-புணர்தல் கூடுமாயின் (அப்புணர்ச்சியாம், எ-று

(க-ரை) ஒளியிழையிழையினையுடையாளின்னுமெம்மே டூடுவாளாகவந்தை மலனூடியதனை யுணர்த்துதற்பொருட்டியானுமிருந்துநிற்றற்குக்காலம் பெறும்வகை யிவ்விரவு விடியாது நீட்டிதல்வேண்டுக வென்பதாம்

(விரை) கூடுதல்ஒத்த வளவினராதல் முதிர்ந்து பெறும் பிணக்காகிய விடத்தே துன்பஞ்செய்தாலும் முதிராது சிறுபிணக்காகிய விடத்துப் புணர்ச்சியின்பம் செய்யாமையாலும் இரண்டற்கும்நடுவாகிய அளவறிந்துநீங்குதல் அரிதென்பதுபற்றி கூடி முயங்கப்பெறியென்றான அவ்வூடலின்பமும் கூடலின்பமும் யான் பெற்றேனென்பதாம்

நூற்றி முப்பத்துமூன்றும்-அதிகாரம்-ஊடலுவகை.

முற்றிற்று



கற்பியல் முற்றிற்று

காமத்துப்பால்-முற்றிற்று.

[—(*)--]

திருவள்ளுவநாயனா ரருளிச்செய்த திருக்குறள் மூலமும்

தெளிபொருள்விளக்கவுரையும்
கருத்துரையும் நிறைவேறின்.

ஏக-பாடல் ௰-க்கு, அதிகாரம் ௧௩௩-க்கு திருக்குறள்-௧௩௩௦

—[?*?]—

இக்காமத்துப்பாலுக்குக் காமத்தைக் குறித்துச் செம்பொருளாகச் சொல்லப்பட்ட இச்சிற்றின்பப் பொருளன்றி மோட்சத்தைக்குறித்துச் குறிப்புபொருளாகச் சொலலப்பட்ட பேரின்பம்பொருளும் உண்டு

திருவள்ளுவநாயனர் திருவடிவாழ்க

—(?*?)—

ஷை பாடல் புலம்பல் பத்திரிகிரியார் புலம்பல்
மூன்றும் சேர்ந்தது
நைடதம் உரை
ஷை விருத்தி உரை
அரிச்சந்திர புராணம் உரை
பிரமோத்தர காண்டம்
பாலகாண்டம் உரை
சுந்தரகாண்டம் உரை
அயோத்தியாகாண்டம் உரை
ஆரணியகாண்டம் உரை
அறப்பளி சதகம் உரை
குமரேசசதகம் உரை
கைவல்லியம் உரை
கட்டளைக் கொத்து
விநாயகபுராணம் வசனம் படங்களுடன்
கொலைமறுத்தல்
திருவிளையாடல் வசனம்
திருவிளையாடல் பாட்டு
ராமாயண பாட்டு
ராமாயணம் கிலேஸ் படங்களுடன்
பாரதம் திக்கு படங்களுடன்
குலசேகரன் (புதிய நாவல்)
கமல நாதன்
மேகவர்னன்

| | | |
|---|---|---|
| 2 | 0 | 0 |
| 3 | 4 | 0 |
| 1 | 8 | 0 |
| 1 | 8 | 0 |
| 1 | 12 | 0 |
| 1 | 4 | 0 |
| 2 | 0 | 0 |
| 2 | 0 | 0 |
| 1 | 4 | 0 |
| 1 | 8 | 0 |
| 8 | 0 | 0 |
| 2 | 8 | 0 |
| 2 | 8 | 0 |
| 8 | 0 | 0 |
| 0 | 12 | 0 |
| 0 | 12 | 0 |
| 2 | 0 | 0 |
| 0 | 12 | 0 |
| 2 | 0 | 0 |
| 1 | 4 | 0 |
| 1 | 8 | 0 |
| 2 | 0 | 0 |
| 6 | 0 | 0 |
| 6 | 0 | 0 |
| 8 | 0 | 0 |
| 0 | 10 | 0 |
| 1 | 0 | 0 |
| 0 | 8 | 0 |

*பெரிய கேட்லாக் வேண்டியவர்கள் அடியில் கண்ட விலாசத்திற்கு எழுதினால் இனாமாக அனுப்பப்படும்.*

*சக்ரவர்த்தி அண்டு கோ.,*
*போஸ்ட்டு பாக்ஸ் நெம்பர்-198 மதராஸ்*




## சஅ௯ கககூ-ஆம் - அதி - நாணுத்துறவுரைத்தல்.

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

இது * செவிலுக்கு அறத்தொடு நின்றமைத்து நான் நிற்கும் விதம் என்னென்று நகைசெய்த தோழியோடு புலந்து தலைவி தன்னுள்ளே சொல்லியது.

(ப-ரை.) யாம்-நாம், கண்ணிற்காண (கேட்கும்படியுமன்றிக்) கண்ணூற்காணும்படி, அறிவில்லார்-அறிவில்லாதவர்கள், நகுப (எம்மைச்) சிரிக்கின்றார் (அவர் அப்படிச் செய்கின்றது) யாம்பட்ட-யாம் அடைந்த நோய்களை, தாம்படாவாறு-தாம் அடையாமையால், எ-று.

(க-ரை.) நாம் கேட்கும்படி யல்லாமல் கண்ணூற் காணும்படி எம்மை அறிவில்லார் சிரிக்கின்றார், அவரங்ஙனஞ் செய்கிறது நாமடைந்தநோயைத் தாமடையாமையால்-என்பதாம்.

(வி-ரை.) கண்ணினென்றது முன்கண்டறியாமை புணர்கின்றது. அறத்தொடு நின்றமை யறியாமல் மணஞ்செய்பு மாட்சிமைப் படுகின்றில னென்று பிணக்குகின்றாளாகலால், அயலாளாகிச் சொல்லினன். ௧௦

நூற்றி பதினான்காம்-அதிகாரம்-நாணுத்துறவுரைத்தல் முற்றிற்று.

---

# ககரு-ஆம்-அதி-அலரறிவுறுத்தல்.

அஃதாவது, களவொழுக்கம் வேண்டிய தலைவன் பிறர் சொல்லுகின்ற அவர் தனக்கு ஆகின்ற விதத்தைத் தோழிக்கு அறிவித்தலும், மணமாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைவியும் தோழியும் அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலும் ஆம். இது நாணுத்துறத்தவழி நிகழ்வதாகலால், அதன் பின் வைக்கப்பட்டது.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

இது இரவுக்குறி தப்பிப்போய் மறுநாள் வந்த தலைவனை அலர்கூறி மணம் விஞவிய விடத்துத் தோழிக்குத் தலைவன் சொல்லியது.

(ப-ரை.) (உன் மாதுக்கும் எமக்கும் உண்டாகிய நட்பு) அலரெழ (இவ்வூரில்) அலரா எழுதலால், ஆருயிர் (அவனைப்பெறுது வருந்துகிறஎன்)னரி

---

* செவிலி-வளர்த்ததாய்.

# ககச - ஆம் - அதி - நாணுத்துறவுரைத்தல். ச ஆ௫

(வி-ரை.) பிறப்பு விசேடத்தால் அவ்வடக்கம் எனக்கு இல்லையாகின்றது. நீ அதை அறிகின்றிலை யென்பதாம். இதுவரைக்குந் தலைவன்சொல்லியது பின்னே தலைவிசொல்லுவது. எ

நிறையரியர் மன்னளிய ரென்னது காம
மறையிறந்து மன்று படும்.

இதுகாப்புச்சிறைஅதிகப்பட்டுக்காமம் பெருகியபோதுதலைவிசொல்லியது

(ப-ரை.) (இவர்) நிறையரிய (ரென்னது) நிறையால் (காம் மேற்கொள்ளுதற்கு) அரியரென்று அஞ்சாமலும், மன்னளிய ரென்னது - மிகவும் அளிக்கத் தக்கவரென்று இரங்காமலும், காமம் (மகளிரது)காமநோய், மறையிறந்து (அவர்) மறைத்தலைக்கடந்து, மன்றபடும் சபையிடத்து வெளிப்படுவதாயிருந்தது, எ-று.

(க-ரை.) இவர் நிறையால் நாமேற்கொள்ளுதற்கு அரியரென் றஞ்சு

தல் செய்யாது. மிகவு மஞிக்கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது. மகளிர் காமமும் அவர் மறைத்தலைக்கடந்து சபையிடத்து வெளிப்படுமாயிருந்தது என்பதாம்.

(வி-ரை.) என்றுதென்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக் கப்பட்டது. இங்கே மன்றென்றது - தந்தைமுதலாகிய தன் குடும்பத்தார் கூட்டத்தை உலகத்துப்பெண்களது காமத்தியல்பு சொல்லுவாள்போல் தன்காமம் பெருகிறபடிசொல்லி இனி அறத்தொடு நிற்றல் வேண்டுமென் பது குறிப்பித்தபடியாயிற்று. அ

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

இதுவுமது.

(ப-ரை.) (நான்முன் அடங்கி யிருக்கையால்) எல்லாரும் அறிகிலா ரென்று (என்னை) அறிந்திலர் (இனி அப்படி அடங்கியிருமல் நானே வெளிப்பட்டு அறிவிப்பேனென்று) நினைத்து, என்காமம்-எனது காமமானது மறுகில் (இவ்வூர்) வீதியில், மருண்டு-மயங்கி, மறுகும்-சுழல்கின்றது எ-று.

(க-ரை.) யான் முன்னடங்கி நிற்றலால் எல்லாரும் என்னையறிதவி லர்-இனியவ்வாறு நில்லாது நானே வெளிப்பட்டு அறிவிப்பேனென்று நினைத்து என்காமம் இவ்வூர் வீதியில் மயங்கிச்சுழல்கின்றது-என்பதாம்.

(வி-ரை.) மயங்குதல் * அம்பலாதல்-மறுகுதல். o அலராதல் இவ்வி ரண்டுமாயிற்று. இனி [] அறத்தொடு நிற்றல்வேண்டு மென்பதாம். க

---

* அம்பல்-சிலரறிந்து தம்மிற்பேசல்.

o அலர் பலரறிந்து தூற்றல்.

[] அறத்தொடுநிற்றல்-காமத்தைவெளிப்படுத்தல்.

## கூஅ கச - ஆம் - அதி - ஒழுக்கமுடைமை.

நிபவாசாரமானது, என்றும் - இருமைகளிலும், இடும்பை - துன்பத் தை, தரும் - கொடுக்கும், எ-று.

(க-ரை.) ஆசாரம் தருமத்திற்குக் காரணமாகும், என்பதாம்.

(வி-ரை.) நல்லொழுக்கம் அறத்துக்குக் காரணமாமென்றதனுல்,

தீயொழுக்கம், பாவத்திற்குக் காரணமாமென்பதும், தீயொழுக்கம்-இருமைகளிலும் துன்பந்தருமென்றதனால், நல்லொழுக்கம் இருமைகளிலும் இன்பந்தருமென்பதும் கொள்ளப்படும். [இதனாலே பின்விளைவு சொல்லப்பட்டது.] (அ)

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(ப-ரை.) வழுக்கியும் - மறந்தும், தீய - தீயசொற்களை, வாயாற் சொலல் - வாயினாற்சொல்லல், ஒழுக்கமுடையவர்க்கு - நல்லொழுக்க முள்ளவர்க்கு, ஒல்லா - முடியாவாம், எ-று.

(க-ரை.) நல்லொழுக்கமுள்ளவர் தீயசொற்களைச் சொல்லார் என்பதாம்.

(வி-ரை.) தீயசொல்லுகளாவன: பிறருக்குத் தீங்கைத்தரும்பொய் முதலானவையும், வருணத்துக்கு உரியனவல்லாதவையுமாம். நல்ல சொற்களிலே பழியதென்னும் பொருள்படுதற்குச் சொல்லென்றது வாயாற்சொல்லென்றார். (க)

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(ப-ரை.) உலகத்தோடு - உலகத்தாரோடு, ஒட்ட - பொருந்த, ஒழுகல் - நடத்தலை, கல்லார் - கற்றிலாதவர், பல - பலநூல்களையும், கற்றும் - கற்றாராயினும், அறிவிலாதார் - விவேகமில்லாதவராவர், எ-று.

(க-ரை.) உலகநடை கல்லாதவர்கள் பலநூலைக்கற்றுங் கல்லாதவர்களே என்பதாம்.

(வி-ரை.) உயர்ந்தாரோடு பொருந்த நடத்தலாவது: அவரெப்படி நடந்தாரோ அப்படிநடத்தல் அறநூலிலே சொல்லப்பட்டவைகளில் இக்காலத்துக்கு ஏற்காதவைகளைவிட்டு அதிலே சொல்லப்படாதவைகளில் ஏற்குமவைகளைத் தழுவிவருதலால், அவையும் அடங்குதற்கு உலகத்தோடொட்ட வொழுகலென்றும், கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்கமும், ஆதலின் அவ்வொழுக்கத்தைக் கல்லாதார் பலகற்றும் அறிவிலாதாரென்றும் சொல்லினர். [இவை இரண்பொட்டாலும், சொல்லாலும், செயலாலும்வரும். ஒழுக்கங்களெல்லாம் ஒருவிதத்தினாலே தொகுத்துச் சொல்லப்பட்டன. (௰)

பதினாலாம் அதிகாரம் ஒழுக்கமுடைமை
முற்றிற்று.

## பதினைந்தாம் - அதிகாரம்.

# பிறனில்விழையாமை.

அஃதாவது; காமமயக்கத்தினாலே பிறன் மனைவியாளை விரும்பாமையாம். இது ஒழுக்கமுடையவரிடத்தே உண்டாவதாகவின் அதன்பின் வைக்கப்பட்டது.

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

(ப-ரை.) பிறன் – பிறனுக்கு, பொருளான் – உடைமையாக்தன்மையவளை, பெட்டு – இச்சித்து, ஒழுகும் – நடக்கின்ற, பேதைமை – அறியாமையானது, ஞாலத்து – பூமியின்கண், அறம் – அறநூலையும், பொருள் – பொருணூலையும், கண்டார்கண் – ஆராய்ந்தறிந்தவரிடத்தே, இல் – இல்லை, எ-று.

(க-ரை.) பிறன்மனைவியை யிச்சிக்குந்தன்மை பெரியோரிடத்தில்லை என்பதாம்.

(வி-ரை.) அறமும்பொருளும் அவற்றினூல்களைக் காட்டலால் ஆகுபெயர்கள், இன்பமொன்றையேநோக்கும் காமநூலுடையார் இப்பொல்லாத வொழுக்கத்தையும் சொல்லுவாராதலின் அறம்பொருள்கண்டார்கணில்லென்றார். எனவே இப்பேதைமையுடையவரிடத்தே அறமும்பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது. (க)

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

(ப-ரை.) (காமங்காரணமாக) அறன்கடை – பாவத்திலே, நின்றாருளெல்லாம் – நின்றவரெல்லாருள்ளும், பிறன்கடை – பிறனுடையவாயிலினிடத்தே, நின்றாரின் – (அவன் மனையாளை யிச்சித்து) நின்றவர்போல், பேதையார் – மூடர், இல் – இல்லை, எ-று.

(க-ரை.) பிறன்மனைவியை யிச்சிக்கும், மூடரைப்போல்பவரில்லை என்பதாம்.

(வி-ரை.) பாவச்செயலிலேநின்ற பெண்வழிநடப்பவரும், பரத்தையரையும், இழிகுலமகளிரையும், அனுபவிப்பவருர்போல், அறம்பொருள்களைமாத்திரம், இழத்தல் அல்லாமல் பிறன்மனையாளிடத்துச் செல்வோர் அச்சத்தினாலே இன்பத்தையு மிழப்பாராதலின் பேதையாரில்லென்றார், எனவே யின்பமுமில்லையென்பது பெறப்பட்டது. (௪.)

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரி்ல்
தீமை புரிந்தொழுகு வார்.

(ப-ரை.) மன்ற - ஐயமில்லாமல், தெளிந்தார் - (தம்மை நல்லவரென்று) தெளிந்தவருடைய, இல் - மனையாளிடத்தே, தீமை - பாவஞ்

செய்தலை, புரிந்து - விரும்பி, ஒழுகுவார் - நடப்பவர், (உயிருடையவராயிருந்தாலும்) விளிந்தாரின்-செத்தவரின், வேறல்லர்-வேறாகார், எ-து.

ஈ: கரு - ஆம் - அதி - பிறனில்விழையாமை.

(க-ரை.) ஒருவரிடத்திற் சந்தேகமற்றவரது மனைவியைவிரும்பி நடப்பவருயிரோடிருந்து மிறந்தவரே, என்பதாம்.

(வி-ரை.) உயிரிருப்பினும் அவ்வுயிர் அறம்பொருளின்பங்களாகிய பயன்களை அடையாமையால் விளிந்தாரின் வேறல்லரென்றும், அவர் அப்பாவஞ்செய்வது மனையானை யுடையவரது தெளிவுபற்றி யாதலின், தெளிந்தாரில்லென்றும் சொல்லினார். (௫.)

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

(ப-ரை.) காமமயக்கத்தினாலே) தினைத்துணையும் - தினையளவும் (சிறிதாயினுமென்றபடி) தேரான் - (தம்பிழையை) நினையாமல், பிறனில் - பிறனுடைய மனையாளிடத்தே, புகல் - செல்லுதல், எனைத்துணையராயினும் - எவ்வளவு பெருமையுடையவராயிருக்கினும், என்னாம் - (ஒருவருக்கு) யாதாய்முடியும். எ-று.

(க-ரை.) மிகச்சிறப்புடையோர் தினையளவுமெண்ணாது பிறன்மனைவியை விரும்பின் அச்சிறப்பழியும், என்பதாம்.

(வி-ரை.) இந்திரனைப்போல் எல்லாப்பெருமைகளையும் இழந்து சிறுமையை அடைவாரென்பது குறித்து என்னாமென்றார். இழிசெய்தலில் எனைத்துணையரென்னும் பன்மைதேரானென்னும் ஒருமையோடு மயங்

இற்று. (௫)

> எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும்
> விளியாது நிற்கும் பழி.

(ப-ரை.) எளிதென - (இவளைச்சேர்த) லெளிதென்று நினைத்து (பின்) வினைவினையாமல், இல்-(பிறன்)மனைவியிடத்தே, இறப்பான் - செல்லுவோன், விளியாது - அழியாமல், எஞ்ஞான்றும் - எக்காலமும், நிற்கும் - நிலைநிற்பதாகிய, பழி - (குடிப்) பழியை, எய்தும் - அடைவான், எ-று.

(க-ரை.) பிறன்மனைவி எளிதிற் கிடைக்கினும் விரும்பலாகாது, என்பதாம்.

(வி-ரை.) இல்லிறத்தல் இல்லாளிடத்து வரம்புகடந்து செல்லுதல். (௬)

> பகைபாவ மச்சம் பழியென நான்கு
> மிகவாவா மில்லிறப்பான் கண்.

(ப-ரை.) இல்-(பிறன்) மனைவியினிடத்தே, இறப்பான்கண்-செல்லுவோனிடத்து, பகை பாவ மச்சம் பழியென நான்கும் - பகையும், பாவமும், அச்சமும், குடிப்பழியும், என்னுமிந்நான்கு குற்றங்களும், இகவாவாம் - (ஒருபோதும்) நீங்காவாம், எ-று.

(க-ரை.) பிறன்மனைவியைச் சேர்பவனிடத்திற் பகைபாவமச்சம் பழியிந்நான்கும் நீங்கா, என்பதாம்.



(வி-ரை.) எனவே யிருமைப்பயன்களையும் இழப்பானென்றதாயிற்று. [இவை ஆறுபாட்டாலும் பிறன்மனையாளை விரும்புவோனிடத்துக் குற்றஞ்சொல்லப்பட்டது.] (௭)

> அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
> பெண்மை நயவா தவன்.

(ப-ரை.) பிறனியலாள் - பிறனுடையவியல்பிலே (அவனுக்கு உரிமைபூண்டு) நிற்பவளது, பெண்மை - பெண்தன்மையை, நயவாதவன் - விரும்பாதவன், அறனியலான் - அறமாகிய வியல்போடுகூடி, இல்வாழ்வானென்பான் - இல்வாழ்வானென்று சொல்லப்படுவான, எ-று.

(க-ரை.) பிறனமனைவியை விரும்பாதவனே இல்வாழ்வானெனப்படுவான் என்பதாம்.

(வி-ரை.) இல்லறம் செய்வானெனப்படுவோன் அவனேயாவன் என்பதாம். (எ)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(ப-ரை.) பிறன்மனை - பிறனது மனையாளை, நோக்காத-உட்கொள்ளாத, பேராண்மை - பெரிய ஆண்தன்மையானது, சான்றோர்க்கு-(அறிவால்) நிறைந்தோர்க்கு, அறனொன்றோ - தருமமாவதொன்றோ, ஆன்றவொழுக்கு - நிறைந்தவொழுக்கமுமாம், எ-று.

(க-ரை.) பிறன்மனைவியை யிச்சியாமையே பெரியோர்க்குத்தருமம், என்பதாம்.

(வி-ரை.) புறப்பகைகளை அடக்கும் ஆண்மையுடையோர்க்கும் உட்பகையாகிய காமத்தை அடக்குதல் அருமையாதலால் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மையென்றார். செயற்கரிய அறமும், ஒழுக்கமும், இதனைசசெய்யாமையினாலேயே, உண்டாகுமெனபதாம். (அ)

நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

(ப-ரை.) நாமநீர் - அச்சந்தருகிற கடலாற்சூழப்பட்ட, வைப்பில்-பூமியினிடத்தே, நலக்கு - (எல்லா) நன்மைகளையும் பெறுதற்கு, உரியார் - உரியவர், யாரெனின் - யாரென்றால், பிறற்கு - பிறனுக்கு, உரியாள் - உரிமையானவளது, தோள் - தோள்களை, சேராதார் - சேராதவர், எ-று.

(க-ரை.) பிறன்மனைவியைச் சேராதவர்களே நன்மைக்குரியவர் என்பதாம்.

(வி-ரை.) நலத்துக்கென்பது நலக்கென விகாரப்பட்டது இம்மையிலும் நன்மை அடைவாரென்பதாம். (கூ)

## சாஉ கஙு - ஆம் - அதி - பொறையுடைமை.

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(ப-ரை.) (ஒருவன்) அறம் - அறத்தை, வரையான் - (தனக்கு உரியதாகக்) கொள்ளாதவனாகி, அல்ல - பாவங்களை, செயினும் - செய்வானாயினும் (அவனுக்கு) பிறன் வரையாள் - பிறனெல்லையிலே நிற்பவளது, பெண்மை - பெண்தன்மையை, நயவாமை - விரும்பாமை (உண்டாயின்) நன்று - (அதுநன்று) எ-று.

(க-ரை.) ஒருவன் அறஞ்செய்யாது பாவமேசெய்யினும் பிறன்மனை

விழை விரும்பாமையே நன்மை என்பதாம்.

(வி-ரை.) அக்குற்றங்களினும் இக்குணமே மேற்பட்டுத் தோன்று மென்பதாம். [இவை நான்குபாட்டாலும் பிறன்மனையாளை விரும்பாதவனிடத்துக் குணம் சொல்லப்பட்டது] (௧0)

பதினைந்தாம் அதிகாரம் பிறனில்விழையாமை

முற்றிற்று.

---

பதினாறாம் - அதிகாரம்.

# பொறையுடைமை.

அஃதாவது; காரணம் பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தம்மிடத்துத் தீங்குசெய்தவிடத்துத் தாமும் அதனை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலுடையராதல் இது பிறனில் விழையாமைபோல் அவசியம் வேண்டுவதாயிருக்கையால் அதன்பின் வைக்கப்பட்டது.

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

(ப-ரை. அகழ்வாரை - (தன்னை) வெட்டுவோரை, தாங்கும்-(வீழாமற்) சுமப்பதாகிய, நிலம்போல - நிலத்தைப்போல, தம்மை - தம்மை, இகழ்வார் - நிந்திப்பவரை, பொறுத்தல் - பொறுத்தல், தலை - முதலான அறமாம், எ-று.

(க-ரை.) வெட்டுவோரைத் தாங்குநிலம்போல இகழ்வாரைப் பொறுத்தலே தலையாய அறம்-என்பதாம்.

(வி-ரை.) இகழ்தல் தீங்குசெய்தலும் சொல்லலுமாம். (௧)

பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(ப-ரை.) இறப்பினை - (ஒருவன்செய்த) மிகையை, என்றும் - தன்னுலொறுத்தற்குக் கூடியகாலத்திலேயும், பொறுத்தல் - பொறுக்கக்கடவன், மறத்தல் - (அதனை நினையாமல் அப்பொழுதே) மறத்தல், பெறின்) அதனினும் - அப்பொறுமையினும், நன்று - மிகநல்லது, எ-று.

(க-ரை.) பிறர்குற்றத்தைப் பொறுத்தலினும் மறத்தல் நன்மை என்பதாம்.

(வி-ரை.) மிகைமுன் சொல்லப்பட்ட விரண்டு குற்றங்களும், பொறுக்கும்போதும் அக்குற்றம் உட்கொள்ளப்படுதலால் மறத்தலே அதனினும் நன்றென்றார். (உ)

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

(ப-ரை.) (ஒருவனுக்கு) இன்மையு ளின்மை, வறுமையுள் வறுமையாவது, விருந்தொரால் - விருந்தினரை (ஏற்றுக்கொள்ளாமல்) நீக்குதலாம், (அதுபோல்) வன்மையுள் வன்மை-வல்லமையுள்வல்லமையாவது, மடவார் - அறியாமையினாலே தீங்குசெய்தவரை, பொறை - பொறுத்தல், எ-று.

(க-ரை.) ஒருவனுக்கு வல்லமையில் வல்லமை மூடர்செய்த குற்றத்தைப்பொறுத்தல் - எனபதாம்.

(வி-ரை.) உடைமையு ளின்மையென்னுங் குறளின்படி எப்படி விருந்தினரை யுபசரியாமை பொருளுடைமை ஆகாதோ அப்படியே அறிவிலாரைப்பொறுத்தல் இளைத்தலாகாதென்பது கருத்து. [எடுத்துக்காட்டுவமையணி.] (௩)

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

(ப-ரை.) (ஒருவன்) நிறையுடைமை - நிறைவை யுடையவனாயிருக்கை, நீங்காமை - தன்னைவிட்டுநீங்காமையை, வேண்டின் - வேண்டுவானாயின், (அவனால்). பொறையுடைமை - பொறுமையுடையவனாயிருக்கை, போற்றி - (அழியாமற்)காத்து, ஒழுகப்படும் - நடக்கப்படும், எ-று.

(க-ரை.) நிறைவை வேண்டுவானாயிற் பொறுமையைக் காக்கக்கடவன். என்பதாம்.

(வி-ரை.) பொறுமையிலார்க்கு நிறைவில்லையென்பதாயிற்று. [இவை நான்கு பாட்டாலும் பொறையுடைமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௪)

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

(ப-ரை.) (பிறன் தமக்குத் தீங்குசெய்தவிடத்து) ஒறுத்தாரை-பொறாமல் அவனை) வருத்தினவரை (அறிவுடையோர்), ஒன்றாக - ஒரு

பொருளாக, வையார் – மனத்துட்கொள்ளார், பொறுத்தாரை – (அத னைப்) பொறுத்தவரை, பொன்போல் – பொன்னைப்போல், பொதிந்து – இடைவிடாது, வைப்பர் – மனத்துட்கொள்வார், எ-று.

(க-ரை.) பெரியோர்கள் பொறுமையுள்ளோரைப் பொருளாக நினைப்பார் என்பதாம்.

## ௱௫௬ கரு - ஆம் - அதி - பொறையுடைமை.

(வி-ரை.) ஒறுத்தவர் அத்தீங்கு செய்தவர்க்குச் சமானமாதலின் ஒன்றாக வையாரென்றார். (௫)

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

(ப-ரை.) ஒறுத்தார்க்கு – (தமக்குதீங்குசெய்தவனை) ஒறுத்தவர்க்கு, (உண்டாவது) ஒருநாளையின்பம் – அவ்வொருநாளையின்பமே, பொறுத்தார்க்கு – (அதனைப்) பொறுத்தவர்க்கு, பொன்றுந்துணையும் – (உலக) மழியுமளவும், புகழ் – கீர்த்தி, உண்டாம் – உண்டாகும், எ-று.

(க-ரை.) பிறர்குற்றங்கண்டு தண்டித்தவர்க் கொருநாளையின்பம் பொறுத்தவர்க்கு உலகமழியுமளவும் புகழ் – என்பதாம்.

(வி-ரை.) ஒருநாளையின்பம் அந்நாளொன்றிலும் நினைத்தது முடித்தோமேயென்று செருக்கியிருக்கும் பொய்யின்பமாம். [தனக்கிடமாகிய உலகம் அழியப்புகழும் அழியுமாதலின் ஏற்புடைய உலகமென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. (௬)

திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(ப-ரை.) திறனல்ல – செய்யத்தகாதகொடியவைகளை, தன் – தன்னிடத்து, பிறர் – அயலார், செய்யினும் – செய்தாலும், நோ – (அவருக்கு அதனாலவருவதாகிய) துன்பத்துக்காக, நொந்து – வருந்தி, அறனல்ல – அறமல்லாத, செயல்களைசெய்யாமை – செய்யாதிருத்தல், நன்று – (ஒருவனுக்கு) நல்லதாம், எ-று.

(க-ரை.) பிறர் செய்யத்தகாத கொடியவைகளைச் செய்தாலுந் தான் வருந்தி அறமல்லாதவைகளைச் செய்யாமை நன்று என்பதாம்.

(வி-ரை.) துன்பத்துக்காக வருந்துதலாவது இப்பாவத்தினாலே, இவர்வருபிறப்பிலே எரிவாய் நரகத்தில் வீழ்வாரோவென்று பரிதல். (௭)

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.

(ப-ரை.) மிகுதியால்-மனச்செருக்கினாலே (தம்மிடத்து),மிக்கவை-தீயவைகளை, செய்தாரை-செய்தவரை, தாம்-தாம், தந்தகுதியால்-தமது பொறுமையினாலே, வென்றுவிடல்-வென்றுவிடக்கடவர், எ-று.

(க-ரை.) மனச்செருக்காற் பிறர் தீமைசெய்தாலு மவர்க்கு நன்மை செய்து பொறுமையால் வெல்க - என்பதாம்.

(வி-ரை.) தாமும் அவரிடத்தே தீயவைகளைச்செய்து தோற்றுப் போகாமல் பொறுமையால் அவரின்மேற்பட்டு வெல்லுகவென்பதாம். [இவை நான்குபாட்டாலும் பிறர்செய்த குற்றங்களைப் பொறுத்தல்சொல்லப்பட்டது.] (அ)

## கஎ-ஆம் - அதி - அழுக்காறாமை. ௫௫

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

(ப-ரை.) இறந்தார் - (நல்வழியைக் கடந்தவரது, வாய் - வாயிலுண்டாகும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை, நோற்கிற்பவர்-பொறுப்பவர் (இவ்வாழ்க்கையிலே யிருந்தும்), துறந்தாரின் - துறந்தவர் போல், தூய்மை-பரிசுத்தகுணத்தை, உடையர்-உடையவராவர். எ-று.

(க-ரை.) தீயவழியினடப்பவரது கொடுஞ்சொற்களைப் பொறுப்பவர் துறவிகள்போலப் பரிசுத்தகுணமுடையவர் என்பதாம்.

(வி-ரை.) தூய்மை - மனவழுக்கில்லாமை, வாயென்பதை அதிகமாகச்சொல்லினர் அதனிழிவு தோன்றுதற்கு. (க)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

(ப-ரை.) உண்ணாது - (விரதங்களிலே) உணவைவிட்டு, நோற்பார்-(தம்மை அடைந்தநோயைப்) பொறுப்பவர், பெரியர் - (எல்லாரினும்) பெரியராவார் - (அவர் பெரியராவது), பிறர் - அயலார், சொல்லும்-(தம்மைச்) சொல்லும், இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை, நோற்பாரின் - பொறுப்பவரின், பின் - பின்னவர், எ-று.

(க-ரை.) பிறர்கொடுஞ்சொற்களைப் பொறுப்பவர்க்குத் தவத்தர் பின்னவர் என்பதாம்.

(வி-ரை.) பிறர் இங்ஙே அறிவில்லாதவர் பொறுக்கக்கூடாமைக்கு ஏதுவாகிய இறவகைபற்றுகனோடிருந்தே பொறுத்தலால் தவஞ்செய்வாரினும் பெரியாராகச் சொல்லலாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் பிறர்சொல்லிய குற்றங்களைப் பொறுத்தல்சொல்லப்பட்டது.](௧0)

பதினாறாம் அதிகாரம் பொறையுடைமை
முற்றிற்று.

---

## பதினேழாம் - அதிகாரம்.

# அழுக்காறாமை.

அஃதாவது: பிறர் செல்வமுதலானவை கண்டவிடத்துப் பொறாமைப்படாமை. இப்பொறாமையும் பொறுமைக்கு எதிரியதாதலின் இதனை விலக்குதற்கு இதுபொறையுடைமையின் பின்னேவைக்கப்பட்டது.

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

(ப-ரை.) ஒருவன் - ஒருவன், தன்னெஞ்சத்து - தனது மனதின் கண்ணே, அழுக்காறு - பொறாமையாகியகுற்றம், இலாத - இல்லாத





இயல்பு - தன்மையை, ஒழுக்கு (தனக்குச் சொல்லப்பட்ட) ஒழுக்கத்தினது, ஆறு - வழியாக, கொள்க - கொள்ளக்கடவன், எ-று.

(க-ரை.) ஒருவன் பொறாமையில்லாமையே நல்லவழியாகக் கொள்ளக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) இயல்பு அறிவோடுகூடியதன்மை. அத்தன்மையும் நன்மையைத்தருதலால், ஒழுக்கம் விழுப்பமென்னுங் குறளிலே சொல்லப்பட்டபடியே ஒழுக்கவழிபோல உயிரினும்சிறந்ததாகக் காப்பாற்றுகவென்பதாம். (க)

விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

(ப-ரை.) யார்மாட்டும் - யாவரிடத்தும், அழுக்காற்றின் - பொறா

மையினின்றும், அன்மை – வேறுதலே, பெறின் (ஒருவன்) பெறுவானா யின், விழுப்பேற்றின் (மற்றவன்பெறும்) மேலானபேறுகளுள், அஃது– அப்பேற்றினை, ஒப்பது – ஒப்பானது, இல்லை – இல்லை; எ-று.

(க-ரை.) ஒருவன் யாவரிடத்தும் பொறாமையில்லாமையைப் பெறுவானாகி லதைவிட வேறுபேறில்லை என்பதாம்.

(வி-ரை.) பொறாமை பகைவரிடத்தும் ஆகாதென்றற்கு யார்மாட்டு மென்றார். [இவை இரண்டுபாட்டாலும் பொறாமையில்லாமையினது குணம் சொல்லப்பட்டது.) (உ)

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

(ப-ரை.) அறன் – (மறுமைக்கு) அறத்தையும், ஆக்கம் (இம்மைக்குச்) செல்வத்தையும், வேண்டாதானென்பான் – (தனக்கு) வேண்டாதவனென்று சொல்லப்படுவோன், பிறன் – பிறனது, ஆக்கம் – செல்வத்தை, பேணாது (கண்டவிடத்து) மகிழாமல், அழுக்கறுப்பான் – பொறாமைப்படுவோன், எ-று.

(க-ரை.) மறுமைக்குத் தருமமுமிம்மைக்குச் செல்வமும் வேண்டாதவன் பிறன்செல்வங்கண்டு பொறாமைகொள்வான் என்பதாம்.

(வி-ரை.) பொறாமைப்படின் தனக்கே துன்பமாம் என்றபடி. (ங)

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

(ப-ரை.) (அறிவுடையோர்) அழுக்காற்றின் – பொறாமையினாலே, அல்லவை – அறமல்லாதவைகளை, செய்யார்–செய்யார், இழுக்காற்றின்– அத்தீயவழியால், ஏதம் – துன்பமானது, படுபாக்கு – (தமக்கு இருமையிலும்) உண்டாதலை, அறிந்து – தெரிந்து, எ-று.

(க-ரை.) பெரியோர் பொறாமையாற் பாவங்களைச் செய்யார் என்பதாம்.

## கஎ–ஆம் – அதி – அழுக்காறாமை.

(வி-ரை.) அறமல்லாதவையாவன: செல்வம், கல்வி, முதலானவை

புடையாரிடத்தே நிகழ்கையினைத் தலும் சொல்லலும், செய்தலும் ஆம்.

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

(ப-ரை.) அழுக்காறு - பொறாமையானது, ஒன்னார் - பகைவரின், வழுக்கியும் - ஒழிந்திருந்தும், கேடீன்பது - கேட்டைத்தருவது (ஆதலால்), உடையார்க்கு - (அப்பொறாமையை) உடையவர்க்கு (கேட்டைத் தருதற்குப் பகைவர்வேண்டாம்) அது-அதுவே, சாலும்-போதும், எ-று.

(க-ரை.) பொறாமை பகைவரினும் கொடிது என்பதாம்.

(வி-ரை.) அதுவேயென்னும், ஏகாரம் வருவிக்கப்பட்டது. (௬)

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

(ப-ரை.) கொடுப்பது - (ஒருவனால்) பிறர்க்குக் கொடுக்கப்படும் பொருளைக்குறித்து, அழுக்கறுப்பான் - பொறாமைப்படுமவனது, சுற்றம் - உறவானது, உடுப்பதூஉம் - உடுக்கப்படுவதும், உண்பதூஉம் - உண்ணப்படுவதும் - இன்றி - இல்லாமல், கெடும் - அழியும், எ-று.

(க-ரை.) கொடுப்பதைக் குறித்துப் பொறாமை கொள்பவன் சுற்றம் உடுக்கவாடையு முண்ணச் சோறுமில்லாமற் கெடும் என்பதாம்.

(வி-ரை.) சுற்றம்கெடுமெனவே அவன் கெடுதல்சொல்லவேண்டிய தில்லையாயிற்று. பிறர்பேறுகண்டு பொறாமைப்படுதல் தன்பேறுமாத்திரமேயல்லாமல் தன்சுற்றத்தின் பேறுகளையும் இழக்கச்செய்யு மென்பதாம். (௭)

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்.

(ப-ரை.) அழுக்காறுடையானை (பிறர் செல்வங்கண்டவிடத்தே) பொறாமையுடையவனை, செய்யவள் - திருவானவள், அவ்வித்து - (தானும்) பொறாமைப்பட்டு, தவ்வையை (தனது) தமக்கைக்கு, காட்டி - காண்பித்து, விடும் - நீங்குவாள், எ-று.

(க-ரை.) பொறாமையுடையவனை யிலக்குமி பொறாமைப்பட்டு நீங்குவாள் என்பதாம்.

(வி-ரை.) தவ்வையையென்பது உருபுமயக்கும், தவ்வை-மூதேவி.

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்

தீயுழி யுய்த்து விடும்.

(ப-ரை.) அழுக்காறெனவொருபாவி - பொறாமையென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவியானவன், (தன்னையுடையவனை) திருச்



செற்று - (இம்மையிலே அவனது) செல்வத்தைக்கெடுத்து, தீயுழியுய்த்துவிடும் - மறுமையிலே நரகத்தினிடத்துச்செலுத்திவிடுவான், எ-று.

(க-ரை.) பொறாமையென்னும்பாவி தன்னைச்சேர்ந்தவன்செல்வத்தைக்கெடுத்தவனை நரகத்திற்றள்ளுவான் என்பதாம்.

(வி-ரை.) இருமைப்பயன்களையும் கெடுக்கின்ற கொடுமைபற்றிப் பொறாமைப்பாவியென்றார். [இவை ஆறுபாட்டாலும் பொறாமையுடைமையினது குற்றம் சொல்லப்பட்டது.] (அ)

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்.

(ப-ரை.) அவ்வியநெஞ்சத்தான் - பொறாமையுள்ளமனத்தையுடையவனது, ஆக்கமும் - செல்வமும், செவ்வியான் - பொறாமையில்லாத மனத்தையுடையவனது, கேடும் - வறுமையும், (உண்டானால்) நினைக்கப்படும் (அவை) ஆராயப்படும், எ-று.

(க-ரை.) பொறாமையுள்ளவன் செல்வமும் பொறாமையில்லாதவன்வறுமையும், பழையவினையென் றெண்ணப்படும். என்பதாம்.

(வி-ரை.) பொறாமையினாலே செல்வமும், பொறாமை யில்லாமையினாலே கேடும் உண்டாகுதல், கூடாமையால் அறிவுடையார் இவை உண்டாதற்கு ஏதுவாகிய பழவினையாதென்று ஆராய்வாராதலின் நினைக்கப்படுமென்றார். (க)

அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(ப-ரை.) அழுக்கற்று - பொறாமைப்பட்டு, அகன்றாரும் - பெருகினவரும், இல்லை - இல்லை, அஃதிலார் - அச்செயலில்லாதவருள், பெருக்கத்தின் - பெருக்கத்திலிருந்து, தீர்ந்தாரும் - நீங்கினவரும், இல்-

இல்லை, எ-று.

(க-ரை.) பொருமையுடையோர் வருமையையும், பொருமைவிட்டோர் செல்வத்தையும் அடைவர் என்பதாம்.

(வி-ரை.) கேடும்பெருக்கமும் வருதற்கு ஏதுசொல்லியது. [இவை இரண்டு பாட்டாலும் அக்குற்றமும் குணமும் சேர்த்துச் சொல்லப் பட்டன.]

பதினேழாவது அதிகாரம் அழுக்காருமை முற்றிற்று.



## பதினெட்டாம் - அதிகாரம்
# வெஃகாமை.

அஃதாவது: பிறர்பொருளை வெளவுதற்கு, நினையாமையாம். பிறருடைமை கண்டவிடத்தே பொருமைப்படுதலேயல்லாமல் அதனைத் தான் வெளவுதற்கு நினைத்தலும் குற்றமென்றற்கு இது அதன்பின்னே வைக்கப்பட்டது.

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

(ப-ரை.) நடுவின்றி பிறர்க்குரிய பொருளைக்கொள்ளுதல் நமக்கு அறமல்லவென்னும்) நடுவுநிலைமை யில்லாமல், நன்பொருள் - (அவரது) நல்ல பொருளை, வெஃகின் (அபகரித்தற்கு) விரும்பினால் (அவ்விருப்பு) குடிபொன்றி (அவன்குடியைக்கெடுத்து, குற்றமும் - பல குற்றங்களையும், ஆங்கே - அப்போதே, தரும் - (அவனுக்குக்) கொடுக்கும், எ-று.

(க-ரை.) பிறர்பொருளை விச்சிக்கும் இச்சை குடியைக் கெடுத்து பழிப்பையுங் கொடுக்கும் - என்பதாம்.

(வி-ரை.) குடியை வளரச்செய்து பல நன்மைகளையும் உண்டாக்குந்தன்மையால் நன்பொருளென்றார். பொன்றியென்னுந் தன் வினை பொன்ற வித்தென்னும் பிறவினைப் பொருளில் வந்தது. (க)

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்

நடுவன்மை நாணு பவர்.

(ப-ரை.) நடுவன்மை (ஒருவன்) பொருளுக்குப் பிறன் உரியவனல் லவென்னும்) நடுவுநிலையல்லாமைக்கு, நாணுபவர் – அஞ்சுவோர் (பிறர் பொருளை வெளவுதலினாலே) படுபயன் (தமக்கு) வரும்பயனை, வெஃகி-விரும்பி பழிப்படுவ – பழியினிடத்தே பொருந்துஞ் செயல்களை, செய்யார் – செய்யார், எ-று.

(க-ரை.) பாவத்துக் கஞ்சுபவர் பொருளை விரும்பித் தீய செயல் களைச் செய்யார் – என்பதாம். (உ)

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

(ப-ரை.) மற்றின்பம் – நிலையுடைய வின்பத்தை, வேண்டுபவர்- இச்சிப்பவர், சிற்றின்பம் (பிறரிடத்தே அபகரிக்கப்பட்ட பொருளி னாலே தாம் அடைவதாகிய) நிலையில்லாத வின்பத்தை, வெஃகி - விரு ம்பி, அறனல்ல – அறமல்லாத செயல்களை, செய்யார் – (அவரிடத்தே) செய்யார், எ-று.

(க-ரை.) பேரின்பத்தை யிச்சிப்பவர் சிற்றின்பத்திற் குரியவைக ளைச் செய்யார். என்பதாம்.

ராஜ: க௮௯ஆம் - அதி: - வெஃகாமை.

(வி-ரை.) பாவத்தால் வருதலால் அப்பொழுதே அழியுமென்றதற் குச் சிற்றின்பமென்றார். (௩)

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சியவர்.

(ப-ரை.) புலம்வென்ற – ஐம்புலன்களையும் வென்ற, புன்மையில்- குற்றமில்லாத, காட்சியவர் – அறிவுடையவர், இலமென்று – வறியே மென்று நினைத்து, வெஃகுதல் செய்யார் (அது தீர்தற்பொருட்டுப் பிறர் பொருளை) விரும்புதல் செய்யார், எ-று.

(க-ரை.) ஐம்புலன்களை வென்றவர் வறியோமென்று பிறர் பொ ருளை விரும்பார் – என்பதாம்.

(வி-ரை.) ஐம்புலன்களை வெல்லுதல், பாவவழிகளிலே செல்ல விடாமை. குற்றமில்லாத வறிவு, பொருளை உள்ளபடி யறிந்தவறிவாம்.

அப்படிப்பட்டவர்க்கு வறுமை உண்டாகாமையால் பிறர் பொருளைவிரும்புதலும் இலதாயிற்று.

அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(பதை.) அஃகி - நுட்பமானதாகி, அகன்ற (எல்லா நூல்களிலும்) சென்ற, அறிவு - அறிவானது, என்னும் - என்ன பயனையுடையதாம், வெஃகி - (பொருளை) விரும்பி, யார்மாட்டும் - யாவரிடத்தும், வெறிய - அறிவோடு பொருந்தாதசெயல்களை, செயின் (அறிவுடையோர்) செய்வாராயின், எ-று.

(க-ரை.) யாவரிடத்தும் பொருளை யிச்சித்துத் தீமைசெய்தால் மிகுந்த வறிவின் பயனென்ன என்பதாம்.

(வி-ரை.) யாவரிடத்தும் அறிவோடு பொருந்தாத செயல்களைச் செய்தலாவது; யோக்கியரிடத்தும், அயோக்கியரிடத்தும், இழிந்தவையும், கடியவையும், முதலானவை செய்தல், அறிவுக்குப் பயன் அவை செய்யாமையாகலின் அறிவென்னுமென்றார். (௫)

அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(ப-ரை.) அருள்வெஃகி - அருளாகிய அறத்தை விரும்பி, ஆற்றின்கண் (இல்லறமாகிய) அதன் வழியிலே, நின்றான். தங்கினவன், பொருள் வெஃகி (பிறர்) பொருளை விரும்பி, பொல்லாத (அதனைவருவிக்கும்) குற்றவழிகளை, சூழ - எண்ண, கெடும் - கெடுவான், எ-று.

(க-ரை.) அருளை யிச்சித்து நின்றவன் பொருளை யிச்சிக்கக் கெடுவான் என்பதாம்.

(வி-ரை.) இல்லறவழியால் அறிவு முதிர்ந்தவிடத்தே யல்லது துறக்கக் கூடாமையால் அது துறவறத்துக்கு வழியெனப்பட்டது. கெடு



தல் இரண்டறங்களையும் ஒருசேரவிழத்தல் எண்ணியவளவிலே கெடுமெனவே அபகரித்தாற் கெடுதல் சொல்லவேண்டியதில்லையாயிற்று. ()

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

(ப-ரை.) வெஃகி - (பிறர்பொருளை) விரும்பிக்கொண்டு, ஆம்- (அதனால்) உண்டாகின்ற, ஆக்கம் - பெருக்கத்தை - வேண்டற்க, வேண்டாதிருக்கக்கடவன் விளைவயின் (பின்) அநுபவிக்கப்படும்போது, பயன் (அப்பெருக்கத்தின்) பயன், மாண்டற் கரிதாம் - நன்றாகுதலில்லை ஆதலால், எ-று.

(க-ரை.) பிறர்பொருளை யனுபவிக்கும்போது அது பயன்படாமை யாலப்பொருளை விரும்பாதிருக்கக்கடவன் - என்பதாம்.

(வி-ரை.) விளை - முதனிலைத் தொழிற்பெயர். [இவ்வேழுபாட்டாலும் பிறர்பொருளை விரும்புதலின் குற்றஞ் சொல்லப்பட்டது.] (எ)

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(ப-ரை.) செல்வத்திற்கு - (குறைந்துபோந் தன்மையையுடைய) செல்வத்துக்கு, அஃகாமை - குறையாதிருத்தற்காரணம், யாதெனின் - எதுவென் (றொருவ) னாராயின் (அது) பிறன் - பிறன், வேண்டும் - விரும்புகின்ற, கைப்பொருள் - கைப்பொருளை, வெஃகாமை - தான் வேண்டாமையாம், எ-று.

(க-ரை.) குறையாத செல்வத்திற்குக் காரணம் பிறன்பொருளை விரும்பாமை என்பதாம்.

(வி-ரை.) அஃகாமை அதன் காரணத்தை உணர்த்தலால் ஆகுபெயர். பிறன்பொருளை விரும்பாதவனது செல்வம் குறையாதென்பதாயிற்று. (அ)

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

(ப-ரை.) அறனறிந்து (இது) அறமென்றறிந்து, வெஃகா (பிறர் பொருளை) விரும்பாத, அறிவுடையார் - அறிவுடையாரை, திரு - திருவானவன், திறனறிந்து (தான்சேர்தற்காக) திறத்தை அறிந்து, ஆங்கே-

அத்திறத்தினல் சேரும் - சேருவான், எ-று.

(க-ரை.) பிறன்பொருளை யிச்சியாத அறிவுடையவரை யிலக்குமி சேருவாள் - என்பதாம்.

(வி-ரை.) அடைதற்காந்திறம், காலமும், இடமும் செவ்வியும், முதலாயின. [இவையிரண்டு பாட்டாலும் பிறர்பொருளை விரும்பாமையின் குணம் சொல்லப்பட்டது. (௯)

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்

(பு-ரை.) (ஒருவன) எணணாது (பின வினைவதை) யெண்ணாமல், வெஃகின் (பிறன்பொருளை) விரும்புவானாயின் (அவ்விருப்பம்) இறல்-அழிவை, ஈனும் (அவனுக்குத்) தரும, வேண்டாமை யென்னுஞ் செருக்கு (அப்பொருளை) விரும்பாமையென்னுஞ் செல்வமானது, விறல்-வெற்றியை, ஈனும் - தரும், எ-று.

(க-ரை.) ஒருவன பிறன்பொருளை இச்சிப்பதா லழிவும், இச்சியாமையால் வெற்றியும், வரும் என்பதாம்.

(வி-ரை.) பகையும் பாவமும் வளர்த்தலால் இறலீனு மென்றும் பொருளாசை கொண்டவோாகள் யாவரையும் கீழ்ப்படுதலால், விறலீனுமென்றுஞ் சொல்லினர். செருக்கு அதைத்தருஞ் செல்வத்தைக் காட்டலால் ஆகுபெயர். [இதனுல் அக்குணமும் குற்றமும் சேர்த்துச் சொல்லப்பட்டன ] (௧௦)

பதினெட்டாம் அதிகாரம் வெஃகாமை
முற்றிற்று.

---

## பத்தொன்பதாம் - அதிகாரம்.

# புறங்கூறாமை.

---

அஃதாவது காணாதவிடத்தே பிறரை இகழ்ந்து பேசாமையாம். வாக்கின்குற்றம மனககுற்றத்தின வழியாகத் தோன்றலால், இது

அழுக்காறுமை வெஃகாமைகளின் பின் வைக்கப்பட்டது.

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

(ப-ரை.) ஒருவன் – ஒருவன், அறங்கூறான் – அறனென்று சொல்லுவதுஞ் செய்யானாகி, அல்ல – பாவங்களை, செயினும் – செய்தலும், புறங்கூறான (பிறரைக்) காணாதவிடத்தே இகழ்ந்துபேசான், என்றல் – என்று (உலகத்தோரால்) சொல்லப்படுதல், இனிது – நல்லது, எ-று.

(க-ரை.) ஒருவன் பாவங்களைச் செய்யினும், புறங்கூறாமையே நன்மையென்பதாம்.

(வி-ரை.) புறங்கூறாமை அக்குற்றங்களால் தாழ்த்தப்படாமல் மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். [இதனால் அவ்வறத்தினது நன்மை சொல்லப்பட்டது.]

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

(ப-ரை.) அறனழீஇ-அறனென்பதொன்றில்லையென அழித்துச் சொல்லி-அல்லவைசெய்தலின், (அதன்மேற்) பாவங்களைச் செய்தலினும்)

... – ஆம் – அதி – புறங்கூறாமை, ...

தீதே – தீமையுடையதேயாம், புறனழீஇ (ஒருவனைக்) காணாதவிடத்தே இகழ்ந்துபேசி, பொய்த்துநகை – (கண்டவிடத்தே அவனோடு) பொய்த்துமகிழ்தல், எ-று.

(க-ரை.) ஒருவன் காணாவிடத்திகழ்ந்து கண்டவிடத்துப் புகழ்ந்து பேசுதல், பாவத்தைச் செய்தலினுங் கொடிது என்பதாம்.

(வி-ரை.) அறத்தையழித்தலினும், புறங்கூறுதலும், பாவங்களைச் செய்தலினும் பொய்த்தநகுதலும் தீயனவாம் என்றறிக. புறனழித்தல் புறங்கூறி ஒளியைக்கெடுத்தல். (௨)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

(ப-ரை.) புறங்கூறி – பிறனைக்காணாதவிடத்தே இகழ்ந்து, பொய்த்து – கண்டவிடத்தே அவனைப்புகழ்ந்து, உயிர்வாழ்தலின் (ஒருவன்) உயிர்வாழ்தலினும், சாதல் – (அதுசெய்யாமல்) உயிர்விடுதல்(அவனுக்கு)

அறங்கூறும் - தருமநூல்களிலே சொல்லப்பட்ட, ஆக்கம் - பயனை, தரும் - கொடுக்கும். எ-று.

(க-ரை.) ஒருவன் பிறனை முன்புகழ்ந்தும் பின்னிகழ்ந்தும் பேசி யுயிர்வாழ்தலினு மிறத்தலே நலம் என்பதாம்.

(வி-ரை.) உயிர்விட்டபின் புறங்கூறிப் பொய்த்தலாகிய பாவம் நீங்கலால், சாதல் ஆக்கந்தருமென்றார். ஆக்கம் அப்பாவஞ்செய்யாதவராலே மறுமையில் அடையப்படும் பயன் அறம், அதைச்சொல்லு நூலையுணர்த்தலால் ஆகுபெயர். (௩)

> கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
> முன்னின்று பின்னோக்காச் சொல்.

(ப-ரை.) (ஒருவனை) கண்ணின்று - எதிரேநின்று, கண்ணற-கண்ணோட்டமற, சொல்லினும் - சொன்னாலும், முன்னின்று (அவன்) எதிரில்லாமல், பின்னோக்காச்சொல் - பின்வருங் குற்றத்தை நோக்காத சொல்லை, சொல்லற்க - சொல்லாதிருக்கக்கடவன். எ-று.

(க-ரை.) ஒருவனை முன்னிகழினும், பின்னிகழாதிருக்கக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) பின் அதில்வருங் குற்றத்தைக் காட்டலால் ஆகுபெயர். சொல்லானது நோக்குதற்றொழில், சொல்லின்மேல் ஏற்றப்பட்டது. கண்ணோட்டம் தாட்சிணியம். [இவை மூன்றுபாட்டானும் புறங்கூறலின் கொடுமைசொல்லப்பட்டது.] (௪)

> அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
> புன்மையாற் காணப் படும்.

ககஎ க்கு - ஆம் - அதி - புறங்கூறாமை.

(ப-ரை.) புறங்கூறவோனொருவன் - அறம் நன்றென்று வாயினாலே சொல்லினும்), அறஞ்சொல்லும் - அறத்தை அப்படிச்சொல்லுதற்கு ஏற்ற), நெஞ்சத்தானன்மை - மனத்தையுடையவனல்லாதவனாயிருக்கையானது, புறஞ்சொல்லும் - அப்புறங்கூறுதற்குக்காரணமாகிய, புன்மையால் - (மனப்) புன்மையாலே, காணப்படும் (அறிவுடையோரால்) அறியப்படும் எ-று.

(க-ரை.) தருமநன்றென்பவன் மனதிலே தருமமில்லாமை புறங்கூறுதலா லறியப்படும் என்பதாம்.

(வி-ரை.) மனம் தீதாயிருக்கையால், அறம் நன்றென்று சொல்லு
மிறசொல் அங்கீகரிக்கப் படாதென்பதாம். (௬)

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப்படும்.

(ப-ரை.) பிறன்பழி - பிறனொருவனது பழியை, கூறுவான் (அவ
னைக்காணாதவிடத்தே) சொல்லுவோன், தன்பழியுள்ளும் - தனது(பல)
பழிகளுள்ளும், திறன் (வருந்தும்) விதமுடையவைகளை, தெரிந்து-ஆரா
ய்ந்து, கூறப்படும் - (அவனாலே) சொல்லப்படுவோன். எ-று.

(க-ரை.) பிறன் குற்றத்தைச்சொல்லுவோன் தன்குற்றம் பிறனாற்
சொல்லப்படுவோன் என்பதாம்.

(வி-ரை.) திறமுடையவைகளைத் திறனென்றலால் ஆகுபெயர். கா
ணாதவிடத்தது தன்னைக்குறித்துப் பிறனாலேசொல்லப்பட்ட பழியைக்
கேட்டவன் அவன் மிகவும்வருந்தும்படி - அதிகமாகியபழிகளை ஆராய்ந்
து எதிரேசொல்லுவானாதலால், திறன்றெரிந்துக் கூறப்படுமென்றார்.

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட னேற்றா தவர்.

(ப-ரை.) நகச்சொல்லி (கூடி) - மகிழும்படி (இனியசொற்களைச்
சொல்லி, நட்பாடல் - (அயலாரோடு)சிநேகஞ்செய்தலை, தேற்றாதவர்-
(தமக்கு உறுதியென்று) அறியாதவர், பகச்சொல்லி - (தம்மைவிட்டு)
நீங்கும்படி புறங்கூறி, கேளிர் (தமது) சுற்றத்தாரையும், பிரிப்பர்-பிரி
வுபண்ணுவர். எ-று.

(க-ரை.) மகிழும்படி சொல்லிச் சிநேகஞ்செய்தலை யறியாதவர் புற
ங்கூறி யுறவினரைப் பிரிப்பர் என்பதாம்.

(வி-ரை.) உம்மை விகாரத்தாற்றொக்கது கேளிரையும் பிரிப்பரெ
ன்ற கருத்தால் அயலாரோடென்பது வருவிக்கப்பட்டது. தேற்றாதவ
ரென்னும் பிறவினை, தேறாதவரெனனுந் தன்வினைப்பொருளில்வந்தது
புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவரென்பது கருத்து. (எ)

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு.

(ப-உரை.) துன்னியார் (தம்மோடு) நெருங்கினவரது, குற்றமும் - குற்றத்தையும், தூற்றும் - (அவரைக் காணாதவிடத்தே) தூற்றும், மரபினர் - இயல்பையுடையவர், ஏதிலார்மாட்டு - அயலாரிடத்துச் (செய்வது) என்னைகொல் - யாதோ. எ-று.

(க-உரை.) உறவினர் குற்றத்தையுந் தூற்றுவோர் அயலார் குற்றத்தை யெப்படித் தூற்றார் என்பதாம்.

(வி-உரை.) தூற்றுதல் பலரும் அறியப்பரப்புதல். அத்தூற்றுதலினுங் கொடியசெயல் வேறொன்றுங் காணாமையால் என்னைகொலென்றார், செய்வதென்பது - சொல்லெச்சம். (அ)

அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(ப-உரை.) புறனோக்கி - பிறரில்லாவளவு பார்த்து, புன்சொல் (அவரது) பழிப்புச்சொல்லை, உரைப்பான் - சொல்லுவோனது, பொறை - (உடற்) பாரத்தை, வையம் - பூமியானது, அறனோக்கி (இக்கொடியனைச் சுமத்தலே எனக்கு) அறமாமென்று நினைத்து, ஆற்றுங்கொல் - சுமக்கின்றதுபோலும் எ-று.

(க-உரை.) பூமியானது பொறாமைகூறுவோனுடலைத் தருமத்தைக் குறித்துச் சுமப்பதுபோலும் என்பதாம்.

(வி-உரை.) பூமிக்கு எல்லாப்பொருள்களையுஞ் சுமத்தல் சுபாவமாயினும், புறங்கூறுவானைச் சுமப்பது தகாதென்னுங் கருத்தால் அறனோக்கி யாற்றுங்கொல் வையமென்றார், [இவை ஐந்துபாட்டாலும் புறங்கூறுவார்க்கு உண்டாகுங் குற்றஞ் சொல்லப்பட்டது.] (௯)

ஏதிலார் குற்றம்போறந் தங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(ப-உரை.) (புறங்கூறுவோர் அதுசெய்தற்கு) ஏதிலார்குற்றம்போல் - அயலோரது குற்றத்தைப்போல, தங்குற்றம் (அப்புறங் கூறுதலாகிய)

தமது குற்றத்தையும், காணகிற்பின் - காணவல்லவராயின், மன்னுமுயிர்க்கு - அவ்வாறு நிலைபெற்ற உயிர்க்கு, தீது (வருவது) ஒருதுன்பம், உண்டோ - உண்டாகுமோ, எ-று.

(க-ரை.) அயலார் குற்றத்தைப்போலத் தங்குற்றத்தை யாராயின் உயிர்க்குத் துன்பமில்லை என்பதாம்.

(வி-ரை.) நடுவுநிலையாயிருந்து - ஒப்பக்காணுதல் அருமையாகலின் காண்கிற்பினென்றும், கண்டவிடத்தே புறங்கூறாமையால் வரும்பிறவிகளிலும் துன்பப்படாரென்பதைக்குறித்து உயிர்க்குத் தீதுண்டோவென்றும் சொல்லினர். [இதனால் புறங்கூறுதலை விடுதற்கு உபாயம் சொல்லப்பட்டது.] (௧0)

## பத்தொன்பதாம் அதிகாரம் புறங்கூறாமை

## ௨0௨ ௬அ-ஆம்-அதி-வினைசெயல்வகை.

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.

(ப-ரை. (முதலிலே மெய்யும் முயற்சியினாலே) துன்பம்-துன்பமானது, உறவரினும் - (தமக்கு) மிகவரினும் (அதுகண்டு தளராமல்), இன்பம் - சுகத்தை, பயக்கு - (முடிவிலே) தருகின்ற, வினை-தொழிலை, துணிவாற்றி - வலிமையுடையராய், செய்க-செய்யக்கடவர், எ-று

(க-ரை ) துன்பம் வரினு மின்பந்தரும் தொழிலைச் செய்யக்கடவரென்பதாம்

(வி-ரை.) துணிவு - கலங்காமை. அக்கலங்காமை யுடையவர்க்கல்லது சிறிது காலத்திலே நீங்குவதாகிய முயற்சித்துன்பம் நோக்காமல் அதனால் உண்டாய் நிலைபெறும் இன்பத்தை நோக்கிச்செய்தல் கூடாமையாலே, துணிவாற்றிச் செய்கவென்றார். [இவை இரண்டு பாட்டாலும் அவர்தொழில் செய்யும்விதம் சொல்லப்பட்டது.] (௧)

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

(ப-ரை.) உலகு - உயர்ந்தோர், வினைத்திட்பம் - தொழில் வலிமையை, வேண்டாரை - (இது நமக்குச் சிறந்ததென்று) கொள்ளாத மந்திரிகளை, எனைத்திட்பம்-அவை நீங்கலாகிய வலிமைகளெல்லாம், எய்தியக்கண்ணும் - உடையவராகிய விடத்தும், வேண்டாது-நன்குமதியார், எ-று.

(க-ரை.) உயர்ந்தோர் தொழில் வலிமையை விரும்பாத மந்திரிகளை மதிக்

யார்-என்பதாம்.

(வி-ரை.) ...த்திலே வலிமையில்லாதவர்க்கு, படை, அரண், நட்பு முதலாய ...ின் வலிமைகளெல்லாம் உண்டாயினும் தொழில் முடியாமையால் ஆ...மைகளெல்லாம் கெடுமெனபதுபற்றி, உலகு வேண்டாதென்றார். [இதனால் ...ாழில் வலிமையில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.]

...ூ...ஏழாம்-அதிகாரம்-வினைத்திட்பம்.

முற்றிற்று.

## அறுபத்தெட்டாம் - அதிகாரம்

# வினைசெயல் வகை.

அஃதாவது: அவ்வலிமையுடைய மந்திரியானவன் அத்தொழிலைச் செய்யுந்திறமாம். ...திமான முறைமையும் இதனாலே விளங்கும்.

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது.



(ப-ரை.) சூழ்ச்சி-ஆலோசனைக்கு, முடிவு-எல்லையாவது, துணிவெய்தல் (ஆலோசிப்பவன இனி இது தப்பாதென்னும் துணிவைப் பெறுதல், அத்துணிவு-அப்படித் துணிவுபெற்ற தொழில், தாழ்ச்சியுள்-(பின்) ஆலசியத்தில், தங்குதல், தீது-குற்றமுடையதாம், எ-று.

(க-ரை) ஆலோசனைக் கெல்லையாவது: துணிவு பெறுதல் அத்துணிவு பின்னாலசியப்படுதல் குற்றம்-என்பதாம்.

(வி-ரை) சூழ்ச்சி முடிவு துணிவெய்த லென்றதனால் துணிவுபெறும் வரைக்கும் ஆலோசிக்கவேண்டுமென்பதாயிற்று பின்வாத துணிவு-அதுபெற்ற தொழிலுக்கு ஆதலால்-ஆகுபெயர் ஆலசியமுண்டான விடத்த காலக்கழிவாகலாலும் பகைவர் அதை அறிந்து அழித்தலாலும் முடியாமையால் அத

வினைத் திதென்றார்.                                                    (க)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(ப-ரை.) தூங்கி - ஆலோசித்து, செயற்பால-செய்யும் பகுதியையுடைய தொழில்களுள், தூங்குக-ஆலசியம் பண்ணக்கடவன், தூங்காது-ஆலசியம்பண்ணாமல், செய்யும்வினை-செய்யுந் தொழில்களுள், தூங்கற்க-ஆலசியம் பண்ணாதிருக்கக்கடவன், எ-று

(க-ரை.) ஆலசியமாகச்செய்யுந் தொழில்களை ஆலசியமாகச் செய்யக்கடவன் விரைவாகச்செய்யுந் தொழில்களை விரைவாகச்செய்யக்கடவன் என்பதாம்.

(வி-ரை.) இருவகைத் தொழில்களும் வலியாலும் காலத்தாலும், அறியப் படும் மாறிச்செய்தால் - அவைபலியாமற் போமென்பது கருத்து முன்னே தூங்காமை என்றதை இங்கே பகுத்துச் சொல்லினர் [இவை இரண்டு பாட்டாலும் பொதுவாகையால் தொழில் செய்யுந்திறம் சொல்லப்பட்டது] (உ)

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(ப-ரை.) (தொழில் செய்யும்போது) ஒல்லும் வாயெல்லாம் - கூடுமிடத்தெல்லாம், வினை-தண்டஞ்செய்தல், நன்று-நல்லதாகும், ஒல்லாக்கால்-(அது) கூடாதவிடத்து, (மற்றைமூன்று உபாயங்களிலே) செல்லுவாய்நோக்கி-(அது) முடிவதோருபாயம் நோக்கி, செயல்-செய்யக்கடவன், எ-று

(க-ரை.) குற்றங் கூடுமிடத் தெல்லாந் தண்டித்தல் நல்லது, அது கூடாவிடத்து மூன்றுபாயங்களாற செய்யக்கடவன்-என்பதாம்.

(வி-ரை.) கூடுமிடம்-பகைவனிலும் தான் வலியனாகிய காலம்-அக்காலத்திலே பகைவர் தண்டத்துக்கே அஞ்சுவாராகலால், அத்தண்டமே நன்றென்

சகூச          ககசு - ஆம் - அதி - பிரிவாற்றாமை

(க-ரை.) நங்கல்வுக்கடுமை யறிந்ததலைவர் தாமே நம்முன்னின்றுதம் பிரிவினை புணர்த்தும் வன்கண்மை யுடையராயினராயி னத்தன்மையராய் பின்பு நம்மாற்றாமை யறிந்துவந்து தலையளிசெய்வ ரென்றிருக்குமாசை

விடப்படும் - என்பதாம்.

(வி-ரை) அருமை பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பில்லாமற் பிரிவெண்ணுதலும்அறிவித்தலும், வல்லராயினர், பிரிந்துபோய்அன்புடையராகி நம்மை நி, அதுவந்து அளித்தல் எவ்விடத்ததென்பதாம். அழுங்குவித்தல்பயன்.

துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறைஇறவா நின்ற வளை.

இதுவுமது.

(ப-ரை.) துறைவன்-நெய்தநிலத்தலைவன், துறந்தமை (என்னைப்)பிரியலுற்றமையை (அவன் அறிவிக்காமல் தாமே அறிந்து) முன்கையிறை (என்) முன்கையிறையினின்றும், இறவாநின்றவளை-கழலாநின்ற வளையல்கள், தூற்றாகொல் (எனக்கு) அறிவியாவோ (அவன்) அறிவிக்க அறிந்துவந்து நீ அறிந்துவந்து நீ அறிவித்தல் வேண்டுமோ, எ-று.

(க-ரை.) துறைவனென்னைப்பிரியலுற்றமையையவனுணர்த்தாமற்றாமே புணர்ந்தேன் முன்கையினிறையினின்றுங், கழலாநின்ற வளைகளெனக்கறிவியாவோ வவனுணர்த்த வுணர்ந்துவந்து நீயறிவித்தல் வேண்டுமோ - என்பதாம்.

(வி-ரை.)முன்னே நிகழ்ந்தமையால் துறந்தமையென்றும்,கேட்டவளவில் மெலிந்து பொறாமையால் இறவா நின்றவென்றும், சொல்லினள்,அழுங்குவித்து அதுவந்து சொல்லுந் தன்மையையல்லாத நீயும் இவ்வளவெய்தாவே செய்தாயென்று பிணங்கிச் சொல்லியபடி.

இன்னா தினியார்ப் பிரிவு.
தனியார்ப் பிரிவு

இதுவுமது.

(ப-ரை.) இந்நில்லூர் (மகளிர்க்குத் தங்குறிப்பறிகிற) தோழியரில்லாத வேற்றூரினிடத்து, வாழ்தல்-வாழுதல்,இன்னாது-துன்பஞ்செய்வதாகும் (அதன்மேலும்) இனியார்ப்பிரிவு(தம்) காதலரைப்பிரிதல்,அதனினும்-அவ்வாழ்தலைக்காட்டிலும், இன்னாது-துன்பஞ்செய்வதாகும், எ-று.

(க-ரை.) மகளிர்க்குத் தங்குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றூரின்கண் வாழ்தலின்னாத தன்மேலுந் தங்காதலரைப்பிரித லதனினு மின்னா
என்பதாம்.

(வி·ரை.) தலைவன் செல்லுதலை அழுங்குவித்து வாராது உடன்பட்டு வந்தமைபற்றிப் பிணங்குகின்றாளாகலால் - இன்னாரிவ்லாரென்றாள். உலக நடை சொல்லுகின்றாள்போல் தனக்கு அவ்வாழ்வும் பிரிவும் உண்டாயிருக்கை சொல்லியபடி.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

இது காமம் தீயேபோல் நின்றவிடத்தைச் சுடாமையால் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

(ப·ரை.) தீ-நெருப்பானது, தொடின் (தன்னைத்) தொட்டால், சுடிற் (சுட) லல்லது-சுட்டாற் சுடலல்லது, காமநோய்போல - காமமாகிய நோயைப்போல, விடின் (தன்னை) விட்டுநீங்கினால், சுடலாற்றுமோ (தப்பாது) சுடல்வல்லதோ, எ-று.

(க-ரை.) தீ தன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது காமமாகிய நோய்போலத் தன்னை யகன்றாற்றப்பாது சுடுதலை வற்றோ மாட்டாது- என்பதாம்.

(வி-ரை.) சுடினென்றது-மந்திர மருந்துகளாலே தப்பிக்கப்படாதாயினென்றபடி காமத்திற்கு அதுவும் இல்லையென்றற்கு-சும்மாசுடலென்றின் நீங்கில் அனுபவியாமை சுடல் முன்னும் கூட்டப்பட்டது. தீயினும் கொடியதனை நான் பொறுக்குவிதம் என்னையென்பதாம். ௬

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

இது தலைவியர் பலரும் பிரிவைப் பொறுத்திருப்பர் நீ இது செய்கின்றிலை யென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.

(ப-ரை.) (நீசொல்லுகின்றது ஒக்கும்) அரிதாற்றி-பிரிவை அறிவித்தவிடத்து அதற்கு உடன்பட்டு, அல்லனோய் (பிரியும்போது உண்டாகிற) துன்பநோயையும், நீக்கி-ஒழித்து, பிரிவாற்றி (பிரிந்தால்) அப்பிரிவையும் பொறுத்து, பின்னிருந்து-பின்னும் இருந்து, வாழ்வார்-உயிர்வாழுமகளிர்.

பலர் (உலகத்திற்) பலர். எ-று,

(க-ரை.) நீ சொல்லுகின்ற தொக்கும் பிரிவுபுணர்ந்திய வழியதற்குட ன்பட்டுப் பிரியக்கா ணிகழுமல்ல ஞெயிலையு நீக்கிப்பிரிந்தார் பிரிவு தன் னையுமாற்றிப் பின்னுமிருந்துயிர் வாழுமகளி ருலகத்துப் பலரென்பதாம்.

(வி-ரை.) முன்னிலுஞ் சிறக்கத் தலைவனைப்பெற்று இன்பத்தை அனுப விக்கிற சமயத்தில் அதனையிழந்து துன்பத்தை அனுபவித்தற்கு உடன் ப டுதல் அரியதொன்றாகலால் அரிதாற்றியன்றும் செல்லுந் தேசத்திலே அ வருக்கு யாது சம்பவிக்குமோவென்றும், அவர்வருமளவும் நாம் பொறுத் திருக்கும் விதம் என்னென்றும். அவர்வரவுதான் மறுபடி என்றைக்குவந்து

௲௨ ௰௩-ஆம், அதி—அடக்கமுடைமை.

துத்திவிடும். எ-று. ❋ இருளென்பது - நரகவகையிலொன்று (ஆ

காக்க பொருளா வடக்கத்தை யாக்க - - ❋
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. - - - (௨)

இ-ள், அடக்கத்தை — பொருளா - (உறுதிப்) பொருளா க—காக்க- காக்கக்கடவன்.—உயிர்க்கு — அதனினூங்கு - அ தனின்மேற்பட்ட—ஆக்கம் - செல்வமானது|—இல் - இல்லை (ஆதலால்) .எ-று. ❋ உயிர் இங்கே மனிதருயிரைக்காட்டிநின் றது.அறிந்து அடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (உ)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந் - - - ❋
தாற்றி னடங்கப் பெறின். - - - - (௩)

இ-ள். அறிவறிந்து- (அடங்குதலேநமக்கு) அறிவாவதென் று அறிந்து—ஆற்றின்- நல்லவழியால்—(ஒருவன்)—அடங்கப் பெறின்—செறிவு- அவ்வடக்கமானது|—அறிந்து-(நல்லோ

சால்)அறியப்பட்டு - சீர்மை - மேம்பாட்டை - பயக்கும் - (அவனுக்குத்)தரும்.எ - று. ※ இல்வாழ்வானுக்கு அடங்குமவழியாவது - காயமும் வாக்குமனமும் அவன்வசப்படுதல். - (௩)

நிலையிற் றிரியா தடங்கியான்றோற்ற ※
மலையினு மாணப் பெரிது. (௪)

இ - ள். நிலையின் - (இல்வாழ்க்கையாகியதன்) வழியில் — திரியாது - வேறுபடாது(நின்று) — அடங்கியான் - அடங்கினவனது — தோற்றம் - உயர்ச்சியானது — மலையினும் - மலையுயர்ச்சியினும் — மாணப்பெரிது - மிகப்பெரிதாம்.எ - று. ※ வேறுபடாது நின்று அடங்குதல் - ஐம்பொறிகளாலும், ஐம்புலங்களையும் அநுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் ※
செல்வர்க்கே செல்வந் தகைத்து. (௫)

இ - ள். பணிதல் - (பெருமைப்பாடில்லா)தடங்குதல் — எல்லார்க்கும் — நன்றாம் - (ஒப்ப)நன்றாகும் - (ஆயினும்) - அவருள்ளும் — செல்வர்க்கே — செல்வந்தகைத்து - வேறொருசெல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்.எ - று. ※ பெருமைப்பாட்டையுண்டாக்கும் - கல்வியும், குடிப்பிறப்பும், உடைய

வர்- அதுவில்லாமல் அவைகளாலே அடங்கிப்விடத்து - அவ்வ டக்கம் சிறந்து தோன்றுதாதலின் - செல்வர்க்கே செல்வத்த கைத்தென்றார். செல்வத்தகைத்தென்றது - விகாரப்பட்டுநின் றது. [இவையிரண்டுபாட்டாலும் பொதுவகையால் அடக்கத் தினதுசிறப்புச் சொல்லப்பட்டது. (௬)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி * * * *
னெழுமையு மேமாப் புடைத்து. - - - (௬)

இ-ள்.(ஒருவன்)— ஒருமையுள் - ஒருபிறப்பின்கண்ணே— ஆமைபோல்— ஐந்து - ஐந்தை— அடக்கலாற்றின் - அடக்கவு ல்லவனாகில்— (அவ்வல்லமை| அவனுக்கு)— எழுமையும்-எழு பிறப்பின்கண்ணும்— ஏமாப்புடைத்து - காவலாதலையுடையு தாம்.எ-று. ❋ ஆமை அடக்குமைந்து - கால்கள் நான்கும், த லையொன்றும், ஆகியவுறுப்புகள். அவ்வடக்கம் - துன்பஞ்சே ராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டு மைந்து - மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் பாப ம் சேராதிருத்தற்கு. ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்ப யன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக.[இதனா லே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (௬)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற் - - - ❋
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. - - (எ)

இ-ள்.யா - (காக்கவேண்டுமவை) யாவையும்— காவாராயி னும் - காக்கமாட்டாராயினும்— நா - நாவொன்றையும்—கா க்க - காக்கக்கடவன், — காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டா ராயின் — சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்ப ட்டு— சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று.❋யா வென்பது - எவையென்னும் பொருளைத் தருகிற அஃறிணைப்

பன்மைவினைப்பெயர்.சொற்குற்றம் - சொல்லிடத்தே தோன்றுங்குற்றம்.சோகாப் பரென்பது ஒருசொல். (எ)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி - *
னன்றாகா தாகி விடும். - - - - - - (அ)

இ-ள். தீச்சொல் - தீயசொற்களது — பொருட்பயன் - பொருள்களாலே (பிறருக்குவரும்) பயனானது—ஒன்றானும் - ஒன்றாயினும்— உண்டாயின் - (ஒருவனிடத்திலே) உண்டாவதாயின்

ஞெ. - ஆம், அதி—அடக்கமுடைமை.

றுத்திவிடும்.எ - று. * இருளென்பது - நரகவகையிலொன்று(அ

காக்க பொருளா வடக்கத்தை யாக்க - - *
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. - - - (உ)

இ-ள். அடக்கத்தை — பொருளா - (உறுதிப்) பொருளாக—காக்க - காக்கக்கடவன்.—உயிர்க்கு — அதனினூங்கு - அதனின்மேற்பட்ட—ஆக்கம் - செல்வமானது|—இல் - இல்லை (ஆதலால்) .எ - று. * உயிர் இங்கே மனிதருயிரைக்காட்டிநின்றது.அறிந்து அடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (உ)

செறிவறிந் து சீர்மை பயக்கு மறிவறிந் - - *
தாற்றி னடங்கப் பெறின். - - - - (ந)

இ-ள். அறிவறிந்து - (அடங்குதலேநமக்கு) அறிவாவதென்று அறிந்து—ஆற்றின் - நல்லவழியால்—(ஒருவன்)—அடங்கப்பெறின்—செறிவு - அவ்வடக்கமானது|—அறிந்து - (நல்லோரால்)அறியப்பட்டு - சீர்மை - மேம்பாட்டை —பயக்கும் - (அவனுக்குத்)தரும்.எ - று. * இல்வாழ்வானுக்கு அடங்கும்வழியாவது - காயமும் வாக்குமனமும் அவன்வசப்படுதல். - (ந)

நிலையிற் றிரியா தடங்கியான்றோற்ற - - - *
மலையினு மாணப் பெரிது. - - - - (ச)

இ - ள். நிலையின் - (இல்வாழ்க்கையாகியதன்) வழியில்—திரியாது - வேறுபடாது (நின்று) — அடங்கியான் - அடங்கினவனது — தோற்றம் - உயர்ச்சியானது — மலையினும் - மலையுயர்ச்சியினும் — மாணப்பெரிது - மிகப்பெரிதாம். எ - று. ❋ வேறுபடாது நின்று அடங்குதல் - ஐம்பொறிகளாலும், ஐம்புலங்களையும் அநுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அத்தனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (ச)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் - - *
செல்வர்க்கே செல்வந் தகைத்து. - - - (ரு)

இ - ள். பணிதல் - (பெருமைப்பாடில்லா) தடங்குதல் — எல்லார்க்கும் — நன்றாம் - (ஒப்ப) நன்றாகும் - (ஆயினும்) - அவருள்ளும் — செல்வர்க்கே — செல்வந்தகைத்து - வேறொருசெல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம். எ - று. ❋ பெருமைப்பாட்டையுண்டாக்கும் - கல்வியும், குடிப்பிறப்பும், உடையவர் - அதுவில்லாமல் அவைகளாலே அடங்கியவிடத்து - அவ்வடக்கம் சிறந்து தோன்றுதாதலின் - செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்தகைத்தென்றது - விகாரப்பட்டுநின்றது. [இவையைந்துபாட்டாலும் பொதுவகையால் அடக்கத்தினதுசிறப்புச் சொல்லப்பட்டது. (ரு)



ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி - - - *
னெழுமையு மேமாப் புடைத்து. - - - (சு)

இ-ள்.(ஒருவன்)— ஒருமையுள் - ஒருபிறப்பின்கண்ணே— ஆமைபோல்— ஐந்து-ஐந்தை— அடக்கலாற்றின் - அடக்கவல்லவனாகில்— (அவ்வல்லமை| அவனுக்கு)— எழுமையும்-எழுபிறப்பின்கண்ணும்— ஏமாப்புடைத்து - காவலாதலையுடைய்தாம்.எ-று. ❋ ஆமை அடக்குமைந்து - கால்கள் நான்கும், தலையொன்றும், ஆகியவுறுப்புக்ள். அவ்வடக்கம் - துன்பம்சேராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டுமைந்து - மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் பாபம் சேராதிருத்தற்கு. ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்பயன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக.[இதனாலே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (சு)

யா காவா ராயினு நாகாக்க காவாக்கால் - - - ❋
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. - - (எ)

இ-ள்.யா- (காக்கவேண்டுமவை) யாவையும்— காவாராயினும் - காக்கமாட்டாராயினும்— நா - நாவொன்றையும்—காக்க - காக்கக்கடவன்,— காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின் — சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்பட்டு— சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று.❋யா வென்பது - எவையென்னும் பொருளைத் தருகிற அஃறிணைப் பன்மைவினாப்பெயர்.சொற்குற்றம் - சொல்விடத்தே தோன்றுங்குற்றம்.சோகாப் பரென்பது ஒருசொல். (எ)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி - ❋
னன்றாகா தாகி விடும். - - - - - - (அ)

இ-ள். தீச்சொல்- தீயசொற்களது — பொருட்பயன் -பொருள்களாலே (பிறருக்குவரும்) பயனனது—ஒன்றானும் - ஒன்றாயினும்— உண்டாயின் - (ஒருவனிடத்திலே) உண்டாவதாயி